# யுத்த காண்டம்

(ஐந்தாம் பகுதி)






அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## யுத்த காண்டம்

(ஐந்தாம் பாகம்)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1970

# உள்ளுறை

## கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---

தலைவர் :

பேராசிரியர், வித்துவான் திரு. கோ சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., B.L.

உறுப்பினர்கள்:

பேராசிரியர், திரு. லெ. ப. கரு இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

" நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

" மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்கள்

" பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

# பதிப்புரை

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தாரால் திருந்திய பதிப்பாக வெளியிடப் பெற்றுவரும் கம்பராமாயணப் பதிப்புக்களுள் யுத்த காண்டத்தின் ஐந்தாம் பகுதியாக இந்நூல் வெளிவருகின்றது. இதன்கண், நிகும்பலை யாகப் படலம் முதல் இராவணன் களங்காண் படலம் முடிய எட்டுப் படலங்கள் உள்ளன. இவற்றுள் நிகும்பலையாகப்படலம், மூல பலவதைப்படலம் என்பவற்றுக்கு வித்துவான் திரு. க. வெள்ளைவாரணன் அவர்களும், இந்திரசித்து வதைப்படலம், இராவணன் சோகப் படலம், படைக்காட்சிப் படலம், வேலேற்றபடலம், வானரர் களங் காண் படலம், இராவணன் களங்காண்படலம் என்பவற்றுக்கு வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும் உரையெழுதியுள்ளார்கள்.

தமிழாராய்ச்சித்துறை யாசிரியர்களாகிய சிரோமணி வித்துவான் திரு. P. S. இராமாநுஜாச்சாரியார், புலவர் திரு. க. இராமச்சந்திரன் முதலியோர் பழைய ஏட்டுச் சுவடிகளையும் அச்சுப் புத்தகங்களையும் ஒப்புநோக்கித் தொகுத்த பாட வேறுபாடுகள் இந்நூலின் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளன.

இப்பணி இனிது நிறைவேறுதற்கு அன்புடன் உதவி புரிந்த கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழுவின் தலைவர் பேராசிரியர், வித்துவான் திரு. கோ. சுப்பிரமணியபிள்ளை, M.A.,B.L., அவர்களுக்கும் குழுவின் உறுப்பினர்களாகிய பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், திரு. பி. ஸ்ரீ ஆச்சாரியார், திரு. நீ. கந்தசாமிப்பிள்ளை, திரு. மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை, திரு. பு. ரா. புருஷோத்தம நாயுடு ஆகிய பெருமக்களுக்கும், குழுவின் செயலாளர் திரு. தி. கி. இராமாநுஜையங்கார் அவர்களுக்கும் இந்நூலின் அச்சுப்படிகளை ஒப்பு நோக்கித் திருத்தியுதவிய நண்பருக்கும் பல்கலைக் கழகத்தின் சார்பில் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச்சுவடிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தார்க்கும், சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தார்க்கும், திருப்பதி ஸ்ரீ வேங்கடேசுவரர் கீழ்த்திசைக் கல்லூரி நூல் நிலையத்

தார்க்கும், ஈரோடு தமிழாசிரியர் திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்களுக்கும், தெங்கம்புதூர் சாத்தான்குட்டிப்பிள்ளை அவர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றி யுரியதாகும்.

இத்தகைய தமிழ்ப்பணிகள் இனிது நிகழ்தற்கு வேண்டிய பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக் கழக மானியக்குழுவினர்க்கும் நமது நன்றியும் பாராட்டும் என்றும் உரியனவாகும்.

தமிழ்ப் பல்கலைக் கழகமாகிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் சிறந்த தமிழ் நூல்கள் பல திருந்திய ஆராய்ச்சிப் பதிப்பாக வெளிவருதற்கு இந்தியப் பேரரசும் தமிழ்நாட்டரசும் வேண்டும் பொருளுதவி புரிந்து ஆதரித்துவரும் என நம்புகின்றோம்.

இந்நூலினைவனப்புற அச்சிட்டுதவிய சென்னை நாவல் ஆர்ட் அச்சகத்தாரது பணி பாராட்டற்குரியதாகும்.

க. வெள்ளைவாரணன்
துணைப்பேராசிரியர்,
தமிழாராய்ச்சித்துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

அண்ணாமலை நகர்
20—6—1970.

# 26. நிகும்பலை யாகப் படலம்

## முன்னுரை

இந்திரசித்து போரில் வெற்றிபெறுதல் குறித்து நிகும்பலை என்ற இடத்தில் தொடங்கிய யாகத்தைப் பற்றிய செய்தியை விரித் துரைக்கும் படலமாதலின், இது நிகும்பலை யாகப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இது சில ஏடுகளில் நிகும்பலைப்படலம் எனவும் நிகும்பிலை யாகப் படலம் எனவும் குறிக்கப்பெற்றுளது. நிகும்பலை என்பது முதல் நூலில் நிகும்பிலை யென்றே யுள்ளது. இச்சொல் இலங்கையின் மேற்றிசையிலிலுள்ள குகையினையும் அங்குள்ள பத்திர காளியையும் குறிக்கும் என வாசஸ்பதிய நிகண்டு கூறும்.

'சீதை உயிரோடுள்ளாள்; இந்திரசித்து நிகும்பலை என்ற இடத்தில் வேள்வி செய்யச் சென்றுள்ளான், என வீடணன் அறிந்து வந்து சொல லக்கேட்ட இராமன், ஐயம் நீங்கியவனாகி, வீடணனை உடம்பும் உயிரும் ஒன்ற அன்பினால் தழுவிக்கொண்டு, "ஐயனே! யான் துன்பம் தீர்வது ஒரு பெரிய காரியமோ? நீ துணையாக இருக்கின்றாய்; தெய்வம் உள்ளது; அனுமன் உள்ளான்; தவம் உள்ளது; வலிமை உள்ளது" என்று தன் நன்றியைப் புலப்படுத்தினான். வீடணன் இராமனை வணங்கி, 'இந்திர சித்து வேள்வியை முடித்தானானால் அவனை யாராலும் வெல்லமுடியாது வெற்றியும் அரக்கர் பக்கத்ததேயாகும். யான் இலக்குவனோடும் சென்று அவனது உயிரையுண்டு வேள்வியையும் சிதைப்பேன். விடை தந்தருள்வாயாக' என வேண்டினான். அவனது கருத்திற்கு இசைந்த இராமன், இலக்குவனைத் தழுவிக்கொண்டு, 'ஐயனே! இந்திரசித்து உன்மேல் பிரமாத்திரம் முதலிய தெய்வப்படைக்கலங்களைச் செலுத் தினானாயின், அவற்றை விலக்குதற்கன்றி அவற்றை அவன்மேற் செலுத்துதலைத் தவிர்க. உனது வில்லின் வலிமையினாலேயே அவனது உயிரைக் கவர்ந்து மீள்க. அவன் செய்யும் வஞ்சனைச் சூழ்ச்சிகளை முன்னரே அறிந்து விலக்கி, அறநெறியிற் பிறழாது பல்வகைப்பெரும் போரினைச் செய்து, அவன் தளர்ச்சியுற்ற சமயம் நோக்கி நினது அம்பி னால் அவனைக் கொல்வாயாக' என்று போரிற் செய்தற்குரிய உபாயங் களை எடுத்துரைத்து, திருமாலின் வில் கவசம், அம்புப்புட்டில் ஆகிய வற்றைக் கொடுத்து ஆருயிர்த் தம்பியாகிய இலக்குவனைப் போருக்கு அனுப்பினான். வானர சேனைகளுடன் வீடணன் உடன் வர நிகும்பலை நோக்கிச்சென்ற இலக்குவன் சக்கரவியூகமாக ஆரவாரமின்றி யாகத்தைக் காவல்புரிந்திருந்த அரக்கர் சேனையைக் கண்டான்.

அரக்கர் சேனையைக் கண்டு வானர வீரர்கள் ஆரவாரித்தனர். இரு திறச்சேனைவீரர்களும் பெரும் போர்புரிந்தனர். வீடணன் இலக்குவனை நோக்கி 'வீர! நீ இவ்விடத்துத் தாமதித்து நிற்றல் முறையன்று. இப்பொழுதே சென்று இந்திரசித்தின் யாகத்தை சிதைக்காதொழி வாயாயின், நாம் எப்பொழுது இவ்வரக்கராகிய சேனைக்கடலை வென்று கடக்கப்போகின்றோம்' என்றான். தேவர்கள் அசுரர்கள் பிரமன்,சிவன், இந்திரன் முதலியவர்கள் அப்போர் நிகழ்ச்சியைக் காணுதற்கு அங்கு ஆகாயத்தே வந்து கூடினர். இலக்குவன் அரக்கர் சேனையுட்புகுந்து அம்பு மழையைப் பொழிந்தனன். அரக்கர் பலர் உயிரிழந்தனர். அரக்கர் சேனையிலுள்ள யானை குதிரை தேர் ஆகியவற்றை நூறாயிர கோடிக்கணக்காகக் கொன்று குவித்தான். இலக்குவன் செய்த போரினால் இந்திரசித்தின் யாகம் சிதைந்து கெட்டது. அரக்கர்களின் குறையுடலாகிய கவந்தங்கள் ஆடின. போரில் விரைவும் கடுமையும் உடைய இலக்குவன், வேற்படை தாங்கிய அரக்கர் சேனையைத் துணித்து வீழ்த்தினான்.

இலக்குவனால் தன் சேனைகளிற் பெரும்பாலன அழிவுற்ற தன்மையை இந்திரசித்து எத்திசையிலும் நோக்கினான். நூறு நூறாயிர கோடிக்கணக்கான அரக்கர்களை இலக்குவன் என்னும் ஒருவனுடைய அம்புகள் துண்டு துண்டாக்கிய பிணக்குவியல்களையும் இரத்த ஆற்றை யும் அன்றி அங்கு வேறொன்றையும் கண்டிலன். இந்திரசித்து தான் தொடங்கிய யாகத்தில் ஓமாக்கினி அவிந்து அங்கு வேள்விக்குரிய பொருள்களும் தருப்பையும் நிலைகுலைந்து சிதைய அவ்வேள்வியில்தான் அபிமந்திரித்தற்குரிய மந்திர செபத்தையும் மறந்து அவியும் நிலையின தாகிய புகைபடிந்த தீப்போன்று பொலிவழிந்து காணப்பட்டான். அப்பொழுது இறவாது உயிர்தப்பிய அரக்கர்கள் எல்லோரும் அவனைப் பாதுகாவலாக வந்து சூழ்ந்து நின்றனர். வானர சேனை அவ்விடத்து வந்து வளைத்துக்கொண்டது. அநுமன் இந்திரசித்தை அணுகி மாயா சீதையை வெட்டி வீழ்த்தி அயோத்தி சென்று அங்குள்ளவர்களை யெல்லாம் அழித்துவிடப்போவதாகச் சொல்லிய அவனுடைய வஞ்சனையுரைகளை நினைவுபடுத்திப் புகழ்வதுபோன்று பழித்துரைத் தனன். இந்திரசித்து அநுமன் முதலியோரை இகழ்ந்துரைத்து அநுமனொடு பொருது அவனை மெலிவுறச் செய்தான். அதுகண்டு அங்கதன் முதலிய வானரவீரர்கள் இந்திரசித்துடன் பொருதற்கு வந்தனர். அவன் அவர்களை இகழ்ந்து இலக்குவன் மேற்சென்றனன். வானரர், கல்மரம் முதலியவற்றை அவன்மேல் வீசினர். அவன் அவற்றைச் சிதைத்து வானரவீரர்களை வலி ஒயுமாறு செய்தனன். அப்பொழுது வீடணன், இலக்குவனை நோக்கி, 'நம்படை அழிகின்றது. இந்திரசித்து தப்பிப் பிழைக்காதபடி அவன்மேல் விரைந்துசெல்லுக' என வேண்டிக் கொண்டான். இலக்குவனும் அநுமன்தோள்

மீதமர்ந்து இந்திரசித்தினோடு பொருதற்கு முந்தினான். இருவர்க்கு மிடையே கடும்போர் நிகழ்ந்தது. போரில் இந்திரசித்து மெலிவுற்றது கண்ட வீடணன், 'இனி இவன் பிழையான்' என இலக்குவனுக்குக் கூறினான். சினமிக்க இந்திரசித்து காற்று, தீ, நீர், முதலிய தெய்வப் படைக்கலங்களை இலக்குவன்மேற் செலுத்தினான். இலக்குவனும் அந்த அந்தப்படையினைத் தொடுத்து அவற்றைச் சிதைத்தான். பின்பு இந்திரசித்து 'இதனால் இலக்குவன் இறந்தான்' என்று சொல்லிப் பிர மாத்திரத்தை இலக்குவன்மேல் ஏவினான். வானிடத்தே வந்து நின்ற தேவர்கள், 'இலக்குவனுக்குத் தீங்கில்லையாகுக' என அமைதிகூறினர்.

இந்திரசித்து தன்மேல் பிரமாத்திரம் விடுத்ததனைக் கண்ணுற்ற இலக்குவன், தானும் அப்படையினைத் தொடுத்தற்கு அமைந்து 'இப்படையினால் உலகுக்கு எத்தகைய தீங்கும் நேராது நன்றாகுக' இப் படையானது இந்திரசித்தின் உயிர்மேற் சொல்லாமல் அவனால் விடப் பட்ட பிரமாத்திரத்தைமட்டும் மாய்ப்பதாகுக' என்று சொல்லிப் பிரமாத்திரத்தை விடுத்தான். பகைமையிலும் பண்புடையனாகிய இலக்குவனது கருணை மறத்தினைத்தேவர்கள் வியந்து பாராட்டினார்கள் இலக்குவன் விடுத்த பிரமாத்திரம், இந்திரசித்து விட்ட அத்திரத்தை அழித்து வானமெங்கும் பரவி மேலோங்கியது. இலக்குவன் அதன் மேல் மற்றொரு பாணத்தை ஏவி அதன் வெம்மையைத் தீர்த்தான். சிவபெருமான் இலக்குவனது ஆற்றலைக்கண்டு வியந்த தேவர்களை நோக்கி, 'திருமாலின் அமிசமாகிய நாராயணநரர் என்பவர்களே இப் பொழுது இராம இலக்குவராக அவதரித்துள்ளார்கள்' என்ற உண்மை யினை அறிவுறுத்தியருளக்கேட்ட தேவர்கள் அப்பெருமானைத்தொழுது போற்றினார்கள். இந்திரசித்து, நாராயண அத்திரத்தை இலக்குவன் மேல் விடுத்தான். அதுகண்டு அஞ்சிய தேவர்கள் முதலிய யாவரும் தலைமேற் கைகுவித்து வணங்கித் தம்மைப் பாதுகாத்துக் கொண்டனர். இலக்குவன் தன்னைத் திருமாலாகத் தியானித்து அதன் எதிர் நடந் தான். அப்படை விலகி அவனை வலம்வந்து மேலே போயிற்று. அதன் தீச்சுடர் வெம்மை ஒழிந்து புகையும் தீர்ந்தது. அது கண்டு தேவர் முதலியோர் ஆடி மகிழ்ந்தனர், அது கண்ட இந்திரசித்து, 'இவ் இலக்குவன் நாராயணப் படைக்குரிய திருமாலாகவே யிருத்தல் வேண்டும். இவன் எவனாயினும் நான் எடுத்த செயல் நன்றாக முடிதல் வேண்டும், ஆதலால் இவன்மேல் சிவனது பாசுபதப்படையினைச் செலுத்தி இவனது உயிரை முடிப்பேன்' என்று பாசுபதாத்திரத்தை ஏவினான். அப்படை சூலம் மழு தீ நஞ்சு இடி பேய் காலனுருவம் முதலியன உடன்வர வந்தது. இதுகண்டு தேவர் முனிவர் முதலியோர் நிலைகுலைந்தனர். வீடணன் இலக்குவனை அணுகி 'இதனை விலக்கும் உபாயம் உள்ளதோ' என அஞ்சி வினவினான். இலக்குவன், பகைவன் அப்படையை ஏவினமைக்குச் சிரித்தான். வானர வீரர் எல்லோரும்

இலக்குவனைச் சரணடைந்தார்கள், அந்நிலையில் இலக்குவன் சரண்புக்க எல்லோரையும் அஞ்சன்மின் என அபயமளித்து பாசுபதப்பதாத்திர யாகிய அத்தெய்வப்படையினை மனத்தால் நினைந்து அருச்சித்து, 'இந்திரசித்து ஏவிய இப்படையினை அழிப்பாயாக; மற்றொன்றும் செய்யற்க' என்று அம்புடன் இணைத்து எய்தனன். அது இந்திரசித்தின் படையை விழுங்கியது. அதுகண்டு விண்ணுலகத்தவரும் மண்ணுலகத் தவரும் ஆரவாரித்தனர். இந்திரசித்து மனம்திகைப்புற்றான்; தெய்வப் படை பழுதுற்றது' என்று எண்ணித் திகைப்புறுதல் தவறு. விற்போர் வன்மை என்பால் உள்ளது, என்று சொல்லித் தன் கைவன்மையால் இலக்குவனுடைய தோள்களிலும் நெற்றியிலும் சில அம்புகளை எய்தான்; சுக்கிரீவன் முதலிய வானர வீரர்கள்மீதும் பலகோடியம்பு களைச் செலுத்தினான். இலக்குவனுக்குப் பக்கத்தே நின்ற தன் சிறிய தந்தையாகிய வீடணனை நோக்கி வெகுண்டு அவனைப் பலவாறு இகழ்ந்துரைத்தான். வீடணன், வெகுளாது அவ்வழியில் நடப்பதே தன் கடமையென மறுமொழி பகர்ந்தான். அதுகேட்ட இந்திரசித்து 'நீ பெறும் சிறப்புக்கள் யாவும் என் கையம்பால் அழிந்தொழியும் சிறப்பே' என்று கூறி வீடணன் கழுத்தைநோக்கி அம்பினைச் செலுத் தினான். அதுகண்ட இலக்குவன் அம்பொன்றால் அதனைத் துண்டித் தான். இந்திரசித்து வேற்படையினை வீடணன்மேல் எறிய இலக்குவன் அதனையும் அம்பினால் வெட்டி வீழ்த்தினான். அப்பொழுது வீடணன் தன் கையிற்கொண்ட தண்டாயுதத்தால் இந்திரசித்தின் தேர்ப்பாகனை யும் தேரிற் கட்டிய குதிரைகளையும் புடைத்தழித்தான். தேரும் கட்டுக்குலைந்தது. சிதைவுற்ற தேர்மேல்நின்ற இந்திரசித்து வீடணன் இலக்குவன் வானரவீரர் ஆகிய எல்லோர்மீதும் அம்புகளைப்பொழிந்து அண்டம் இடிபட ஆரவாரித்தான். 'அழிவில்லாத தேரைத் துணையாகக் கொண்டன்றிப் போர்த்தொழில் புரிதல் இயலாது' என எண்ணிய இந்திரசித்து, கண்டோர் கண்ணிமைத்துப் பார்த்தற்கு முன்னே வானத்திற் பாய்ந்து மறைந்தான் என்ற வார்த்தையை அங்கு நிலை நிறுத்தி அவ்விடத்தை விட்டு மறைந்து இராவணன் இருக்குமிடத்திற் புக்கனன் என்பது இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

# நிகும்பலை யாகப் படலம்

**9069** வீரனு மையந் தீர்ந்தான்
வீடணன் றன்னை மெய்யோ
டார்வமு முயிரு மொன்ற
வழுந்துறத் தழுவி யைய
தீர்வது பொருளோ துன்ப
நீயுளை தெய்வ முண்டு
மாருதி யுளனுஞ் செய்த
தவமுண்டு மறையு முண்டால்.

வீரனும் ஐயம் தீர்ந்தான்;
வீடணன் தன்னை மெய்யோடு
ஆர்வமும் உயிரும் ஒன்ற
அழுந்துறத் தழுவி, 'ஐய!
தீர்வது பொருளோ, துன்பம்?
நீ உளை; தெய்வம் உண்டு;
மாருதி உளன்; நாம் செய்த
தவம் உண்டு; மறையும் உண்டால்.

பொ:— வீரனாகிய இராமனும் ஐயம் நீங்கியவனாகி, வீடணனை உடம்போடு ஆர்வமும் உயிரும் ஒன்றிப் பொருந்த இறுகத்தழுவிக் கொண்டு, 'ஐயனே! (யான்) துன்பம் நீங்குவது அரிய செயலோ? நீ (எனக்குத் துணையாக) உள்ளாய்; தெய்வம் (துணை) உள்ளது; வாயுவின் மைந்தன் அனுமன் (துணையாக) உள்ளான்; வேதமும் (துணை) உள்ளது.'

கு:— வீரன் என்றது இராமனை. மெய்யோடு ஆர்வமும் உயிரும் ஒன்றத் தழுவி, மெய்யோடு அழுந்துறத் தழுவி எனத் தனித்தனி இயையும். ஐயமாவது, இந்திரசித்தினால் வெட்டப்பட்டவள் சீதைதானோ என்ற சந்தேகம். தீர்தல், அவள் அல்லள் எனத்தெளிதல். மெய்—உடம்பு. ஆர்வம் என்பது, தொடர்புடைமை நோக்காது அன்புடையார் யாவரிடத்தும் செல்லும் விருப்பம். (திருக்குறள் 74-பரிமேலழகர் உரை) 'சீதாபிராட்டி உயிரோடுள்ளாள்; இந்திர

சித்து நிகும்பலையில் வேள்வி செய்யச் சென்றுள்ளான்' என வீடணன் அறிந்து வந்து சொல்லக் கேட்ட இராமன், தன் மனத்து ஐயம் நீங்கியவனாய், வீடணனை ஆர்வமுற இறுகத் தழுவிக் கொண்டு, 'இடுக்கண் நீக்கிக்காக்கவல்ல உயிர்த்தோழனாகிய நீ இருத்தலாலும், நம் எல்லோர்க்கும் தெய்வம் துணை நிற்றலாலும், எதிரதாக் காக்கும் நல்லறிவுடைய அனுமன் துணை நிற்றலாலும், முன்னை நல்வினைப் பயனாகிய தவம் இருந்தலாலும், நம்மைத் தீதொரீஇ நன்றின்பாற் செலுத்தும் வேதம் இருத்தலாலும் நாம் இடர்நீங்கி இன்புறுதல் உறுதி' எனக் கூறினான் என்பதாம். துன்பம் தீர்வது பொருளோ என இயையும். பொருள்—அரிதின் நிறைவேற்றத்தக்க பெருஞ்செயல். ஓகாரம், எதிர்மறை. (1)

இலக்குவனுடன் சென்று இந்திரசித்தின் வேள்வியைச் சிதைத்தற்கு விடைதரும்படி வீடணன் இராமனை வேண்டுதல்.

**9070** என்றலு மிறைஞ்சி யாக
முற்றுமேல் யாரும் வெல்லார்
வென்றியு மரக்கர் மேற்றே
விடையரு ளிளவ லோடுஞ்
சென்றவ னாவி யுண்டு
வேள்வியுஞ் சிதைப்பெ னென்றான்
நன்றது புரிதி ரென்னா
நாயக னவில்வ தானான்.

என்றலும், இறைஞ்சி, 'யாகம்
முற்றுமேல், யாரும் வெல்லார்;
வென்றியும் அரக்கர் மேற்றே;
விடை அருள்; இளவ லோடும்
சென்று, அவன் ஆவி உண்டு,
வேள்வியும் சிதைப்பென்' என்றான்;
'நன்று, அது புரிதிர்' என்னா,
நாயகன் நவில்வ தானான்.

பொ:- என்று (இராமன்) கூறிய அளவில் (வீடணன், இராமனை) வணங்கி, '(இந்திரசித்து செய்யத் தொடங்கிய) வேள்வி நிறைவேறுமானால் எத்திறத்தாரும் அவனை வெல்லும் வல்லமையுடையாரல்லர்; வெற்றியும் அவ்அரக்கர் பக்கத்ததேயாகும். ஆகவே தம்பியோடும் சென்று அவ் இந்திரசித்தின் உயிரைப் பருகி (அவனது) யாகத்தையும் அழித்தொழிப்பேன் (எமக்கு) விடைகொடுத்தருள்வாயாக' எனக்

கூறினன். தலைவணங்கிய இராமன் 'நல்லது, அதனைச் செய்யுங்கள்; என்று சொல்லி (மேலும் சில), கூறுவானாயினன்.

கு:—என்றான் என்னும் பயனிலைக்குரிய வீடணன் என்னும் எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது. அவன் என்றது இந்திரசித்தினை. 'நன்று, அது புரிதிர்' என்பது, இராமன் வீடணன் கூற்றை உடன்பட்டுரைக்கும் நிலையில் அமைந்த இசைவுமொழி. வீடணனுடன் இலக்குவன் முதலியோரையும் உளப்படுத்துரைத்தலின் 'புரிதிர்' எனப் பலர் பாலாற் கூறினன். நாயகன்—தலைவன்: என்றது இராமனை. அவன் கூறியவை பின்வருஞ் செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (2)

இராமன் இலக்குவனைத் தழுவி, இந்திரசித்துடன் செய்யும் போரில் நடந்துகொள்ள வேண்டிய முறையினை அறிவுறுத்தல்

**9071** தம்பியைத் தழுவி யைய
தாமரைத் தவிசின் மேலான்
வெம்படை தொடுக்கு மாயின்
விலக்குவ தன்றி வெய்தின்
அம்புநீ துரப்பா யல்லை
யனையது துரந்த காலை
உம்பரு முலகு மெல்லாம்
விளியுமஃ தொழிதி யென்றான்.

தம்பியைத் தழுவி, 'ஐய!
தாமரைத் தவிசின் மேலான்
வெம்படை தொடுக்கும் ஆயின்,
விலக்குவது அன்றி, வெய்தின்
அம்பு நீ துரப்பாய் அல்லை;
அனையது துரந்த காலை,
உம்பரும் உலகும் எல்லாம்
விளியும்; அஃது ஒழிதி' என்றான்.

பொ:- (இராமன், தன்) தம்பியாகிய இலக்குவனைத் தழுவிக் கொண்டு, 'ஐயனே! (இந்திரசித்து) தாமரையாசனத்தில் அமர்ந்தோனாகிய பிரமனது வெம்மையுடைய படைக்கலத்தை (உன்மேல்) தொடுத்து விடுவானாயின் (அப்படையினை) விலக்குதலைச் செய்வதன்றிக் கடிதின் அவ் அம்பினை (அவன்மேற்) செலுத்தாதிருப்பாயாக. அத்தகைய பிரமாத்திரத்தை அவன்மேற் செலுத்தியபோது வானுல

கும் (இவ்) உலகிலுள்ள எல்லா வுயிர்களும் இறந்தொழிவன; ஆதலால் அச்செயலைத் தவிர்வாயாக' எனக் கூறினான்.

கு:— தம்பி என்றது இலக்குவனை. தாமரைத்தவிசின் மேலான்— பிரமன். வெம்படை—யாவராலும் பொறுத்தற்கியலாத வெம்மையையுடைய அத்திரம்; என்றது, பிரமாத்திரத்தினை. விலக்குதல்— தன்னை யடையாதபடி தடுத்து நிறுத்துதல், துரத்தல்—பகைவன்மேற் செலுத்துதல். உம்பரும் உலகு எல்லாமும் என இயைக்க. உம்பர்— மேலுலகு; என்றது அங்கு வாழும் தேவர்களை. எல்லாமும்—எல்லா வுயிர்களும். விளிதல்—இறத்தல். (3)

**9072** முக்கணான் படையு மாழி
முதலவன் படையு முன்னின்
றொக்கவே விடுமே விட்டா
லவற்றையு மவற்றா லோயத்
தக்கவா றியற்றி மற்றுன்
சிலைவலித் தருக்கி னாலே
புக்கவ னாவி கொண்டு
போதுதி புகழின் மிக்கோய்.

முக்கணான் படையும், ஆழி
முதலவன் படையும், முன்நின்று
ஒக்கவே விடுமே; விட்டால்,
அவற்றையும் அவற்றால் ஒயத்
தக்கவாறு இயற்றி, மற்று உன்
சிலைவலித் தருக்கி னாலே
புக்கவன் ஆவி கொண்டு,
போதுதி—புகழின் மிக்கோய்!

பொ:- புகழ்த்திறத்தில் மேம்பட்டவனே! (அவ் இந்திரசித்து) முற்பட்டு நின்று மூன்று கண்களையுடையவனாகிய சிவனது படைக்கலத்தையும் சக்கரப் படையினையுடைய முதல்வனாகிய திருமாலின் படையினையும் ஒருசேர (நின்மேல்) ஏவுதல் கூடும். அவ்வாறு செலுத்தினால் அப்படைக்கலங்களையும் அப்படைகளினாலேயே ஆற்றல் குன்றி ஒழியும்படி செய்து, உன் வில்வன்மையின் மிகுதியினாலே (நின்மேற் போர்செய்யப்) புக்கவனது உயிரைக் கவர்ந்துகொண்டு மீள்வாயாக.

கு:- முக்கணன்—சிவபெருமான்; படை—பாசுபதாத்திரம். ஆழி முதலவன்—திருமால்; படை—சக்கராயுதம். ஒக்க—ஒருசேர; அடுத் தடுத்து. ஒய்தல்—ஆற்றல் குன்றி ஒழிதல். புக்கவன்—போர்மேற் கொண்டு புகுந்த இந்திரசித்து. புக்கவனது ஆவியினை உன்சிலைவலித் தருக்கினாலே கொண்டு போதுதி எனவே, பிரமாத்திரம் முதலிய தெய் வப் படைக்கலங்களால் அவனைக் கொல்லாமல் நின்கையிலுள்ள அம்பு களாற் கொல்வாயாக என அறிவுறுத்தினானாயிற்று. (4)

9073 வல்லன மாய விஞ்சை
வகுத்தன வறிந்து மாளக்
கல்லுதி தரும மென்னுங்
கண்ணகன் கருத்தைக் கண்டு
பல்பெரும் போருஞ் செய்து
வருந்தலை யற்றம் பார்த்துக்
கொல்லுதி யமரர் தங்கள்
கூற்றினைக் கூற்ற மொப்பாய்.

'வல்லன மாய விஞ்சை
வகுத்தன அறிந்து, மாள,
கல்லுதி, தருமம் என்னும்
கண் அகன் கருத்தைக் கண்டு;
பல் பெரும் போரும் செய்து
வருந்தலை; அற்றம் பார்த்து,
கொல்லுதி, அமரர் தங்கள்
கூற்றினை—கூற்றம் ஒப்பாய்!

பொ:- (எதிர்ந்தார் உயிரைக் கவருந் திறத்தில்) இயமனை ஒத்த வனே! (இந்திரசித்து, தான் பயின்று) கைவந்த மாயச் செயல்களாக வகைபெற இயற்றியனவற்றை முன்னரே (குறிப்பினால்) அறிந்து (அவையெல்லாம்) அறவே கெட்டொழியுமாறு (வேருடன்) பெயர்த் தெறிவாயாக. அறம் என்னும் இடமெங்கும் விரிந்து பரவிய பொருளைக் கருதியுணர்ந்து, பலவகைப்பட்ட பெரிய போர்த் தொழில்களையும் செய்து மெய்வருத்த மடையாய் ஆகித் தேவர்க்குக்கூற்றுவனாகிய அவ் இந்திரசித்தைத் தளர்ச்சியுள்ள சமயம் பார்த்து (எளிதிற்) கொல் வாயாக.

கு:- வல்லன—எண்ணிய மாத்திரத்துச் செய்து காட்டத் தக்கன வாகக் கைவந்தன. மாளக் கல்லுதல்—மூற்றக் கெட்டொழியுமாறு

வேருடன் பெயர்த்தெறிதல். தருமம் என்னும் கருத்து, கண் அகன் கருத்து எனத் தனித்தனி இயையும். கருதியுணரப்படும் பொருளைக் கருத்து என்றது ஆகுபெயர். காணுதல்—மனத்தால் நோக்குதல்; கருதியுணர்தல். 'கூற்றம் ஒப்பாய்' என்றது, இலக்குவனை நோக்கிய விளி. 'அமரர் தங்கள் கூற்று' என்றது, தேவர்கட்கு இயமனை யொத்து இடர்செய்யும் இந்திரசித்தினை. அற்றம்—தளர்ச்சியுற்ற சமயம். (5)

**9074** பதைத்தவன் வெம்மை யாடிப்
பல்பெரும் பகழி மாரி
விதைத்தன விதையா நின்று
விலக்குதி மெலிவு மிக்கால்
உதைத்தவன் சிலையின் வாளி
மருமத்தைக் கழிய வோட்டி
வதைத்தொழில் புரிதி சாப
நூனெறி மறப்பி லாதாய்

'பதைத்து அவன், வெம்மை ஆடி,
பல்பெரும் பகழி மாரி
விதைத்தன விதையா நின்று
விலக்குதி; மெலிவு மிக்கால்,
உதைத்த வன் சிலையின் வாளி
மருமத்தைக் கழிய ஓட்டி,
வதைத் தொழில் புரிதி—சாப
நூல் நெறி மறப் பிலாதாய்!

பொ:-வில்வேத நெறிமுறையினை மறவாதவனே! அவ் இந்திரசித்து பதைப்புற்று வெகுண்டு பலவேறு வகைப்பட்ட பெரிய அம்புகள் மழைபோற் சொரிந்தனவற்றை (நீயும்) சொரிந்து நின்று விலக்கு வாயாக. (அவன்) மெலிவுமிக்கு வருந்தியநிலையில் நாண் வலிக்கப் பட்ட வலிய வில்லினின்றும் செலுத்தப்படும் அம்பினை (அவனது) மார்பினைத் துளைத்து ஊடுருவிச் செல்லுமாறு செலுத்தி (அவனைக்) கொல்லுந் தொழிலைச் செய்வாயாக.

கு:—அவன்—இந்திரசித்து. பதைத்தல்—மனந்துணுக்குற்று வருந்து தல். வெம்மையாடி—வெகுளியை மேற்கொண்டு. விதைத்தல்—பதியுமாறு சொரிதல். உதைத்தல்—வில் நாணை இறுகவலித்தல். மருமம்—மார்பு. கழிய ஓட்டுதல்—துளைத்து ஊடுருவிச்செல்லு

மாறு செலுத்துதல். வதைத்தொழில்—கொல்லுதலாகிய தொழில். சாபநூல்—வில்வேதம். (6)

**9075** தொடுப்பதன் முன்னம் வாளி
தொடுத்தவை துறைக டோறும்
தடுப்பன தடுத்தி யெண்ணங்
குறிப்பினு லுணர்ந்து தக்க
கடுப்பினு மளவி லாத
கதியினுங் கணைகள் காற்றின்
விடுப்பன வவற்றை நோக்கி
விடுதியால் விரைவி லாதாய்.

'தொடுப்பதன் முன்னம், வாளி
தொடுத்து, அவை துறைகள் தோறும்
தடுப்பன தடுத்தி; எண்ணம்
குறிப்பினுல் உணர்ந்து, தக்க
கடுப்பினும், அளவு இலாத
கதியினும், கணைகள் காற்றின்
விடுப்பன அவற்றை நோக்கி
விடுதியால்—விரைவு இலாதாய்!

பொ:- (இடர் வந்துழிச் சிறிதும் மனம்) கலங்குதல் இல்லாதவனே! (இந்திரசித்து, நின்மேல்) அம்பு தொடுப்பதற்கு முன்னே (நீ) அவற்றைத் தொடுத்துப் போர்த்துறைகள் தோறும் தடுத்தற்குரியனவாகிய (பகைவனுடைய) படைக்கலங்களைத் தடுத்து விலக்குவாயாக, (பகைவனது) மனக்கருத்தினை முகக்குறிப்பு முதலியவற்றால் உணர்ந்து தக்க விரைவுடனும் அளவில்லாத கதியினோடும் அம்புகள் காற்றைப்போன்று விடுப்பனவற்றை(க் கூர்ந்து) நோக்கி (அவன்மேல்) செலுத்துவாயாக.

கு:- 'விரைவிலாதாய்' என்றது இலக்குவனை நோக்கிய விளி. விரைவு—விரைதல்; இடர்கண்டு நெஞ்சங் கலங்குதல். 'விரையாது நின்றான்' (சீவக-513) என்புழி விரைதல் என்பது மனங்கலங்குதல் என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளமை காணலாம். வாளி தொடுப்பதன் முன்னம் அவை தொடுத்துத் துறைகள் தோறும் தடுப்பன தடுத்தி என இயையும். தக்க கடுப்பு என்றது, பகைவன் எய்யும் வேகத்திற்குத் தக்கவாறு அதனினும் வேகமாக அடுத்தடுத்து

அம்புகளை விரைந்து எய்தலை. அளவில்லாத கதி என்றது அங்ஙனம் எய்யப்படும் அம்புகள் செல்லும் அளவில்லாத வேகத்தினை. (7)

## இலக்குவனுக்கு இராமன் திருமாலின் வில்லும் கவசம் முதலியனவும் அளித்தல்.

**9076** என்பன முதலு பாயம்
யாவையு மியம்பி யேற்ற
முன்பனை நோக்கி யைய
மூவகை யுலகுந் தானுய்த்
தன்பெருந் தன்மை தானு
மறிகிலா வொருவன் ரூங்கும்
வன்பெருஞ் சிலையீ தாகும்
வாங்குதி வலமுங் கொள்வாய்.

என்பன முதல் உபாயம்
யாவையும் இயம்பி, ஏற்ற
முன்பனை நோக்கி, 'ஐய!
மூவகை உலகும் தான் ஆய்,
தன் பெருந் தன்மை தானும்
அறிகிலா ஒருவன் தாங்கும்
வன்பெருஞ் சிலை ஈது ஆகும்;
வாங்குதி; வலமும் கொள்வாய்.

பொ:- என்று மேற்கூறியன முதலாகவுள்ள (போர்த்தொழில்) உபாயங்கள் எல்லாவற்றையும் எடுத்துரைத்து (தீதான் கூறியவற்றை விரும்பி) ஏற்றுக்கொண்ட வலிமிக்கோனாகிய இலக்குவனை (மீண்டும்) நோக்கி, ஐயனே! மூவகை உலகங்களும் தானேயாகித் தனது பெருமையினைத் தானும் அறிய முடியாத ஒப்பற்ற இறைவனாகிய திருமால் (தன் கையில்) ஏந்திய பெரிய வில் இதுவாகும். இதனை நின் கையில் வாங்குவாயாக; (இதனால்) வெற்றியும் கொள்வாயாக.

கு:- இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். உபாயம்—சூழ்ச்சித்திறம். ஏற்றல்—மனத்தில் ஏற்றுக்கொள்ளுதல். முன்பன்—வன்மையுடையோன்; என்றது, இலக்குவனை. முன்பு—வலிமை.'மூவகை யுலகும் தானுய்த் தன் பெருந்தன்மைதானும் அறிகிலா ஒருவன்' என்றது, மேல் கீழ் நடுவாகிய மூவகையுலகங்களும் தானேயாய் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இறைவனாகிய திருமாலை. முற்றுணர்

வுடைய அவனது பெருந்தன்மை அம்முதல்வனாலும் அறிய வொண்ணாத அருமையுடையது என்பார், 'தன் பெருந்தன்மைதானும் அறிகிலா ஒருவன்' என்றார். 'தன் தன்மை அறிவரியான்' எனவரும் நம்மாழ்வார் அருளிச்செயலும், 'தன்பெருமை தானறியாத் தன்மை யன் காண்சாழலோ' (திருச்சாழல்-19) எனவரும் திருவாசகமும் இங்கு ஒப்புநோக்கியுணர்தற்குரியனவாகும். வலம்—வெற்றி.

**9077** இச்சிலை யியற்கை மேனாட்
டமிழ்முனி யியம்பிற் றெல்லாம்
அச்செனக் கேட்டா யன்றே
யாயிர மௌலி யண்ணல்
மெய்ச்சிலை விரிஞ்சன் றானே
வேள்வியில் வேட்டுப் பெற்ற
கைச்சிலை கோடி யென்று
கொடுத்தனன் கவசத் தோடும்.

'இச் சிலை இயற்கை மேல் நாள்
தமிழ்முனி இயம்பிற்று எல்லாம்
அச்செனக் கேட்டாய் அன்றே?
ஆயிரம் மௌலி அண்ணல்
மெய்ச்சிலை விரிஞ்சன் தானே
வேள்வியில் வேட்டுப் பெற்ற
கைச்சிலை கோடி' என்று
கொடுத்தனன், கவசத் தோடும்.

பொ:- 'இந்த வில்லின் இயல்பினைக் குறித்து முன்னொரு நாள் தமிழ் முனிவராகிய அகத்தியர் கூறியவற்றை யெல்லாம் உறுதி யுடைய சொல்லாக (நின் உள்ளத்திற்) பதியும்படி கேட்டாயல்லவா? ஆயிரந் திரு முடிகளையுடைய திருமால் (தன்) திருமேனியிற் கொண்ட வில்லாகிய இது, பிரமதேவனே (தான் செய்த) வேள்வியில் விரும்பிப் பெற்ற கை வில்லாகும். (இதனை ஏற்றுக் கொள்வாயாக' என்று (அவ் வில்லின் பெருமையைக்) கூறி, (தன் பாலுள்ள) போர்க் கவசத் தோடும் (இலக்குவனுக்குக்) கொடுத்தான் (இராமன்).

கு:- சிலை—வில். அகத்திய முனிவர் சிவபெருமான்பால் தமிழ் மொழியை நன்கு பயின்று அம் மொழியை வளர்த்தமை பற்றித் தமிழ் முனி எனச் சிறப்பித்துப் போற்றப் பெற்றார். 'தழற் புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்தந்தான்' எனவும், 'நீண்ட தமிழாலுலகை நேமியின்

அளந்தான்' எனவும் இந் நூலில் அகத்திய முனிவர் போற்றப் பெற் றிருத்தல் இங்கு நினைக்கத்தகுவதாகும். அச்சு—வலிமை; உறுதி (சீவக 2777) அச்சென—உறுதியுடைய சொல்லாக. அச்சு என என்ப தற்கு, அதிசயம் உற எனவும், நன்றாக எனவும், உண்மையாக எனவும் பொருள் கொள்ளுதலும் உண்டு. 'ஆயிரம் ஞாயிறு போலும் ஆயிர நீண்முடியானும்' (தேவாரம். 4-4-8) என்றவாறு எண்ணில்லாத முடி களையுடைய இறைவனை 'ஆயிரமௌலி யண்ணல்' எனக் குறித்தார். விரிஞ்சன்—பிரமன், திருமாலிடமிருந்த வில்லினைப் பிரமன் வேள்வி யில் வேண்டிப் பெற்று அகத்திய முனிவரிடம் கொடுக்க, அம்முனிவர் அதனை இராமனுக்கு அளிக்க இராமன் அதனை இப்பொழுது இலக்கு வனுக்குக் கவசத்துடன் கொடுத்தனன் என அவ்வில்லின் வரலாற்றினை விரித்துரைத்தவாறு. (9)

9078 ஆணியிவ் வுலகுக் கான
வாழியான் புறத்தி னார்த்த
தூணியுங் கொடுத்து மற்று
முறுதிகள் பலவுஞ் சொல்லி
தாணுவின் றோற்றத் தானைத்
தழுவினன் றழுவ லோடும்
சேணுயர் விசும்பிற் றேவர்
தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்.

ஆணி, இவ் வுலகுக்கு ஆன
ஆழியான், புறத்தின் ஆர்த்த
தூணியும் கொடுத்து, மற்றும்
உறுதிகள் பலவும் சொல்லி,
தாணுவின் தோற்றத்தானைத்
தழுவினன், தழுவலோடும்,
சேண்உயர் விசும்பில் தேவர்,
'தீர்ந்தது எம் சிறுமை, என்றார்.

பொ:- இவ்வுலகமாகிய பெருந் தேர்க்கு அச்சாணியை யொத்த திண்ணியனாகிய சக்கரப் படையினையுடைய (திருமாலாகிய) இராமன் தன் முதுகிற் கட்டியுள்ள அம்புப் புட்டிலையும் கொடுத்து மற்றும் உறுதி மொழிகள் பலவும் கூறிச் சிவபெருமானை யொத்த தோற்றப் பொலிவினனாகிய இலக்குவனை உடம்போடு இறுகத் தழுவிக் கொண் டான்; அங்ஙனம் தழுவி (ப் போர்க்கு) விடை கொடுத்தவுடனே மிக

வுயர்ந்த விண்ணுலகத்து வாழும் தேவர்கள் 'எம்முடைய துன்பம் தொலைந்தது' என்று கூறி மகிழ்ந்தனர்.

கு:- ஆணி என்பது, தேரிற் சக்கரம் கழலாதபடி அச்சு மரத்தின் கடையிற் செருகப்படுவது; தான் வடிவாற் சிறிதாயினும் தேரைக் கொண்டு உய்க்குந் திறத்தில் தேருக்கு ஆதாரமாகத் திகழ்வது. அது போன்று உலகம் இடையூறின்றி இயங்குதற்கு ஆதாரமாக விளங்குவோன் ஆழியான் என்பது புலப்படுத்துவார், 'இவ்வுலகுக்கு ஆணியான ஆழியான்' என்றார். புறம்—முதுகு. தூணி—அம்புப் புட்டில். தாணு—சிவபெருமான். தாணுவின் தோற்றத்தான் என்றது இலக்குவனை. சிறுமை—துன்பம். (10)

போர்க்கோலங்கொண்ட இலக்குவன், இராமன்பால் விடை பெற்று வானரத்தலைவர்களுடன் நிகும்பலை நோக்கிச் செல்லுதல்

**9079** மங்கலந் தேவர் கூற
வானவர் மகளிர் வாழ்த்திப்
பங்கமி லாசி கூறிப்
பலாண்டிசை பரவப் பாகத்
திங்களின் மௌலி யண்ண
றிரிபுரந் தீக்கச் சீறிப்
பொங்கின னென்னத் தோன்றிப்
பொலிந்தனன் போர்மேற் போவான்.

மங்கலம் தேவர் கூற
வானவர் மகளிர் வாழ்த்தி,
பங்கம் இல் ஆசி கூறி,
பல்லாண்டு இசை பரவ-பாகத்
திங்களின் மௌலி அண்ணல்
திரிபுரம் தீக்கச் சீறிப்
பொங்கினன் என்ன, தோன்றிப்
பொலிந்தனன்—போர்மேல் போவான்.

பொ:- தேவர்கள் மங்கலம் கூறி வாழ்த்தவும், தேவ மகளிர் குற்றமில்லாத வாழ்த்துரைத்துப் பல்லாண்டு என்னும் இசை பாடிப் பரவவும், போர் மேற் செல்வானாகிய இலக்குவன், பாதிச் சந்திரனாகிய பிறை யணிந்த முடியினையுடைய இறைவனாகிய சிவபெருமான் முப்புரங்களையும் சுட்டெரிக்கச் சினந்து பொங்கி யெழுந்தான் என்னும் தோற்றமுடையவனாகி விளங்கினான்.

கு:-தேவர் மங்கலம் கூற, வானவர் மகளிர் ஆசி கூறி வாழ்த்திப் பல்லாண்டிசை பரவ, போர்மேற் செல்வான், பாதித் திங்களின் மௌலி அண்ணல் திரிபுரம் தீக்கச் சீறிப் பொங்கினன் என்னத்

தோன்றிப் பொலிந்தனன் என இயைத் துரைக்க. பாகத்திங்கள்—பாதி மதி; பிறை. மௌலி– முடி. அண்ணல்—இறைவன். தீத்தல்—சுட்டெரித்தல். (11)

9080 மாருதி முதல்வ ராய
வானரத் தலைவ ரோடும்
வீரநீ சேறி யென்று
விடை கொடுத் தருளும் வேலை
ஆரியன் கமல பாத
மகத்தினும் புறத்து மாகச்
சீரிய சென்னி சேர்த்துச்
சென்றனன் றருமச் செல்வன்.

'மாருதி முதல்வர் ஆய
வானரத் தலைவரோடும்,
வீர! நீ சேறி, என்று
விடை கொடுத்தருளும் வேலை,
ஆரியன் கமல பாதம்
அகத்தினும் புறத்தும்ஆக,
சீரிய சென்னி சேர்த்து,
சென்றனன், தருமச் செல்வன்.

பொ:- 'அனுமனை முதலாகக் கொண்ட வானரப் படைத் தலைவர்களோடும், வீரனே! நீ போருக்குச் செல்வாயாக' என்று (இராமன்) விடை கொடுத்தருளிய பொழுது அறப் பெருஞ் செல்வனாகிய இலக்குவன், பெரியோனாகிய இராமனுடைய செந்தாமரை மலர் போலுந் திருவடிகளை (ச் சிந்தையின்) அகத்தும் (சென்னியின்) புறத்தும் அமையச் சிறப்புடைய தன் தலையிற் பொருந்த வைத்து (நிகும்பலைக்கு)ச் சென்றான்.

கு:- 'மாருதி முதல்வராய வானரத் தலைவரோடும் வீர நீ சேறி" என்பது, இராமன் இலக்குவனை நோக்கிக் கூறியது. ஆரியன்—பெரியோன்; இராமன். கமலபாதம்—செந்தாமரை மலர் போலும் திருவடி. அறத்தின் வழி நின்று ஒழுகுதலையே தனக்குரிய பெருஞ் செல்வமாகக் கொண்டவன் இலக்குவன் என்பது புலப்படுத்துவார், அவனைத் 'தருமச் செல்வன்' எனச் சிறப்பித்தார். இராமனைத் தன் ஆருயிர்த் தலைவனாகத் தன் உள்ளத்திற் கொண்டு தியானித்து வழிபடும் நிலையிற் சிந்தையின் அகத்திலும், தமையனாகிய ஆசிரியனாகக் கொண்டு

இறைஞ்சும் நிலையிற் புறத்தே தன் சென்னியிலும் அவன் திருவடிகள் நிலை பெற்றுத் திகழும் வண்ணம் இலக்குவன் இராமன் திருவடிகளைத் தலை மேற்கொண்டு வணங்கிச் சென்றனன் என்பார், 'ஆரியன் கமல பாதம் அகத்தினும் புறத்துமாகச் சீரிய சென்னி சேர்த்துச் சென்றனன்' என்றார். 'பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும் புந்தியினும் உற வணங்கிப் போற்றல் செய்வாம்' (சிவப்பிரகாசம் -கடவுள் வாழ்த்து) என வருந் தொடர் இங்கு ஒப்பு நோக்கியுணரத் தகுவதாகும்.

**9081** பொலங்கொண்ட லனைய மேனிப்
புரவலன் பொருமிக் கண்ணீர்
நிலங்கொண்டு படர நின்று
நெஞ்சழி வானைத் தம்பி
வலங்கொண்டு வயிர வல்வி
லிடங்கொண்டு வஞ்சன் மேலே
சலங்கொண்டு கடிது சென்றான்
றலைகொண்டு வருவெ னென்றே.

பொலங் கொண்டல் அனைய மேனிப்
புரவலன், பொருமி, கண்ணீர்
நிலம் கொண்டு படர நின்று,
நெஞ்சு அழிவானை, தம்பி
வலம் கொண்டு, வயிர வல்வில்
இடம் கொண்டு, வஞ்சன் மேலே,
சலம் கொண்டு கடிது சென்றான்,
'தலைகொண்டு வருவென்' என்றே.

பொ:-அழகிய மேகத்தை யொத்த மேனியையுடைய மன்னனாகிய இராமன் (உள்ளம்) விம்மிக் கண்ணின் நீர் ஒழுகி நிலத்திற் படர்ந்து செல்லும்படி நின்று (பிரிவால்) மனங்கவல்கின்றவனைத் தம்பி (இலக்குவன்), வலம் வந்து வணங்கி, (அவன் தந்த) திண்மை வாய்ந்த வலிய வில்லினைத் தனது இடக்கையிலே கொண்டு, வஞ்சனைத் திறமுடையானாகிய இந்திர சித்தன் மேல் செற்றங் கொண்டு, 'அவனது தலையைக் கொண்டு வருவேன்' என்று சொல்லி விரைந்து சென்றான்.

கு:- பொலம்—பொன்; ஈண்டு அழகு என்னும் பொருளில் வந்தது. கொண்டல்—மேகம். புரவலன்— இராமன். பொருமுதல்—

நெஞ்சம் விம்முதல். தம்பி—இலக்குவன். கண்ணீர் நிலங்கொண்டு படர நின்று பொருமி நெஞ்சழிவானுகிய பொலங் கொண்டல் அனைய மேனிப் புரவலனைத் தம்பி வலங் கொண்டு, வயிர வல்லில் இடங் கொண்டு, வஞ்சன் மேலே சலங் கொண்டு, 'தலை கொண்டு வருவென்' என்று கடிது சென்ருன் என இயைத்துப் பொருள் கொள்க. மூன்ருமடியில் வலங் கொண்டு இடங் கொண்டு என வந்தது தொடை முரண். வஞ்சன் என்றது, வஞ்சனைத் திறத்தில் வல்லவனுகிய இந்திர சித்தினை. சலம்—வெகுளி. இச் செய்யுளில் கொண்டு என்னும் சொல் பலமுறை பயின்று வருதல் சொற் பொருட் பின்வரு நிலை என்னும் அணியாகும்.

## இலக்குவன் பிரியத் தனித்து நிற்கும் இராமனது நிலை

**9082** தான்பிரி கின்றி லாத
தம்பிவெங் கடுப்பிற் செல்வான்
ஊன்பிரி கின்றி லாத
வுயிரென மறைத லோடும்
வான்பெரு வேள்வி காக்க
வளர்கின்ற பருவ நாளில்
தான்பிரிந் தேகக் கண்ட
தயரதன் றன்னை யொத்தான்.

தான் பிரிகின்றிலாத தம்பி
வெங் கடுப்பின் செல்வான்,
ஊன் பிரிகின்றிலாத
உயிர் என, மறைதலோடும்,
வான் பெருவேள்வி காக்க,
வளர்கின்ற பருவ நாவில்
தான் பிரிந்து ஏகக் கண்ட
தயரதன் தன்னை ஒத்தான்.

பொ:- தன்னுற் பிரிந்துறைதல் இயலாத(தன்) தம்பி இலக்குவன், மிக்க விரைவுடன் செல்பவன், உடம்பினை விட்டுப் பிரிதலாற்ருத உயிரைப் போன்று மறைந்த அளவில், இராமனுகிய தான், வளர்ந்து வருகின்ற இளம் பருவத்திலே (விசுவாமித்திர முனிவரது) மிகப் பெரிய யாகத்தைக் காத்தற் பொருட்டுப் பிரிந்து செல்லுதலைக் கண்ணுற்ற (தந்தை) தயரதனை ஒத்துத் தோன்றினன்.

கு:- இராமனூற் பிரிந்துறை தலாற்று உயிர் போன்ற இலக்கு வன், இந்திரசித்துடன் போர் செய்தற் பொருட்டு இராமனைப் பிரிந்து செல்பவன், உடம்பினைப் பிரிய மனமில்லாத உயிர் போன்று தன் எண்ண முழுவதும் தமையன் பால் நிலைத்து நிற்கப் பகைவனைக் கொன்றழித்தலாகிய கடமை கருதிப் பிரிந்து சென்றான் எனவும், உயிரனைய தம்பியைப் பிரிந்த இராமன் தான் தனது இளம் பருவத்திலே விசுவாமித்திர முனிவரது வேள்விக்காகப் பிரிந்து சென்ற நிலைமைக்கண் தன் பிரிவால் தனிமையுற்ற தன் தந்தை தசரதனைப் போன்று ஆற்றா நிலைமையன் ஆயினான் எனவும் இலக்குவனுக்கும் இராமனுக்குமிடையே யமைந்த அன்பின் தொடர்பினை ஆசிரியர் உவமை முகத்தால் விளக்கிய திறம் உணர்ந்து போற்றத்தக்கதாகும். தான் என்னும் படர்க்கைப் பெயர் இராமனைக் குறித்தது. தான் தசரதன் தன்னை ஒத்தான் என முடியும். ஊன்—உடம்பு. வான்பெரு வேள்வி—மிகப் பெரிய யாகம்.

## நிகும்பலையை அடைந்த வானரர்கள் அரக்கர் சேனையைக் காணுதல்

9083 சேனாபதி யேமுதல் சேவகர்தாம்
ஆனார்நிமிர் கொள்ளிகொ ளங்கையினார்
கானார்நெறி யும்மலை யுங்கழியப்
போனார்க ணிகும்பலை புக்கனரால்.

சேனாபதியே முதல் சேவகர்தாம்
ஆனார், நிமிர் கொள்ளி கொள் அங்கையினார்,
கான் ஆர் நெறியும் மலையும் கழியப்
போனார்கள், நிகும்பலை புக்கனரால்.

பொ:- படைத் தலைவன் (நீலன்) முதலிய வானர வீரர்கள் ஆயினார், நீண்டு எரியும் தீக் கொள்ளியினைக் கொண்ட அகங்கையினராய்க் காட்டிற் பொருந்திய வழியும் மலையும் கழிந்து பிற்பட (விரைந்து) சென்றார்கள்; நிகும்பலை யென்னும் வேள்விக் களத்திற் புகுந்தார்கள்.

கு:-சேனாபதி—படைத்தலைவன்; என்றது, வானர சேனைத் தலைவனாகிய நீலனை. சேவகராணார் தாம் என இயையும். சேவகர்—வீரர். நிமிர்தல்—நீளுதல், நீண்டெரிதல். அகம் + கை = அங்கை எனப்

புணர்ந்தது. நிகும்பலை—இந்திரசித்து யாகம் செய்கின்ற வேள்விக் களம்.

**9084** உண்டாயதொ ராலுல குள்ளொருவன்
கொண்டானுறை கின்றது போற்குலவி
விண்டானும் விழுங்க விரிந்ததனைக்
கண்டார வரக்கர் கருங்கடலை.

உண்டாயது ஓர் ஆல், உலகுள் ஒருவன்
கொண்டான் உறைகின்றது போல் குலவி
விண்தானும் விழுங்க விரிந்ததனைக்
கண்டார்-அவ் வரக்கர் கருங்கடலை.

பொ:- உலகினை(த் தன் வயிற்றின்)உள்ளே கொண்டதிருமாலாகிய ஒருவன் (பள்ளிகொண்டு) உறைதற்கு இடமாகிய ஆலமரத்தினைப் போன்று விளங்கி அங்கு உண்டாகியதோர் ஆலமரம் விண்ணின் பரப்பும் தன்னுள் அடங்குமாறு விரிந்து பரவியதனையும் (அதன்கீழ்த் தங்கியுள்ள அந்த அரக்கர்களாகிய கரிய கடலையும் சேனாபதி முதலிய வானர வீரர்கள்) கண்டார்கள்.

கு:- கடல் போன்று விரிந்து நின்ற அரக்கர் சேனைகள் ஒருங்கு சூழ்ந்துநிற்க இந்திரசித்து வேள்விசெய்தற்கு இடந்தந்து விரிந்து நின்ற ஆலமரத்திற்கு, உலகினை யுண்ட திருமால் ஓர் இலையின்கண் பள்ளிகொண்டுறைதற்கு ஏற்றவாறு அமைந்த ஆலமரத்தினை ஆசிரியர் உவமை கூறினார். உலகு உள்கொண்டான் உறைகின்றது போல் குலவி உண்டாகியது ஓர் ஆல், விண்தானும் விழுங்க விரிந்ததனை, அவ் அரக்கர் கருங்கடலைக் கண்டார் என இயைத்துரைக்க. விரிந்தது—விரிந்து பரவிய ஆலமரம். இச்செய்யுளில் வந்த 'கண்டார்' என்னும் பயனிலையைப் பின்வரும் செய்யுட்கள் நான்கிலும் உள்ள 'ஓர்பான்மையதை' 'ஓர் ஆயிரம் யோசனையுள்ளதனை', 'சுற்றுஆயிரம் நாடு சுலாயதனை', 'கடல்போல்வதோர்பான்மையதை' எனவரும் செயப்படுபொருளோடும் கூட்டிமுடிக்க.

**9085** நேமிப்பெயர் யூக நிரைத்துநெடுஞ்
சேமத்தது நின்றது தீவினையோன்
ஓமத்தனல் வெவ்வட வைக்குடனே
பாமக்கட னின்றதொர் பான்மையதே.

நேமிப் பெயர் யூகம் நிரைத்து, நெடுஞ்
சேமத்தது நின்றது, தீவினையோன்
ஓமத்து அனல் வெவ் வடவைக்கு உடனே
பாபக்கடல் நின்றது ஓர் பான்மையதை.

பொ:- கொடுவினையாளனாகிய இந்திரசித்தினுடைய வேள்வித் தீயினைச் சக்கரவியூகம் என்னும் பெயருடைய அணிபெற வகுத்து (ச் சூழ்ந்து) நீண்ட பாதுகாப்புடையதாய் நின்றதாகிய சேனை, வெம்மை மிக்க வடவைத் தீயைத் தன்னுட் கொண்டு பரவிய அக்கடல் நின்றதோர் தன்மை யுடையதனை;

கு:- நேமி—சக்கரம். யூகம்—படையின் அணிவகுப்பு. நிரைத்தல்—வரிசையுற வகுத்தல். சேமம்—பாதுகாப்பு. நின்றது—நின்றதாகிய சேனை. தீவினையோன் என்றது, கொடிய செய்கையை யுடையனாகிய இந்திரசித்தினை. ஓமத்து அனல்—வேள்வியில் எரியும் தீ. தீவினையோன் ஓமத்து அனல் நேமிப் பெயர் யூகம் நிரைத்து நெடுஞ் சேமத்தது நின்றது, வெவ் வடவைக்கு உடனே பா(வு)ம் அக்கடல் நின்றது ஓர் பான்மையதை (ச்சேனாபதியே முதல் சேவகர்தாம்) கண்டார் என முடிக்க. பான்மை—தன்மை. கரிய அரக்கர் சேனைகளின் நடுவே அமைந்துள்ள இந்திரசித்தின் வேள்வித் தீயினுக்குக் கருங்கடலினுள்ளே யுள்ள வடவைத் தீயினை உவமை கூறினர். பாவும் என்னும் பெயரெச்சத்தின் உயிர்மெய் கெட்டுப் பாம்என நின்றது. பரவுதல்-பரவி விரிதல்.

9086 காராயின காய்கரி தேர்பரிமாத்
தாராயிர கோடி தழீஇயதுதான்
நீராழியொ டாழி நிறீஇயதுபோல்
ஓராயிரம் யோசனை யுள்ளதனை.

கார் ஆயின காய் கரி, தேர், பரிமா,
தார் ஆயிரகோடி தழீஇயதுதான்,
நீர் ஆழியொடு ஆழி நிறீஇயதுபோல்
ஓர் ஆயிரம் யோசனை உள்ளதனை.

பொ:- கரிய மேகத்தை யொத்த வெகுளுந் தன்மையினையுடைய யானை, தேர், குதிரை, காலாள் (ஆகிய) ஆயிரகோடி சேனைகளைத் தன்பாற் கொண்டதாய், நீர்த்தன்மையதாகிய கடலோடு (வேறொரு) கடலை நிறுத்தியதுபோன்று ஓராயிரம் யோசனை தூரம் பரவியுள்ளதனை;

கு:- காய்தல்—வெகுளுதல். தார்—சேனை; வீரர் திரளாகியகாலாட் சேனையை யுணர்த்தி நின்றது. ஆழி—கடல். ஓராயிரம் யோசனை யுள்ளது என்றது, ஓராயிரம் யோசனை இடப் பரப்புடையதாய் விளங்கிய அவ்வேள்விக் களத்தினை.

**9087** பொற்றேர்பரி மாகரி மாபொருதார்
எற்றேபடை வீரரையெண்ணிலமால்
உற்றேவிய யூகமு லோகமுடன்
சுற்றுயிர மூடு சுலாயதனை.

பொன்-தேர், பரிமா, கரிமா, பொருதார்
எற்றே படைவீரரை எண்ணிலமால்;
உற்று ஏவிய யூகம் உலோகமுடன்
சுற்று ஆயிரம் ஊடு சுலாயதனை.

பொ:- பொன்மயமான தேர், குதிரை, யானையுடன் கூடிய பொருதற் றொழிலை யுடைய தூசிப்படை எவ்வளவினது? (அதன் கணுள்ள சேனைவீரர்களை (அளவிட்டு) எண்ணுதற்கு இயலாதவரானோம்: பொருந்தி ஏவப்பட்ட சேனையணிகள் உலகங்கள் ஒருசேர வந்து சுற்றி னாற் போன்ற ஆயிரக்கணக்கினவாக வரிசைகள் இடையிடையே சுற்றி நிற்பதனை; (அவ் அரக்கர்கள் கண்டார்).

கு:- பரிமா, கரிமா என்பன. பண்புத்தொகை. 'எற்றே படை வீரரை எண்ணிலம்' என்பது, கவிக்கூற்றாய் இடையில் நின்று அரக்கர் சேனையின் மிகுதியை யுணர்த்தியது. ஆல்— அசை. யூகம்—சேனைஅணி. உலோகம்—உலகம். சுற்று—சுற்றிநிற்கும் வரிசை. சுலாவுதல்—சூழ் தல். சுலாயது—சூழ்ந்து நிற்பது என்றது அரக்கர் சேனையினை சுலாயதனைக் கண்டார் எனமுடியும். (19)

**9088** வண்ணக்கரு மேனியின் மேன்மழைவாழ்
விண்ணைத்தொடு செம்மயிர் வீசுதலால்
அண்ணற்கரி யானன லம்படவெம்
பண்ணைக்கடல் போல்வதொர் பான்மையதை.

வண்ணக் கரு மேனியின் மேல் மழை வாழ்
விண்ணைத் தொடு செம்மயிர் வீசுதலால்
அண்ணல் கரியான் அனல் அம்பு அடவெம்
பண்ணைக்கடல் போல்வதுஓர் பான்மையதை-

பொ:- (அரக்கர்களின்) கருநிறம் வாய்ந்த உடம்பின்மேல் ஆகாயத்தைத் தொடும் அளவில் (உள்ள) செம்மயிர்கள் (ஒளியை) வீசுதலால், கரிய திருமேனியையுடைய பெரியோனாகிய இராமனது அக்கினி அத்திரம் சுட்டு வெதுப்புதலால் வெம்மையுற்ற நீர்த்திரளைக் கொண்ட (கருங்)கடலையொத்து விளங்கும் தன்மையின தாகிய (நிகும்பலை என்னும்) அதனை (ச்சேனாபதி முதலாகிய வானர வீரர்கள்) கண்டார்கள்.

கு:- கருவண்ணமேனியின் மேல் விண்ணைத்தொடு செம்மயிர் (ஒளி) வீசுதலால், கரியான் அண்ணல் அனல் அம்பு அட, வெம் பண்ணைக் கடல் போல்வது ஓர் பான்மையது என்க. சேனாபதி முதலிய வானர வீரர்கள் கண்ணுற்ற நிகும்பலை யென்னும் வேள்விக் களத்தின் இயல்புகளை 'கடல் நின்றதொர் பான்மையதை' (17), 'ஓராயிரம் யோசனை யுள்ளதனை' (18), 'உலோகமுடன் சுற்றுயிரம் ஊடு சுலாயதனை' (19), 'பண்ணைக்கடல் போல்வதொர் பான்மையதை' (20), கண்டார் (16) என நான்கு செய்யுட்களால் உவமை வாயிலாக ஆசிரியர் விரித்துக் கூறியுள்ளார். (20)

ஆரவாரமின்றி வேள்விக் களத்தைக் காத்துநின்ற அரக்கர் சேனையைக் கண்டு வானரர் ஆரவாரித்தல்

**9089** வழங்காசிலை நாணொலி வானின்வரும்
பழங்கார்முக மொத்த பணக்குலமும்
தழங்காகடல் வாழ்வன போற்றகைசால்
முழங்காமுகி லொத்தன மாமுரசே.

வழங்காசிலை நாண்ஒலி, வானில் வரும்
பழங் கார்முகம் ஒத்த; பணைக்குலமும்
தழங்கா, கடல் வாழ்வனபோல்; தகைசால்
முழங்கா முகில் ஒத்தன, மாமுரசே.

பொ:- (அரக்கர்கள் கையிற் கொண்ட) விற்கள், நாண்ஒலியை வெளிப்படுத்தாதனவாய், மேகத்தினிடத்தே தோன்றும் பழைய இந்திரவில்லை ஒத்தன; (அவர்களுடைய) வாத்தியத் தொகுதிகளும் கடலில் வாழ்வனவற்றை யொத்து முழங்காமலிருந்தன; தகுதி வாய்ந்த பெரிய முரசங்களும் இடிமுழக்கஞ் செய்யாத மேகத்தை ஒத்தன.

கு:- சிலே, நாணொலி வழங்கா, வானில் வரும் பழங் கார் முகம் ஒத்தன; பணைக்குலமும் கடல் வாழ்வனபோல் தழங்கா; தகைசால் மாமுரசு முழங்கா முகில் ஒத்தன என இயைத்துப் பொருள் கொள்க. சிலே-வில். வானில் வரும் கார்முகம் என்றது, விசும்பின்கண்ணே பல நிறமுடையதாய் வளைந்து தோன்றும் ஒளிக் கோடுகளாகிய இந்திர வில்லினை. கார்முகம்—வில். பணைக்குலம்—போர்ப்பறை. வாத்தி யங்களின் தொகுதி. (21)

**9090** வலியான விராகவன் வாய்மொழியால்
சலியாத நெடுங்கட ருனெனலாய்
ஒலியாதுறு சேனையை யுற்றெருநாள்
மெலியாதவ ரார்த்தனர் விண்கிழிய.

வலியான் அ(வ்)இராகவன் வாய்மொழியால்,
சலியாத நெடுங் கடல்தான் எனலாய்,
ஒலியாது உறுசேனையை உற்று, ஒருநாள்
மெலியாதவர், ஆர்த்தனர், விண்கிழிய.

பொ:- ஒரு காலத்தும் தளர்ச்சியுறுதவ ராகிய வானர வீரர்கள், ஆற்றல் மிக்கோனாகிய அவ் இராமனது ஆணையினால் அசையாது ஒலியடங்கிய பெரிய கடலைப் போன்று ஆர்ப்பரவஞ் செய்யாது பொருந்தி யிருந்த அரக்கர் சேனையை அடைந்து வானமுகடு கிழியும்படி பேராரவாரஞ் செய்தனர்.

கு:- மெலியாதவர், இராகவன் வாய்மொழியால் சலியாத நெடுங்கடல்தான் எனலாய் ஒலியாது உறுசேனையை உற்று, விண் கிழிய ஆர்த்தனர் என்க. ஒருநாளும் மெலியாதவர் என உம்மை வருவித்துரைக்கப்பட்டது. மெலியாதவர் என்றது, போரிற் பின்னி டாத பெரு வன்மையுடைய வானர வீரர்களை. இராகவன்—ரகு குலத்திற் பிறந்தவன்; இராமன். வாய்மொழி—ஆணை; கட்டளை. சலித்தல்—அசைதல்; ஒலித்தல். ஒலியாது உறுசேனை என்றது, பகைவர் அறிய வொண்ணுதவாறு ஆர்ப்பரவ மின்றி ஒலி யடங்கி யிருந்த இந்திரசித்தின் சேனையினை. ஒலி யடங்கியிருந்த அச் சேனைக்கு, இராகவன் வாய்மொழியால் சலியாத நெடுங்கடல் உவமை. இராமன் கோடிக்கரையிலே ஓர் ஆலமரத்தடியில் சுக்கிரீவன் முதலிய துணை வருடன் ஒருங்கிருந்து இராவணனை வெற்றி கொள்ளுதற் பொருட்டு மந்திராலோசனை செய்யும் பொழுது, அவ் வாலமரத்தின் மீதுள்ள பறைவைகளின் சத்தமும் கடலின் ஆரவாரமும் மேற்பட அதனைத்

தன் கை கவித்து அடக்கினுனாக, அவனது ஆணையால் ஆலமரத்தின் கண் இருந்த பறவைகளும் முழங்கிரும் பௌவமாகிய கடலும் ஒலி யவிந்து அடங்கின என்பது தமிழகத்தில் நெடுங் காலமாக வழங்கிவரும் பழங் கதையாகும். இராமாயண காலத்தில் நிகழ்ந்த இப்பழைய செய்தியினைக் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த கடுவன் மள்ளனார் என்னும் புலவர் தாம் பாடிய அகப்பாடல் ஒன்றில்,

"வென்வேற் கவுரியர் தென்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கு முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீ ழாலம் போல
ஒலியவிந் தன்றிவ் வழுங்கலூரே' (அகநானூறு-70)

என உவமையாக எடுத்தாண்டுள்ளார். இராமன் கட்டளையால் ஆலில் உள்ள பறவைகளே யன்றிக் கடலும் ஒலியவிந் தடங்கிய செய்தி, 'முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை' என்ற தொடரிற் குறிப் பாக உணர்த்தப் பெற்றுள்ளமை காணலாம். இராமன் கட்டளையால் கடல் ஒலியவிந் தடங்கிய இச் செய்தியினை நிரம்ப வழகியதேசிகர் தாம் இயற்றிய சேதுபுராணம் அமுத தீர்த்தச் சருக்கத்தில்,

'சானகி தன்னை யுன்னித்
 தசமுகத் தரக்கற் கோறற்
கானகா ரியங்கள் செய்வான்
 அவனிருந் தாயும் வேலை
மீனமார் தரங்க வேலை
 மிக்கெழு குரைப்பி னுள்ளே
தானடங் குற்றுத் தம்மிற்
 சாற்றிய மாற்றங் கேளார்.

'ஆயின ரவையினுள்ளோர்
 அஃதுணர்ந் தட விராமன்
ஏயெனச் சீறி வல்லே
 யிருபிரு குடிமுரிப்பால்
ஓயெனக் குறிப்பின் ஆர்க்கும்
 உததியை நிறுத்தா னத்தால்
மேய தேகாந்த ராம
 விழுப்பெய ரப்பதிக்கே.'

எனவரும் செய்யுட்களில் விரித்துக் கூறியுள்ளார். இச் செய்தி முதனூ லாகிய வான்மீகத்தில் இடம் பெறவில்லை. தமிழகத்தில் நிகழ்ந்த

சிறப்புடைய நிகழ்ச்சியாய் நெடுங்காலமாக வழங்கி வரும் இச் செய்தியை, 'வலியான விராகவன் வாய்மொழியால், சலியாத நெடுங்கடல்தான் எனலாய், ஒலியார்துறு சேனையை' எனக் கம்பர் இங்கு உவமை வாயிலாக எடுத்தாண்டுள்ளமை அறிந்து மகிழத் தக்கதாகும். (22)

## அரக்கர் சேனையுடன் வானரர் பொருதல்

**9091** ஆர்த்தாரெதி ரார்த்த வரக்கர்குலம்
போர்த்தார்முர சங்கள் புடைத்தபுகழ்
தூர்த்தாரிவர் கற்படை சூன்முகிலின்
நீர்த்தாரையி னம்பவர் நீட்டினரால்.

ஆர்த்தார்எதிர், ஆர்த்த, அரக்கர்குலம்;
போர்த்தார் முரசங்கள் புடைத்த, புகத்
தூர்த்தார் இவர், கற்படை; சூல் முகிலின்
நீர்த்தாரையின், அம்பு அவர் நீட்டினரால்.

பொ:- ஆரவாரித்தவராகிய வானர வீரர்கட்கு எதிராக அரக்கர் குலம் ஆரவாரித்தன; மாலை சூட்டப்பட்ட போர் முரசங்கள் (குணில் கொண்டு) முழக்கப்பட்டன; (வானர வீரர்களாகிய) இவர்கள் (பகைவர்சேனைமேல்) புகுமாறு கல்லாகிய படைக்கலங்களை (ச் சொரிந்து) நிரப்பினார்கள்; (அரக்கராகிய) அவர்கள் கருக்கொண்ட மேகத்தினின்றும் பொழியும் நீர்த்தாரைகளை யொப்ப அம்புகளைச் செலுத்தினார்கள்.

கு:- ஆர்த்தார் எதிர் அரக்கர்குலம் ஆர்த்த; தார் போர் முரசங்கள் புடைத்த; இவர், கற்படை புகத் தூர்த்தார்; அவர் சூல் முகிலின் நீர்த்தாரையின் அம்பு நீட்டினர் என இயையும். ஆல்-அசை. ஆர்த்தார் என்றது, ஒலியவிந்து அடங்கியிருந்த அரக்கர் சேனையினைக் கண்டு ஆரவாரித்த வானர வீரர்களை. தார்—மாலை. புடைத்தல்—(குணில்கொண்டு) தாக்குதல். இவர் என்றது இப்பக்கத்தாராகிய வானர வீரர்களை. அவர் என்றது, அப்பக்கத்தில் இந்திரசித்தின் யாகத்தைக் காத்து நின்ற அரக்க வீரர்களை. நீட்டுதல் — செலுத்துதல். (23)

**9092** மின்னும்படை வீசினர் வெம்படைமேற்
பன்னுங்கவி சேனை படிந்துளதாற்
றுன்னுந்துறை நீர்நிறை வாவிதொடர்ந்
தன்னங்கள் படிந்தன வாமெனலாய்.

மின்னும் படை வீசினர் வெம்படைமேல்
பன்னும் கவிசேனை படிந்துளதால்—
துன்னும் துறைநீர் நிறைவாவி தொடர்ந்து
அன்னங்கள் படிந்தன ஆம் எனவாய்.

பொ:- (பலரும்) நெருங்கிச் சென்று படியும் துறைகளையுடைய நீர்நிறைந்த தடாகத்தின்மேல் அன்னப் பறவைகள் தொடர்ந்து படிந்தன என்னும்படி, ஒளிவீசும் படைக்கலங்களை வீசியவர்களாகிய அரக்கர்களது கொடுமைமிக்க சேனையின்மேல் (வீரத்தாற்) பாராட்டி யுரைக்கப்படும் வானர சேனை மேற்சென்று தங்கியது.

கு:- கருநிறம் வாய்ந்த அரக்கர் சேனையின்மேல் வெண்ணிறம் வாய்ந்த குரங்குகள் தாவிப் படர்ந்த தோற்றம், ஆழமான தடாகத்திலே அன்னப்பறவைகள் வரிசையாகத் தங்கிய தோற்றத்தை யொத்திருந்தது என்பதாம். மின்னும் படை வீசினர் என்றது, ஒளிமிக்க படைக்கலங்களை யுடையவராய் அவற்றை ஏவிய அரக்கர்களை. கவி சேனை—வானர சேனை. (24)

**9093** வில்லும்மழு வும்மெழு வும்மிடலோர்
பல்லுந்தலை யும்முட லும்படியிற்
செல்லும்படி சிந்தின சென்றனவால்
கல்லும்மர முங்கர முங்கதுவ.

வில்லும், மழுவும், எழுவும், மிடலோர்
பல்லும், தலையும், உடலும், படியில்
செல்லும்படி சிந்தின, சென்றனவால்—
கல்லும் மரமும் கரமும் கதுவ.

பொ:- (வானரர் வீசிய) கல்லும் மரமும் (அவர் தம்) கையும் பற்றித் தாக்கியதனால், வலமிக்கவரான அரக்கருடைய வில்லும் மழுவும் எழுவும் பற்களும் தலையும் உடம்பும் பூமியிற் செல்லும்படி சிதைந்து சென்றன.

கு:- கல்லும் மரமும் கரமும் கதுவ, மிடலோர் வில்லும் மழுவும் எழுவும் பல்லும் தலையும் உடலும் படியிற் செல்லும்படி சிந்தின சென்றன என இயையும். கதுவுதல்—பற்றுதல். கல்லும் மரமும் கதுவ மிடலோர் வில்லும் மழுவும் எழுவும், கரம் கதுவ (மிடலோரி) பல்லும் தலையும் உடலும் சிந்தின சென்றன என நிரல் நிரையாகப் பொருள் கூறினும் அமையும், கல்லும் மரமும் வானரர் வீசியவை. மிடலோர் என்றது, இயல்பாகவே உடல்வலிபடைத்த அரக்கர்களை.

9094 வாலுந்தலை யும்முட லும்வயிறும்
காலுங்கர முந்தரை கண்டனவால்
கோலும்மழு வும்மெழு வுங்கொழுவும்
வேலுங்கணை யும்வளை யும்விசிற.

வாலும், தலையும், உடலும், வயிறும்,
காலும், கரமும், தரைகண்டனவால்,
கோலும், மழுவும், எழுவும், கொழுவும்,
வேலும், கணையும், வளையும், விசிற.

பொ:- (அரக்கர்கள்) தண்டங்களையும் மழுப்படைகளையும் எழுக் களையும் வேற்படைகளையும் அம்புகளையும் வளையங்களையும் விரைந்து எறிதலால் (வானரங்களின்) வாலும் தலையும் உடம்பும் வயிறும் காலும் கையும் (அறுபட்டுத்) தரையில் வீழ்ந்தன.

கு:- கோலும் ..வளையும் விசிற, வாலும்...கரமும் தரைகண்டன என்க. விசிறுதல்—சுழற்றி எறிதல். விசிறியவர்கள், அரக்கர்கள் வீசியெறிந்த படைக்கலங்களால் வானர வீரர்களின் வால் தலை உடல் வயிறு கால் கைகள் துணிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்தன என்றவாறு. தரை காணுதல் —தரையை அடைதல். (26)

வேள்வியைச் சிதைக்காமல் காலம் நீட்டித்தலாகாது என
வீடணன் இலக்குவனுக்கு உரைத்தல்

9095 வென்றிச்சிலை வீரனை வீடணனீ
நின்றிக்கடை தாழுத னீதியதோ
சென்றிக்கடி வேள்வி சிதைத்திலையேல்
என்றிக்கடல் வெல்லுதும் யாமெனலும்

வென்றிச் சிலை வீரனை, வீடணன், 'நீ
நின்று இக்கடை தாழுதல் நீதியதோ?
சென்று, இக்கடி வேள்வி சிதைத்திலையேல்,
என்று, இக்கடல் வெல்லுதும் யாம்?' எனலும்,

பொ:- வீடணன், வெற்றிமிக்க வில்வீரனாகிய இலக்குவனை (நோக்கி) 'நீ இவ்விடத்து (இந்திரசித்தின் யாகத்தைச் சிதைக்காது) நின்று காலந் தாழ்த்துதல் முறையாகுமோ? இந்தக் காவல் மிக்க யாகத்தை மேற்சென்று சிதைத்து அழிக்காமல் விடுவாயாயின் '(அரக்கர் சேனையாகிய) இக் கடலை நாம் எக்காலத்தில் வெல்ல வல்லோம்?' எனக் கூறிய அளவில்,

கு:- இதுவும், அடுத்து வரும் மூன்று செய்யுட்களும் ஒரு தொடர். இக்கடை—இவ்விடம், தாழுதல்—(விரைந்து செய்யாது) தாமதித்தல். நீதியதோ என்புழி ஓகாரம் எதிர்மறை. கடி—காவல். எனலும் என்னும் உம்மீற்று வினையெச்சம். 'அக்காலை' என்னும் செய்யுளில் வரும் 'புக்கான்' என்னும் பிற கருத்தாவின் தொழில் கொண்டு முடிந்தது. (27)

## இலக்குவன் தேவர் முதலியோர் வியந்து காண அரக்கர் சேனையை யழித்தல்

**9096** தேவாசுர ருந்திசை நான்முகனும்
மூவாமுத லீசனு மூவுலகின்
கோவாகிய கொற்றவ னும்முதலோர்
மேவாதவ ரில்லை விசும்புறைவோர்.

தேவாசுரரும், திசை நான்முகனும்,
மூவாமுதல் ஈசனும், மூஉலகின்
கோ ஆகிய கொற்றவனும், முதலோர்
மேவாதவர் இல்லை, விசும்பு உறைவோர்.

பொ:- தேவர்களும் அசுரர்களும் திசைக்கு ஒருமுகமாக நாற்றிசைகளிலும் முகமுடையனாகிய பிரமதேவனும் இறவாத முதல்வனாகிய ஈசனும் மூவுலகங்களின் தலைவனாகிய இந்திரனும் முதலாக வானுறையும் தேவர்களில் (அங்கு) விரும்பி வந்து சேராதவர் ஒருவருமிலர்.

கு:- தேவர் அசுரர் ஆகிய யாவரும் பிரமன் சிவன் இந்திரன் முதலியவர்களும் இலக்குவனது போர்வன்மையைக் காண அங்கு வானகத்தே வந்து குழுமினர் என்பதாம். மூவா முதல் ஈசன்—இறவா முதல்வனுகிய சிவன்; 'ஈறிலான்' (பால) என்ருர் முன்னரும். 'மேவாதவர் இல்லை' என எதிர்மறையாற் கூறியது, யாவரும் மேவினர் என வற்புறுத்தற் பொருட்டாகும். (28)

9097 பல்லார்படை நின்றது பல்லணியாய்ப்
பல்லார்படை நின்றது பல்பிறைவெண்
டல்லார்படை நின்றது பல்லியமும்
பல்லார்படை நின்றது பல்படையே

பல்லார்படை நின்றது; பல் அணியாய்,
பல்ஆர்படை நின்றது; பல் பிறைவெண்
பல்லார்படை நின்றது; பல்லியம் உம்,
பல்ஆர்படை நின்றது—பல்படையே.

பொ:- (யானை, தேர், குதிரை, காலாள் எனப்) பலவகைப்பட்ட சேனைகளுள், (வீரர்) பலராற் செலுத்தப்படும் தேர்ப்படை நின்றது; பலவரிசையாகிப் பலவாகப் பொருந்திய குதிரைப் படை நின்றது; பல பிறைபோலும் வெண்மையான (கோரைப்) பற்களையுடைய அரக்கர் சேனையாகிய காலாட் படை நின்றது. பல வாத்தியங்களுடனே யானைகள் நிரம்பிய யானைப் படை நின்றது,

கு:- இந்திரசித்தின் நால்வகைச் சேனைகளும் அவ்வேள்விக் களத்திற் கூடி நின்ற நிலையைக் கூறுவது இச் செய்யுள். பல்லார்—பலராகவுள்ள அரக்கர்கள். முதலடியிற் படை என்றது, தேர்ப்படையை. பல் அணி—பல வரிசை. இரண்டா மடியிற் படை என்றது குதிரைப் படையை. பல் பிறை வெண்பல்லார்—பல பிறைபோலும் வெள்ளிய பற்களையுடைய அரக்கர்கள். படை—காலாட் படை. பல் இயம்—பலவகை வாத்தியம். உம்பல்—யானை. ஆர்தல்—நிறைதல். உம்பல்ஆர் படை—யானைப்படை. பல்படை—பலவகைச் சேனை. 'பல்படையுள்' என்புழி வரற்பாலதாகிய 'உள்' என்னும் ஏழாம் உருபு செய்யுள் விகாரத்தால் மறைந்தது. இச் செய்யுள் யமகம் என்னும் சொல்லணியும் சொற்பொருட் பின்வரு நிலையணியும் தழுவி யமைந்துள்ளது. (29)

**9098** அக்காலையி லக்குவ னப்படையுட்
புக்கானயி லம்பு பொழிந்தனனால்
உக்கார வரக்கர்த மூரொழியப்
புக்கார் நம னாருறை தென்புலமே.

அக் காலை, இலக்குவன், அப் படையுள்
புக்கான், அயில் அம்பு பொழிந்தனனால்;
உக்கார் அவ் வரக்கர், தம் ஊர் ஒழிய,
புக்கார், நமனார் உறை தென்புலமே.

பொ:- அப்பொழுது இலக்குவன், அந்த (அரக்கர்) சேனையுட் புகுந்தான்; கூரிய முனையினை யுடைய அம்புகளை (மழைபோல்) மிகுதி யாகச் சொரிந்தான். (அதனால் உடம்பு) சிதைந்தொழிந்தவர்களாகிய அவ் வரக்கர்கள் தமது ஊராகிய இலங்கையை விட்டு இயமன் உறையும் தென் திசைக் கண்ணதாகிய உலகினை யடைந்தார்கள்.

கு:- அக்காலை—அப்பொழுது; 'இவ்வாறு இந்திரசித்தின் யாகத்தைச் சிதைக்காமல் நின்று காலந்தாழ்த்தல் கூடாது' என வீடணன் கூறிய அப்பொழுது. அயில்—கூர்மை. உகுதல்—சிதைவுற்றழிதல். தம்மூர் என்றது, அரக்கர் ஊராகிய இலங்கையினை. நமனார் உறை தென்புலம்—தென்றிசைக் கண்ணதாகிய யமலோகம். (30)

**9099** தேருமத மால்கரி தேர்பரிமா
நூறாயிர கோடியி னூழில்படச்
சேறார்குரு திக்கட லிற்றிடராய்க்
கூறாயுக வாவிகு றைத்தனனால்.

தேருமத மால்கரி, தேர், பரிமா,
நூறாயிர கோடியின் நூழில்பட,
சேறு ஆர் குருதிக் கடலில், திடராய்க்
கூறுஆய்உக, ஆவி குறைத்தனனால்.

பொ:- தெளியாத மதச் செருக்குடைய பெரிய யானை, தேர், குதிரை ஆகிய சேனைகள் நூறாயிர கோடி என்னும் தொகையினவாய்க் கொன்று குவிக்கப்படவும், சேறுகப் பொருந்திய இரத்தக் கடலிலே (இடையிடையே அமைந்த) தீவினைப் போன்று கூறுபட்டு விழவும், (அரக்கர் சேனையின்) உயிரைப் போக்கினான் (இலக்குவன்).

கு:- தேரு—தெளியாத. மால்—பெருமை. நூழில்—கொன்று குவித்தல். கடலில் திடர் என்றது, கடலின் இடையிடையே காணப்படும் சிறிய தீவுகளை. ‘திடலிடைச் செய்த கோயில் திருவிராமேச்சரத்தை’ (4-61-3) என்பது அப்பர் தேவாரம். ஆவி குறைத்தல்—உயிரைப் போக்குதல். (31)

## அழிவுற்ற அரக்கர் சேனைகளின் தோற்றம்

**9100** வாமக்கரி தானழி வார்குழியின்
றீமொய்த்த வரக்கர்கள் செம்மயிரின்
றாமத்தலை யுக்க தழங்கெரியின்
ஓமத்தை நிகர்ப்ப வுலப்பிலவால்.

வாமக் கரிதான் அழி வார்குழியின்
தீ மொய்த்த அரக்கர்கள் செம்மயிரின்
தாமத் தலைஉக்க, தழங்கு எரியின்
ஓமத்தை நிகர்ப்ப, உலப்பு இலவால்.

பொ:- அழகிய யானையின் கால்களால் மிதிக்கப்பட்டுச் சிதைந்த (தரையிடத்தே யுண்டாகிய) நீண்ட குழியின் கண்ணே தீச் சுடர்க் கற்றைகள் நெருங்கினாற் போன்ற செந்நிற மயிரினைக் கொண்ட அரக்கருடைய மாலையணிந்த தலைகள் சிதறி விழுந்தவை, ஒளிவிட்டெரியும் யாக குண்டத்தின் தீயை ஒப்பன எண்ணில்லாதன உள்ளன.

கு:- வாமம்—அழகு. தாமத்தலை—மாலையினையுடைய வீரர் தலை. தாமம்—மாலை. உகுதல்—சிதறி விழுதல். ‘ஓமத்துத் தழங்கு எரியினை நிகர்ப்ப’ என உருபினைப் பிரித்துக் கூட்டுக. உலப்பு இல—எண்ணில்லாதன. ஆல்—அசை. (32)

**9101** சிலையின்கணை யூடுதி றந்தனதிண்
கொலைவெங்களி மால்கரி செம்புனல்கொண்
டுலைவின்று கிடந்தன வொத்தனவால்
மலையுஞ்சுனை யும்வயி றும்முடலும்.

சிலையின் கணையூடு திறந்தன, திண்
கொலை வெங்களி மால்கரி, செம்புனல் கொண்டு,
உலைவு இன்று கிடந்தன, ஒத்தனவால்,
மலையும் சுனையும், வயிறும் உடலும்.

பொ:- திண்மையினையும் கொல்லுந் தொழிலையும் வெகுளியையும் மதச் செருக்கையும் உடைய பெரிய யானைகள், (இலக்குவனது) வில்லி னின்று வெளிப்படும் அம்புகளால் வயிற்றிலும் உடலிலும் இடை யிடையே பிளக்கப்பட்டனவாய், செந்நிறமாகிய குருதிப் புனலைக் கொண்டு உயிர்போகாது கிடந்தவை, மலையையும் (அதன்கண் உள்ள) சுனையையும் ஒத்துத் தோன்றின.

கு:- திண் கொலை வெங்களி மால் கரி, வயிறும் உடலும் கிலைவன் கணை ஊடு திறந்தன, செம்புனல் கொண்டு உலைவின்று கிடந்தன, மலை யும் சுனையும் ஒத்தன என இயையும். யானையின் பெரிய உடம்புக்கு மலையும், அதன் வயிற்றிலும் உடலிலும் அம்புகளாற் பிளக்கப்பட்டுச் செந்நீர் வெளிப்படும் துளைகளுக்குச் சுனையும் உவமை. இனி, 'மால்கரி வயிறும் உடலும், மலையும் சுனையும் ஒத்தன' என இயைத்து, யானை யின் உடலுக்கு மலையையும், அதன் வயிற்றுக்குச் சுனையையும் உவமை கூறியதாகக் கொண்டு உரைத்தலும் உண்டு. (33)

**9102** விற்றொத்திய வெங்கணை யெண்கின்வியன்
பற்றொத்திய போற்படி யப்பலவும்
முற்றச்சுடர் மின்மினி மொய்த்துளவன்
புற்றொத்தமு டித்தலை பூழியன.

வில் தொத்திய வெங்கணை, எண்கின் வியன்
பல் தொத்திய போல் படியப் பலவும்,
முற்றச் சுடர் மின்மினி மொய்த்துள வன்
புற்று ஒத்த-முடித்தலை பூழியன.

பொ:- (இலக்குவனது) வில்லினின்று (வெளிப்பட்டுத்) தொடர்ந்த அம்புகள் பலவும், கரடியின் பெரிய கற்கள் கௌவிப் பற்றினாற் போன்று தைத்து ஊன்றப் புழுதியிற் கிடப்பனவாகிய முடியணிந்த தலைகள், ஒளியினை யுடைய மின்மினிப் பூச்சிகள் முழுவதும் மொய்த் துள்ள வலிய புற்றுக்களை ஒத்தன,

கு:- தொத்துதல்—பற்றுதல்; தொடர்தல். எண்கு—கரடி. வியன்—பெரிய. வெங்கணை பலவும் எண்கின் பல் தொத்திய போல் படியப் பூழியன முடித்தலை, சுடர் மின்மினி முற்ற மொய்த்துள வன் புற்று ஒத்த என முடிக்க. அம்புகள் தைத்து ஊன்றிய நிலையிற் புழுதி யில் வீழ்ந்து கிடக்கும் அரக்கர்களின் முடியணிந்த தலைகளுக்கு மின் மினிப் பூச்சிகள் நிறைய மொய்த்துள்ள புற்றுக்கள் உவமை. (34)

**9103** படுமாரிநெ டுங்கணை பாய்தலினல்
விடுமாறுதி ரப்புனல் வீழ்வனவால்
தடுமாறுநெ டுங்கொடி தாழ்கடல்வாய்
நெடுமாமுகில் வீழ்வ நிகர்த்தனவால்.

படுமாரி நெடுங்கணை பாய்தலினல்,
விடும்ஆறும் உதிரப்புனல் வீழ்வனவால்—
தடுமாறு நெடுங்கொடி—தாழ்கடல்வாய்
நெடு மாமுகில் வீழ்வ நிகர்த்தனவால்.

பொ:- பெய்கின்ற மழையினைப் போன்று நீண்ட அம்புகள் (உடம்பிற்) பாய்தலால் வெளிப்பட்டுப் பெருகிய குருதி நீர் ஆற்றினையொத்து (ச் சென்று கடலில்) வீழ்வனவாயின. (அரக்கர் சேனையினின்றும்) தளர்ந்து வீழும் நீண்ட கொடிகள் ஆழமான கடலிலே நீண்ட பெரிய மேகங்கள் (படிந்து) வீழ்வனவற்றை ஒத்தன.

கு:- படுதல்—தோன்றுதல்; பெய்தல். மாரி—மழை. விடுதல்—வெளிப்பட்டுப் பெருகுதல். விடும் உதிரப் புனல் ஆறு வீழ்வன என இயையும். வீழ்வனவால், நிகர்த்தனவால் என்புழி ஆல் அசை. (35)

**9104** மின்னர்கணை தாளற வீசவிழுந்
தன்னருதி ரத்து ளழுந்துதலால்
ஒன்னர்முழு வெண்குடை யொத்தனவால்
செந்நாகம்வி ழுங்கிய திங்களினை.

மின் ஆர்கணை தாள் அற வீச, விழுந்து,
அன்னர் உதிரத்துள் அழுந்துதலால்,
ஒன்னர் முழுவெண்குடை, ஒத்தனவால்,
செந் நாகம் விழுங்கிய திங்களினை.

பொ:- பகைவராகிய அரக்கருடைய முழுமைவாய்ந்த வெண்குடைகள், (இலக்குவன் ஏவிய) ஒளிமிக்க அம்புகள் துணித்தலால் காம்பு அறுபட்டு அவ்வரக்கரது இரத்த வெள்ளத்துள் அழுந்துதலால் செந்நிறப் பாம்பினல் விழுங்கப்பட்ட சந்திரனை யொத்தன.

கு:- மின்—ஒளி. தாள்—காம்பு. ஒன்னர்—பகைவர்; என்றது அரக்கர்களை. அன்னர்—அவ்வரக்கர்கள். ஒன்னர் முழுவெண்குடை,

மின்ஆர்கணை வீச தாள் அற வீழ்ந்து, அன்னார் உதிரத்துள் அழுந்துத லால், செந்நாகம் விழுங்கிய திங்களினை ஒத்தன என இயைத்துரைக்க. செந்நாகம்—செந்நிறப் பாம்பு; என்றது கேதுவை. அரக்கருடைய முழுவெண்குடைகள் இலக்குவன் ஏவிய அம்புகளால் காம்பு துணிக்கப் பட்டு அவரது குருதிவெள்ளத்திற்படிந்து செந்நிற முடையனவாகக் கிடப்பவை, செம்பாம்பினால் விழுங்கப்பட்ட வெண்மதியை ஒத்துத் தோன்றின என்பதாம். இவ்வுவமை "குருதிவாளொளி யரவினாற் கொள்ளப்பட்ட வெண்திங்கள் போல்'' (சீவக—2308) எனத் திருத்தக்க தேவரால் ஆளப்பெற்றுள்ளமை அறியத்தகுவ தாகும். (36)

9105 கொடுநீள்கரி கையொடு தாள்குறையப்
படுநீள்குரு திப்படர் கின்றனவால்
அடுநீளுயி ரின்மையி னாழ்கிலவால்
நெடுநீரினி டங்கர் நிகர்த்தனவால்.

கொடு நீள் கரி, கையொடு தாள்குறைய,
படு நீள் குருதிப் படர்கின்றனவால்,
அடு நீள் உயிர் இன்மையின் ஆழ்கிலவால்,
நெடு நீரின் இடங்கர் நிகர்த்தனவால்.

பொ:- கொடிய யானைகள் நீண்ட துதிக்கையுடன் கால்களும் அறுபட்டமையால் அங்கு உண்டாகிய நீண்ட குருதி வெள்ளத்திற் செல்வன, (பகைவரை) அடுதற்குரிய ஆற்றல் மிக்க உயிர் இல்லாமை யால் (அக்குருதி வெள்ளத்தில்) ஆழாதனவாயின;(அவை)கடலிடத்தே யுள்ள இடங்கர் என்னும் முதலையை ஒத்துத் தோன்றின.

கு:- கொடுங்கரி, நீள் கையொடு தாள் குறைய நீள்குருதிப் படர் கின்றன, உயிர் இன்மையின் ஆழ்கில, நெடுநீரின் இடங்கர் நிகர்த்தன என்க. நீள் கை—நீண்ட துதிக்கை. படுதல்—உண்டாதல். அடு நீள் உயிர்—பகையை அடுதற்குரிய ஆற்றல் மிக்க உயிர். 'உயிர் இன்மை யின் ஆழ்கில' என்றது உயிர் நீங்கிய உடம்பே மிதப்பன என்பதனைப் புலப்படுத்தியவாறு. நெடுநீர்-கடல். இடங்கர் என்பது, நீரில் வாழும் அறுவகைச் சாதியுள் ஒருவகை. நீரில் வாழும் சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை என்னும் அறுவகை உயிரினங்களையும் 'நீர் வாழ் சாதியுள் அறுபிறப்புரிய' (தொல்—மரபு-42) என வரும் நூற்பா வில் ஆசிரியர் தொல்காப்பியனார் குறித்துள்ளார் என்பது பேராசிரியர் கருத்தாகும். மேற்குறித்த அறுவகையுள் முதலை, இடங்கர், கராம் என்னும் மூன்றினையும் முதலையின் வகையாகவும், சுறா, வரால், வாளை

என்னும் மூன்றினையும் மீனின் வகையாகவும் இலக்கியங்கள் குறித்து வழங்கியுள்ளமை காணலாம். இலக்குவன் எய்த அம்புகளால் துதிக் கையும் கால்களும் இழந்து உயிரின்றிக் குருதி வெள்ளத்தில் மிதந்து செல்லும் யானைகளுக்குக் கடல் நீரில் நீந்திச்செல்லும் இடங்கர் உவமை. (37)

**9106** கரியுண்ட களத்திடை யுற்றனகார்
நரியுண்டி யுகப்பன நட்டனவால்
இரியுண்டவ ரின்னிய மிட்டிடலால்
மரியுண்ட வுடற்பொறை மானினவால்.

கரிஉண்ட களத்திடை உற்றன, கார்
நரி, உண்டி உகப்பன நட்டனவால்;
இரி யுண்டவர் இன்இயம் இட்டிடலால்,
மரி யுண்ட உடற்பொறை மானினவால்.

பொ:- யானைகளைத் தன்பாற்கொண்ட போர்க்களத்தின்கண்ணே புகுந்தனவாகிய கரிய நரிகள் உணவை விரும்பினவாய்த் தங்கின. நிலை கெட்டு ஓடிய அரக்கர்களின் இனிய பறைகள், (அவர்களால்) விடப்பட்டமையால் இறந்த உடற்பொறையை ஒத்தன.

கு:- உண்ணுதல்—தன்னகப்படுத்தல். நட்டல்—நிலையாய்த் தங்குதல். இரியுண்டவர்—தோற்று நிலைகெட்டோடிய அரக்கர்கள். இன்னியம் என்றது ஈண்டு அவர்கள் விட்டுச் சென்ற போர்ப்பறைகளை. இட்டிடல்—விட்டுச்செல்லுதல். மரியுண்ட—இறத்தலை யுற்ற. மானின—ஒத்தன. மானுதல்—ஒத்தல். (38)

**9107** வாயிற்கனல் வெங்கடு வாளியினம்
பாயப்பரு மக்குலம் வேவனவால்
வேயுற்ற நெடுங்கிரி மீவெயிலாம்
தீயுற்றன போன்ற சினக்கரியே.

வாயில் கனல் வெங்கடு வாளி இனம்
பாய, பருமக்குலம் வேவனவால்,
வேய் உற்ற நெடுங்கிரி மீவெயில் ஆம்
தீ உற்றன ஒத்த—சினக்கரியே.

பொ:- முனையின்கண்ணே தீயினையும் கொடிய நஞ்சினையும் கொண்ட அம்பின் தொகுதிகள் பாய்ந்து தைத்தலால் தம் மேலுள்ள கழுத்து மெத்தை முதலியவற்றின் தொகுதிகள் எரிந்து வேகும் நிலையிலுள்ளனவாகிய வெகுளி மிக்க யானைகள், மூங்கில் அடர்ந்துள்ள நெடிய மலைகள் தம்மேல் வெவ்விய நெருப்புப் பற்றி யெரிவனவற்றை ஒத்தன.

கு:- வாய்—அம்பின் முனை. கடு—நஞ்சு. வாளி இனம்—அம்பின் தொகுதிகள். பருமம்—யானையின் கழுத்திலிடும் மெத்தை. பருமக் குலம் வேவன சினக்கரி, வேய் உற்ற நெடுங்கிரி தீ புற்றன ஒத்த என்க. வேய்—மூங்கில். தம் மேலிடப்பெற்றுள்ள பருமம் முதலியன இலக்கு வன் ஏவிய அக்கினியம்புகளால் நெருப்புப் பற்றி வேகும் நிலையிலுள்ள யானைகள் தம்மேல் உள்ள மூங்கிற் காடுகள் தீப்பற்றி எரியும் நிலையி லுள்ள மலைகளை யொத்துத் தோன்றின என்பதாம். (39)

**9108** அலைவேலைய ரக்கரை யெண்கணுகித்
தலைமேன்முடி யைத்தரை தள்ளுதலால்
மலைமேலுயர் புற்றினை வள்ளுகிரால்
நிலைபேரம றிப்ப நிகர்த்தனவால்.

அலைவேலை அரக்கரை எண்கு அணுகி,
தலைமேல் முடியைத் தரை தள்ளுதலால்,
மலைமேல் உயர் புற்றினை வள் உகிரால்,
நிலை பேர மறிப்ப நிகர்த்தன வால்.

பொ:- அலைகளையுடைய கடல்போலும் அரக்கர்களை (வானர சேனையிலுள்ள) கரடிகள் அணுகி (அவர் தம்) தலைமீதுள்ள மணிமுடியினை (ப் பெயர்த்து) த் தரையில் தள்ளுதலால், மலைமீது உயர்ந்து வளர்ந்துள்ள புற்றினைக் கூரிய நகங்களால் நிலைபெயரும்படி பெயர்த்துத் தள்ளுவனவற்றை ஒத்தன.

கு:- வேலை—கடல். எண்கு—கரடி; என்றது, சாம்பன் என்பானின் தலைமையில் வானர சேனையிலுள்ள கரடிப்படையினை. நெடிய அரக்கரது தலைமீதுள்ள மணிமுடிக்கு மலைமீதுயர்ந்து வளர்ந்துள்ள புற்றும், அம்முடியினைத் தரையில் தள்ளும் கரடிகளுக்குப் புற்றினை நகங்களாற் பெயர்த்துத் தள்ளும் கரடிகளும் உவமை. (40)

**9109** மாவாளிகண் மாமழை போல்வரலால்
மாவாளிகள் போர்தெறு மாமறவோர்
மாவாளிகள் வன்றலை யின்றலைவாழ்
மாவாளிக ளோடும றிந்தனரால்

மா வாளிகள் மா மழைபோல் வரலால்
மா ஆளிகள் போர் தெறு மா மறவோர்,
மா ஆளிகள் வன் தலையின் தலை வாழ்
மா ஆளிகளோடு மறிந்தனரால்.

பொ :- (இலக்குவனது வில்லினின்றும்) பெருமை வாய்ந்த அம்புகள் பெருமழையைப் போன்று (மிக்கு) வந்தமையால், பெரிய சிங்கங்களைப் போரிற் கொல்லவல்ல (அரக்கர்களாகிய) பெருவீரர் களும் (குதிரை, யானை என்னும்) விலங்குகளை (ப்போரில்) ஆளும் வீரர் களும் (தமது) வலிய தலையிடத்தே (அணியப்பெற்றுள்ள மலர்களில்) வாழும் கரிய வண்டுகளோடும் இறந்து பட்டனர்.

கு :- மா வாளிகள்—பெருமை வாய்ந்த அம்புகள்; என்றது இலக்குவனாற் செலுத்தப்பட்ட அம்புகளை. மாஆளிகள்—பெரிய சிங்கங்கள். சிங்கங்களைப் போரில் அழிக்கவல்ல பெருவீரர் என்றது அரக்க வீரர்களை. மா ஆளிகள்—(குதிரை யானை ஆகிய) விலங்குகளைப் போரிற் செலுத்தும் குதிரைவீரர், யானைவீரர். நான்காம் அடியில் மாஅளிகள் எனற் பாலது மாஆளிகள் என நீண்டது, செய்யுள் விகாரம். வன் தலையின்தலை—வலிய தலையின் இடம். மாஅளிகள்-கரிய வண்டுகள். மறிதல்—இறத்தல். மா வாளிகள் வரலால், மாமறவோர், மாஆளிகள் வன்தலையின் தலைவாழ் மா அளிகளோடு மறிந்தனர் என்க. இச் செய்யுளில் 'மாவாளிகள்' என்பது அடிதோறும் மடக்கி வந்தமையால் மடக்கு (யமகம்) என்னும் சொல்லணி அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். (41)

**9110** அங்கங்கிழி யத்துணி பட்டதனால்
அங்கங்கிழி குற்றவ மர்த்தலைவர்
அங்கங்கழி செம்புனல் பம்பவலைந்
தங்கங்கணி ரம்பிய லம்பியதால்.

அங்கம் கிழியத் துணிபட்டதனால்,
அங்கு அங்கு, இழிகுற்ற அமர்த் தலைவர்,
அங்கங்கு, இழி செம்புனல் பம்ப, அலைந்து
அங்கங்கள் நிரம்பி அலம்பியதால்.

பொ:- அங்கங்கே தோல்வியுற்ற போர்ப்படைத் தலைவர்களுடைய உடம்புகள் கிழிய வெட்டப்பட்டதனால் வீழ்கின்ற குருதிநீர் நிறைந்து மேலெழ, அழகிய பருந்து (அங்வெள்ளத்தில்) அலைதலுற்றுத் தன் உடலுறுப்புக்கள் முழுவதும் நிரம்பிக் கழுவியது.

கு:- அங்கு அங்கு இழிகுற்ற அமரித் தலைவர், அங்கம் கிழியத் துணிபட்டதனால் இழி செம்புனல் பம்ப, அம் கங்கு, அங்கங்கள் நிரம்ப அலம்பியது என முடிக்க. இழிகுறுதல் – தோல்வியுற்றுத் தாழ்தல். அமரித்தலைவர்—போர்ப்படைத் தலைவர்; என்றது அரக்க வீரர்களை. அங்கம்—உடம்பு. கிழிதல்—பிளந்து சிதைதல். துணிபடுதல்—வெட்டப் படுதல். அம் கங்கு—அழகிய பருந்து. இழி செம்புனல் பம்ப- (தரையில்) இழிந்தோடும் செந்நீர் பெருகி மெலெழுதலால். பம்புதல்—நிறைதல்; மேலெழுதல். அலைந்து—அலைவுற்று. அங்கங்கள் —உடலுறுப்புக்கள். நிரம்ப—முழுவதுமாக நிறைய. அலம்புதல்—கழுவுதல். போர் வீரர்களாகிய அரக்கர்களின் அங்கங்கள் வெட்டப்பட அவர்தம் உடம்பினின்றும் இழிந்தோடும் குருதிப் பெருக்கில் அங்கு ஊனுண்ண வந்த பருந்து தன் அங்கங்கள் முழுவதும் நிரம்பி அழுந்தும் படி தனது உடம்பினைக் கழுவிக்கொண்டது என்பதாம். இச் செய்யுளிலும் மடக்கு என்னும் சொல்லணியமைந்திருத்தல் காண்க. (42)

**9111** வன்றானையை வார்கணை மாரியினால்
முன்றாதையொர் தேர்கொடு மொய்பலதேர்
பின்றாவெதிர் தானவர் பேரணியைக்
கொன்றானென வெய்துகு றைத்தனனால்,

வன் தானையை, வார்கணை மாரியினால்,
முன், தாதை ஓர் தேர்கொடு மொய் பலதேர்,
பின்றா எதிர் தானவர் பேர் அணியைக்
கொன்றான் என, எய்து குறைத்தனனால்.

பொ:- தன் தந்தையாகிய தயரதன், முன்னொரு காலத்தில் ஒரே தேரினைக் கொண்டு (தன்னை) நெருங்கிய பல தேர்களுடன் (போரிற்) பின்னிடாது எதிர்த்து நின்ற அசுரர் பெருஞ்சேனையைக் கொன்றவனைப் போன்று, (இலக்குவனும் தான் ஒருவனாகவே நின்று) வலிய அரக்கர் சேனையை நீண்ட அம்பு மழையினால் எய்து அழித்தான்.

கு;- மொய் பலதேர் பின்றா எதிர் தானவர் பேரணியை, தாதை, முன் ஓர் தேர்கொடு கொன்றான்என, (இலக்குவனும்) வன் தானையை

வார்களை மாரியினுல் எய்து குறைத்தனன் என்க. தாதை—தந்தை; என்றது இலக்குவனுக்குத் தந்தையாகிய தயரதனை. மொய்த்தல்—நெருங்கிச் சூழ்தல். பலதேர் என்றது, சம்பராசுரனுற் செலுத்தப்பட்ட பத்துத் தேர்களையும். பின்னுதல்—பின்னிடுதல். தானவர்—அசுரர். பேரணி—பெருஞ்சேனை. தந்தை தசரதன் தனது ஒரு தேரினைக் கொண்டே பத்துத் தேர்களுடன் தன்னைச் சூழ்ந்துகொண்ட அசுரர் பெருஞ்சேனையை அழித்தொழித்தாற்போன்று, அவன் மைந்தன் இலக்குவனும்தான் ஒருவனுகவே நின்று இந்திரசித்தின் பெருஞ் சேனைகளை அம்பு மழையாற் கொன்றெழித்தான் என்றவாறு. மைந்தனது போர்த் திறத்திற்குத் தந்தையின் போர்த் திறத்தை உவமை கூறியது, 'தந்தையர் ஒப்பர் மக்கள்' (தொல்-கற்பியல்-6) என்னும் பழமொழியின் உண்மையினை உணர்த்துங் குறிப்பினதாகும். தயரதன் தனது ஒரு தேர்கொண்டு அசுரர்களின் பத்துத் தேர்களையும் அழித்து வென்ற செய்தி, 'பஞ்சி மென்றளிரடிப்பாவை கோல்கொள, வெஞ்சினத் தவுணர்தேர் பத்தும் வென்றுளேற்கு' (கம்ப- அயோத்- மந்திரப்-19) என அம்மன்னன் கூற்றில் வைத்துணர்த்தப்பட்டுள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும். (43)

## இலக்குவனது போரினுல் இந்திரசித்தின் யாகம் சிதைதல்

**9112** மலைகளு மழைகளும் வான மீன்களும்
அலையவெங் கால்பொர வழிந்த வாமென
உலைகொள்வெங் கனல்பொதி யோம முற்றவால்
தலைகளு முடல்களுஞ் சரமுந் தாவுவ.

மலைகளும், மழைகளும், வான மீன்களும்,
அலைய வெங்கால் பொர, அழிந்தவாம் என,
உலைகொள் வெங்கனல் பொதி ஓமம் உற்றவால்,
தலைகளும் உடல்களும் சரமும் தாவுவ.

பொ:- (யாவும் நிலை பெயர்ந்து) அலையுமாறு (ஊழிக்காலத்துக்) கடுங்காற்று வீசித் தாக்குதலால், மலைகளும் மேகங்களும் விண்மீன்களும் அழிந்து வீழ்ந்தன என்னும்படி, தாவிப் படர்வனவாகிய அம்புகளும் (அவற்றுல் எய்யப்பட்ட அரக்கர்களின்) தலைகளும் உடல்களும் உலைக்களத்தின் இயல்பினைக் கொண்ட வெம்மை மிக்க தீ நிறைந்த ஓம குண்டத்தில் வீழ்ந்தன.

கு:- வெங்கால் பொர, மலைகளும் மழைகளும் வான மீன்களும் அழிந்தவாம் என, தாவுவசரமும் தலைகளும் உடல்களும் ஓமம் உற்ற என்க. வெங்கால்—கடுங்காற்று. ஓமம்—யாக குண்டம். ஊழிக் காற்றினல் தாக்கப்பட்டு மலைகளும் மேகங்களும் விண்மீன்களும் சிதைந்து வீழ்ந்தாற்போன்று, இலக்குவனுடைய அம்புகளால் எய்யப் பட்ட அரக்கர் தலைகளும் உடல்களும் அம்புகளுடன் ஓம குண்டத்தில் வீழ்ந்தன என்பதாம். அரக்கர்களின் தலைகளுக்கு மலைகளும், உடல் களுக்கு மேகங்களும், இலக்குவன் எய்த ஒளிமிக்க அம்புகளுக்கு விண் மீன்களும் உவமை. (44)

**9113** வாரண மனையவன் றுணிப்ப வான்படர்
தாரணி முடிப்பெருந் தலைக டாக்கலால்
ஆரண மந்திர மமைய வோதிய
பூரண மணிக்குட முடைந்து போயதால்.

வாரணம் அனையவன் துணிப்ப, வான் படர்
தார் அணி முடிப்பெருந் தலைகள் தாக்கலால்,
ஆரண மந்திரம் அமைய ஓதிய
பூரண மணிக்குடம் உடைந்து போயதால்.

பொ:- யானையை யொத்தோனுகிய இலக்குவன் (அம்பினல்) துண்டித்துத்தள்ள விசும்பினின்றும் வீழும் மாலையினை யுடைய முடி யணிந்த தலைகள் மோதித் தாக்குவதனுல், வேத மந்திரங்களைப் பொருந்த ஓதி (நீர் நிறைத்து, யாக வேதிகையில்) அமைக்கப்பட்ட மணிகள் பொருந்திய நிறைகுடம் உடைந்து போயிற்று.

கு:- வாரணம் அனையவன்—யானையை ஒத்த வன்மையுடை யவன்; இலக்குவன். துணித்தல்-அம்பினல் துண்டித்தல். ஆரணம்—வேதம். அமைய ஓதுதலாவது, யாகத்திற்குரிய அதிதெய்வம் பூரண குடத்துள் பொருந்தித் தங்கும் வண்ணம் அபிமந்திரித்தல். இந்திர சித்தின் யாக வேதிகையில் வைக்கப்பட்டிருந்த பூரண கலசம், இலக்கு வனது அம்பினல் துணிக்கப்பட்டு விசும்பினின்றும் விழுந்த அரக்க ருடைய தலைகளால் தாக்கப்பட்டு உடைந்து போயிற்று என்பதாம். (45)

**9114** தாறுகொண் மதகரி சுமந்து தாமரை
சீறிய முகத்தலை யுருட்டிச் செந்நிறத்
தூறுகள் சொரிந்தபே ருதிரத் தோங்கலை
யாறுக ளெழுங்கன லவியச் சென்றவால்

தாறுகொள் மதகரி சுமந்து, தாமரை
சீறிய முகத்தலை உருட்டி, செந்நிறத்து
ஊறுகள் சொரிந்த பேர் உதிரத்து ஓங்கு அலை
ஆறுகள், எழும் கனல் அவியச் சென்றவால்.

பொ:- செந்நிறத்தினை யுடைய (வடுப்பட்ட) புண்களிலிருந்து சுரந்து பெருகிய குருதியினு லாகிய உயர்ந்து எழும் அலைகளை யுடைய ஆறுகள், தாற்றுக்கோலாகிய அங்குசத்தாற் செலுத்தப்படுதலைக் கொண்ட மதயானைகளைச் சுமந்துகொண்டு செந்தாமரைப் பூவினைச் சினந்த (செங்கண்களை யுடைய)முகத்தொடு பொருந்திய (வீரர்களின்) தலைகளை யுருட்டி, (ஓமகுண்டத்தில்) எழுந்து எரியும் வேள்வித் தீ அவியும்படி சென்று பாய்ந்தன.

கு:- செந்நிறத்து ஊறுகள் சொரிந்த பேர் உதிரத்து ஓங்கு அலை ஆறுகள். மதகரி சுமந்து, முகத்தலை உருட்டி, எழும் கனல் அவியச் சென்ற என முடியும். ஊறுகள்—படைக்கலங்கள் உற்றுத் தாக்கினமையால் உளவாகிய புண்கள். (46)

**9115** தெரிகணை விசும்பிடைத் துணித்த செம்மயிர்
வரிகழ லரக்கர்தந் தடக்கை வாளொடும்
உருமென விழுதலி னனலிக் கோக்கிய
எருமைகண் மறிந்தன மறியு மீர்ந்தவால்.

தெரிகணை விசும்பிடைத் துணித்த-செம்மயிர்
வரிகழல் அரக்கர்தம் தடக்கை வாளொடும்
உரும் என விழுதலின், அனலிக்கு ஒக்கிய
எருமைகள் மறிந்தன; மறியும் ஈர்ந்தவால்.

பொ:- (இலக்குவன்) ஆராய்ந்து எய்த அம்புகளால் விசும்பின் கண்ணே துண்டிக்கப்பட்ட, சிவந்த மயிரினையும் வரிந்து கட்டப்பட்ட வீரக்கழலையும் உடைய அரக்கர்களுடைய பெரிய கைகள், (தாம் கொண்டுள்ள) வாட்படையுடனே இடிபோன்று (நிலத்தில்) வீழ்தலால், அங்கியங் கடவுளுக்கென (யாகத்தில்) வரைந்து (உரிமை செய்து) வைக்கப்பட்ட எருமைகள் (வெட்டுண்டு) இறந்தன; ஆடுகளும் (அவ்வாறே) பிளக்கப்பட்டு இறந்தன.

கு:- தெரிகணை துணித்த தடக்கை, அரக்கர்தம் தடக்கை எனத் தனித்தனி இயையும். செம்மயிர் வரிகழல் என்பன அரக்கரிக்கு

அடைமொழியாய் இடைநின்றன. துணித்த என்னும் பெயரெச்சம் செயப்படுபொருளாகிய தடக்கை என்னும் பெயர்கொண்டு முடிந்தது. தடக்கை, வாளொடும் உரும் என விழுதலின், அனலிக்கு ஒக்கிய எருமைகள் மறிந்தன; மறியும் ஈர்ந்த என இயைத்துரைக்க. தெரிகணை—இலக்குவன் ஆராய்ந்து தொடுத்த அம்பு. உரும்—இடி. அனலி—அக்கினியாகிய தெய்வம். ஒக்குதல்—வரைந்து (உரிமை செய்து) வைத்தல், ஈர்தல்—பிளத்தல். (47)

**9116** அங்கடங் கழிந்தபே ரருவிக் குன்றினின்
றங்கடங் கிழிந்தில ரழிந்த வாடவர்
அங்கடங் கலும்படர் குருதி யாழியின்
அங்கடங் கினர்தொடர் பகழி யஞ்சினர்.

அம்கடம் கழிந்த பேர் அருவிக் குன்றின்நின்று
அம்கடம் கழிந்திலர், அழிந்த ஆடவர்,
அங்கு அடங்கலும் படர்குருதி ஆழியின்
அங்கு அடங்கினர், தொடர்பகழி அஞ்சினர்.

பொ:- அழகிய கன்னத்தினின்றும் வெளிப்பட்ட மிக்க (மதநீராகிய) அருவியினையுடைய (யானையாகிய) மலைமேல் நிலை பெற்றிருந்தும் (தமக்குரிய) அழகிய கடமையினை முடிவுறச் செய்யாத வராய்த் தோல்வியுற்ற (அரக்க) வீரர்கள், (இலக்குவனது வில்லி னின்றும்) தொடர்ந்துவரும் அம்புகட்கு அஞ்சியவர்களாய்ப் போர்க் களமாகிய அவ்விடத்தில் முழுதும் பரவிய குருதிக்கடலினுள்ளே அடங்கி மறைந்தனர்.

கு:- அம் கடம்—அழகிய கன்னம். கழிதல்—வெளிப்படுதல். கன்னத்தினின்றும் வெளிப்பட்ட அருவியையுடைய குன்றம் என்றது யானையை. குன்றினின்றும் என உம்மை வருவித்துரைக்க. அம் கடம்—(போர் வீரராயினார்க்கு) அழகினைச் செய்யும் கடமை; என்றது, பகைவராய் எதிர்த்து வந்தாரைக் கொன்று தம்மை ஆள்வோர்க்கு வெற்றியை விளைக்கும் கடப்பாடாகிய முறைமையினை. கழிந்திலர்—முடிவுறச் செய்திலர். அழிந்த—தோல்வியுற்ற. ஆடவர்—வீரர்; என்றது இலக்குவனோடு பொருது தோல்வியுற்ற அரக்கர்களை. அங்கு—போர்க்களமாகிய அவ்விடம். அடங்கலும்—முழுவதும். படர்தல்—பரவுதல். கடம் கழிந்திலர் அழிந்த ஆடவர், தொடர் பகழி அஞ்சினராய், அங்குக் குருதி ஆழியின் அடங்கினர் என இயையும். குன்றின் மேல் நின்றும் தமது கடமையினை நிறைவேற்ற இயலாது

தோல்வியுற்றவர்கள் நாணத்தால் கடலினுள்ளே புக்கு ஒடுங்கினர் என்றதொரு நயமும் இச்செய்யுளிற் புலப்படுதல் கூர்ந்துணரத் தகுவதாகும். இச் செய்யுளில் யமகம் (மடக்கு) என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காண்க. (48)

இதன்பின் 52-ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் ஓர் பாடல் அதிகப்பாடலாகத் தரப்பட்டுள்ளது:—

**9116-a** நூருகிய வெள்ள நுனித்தகணக்
காருதன சேனை யரக்கருடற்
கேருதன வில்லை யிலக்குவன்(வில்)
தூருநெடு வாளி துரந்திடவே.

**9117** காறலத் தொடுதுணிந் தழியக் காய்கதிர்க்
காறலைத் தலையுற மறுக்கங் கூடினர்
வேறலத் தூன்றினர் துளங்கு மெய்யினர்
நாறலைக் குடரினர் பலரு நண்ணினர்.

கால் தலத்தொடு துணிந்து அழிய, காய்கதிர்க்
கோல் தலைத்தலை உற, மறுக்கம் கூடினர்,
வேல் தலத்து ஊன்றினர், துளங்கு மெய்யினர்,
நாறு அலைக் குடரினர், பலரும் நண்ணினர்.

பொ:- கால்கள் தரையுடன் துணிக்கப்பட்டுச் சிதைந்து வீழ (இலக்குவன் ஏவிய) வெதுப்பும் சுடரினையுடைய அம்புகள் மேன்மேல் வந்து பொருந்தக் கலக்க முற்றவர்களாகிய அரக்கர்கள் பலரும், நடுங்கிய உடம்பினராய், (வயிற்றின் புறத்தே) வெளிப்பட்டு அலைதலை யுடைய குடரினையுடையராய், (தம் கையிற் கொண்ட) வேற்படையை (ஊன்றுகோலாகக் கொண்டு) ஊன்றியவர்களாய் (வருந்தி) அடைந் தார்கள்.

கு:- தலத்தொடுந் துணிதல்—நின்ற நிலத்துடன் ஒரு சேரத் துண்டிக்கப்பட்டு விழ்தல். காய்கதிர்க்கோல்—வெதுப்பும் சுடரினை யுடைய அம்பு. தலைத்தலை—மேலும் மேலும். மறுக்கம் கூடினர் பலரும், துளங்கு மெய்யினர், நாறு அலைக் குடரினர், வேல் தலத்து ஊன்றினர் நண்ணினர் என இயையும். துளங்குதல்—நடுக்கமுற்றுத் தளர்தல். மெய்—உடம்பு. நாறு அலைக்குடர்—(புறத்தே வெளிப் பட்டுத்) தோன்றி அலைதலையுடைய குடர். இலக்குவன் எய்த

அம்புகளால் தாக்கப்பட்டுக் கால்கள் துண்டிக்கப்பட்டு, குடல் பிதுங்க உடல் நடுங்கிய துயர் நிலையிலும் அஞ்சிப் பின்னிடாது முனைமுகத்து வேலூன்றிச் சென்ற அரக்க வீரர்களின் நிலைகலங்கா மனவுறுதியைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது இச்செய்யுள். (49)

**9118** பொங்குடற் றுணிந்ததம் புதல்வர்ப் போக்கிலார்
தொங்குடற் றோண்மிசை யிருந்து சோர்வுற
அங்குடற் றம்பியைத் தழுவி யண்மினர்
தங்குடர் முதுகிடைச் சொரியத் தள்ளுவார்.

பொங்கு உடல் துணிந்த தம் புதல்வர்ப் போக்கிலார்,
தொங்கு உடல், தோள்மிசை இருந்து சோர்வுற,
அங்கு உடல் தம்பியைத் தழுவி அண்மினர்—
தம் குடர் முதுகிடைச் சொரியத் தள்ளுவார்.

பொ:- தமது குடர் முதுகின் வழியாக வெளிப்பட்டுச் சரிந்து தொங்க (அதனை ஒரு கையினால்) உள்ளே தள்ளிக்கொண்டு (மீளவும் போர்முகத்துச்) செல்லும் அரக்கர் வீரர் சிலர், வெகுண்டு பொருது உடல் துணிக்கப்பட்ட தம் அருமைப் புதல்வரை (அங்கேயே) விட்டுச் செல்ல ஆற்றாதவராய், தொங்கு மியல்பினதாகிய (அம் மைந்தரது) (உடம்பு (தம்) தோள்மீதிருந்தவாறு சோர்ந்து தொங்க, அவ்விடத்திற் பகைவரொடு) பொருது நிற்கும் தம்பியைத் தழுவிக்கொண்டு (பகைவர் சேனையை எதிர்த்து) நெருங்கினார்கள்.

கு:- தம்குடர் முதுகிடைச் சொரியத் தள்ளுவார், உடல் துணிந்த தம் புதல்வரைப் போக்ககில்லாராய், (அவர்தம்) தொங்கு உடல் (தமது)தோள்மிசை யிருந்து சோர்வுற, அங்கு உடல் தம்பியைத் தழுவி அண்மினர் என இயைத்துரைக்க. ‘உடல் தம்பி’ என்றது, வினைத்தொகை. உடலுதல்—பொருதல். அண்முதல்—நெருங்குதல். தம்முயிர்க்கு இறுதி வந்த இடர் நிலையிலும் தளரா மனவுறுதியுடைய அரக்க வீரர் சிலர், போரில் உயிர்நீத்த தம் புதல்வர்பாற் கொண்ட மாறாக் காதலையும், தம் உடன் பிறந்த தம்பியரைத் தளர்ச்சியுறாத வாறு தாங்கிக் கொள்ளும் மதுகையினையும் இனிது புலப்படுத்தும் முறையில் இச்செய்யுள் அமைந்திருத்தல் அறியத் தக்கதாகும். (50)

**9119** மூடிய நெய்யொடு நறவு முற்றிய
சாடிகள் பொரியோடு தகர்ந்து தள்ளுறக்
கோடிகள் பலபடு குழாங்கு ழாங்களா
யாடின வறுகுறை யறுக்கு மாக்கைகள்.

மூடிய நெய்யொடு நறவு முற்றிய
சாடிகள், பொரியொடு தகர்ந்து தள்ளுற,
கோடிகள் பலபடு குழாம் குழாங்களாய்
ஆடின, அறுகுறை அறுக்கும் ஆக்கைகள்.

பொ:- நெய்யுடன் தேன் நிறைந்தனவாய் மூடப்பட்டுள்ள சாடிகள் உடைந்து பொரிகளோடு சிதைவுற்றுத் தள்ளப்பட, தலையறுபட்ட குறையுடலாகிய கவந்தங்கள் பல கோடியினைக் கொண்ட கூட்டங் கூட்டமாக ஆடின.

கு:- அறுக்கும் ஆக்கையாகிய அறுகுறை, நெய்யொடு நறவு முற்றிய மூடிய சாடிகள் பொரியொடு தகர்ந்து தள்ளுற, பலகோடிகள் படு குழாம் குழாங்களாய் ஆடின என இயையும். அறுக்கும் ஆக்கைகள்—(தலை) அறுபட்ட உடம்பு. அறுகுறை—குறையுடலாகிய கவந்தம்.

## இலக்குவன் அரக்கர் சேனையை விரைந்து அழித்தல்

9120 காலெனக் கடுவெனக் கலிங்கக் கம்மியர்
நூலென வுடற்பொறை தொடர்ந்த நோயெனப்
பாலுறு பிரையெனக் கலந்து பன்முறை
வேலுறு சேனையைத் துணித்து வீழ்த்தினன்.

கால் என, கடு என, கலிங்கக் கம்மியர்
நூல் என, உடற் பொறை தொடர்ந்த நோய் என,
பால் உறு பிரை என, கலந்து, பல்முறை
வேல் உறு சேனையைத் துணித்து வீழ்த்தினன்.

பொ:- காற்றினைப் போலவும், நஞ்சினைப் போலவும், ஆடை நெய்வோர் (பாவிடையே செலுத்தும்) நூலினைப் போலவும், உடலாகிய பாரத்தைப் பிணித்துள்ள நோயினைப் போலவும், பாலிற் பொருந்திய பிரையினைப் போலவும் (இலக்குவன்) பல முறை உட்புகுந்து வேலேந்திய அரக்கர் சேனையை வெட்டி வீழ்த்தினன்.

கு:- கால்—காற்று. கடு—நஞ்சு. கலிங்கம்—ஆடை. கம்மியர்—ஆடை நெய்வோராகிய காருகர். நூல்—பாவிடையே செலுத்தப்படும் ஊடை நூல். பிரை—பால் தயிராதற் பொருட்டுத் தெளிக்கப்படும் மோர்த் துளி. கலத்தல்—எங்கும் சென்று பொருந்துதல். கலத்தற்கு

வினை முதலாகிய இலக்குவன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப் பட்டது. விரைந்து செல்லுந் தொழில் பற்றிக் காற்றும், உயிரைப் போக்குந் திறம் பற்றிக் கடுவும், உள்ளே புகுந்து கரந்து பரவுதல் பற்றிக் கம்மியர் நூலும், அகலாது தொடர்ந்து வருத்துதல் பற்றி நோயும், பகைவர் சேனையை உருவறச் சிதைத்தல் பற்றிப் பாலுறு பிரையும் இலக்குவனுக்கு உவமையாயின. (52)

## தன் சேனைகள் நிலைகுலைந் தழிதலை இந்திரசித்து காணுதல்

9121 கண்டனன் றிசைதொறு நோக்கிக் கண்ணகன்
மண்டல மறிகட லன்ன மாப்படை
விண்டெறி கால்பொர மறிந்து வீற்றுறும்
தண்டலை யாமெனக் கிடந்த தன்மையே.

கண்டனன்-திசைதொறும் நோக்கி, கண் அகல்
மண்தலம், மறிகடல் அன்ன மாப் படை,
விண்டு எறி கால்பொர மறிந்து வீற்றுறும்
தண்டலை ஆம் எனக் கிடந்த தன்மையே.

பொ:- இடம் விரிந்த மண்ணுலகத்தில் (அலைகள்) மறிந்து சூழும் கடற்பரப்பினை யொத்த (தனது) பெருஞ் சேனையானது, மாறுபட்டு வீசும் பெருங் காற்று மோதுதலால் (மரங்கள்) ஒடிந்து சின்ன பின்னப் பட்டுக் கிடக்கும் சோலையினை யொத்துச் சிதைந்து கிடந்த தன்மை யினை (இந்திரசித்து) எல்லாத் திசைகளிலும் உற்று நோக்கிக் கண் டான்.

கு:- கடல் அன்ன மாப்படை, கால் பொர மறிந்து வீற்றுறும் தண்டலை ஆம் எனக் கிடந்த தன்மையை (இந்திரசித்து) திசை தொறும் நோக்கிக் கண்டனன் என்க. இச் செய்யுளில் உள்ள 'கண் டனன்' என்னும் வினைக்கும் அடுத்த செய்யுளில் உள்ள 'கண்டிலன்' என்னும் வினைக்கும் வினை முதலாக 'நூறு நூறுயிர' என்னும் செய்யுளி லுள்ள அரக்கன் என்னும் எழுவாயினை வருவித்துரைத்துக் கொள்க. மண்தலம்—மண்ணுலகம். மறிந்து வீற்றுறுதல்—(ஒடிந்து) வெவ்வே றாய்ச் சிதைதல். தண்டலை—சோலை. (53)

9122 மிடலின்வெங் கடகரிப் பிணத்தின் விண்டொடும்
திடலும்வெம் புரவியுந் தேருஞ் சிந்திய
உடலும்வன் றலைகளு முதிரத் தோங்கலைக்
கடலுபல் லாலிடை யொன்றுங் கண்டிலன்.

மிடலின் வெங் கடகரிப் பிணத்தின் விண்தொடும்
திடலும், வெம் புரவியும், தேரும், சிந்திய
உடலும், வன் தலைகளும், உதிர்ந்து ஓங்கு அலைக்
கடலும் அல்லால், இடை ஒன்றும் கண்டிலன்.

பொ:- வன்மை மிக்க கொடிய மதமுடைய யானைகளின் பிணங்களாலாகிய வானத்தை அளாவிய மேட்டுப் பகுதியும், வெவ்விய குதிரைகளும், தேர்களும், (வீரர்களின்) சிதறுண்ட உடம்புகளும் தலைகளும் ஓங்கி மேலெழும் அலைகளை யுடைய குருதிக் கடலும் ஆகிய இவற்றையன்றி (த் தன் சேனையில் அழிவின்றி யுள்ளனவாக) அப்போர்க் களத்திடையே வேறொன்றையும் காணாதவனாயினான்.

கு:-இந்திரசித்து அப்போர்க்களத்தில் யானைப் பிணங்களாகிய திடர்களையும் வீரர்களின் உடல்களையும் தன்பாற் கொண்ட இரத்தக் கடலையும் அன்றித் தன் சேனையில் அழிவின்றியுள்ளதாக ஒன்றையும் கண்டானில்லை என்பதாம். (54)

9123 நூறுநூ றுயிர கோடி நோன்கழல்
மாறுபோ ரரக்கரை யொருவன் வாட்கணை
கூறுகூ றுக்கிய குவையுஞ் சோரியின்
ஆறுமே யன்றிவே றரக்கன் கண்டிலன்.

நூறு நூறுயிர கோடி நோன் கழல்
மாறுபோர் அரக்கரை, ஒருவன் வாள்கணை
கூறு கூறு ஆக்கிய குவையும், சோரியின்
ஆறுமே அன்றி, வேறு, அரக்கன் கண்டிலன்.

பொ:- வலிய வீரக்கழலையும் பகைவரொடு மாறுபட்டுப் பொரும் போரினையும் உடைய நூறு நூறுயிரகோடி அளவினராகிய அரக்க வீரர்களை (இலக்குவன் என்னும்) ஒருவனுடைய கூரிய அம்புகள் துண்டந் துண்டமாய்ச்சிதைத்த பிணக்குவையினையும் (அங்குப் பெருகி யோடிய) இரத்த ஆற்றினையும் அல்லாது வேறொன்றையும் (இந்திர சித்தாகிய) அவ்வரக்கன் காணப் பெற்றிலன்.

கு:- வாள்—கூர்மை. நோன் கழல் அரக்கர், மாறுபோர் அரக்கர் நூறு நூறுயிர கோடி அரக்கர் எனத் தனித் தனி இயையும். சோரியின் ஆறு—இரத்த ஆறு (55)

9124 நஞ்சினும் வெய்யவர் நடுங்கி நாவுலர்ந்
தஞ்சினர் சிலர்சில ரடைகின் றுர்சிலர்
வெஞ்சின வீரர்கள் மீண்டி லாதவர்
துஞ்சினர் துணையில ரெனத்து ளங்கினுர்.

நஞ்சினும் வெய்யவர் நடுங்கி, நா உலர்ந்து,
அஞ்சினர் சிலர்சிலர் அடைகின்றுர்; சிலர்
வெஞ்சின வீரர்கள் மீண்டிலாதவர்
துஞ்சினர், துணை இலர் எனத் துளங்கினுர்.

பொ:- நஞ்சை விடக் கொடுமையுடையோரான அரக்கர்களுட் சிலர் சிலர் (இலக்குவன்முன் நிற்கலாற்ருது) அஞ்சியவர்களாய் நடுக்க முற்று நாவறண்டு இந்திரசித்தை அடைவாராயினர். மிக்க வெகுளி யுடைய அவ் வீரர்களுள் மீண்டு வரமுடியாதவர் சிலர் தம்மைத் தாங் கும் துணையில்லாதாரைப் போன்று மனந்துளங்கி இறந்தனர்.

கு:- நஞ்சினும் வெய்யவர் சிலர் சிலர், அஞ்சினர் நடுங்கி நா உலர்ந்து அடைகின்றுர்; வெஞ்சின வீரர்கள் மீண்டிலாதவர் சிலர், துணையிலர் எனத் துளங்கினுர் துஞ்சினர் என இயைத்துப் பொருள் கொள்க. துஞ்சுதல்—இறத்தல். (56)

## இந்திரசித்து தான் தொடங்கிய வேள்வியில் ஓமகுண்டத்துத் தீ அவிந்தமை கண்டு மனம் வெதும்புதல்

9125 ஓமவெங் கனலவிந் துழைக்க லப்பையும்
காமர்வண் டருப்பையும் பிறவுங் கட்டற
வாமமந் திரத்தொழில் மறந்து நந்துறு
தூமவெங் கனலெனப் பொலிந்து தோன்றினுன்.

ஓம வெங் கனல் அவிந்து, உழைக் கலப்பையும்
காமர் வண் தருப்பையும் பிறவும் கட்டு அற,
வாம மந்திரத் தொழில் மறந்து, நந்துறு
தூம வெங்கனல் எனப் பொலிந்து தோன்றினுன்.

பொ:- (வேள்விக் குண்டத்தில்) ஓமம் செய்யப்படும் வெம்மை யுடைய தீ அவிந்து, (வேள்வியிற்) பயன்படுத்தற்குரிய பொருள்கள் நிறைந்த பையும் அழகிய வளம் நிறைந்த தருப்பையும் பிற பொருள் களும் கட்டுக் குலைந்து அழிய, வாம மந்திரங்களை எண்ணுதலாகிய தொழிலை மறந்து, அவியும் நிலையிற் புகைபடர்ந்த வெம்மையுடைய (வேள்வித்) தீயினைப் போன்று (தானும்) பொலிவழிந்து காணப் பட்டான் (இந்திரசித்து).

கு:- உழைக் கலப்பை—(வேள்வியிற்)பயன்படுத்தற்குரிய பொருளை தன்னகத்தே கொண்ட பை காமர்—அழகு. வாம மந்திரத்தொழில்- வாம மார்க்கத்திற்குரிய மந்திரங்களை எண்ணி உருவேற்றும் தொழில். நந்துதல்—அவிதல். தூமம்—புகை. பொலிந்து என்பது, பொலிவின் மையைக் குறிப்பினால் உணர்த்தியது. பொலிவழிந்து காணப்பட்ட இந்திரசித்துக்கு அவன் செய்த வேள்வி சிதைய அவிந்து புகை படர்ந்த வேள்விக் குண்டத்துத் தீ உவமை. (57)

### இந்திரசித்தினைக் காவலாகச் சூழ்ந்துநின்ற அரக்கர் சேனையினை வானரசேனை எதிர்த்து அடைதல்

**9126** அக்கணத் தடுகளத் தப்பு மாரியால்
உக்கவ ரொழிதர வுயிரு ளோரெலாம்
தொக்கன ரரக்கனைச் சூழ்ந்து சுற்றுறப்
புககது கவிப்பெருஞ் சேனைப் போர்க்கடல்.

அக்கணத்து, அடுகளத்து, அப்பு மாரியால்
உக்கவர் ஒழிதர, உயிர்உளோர் எலாம்
தொக்கனர், அரக்கனைச் சூழ்ந்து சுற்றுற,
புக்கது, கவிப்பெருஞ் சேனைப் போர்க்கடல்.

பொ:- அப்பொழுது போர்க்களத்திலே அம்பு மழையால் உயிர் நீங்கினோர்போக எஞ்சி உயிரோடுள்ள அரக்கர்கள் எல்லோரும் இந்திரசித்தினை(க் காவலாக)ச் சூழ்ந்து சுற்றிநிற்க, பொருதற்றொழிலை யுடைய வானரப் பெருஞ் சேனையாகிய கடல் (அவ்வரக்கர் மேற் சென்று) புகுந்தது.

கு:- போர்க்கவிப் பெருஞ்சேனையாகிய கடல் (இந்திரசித்தினைச் சுற்றி நின்ற அரக்கர்மேல்) புக்கது என்க. அடுகளம்—மாற்றாரை அடுதற்குரிய இடமாகிய போர்க்களம். (58)

## இந்திரசித்து தன் சேனைகள் அழிந்தமையினையும் அதுகண்டு முனிவர் முதலியோர் கைகுலைப்பதனையும் கண்டு தனது நியமம் குலைந்து வருந்துதல்

**9127** ஆயிர மலருடை யாழி மாப்படை
'ஏ' யெனும் மாத்திரத் திற்ற கொற்றமும்,
தூயவன் சிலைவலித் தொழிலுந் துன்பமு
மேயின வெகுளியுங் கிளர வெம்பினான்.

ஆயிரம் மலருடை ஆழி மாப் படை
'ஏ' எனும் மாத்திரத்து இற்ற கொற்றமும்,
தூயவன் சிலைவலித் தொழிலும், துன்பமும்
மேயின வெகுளியும, கிளர வெம் பினான்.

பொ:- ஆயிரம் தாமரை என்னும் அளவினைக்கொண்ட கடல் போன்ற பெரிய (அரக்கர்) சேனை ஏ என்னும் அளவில் அழிந்த (இலக்குவனது) வெற்றித் திறமும், தூயோனாகிய இலக்குவனது விற்றொழில் வன்மையும்(தான் தொடங்கிய வேள்வி முற்றுப் பெறாமை யால் தான் அடைந்த)துன்பமும் (அது பற்றிப்) பொருந்திய கோபமும் (தன் உள்ளத்திற்) பொங்கி எழ (இந்திரசித்து) மனம் வெதும்பினான்.

கு:- மலர் என்றது, பூவினுக்கு அருங்கலமாகிய தாமரையை; தாமரை என்றது ஒரு பேரெண். 'ஐயம்பல் லெனவரூஉ மிறுதி யப் பெயர்' (தொல்—எழுத்து 393) எனவரும் நூற்பாவில் தாமரை, வெள்ளம், ஆம்பல் என்னும் பேரெண்கள் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். தாமரை என்னும் இப் பேரெண்ணினைப் பதுமம் என வழங்குவர் வடநூலார். ஏ எனும் மாத்திரை—ஏ என்னும் அளவுக் குள்; விரைவுக் குறிப்பு. இறுதல்—அழிதல். தூயவன் என்றது, இலக்குவனை. வெம்பினான் என்றது இந்திரசித்தினை. (59)

**9128** மெய்குலைந் திருநில மடந்தை விம்முறச்
செய்கொலைத் தொழிலையுஞ் செய்கை தீயவர்
மொய்குலத் திறுதியு முனிவர் கண்டனர்
கைகுலைக் கின்றதுங் கண்ணி னோக்கினான்.

மெய் குலைந்து, இருநில மடந்தை விம்முற,
செய் கொலைத் தொழிலையும், செய்கை தீயவர்
மொய் குலத்து இறுதியும், முனிவர் கண்டனர்
கை குலைக்கின்றதும், கண்ணின் நோக்கினான்.

பொ;- பெரிய நிலமகளாகிய பூமிதேவியும் உடல் நடுங்கித் துன்புறும்படி இலக்குவன் செய்யும் கொல்லுதற்றொழிலையும் கொடுந் தொழிலாளர் நெருங்கிய அரக்கர் குலத்தின் அழிவினையும் (போர்க் களத்தைக்) கண்ணுற்றவர்களாகி முனிவர்கள் கை விதிர்த்தலையும் (இந்திரசித்து நேரே) கண்களாற் கண்டான்.

கு:- எல்லாவற்றையும் பொறுக்கும் வன்மையுடைய பூமியும் இலக்குவனது கொல்லுதற்றொழிலால் இறந்து வீழும் அரக்கர்களின் உடற்பொறையைத் தாங்கலாற்றாது நடுக்கமுற்றது என்பார். 'மெய் குலைந்திரு நிலமடந்தை விம்முறச் செய் கொலைத் தொழில்' என்றார். செய்கை தீயவர்—கொடுந் தொழிலாளராகிய அரக்கர்கள். இறுதி—அழிவு.இந்திரசித்து தன் கண்ணெதிரே நிகழ்தலைக்கண்டான் என்பார், 'கண்ணின் நோக்கினான்' என்றார். (60)

9129 மானமும் பாழ்பட வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட முடிவி லாமுரட்
சேனையும் பாழ்படச் சிந்தை மந்திரத்
தேனையும் பாழ்பட வினைய செப்பினான்.

மானமும் பாழ்பட, வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட, முடிவு இலா முரண்
சேனையும் பாழ்பட, சிந்தை மந்திரத்து
ஏனையும் பாழ்பட, இனைய செப்பினான்.

பொ:- தனது பெருமை பாழ்பட் டொழியவும், (தான்) இயற்றிய யாகத்தில் மோனநிலை பாழ்பட் டொழியவும், எல்லையற்ற வலிமை வாய்ந்த (தனது) சேனை வெறுமையுற் றழியவும் சிந்தையில் நினைந்த மந்திர செபம் முதலாகவுள்ள ஏனைய வேள்விக் கிரியைகளும் பாழ் பட்டுச் சிதையவும் (பின்வருமாறு தனக்குள்) இத்தகைய மொழிகளைக் கூறினான் (இந்திரசித்து).

கு:- மானம்—தன்னிலையினின்றும் தாழாமையும், ஊழ்வயத்தால் தாழ்வு வந்துழி உயிர்வாழக் கருதாமையும் ஆகிய பெருமை. பாழ்

படுதல்—அறவே இல்லையாய் வெறுமையடைதல். மோனம்-மௌனம்; பேச்சின்றிக் குறித்த பொருள் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருத்தல். ஏனையும்—ஏனையவும். இனைய—இத்தன்மைய வாய சொற்கள். அவை பின்வரும் நான்கு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (61)

9130 வெள்ளமை யைந்துடன் விரிந்த சேனையின்
உள்ளதக் குரோணியீ ரைந்தொ டோயுமால்,
எள்ளரு வேள்விநின் றினியி யற்றுதல்
பிள்ளைமை அனையது சிதைந்து பேர்ந்ததால்.

'வெள்ளம் ஐ ஐந்துடன் விரிந்த சேனையின்
உள்ளது அக்குரோணி ஈர் ஐந்தொடு ஓயுமால்;
எள்ளஅரு வேள்வி நின்று இனி இயற்றுதல்
பிள்ளைமை; அனையது சிதைந்து பேர்ந்ததால்.

பொ:- இருபத்தைந்து வெள்ளம் என்னும் தொகையினதாகி விரிந்து பரவிய சேனையில் எஞ்சியுள்ளது பத்து அக்குரோணி சேனை; (அதுவும்) தளர்ந்து ஒழியும். இகழ்தற்கரிய யாகத்தினை இனி இடம் பெயராது நின்று நிறைவேற்றுதல் என்பது சிறுபிள்ளைத்தனம். அந்த அந்த வேள்வி வேரறச் சிதைந்து போயிற்று.

கு:- வெள்ளம் என்பது பேரெண்; கோடி × கோடி × கோடி × கோடி × கோடி × கோடி × கோடி × கோடி—என 57-ஆம் தானத்தது வெள்ளம் என்பர். அக்குரோணி ஈரைந்து—பத்து அக்குரோணி. ஒரு அக்குரோணி என்பது, 21870 தேர்களும், 21870 யானைகளும், 65610 குதிரைகளும், 109350 காலாட்படை வீரர்களும் அடங்கிய பெருஞ் சேனை என்பர். ஒய்தல்—தளர்ந்து ஒழிதல். பிள்ளைமை—சிறுபிள்ளைத் தனம்; அறியாமை. அனையது—அவ் வேள்வி. பேர்ந்து சிதைந்தது என்க. (62)

9131 தொடங்கிய வேள்வியின் றூம வெங்கனல்
அடங்கிய தவிந்துள தமையு மாமன்றே
இடங்கொடு வெஞ்செரு வென்றி யின்றெனக்
கடங்கிய தென்பதற் கேது வாகுமால்.

'தொடங்கிய வேள்வியின் தூம வெங்கனல்
அடங்கியது அவிந்துளது, அமையுமாம் அன்றே?
இடம்கொடு வெம்செரு வென்றி இன்று எனக்கு
அடங்கியது என்பதற்கு ஏது ஆகுமால்.

பொ:– தொடங்கிச் செய்த யாகத்திலே புகையொடு கூடிய வெப்பையுடைய தீ (பேரோங்கியெரியாமல்) அடங்கியதாய் அவிந்துள்ளது ஒன்றே போதுமல்லவா? இடத்தைக்கொண்டு நிகழும் கடும் போரில் எனக்கு இன்று வெற்றி இல்லையாகி அடங்கிய தென்பதற்குரிய தீய நிமித்தமாகும்.

கு:- 'யான் தொடங்கி நிகழ்த்தும் இவ் வேள்வியில் ஓமகுண்டத்திலுள்ள தீ அவிந்து அடங்கியது ஒன்றே எனக்கு இன்று வெற்றி இல்லையாய் அடங்கிய தென்பதற் குரிய தீய நிமித்தமாகும்' என இந்திரசித்து தனக்குள் வருந்திக் கூறிக்கொண்டான் என்பதாம். ஏது—நிமித்தம்; பின்னே நிகழவிருப்பதனை முன்னரே புலப்படுத்தும் அறிகுறி. (63)

9132 அங்கது கிடக்கநான் மனிதர்க் காற்றலென்
சிங்கின னென்பதோ ரெளிமை; தேய்வுற
இங்கு நின் றிவை யிவை நினைக்கி லேனினிப்
பொங்குபோ ராற்றவென் தோளும் போனவோ.

'அங்கு அது கிடக்க; நான் மனிதர்க்கு ஆற்றலென்
சிங்கினன் என்பது, ஓர் எளிமை; தேய்வுற
இங்கு நின்று இவைஇவை நினைக்கிலேன்; இனி
பொங்குபோர் ஆற்ற என் தோளும் போனவோ?

பொ:- (வேள்வி யழிந்தமையாகிய) அது ஒருபுறம் கிடக்க. யான் மனிதர்க்கு வலியற்றேனாய், (ஆற்றலின்) குறைந்தேன் என்று எண்ணுவது எளிமையின் பாலதாகும். (எனது வலிமை) தேய்ந்து ஒழியுமாறு இவ்விடத்தில் நின்று இத்தகைய எண்ணங்களை நினைக்கமாட்டேன்; இப்பொழுது வெகுண்டு பொரும் போரைச் செய்தற்கு என்னுடைய தோள்களும் இல்லா தொழிந்தனவோ?

கு:- இங்கு—(பகைவரை வென்றழித்தற் பொருட்டு வினைசெய்யும்) இவ் வேள்விக்களத்தில். இவை இவை—மனத் திண்மையைச் சிதைத்துத் தோல்வி விளைப்பதற்கான இத்தகைய எண்ணங்களை. போனவோ என்புழி ஓகாரம், எதிர்மறை. 'போர்த்தொழிற்குரிய என்னுடைய தோள்கள் சிதையாது உள்ள வரையிலும் பகைவரொடு எதிர்த்து நின்று பொருவேன்' என்று வீரத்திற் சிறந்தோனாகிய இந்திரசித்து தன் மனத்துள் உறுதி கொண்டான் என்பதாம்.

இச் செய்யுள் 46-என்னும் எண்ணுள்ள சுவடி முதலாகவுள்ள பல சுவடிகளில் பின்வருமாறு அமைந்துளது:-

ஆங்கது கிடக்கநான் மனிசர்க் காற்றலென்
நீங்கிஞ னென்பதோ ரிழிவு நேருற
ஈங்குநின் றியாவரு மியம்ப வென்குலத்
தோங்குபே ராற்றலு மொளியு மொல்குமால். (64)

**9133** மந்திர வேள்விபோய் மடிந்த தாமெனச்
சிந்தையி னினைந்துநான் வருந்துஞ் சிற்றியல்
அந்தரத் தமரர்தா மனிதற் காற்றலன்
இந்திரற் கேயிவன் வலியென் றேசவோ.

"'மந்திர வேள்விபோய் மடிந்ததாம்'' எனச்
சிந்தையின் நினைந்து நான் வருந்தும் சிற்றியல்,
அந்தரத்து அமரர்தாம், ''மனிதற்கு ஆற்றலன்
இந்திரற்கே இவன் வலி'' என்று ஏசவோ?'

பொ:- 'மந்திரத்துடன் இயற்றப்படும் யாகம் சென்று அழிந்த தாம்' என்று மனத்திலே நினைந்து நான் வருந்தும் சிறுமைத் தன்மை வானத்திலுள்ள தேவர்கள், '(இவ் இந்திரசித்து) மனிதன் ஒருவனுக்கு (எதிர்நிற்க) ஆற்றாதவனுயினன்; இவனது வலிமை இந்திரனை வெற்றி கொள்வதற்கு மட்டுமே' என (என்னைக் குறித்துப்) பழித்துரைத்தற் காகவோ?

கு:- 'மந்திர வேள்வி போய் மடிந்ததாம்' என நினைந்து நான் வருந்தும் சிற்றியல், அந்தரத்து அமரர், 'மனிதற்கு ஆற்றலன், இவன் வலி இந்திரற்கே' என்று ஏசவோ? என இயையும். அமரர்தாம் என்புழி, தாம் என்பது அசை. இந்திரற்கே என்புழி, ஏகாரம் ஏனை யோரைப் பிரித்தலின் பிரிநிலை. (65)

அப்பொழுது அரக்கர்சேனை வானர சேனையினுல் நிலைகுலைதல்

**9134** என்றவன் பகர்கின்ற வெல்லை யின்னிருங்
குன்றொடு மரங்களும் பிணத்தின் கூட்டமும்
பொன்றின கரிகளுங் கவிகள் போக்கின
சென்றன பெரும்படை யிரிந்து சிந்தின.

என்று அவன் பகர்கின்ற எல்லையின், இருங்
குன்றொடு மரங்களும், பிணத்தின் கூட்டமும்,
பொன்றின கரிகளும், கவிகள் போக்கின;
சென்றன பெரும்படை இரிந்து சிந்தின.

பொ:- என்று அவ் இந்திரசித்து (தனக்குள்) சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதில், பெரிய குன்றங்களோடு மரங்களையும் பிணத்தின் தொகுதிகளையும் இறந்த யானைகளையும் குரங்குகள் (அரக்கர்மேல்) வாரி வீசின. (இந்திரசித்துடன்) சென்றனவாகிய (அரக்கர்) சேனைகள் நிலைகெட்டுச் சிதறின.

கு:- அவன்—அவ் இந்திரசித்து. கவிகள், இருங்குன்றொடு மரங்களும் பிணத்தின் கூட்டமும் பொன்றின கரிகளும் போக்கின என இயையும். இரும்—பெரிய. கவிகள்—குரங்குகள். போக்குதல்—வீசி எறிதல். (66)

**9135** ஒதுங்கின ரொருவர்கீ ழொருவர் புக்குறப்
பதுங்கினர் நடுங்கினர் பகழி பாய்தலின்
பிதுங்கினர் குடருடல் பிளவு பட்டனர்
மதம்புலர் களிறெனச் சீற்ற மாறினர்.

ஒதுங்கினர், ஒருவர்கீழ் ஒருவர் புக்குறப்
பதுங்கினர், நடுங்கினர்; பகழி பாய்தலின்,
பிதுங்கினர்குடர், உடல்-பிளவு பட்டனர்.
மதம் புலர் களிறு எனச் சீற்றம் மாறினர்.

பொ:- (குரங்குகள் வீசிய குன்றும் மர முதலியனவும் தம் மேற் படாதவாறு) ஒதுங்கி விலகிய அரக்கர்கள், ஒருவரின் கீழ் ஒருவராகப் புகுந்து பதுங்கியவர்களாய் அஞ்சி நடுங்கினர். (இலக்குவனது) அம்பு (தம்முடம்பிற்) பாய்தலால் குடல் பிதுங்கியவர்களும் உடல் பிளந்தவர்களும், மதம் வற்றிச் செருக்கடங்கிய யானையைப் போன்று சினம் ஒழிந்தார்கள்.

கு:- ஒதுங்கினர், ஒருவர்கீழ் ஒருவர் புக்கு உறப்பதுங்கினர் நடுங்கினர் எனவும், பகழி பாய்தலின் குடர் பிதுங்கினர், உடல் பிளவு பட்டனர், மதம் புலர்களிறு எனச் சீற்றம் மாற்றினர் எனவும் இரு தொடராக இயைத்துரைக்க. (67)

**9136** வீரன்வெங் கணையொடுங் கவிகள் வீசிய
கார்வரை யரக்கர்வெங் கடலின் வீழ்ந்தன
போர்நெடுங் கால்பொரப் பொழிவு மாமழைத்
தாரையு மேகமும் படிந்த தன்மைய.

*வீரன் வெங்கணையொடும் கவிகள் வீசிய*
*கார்வரை, அரக்கர் வெங்கடலின் வீழ்ந்தன,*
*போர்நெடுங் கால்பொர, பொழியும் மாமழைத்*
*தாரையும் மேகமும் படிந்த தன்மைய.*

பொ.- இலக்குவன் ஏவிய கொடிய அம்புகளோடு வானரங்கள் வீசிய கரிய மலைகள் வெம்மையுடைய அரக்கர் சேனையாகிய கடலில் வீழ்ந்தவை, பொருது அலைக்கும் நெடிய பெருங்காற்று மோதுதலால் பொழிதலையுடைய கரிய மழை மேகங்களின் நீர்த்தாரையும் (அவற்றையுடைய) மேகங்களும் ஒரு சேர (கருங்கடலிற்) படிந்த தன்மையை ஒத்தன.

கு:- வீரன் என்றது, இலக்குவனை. வீரன் அம்புக்கு மழைத் தாரையும், குரங்குகள் வீசிய மலைகளுக்கு மழைமேகங்களும், அரக்கர் சேனைக்குக் கருங்கடலும் உவமை. போர் நெடுங்கால்—பொருது அலைத்தலை யுடைய பெருங்காற்று. (68)

## இந்திரசித்துக்குச் சினம் மிகும்படி அனுமன் அவனை யடைந்து எள்ளி நகையாடுதல்

**9137** திரைக்கடற் பெரும்படை யிரிந்து சிந்திட
மரத்தினிற் புடைத்தடர்த் துருத்த மாருதி
அரக்கனுக் கணித்தென வணுகி யன்னவன்
வரக்கதஞ் சிறப்பன மாற்றங் கூறுவான்.

*திரைக்கடற் பெரும்படை இரிந்து சிந்திட,*
*மரத்தினின் புடைத்து அடர்த்து உருத்த மாருதி,*
*அரக்கனுக்கு அணித்துஎன அணுகி, அன்னவன்*
*வரக் கதஞ்சிறப்பன மாற்றம் கூறுவான்.*

பொ:- அலைகளையுடைய கடல் போலும் (அரக்கரது) பெருஞ் சேனை நிலைகெட்டுச் சிதறியோட மரத்தினால் புடைத்துத் தாக்கி வெகுண்ட அனுமன், இந்திரசித்துக்கு அருகாக நெருங்கி நின்று அவ்வரக்கனுக்கு வெகுளி மிகுந்து தோன்றுதற்கு ஏதுவாகிய மொழி களைக் கூறுவானாயினான்.

கு:- மாருதி, அரக்கனுக்கு அணித்து என அணுகி, அன்னவன் கதம் வரச் சிறப்பன மாற்றம் கூறுவான் என முடிக்க. அரக்கன், அன்னவன் என்பன இந்திரசித்தைக் குறித்தன. கதம்—வெகுளி. சிறத்தல்—மிகுதல். (69)

**9138** நானுனை யிரந்து கூறு
நயமொழி யொன்றுங் கேளாய்
சானகி தன்னை வாளாற்
றடிந்ததோ தனதன் றந்த
மானமேற் சேனை யோடும்
வடதிசை நோக்கி மீது
போனதோ கோடி கோடி
வஞ்சமும் பொய்யும் வல்லாய்.

'நான் உனை இரந்துகூறும் நயமொழி ஒன்றும் கேளாய்;
சானகி தன்னை வாளால் தடிந்ததோ? தனதன் தந்த
மானம்மேல் சேனையோடும் வடதிசை நோக்கிமீது
போனதோ? கோடிகோடி வஞ்சமும் பொய்யும் வல்லாய்!'

பொ:- பல கோடிக் கணக்கான வஞ்சனைச் செயல்களையும் பொய்ம்மையினையும் கற்று வல்லவனே! யான் முன்பு உன்னை இரந்து வேண்டிய நீதிமொழியினைச் சிறிதும் கேட்டாயல்லை. சீதாபிராட்டியை வாளால் வெட்டி வீழ்த்தியாயிற்றோ? குபேரன் கொடுத்த புட்பக விமானத்தின் மீது சேனையுடனே வடதிசை நோக்கிப் போர் மேற் சென்று முடிந்ததோ?

கு:- நயமொழி என்றது. 'பெண் கொலை செய்கை பெரும்பழி' எனக் கூறிய நீதியுரையினை. ஒன்றும்—சிறிதும். சானகி—சனகன் மகள்; சீதாபிராட்டி. சானகி தன்னை வாளால் தடிந்தனையோ? வடதிசை நோக்கிப் போயினையோ? என இந்திரசித்தை முன்னிலைப் படுத்து வினவும் நிலையிலுள்ள அனுமன், அங்ஙனம் அவனது தொழில்

நிகழ்ச்சியை முன்னிலையில் வைத்துரையாது, அவனை மிகவும் உயர்த்துக் கூறுவதுபோல், 'சானகி தன்னை வாளால் தடிந்ததோ? வடதிசை நோக்கிப் போனதோ' என அவனி தொழில்மேலேற்றிப் படர்க்கையில் வைத்துப் பரிகசிக்கின்றான். மானம்—விமானம்; முதல் குறை. இச்செய்யுள் 1, 2, 9, 18, 19, 21, 25, 29, 40, 54, 60—63, 65, 66, 71, 74-ஆம் எண்ணுள்ள சுவடிகளில் இல்லை. (70)

**9139** தடந்திரைப் பரவை யன்ன
சக்கர யூகம் புக்குக்
கிடந்தது கண்ட துண்டோ
நாணொலி கேட்டி லோமே
தொடர்ந்துபோ யயோத்தி தன்னைக்
கிளையொடுந் துணிய நூறி
நடந்ததெப் பொழுது வேள்வி
முடிந்ததே கரும நன்றே.

'தடந்திரைப் பரவை அன்ன
சக்கர யூகம் புக்குக்
கிடந்தது கண்டது உண்டோ?
நாண் ஒலி கேட்டிலோமே,
தொடர்ந்து போய் அயோத்தி
தன்னைக் கிளையோடும் துணிய நூறி
நடந்தது எப்பொழுது? வேள்வி
முடிந்ததே? கருமம் நன்றே?

பொ:- பெரிய அலைகளை யுடைய கடல் போன்ற சக்கரவியூகமாக அமைந்த (நினது) சேனை (இவ்விடத்துப்) புகுந்து கிடந்ததே? (அதனைத் தாங்கள்) கண்டது உண்டா? (அதன்) வில் நாண் ஒலியைக் கூட நாங்கள் கேட்கப் பெற்றிலோமே? தொடர்ந்து அயோத்தி நகரத்தினை யடைந்து (பரதனைச்) சுற்றத்தொடும் (உடல்) துண்டிக்கப்பட்டு விழும் படி கொன்றுவிட்டு(த் தாங்கள் இங்கு) மீண்டு வந்தது எப்பொழுதோ? தொடங்கிய யாகம் முற்றுப்பெற்ற தல்லவா? எண்ணிய செயல் நன்மையை விளைத்த தல்லவா?

கு:- சக்கரவியூகமாக அமைந்த நினது பெருஞ்சேனை நொடிப் பொழுதில் நிலை குலைந்து சிதறியதே என இந்திரசித்தை நோக்கி இகழும் நிலையில், 'தடந்திரைப் பரவையன்ன சக்கர வியூகம் புக்குக்-

கிடந்தது கண்டது உண்டோ? நாஞெலி கேட்டிலோமே' என வினவினான் அனுமன். நினக்குக் காவலாக அமைந்த நின்சேனையைச் சிதையாது பாதுகாக்க மாட்டாத நீ அயோத்தி தன்னைத் தொடர்ந்து போய் (ப்பரதனை)க் கொன்று வருவதாகச் சொன்னதும் வெற்றி குறித்து வேள்வியைத் தொடங்கி நடத்தியதும் நகைப்பிற் குரியனவே என்பான், 'அயோத்தி தன்னைத் தொடர்ந்து போய்க் கிளையோடும் துணிய நூறி நடந்தது எப்பொழுது? வேள்வி முடிந்ததே? கருமம் நன்றே?' என வினவினான். (71

9140 ஏந்தகன் ஞால மெல்லா
மினிதுறைந் திவரத் தாங்கும்
பாந்தளிற் பெரிய திண்டோட்
பரதனைப் பழியிற் றீர்ந்த
வேந்தனைக் கண்டு நீர்நும்
வில்வலிகாட்டி மீண்டு
போந்ததெவ் வளவை நன்றே
போனமை பொருந்திற் றன்றே.

ஏந்து அகல் ஞாலம் எல்லாம்
இனிது உறைந்து இவரத் தாங்கும்
பாந்தளின் பெரிய திண்தோள்
பரதனை பழியின் தீர்ந்த
வேந்தனை, கண்டு நீர் நும்
வில்வலி காட்டி மீண்டு,
போந்தது,எவ் அளவை நன்றே,
போனமை பொருந்திற்று அன்றே.

பொ:- (எல்லாவற்றையும்) பொறுத்துத் தாங்குகின்ற விரிந்த நிலவுலக முழுவதும் மேற்பட்டு விளங்கச் சுமக்கும் ஆதிசேடனைக் காட்டிலும் பெரிய திண்ணிய தோள்களையுடைய பரதனும் பழியினின்றும் நீங்கிய வேந்தனும் ஆகியவனைக் கண்டு நீர் நமது வில்லின் வலிமையைப் புலப்படுத்தி மீண்டு திரும்பி வந்தது எப்பொழுது? போன காரியம் நன்ருகப் பொருந்தி நிறைவேறிய தல்லவா?

கு:- ஏந்துதல்—தாங்குதல். இவர்தல்—மேற்பட்டு உயர்தல். பாந்தள்—பாம்பு; ஆதிசேடன். பாந்தளின் என்புழி ஐந்தாமுருபாகிய இன் உறழ்ச்சிப் பொருளில் வந்தது. பரதனை வேந்தனை என இரண்டா

முருபு அடுக்கி வந்து கண்டு என்னும் வினைகொண்டு முடிந்தது. நிலவுலக முழுவதும் பொதுவறப் புரக்கும் திண்ணிய தோள்களை யுடைய பரதனைக் கண்டு நமது வில் வன்மையைப் புலப்படுத்தி வென்று உயிருடன் மீள்வ தென்பது நும்மால் இயலாத செயல் என்பது புலப்பட, 'திண்டோட் பரதனை...கண்டு நீர் நும் வில்வலி காட்டி மீண்டு போந்தது எவ்வளவை?' என இந்திரசித்தை நோக்கி வினவினன் அனுமன். (72)

**9141** அம்பரத் தமைந்த வல்விற்
சம்பர னாவி வாங்கி
உம்பருக் குதவி செய்த
வொருவனுக் குதயஞ் செய்த
நம்பியை முதல்வ ரான
மூவர்க்கு நால்வ ரான
தம்பியைக் கண்டு நின்றன்
றனுவலங் காட்டிற் றுண்டோ.

'அம்பரத்து அமைந்த வல்வில் சம்பரன் ஆவி வாங்கி
உம்பருக்கு உதவி செய்த ஒருவனுக்கு உதயஞ் செய்த
நம்பியை முதல்வர் ஆன மூவர்க்கு நால்வர் ஆன
தம்பியைக் கண்டு, நின்தன் தனு வலம் காட்டிற்று உண்டோ?

பொ:- வானுலகத்தே (போர் மேற்கொண்டு) தங்கிய வலிய விற்படையினை யுடைய சம்பரன் என்னும் அசுரனது உயிரைக் கவர்ந்து தேவர்களுக்கு உதவி புரிந்த ஒப்பற்றவனாகிய தசரதனுக்கு (ப்புதல்வ ராக)த் தோன்றிய ஆடவர் தோன்றலாகிய இராமனை முதலாக வுடைய மூவர்க்கு (ப்பின்னே அன்னோர்) நால்வராகுமாறு தோன்றிய தம்பி சத்துருக்கினனைக் கண்டு நீ நினது வலிமையை(ப் புலப்பட)க் காட்டியதுண்டோ?

கு:- அம்பரம்—வானுலகம். அமைதல்—பொருந்தித் தங்குதல். சம்பரன்—ஓர் அசுரன். உம்பர்—தேவர். உம்பருக்கு உதவி செய்த ஒருவன் என்றது, சம்பரனைக் கொன்று வானுலக ஆட்சியை இந்திர னுக்கு வழங்கிய தசரதனை. உதயஞ் செய்தல்—(மகனாகத்)தோன்றுதல். நம்பி என்றது ஆடவருட் சிறந்தோனாகிய இராமபிரானை. நம்பியை முதல்வரான மூவர் என்றது, இராமன் பரதன் இலக்குவன் ஆகிய மூவர்களை. நால்வரான தம்பி என்றது, மேற்குறித்த உடன்பிறந்தார் மூவரும் நால்வர் என அழைக்கப்பெறுமாறு பிறந்த தம்பியாகிய

சத்ருருக்கினனே. பரதன் சத்துருக்னன் ஆகியோரை எதிர்த்து நின்று விற்போர் புரியும் தகுதியில்லாத நீ அயோத்தி நகரத்தை யடைந்து பரதன் முதலியோரைக் கிளையுடன் கொள்வதாக முன்பு கூறியது முழுப் பொய்யாயிற்று என்பான் 'மூவர்க்கு நால்வரான தம்பியைக் கண்டு நீ நின் தனுவலங் காட்டிற்றுண்டோ' என இந்திரசித்தை நோக்கி அனுமன் வினவினன். (73)

9142 தீயொத்த வயிர வாளி
யுடலுறச் சிவந்த சோரி
காயத்துஞ் செவியி னூடும்
வாயினுங் கண்க ளூடும்
பாயப்போ யிலங்கை புக்கு
வஞ்சனை பரப்பச் செய்யும்
மாயப்போ ராற்ற லெல்லா
மின்றெடு மடியு மன்றே.

'தீ ஒத்த வயிர வாளி உடல் உற, சிவந்த சோரி
காயத்தும், செவியினூடும், வாயினும், கண்களூடும்
பாய, போய், இலங்கை புக்கு, வஞ்சனை பரப்பச் செய்யும்
மாயப் போர் ஆற்றல் எல்லாம் இன்றொடு மடியும் அன்றே!

பொ:- நெருப்பினை யொத்துச் சுட்டழிக்கும் திண்ணிய அம்புகள் உடம்பில் தைத்து ஊன்றுதலால் சிவந்த இரத்தம் உடம்பிலும் செவியிலும் வாயிலும் கண்களிலும் பாய்ந்து வழிய (விரைந்து) சென்று இலங்கை நகரிற் புகுந்து நினது வஞ்சனைத் திறங்களை எங்கும் பரப்பச் செய்யும் மாயப் போரின் வலிமை யனைத்தும் இன்றோடு முடிந்துவிடும் அல்லவா?

கு:-வாளி—அம்பு. சோரி-இரத்தம். காயம்—உடம்பு. நின்னுடைய வஞ்சனைப் போர்ச் செயல்களின் வன்மை யனைத்தும் இலக்குவனுடன் பொருது மடியும் நாளாகிய இன்றோடு தீர்ந்தொழிந்துவிடும் என்பான், 'மாயப்போ ராற்றலெல்லாம் இன்றொடு மடியுமன்றே' என்றான் அனுமன். மடிதல்—தீர்ந்தொழிதல். (74)

9143 பாசமோ மலரின் மேலான்
பெரும்படைக் கலமோ பண்டை
ஈசனர் படையோ மாயோ
னேமியோ யாதோ வின்னும்

வீசநீர் விரும்பு கின்றீ
ரதற்குநாம் வெருவிச் சாலக்
கூசினேம் போதும் போதும்
கூற்றினர் குறுக வந்தார்.

'பாசமோ, மலரின் மேலோன்
பெரும் படைக் கலமோ, பண்டை
ஈசனார் படையோ, மாயோன்
நேமியோ, யாதோ, இன்னும்
வீசநீர் விரும்புகின்றீர்?
அதற்கு நாம் வெருவி, சாலக்
கூசினேம்; போதும் போதும்;
கூற்றினர் குறுக வந்தார்.

பொ:- நாகபாசமோ? தாமரை மலரில் இருப்போனாகிய பிரமனது பெருமைவாய்ந்த படைக்கலமோ? (எல்லாப் பொருட்கும்) பழையோனாகிய சிவபெருமானது (பாசுபதப்) படையோ? திருமாலது சக்கரப் படையோ? வேறு யாதோ? இனிமேலும் எங்கள்மேல் ஏவுதற்கு நீர் விரும்பியுள்ளீர்? (நும்மால் செலுத்தப்படும்) அப்படைக் கலத்திற்கு நாங்கள் மிகவும் அஞ்சி நடுக்கமுற்று ஒடுங்கினோம். (நீர் அவற்றை எம்மேல் வீசியது) போதும் போதும். கூற்றுவனார் நெருங்க வந்துவிட்டார்.

கு:- பாசம்—நாகபாசம். மலரின் மேலான்—பிரமன்- ஈசனார்—சிவபெருமான். 'பரமன் காண்க பழையோன் காண்க' (திருவண்டப் பகுதி) எனவும், 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே' (திருவெம்பாவை) எனவும் வரும் திருவாசகப் பொருளை யுளங் கொண்டு 'பண்டை ஈசனார்' எனச் சிறப்பித்தார் ஆசிரியர். ஆற்றல்மிக்க அனுமன் அஞ்சியவனைப் போன்று இந்திரசித்தை நோக்கி 'அதற்கு நாம் வெருவிச் சாலக் கூசினேம் போதும் போதும்' என நகையாடிக் கூறினன். 'கூற்றினர் குறுக வந்தார்' என்ற தொடர், 'எமது உயிரைக் கவர்தற்கு இயமனார் நெருங்கி வந்தார்' எனத் தாம் அஞ்சிய தன்மையைக் குறிப்பதுபோன்று, 'நினது உயிரைக் கவர்தற்கு இயமனார் அணுகி வந்துள்ளார்' என இந்திரசித்தை அச்சுறுத்தும் நிலையில் அமைந்துள்ளமை உற்று நோக்கத்தக்கதாகும். குறுக வருதல்—அணிமையில் நெருங்க வருதல். (75)

9144 வரங்கணீ ருடைய வாறு
மாயங்கள் வல்ல வாறும்
பரங்கொள்வா னவரிற் றெய்வப்
படைக்கலம் படைத்த வாறும்
உரங்களோ டுன்னி யன்றே
வும்மைநா முயிரி னேடுஞ்
சிரங்கொளத் துணிந்த தன்ன
துண்டது திறம்பி னேமோ

'வரங்கள் நீர் உடையவாறும்,
மாயங்கள் வல்லவாறும்,
பரம் கொள் வானவரின் தெய்வப்
படைக்கலம் படைத்தவாறும்
உரங்களோடு உன்னி அன்றே,
உம்மை நாம் உயிரினேடும்
சிரம் கொளத் துணிந்தது? அன்னது
உண்டு; அது திறம்பினேமோ?

பொ:- (இந்திரசித்தாகிய) நீவிர் வரங்களைப் பெற்றுடைய தன்மையும் மாயச் செயல்களைக் கற்று வல்ல தன்மையும் பெருமையினைக் கொண்ட தேவர்கள்பால் தெய்வத்தன்மை வாய்ந்த ஆயுதங்களைப் பெற்றுள்ள தன்மையும் (நுமக்கு இயல்பாக வாய்ந்த) வன்மைகளும் ஆகியவற்றை எண்ணிய பின்பல்லவா உம்மை நாங்கள் உயிருடன் தலையினைக் கவர்ந்து கொள்ளத் துணிந்தது? அங்ஙனந் துணிந்து கூறிய வஞ்சினம் உளது. அவ் வஞ்சினத்தில் தவறி விலகினேமோ?

கு:- வரம்—தேவர்கள் அருளிக் கூறிய அருள் மொழி. மாயம்—வஞ்சனைச் செயல். பரம்—அறிவு ஆண்மை பொருள் படை ஆகிய பெருமை. உரம்—திண்மை. உடலுரனும் உள்ளத்துரனும் அடங்க உரங்கள் எனப் பன்மையாற் குறித்தார். அது திறம்புதல்—அவ் வஞ்சினத்தில் தப்புதல். திறம்பினேமோ என்புழி ஓகாரம் எதிர் மறை. (76)

9145 விடந்துடிக் கின்ற கண்டத்
தண்ணலும் விரிஞ்சன் ருனும்
படந்துடிக் கின்ற நாகப்
பாற்கடற் பள்ளி யானும்

சடந்துடிக் கிலராய் வந்து
தாங்கினுஞ் சாத றிண்ணம்
இடந்துடிக் கின்ற துண்டே
யிருத்திரோ வியம்பு வீரே.

'விடம் துடிக்கின்ற கண்டத்து
அண்ணலும், விரிஞ்சன் தானும்,
படம் துடிக்கின்ற நாகப்
பாற்கடல் பள்ளியானும்,
சடம் துடிக்கிலராய் வந்து
தாங்கினும், சாதல் திண்ணம்;
இடம் துடிக்கின்றது உண்டே?
இருந்திரோ? இயம்புவீரே!

பொ:- (ஆலகால) நஞ்சு நிறைந்து ததும்புகின்ற கண்டத்தினை யுடைய இறைவனாகிய சிவபெருமானும் பிரமதேவனும் படம் விரித்து எழுகின்ற (ஆதிசேடனாகிய) பாம்பணையின் மேற் பாற்கடலிற் பள்ளி கொள்வோனாகிய திருமாலும் உடல் நடுங்குறாதவராகி (நுமக்குத் துணையாய்) வந்து தாங்கிப் பாதுகாத்தாலும் (போரிற்) சாவது உறுதி. (நுமக்கு) இடப்பக்கம் துடிக்கின்றதல்லவா? (இனியும் நீர்) உயிருடன் இருப்பீரோ? சொல்வீராக.

கு:- விடம்—ஆலகால நஞ்சு. துடித்தல்—நிறைந்து ததும்புதல். படம் துடித்தல்—படத்தினை விரித்துச் சீறி எழுதல். சடம் துடித்தல்—உடல் நடுக்குறுதல். இடம்துடித்தல்—இடப்பக்கத்துத் தோளும் கண்ணும் துடிப்புற்று அசைதல். ஆடவர்க்கு இடந்துடித்தலாகிய இது பின்வரும் தீங்கினை முன்னரே புலப்படுத்தும் தீ நிமித்தமாகும். (77)

9146 கொல்வெனென் றுன்னைத் தானே
குறித்தொரு சூளுங் கொண்ட
வில்லிவந் தருகு சார்ந்துன்
சேனையை முழுதும் வீட்டி
வல்லையேல் வாவா வென்று
விளிக்கின்றான் வரிவி னாணின்
ஒல்லொலி யைய செய்யு
மோமத்துக் குறுப்பொன் றாமோ.

"கொல்வென்" என்று, உன்னைத்தானே
குறித்து ஒரு சூளும் கொண்ட
வில்லி, வந்து அருகு சார்ந்து, உன்
சேனையை முழுதும் வீட்டி,
"வல்லையேல் வா வா" என்று
விளிகின்றான்; வரிவில் நாணின்
ஒல்ஒலி, ஐய! செய்யும்
ஓமத்துக்கு உறுப்பு ஒன்று ஆமோ?

பொ:- 'உன்னைக் கொல்வேன்' என்று தானே (முற்படக்) குறித்து ஒப்பற்ற வஞ்சினங் கூறிய வில்வீரனாகிய இலக்குவன் நின்பக்கத்தே நெருங்கிச் சார்ந்து உன் சேனை முழுவதையும் கொன்று வீழ்த்தி, 'நீ (என்னுடன் விரைந்து பொருதற்கு) வல்லாயாயின் வருக வருக' என்று (உன்னை) அழைக்கின்றான். ஐயனே! (அவனது) வரிந்து கட்டப் பெற்ற வில் நாணினின்றும் எழுகின்ற ஒல்லென்னும் ஒலியானது நீ செய்து கொண்டிருக்கும் வேள்விக் கிரியைக்கு (மந்திரபூர்வமாகிய) ஓர் அங்கமாக அமைந்ததோ?

கு:- எங்களை அழித்தற் பொருட்டு நீ தொடங்கிச் செய்யும் இந்த யாகமானது சிதைவுற்றழிய வில்வீரனாகிய இலக்குவன் நின்னை அணுகிப் போர்க்கு அறைகூவி யழைத்து வில்நாணின் ஒலியை யெழுப்பிய இந்நிலையில் நீ யாக சாலையில் வாளாவிருத்தல் அடாதென்பான், வரி வில் நாணின் ஒல்லொலி ஐய! செய்யும் ஓமத்துக்கு உறுப்பு ஒன்று ஆமோ?' என இந்திரசித்தினை இகழ்ந்து வினவினான் அனுமன். வில்லி- வில்வீரன்; என்றது இலக்குவனை. விளித்தல்—அழைத்தல். ஐய என்றது இந்திரசித்தை நோக்கிய விளி. ஓமம்—வேள்வியில் நிகழும் கிரியை. உறுப்பு—அங்கம். (78)

9147 மூவகை யுலகுங் காக்கு
முதலவன் றம்பி பூசல்,
தேவர்கள் முனிவர் மற்றுந்
திறத்திறத் துலகஞ் சேர்ந்தார்
யாவருங் காண நின்று
ரினியிறை தாழ்ப்ப தென்னோ
சாவது சரத மன்றோ
வென்றனன் தருமங் காப்பான்.

'மூவகை உலகும் காக்கும்
முதலவன் தம்பி பூசல்
தேவர்கள், முனிவர், மற்றும்
திறத்திறத்து உலகம் சேர்ந்தார்,
யாவரும் காண நின்றார்;
இனிஇறை தாழ்ப்பது என்னோ?
சாவது சரதம் அன்றோ?'
என்றனன், தருமம் காப்பான்.

பொ:- மூன்று வகை உலகங்களையும் இடர் நீக்கிப் பாதுகாத்தருளும் முதல்வனாகிய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவனது போர்த் திறத்தைத் தேவர்களும் முனிவர்களும் மற்றும் பலதிறப்பட்ட உலகங்களில் வாழ்வார் யாவருங் காணுதற் பொருட்டு (விசும்பில்வந்து) நின்றார்கள். இனிச் சிறிதும் தாமதிப்பது ஏனோ? இறப்பது உறுதியன்றோ' என்று கூறினான் அறத்தினைக் காப்பவனாகிய அனுமன்.

கு:- முதலவன்—முதற்பொருளாகிய இறைவன்: என்றது காத்தற் கடவுளாகிய திருமாலின் அமிசமாகிய இராமனை. தம்பி—இலக்குவன். பூசல்—போர்; என்றது போர்த் தொழிற்றிறமையை. இறை—சிறிது. தாழ்த்தல் - தாமதித்தல். சரதம்—மெய்; உறுதி. அறந்தலை நிறுத்தப் பிறந்தருளிய நல்லற மூர்த்தியாகிய இராமபிரானுக்குத் துணையாய் நின்று தொண்டு செய்து உலகத்தின்கண் அறத்தினைக் காக்கும் கடமை பூண்டவன் அனுமனாதலின், அவனைத் 'தருமங்காப்பான்' எனச் சிறப்பித்தார் ஆசிரியர். (79)

## இந்திரசித்து வெகுண்டு அனுமன் முதலியோரை இகழ்ந்துரைத்தல்

9148 அன்னவா சகங்கள் கேளா
வனலுயிர்த் தலங்கற் பொற்றோள்
மின்னுகப் பகுவா யூடு
வெயிலுக நகைபோய் வீங்க
முன்னரே வந்திம் மாற்ற
மொழிகின்றீர் மொழிந்த மாற்றம்
என்னதோ நீயி ரென்னை
யிகழ்ந்ததென் றினைய சொன்னான்.

அன்ன வாசகங்கள் கேளா,
அனல் உயிர்த்து, அலங்கல் பொன்-தோள்
மின் உக, பகுவாயூடு
வெயில் உக, நகைபோய் வீங்க,

'முன்னரே வந்து இம் மாற்றம்
மொழிகின்றீர்' மொழிந்த மாற்றம்
என்னதோ நீயிர் என்னை
இகழ்ந்தது என்று இனைய சொன்னான்.

பொ:- (அனுமன் கூறிய) அம் மொழிகளைக் கேட்டு நெருப் பெனப் பெருமூச்சு விட்டு, மாலையை யணிந்த பொன்மயமான தன் தோள்களினின்றும் மின்னொளி சிதற, பிளந்த வாயினிடையே வெயில் வெளிப்பட்டு வீச (வெகுளிச்) சிரிப்பு மிக்குத் தோன்ற, 'என் முன்னே வந்து இம் மொழியினைக் கூறுகின்றீர். (நீவிர்) கூறிய வார்த்தை என்ன பொருளுடையதோ? நீவிர் என்னை இகழ்ந்து கூறியதே யாகும்' என்று சொல்லிப் பின் வரும் மொழிகளைக் கூறினான் (இந்திரசித்து).

கு:- (இந்திரசித்து) அன்ன வாசகங்கள் கேளா, அனல் உயிர்த்து அலங்கல் பொன் தோள் மின் உக, பகுவாயூடு வெயில் உக, நகைபோய் வீங்க, 'முன்னரே வந்து இம் மாற்றம் மொழிகின்றீர். மொழிந்த மாற்றம் என்னதோ? நீவிர் என்னை இகழ்ந்தது' என்று இனைய சொன் னான் என்க. அவன் கூறியவை அடுத்து வரும் ஐந்து செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். அன்ன வாசகங்கள் என்றது, அனுமன் இந்திர சித்தை நோக்கிப் புகழ்வது போற் கூறிய இகழுரைகளை. கேளா— கேட்டு. என்னதோ—என்ன பொருளுடையதோ? என்னை இகழ்ந்தது—என்னை இகழ்ந்து கூறியதே எனத் தேற்றேகாரம் வரு வித்துரைக்கப்பட்டது. இனி நீயிர் இகழ்ந்தது என்னை என இயைத்து வினாவாக்கலும் பொருந்தும். (80)

9149 மூண்டபோர் தோறும் பட்டு
முடிந்தநீர் முறையிற் றீர்ந்து
மீண்டபோ ததனையெல்லா
மறத்திரோ விளிதல் வேண்டி
ஈண்டவா வென்னு நின்றீ
ரித்தனை பேரும் பட்டு
மாண்டபோ துயிர்தந் தீயும்
மருந்துவைத் தனையோ மான

மூண்ட போர்தோறும் பட்டு
முடிந்தநீர், முறையின் தீர்ந்து
மீண்டபோது அதனை எல்லாம்
மறத்திரோ? விளிதல் வேண்டி

'ஈண்டவா' என்று நின்றீர்;
இத்தனை பேரும் பட்டு
மாண்டபோது, உயிர் தந்தீயும்
மருந்து வைத்தனையோ மான?

பொ:- மிக்கெழுந்த போர்கள் தோறும் (படைக்கலங்களால்) தாக்கப்பட்டு இறந்த நீங்கள் (உயிர்போன) விதிமுறைமையின் நீங்கி (உயிர்பெற்று) மீண்டுவந்த இப்பொழுது (முன்னுற்ற) அத்துன்பங்களையெல்லாம் மறந்து விட்டீரோ? இறத்தலை விரும்பி 'அணுக வருவாயாக' என்று (என்னைப் போருக்கு) அழைக்கின்றீர்கள். நீங்கள் இத்தனை பேரும் (என் அம்புகளால்) தாக்கப்பட்டு இறந்தபொழுது உயிரை மீட்டுத் தருதற் குரிய மருந்தினை நிறையப் பெற்று வைத்துள்ளாயோ?

கு:- மூளுதல்—சினம் மிக்கு எழுதல். நான் ஏவிய நாகபாசத்தால் மாண்ட பொழுது கருடனாலும், பிரமாத்திரத்தால் மாண்ட பொழுது மருத்து மலையாலும் உயிர் பெற்றெழுந்த நீவிர் முன்னுற்ற துன்பங்களையெல்லாம் மறந்து மீளவும் என்னுடன் போர் செய்ய வந்தமை இறந்தால் நும் உயிரை மீட்டுத் தருதற்குரிய மருந்தினை நீ நிறையச் சேர்த்து வைத்துள்ளமையினாலேயோ என வினவுவான் 'மாண்ட போது உயிர்தந் தீயும் மருந்து மான வைத்தனையோ' என்றான் இந்திரசித்து. மான—நிறைய. (81)

9150 இலக்குவ னாக மற்றை
யிராமனே யாக வீண்டு
விலக்குவ ரெல்லாம் வந்து
விலக்குக குரங்கின் வெள்ளம்
குலக்குல மாக மாளுங்
கொற்றமு மனிதர் கொள்ளும்
அலக்கணு முனிவர் தம்மோ
டமரருங் காண்ப ரன்றே.

'இலக்குவன் ஆக, மற்றை
இராமனே ஆக, ஈண்டு
விலக்குவர் எல்லாம் வந்து
விலக்குக; குரங்கின் வெள்ளம்
குலக்குலம் ஆக மாளும்
கொற்றமும், மனிதர் கொள்ளும்
அலக்கணும், முனிவர் தம்மோடு
அமரரும் காண்பர் அன்றே.

பொ:- (என்னொடு பொர வருவான்) இலக்குவனே யாகுக (அன்றி) இராமனேயாகுக. இங்கு (இருவர்க்குந் துணையாக வந்து என்னைத்) தடித்து விலக்குவா ரெல்லாம் விலக்குக. குரங்குச் சேனை யாகிய வெள்ளம் கூட்டங் கூட்டமாக இறந்தொழிதற்கு ஏதுவாகிய (எனது) வெற்றித் திறத்தையும் (என்னால் இராம இலக்குவராகிய) மனிதர் படும் துயரத்தையும் (விசும்பிலுள்ள) முனிவர்களும் தேவர் களும் ஒருங்கே காண்பார்கள்.

கு:- குலக் குலமாக—கூட்டங் கூட்டமாக. மாளும் என்னும் பெயரெச்சம் கொற்றம் என்னும் ஏதுப் பெயர் கொண்டு முடிந்தது. மனிதர் என்றது இராம இலக்குவரை. அலக்கண்—துன்பம். (82)

**9151** யானுடை வில்லு மென்பொற்
றோள்களு மிருக்க வின்னும்
ஊனுடை யுயிர்கள் யாவு
முய்யுமோ வொளிப்பி லாமல்
கூனுடைக் குரங்கி னோடு
மனிதரைக் கொன்று சென்றவ்
வானினுந் தொடர்ந்து கொல்வேன்
மருந்தினு முய்ய மாட்டார்.

'யானுடை வில்லும், என் பொன்
தோள்களும், இருக்க இன்னும்
ஊனுடை உயிர்கள் யாவும்
உய்யுமோ' ஒளிப்பு இலாமல்?
கூனுடைக் குரங்கினோடு
மனிதரைக் கொன்று, சென்று அவ்
வானினும் தொடர்ந்து கொல்வென்;
மருந்தினும் உய்ய மாட்டார்.

பொ:- யான் (கைக்கொண்டு) உடைய வில்லும் என்னுடைய திண்ணிய தோள்களும் இன்னமும் (அழியாது) உள்ள வரையில் (என்னை எதிர்த்த) உடம்புடன் கூடிய உயிர்கள் எல்லாம் ஓடி ஒளியா மல் பிழைக்க வல்லனவோ? கூனி வளைந்த உடம்பினையுடைய வானரங் களோடு (இராம இலக்குவராகிய) மனிதர்களையுங் கொன்று (அவர் செல்லும்) அவ்வானுலகிலும் (அவர்களைத்) தொடர்ந்து சென்று

கொல்வேன். (நீவிர் முன்னர்ப் பிழைத்தவாறு) மருந்தினாலும் (இப் பொழுது) பிழைக்க மாட்டீர்.

கு:- காணா மரபினவாகிய உயிர்களைப் போரில் துன்புறுத்துதற்கு அவை பெற்றுடைய உடம்பே இலக்கமாதலால் 'ஊனுடை யுயிர்கள் யாவும் உய்யுமோ' என்றான். ஊனுடை யுயிர்கள்—உடம்புடன் கூடிய உயிர்கள். உய்யுமோ என்புழி வினா ஓகாரம் உய்யமாட்டா என எதிர் மறைப் பொருள் தந்து நின்றது. இராம இலக்குவர் தம் மனிதவுடம் பைத் துறந்து வானிற் சென்று தேவவுடம்பினைப் பெற்ற நிலையிலும் அவர்களை விடாது தொடர்ந்து சென்று பொருது கொல்வேன் என் பான், 'மனிதரைக் கொன்று சென்று அவ்வானினுந் தொடர்ந்து கொல்வேன்' என்றான். மருந்து—இறப்பினை நீக்கி உய்விக்கும் மிருத சஞ்சீவி. மருந்தினும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. (83)

**9152** வேட்கின்ற வேள்வி யின்று
பிழைத்தது வென்றே மென்று
கேட்கின்ற வீர மெல்லாங்
கிளத்துவீர் கிளத்தல் வேண்டா
தாழ்க்கின்ற தில்லை யும்மைத்
தனித்தனி தலைகள் பாறச்
சூழ்க்கின்ற வீர மென்கைச்
சரங்களாய்த் தோன்று மன்றே.

'வேட்கின்ற வேள்வி இன்று
பிழைத்தது; "வென்றோம்" என்று
கேட்கின்ற வீரம் எல்லாம்
கிளத்துவீர்! கிளத்தல் வேண்டா;
தாழ்க்கின்றது இல்லை; உம்மைத்
தனித்தனி தலைகள் பாறச்
சூழ்க்கின்ற வீரம் என்கைச்
சரங்களாய்த் தோன்றும் அன்றே.

பொ:- 'செய்கின்ற யாகமானது இன்று (நிறைவேறாமல்) தவறியது. (நாங்களே) வெற்றி பெற்றோம்' என்று (எண்ணி என்னை) வினவுதற்குக் காரணமான (நும்முடைய) வீரத்திறனையெல்லாம் எடுத்துரைப்பவர் களே! (அவற்றை நீவிர்) எடுத்துரைத்தல் வேண்டா. (நான் இனியும்) தாமதிக்கின்றதில்லை. உங்களைத் தனித்தனியே தலைகள் சிதறுமாறு

ஆராய்ந்து அழிக்கவல்ல வீரத்தன்மை என் கையிலுள்ள அம்புகளாய் (நுமது உடம்பின் கண்ணே தைத்து) தோன்றும்.

கு:- பாறுதல் —சிதறுதல். சூழ்கின்ற எனற்பாலது எதுகை நோக்கிச் சூழ்கின்ற என வல்லொற்று மிக்கு வந்தது. 'இனி இறை தாழ்ப்பதென்னோ' என வினவிய அனுமனுக்கு, 'தாழ்க்கின்றதில்லை' என மறுமொழி பகர்ந்தான் இந்திரசித்து.

9153 மற்றெலா நும்மைப் போல
வாயினாற் சொல்ல மாட்டேன்
வெற்றிதா னிரண்டு தந்தீர்
விரைவது வெல்லக் கொல்லாம்
உற்றுநா னுருத்த காலத்
தொருமுறை யெதிரே நிற்கக்
கற்றிரோ வின்ன மாண்டு
கிடத்திரோ கடத்தி ரோதான்.

'மற்று எலாம் நும்மைப் போல
வாயினால் சொல்ல மாட்டேன்;
வெற்றிதான் இரண்டு தந்தீர்;
விரைவது வெல்லக் கொல்லாம்?
உற்று நான் உருத்த காலத்து
ஒருமுறை எதிரே நிற்கக்
கற்றிரோ? இன்னம் மாண்டு
கிடத்திரோ? கடத்திரோ தான்?

பொ:- பிறவெற்றித் திறங்கள் எல்லாவற்றையும் குறித்து நும்மைப்போல வாயளவிற் பேசி அமையமாட்டேன்.(எனக்கு)வெற்றியை இருமுறை அளித்தீர். (தோல்வியுற்ற நீவிர் இப்பொழுது) விரைவினை மேற்கொள்வது என்னை வெல்லுதற்கோ? நான் உம்மை அடைந்து வெகுண்டு பொருத பொழுது ஒரு முறையேனும் என் முன்னே (அச்சமின்றி) நிற்கக் கற்றுள்ளீரோ இனிமேலும் (இங்கு) இறந்து கிடக்கப் போகின்றீர்களோ? அன்றி இவ்விடத்தை விட்டு அகன்று ஓடப் போகின்றீர்களோ?

கு:- வெற்றி இரண்டாவன, நாகபாசத்தால் ஒரு முறையும் பிரமாத்திரத்தல் ஒரு முறையும் இந்திரசித்துக்கு உண்டாகிய வெற்றிகள். உருத்தல்—வெகுளுதல். கடத்தல்—அப்பாற் செல்லுதல். (85)

இதன்பின் 23, 26, 29, 43, 44, 45-என்னும் எண்ணுள்ள பிரதிகளில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் உளது:-

**9153 a** சூரெலாந் திரண்ட பொற்றோட்
டாபதர்க் கிளைய தோன்றல்
நீரெலா மறந்தீர் போலு
மியான் செருவேற்று நின்று
காரெலாஞ் சொரிவ தென்னுங்
கணைகளாற் கவியின் வெள்ளம்
போரெலா மடிந்து நூறி
யிறத்தலு மிருகால் பெற்றீர்.

இந்திரசித்து, போர் செய்தற்கு ஆயத்தனாகித் தேரேறி வில்நாண் எறிந்து போர்ச்சங்கினை ஊதுதல்

**9154** நின்மின்க ணின்மி னென்னா
நெருப்பெழ விழித்து நீண்ட
மின்மின்கொள் கவச மிட்டான்
வீக்கினான் றூணி வீரப்
பொன்மின்கொள் கோதை கையிற்
பூட்டினான் பொறுத்தான் போர்வில்
என்மின்கொள் வயிரத்திண்டே
ரேறினா னெறிந்தா னாணி.

'நின்மின்கள்; நின்மின்!' என்னா,
நெருப்பு எழ விழித்து, நீண்ட
மின்மின்கொள் கவசம் இட்டான்;
வீக்கினான், தூணி; வீரப்
பொன் மின்கொள் கோதை கையில்
பூட்டினான்; பொறுத்தான், போர்வில்;
எல் மின்கொள் வயிரத் திண்தேர்
ஏறினான்; எறிந்தான் நாணி;

பொ:- (இவ்விடத்தைவிட்டு, அகலமாட்டோ மென்பீராயின்) 'நில்லுங்கள், நில்லுங்கள்' என்று சொல்லி, அனற்பொறிதோன்ற

வெகுண்டு விழித்து, மின்னலை யொத்த ஒளியினைக் கொண்ட கவசத்தை(த் தனது உடம்பில்) அணிந்துகொண்டான்; அம்பறாத் தூணியை(த் தோளிற்) கட்டினான்; வீரத்திற்கு அறிகுறியான பொன்னாலியன்ற ஒளியினைக் கொண்ட விரல் உறையினைக் கைவிரலிற் செறித்தான்; போர்த் தொழிற்குரிய வில்லினைக் (கையில்) தாங்கினான்; கதிரவனை யொத்து ஒளிவிடுகின்ற திண்ணிய வயிரத் தேரில் ஏறினான்; வில்லின் நாணைத் தெறித்து ஒலி செய்தான் (இந்திரசித்து).

கு:- மின்—ஒளி. கோதை என்பது அம்பு எய்தற்பொருட்டு விரல்களிற் செறித்துக் கொள்ளப்படும் விரலுறை. எல்—சூரியன். (86)

**9155** ஊதினான் சங்கம் வானத்
தொண்டொடி மகளி ரொண்கண்
மோதினார் கணத்தின் முன்னே
முழுவது முருங்க முற்றிக்
காதினா னென்ன வானோர்
கலங்கினார் கயிலை யானும்
போதினான் றானு மின்று
புகுந்தது பெரும்போ ரென்றார்.

ஊதினான் சங்கம்; வானத்து
ஒண்தொடி மகளிர் ஒண்கண்
மோதினார்; 'கணத்தின் முன்னே
முழுவதும் முருங்க முற்றக்
காதினான்' என்ன, வானோர்
கலங்கினார்; கயிலை யானும்,
போதினான்தானும், 'இன்று
புகுந்தது பெரும்போர்' என்றார்.

பொ:- (பின்) சங்கத்தை (வாயில்வைத்து) ஊதினான். அ(ந்நிலையில்) வானத்திலுள்ள ஒளிபொருந்திய வளையலையணிந்த தேவமங்கையர்கள் (அஞ்சி ஆற்றாதவராய்க்) கண்களில் மோதிக்கொண்டார்கள். (இவ் இந்திரசித்து) கணப்பொழுதிற் குள்ளே (சேனை) முழுவதையும் பொன்ற வளைத்துக் கொன்றானவன்' என எண்ணித் தேவர்கள் கலக்க முற்றார்கள். கயிலாய மலையில் வீற்றிருக்கும் சிவபெருமானும் தாமரை மலரில் உறையும் பிரமனும் 'இன்று பெரியதொரு போர் உண்டாயிற்று' எனக் கூறினார்கள்.

கு:- பொறுக்க வொண்ணாத பெருந் துன்பத்தைக் கண்டு அஞ்சிய மகளிர்கள் தம் கண்களிலும் முகத்திலும் மோதிக்கொண்டு வருந்துதல் இயல்பு. முருங்குதல்—அழிதல். காதுதல்—கொல்லுதல். கயிலையான்—சிவபெருமான். போதினன்—பிரமன். 'இன்று பெரும் போர் புகுந்தது' என்றார் என்க. (87)

## பின் விளைவு எண்ணித் தேவர்கள் வாட்டமுறுதல்

**9156** இழைத்தபேர் யாகந் தானே
யாஞ்செய்த தவத்தி னாலே
பிழைத்தது பிழைத்த வேனும்
வானரம் பிழைக்க லாற்றா
அழைத்தது விதியே கொல்லென்
றஞ்சினா ரம்பி னோடும்
உழைத்தது காண்கின் றோமென்
றுணங்கினா ரும்ப ருள்ளார்.

'இழைத்த பேர் யாகம்தானே
யாம் செய்த தவத்தினாலே
பிழைத்தது; பிழைத்த தேனும்,
வானரம் பிழைக்கல் ஆற்றா;
அழைத்தது விதியேகொல் என்று
அஞ்சினார்; அம்பினாலே
உழைத்தது காண்கின்றோம்' என்று,
உணங்கினார், உம்பர் உள்ளார்.

பொ:- ('இந்திரசித்து) செய்யத் தொடங்கிய யாகமானது நாம் (முன்பு) செய்த தவத்தின் காரணமாக (நிறைவேறாமல்) தவறி விட்டது. யாகம் தவறினாலும் (இப்போரில்) குரங்குகள் இனிப் பிழைத்திருக்க மாட்டா; (இங்கு) அழைத்து வந்தது (தீவினையாகிய) விதியே யாகும் என்று அஞ்சியவர்களாகி அம்பினோடும் (குரங்குகள்) வருந்துவதனைக் காணப்போகின்றோம்' என்று தேவர்களாக உள்ள வர்கள் வாட்டமுற்று வருந்தினார்கள்.

கு:- இழைத்தல்—இயற்றுதல். பிழைத்தல்—முற்றுப்பெறாது தப்புதல். 'பிழைக்க லாற்றா' என்புழிப் பிழைத்தல் என்பது இறவாது

உய்தல் என்னும் பொருளில் வந்தது. உழைத்தல்—வருந்துதல். 'இழைத்தபேர் யாகம்தானே…காண்கின்றோம்' என்பது உம்பர்கள் உட்கோள். உம்பரெல்லாம் உணங்கினர் என்க. உணங்குதல்—வாட்ட முற்று வருந்துதல். (88)

## குரங்குகள், இந்திரசித்தின் நாணொலி கேட்டு நிலை குலைந்தோடுதலும் அனுமன் மலையினைப் பறித்து எதிர்த்தலும்

**9157** நாண்டொழி லோசை வீசிச்
செவிதொறு நடத்த லோடும்
ஆண்டொழில் மறந்து கையி
னடுக்கிய மரனுங் கல்லும்
மீண்டன மறிந்து சோர
விழுந்தன விழுந்த மெய்யே
மாண்டன மென்றே யுன்னி
யிரிந்தன குரங்கின் மாலை.

நாண்தொழில் ஓசை வீசிச்
செவிதொறும் நடத்தலோடும்,
ஆண் தொழில் மறந்து, கையின்
அடுக்கிய மரனும் கல்லும்
மீண்டன மறிந்து சோர
விழுந்தன; விழுந்த, 'மெய்யே
மாண்டனம்' என்றே உன்னி,
இரிந்தன, குரங்கின் மாலை.

பொ:- (இந்திரசித்து) வில்லின் நாணைத் தெறித்தலாகிய தொழிலினாலே (தோன்றிய) ஓசையானது பரவி (தம்முடைய) செவிகள் தோறும் சென்று சேர்ந்த அளவில், (அங்கு உள்ள) குரங்குகளின் (சேனையாகிய) வரிசைகள் (தமது) ஆண்மைத் தொழிலை மறந்தனவாய்க் கையில் அடுக்காகக் கொண்டுள்ள மரமும் மலையும் (பகைவர்மேல் எறியப்படாமல்) மடங்கிச் சோர்ந்து வீழ(த் தரையில்) வீழ்ந்தன. அவ்வாறு விழுந்த வானரங்கள் 'நிச்சயமாக இறந்தோம்' என்றே எண்ணி நிலை கெட்டு ஓடின.

கு:- நாண்தொழில் ஓசை வீசிச் செவிதொறும் நடத்தலோடும் குரங்கின்மாலை, ஆண்தொழில் மறந்து, கையின் அடுக்கிய மரனும் கல்லும் மறிந்து சோர விழுந்தன எனவும், அங்ஙனம் விழுந்தவை, 'மெய்யே மாண்டனம்' என்றே உன்னி இரிந்தன எனவும் இரு தொடராக இயைத்.துரைக்க. மாலை—வரிசை; வானர சேனையின் அணி. விழுந்த—விழுந்தவை; வினையாலணையும் பெயர். மெய்யே—உண்மையாகவே; நிச்சயமாகவே. மாள்வோம் எதிர்காலத்திற் கூறற்பாலது. தேற்றம் பற்றி மாண்டனம் என இறந்த காலத்தாற் கூறப்பட்டது. (89)

**9158** படைப்பெருந் தலைவர் நின்று
ரல்லவ ரிறுதி பற்றும்
அடைப்பருங் காலக் காற்று
லாற்றல தாகிக் கீறிப்
புடைத்திரிந் தோடும் வேலைப்
புனலென விரியலுற்றார்
கிடைத்தபோ ரனும ஞண்டோர்
நெடுங்கிரி கிழித்துக் கொண்டான்.

படைப் பெருந்தலைவர் நின்றார்;
அல்லவர், இறுதி பற்றும்
அடைப்ப அருங்காலக் காற்றால்
ஆற்றலது ஆகிக் கீறிப்
புடை, திரிந்து ஓடும் வேலைப்
புனல் என, இரியலுற்றார்;
கிடைத்த போர் அனுமன் ஆண்டு, ஓர்
நெடுங்கிரி கிழித்துக் கொண்டான்.

பொ:- (வானர சேனையிற்) பெரிய படைத்தலைவராக உள்ளவர்கள் (அஞ்சாது) நின்றனர்; அவர்களல்லாத ஏனையோர், அழிவினைத் தரும் தடுக்கவொண்ணாத ஊழிக்காலத்துப் பெருங்காற்றால் தாங்கவொண்ணாததாகிப் பிளக்கப்பட்டுப் பிதிர்ந்து பக்கங்களில் மோதி அலைவுற்று வழிந்து ஓடும் கடல்நீரைப் போன்று நிலைகெட்டு ஓடுவாராயினர். (இந்திரசித்தை) எதிர்ப்பட்டு நின்ற போர்த் தொழிலில் வல்ல அனுமன் அவ்விடத் துள்ளதொரு பெரிய மலையினைப் (பூமியினின்றும்) பெயர்த்து எடுத்துக்கொண்டான்.

கு:- படைப்பெருந் தலைவர்—பெரும்படைத் தலைவர்; சேனுபதிகள். அல்லவர்—அவர்கள் அல்லாத ஏனைய வானர வீரர்கள். இறுதி பற்றும் காலக்காற்று, அடைப்ப அருங் காலக்காற்று எனத் தனித்தனி இயையும். இறுதி பற்றுதல்—அழிவினை யுண்டாக்குதல். அடைதல்—தடுத்து நிறுத்தல். காலக்காற்று—ஊழி முடிவிற்றேன்றும் பெருங் காற்று. ஆற்றலது—ஆற்ருதது; பொறுக்க வொண்ணுதது. ஆற்று; ப குதி. ஆற்றுதல்—பொறுத்தல். அல்—எதிர்மறை இடைநிலை. கீறுதல்—பிளவு பட்டுச் சிதறுதல். கிடைத்தல்—எதிர்ப்படுதல் கிழித்துக் கொள்ளுதல்—பறித்து எடுத்துக் கொள்ளுதல். (90)

இந்திரசித்து வீரவுரை பகர்ந்து அனுமனுடன் பொருதல்

**9159** நில்லடா நில்லு நில்லு
நீயடா வாசி பேசிக்
கல்லெடா நின்ற தென்னைப்
போர்க்களத் தமரர் காணக்
கொல்லலா மென்றே நன்று
குரங்கென்ருற் கூடு மன்றே
நல்லைபோர் வாவா வென்ரு
னமனுக்கு நமனுய் நின்ருன்.

*'நில், அடா! நில்லு நில்லு!*
*நீ, அடா! வாசி பேசிக்*
*கல் எடா நின்றது, என்னைப்*
*போர்க்களத்து, அமரர் காண,*
*கொல்லலாம் என்றே? நன்று;*
*குரங்கு என்ருல் கூடும் அன்றே?*
*நல்லை; போர், வாவா' என்ருன்-*
*நமனுக்கு நமனுய் நின்ருன்.*

பொ:- (எதிர்ப்பட்டாருயிரைக் கவருந் திறத்தில்) கூற்றுவனுக்கும் கூற்றுவனுக மேம்பட்டு நின்ற இந்திரசித்து, அனுமனை நோக்கி) 'அடா! நில்லு, நில்லு! அடா! நீ வேறுபட்ட மொழிகளைப் பேசிக் கொண்டு கல்லினைப் பெயர்த்து எடுப்பது, என்னைத் தேவர்கள் காணப் போர்க்களத்தில் கொல்லலாம் என்று எண்ணியோ? (நின் செயல்) நன்ருயிருக்கிறது. குரங்கு என்பதனல் நினக்கு இச்செயல்

பொருத்தமானதே. நல்ல ஆண்மையை யுடையாய்! (என்னுடன் பொருதற்கு) வருக வருக' எனக் கூறினான்.

கு:- நமனுக்கும் நமனாய் நின்றான், 'நில்லடா நில்லு நில்லு... நல்லை போர் வாவா' என்றான் என முடியும். ஏடா என்னும் முன்னிலைப் பெயர் அடா எனத் திரிந்து நின்றது. 'நில் நில்லு நில்லு' என மும்முறை அடுக்கி வந்தது, விரைவு பற்றிய சொல்லடுக்கு. 'விரைசொல்லடுக்கே மூன்று வரம்பாகும்' (எச்ச வியல்-28) என்பது தொல்காப்பிய விதியாகும். (91)

9160 வில்லெடுத் துருத்து நின்ற
வீரருள் வீர னேரே
கல்லெடுத் தெறிய வந்த
வனுமனைக் கண்ணி னோக்கி
மல்லெடுத் துயர்ந்த தோளாற்
கென்கொலோ வலிய தென்னாச்
சொல்லெடுத் தமரர் சொன்னார்
தாதையுந் துணுக்க முற்றான்.

வில் எடுத்து உருத்து நின்ற
வீரருள் வீரன் நேரே,
கல் எடுத்து, எறிய வந்த
அனுமனைக் கண்ணின் நோக்கி,
'மல் எடுத்து உயர்ந்த தோளாற்கு
என்கொலோ வலியது?' என்னா
சொல் எடுத்து, அமரர் சொன்னார்;
தாதையும் துணுக்கம் உற்றான்.

பொ:- வில்லினை ஏந்தி வெகுண்டு நின்ற வீரர்க்கெல்லாம் வீரனாகிய இந்திரசித்துக்கு எதிரே, மலையினைப் பெயர்த்தெடுத்து எறியவந்த அனுமனைக் கண்களால் உற்று நோக்கி, 'மல்தொழில் திறத்தால் மேம்பட்டு உயர்ச்சியுற்ற தோள்களையுடைய இவ் அனுமனுக்கு அமைந்த வன்மை எத்தகையதோ?' என்று, (அவனது) புகழைத் தேவர்கள் உயர்த்துக் கூறிப் புகழ்ந்தார்கள். (அனுமனுக்குத்) தந்தையாகிய வாயுதேவனும் (இவனுக்கு என்ன நேருமோ என) மன நடுக்கமுற்றான்.

கு:- அமரர், வில் எடுத்து உருத்து நின்ற வீரருள் வீரன் நேரே கல்லெடுத்து எறிய நின்ற அனுமனைக் கண்ணின் நோக்கி, 'மல் எடுத்து உயர்ந்த தோளாற்கு வலியது என்கொலோ' என்று சொல் எடுத்துச் சொன்னார் என முடியும். வீரருள் வீரன் என்றது இந்திரசித்தினை. மல்—மற்றொழில். மல் எடுத்துயர்ந்த தோளான் என்றது அனுமனை. வலியது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. தாதை என்றது அனுமனுக்குத் தந்தையாகிய வாயு தேவனை. (92)

**9161** வீசினன் வயிரக் குன்றம்
வெம்பொறிக் குலங்கள் விண்ணின்
ஆசையி னிமிர்ந்து செல்ல
வாயிர முருமொன் றாகப்
பூசின பிழம்பி தென்ன
வருமதன் புரிவை நோக்கிக்
கூசின வுலக மெல்லாங்
குலைந்ததவ் வரக்கர் கூட்டம்

வீசினன் வயிரக் குன்றம்,
வெம்பொறிக் குலங்கள் விண்ணின்
ஆசையின் நிமிர்ந்து செல்ல,
'ஆயிரம் உரும் ஒன்றாகப்
பூசின பிழம்புஇது' என்ன,
வரும் அதன் புரிவை நோக்கி,
கூசின, உலகம் எல்லாம்;
குலைந்தது அவ் அரக்கர் கூட்டம்.

பொ:— (அனுமன்) வானத்திலும் திசைகளிலும் வெம்மையுடைய தீப் பொறித் திரள்கள் உயர்ந்து செல்லுமாறு திண்ணிய மலையினை (அரக்கரது படையின்மேல்) வீசியெறிந்தான். ஆயிரம் இடிகள் ஒரே உருவமாக இயைந்து கூடிய வடிவம் இதுவென்று சொல்லுமாறு வருகின்ற அந்த மலையின் செயலை நோக்கி உலகமெல்லாம் அஞ்சின. அவ் அரக்கர் கூட்டம் நிலைகுலைந்தது.

கு:- விண்ணின், ஆசையின் வெம்பொறிக் குலங்கள் நிமிர்ந்து செல்ல வயிரக் குன்றம் வீசினன் (அனுமன்); ஆயிரம் உரும் ஒன்றாகப் பூசின பிழம்பு இது என்ன வரும் அதன் புரிவை நோக்கி உலக மெல்லாம் கூசின; அவ் அரக்கர் கூட்டம் குலைந்தது என இயைத்துரைக்க.

ஆசை—திசை. உரும்—இடி. பூசுதல்—இயைதல். புரிவு—செயல். கூசுதல்—அஞ்சுதல். (93)

**9162** குண்டல நெடுவில் வீச
மேருவிற் குவிந்த தோளான்
அண்டமுங் குலுங்க வார்த்து
மாருதி யசனி யஞ்ச
விண்டலத் தெறிந்த குன்றம்
வெறுந்துக ளாகி வீழக்
கண்டன னெய்த தன்மை
கண்டில ரிமைப்பில் கண்ணுர்.

குண்டலம் நெடுவில் வீச,
மேருவின் குவிந்த தோளான்,
அண்டமும் குலுங்க ஆர்த்து,
மாருதி, அசனி அஞ்ச,
விண்தலத்து எறிந்த குன்றம்
வெறுந் துகள் ஆகி வீழக்
கண்டனன்; எய்த தன்மை
கண்டிலர், இமைப்புஇல் கண்ணுர்.

பொ:- (காதி லணியப்பட்ட) குண்டலம் பேரொளியினைப் பரப்ப மேரு மலையினை யொத்துத் திரண்டுயர்ந்த தோள்களை யுடையனுய இந்திரசித்து, அண்டமும் குலுங்கி நடுங்கும்படி ஆரவாரித்து, விண்ணிடத்தே, இடியும் அஞ்சும்படி அனுமன் வீசியெறிந்த மலை யானது வெறுந்துகள்களாகிச் சிதர்ந்து விழும்படி செய்தான். இமைத்தல் இல்லாத கண்களையுடைய தேவர்களும் (இந்திரசித்து அம்பு) எய்த தன்மையினைக் காணப் பெற்றிலர்.

கு:- மாருதி வீசியெறிந்த மலையினை இந்திரசித்து நொடிப்பொழு திற்குள் அம்பினுற் பொடியாக்கினுன். இமையாக் கண்ணராகிய தேவர்களும் அவன் அம்பு எய்த தன்மையினைக் காணப்பெற்றிலர் என அவனது விற்ருெழில் வன்மையினை வியந்துரைத்தவாறு. கண்டனன்—செய்தான். காணுதல்—செய்தல். (94)

## இந்திரசித்து ஏவிய அம்புகளால் அனுமன் அயர்தல்

**9163** மாறொரு குன்றம் வாங்கி
மறுகுவான் மார்பிற் றோளிற்
காறரு காலிற் கையிற்
கழுத்தினி னுதலிற் கண்ணில்
ஏறின வென்ப மன்னோ
வெரிமுகக் கடவுள் வெம்மை
சீறின பகழி மாரி
தீக்கடு விடத்திற் றோய்ந்த.

மாறு ஒரு குன்றம் வாங்கி
மறுகுவான் மார்பில், தோளில்,
கால்தரு காலில், கையில்,
கழுத்தினில், நுதலில், கண்ணில்,
ஏறின என்ப மன்னோ-
எரிமுகக் கடவுள் வெம்மை
சீறின பகழிமாரி,
தீக்கடு விடத்தின் தோய்ந்த.

பொ:- வேறொரு மலையினைப் பெயர்த்தெடுத்துச் சுழன்று திரிபவனாகிய அனுமானது மார்பிலும் தோள்களிலும் காற்றினை யொத்த வன்மையையுடைய கால்களிலும் கழுத்திலும் நெற்றியிலும் கண்களிலும் தீய கொடிய நஞ்சில் தோய்க்கப்பட்டனவும் எரிமுகக் கடவுளாகிய அக்கினி தேவனது வெம்மையைச் சினந்து கீழ்ப்படுத்தனவுமாகிய (இந்திரசித்தின்) அம்பு மழைகள் ஊன்றித் தைத்தன.

கு:- தீக்கடுவிடத்தில் தோய்ந்த பகழி, எரிமுகக்கடவுள் வெம்மை சீறிய பகழி எனத் தனித்தனி இயையும். எரிமுகக் கடவுள்—அக்கினியாகிய தெய்வம், சீறுதல்—மேற்பட்டு அடக்குதல். என்ப, மன், ஓ என்பன அசை. (95)

**9164** வெதிரொத்த சிகரக் குன்றின்
மருங்குற விளங்க லாலும்
எதிரொத்த விருளைக் கீறி
யெழுகின்ற வியற்கை யாலும்

கதிரொத்த பகழிக்கற்றை
கதிரொளி காட்ட லாலும்
உதிரத்தின் செம்மையாலு
முதிக்கின்ற கதிரோ னொத்தான்.

வெதிர் ஒத்த சிகரக் குன்றின்
மருங்கு உற விளங்கலாலும்,
எதிர் ஒத்த இருளைக் கீறி
எழுகின்ற இயற்கையாலும்,
கதிர் ஒத்த பகழிக் கற்றை
கதிர் ஒளி காட்ட லாலும்,
உதிரத்தின் செம்மை யாலும்,
உதிக்கின்ற கதிரோன் ஒத்தான்.

பொ:- மூங்கில் ஒத்து வளர்ந்த சிகரத்துடன் கூடிய மலையின் அருகே விளங்குதலாலும், எதிர்ப்பட்டுப் பொருந்திய இருளை அழித்து மேற்பட்டு விளங்கும் (தன் உடம்பின்) இயற்கையொளியினாலும், ஞாயிற்றின் ஒளித்தொகுதியினை யொத்த அம்பின் தொகுதி மிக்க ஒளியினைத் தோற்றுவித்தலாலும் (உடம்பினின்று வழியும்) இரத்தத்தின் செம்மையாலும் (அனுமன்) உதய மலையில் தோன்றுகின்ற சூரியனை ஒத்துக் காணப்பட்டான்.

கு:- இந்திரசித்தினால் எய்யப்பட்ட அம்புகள் தன் உடல் முழுதும் தைக்கப்பெற்றுச் செந்நிற ஒளியினை யுடையனாகி மலையின் பக்கத்தே தோன்றிய அனுமனுக்கு உதய மலையில் தோன்றிய சிவந்த சூரியனை உவமை கூறினார் ஆசிரியர். மலையருகே தோன்றுதல், இருளைப் போக்குதல் ஒளிக்கற்றைகளை யுடைமை, செந்நிற முடைமை ஆகிய இவை, காலைக் கதிரவனுக்கும் அனுமனுக்கும் இடையே யமைந்த பொதுத் தன்மைகள். இச் செய்யுள் ஏதுத்தற்குறிப்பேற்றம் என்னும் அணியின்பாற்படும். (96)

எதிர்த்துப் போர் செய்ய வந்த அங்கதன் முதலியோரை நோக்கிய இந்திரசித்து, இலக்குவன் எங்குள்ளான் என வினவுதல்.

9165 ஆயவ னயர்த லோடு
மங்கதன் முதல்வ ரானோர்
காய்சினந் திருகி வந்து
கலந்துளார் தம்மைக் காணா

நீயிர்க ணின்மி னின்மி
னிருமுறை நெடிய வானிற்
போயவ னெங்கே நின்ரு
னென்றனன் பொருட்செ யாதான்.

ஆயவன் அயர்தலோடும்,
அங்கதன் முதல்வர் ஆனோர்,
காய்சினம் திருகி, வந்து
கலந்துளார் தம்மைக் காணு,
'நீயிர்கள் நின்மின் நின்மின்,
இருமுறை நெடிய வானில்
போயவன் எங்கே நின்ருன்?'
என்றனன், பொருள் செயாதான்.

பொ:- அவ் அனுமன் தளர்ந்து சோர்வுற்ற நிலையில். அங்கதன் முதலாக வுள்ள வானர சேனைத் தலைவர்கள், சுட்டு வெதுப்புந் தன்மை யதாகிய வெகுளியால் மாறுபட்டு வந்து கூடியவர்களாகிய அவர்களைக் கண்ணுற்று, 'நீங்கள் (என்னுடன் பொருதற்கு முந்துதலைவிட்டு) நில்லுங்கள் நில்லுங்கள். (என்னை எதிர்த்து நின்று பொருது) இரண்டு தடவை நெடிய விசும்பாகிய துறக்கத்தை யடைந்தவனுகிய இலக்குவன் எங்கே யுள்ளான்? என வினவினன் (அவ் வானரர்களைப்) பொருட்படுத்தி மதியாதவனுகிய இந்திரசித்து.

கு:- ஆயவன்—அத்தன்மையனுகிய அனுமன். அயர்தல்-தளர்ந்து சோர்தல். நெடிய வானிற் போதல் என்றது, போரில் உயிர்துறந்து விண்ணுலகடைதலை. தன்னெடு எதிர்த்து நின்ற இலக்குவன், தான் ஏவிய நாகபாசத்தால் ஒருமுறையும், பிரமாத்திரத்தால் ஒருமுறையும் ஆக இரண்டுமுறை உடம்பினை விட்டு உயிர் பிரியும் இறுதிநிலை யடைந்த எளிமைத் தன்மையன் என்பது புலப்படுத்தும் நிலையில் 'இரு முறை நெடிய வானிற் போயவன்' எனக் குறித்தான் இந்திரசித்து. பொருள் செயாதான் என்றது, அங்கதன் முதலிய வானரத் தலைவர் களைத் தன்னேடு ஒத்தவர்கள் என்று மதியாத இந்திரசித்தினை. (97)

9166 வெம்பினர் பின்னும் மேன்மேற்
சேறலும் வெகுண்டு சீயம்
தும்பியைத் தொடர்வ தல்லாற்
குரங்கினைத் தொடர்வ தூண்டோ

அம்பினை மாட்டி யென்னே
சிறிதுபோ ராற்ற வல்லான்
தம்பியைக் காட்டித் தாரீர்
சாதிரோ சலத்தி னென்றான்.

வெம்பினர் பின்னும் மேன்மேற்
சேறலும் வெகுண்டு, 'சீயம்
தும்பியைத் தொடர்வது அல்லால்,
குரங்கினைத் தொடர்வது உண்டோ?
அம்பினை மாட்டி, என்னே?
சிறிது போர் ஆற்ற வல்லான்
தம்பியைக் காட்டித் தாரீர்;
சாதிரோ, சலத்தின்?' என்றான்.

பொ:- (அம்மொழியினைக் கேட்டு) வெகுண்டோராகிய அங்கதன் முதலியோர் இந்திரசித்தினை மேலும் மேலும் நெருங்கிப் பொருதற்குச் சென்ற பொழுது (அவ் இந்திரசித்து) சினந்து சிங்கமானது யானையைத் தொடர்வதன்றிக் குரங்கினைத் தொடர்ந்து பொருவதுண்டோ? (நும்மீது) அம்பினைச் செலுத்தி யாது பயன்? (என்னொடு) சிறிது பொழுது போர் செய்ய வல்லவனாகிய இராமனது தம்பியை (எனக்கு)க் காட்டித் தாராதீராகி வெகுளியால் வீணே இறந்தொழிவீரோ? என்று கூறினான் (இந்திரசித்து).

கு:- சிங்கத்தினை யொத்த பெருவன்மை படைத்த யான் யானையினை யொத்த வன்மையுடைய இலக்குவனொடு பொருவதன்றிக் குரங்கினத்தவராகிய நும்மொடு போர் செய்யேன் என்பான், "சீயம் தும்பியைத் தொடர்வதல்லாற் குரங்கினைத் தொடர்வதுண்டோ?' என்றான் இந்திரசித்து. சீயம்—சிங்கம். தும்பி—யானை. சிறிது போர் ஆற்றவல்லான் என்றது, இராமனை. தம்பி என்றது இலக்குவனை. சலத்தின் சாதிரோ என இயையும். சலம்—வெகுளி.

**9167** அனுமனைக் கண்டி லீரோ
வவனினும் வலியி ரோவென்
தனுவுள தன்றோ தோளி
னவ்வலி தவிர்ந்த துண்டோ
இனமுனை தீர்கி லீரோ
வெவ்வலி யீட்டி வந்தீர்
மனிதனைக் காட்டி நுந்த
மலைதொறும் வழிக்கொ ளீரே.

'அனுமனைக் கண்டி லீரோ?
அவனினும் வலியிரோ? என்
தனு உளதன்றே? தோளின்
அவ் வலி தவிர்ந்தது உண்டோ!
இனம் முனை தீர்கிலீரோ?
எவ் வலி ஈட்டி வந்தீர்?
மனிதனைக் காட்டி, நும்தம்
மலைதொறும் வழிக் கொளீரே.'

பொ:- (என்னுடைய அம்பு பட்டு அயர்ச்சியுற்ற) அனுமனைக் கண்டீர் அல்லீரோ? அவ் அனுமனைக் காட்டிலும் (மிக்க) வலிமையுடையீரோ? (எனது) வில்லானது (அழிவின்றி) உள்ளதன்றே? (என்) தோள்களின் அத்தகைய வன்மை குறைந்து போயிற்றே? இன்னமும் போர்க்களத்தைவிட்டு நீங்க கில்லீரோ? எத்தகைய வன்மையினை(ப் புதுவதாக)ச் சம்பாதித்து வந்துள்ளீர்கள்? (இராம இலக்குவராகிய) மனிதர்களை (என் முன்) காட்டிவிட்டு நுமக்குரிய மலைதோறும் (வந்த) வழியே திரும்பிச் செல்வீராக.

கு:- யான் எய்த அம்புகள் தைத்து ஊன்றினமையால் சோர்வுற்ற அனுமனது துயரத்தை நீவிர் நேரே கண்ட பின்னரும் வலியற்ற நீவிர் என்னை எதிர்த்துப் பொருதற்கு முந்துதல் நுமக்குத் தீராத் துயர் விளைப்பதாகும் என்பான், 'அனுமனைக் கண்டிலீரோ அவனினும் வலியீரோ' என வினவினன். தனு—வில். தவிர்தல்—நீங்குதல். முனை—போர்க்களம். தீர்தல்—விட்டு நீங்குதல். 'இனு முனை நீரலீரோ' எனப் பாடங்கொண்டு, 'இன்னும் போர்முனையில் முன்னே வந்த நீங்களே அல்லீரோ' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். மனிதர் என்றது இலக்குவரை. வழிக்கொள்ளுதல்—வந்த வழியே திரும்புதல். (99)

## இலக்குவன் மேற்சென்ற இந்திரசித்தினை எதிர்த்து வானரர் வலியழிதல்

9168 என்றுரைத் திளவ றன்மே
லெழுகின்ற வியற்கை நோக்கிக்
குன்றமு மரமும் வீசிக்
குறுகினர் குழாங்க டோறும்

சென்றன பகழி மாரி
 மேருவை யுருவித் தீர்வ
ஒன்றல கோடி கோடி
 நுழைந்தன வலியு மோய்ந்தார்.

என்று உரைத்து இளவல் தன்மேல்
 எழுகின்ற இயற்கை நோக்கி,
குன்றமும் மரமும் வீசிக்
 குறுகினார்; குழாங்கள் தோறும்
சென்றன பகழி மாரி,
 மேருவை உருவித் தீர்வ,
ஒன்று அல, கோடி கோடி
 நுழைந்தன; வலியும் ஒய்ந்தார்.

பொ:- என்று இவ்வாறு கூறி இளையோனாகிய இலக்குவன் மீது (இந்திரசித்து, போருக்கு) எழுகின்ற தன்மையை நோக்கி (வானர வீரர்கள்) மலைகளையும் மரங்களையும் வீசி (அவனை) நெருங்கினார்கள். (இந்திரசித்தினால் எய்யப்பட்டு) மேருமலையினையும் ஊடுருவிப் பிளப்பனவாகிய அம்புமழை ஒன்று அல்ல, கோடி கோடி என்னும் பேர் எண்ணினவளாக (வானரக்) கூட்டங்கள் தோறும் (சென்று) நுழைந்தன. (அவற்றால், வானர வீரர்கள்) தம் வலிமையினையும் இழந்தனர்.

கு:- மேருவை உருவித் தீர்வ பகழி மாரி ஒன்று அல கோடி கோடி குழாங்கள் தோறும் நுழைந்தன; (வானரர்) வலியும் ஒய்ந்தார் என்க. ஒய்தல்—தளர்தல்; ஈண்டு இழத்தல் என்னும் பொருளது. (100)

வீடணன், 'விரைந்தெழுக' என்றவாறு இலக்குவன்
இந்திரசித்தின்மேல் போருக்கு முந்துதல்

9169 படுகின்ற தன்றோ மற்றுன்
 பெரும்படை பகழி மாரி
விடுகின்ற தன்றோ வெற்றி
 யரக்கனுங் காள மேகம்

இடுகின்ற வேள்வி மாண்ட
தினியவன் பிழைப்பு ருமே
முடுகென்று னரக்கன் றம்பி
நம்பியுஞ் சென்று மூண்டான்.

'படுகின்றது அன்றோ, மற்று உன்
பெரும் படை? பகழி மாரி
விடுகின்றது அன்றோ, வென்றி
அரக்கனும் காள மேகம்?
இடுகின்ற வேள்வி மாண்டது;
இனி, அவன் பிழைப்புறுமே
முடுகு' என்றான், அரக்கன் தம்பி;
நம்பியும் சென்று மூண்டான்.

பொ:- (அப்பொழுது) இராவணனுக்குத் தம்பியாகிய வீடணன் (இலக்குவனை) நோக்கி, 'வெற்றித்திறன் வாய்ந்த அரக்கனாகிய காளமேகம் அம்பு மழையினை ஓயாது சொரிகின்றது. (அவற்றால்) உனது பெருஞ்சேனை இறந்தொழிகின்றதே. (ஓமப் பொருளை) இடுதற்குரிய (இந்திரசித்தின்) யாகம் அழிந்தொழிந்தது. இனி அவன் உயிர் பிழைத்துப் போகாதபடி விரைவாயாக' எனக் கூறினான். ஆடவரிற் சிறந்தோனாகிய இலக்குவனும் (இந்திரசித்தின் அருகே) சென்று (போர்த் தொழிலில்) முற்பட்டெழுந்தான்.

கு:- அரக்கன் என்றது, இராவணனை. தம்பி-அவன் தம்பி யாகிய வீடணன். அவன் என்றது, இந்திரசித்தினை. பிழைத்தல்—உயிர்தப்புதல். முடுகுதல்—விரைதல். நம்பி என்றது இலக்குவனை.

9170


வந்தானெடுந் தகைமாருதி
மயங்காமுக மலர்ந்தான்
எந்தாய்கடி தேறுயென
திருதோண்மிசை யென்றான்
அந்தாகவென் றுவந்தையனு
மமைவாயின னிமையோர்
சிந்தாகுலந் துறந்தாரவன்
நெடுஞ்சாரிகை திரிந்தான்.

வந்தான் நெடுந்தகை மாருதி,
மயங்கா முகம் மலர்ந்தான்,
'எந்தாய்! கடிது ஏறாய். எனது
இருதோள்மிசை' என்றான்;
'அந்தாக' என்று உவந்து, ஐயனும்
அமைவு ஆயினன்' இமையோர்
சிந்தாகுலம் துறந்தார்; அவன்
நெடுஞ் சாரிகை திரிந்தான்.

பொ:- பெருமைக் குணமுடையோனாகிய அனுமன் மயக்க முறாது முகம் மலர்ந்து வந்து, (இலக்குவனை நோக்கி) 'எந்தையே' என்னுடைய இரண்டு தோள்களின் மேலும் விரைந்து ஏறுவாயாக! என வேண்டிக்கொண்டான். தலைவனாகிய இலக்குவனும் 'அப்படியே யாகுக' என்று உளம் உவந்து அதற்கு இசைந்தனன். (அது கண்டு ' தேவர்கள் மனமயக்கத்தை விட்டொழிந்தனர். அவ் அனுமன் (அப் போர்க்களத்தில் இலக்குவனைச் சுமந்துகொண்டு) நெடிது வட்டமாக ஓடித் திரிந்தனன்.

கு:- நெடுந்தகை—பெருமைக் குணமுடையோன். நெடுந்தகை யாகிய மாருதி என இரு பெபரொட்டாய் நின்றது. மாருதி, மயங்கா, முகம் மலர்ந்தான், வந்தான், 'எந்தாய்! எனது இருதோள்மிசை கடிது ஏறாய்' என்றான்; ஐயனும் 'அந்து ஆக' என்று உவந்து அமைவு ஆயினன்; இமையோர் சித்தாகுலம் துறந்தார்; அவன் நெடுஞ்சாரிகை திரிந்தான் என இயையும். தந்தான், மலர்ந்தான் என்பன முற்றெச்சங்கள். மயங்காது எனற்பாலது 'மயங்கா' எனக் கடைக் குறைந்து நின்றது; 'சென்றவிடத்தாற் செலவிடாதீ தொரீஇ' (திருக்குறள்-422) என்புழிப் போல. அந்து—அப்படி. 'அந்து செய்குவனென்று' (கம்ப-யுத்த இராவணன் வதை-61) எனப் பின்னரும் இச்சொல் இப் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். சிந்தாகுலம்—மனமயக்கம். சாரிகை—வட்டமாய் ஓடுதல். (102)

இந்திரசித்தும் இலக்குவனும் பெரும்போர் புரிதல்

9171 காராயிர முடனாகிய
வெனலாகிய கரியோன்
ஓராயிரம் பரிபூண்டதோ
ருயர்தேர்மிசை யுயர்ந்தான்

நேராயின ரிருவோர்களு
நெடுமாருதி நிமிரும்
பேராயிர முடையானெனத்
திசையெங்கணும் பெயர்ந்தான்.

'கார் ஆயிரம் உடன் ஆகிய'
எனல் ஆகிய கரியோன்,
ஓர் ஆயிரம் பரிபூண்டது ஓர்
உயர் தேர்மிசை உயர்ந்தான்;
நேர் ஆயினர் இருவோர்களும்;
நெடுமாருதி, நிமிரும்
போர் ஆயிரம் உடையான்என,
திசை எங்கணும் பெயர்ந்தான்.

பொ:- மழை மேகங்கள் ஆயிரம் ஒன்று கூடின என்னும்படி அமைந்த கரிய மேனியனாகிய இந்திரசித்து, ஓர் ஆயிரம் குதிரைகள் பூட்டியதோர் உயர்ந்த தேரின்மேல் உயர்ந்து தோன்றினான். (இந்திரசித்து, இலக்குவன் என்னும்) இருவரும் நேரே எதிர்த்தனர். நெடியோனாகிய அனுமன், (திரிவிக்கிரமனாகி) ஓங்கிய ஆயிரம் திருப்பெயர்களையுடைய இறைவனாகிய திருமாலைப் போன்று திசைகள் எங்கும் திரிந்து சென்றான்.

கு:- கார்—மழைமேகம். கரியோன் என்றது இந்திரசித்தினை. இருவோர்கள் என்றது, இந்திரசித்து இலக்குவன் என்னும் இருவரை. நேராதல்—நேர் நின்று எதிர்த்தல். நிமிர்தல்—உயர்ந்து ஓங்குதல். பேராயிரம் உடையான் ஆயிரந் திருப்பெயர்களையுடைய இறைவன்; என்றது திருமாலை. (103)

தீயொப்பன வுருமொப்பன
வுயிர்வேட்டன திரியும்
பேயொப்பன பசியொப்பன
பிணியொப்பன பிழையா
மாயக்கொடு வினையொப்பன
மனமொப்பன கழுகின்
தாயொப்பன சிலவெங்கணை
துரந்தான்றுயி றுறந்தான்.

தீ ஒப்பன, உரும் ஒப்பன,
உயிர் வேட்டன திரியும்
பேய் ஒப்பன, பசி ஒப்பன,
பிணி ஒப்பன, பிழையா
மாயக் கொடுவினை ஒப்பன;
மனம் ஒப்பன, கழுகின்
தாய் ஒப்பன, சில வெங்கணை
துரந்தான் துயில் துறந்தான்.

பொ:- உறக்கத்தை விட்டொழித்தவனாகிய இலக்குவன், (சுட்டெரித்தலால்) தீயினை ஒப்பனவும், (தாக்கி அழித்தலால்) இடியினை ஒப்பனவும், (மாற்றாரது) உயிரை விரும்பிப் பற்றுவனவும், எங்குந் திரிந்து உடம்பின் நிணத்தினைக் கவர்தலால்) திரிதலை இயல்பாக வுடைய பேயினை ஒப்பனவும், (உடம்பினுள்ளே புலனாகாது இருந்து வருத்துதலால்) பசிநோயை ஒப்பனவும், (உள்ளும் புறம்பும் ஒப்ப நின்று வருத்துதலால்) உடற் பிணியினை ஒப்பனவும்,செய்தாரை நிழல் போல் தொடர்ந்து நுகர்விப்பதில்) தப்பாத சூழ்ச்சிமிக்க தீவினையினை ஒப்பனவும், (விரைந்து பற்றுதலால்) (மனத்தினை ஒப்பனவும் ஊனுணவினையளித்துக் காத்தலால்) கழுகினத்துக்குத் தாயினை ஒப்பனவும் ஆகிய வெப்மை மிக்க அம்புகள் சிலவற்றை (இந்திரசித்தின்மேல்) விரைந்து செலுத்தினான்.

கு:- 'கங்குல் எல்லை காண்பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்' (குகப்படலம்-42) என்றவாறு இரவும் பகலும் தமையனாகிய இராமனைக் காக்கும் கடமையினை மேற்கொண்டு உறக்கத்தினை அறவே விட்டொழித்தவன் இலக்குவன் ஆதலால், அவனைத் 'துயில் துறந்தான்' எனக் குறித்தார் ஆசிரியர். வினைசெய்தாரை நிழல்போல் தொடர்ந்து சென்று அவ்வினைப் பயனைத் தப்பாது நுகர்விக்கும் சூழ்ச்சித்திறத்தில் வல்ல கொடுமை வாய்ந்த ஊழ்வினை என்பது புலப்படுத்துவார், 'தப்பா மாயக்கொடுவினை' என்றார். மாயம்—வஞ்சனை: சூழ்ச்சி. (104)

**9173** அவ்வம்பினை யவ்வம்பினி
னறுத்தானிக லரக்கன்
எவ்வம்பினி யுலகத்துள
வென்னும்படி யெய்தான்
வெவ்வம்பரம் வையந்திசை
மலைவேலைகள் பிறவும்
வவ்வுங்கடை யுகமாமழை
பொழிகின்றது மான.

அவ் அம்பினை அவ் அம்பினின்
அறுத்தான், இகல் அரக்கன்;
'எவ் அம்பு இனி உலகத்து உள?'
என்னும்படி எய்தான்—
வெவ் அம்பரம், வையம், திசை,
மலை, வேலைகள், பிறவும்,
வவ்வும் கடையுக மாமழை
பொழிகின்றது மான.

பொ:—வலிமைமிக்க அரக்கனாகிய இந்திரசித்து, (இலக்குவனால் எய்யப்பட்ட) அந்த அம்புகளை அத்தகைய அம்புகளைக்கொண்டே முறித்துத் தள்ளினான். (கதிரவனது) வெம்மைமிக்க ஆகாயம் நிலவுலகம் எட்டுத் திசைகள் மலைகள் கடல்கள் ஒழிந்த பிற பொருள்கள் ஆகிய எல்லாவற்றையும் (மேல் நின்று) கவிந்துகொண்டு ஊழிக் காலத்துப் பெருமழை பொழிகின்றதனை யொப்ப, 'இனி (உலகத்து இவற்றின் மிக்கனவாக) எத்தகைய அம்புகள் உள்ளன?' எனக் கண்டோர் கூறுமாறு (மிகப் பலவாகிய அம்புகளைத்) தொடுத்துச் சொரிந்தான் (இலக்குவன்).

கு:- இகல் அரக்கன், அறுத்தான்; கடையுக மாமழை பொழிகின்றது மான,'இனி உலகத்து எவ் அம்பு உள?' என்னும்படி எய்தான் இலக்குவன் என எழுவாய் வருவித்துரைக்க. கடையுக மாமழை— யுகாந்தகாலத்துப் பெருமழை. (105)

9174 ஆயோனெடுங் குருவிக்குல
மெனலாஞ்சில வம்பால்
போயோவிடத் துரந்தானவை
பொறியோவென மறியத்
தூயோனுமத் துணைவாளிக
டொடுத்தானவை தடுத்தான்
தீயோனுமக் கணத்தாயிர
நெடுஞ்சாரிகை திரிந்தான்.

ஆயோன், நெடுங் குருவிக்குலம்
எனல்ஆம் சில அம்பால்
போய் ஓவிடத் துரந்தான்; அவை
'பொறியோ' என, மறிய,

தூயோனும், அத்துணை வாளிகள்
தொடுத்தான், அவை தடுத்தான்;
தீயோனும், அக்கணத்து, ஆயிரம்
நெடுஞ் சாரிகை திரிந்தான்.

பொ:- அத்தன்மையனாகிய இந்திரசித்து, நெடிய குருவிக் கூட்டம் என்று சொல்லுதற்குரிய சில அம்புகளால் (இலக்குவன் ஏவிய அம்புகளை) நீங்கி ஒழியும்படி விலக்கினான். (அவனால் எய்யப்பட்ட) அந்த அம்புகள் தீப்பொறியோ என்றெண்ணுமாறு மறிந்துசெல்லத் தூயவனாகிய இலக்குவனும் அத்துணை அம்புகளை (வில்லில்) தொடுத்து எய்து அவற்றை விலக்கினான். கொடியோனாகிய இந்திரசித்தும் அப்பொழுது ஆயிரம் முறை நெடிய வட்டமாக(ப் போர்க்கள மெங்கும்) சுற்றித் திரிந்தான்.

கு:- ஆயோன், தீயோன் என்பன இந்திரசித்தைச் சுட்டி நின்றன. தூயோன் என்றது, போர்த்திறத்திலும் வினைத் தூய்மை யுடையனாகிய இலக்குவனை. (106)

9175 கல்லுந்நெடு மலையும்பல
மரனுங்கடை காணும்
புல்லுஞ்சிறு பொடியும்மிடை
தெரியாவகை புரியச்
செல்லுந்நெறி தொறுஞ்சென்றன
தெறுகால்புரை மறவோன்
சில்லின்முதிர் தேருஞ்சின
வயமாருதி தாளும்.

கல்லும், நெடுமலையும்,
பலமரனும், கடைகாணும்
புல்லும் சிறு பொடியும்
இடை தெரியாவகை, புரியச்
செல்லும் நெறிதொறும் சென்றன—
தெறு கால்புரை மறவோன்
சில்லின் முதிர்தேரும், சின
வயமாருதி தாளும்.

பொ:- (எல்லாவற்றையும்) அழிக்கும் ஊழிக்காற்றினை யொத்த (பெருவலி படைத்த) வீரனான இந்திரசித்தினது சக்கரத்தால் வலிய

தேரும் செற்றம்மிக்க வலிய அனுமனுடைய கால்களும், கல்லும் மலையும் பலவகை மரமும் (தாவரங்களிற்) கடையாகிய புல்லும் சிறு புழுதியும் தம்முள் வேற்றுமை தெரியாதவாறு அமைய (த்தாம்) செல்லுகின்ற வழிகள் தோறும் (தடையின்றிச்) சென்றன.

கு:- தேரும் தாளும், கல்லும் மலையும் மரனும் புல்லும் பொடியும் இடை தெரியா வகை புரியச் செல்லும் நெறிதொறும் சென்றன என்க. செல்லும் நெறிதொறும் உள்ள சிறு கற்களும் பெருமலைகளும் உயர்ந்த மரனும் கடைகாணும் புல்லும் பொடியும் வேற்றுமை தெரியாவாறு அமைய இந்திரசித்தின் தேரும் அநுமன் கால்களும் எல்லாவற்றையும் சமப்படுத்தித் தரை மட்டமாக்கிச் சென்றன என்றவாறு. இடை-வேறுபாடு. சில்-தேர்ச் சக்கரம். (107)

**9176** இருவீரரு மிவனின்னவ
னிவனின்னவ னென்னச்
செருவீரரு மறியாவகை
திரிந்தார்கணை சொரிந்தார்
ஒருவீரரு மிவரொக்கில
ரெனவானவ ருவந்தார்
பொருவீரையும் பொருவீரையும்
பொருதாலெனப் பொருதார்.

இருவீரரும், 'இவன் இன்னவன்,
இவன் இன்னவன்' என்னச்
செருவீரரும் அறியாவகை
திரிந்தார், கணை சொரிந்தார்;
'ஒரு வீரரும் இவர் ஒக்கிலர்'
என, வானவர் உவந்தார்;
பொரு வீரையும் பொரு வீரையும்
பொருதால் எனப் பொருதார்.

பொ:- (இலக்குவன் இந்திரசித்து என்னும்) வீரர் இருவரும் 'இவன் இன்னன், இவன் இன்னன்' என்று போர் செய்யும் வீரர்களும் உருவறிய வொண்ணாதவாறு (எங்கும்) திரிந்தனராகி அம்பினைச் சொரிந்தார்கள். அலைமோதும் கடலும் அலைமோதும் கடலும் (தம்மில் எதிர் நின்று) பொருதாற் போன்று போர் செய்தனர். (அது கண்ட) தேவர்கள் '(உலகில்) ஒரு வீரரும் இவர்களை ஒத்திலர்' என்று மகிழ்ந்து பாராட்டினார்கள்.

கு:- செரு வீரர்—போரில் ஈடுபட்டுள்ள வீரர்கள். வீரை—கடல். (108)

9177 விண்செல்கில செல்கின்றன
விசிகம்மென விமையோர்
கண்செல்கில மனஞ்செல்கில
கணிதம்முறு மெனினோர்
எண்செல்கில நெடுங்காலவ
னிடைசெல்கில னுடன்மேல்
புண்செய்வன வல்லாலொரு
பொருள்செல்வன தெரியா.

'விண் செல்கில, செல்கின்றன
விசிகம்' என, இமையோர்
கண் செல்கில; மனம் செல்கில:
கணிதம் உறும் எனின், ஓர்
எண் செல்கில; நெடுங்கால் வன்
இடை செல்கிலன், உடல்மேல்
புண்செய்வன அல்லால், ஒரு
பொருள் செல்வன தெரியா.

பொ:- '(இருவரும் எய்த) அம்புகள் விண்ணிடத்தே செல்கில, அன்றிச் செல்கின்றன' என்று கண்டறியுமாறு தேவருடைய கண்கள் (ஊருவிச்) செல்லமாட்டாதன வாயின. மனமும் செல்ல முடியாதன வாயின. கணக்கிட்டுக் கூறுதல் பொருந்துமெனின் (அளவிடுதற்கு) எண்கள் போதியனவாகச் செல்கில. நெடிய வாயுதேவன் அவற்றிடையே ஊடுருவிச் செல்லுதற்கு இயலாதவனாயினன். (அவ்விருவருடைய அம்புகளும்) உடம்பின்மீது புண்களைச் செய்வதன்றித் தாம் ஒரு பொருளாய்ச் செல்லுந் திறங்களைத் தெரிந்துணரமுடியாதன வாயின.

கு:- விசிகம்—அம்பு. விசிகம் தெரியா என இயையும். காலவன்—வாயுதேவர். (109)

9178 எரிந்தேறின திசையாவையு
மிடியாமெனப் பொடியாய்
நெரிந்தேறின நெடுநாணொலி
படர்வானிறை யுருமின்

சொரிந்தேறின சுடுவெங்கணை
தொடுந்தாரகை முழுதும்
கரிந்தேறின வுலகியாவையுங்
கனல்வெம்புகை கதுவ.

எரிந்து ஏறின, திசை யாவையும்;
இடி ஆம் எனப் பொடியாய்
நெரிந்து ஏறின, நெடுநாண் ஒலி;
படர் வான நிறை உருமின்
சொரிந்து ஏறின சுடுவெங்கணை;
தொடுந் தாரகை முழுதும்
கரிந்து ஏறின, உலகு யாவையும்,
கனல் வெம்புகை கதுவ.

பொ:- நெடிய வில்லின் நாணோசை யானவை இடியோசை யென்று சொல்லும்படி யாவையும் தூளாகிச் சிதையும்படி எங்கும் பரவின; பரவிச் செல்லுதற்கு இடமாகிய வானத்தில் (ஆற்றல்) நிறைந்த இடியினை யொத்துச் சொரிந்ததனால் வெளிப்பட்ட சுட்டெரிக்குந் தன்மையவாகிய அம்புகள் திசைகள் எல்லாவற்றிலும் எரிந்து மேற்சென்றன; அவற்றால் உலகமெங்கும் தீயின் வெம்மை மிக்க புகைப்படலம் சென்று மூட, வானத்தில் இயைந்துள்ள விண் மீன்கள் முழுவதும் கரிந்து போயின.

கு:- நெடுநாண் ஒலி, இடி ஆம் எனப் பொடியாய் நெரிந்து ஏறின; படர் வான்நிறை உருமின் சொரிந்து ஏறின சுடுவெங்கணை திசையாவையும் எரிந்து ஏறின; உலகு யாவையும் கடல் வெம்புகை கதுவ, தொடும் தாரகை முழுதும் கரிந்து ஏறின என இயைத்துப் பொருள் கொள்க. (110)

9179 வெடிக்கின்றன திசையாவையும்
விழுகின்றன விடிவந்
திடிக்கின்றன சிலைநாணொலி
யிருவாய்களு மெதிராக்
கடிக்கின்றன கனல்வெங்கணை
கலிவானுற விசைமேல்
பொடிக்கின்றன பொறிவெங்கன
லிவைகண்டனர் புலவோர்.

வெடிக்கின்றன, திசை யாவையும்,
விழுகின்றன, இடிவந்து
இடிக்கின்றன, சிலைநாண் ஒலி;
இருவாய்களும் எதிராக்
கடிக்கின்றன, கனல் வெங்கணை,
கலிவான் உற விசைமேல்
பொடிக்கின்றன, பொறி வெங்கனல்;
இவை கண்டனர் புலவோர்.

பொ:- வில் நாணின் ஓசைகள், திசை எல்லாவற்றிலும் வெடிக்கின்றனவாய் விழும் இடிகளை யொத்து வந்து பெருமுழக்கஞ் செய்தன; இருமுனைகளும் பொருந்த ஒன்றை யொன்று எதிர்ப்பட்டுக் கடிப்பனவாகிய கனலினைச் சொரியும் வெம்மையுடைய அம்புகள், ஒலிக்கும் வானத்திடத்தே பொருந்தச் சென்ற வேகத்தால் மேலே வெம்மையுடைய தீப்பொறிகளைத் தோற்றுவிப்பனவாயின; தேவர்கள் இவற்றைக் கண்டார்கள்.

கு:- சிலைநாணொலி, திசை யாவையும் வெடிக்கின்றன விழுகின்றன இடிவந்து இடிக்கின்றன; இருவாய்களும் எதிராக் கடிக்கின்றன கனல் வெங்கணை கலி வான்உற விசைமேல் வெங்கனற் பொறி பொடிக்கின்றன; புலவோர் இவை கண்டனர் என இயைத்துரைக்க. இந்திரசித்தும் இலக்குவனும் ஏவிய அம்புகள் ஒன்றை யொன்று வாயாற் கவ்விக் கடிப்பன போன்று எதிரெதிர் சென்று தாக்கின என்பார், 'இருவாய்களும் எதிராகி கடிக்கின்றன' என்றார். வாய் என்றது, ஈண்டு அம்பின் முனைவாயினை. வாய் என்றதற் கேற்பக் 'கடிக்கின்றன' என்றார். கடித்தல் என்றது ஈண்டு ஒன்றை யொன்று மோதித் தாக்குதலை. புலவோர்—தேவர்கள். (111)

9180 கடல் வற்றின மலையுக்கன
பருதிக்கனல் கதுவுற்
றுடல் வற்றின மர முற்றன
கனல் பட்டன வுதிரஞ்
சுடர் வற்றின சுறுமிக்கது
துணிபட்டுதிர் கணையின்
திடர் பட்டது பரவைக்குழி
திரிவுற்றது புவனம்.

கடல் வற்றின; மலை உக்கன;
பருதிக் கனல் கதுவுற்று
உடல் வற்றின; மரம், உற்றன
கனல் பட்டன; உதிரம்
சுடர் வற்றின; சுறு மிக்கது;
துணிபட்டு உதிர்கணையின்,
திடர் பட்டது, பரவைக்குழி;
திரிவுற்றது புவனம்.

பொ:- (இருவரும் ஏவிய அம்புகளின் வெம்மையால்) கடல்களெல்லாம் (நீர்) வற்றின. மலைகள் பிளந்து சிதறின; கதிரவனுடைய உடற் பகுதிகள், தீச் சுடரால் கதுவப்பட்டுப் பற்றியெரிந்தன; மரங்கள் தீப் பற்றி அழிந்தன; (வீரர்களின் உடலிலுள்ள) இரத்தம் தீச்சுடரின் வெம்மையால் வற்றின;(உடம்பிற்) சுறு நாற்றம் மிக்குத் தோன்றியது; கடற்பரப்பாகிய பள்ளம் முறிபட்டுச் சிதறிய அம்புகளால் மேடாயிற்று; உலகம் (ஒரு நிலையில் நில்லாது) சுழன்றது.

கு:- கடல் வற்றுதல் முதலிய நிகழ்ச்சிக்கு மூற் குறித்த கனல் வெங்கணையினைக் காரணமாகக் கொள்க. பருதி உடல், கனல் கதுவுற்று வற்றின எனற்பாலது, பருதிக்கனல் கதுவுற்று உடல் வற்றின எனத் தழாத் தொடராய் நின்றது. வற்றின என்றும் பன்மைவினைக்கேற்ப உடல் என்பதற்கு உடற்பகுதிகள் எனப் பன்மைப் பொருள் கொள்ளப்பட்டது. பருதி—சூரியன். 'பருதி கனல்' எனற் பாலது சந்த இன்பம் நோக்கிப் பருதிக் கனல் என வல்லொற்று மிக்கது. மரம் கனல் உற்றன பட்டன என்க. சுடர் வற்றின என்புழி, சுடரால் என மூன்றுமுருபு விரித்துரைக்க. சுறு—மயிர் முதலியன தீயிற் பொசுங்குதலா லுண்டாகும் தீ நாற்றம். (112)

9181 எரிகின்றன வயில் வெங்கணை
யிருசேனையு மிரியத்
திரிகின்றன புடை நின்றில
திசை சென்றன சிதறிக்
கரிபொன்றின பரிமங்கின
கவி சிந்தின கடல் போல்
சொரிகின்றன பொரு செம்புன
ரெலைகின்றனர் கொலையால்.

எரிகின்றன. அயில் வெங்கணை-
இரு சேனையும் இரியத்
திரிகின்றன, புடை நின்றில,
திசை சென்றன; சிதறிக்
கரி பொன்றின; பரி மங்கின;
கவி சிந்தின; கடல் போல்
சொரிகின்றன, பொரு செம்புனல்;
தொலைகின்றனர், கொலையால்.

பொ:- (சுடர்விட்டு) எரிவனவாகிய கூரிய வெம்மையினையுடைய அம்புகள், இருதிறச் சேனைகளும் அஞ்சி நிலை கெட்டு ஓடும்படி திரிபவை (அடுத்தடுத்துப்) பக்கத்தில் (உடன்) நில்லாதனவாய்த் திசைகளிற் சிதறிச் சென்றன. (அவற்றால்) யானைகள் இறந்து பட்டன; குதிரைகள் பொலிவற்றழிந்தன; வானரங்கள் சிதறுண்டு இறந்தன; (அவற்றின் உடல்களினின்றும்) அலைகள் மறியும் செம்மை நிறம் வாய்ந்த குருதி வெள்ளம் கடல் போன்று வெளிப்படுவனவாயின. (இருதிறப் படை வீரர்களும்) கொலைத் தொழிலால் (உயிர்) தொலைந்தனர்.

கு:- அயில்—கூர்மை. இரு சேனை—அரக்கர் சேனை வானர சேனை யாகிய இருதிறப்படைகள். புடை நிற்றல்—பக்கத்திலே நிற்றல். மங்குதல்—(உயிர் நீங்கினமையாற்) பொலிவிழத்தல். பொரு செம் புனல் கடல் போற் சொரிகின்றன என இயையும். கொலையால் தொலைகின்றனர் என்பதற்கு இருதிறப் படை வீரர்களும் என்ற எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (113)

**9182** புரிந்தோடின பொரிந்தோடின
புகைந்தோடின புகைபோய்
எரிந்தோடின கரிந்தோடின
விடமோடின வலமே
திரிந்தோடின பிரிந்தோடின
செறிந்தோடின திசைமேல்
சரிந்தோடின கருங்கோளரிக்
கிளையான்விடு சரமே.

புரிந்து ஓடின; பொரிந்து ஓடின;
புகைந்து ஓடின; புகை போய்
எரிந்து ஓடின; கரிந்து ஓடின;
இடம் ஓடின; வலமே

திரிந்து ஓடின; பிரிந்து ஓடின;
செறிந்து ஓடின; திசைமேல்
சரிந்து ஓடின—கருங் கோளரிக்கு
இளையான் விடு சரமே.

பொ:- கரிய வலிய சிங்கம் போன்ற இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன் ஏவிய அம்புகளுட் சில. வளைந்து ஓடின; (சில) பொரிந்து ஓடின; (சில) புகை நீங்கி எரிந்த வண்ணம் ஓடின; (சில) கரிந்து ஓடின; (சில) இடப் பக்கமாக ஓடின: (சில) வலப் பக்கமாகச் சுற்றி ஓடின; (சில) பிரிந்து (தனித்தனியாக) ஓடின; (சில) ஒருசேர நெருங்கி ஓடின; (சில) திசைகளின் மேலாகச் சரிவுற்று ஓடின.

கு:- கருங்கோளரிக்கு இளையான் விடு சரம். ஓடின என இயையும். புரிதல்—வளைதல். பொரிதல்—தீப்பொறிகளைச் சொரிதல். கருங் கோளரி—கரிய வலிய சிங்கம்; என்னது, கரிய திருமேனியை யுடைய பெருவீரனுன இராமனை. இளையான் என்றது, இராமன் தம்பியாகிய இலக்குவனை. சரம்—அம்பு. சரிதல்—சாய்தல். (114)

**9183** நீரொத்தன நெருப்பொத்தன
பொருப்பொத்தன நிமிரும்
காரொத்தன வுருமொத்தன
கடலொத்தன கதிரோன்
தேரொத்தன விடைமேலவன்
சிரிப்பொத்தன வுலகின்
வேரொத்தன செருவொத்திக
லரக்கன்விடு விசிகம்.

நீர் ஒத்தன; நெருப்பு ஒத்தன;
பொருப்பு ஒத்தன; நிமிரும்
கார் ஒத்தன; உரும் ஒத்தன;
கடல் ஒத்தன; கதிரோன்
தேர் ஒத்தன; விடைமேலவன்
சிரிப்பு ஒத்தன; உலகின்
வேர் ஒத்தன;—செரு ஒத்து இகல்
அரக்கன் விடு விசிகம்.

பொ:- போரில் ஒத்துப் பொருகின்ற வலிமிக்க அரக்கனுகிய இந்திரசித்து ஏவிய அம்புகளுட் சில நீரை ஒத்தன; (சில) நெருப்பை

ஒத்தன; (சில) மலையை ஒத்தன; (சில) விசும்பில் உயர்ந்து செல்லும் மேகத்தை ஒத்தன; (சில) இடியை ஒத்தன; (சில) கடலை ஒத்தன; (சில) கதிரவனது தேரை ஒத்தன; (சில) இடபத்தின் மேலமர்ந்தவனாகிய சிவனது சிரிப்பினை ஒத்தன; (சில) உலகத்தின் வேரை ஒத்தன.

கு:- அரக்கன் விடும் விசிகம் ஒத்தன என இயையும். நீரை ஒத்தலாவது, இடையீடின்றித் தொடர்ந்து செல்லுதல். நெருப்பினை யொத்தலாவது வெம்மை யுடையனவாய்ச் சுட்டெரித்தல். பொருப்பினை யொத்தலாமது, மலைபோன்று பெருந் திரளாய்ச் செறிந்து உயர்ந்து தோன்றுதல். காரொத்தலாவது மேகத்தினின்று வெளிப்படும் மழைத்தாரையினை யொத்து வில்லினின்று வெளிப்படுதல். உரும் ஒத்தலாவது இடி போன்று பேரொலிபடச் சென்று தாக்குதல். கடலை ஒத்தலாவது, அலை அலையாய் மேலெழுந்து வீசுதல். கதிரோன் தேரினை யொத்தலாவது, இருளை யூடறுத்து ஒளியுடன் மேற் செல்லுதல். விடை மேலவன்—ஏற்றூர்தியானாகிய சிவன். சிவனது சிரிப்பினை ஒத்தலாவது, திரிபுரம் போன்று எதிர்ப்பட்டவற்றை நீறுக்குதல். உலகின் வேர் ஒத்தலாவது நிலவுலகம் பல விடங்களிலும் வேர் விட்டாற் போன்று பூமியிற் பல விடங்களிலும் ஊன்றித் தோன்றுதல்.(115)

**9184** ஏமத்தடங் கவசத்திக
லகலத்தன விருவோர்
வாமப்பெருந் தோண்மேலன
வதனத்தன வயிரத்
தாமத்துணைக் குறங்கோடிரு
ச்ரணத்தன தத்தம்
காமக்குல மடமங்கையர்
கடைக்கண்ணெனக் கணைகள்

ஏமத் தடங் கவசத்து இகல்
அகலத்தன; இருவோர்
வாமப் பெருந்தோள் மேலன;
வதனத்தன; வயிரத்
தாமத்துணைக் குறங்கோடு உரு
சரணத்தன,—தம் தம்
காமக் குல மட மங்கையர்
கடைக்கண் என,—கணைகள்.

பொ:- (இலக்குவன், இந்திரசித்து இருவரும் எய்த) அம்புகள், காதல் வயப்பட்ட இளமை வாய்ந்த குலமகளின் கடைக் கண்களைப் போன்று, அவ்விருவருடைய பாதுகாவலராக விரிந்த கவசத்தினை யணிந்த வலிய மார்பிடத்தே பதிந்தன; அழகிய பெரிய தோள்களின் மேல் (பொருந்தித்) தங்கின; முகத்திற் பதிந்தன; திண்ணிய மாலை தாழப்பெற்ற இரு தொடைகளோடு இரு கால்களிலும் ஊன்றித் தங்கின.

கு:- கணைகள், காமக் குலமடமங்கையர் கடைக்கண் என, இருவோர் அகலத்தன, தோள் மேலன, வதனத்தன, துணைக் குறங்கோடு இரு சரணத்தன என இயையும். நற்குலத்திற் பிறந்த காதல் வயப்பட்ட இளமகளிரின் கடைக்கண் நோக்கம், புறத்தே செல்லாது தம் ஆருயிர்க் காதலன் ஒருவனது மேனியிலேயே பொருந்திப் பதியுமாறுபோல, இலக்குவன் இந்திரசித்து இருவரால் எய்யப்பட்ட அம்புகளும் புறத்தே செல்லாது தம்மாற் குறித்து எய்யப்பட்டாரது மேனியிலே குறிதவுறாது ஊன்றிப் பதிந்தன என்றவாறு, பொருட்குறிப்புடையராய் மனந்திரியும் இருமனப்பெண்டிரைப் போலன்றி தம்மாற் காதலிக்கப்பட்ட நாயகன் ஒருவனையே காமுற்று நோக்கும் குலமகளிர் என்பது புலப்படுத்துவார், காம மட மங்கையர் என்னாது 'காமக்குல மட மங்கையர்' எனத் தெரித்து மொழிந்தார். 'குறித்தோன் கூற்றந் தெரித்து மொழிகிளவி' (தொல்—சொல்—கிளவி 55) என்னும் விதி இங்கு நினைத்தற் குரியதாகும். (116)

918 எந்நாளினி னெத்தேவர்க
ளெத்தானவ ரெவரே
அன்னார்செரு விளைத்தாரென
விமையோரெடுத் தார்த்தார்
பொன்னார்சிலை யிருகால்களு
மொருகால்பொறை யுயிரா
முன்னாளினி லிரண்டாம்பிறை
முளைத்தாலென வளைத்தார்.

'எந்நாளின், எத்தேவர்கள்,
எத்தானவர், எவரே,
அன்னார் செரு விளைத்தார்?'
என, இமையோர் எடுத்து ஆர்த்தார்;
பொன் ஆர் சிலை இரு கால்களும்,
ஒருகால் பொறை உயிரா,
முன்நாளினில் இரண்டாம் பிறை
முளைத்தால் என வளைத்தார்.

பொ:- முற்பக்கத்தில் இரண்டாகிய பிறைச் சந்திரன் ஒரே சமயத்தில் வெளிப்பட்டு முளைத்தாற் போன்று, பொன் கட்டுகள் அமைந்த விற்களின் இரு முனைகளையும் (இருவரும் ஒரு சேர) வளைத்தார்கள். (அது கண்ட) தேவர்கள், 'எந்த நாளிலே எந்தத் தேவர்கள் எந்த அசுரர்கள் வேறு யாவர் (இலக்குவன் இந்திரசித்து என்னும்) இவர்களுடைய செருத் தொழிலை யொத்துப் போர் புரிந்தார்கள்?' என உயர்த்துக் கூறி ஆரவாரித்தார்கள்.

கு:- முன்னாளினில் இரண்டு ஆம் பிறை ஒரு கால் பொறை உயிரா முளைத்தால் என, பொன் ஆர் சிலை இரு கால்களும் வளைத்தார்; இமையோர் 'எந்நாளினில் எத் தேவர்கள், எத்தானவர், எவரே இன்னார் செரு விளைத்தார்' என உடுத்து ஆர்த்தார் என இயைத்துரைக்க. பொறையுயிர்த்தல்—கருவுயிர்த்தல்; ஈண்டு வெளிப் படுதல் என்னும் பொருளில் வந்தது. முன்னாள் என்றது, வளர்பிறை நாளாகிய பூர்வ பக்கத்தினை. இலக்குவன் இந்திரசித்து என்னும் இருவரும் தமக்குரிய பொன்மயமான இரண்டு விற்களையும் ஒரே சமயத்தில் வளைத்த தோற்றம், பூருவ பக்கத்தில் இரண்டு பிறைச் சந்திரன் ஒரு சேர முளைத்தாற் போன்றிருந்தது என்றவாறு. இஃது இல்பொருளுவமை என்னும் அணி. இருகால்—வில்லின் இருமுனை. ஒருகால்—ஒரே சமயம். (117)

**9186** வேகின்றன வுலகிங்கிவர்
விடுகின்றன விசிகம்
போகின்றன சுடர் வெந்தன
விமையோர்களும் புலர்ந்தார்
ஆகின்றதொ ரழிகாலமி
தாமன்றென வயிர்த்தார்
நோகின்றன திசையானைகள்
செவிநாணொலி நுழைய.

வேகின்றன உலகு இங்கு இவர்
விடுகின்றன விசிகம்
போகின்றன, சுடர் வெந்தன;
இமையோர்களும் புலர்ந்தார்;
'ஆகின்றது ஓர் அழிகாலம் இது
ஆம், அன்று' என அயிர்த்தார்;
நோகின்றன திசை யானைகள்,
செவி நாண் ஒலி நுழைய.

பொ:- இங்கு (இலக்குவன், இந்திரசித்து) இருவரும் செலுத்து கின்றனவாகிய அம்புகள் (விரைந்து) செல்கின்றன; (அவற்றால் தாக் கப்பட்டு) உலகங்கள் வேவனவாயின; (சூரியன் சந்திரன் முதலிய) சுடர்கள் வெந்தன; தேவர்களும் வாட்டமுற்றவர்களாய் இது இப் பொழுது தோன்றியதோர் அழிவுகாலமாகிய ஊழியோ என்றும் அன்றோ என்றும் ஐயுற்றனர். வில்நாணின் ஒலி (தம்) செவியிலே நுழைதலால் திசை யானைகள் வருந்துவனவாயின.

கு:- இங்கு இவர் விடுகின்றன விசிகம், போகின்றன; (இவற்றால்) உலகு வேகின்றன; சுடர் வெந்தன; இமையோர்களும் புலர்ந்தார், 'இது ஆகின்றதோர் அழிகாலம் ஆம் (என) அன்று' என அயிர்த்தார்; நாண்ஒலி செவிநுழையத் திசை யானைகள் நோகின்றன என இயையும். இவர் என்றது, இலக்குவன் இந்திரசித்து இருவரையும், விசிகம்— அம்பு. அழிகாலம் ஆம் என அன்று என அயிர்த்தார் என்று என என்பதனை ஈரிடத்தும் கூட்டுக. (118)

**9187** மீனுக்கது நெடுவானகம்
வெயிலுக்கது சுடரும்
மானுக்கது முழுவெண்மதி
மழையுக்கது வானம்
தானுக்கது குலமால்வரை
தரையுக்கது தகைசால்
ஊனுக்கதெவ் வுலகத்தினு
முளவாயின வுயிரும்.

மீன் உக்கது, நெடு வானகம்;
வெயில் உக்கது, சுடரும்;
மான் உக்கது, முழு வெண்மதி
மழை உக்கது, வானம்;
தான் உக்கது, குல மால் வரை:
தரை உக்கது; தகைசால்
ஊன் உக்கது, எவ் உலகத்தினும்
உளவாயின உயிரும்.

பொ:- (இருவரும் எய்த அம்புகள் தாக்கினமையால்) நீண்ட வானம் மீன்களை உகுத்தது; ஞாயிறு வெயிலை உகுத்தது; கலை நிறைந்த வெள்ளிய மதியம் (தன் உடலிலுள்ள) மானை உகுத்தது;

ஆகாயம் மேகத்தை உகுத்தது. தொகுதியாகிய மலைகள் உதிர்ந்து பொடியாயின; நிலம் பொடியாகிச் சிதைந்தது; எல்லா வுலகத்திலும் உள்ளனவாகிய உயிர்களும் அழகமைந்த உடம்பினைச் சிந்தின.

கு:- உகுத்தல்—உமிழ்தல்; சிதறுதல்; பொடியாய் உதிர்தல்.(119)

9188 அக்காலையி னயில்வெங்கணை
யையைந்துபுக் கழுந்தத்
திக்காசற வென்றான்மக
னிளங்கோவுடல் செறித்தான்
கைக்கார்முகம் வளையச் சில
கனல்வெங்கணை கவசம்
புக்காகமுங் கழன்றோடிட
விளங்கோளரி பொழிந்தான்.

அக்காலையின் அயில்வெங்கணை
ஐ-ஐந்து புக்கு அழுந்த,
திக்கு ஆசு அறவென்றான் மகன்,
இளங்கோ உடல் செறித்தான்;
கைக் கார்முகம் வளையச் சில
கனல் வெங்கணை, கவசம்
புக்கு, ஆகமும் கழன்று ஓடிட,
இளங் கோளரி பொழிந்தான்.

பொ:- திசைகளை யெல்லாம் குற்றமற வெற்றி கொண்ட இராவணன் மைந்தனாகிய இந்திரசித்து, அப்பொழுது கூரிய வெம்மையுடைய அம்புகள் இருபத்தைந்து உள்ளே புகுந்து அழுந்தும்படி இலக்குவனது உடம்பிலே நெருங்கிப் பதியச் செலுத்தினான்; இளஞ் சிங்கம்போல்வானாகிய இலக்குவன் தன்மையிற்கொண்ட வில் வளையக் கனன்று எரியும் கொடிய அம்புகள் சிலவற்றை (இந்திரசித்து அணிந்த) கவசத்தினுள்ளே புகுந்து மார்பினையும் (துளைத்து) ஊடுருவி ஓடுமாறு சொரிந்தான்.

கு:- திக்கு ஆசு அறவென்றோன் என்றது எண் திசைகளில் உள்ளாரை வென்றடக்கிய பெருவீரனாகிய இராவணனை.மகன்-இந்திரசித்து, ஆசற வெல்லுதலாவது வீரத்திற்கு இழுக்கின்றி வெல்லுதல்.

இளங்கோ, இளங்கோளரி என்ற பெயர்கள் இலக்குவனைக் குறித்தன. கார்முகம்—வில். (120)

**9189** தெரிந்தான்சில சுடர்வெங்கணை
தேவேந்திரன் சினமா
விரிந்தோடிடத் துரந்தோடின
விமையோரையு முன்னாள்
அரிந்தோடின வெரிந்தோடின
வவைகோத்தட லரக்கன்
சொரிந்தானுயர் நெடுமாருதி
தோண்மேலினிற் றோன்ற.

தெரிந்தான் சில சுடர் வெங்கணை,
தேவேந்திரன் சினமா
இரிந்து ஓடிடத் துரந்து ஓடின,
இமையோரையும் முன்நாள்
அரிந்து ஓடின, எரிந்து ஓடின,
அவை கோத்து, அடல் அரக்கன்
சொரிந்தான், உயர் நெடு மாருதி
தோள்மேலினில் தோன்ற.

பொ:- வலிமிக்க அரக்கனாகிய இந்திரசித்து, அமரர் வேந்தனாகிய இந்திரனது வெகுளிமிக்க யானையை நிலைகெட்டு ஓடுமாறு துரத்திச் சென்றனவும், முற்காலத்தில் தேவர்களை அரிந்து ஓடினவும் (தீமிக்கு) எரிந்து ஓடினவும் ஆகிய சுடர்கின்ற வெம்மையுடைய சில அம்புகளைத் தேர்ந்து எடுத்து அவற்றை (வில்லிற்) கோத்து, உயர்ந்து நீண்ட உருவமுடையவனாகிய அனுமனுடைய தோள்களின்மேல் ஊன்றித் தோன்றும்படி சொரிந்தான்.

கு:- தேவேந்திரன் சினமா—இந்திரனுக்குரிய வெகுளி மிக்க யானை; என்றது ஐராவதம் என்னும் பெயருடைய வெள்ளை யானையை அடல் அரக்கன் என்றது, இந்திரசித்தினை. அரக்கன், துரந்தோடின எரிந்தோடின சுடர் வெங்கணை சில தெரிந்தான்; மாருதி தோள் மேலினில் தோன்றச் சொரிந்தான் என்க. தெரிதல்—தேர்ந்தெடுத்தல். தெரிந்தான், முற்றெச்சம். (121)

**9190** குருதிப்புனல் சொரியக்குணங்
குணிப்பில்லவன் குணபால்
பருதிப்படி பொலிவுற்றதை
யிளங்கோளரி பார்த்தான்
ஒருதிக்கினும் பெயராவகை
யவன்றேரினை யுதிர்த்தான்
பொருதிக்கணம் வென்றானெனச்
சரமாரிகள் பொழிந்தான்.

குருதிப் புனல் சொரிய, குணம்
குணிப்பு இல்லவன், குணபால்
பருதிப்படி பொலிவுற்றதை
இளங் கோளரி பார்த்தான்;
ஒரு திக்கிலும் பெயராவகை,
அவன் தேரினை உதிர்த்தான்;
'பொருது இக்கணம் வென்றான்'என,
சரமாரிகள் பொழிந்தான்.

பொ:- குணங்களால் எண்ணி யளவிடுதற்கரியவனாகிய அனுமன் (உடம்பினின்றும்) குருதி நீர் சொரிதலால் கிழக்குத் திசையில் உதித்த இளஞ் சூரியனைப் போன்று தோன்றிய தன்மையினை இளஞ் சிங்கம் போல்வானாகிய இலக்குவன் நோக்கினான்; 'இந்தக் கணத்திலேயே (இந்திரசித்தினைப்) பொருதழித்து வெற்றி கொண்டான்' எனக் கண்டோர் கருதுமாறு அம்பு மழையினை(அவன்மேற்) சொரிந்து எந்தத் திசையிலும் இடம் பெயர்ந்து செல்லாதபடி அவ் விந்திரசித்தின் தேரினை(ப் பொடியாக) உதிரச் செய்தான்.

கு:- எண்ணி அளவிட வொண்ணாவாறு குணங்களால் நிறைந்தவன் அனுமன் என்பார், 'குணங்குணிப்பில்லவன்' என்றார். குணித்தல்—எண்ணி அளவிடுதல். குணபால் பருதி—கிழக்குத் திசையில் தோன்றிய செஞ்ஞாயிறு. தன் உடம்பு முழுவதும் செந்நிறம் வாய்ந்த குருதிநீர் படியத் தோன்றிய அனுமனுக்குக் கிழக்குத் திசையில் தோன்றிய செஞ்ஞாயிறு உவமை. இளங்கோளரி, குணங்குணிப்பில்லவன் குணபால் பருதிப்படி பொலிவுற்றதைப் பார்த்தான்; சரமாரிகள் பொழிந்தான்; அவன் தேரினை உதிர்த்தான் என்க. இளங்கோளரி என்றது இலக்குவனை. அவன் என்றது இந்திரசித்தினை. (122)

**9191** அத்தேரழிந் ததுநோக்கிய
விமையோரெடுத் தார்த்தார்
முத்தேவரு முவந்தாரவ
னுருமேறென முனிந்தான்
தத்தாவொரு தடந்தேரினைத்
தொடர்ந்தான்சரந் தலைமேல்
பத்தேவின னவைபாய்தலி
னிளங்கோளரி பதைத்தான்.

அத்தேர் அழிந்தது நோக்கிய
இமையோர் எடுத்து ஆர்த்தார்;
மூத்தேவரும் உவந்தார்; அவன்,
உரும்ஏறு என முனிந்தான்,
தத்தா; ஒரு தடந்தேரினைத்
தொடர்ந்தான், சரம் தலைமேல்
பத்து ஏவினன்; அவை பாய்தலின்,
இளங்கோளரி பதைத்தான்.

பொ:- (இந்திரசித்துக்கு உரியதாகிய) அந்தத் தேர் அழிந்த தனைக் கண்ணுற்ற தேவர்கள் ஓங்கிய குரலுடன் ஆரவாரித்தனர். (அயன் அரிஅரன் என்னும்) மும்மூர்த்திகளும் உளம் மகிழ்ந்தார்கள். (இந்திரசித்தாகிய) அவன் இடியேற்றினை யொத்து வெகுண்டவனாகிப் பாய்ந்து மற்றொரு தேரினை அடைந்தவனாகி (இலக்குவனது) தலையின் மேற் பத்து அம்புகளைச் செலுத்தினான்; அவை பாய்தலினால் இலக்கு வன் பதைப்புற்றான்.

கு:- அவன், இந்திரசித்து. தத்துதல்—தாவிப் பாய்தல். இளங் கோளரி, இலக்குவன். (123)

**9192** பதைத்தானுட னிலைத்தான்சில
பகுவாயயிற் பகழி
விதைத்தானவன் விலக்காதமுன்
விடைமேல்வரு விமலன்
மதத்தாலெதிர் வருகாலனை
யொருகாலுற மருமத்
துதைத்தாலெனத் தனித்தோர்கணை
யவன்மார்பிடை யுய்த்தான்.

பதைத்தான், உடல் நிலைத்தான்,
சில பகுவாய் அயில் பகழி
விதைத்தான்; அவன் விலக்காதமுன்,
விடைமேல் வரு விமலன்,
மதத்தால் எதிர்வரு காலனை
ஒரு கால்உற மருமத்து
உதைத்தால் என, தனித்து ஓர் கணை
அவன் மார்பிடை உய்த்தான்.

பொ:- பதைப்புற்றவனாகிய இலக்குவன், உடம்பினை நிலை பெறுத்தியவனாகிப் பிளவுபட்ட வாயினை யுடைய கூரிய சில அம்புகளை (இந்திரசித்தின்மேல்) பதியச் செய்தான்; அவன் (அவற்றை) விலக்குவதற்கு முன்னே, விடையின்மேல் வரும் தூயோனாகிய சிவபெருமான் செருக்கினால் எதிர்த்து வந்த கூற்றுவனை அவனது மார்பின் கண்ணே ஒரு திருவடி யூன்ற உதைத்தாற்போன்று, ஒப்பற்ற தோர் அம்பினை அவ்விந்திரசித்தின் மார்பின்கண்ணே செலுத்தினான்.

கு:- பதைத்தான்—பதைப்புற்றவனாகிய இலக்குவன். உடல் நிலைத்தல்—உடம்பினைத் தளர்ந்து சோரவிடாது வீரத்தால் நிலை பெற எதிர்த்து ஊன்றி நிற்றல். விதைத்தல்—பதித்தல். விடை—இடபம். விமலன்—தூயோன்; இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன். மதம்—செருக்கு. உய்த்தல்—செலுத்துதல். (124)

**9193** கவசத்தையு நெடுமார்பையுங்
கழன்றக்கணை கழிய
அவசத்தொழி லடைந்தானதற்
கிமையோரெடுத் தார்த்தார்
திவசத்தெழு கதிரோனெனத்
திரிகின்றதோர் கணையால்
துவசத்தையுந் துணித்தேயவன்
மணித்தோளையுந் தொளைத்தான்.

கவசத்தையும் நெடு மார்பையும்
கழன்று அக்கணை கழிய,
அவசத் தொழில் அடைந்தான்;
அதற்கு இமையோர் எடுத்து ஆர்த்தார்;

திவசத்து எழு கதிரோன் எனத்
தெரிகின்றது ஓர் கணையால்
துவசத்தையும் துணித்தே, அவன்
மணித் தோளையும் தொளைத்தான்.

பொ:- (இலக்குவனல் எய்யப்பட்ட) அந்த அம்பு (இந்திர சித்தின்) கவசத்தையும் நெடிய மார்பினையும் துளைத்து உருவி வெளிப்பட்டு அப்பாற் செல்லத் தன்னிலை மறந்து செயலற்ற தன்மையினை யடைந்தான் (இந்திரசித்து). தளர்ச்சியுற்ற அதற்குத் தேவர்கள் பெருக ஆரவாரித்தார்கள், நாட்பகலில் தோன்றும் சூரியனை யொத்து வெம்மை யுடையதாய்த் திரியுந் தன்மையதாகிய அம்பினல் (அவ் இந்திரசித்தின் தேரிற் கட்டிய) கொடியினையும் அறுத்துத் தள்ளி அவனது திண்ணிய தோள்களையும் துளைத்தான் (இலக்குவன்).

கு:- அவசத்தொழில்—தன் நிலை தளர்ந்து செயலறுதலாகிய தன்மை. திவசம்—நாள்; ஈண்டுப் பகல் என்னும் பொருளில் வந்தது.

**9194** உள்ளாடிய வுதிரப்புனல்
கொழுந்தீயென வொழுகத்
தள்ளாடிய வடமேருவிற்
சலித்தானுட றரித்தான்
தொள்ளாயிரங் கடும்போர்க்கணை
துரந்தானவை சுடர்போய்
விள்ளாநெடுங் கவசத்திடை
நுழையாதுக வெகுண்டான்.

உள்ஆடிய உதிரப்புனலி
கொழுந் தீஎன ஒழுக,
தள்ளாடிய வடமேருவின்
சலித்தான்; உடல் தரித்தான்;
தொள்ளாயிரம் கடும் போர்க் கணை
துரந்தான்; அவை, சுடர் போய்
விள்ளா நெடுங் கவசத்திடை
நுழையாது உக, வெகுண்டான்.

பொ:- (இலக்குவன் எய்த அம்பினல்) உடம்பி னுள்ளே ஓடிக் கொண்டிருக்கும் குருதிநீர் கொழுவிய தீத்திரள் போன்று வெளிப்

பட்டு ஒழுக அசைவுற்ற வடதிசைக் கண்ணதாகிய மேருமலையினைப் போன்று நிலைகுலைந்தவனாகிய இந்திரசித்து (தன்) உடம்பினைத் தளர்வுறாதபடி பொறுத்தவனாகித் தொள்ளாயிரம் கொடிய போர் அம்புகளை (இலக்குவன் மேற்) செலுத்தினான்; அந்த அம்புகள் சுடர் விட்டுச் சென்று, பிளக்க வொண்ணாத நீண்ட கவசத்தி னுள்ளே நுழைய வியலாது உதிர்ந்தனவாக (அது கண்டு இந்திரசித்து) சினமுற்றான்.

கு: சலித்தல்—நிலைகுலைந்து அசைவுறுதல். சலித்தான் என்றது இந்திரசித்தினை. சலித்தான், உடல் தரித்தான், தொள்ளாயிரம் கணை துரந்தான்; அவை போய், கவசத்திடை நுழையாது உக வெகுண்டான் என்க. சுடர்போய்—சுடர் விட்டுச் சென்று, விள்ளா—பிளக்க வொண்ணாத. விள்ளுதல்—பிளத்தல். உகுதல்—பொடியாய் உதிர்தல். (126)

**9195** மறித்தாயிரம் வடிவெங்கணை
மருமத்தினை மதியாக்
குறித்தாயிரம் பரித்தேரவன்
விடுத்தானவை குறிபார்த்
திறுத்தானெடுஞ் சரத்தாலொரு
தனிநாயகற் கிளையோன்
செறித்தானுடல் சிலபொற்கணை
சிலைநாணறத் தெரித்தான்.

மறித்து ஆயிரம் வடிவெங்கணை,
மருமத்தினை மதியாக்
குறித்து, ஆயிரம் பரித்தேரவன்
விடுத்தான்; அவை குறி பார்த்து
இறுத்தான், நெடுஞ் சரத்தால்,
ஒரு தனி நாயகற்கு இளையோன்;
செறித்தான் உடல் சில பொற்கணை,
சிலை நாண் அறத் தெரித்தான்.

பொ:- ஆயிரங் குதிரைகள் பூட்டிய தேரின் மேலோனாகிய இந்திரசித்து, (இலக்குவனது) மார்பினை இலக்காக மதித்துக் குறி பார்த்து கூரிய வெம்மை மிக்க ஆயிரம் அம்புகளை மீண்டும் செலுத்தினான். நெடியதோர் அம்பினால் அந்த அம்புகளைக் குறி

பார்த்து முறித்துத் தள்ளினுன், ஒப்பற்ற தனி முதல்வனுக்குத் தம்பியாகிய இலக்குவன். பொன்மயமான சில அம்புகளைத் தெரிந்து எடுத்துக் கொண்டவனுகி, (இந்திரசித்தின்) வில்லின் நாண் அறும்படி அவனது உடம்பில் நெருங்கச் செலுத்தினுன்.

கு: ஆயிரம் பரித்தேரவன், மருமத்தினை மதியா, குறித்து, ஆயிரம் வடிவெங்கணை மறுத்து விடுத்தான். ஒரு தனி நாயகற்கு இளையோன் குறி பார்த்து நெடுஞ் சரத்தால் இறுத்தான்; சில பொற்கணை தெரித்தான், சிலை நாண் அற, உடல் செறித்தான் என இயையும். ஆயிரம் பரித்தேரவன் என்றது, இந்திரசித்தினை. ஒரு தனி நாயகன் என்றது, ஒப்பற்ற தனி முதல்வனுகிய இராமபிரானை. இளையோன் என்றது இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவனை. வடி—கூர்மை. மருமம்—மார்பு. மறித்து—மீண்டு.

இதன் பின் 23, 26, 43, 44, 45, 70 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது:-

**9195 a** ‘விடுவாளிகள் கடிதோடுவ
வீற்ருகுவ வீயா
நெடுநாணிடை சிதையாதவர்
நேரேவிய விசிகம்
தொடுகார்விசை நுழையாவெதிர்
மீளாதிடை சோரா
வெடுபாணமு மழியாமுது
கிடுதூணியை யறுத்தான்’. (127)

**9196** வில்லிங்கிது நெடுமால்சிவ
னெனுமேலவர் தனுவே
கொல்லென்றுகொண் டயிர்த்தானெடுங்
கவசத்தையுங் குலையாச்
செல்லுங்கடுங் கணையாவையுஞ்
சிதையாமையுந் தெரிந்தான்
வெல்லுந்தர மில்லாமையு
மறிந்தானக மெலிந்தான்.

'வில் இங்கு இது நெடுமால் சிவன்
எனும் மேலவர் தனுவே-
கொல்?' என்று கொண்டு அயிர்த்தான்;
நெடுங் கவசத்தையும் குலையாச்
செல்லுங் கடுங்கணை யாவையும்
சிதையாமையும் தெரிந்தான்;
வெல்லும்தரம் இல்லாமையும்
அறிந்தான், அகம் மெலிந்தான்.

பொ:- இங்கு (இலக்குவன் பிடித்துள்ள) வில்லாகிய, இது நெடிய திருமால் சிவன் எனப் போற்றப்பெறும் மேலோராகிய பெருந் தெய்வங்களின் வில்தானோ? என்று எண்ணி (இந்திரசித்து) ஐயுற்றான். நீண்ட கவசத்தையும் குலைத்து (ஊடுருவி)ச் செல்லும் (இலக்குவ னுடைய) அம்புகள் எல்லாமும் சிதைவுறாத தன்மையையும் அறிந்தான்; (அவனை) வெற்றிகொள்ளும் திறம் (தனக்கு) இல்லாமை யையும் அறிந்தவனாகி உளம் தளர்ந்தான்.

கு:- இலக்குவனது வில்லின் வன்மையினையும் அதனின்று வெளிப்படும் அம்புகளின் அழிவின்மையையும் எண்ணிய இந்திரசித்து இலக்குவனை வெற்றிகொள்ளும் திறம் (தன்பால்) இல்லையென்ப தறிந்து மனம் மெலிந்தான் என்பதாம். (128)

இந்திரசித்து மெலிவுற்றமையை யறிந்த வீடணன்
இலக்குவனுக்கு அதனைத் தெரிவித்தல்

9197 அத்தன்மையை யறிந்தானவன்
சிறுதாதையு மனுகா
முத்தன்முக நோக்காவொரு
மொழிகேளென மொழிவான்
எத்தன்மையு மிமையோர்களை
வென்றானிகல் கண்டாய்
பித்தன்மகன் தளர்ந்தானினிப்
பிழையானெனப் பகர்ந்தான்.

அத்தன்மையை அறிந்தான் அவன்
சிறுதாதையும், அணுகா,
முத்தன் முகம் நோக்கா, 'ஒரு
மொழி கேள்' என மொழிவான்,
'எத்தன்மையும் இமையோர்களை
வென்றான் இகல் கண்டாய்!
பித்தன் மகன் தளர்ந்தான்; இனிப்
பிழையான்' எனப் பகர்ந்தான்.

பொ:- (இந்திரசித்து என்னும்) அவனது சிறிய தந்தையாகிய வீடணனும் (இந்திரசித்து மனம் மெலிவுற்ற) அத்தன்மையினை அறிந்தவனாகி அணுகி வந்து (பாசங்களினின்று) விடுபட்ட தூயோனாகிய இலக்குவனது முகத்தைப் பார்த்து, ('யான் கூறும்) ஒரு வார்த்தையினைக் கேட்பாயாக' என்று மொழிபவன், 'எல்லாத் திறத்தாலும் தேவர்களை வெற்றிகொண்டோனாகிய இந்திரசித்தைப் போரில் வெற்றி கொண்டாய்; காம மயக்கமுடைய தூர்த்தனாகிய இராவணன் மைந்தன் மனந்தளர்ந்தான்; (ஆதலால்) இனிப் பிழைக்க மாட்டான்' என்று கூறினான்.

கு:- அவன் சிறு தாதையும், அத்தன்மையை அறிந்தான். அணுகா. முத்தன் முகம் நோக்கா, 'ஒரு மொழிகேள்' என மொழிவான், 'பித்தன் மகன் இனிப்பிழையான்' எனப் பகர்ந்தான். இமையோர்களை எத்தன்மையும் வென்றான் என்றது, தேவர்களை எல்லாத் திறத்தாலும் வெற்றிகொண்ட வீரனாகிய இந்திரசித்தினை. பித்தன் என்றது, தன் ஆற்றல் அனைத்தையும் இழக்கும் நிலையில் பிறனில்லாளை விழைந்து பேதுறும் நெஞ்சத்தினனாகிய இராவணனை. மகன்—மைந்தன்; என்றது இந்திரசித்தினை. (129)

## இந்திரசித்து ஏவிய படைக்கலங்களை ஏற்ற கணைகளால் இலக்குவன் விலக்குதல்

**9198** கூற்றின்படி கொதிக்கின்றவக்
கொலைவாளெயிற் றரக்கன்
ஏற்றுஞ்சிலை நெடுநாணொலி
யுலகழிவுற மெய்தச்

சீற்றந்தலைத் தலைசென்றுற
விதுதீரெனத் தெரியாக்
காற்றின்படை தொடுத்தானவ
னதுவேகொடு காத்தான்.

கூற்றின்படி கொதிக்கின்ற
அக் கொலை வாள் எயிற்று அரக்கன்,
ஏற்றும் சிலை நெடுநாண் ஒலி
உலகு ஏழினும் எய்த,
சீற்றம் தலைத்தலை சென்றுஉற,
'இது தீர்' எனத் தெரியா,
காற்றின் படை தொடுத்தான்; அவன்
அதுவே கொடு காத்தான்.

பொ:- (உயிர் கொள்ளும்) கூற்றுவனது தன்மையினை யொத்து(ச் சினத்தால்) கொதிப்புற்று எழுகின்ற அந்தக் கொல்லுந்தன்மைய தாகிய வாட்படையினையும் (கோரப்) பற்களையும் உடைய அரக்கனாகிய இந்திரசித்து (தன்) வில்லில் ஏற்றிய நாணின் ஓசை ஏழுலகங்களிலும் சென்றடைய, கோபமானது மேன்மேற் கிளர்ந்தெழ (அம்புகளில் வன்மையுடையதனைத்) தெரிந்தெடுத்து 'இதனை விலக்கி அழிப்பாயாக' என்று கூறி வாயுதேவனது படைக்கலத்தினை (இலக்குவன்மேல்) தொடுத்துவிட்டான். (இலக்குவனாகிய) அவன் (வாயுதேவன் படைக்கலமாகிய) அதனையே கொண்டு தடுத்தான்.

கு:- படி—தன்மை; ஈண்டு வடிவத்தைக் குறித்துநின்றது. கொலைவாள் எயிற்று அரக்கன் என்றது இந்திரசித்தினை. அரக்கன், தெரியா 'இதுதீர்' எனக் காற்றின்படை தொடுத்தான் என்க. காற்றின்படை—வாயுதேவனை அதிதெய்வமாகக் கொண்ட படைக்கலம். தலைத்தலை—மேலும் மேலும். அவன் என்றது இலக்குவனை. அது என்றது. காற்றின்படையாகிய அதனை. காத்தல்—தன்கண் வாராமல் தடுத்தல். (130)

9199 அனலின்படை தொடுத்தானவ
னதுவேகொடு தடுத்தான்
புனலின்படை தொடுத்தானவ
னதுவேகொடு பொறுத்தான்

கனல்வெங்கதி ரவன்வெம்படை
துரந்தான்மனங் கரியான்
சினவெந்திற லிளங்கோளரி
யதுவேகொடு தீர்த்தான்.

அனலின் படை தொடுத்தான்; அவன்
அதுவே கொடு தடுத்தான்;
புனலின் படை தொடுத்தான்; அவன்
அதுவே கொடு பொறுத்தான்;
கனல் வெங் கதிரவன் வெம்படை
துரந்தான், மனம் கரியான்;
சினவெந் திறல் இளங் கோளரி
அதுவேகொடு தீர்த்தான்.

பொ:- (இந்திரசித்து) அங்கியங் கடவுளது படையினைத் தொடுத்துவிட்டான்; அவ் இலக்குவன் அந்தப் படையினைக் கொண்டே (அதனைத்) தடுத்தான். (இந்திரசித்து) நீர்க்கடவுளாகிய வருணனது படைக்கலத்தைச் செலுத்தினன்; அவ் இலக்குவன் (வருணப்படையாகிய) அதனையே கொண்டு தடுத்தான். நெஞ்சங் கரியோனாகிய இந்திரசித்து, அழலன்று வீதம் வெம்மையான கதிர்களை யுடைய சூரியனது படைக்கலத்தைச் செலுத்தினன்; வெகுளியும் கடுந் திறலும் உடைய இளஞ் சிங்கம்போல்வானாகிய இலக்குவன் அந்தக் கதிரவன் படையினையே கொண்டு அதனை அழித்துப் போக்கினன்.

கு:- அனலின்படை—ஆக்கினேயாத்திரம். புனலின்படை— வருணாத்திரம். கதிரவன்படை—சூரியாத்திரம். (131)

இந்திரசித்து அயன் படை தொடுத்தானாக இலக்குவன்
அப்படையினையே தொடுத்து அதனை அழித்தல்

9200 இதுகாத்திகொ லென்னாவெடுத்
திசிகப்படை யெய்தான்
அதுகாப்பதற் கதுவேயுள
தென்னாத்தொடுத் தமைந்தான்

செதுகாப்படை தொடுப்பேனென
நினைந்தான்றிசை முகத்தோன்
முதுமாப்படை துரந்தானினி
முடிந்தாயென மொழிந்தான்.

'இது காத்திகொல்?' என்று, எடுத்து,
இசிகப்படை எய்தான்;
அது காப்பதற்கு அதுவே உளது
என்று, தொடுத்து அமைந்தான்;
செதுகாப் படை தொடுப்பேன் என
நினைந்தான், திசை முகத்தோன்
முதுமாப்படை துரந்தான், 'இனி
முடிந்தாய்' என மொழிந்தான்.

பொ:- (இலக்குவனை நோக்கி) 'இதனைத் தடுக்க வல்லாயோ?' என்று சொல்லி இசிகப்படையினை எடுத்து ஏவினான் (இந்திரசித்து). அதனை(த் தடுத்து)க் காப்பதற்கு அதுவே தக்கதாக உள்ளது என்று (அவ் இசிகப் படையினைத்) தொடுத்து அமைந்தான் (இலக்குவன்). (உயிர் கொள்வதில்) தப்பாத படையினைத் தொடுத்து எய்வேன் என எண்ணியவனாகிய இந்திரசித்து, (இலக்குவனைப் பார்த்து) 'நீ இறந் தொழிந்தாய்' என்று சொல்லி, நான்முகனது தொன்மையும் பெருமை யும் வாய்ந்த (பிரமாத்திரம் என்னும்) படைக்கலத்தினை (இலக்குவன் மேற்) செலுத்தினான்.

கு:- இசிகப்படை—ஒருவகை அம்பு; இஷீகாஸ்த்ரம் என்பர். செதுகுதல்—தவறுதல். (132)

9201 வானின்றலை நின்றார்களு
மழுவாளியு மலரோன்
தானும்முனி வரும்பிற
தவத்தோர்களு மறத்தோர்
கோனும்பிற பிறதேவர்கள்
குழுவும்மனங் குலைந்தார்
ஊனம்மினி யிலதாகுக
விளங்கோக்கென வுரைத்தார்.

வானின்தலை நின்றார்களும்
 மழுவாளியும், மலரோன்-
தானும், முனிவரரும், பிற
 தவத்தோர்களும், அறத்தோர்
கோனும், பிறபிற தேவர்கள்
 குழுவும், மனம் குலைந்தார்;
'ஊனம், இனி இலது ஆகுக
 இளங்கோக்கு' என உரைத்தார்.

பொ:- விண்ணிடத்தே நின்றவர்களும் மழுப்படையினை யுடைய சிவபெருமானும் தாமரை மலர்மேலுள்ள பிரமதேவனும் முனிவர்களும் தவத்திற் சிறந்தாற் பிறரும் அறத்தினையுடையவராகிய தேவர்க்குத் தலைவனாகிய இந்திரனும், ஏனைய தேவர் கூட்டத்தினரும் மனம் நடுங்கியவர்களாகி, 'இளவரசனாகிய இலக்குவனுக்கு எத்தகைய தீங்கும் இல்லா தொழிக' என்று கூறினார்கள்.

கு:- வானின் தலை—வானிடத்தே; தலை ஏழாம் வேற்றுமையுருபு மழுவாளி—சிவபெருமான். மலரோன்—பிரமன். அறத்தோர்—அறத்தின் பயனை நுகர்வோராகிய தேவர்கள். அறத்தோர் கோன்—தேவர் தலைவனாகிய இந்திரன். 'இனி இளங்கோக்கு ஊனம் இலதாகுக' என உரைத்தார் என்க. இளங்கோ—இளவரசன்; என்றது அயோத்தியர் மன்னனாகிய இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவனை. ஊனம்—தீங்கு. இந்திரசித்து பிரமாத்திரத்தை இலக்குவன் மேல் விட்ட பொழுது அங்கு வானதில் வந்து நின்ற தேவர்களும் முனிவர்களும் அதனால் இலக்குவனுக்குத் தீங்கு நேரா தொழிக எனப் பாதுகாப்புக் கூறி வாழ்த்தினார்கள் என்பதாம். (133)

9202 ஊழிக்கடை யிறுதித்தலை
 யுலகியாவையு முண்ணும்
ஆழிப்பெருங் கனறன்னெரு
 சுடரென்னவு மாகாப்
பாழிச்சிகை பரப்பித்தனி
 படர்கின்றது பார்த்தான்
ஆழித்தனி முதனாயகற்
 கிளையானது மதித்தான்.

ஊழிக்கடை இறுதித்தலை,
 உலகு யாவையும் உண்ணும்
ஆழிப் பெருங்கனல் தன் ஒரு
 சுடர் என்னவும் ஆகாப்

பாழிச் சிகை பரப்பித் தனி
படர்கின்றது பார்த்தான்-
ஆழித் தனிமுதல் நாயகற்கு
இளையான்—அது மதித்தான்.

பொ:- சக்கரப்படையினையுடைய ஒப்பற்ற இறைவனாகிய இராம பிரானுக்குத் தம்பியாகிய இலக்குவன், (யாவையும்) அழிந்தொழியும் இறுதிக்காலமாகிய ஊழிமுடிவில் உலகம் எல்லாவற்றையும் பற்றி அழிக்கும் கடல் நடுவேயுள்ள வடவைப் பெருந்தீயானது, தன்னுடைய ஒரு சுடரினை ஒக்கும் என்று உவமை கூறுதற்கும் ஆகாத வலிய தீக் கொழுந்துகளைப் பரப்பிக் கொண்டு (தன்னை நோக்கித்) தனித்து வருகின்ற பிரமாத்திரத்தினைப் பார்த்தான்; அதன் இயல்பினை (உள்ளவாறு) எண்ணி யறிந்தான்.

கு:- ஆழித் தனிமுதல் நாயகன் என்றது, திருமாலின் அமிச மாகிய இராமபிரானை. இளையான் என்றது, இலக்குவனை. உலகு யாவையும் உண்ணும் ஆழிப் பெருங்கனல் என்றது, வடவைப் பெருந்தீயினை. 'பாழிச் சிகை பரப்பித் தனி படர்கின்றது' என்றது, வலிய தீச்சுடர்களைப் பரப்பிக்கொண்டு வரும் பிரமாத்திரத்தினை. படர்கின்றது, வினையாலணையும் பெயர். வடவைப் பெருந்தீயானது, இப் பிரமாத்திரத்தாற் பரப்பப்படும் ஒரு சுடர்க்குக்கூட உவமை யாகாது என்னும்படி மிகப் பெரிய தீப் பிழம்புகளை எவ்விடத்தும் பரப்பி வருகின்றது இப்பிரமாத்திரம் என்பார், 'ஆழிப் பெருங்கனல் தன் ஒரு சுடர் எனவும் ஆகாப் பாழிச் சிகை பரப்பித் தனிபடர்கின்றது என்றார். பாழி—வன்மை. சிகை—அனற்கொழுந்து. (134)

**9203** மாட்டானிவன் மலரோன்படை
முதற்போதுதன் வலத்தால்
மீட்டானலன் றடுத்தானலன்
முடிந்தானென விட்டான்
காட்டாதினிக் கரந்தாலது
கருமம்மல தென்னுத்
தாட்டாமரை மலரோன்படை
தொடுப்பேனெனச் சமைந்தான்.

'மாட்டான் இவன், மலரோன்படை
முதற்போது தன் வலத்தால்
மீட்டான் அலன்; தடுத்தான் அலன்;
முடிந்தான்' என, விட்டான்;

'காட்டாது இனிக் கரந்தால், அது
கருமம் அலது' என்று,
'தாள் தாமரை மலரோன் படை
தொடுப்பேன்' எனச் சமைந்தான்.

பொ:- ('நான் பிரமாத்திரத்தினை ஏவிய) முற்பொழுதில் இவன் தன் வலிமையினால் பிரமாத்திரத்தை தன்பால் வாங்கிக் கொண்டானல்லன்; (தன்பால் வராது) தடுத்தானும் அல்லன்; (எனவே, இப்பொழுதும் இதனை எதிர்த்து நிற்க) மாட்டாதவன் (ஆதலால்) இறந்தொழிந்தான்' என்று எண்ணி (இந்திரசித்து என்மேல் பிரமாத்திரத்தை)ச் செலுத்தினான். (எனது வன்மையைக்) காட்டாது மறைத்துக் கொண்டால் அது செய்யத்தக்க செயலாகாது என்று கருதித் தண்டினையுடைய தாமரை மலரில் அமர்ந்த பிரமனது படையினை (இவ் இந்திரசித்தின் மேற்) செலுத்துவேன் என்று (இலக்குவன்) அப்படையினைச் செலுத்துதற்கு அமைந்தனன்.

கு:- 'மாட்டான் இவன்......முடிந்தான்' என்பது இந்திரசித்தின் உளக் குறிப்பாக இலக்குவன் கொண்டு கூறியது. 'காட்டாது இனிக் கரந்தால் அது கருமம் அல்லது' 'தாள் தாமரை மலரோன் படை தொடுப்பேன்' என்பன இலக்குவன் உட்கோள். மாட்டான்—வலியற்றான். மலரோன்படை—பிரமாத்திரம். காட்டுதல்—தனது வன்மையைப் புலப்படுத்துதல். கருமம்—செய்தற்குரிய செயல். அலது—அல்லாதது. சமைதல்—செய்தற்குப் பொருந்துதல். (135)

9204 நன்றாகுக வுலகுக்கென
முதலோன்மொழி நவின்றான்
பின்றாதவ னுயிர்மேற்செல
வொழிகென்பது பிடித்தான்
ஒன்றாகவிம் முதலோன்படை
தனைமாய்க்கவென் றுரைத்தான்
நின்றானது துரந்தானவ
னலம்வானவர் நினைந்தார்.

'நன்று ஆகுக உலகுக்கு' என
முதலோன்மொழி நவின்றான்;
'பின்றாதவன் உயிர்மேற் செலவு
ஒழிக' என்பது பிடித்தான்;

'ஒன்ருக இம் முதலோன்படை
தனை மாய்க்க' என்று உரைத்தான்;
நின்ருன், அது துரந்தான்; அவன்
நலம் வானவர் நினைத்தார்.

பொ:- 'உலகத்திற்கு(த் தீங்கின்றி) நன்மையுண்டாகுக' என்று கூறிப் பிரமதேவனுக்குரிய மந்திரத்தை அபிமந்திரித்தவனுகி, (வஞ்சனையாற் கொடும்போர் செய்வதிற்) பின்னிடாதவனுகிய இந்திர சித்தின் உயிர்மேற் செல்லா தொழிக' என நெறிப்படுத்தும் உறுதி யுடன் (அப் படையினைப்) பற்றியவனுகி, ('உலகிற்கு) முன்ஞேனது படையினை உறுதியாக அழித்தொழிப்பாயாக' என்று சொல்லி நின்று அப்படையினைச் செலுத்தினுன். (இலக்குவனுகிய) அவனது (அருளுடை மையாகிய) நலத்தினைத் தேவர்கள் எண்ணி வியந்தனர்.

கு:- முதலோன் என்றது, படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத் தொழிற்குரியராய மூவருள் முதலில் வைத்து எண்ணப்பட்டு முதற்ருெழிலாகிய படைப்புக்கு உரிமையுடையவனுய் உலகத் தோற் றத்துக்கு முன்னே தோன்றியவனுகிய பிரமனை. 'தொடங்கற்கண் தோன்றிய முதியவன்' எனப் பாலைக்கலியிலும் 'ஆதிக்கண்ணுன்' எனத் திருத்தாண்டகத்திலும் பிரமனைக் குறித்து வரும் தொடர்கள் இங்கு ஒப்பு நோக்கியுணர்தற் குரியனவாகும். மொழி என்றது, முதலோ னுகிய அத்தெய்வத்தைக் குறித்துக் கூறப்படும் மந்திரத்தினை. தெய் வப் படைக்கலங்களை ஏவுவோர் அவற்றுக்குரிய அதி தெய்வங்களை மந்திரத்தால் அபிமந்திரித்து வழிபடுதல் மரபு. இந்திரசித்தினுல் ஏவப்பட்டு வரும் பிரமாத்திரத்தினைத் தடுத்தழித்தற் பொருட்டு மாற்றுப் படையாக அதே பிரமாத்திரத்தினை விடுதற்கு முற்பட்ட இலக்குவன் தன்னுல் ஏவப்படும் அப்படையினுல் உலகுக்கு எத்தகைய தீங்கும் நேராதபடிநன்மையுண்டாகவும் தன்னைக் கொல்ல முற்பட்ட பகைவனுகிய இந்திரசித்தின் உயிர்க்குத் தீங்கு நேராதபடியும் அப் படையின் இயக்கத்தை அளவுட்படுத்திச் செலுத்தியதனைக் கண்ட எண்ணிகள் பகைவனிடத்தும் அவன் கொண்ட பண்புடைமையினை தேவர் வியந்தார்கள் என்பதாம். (136)

9205 தான்விட்டது மலரோன்படை
யெனின்மற்றிடை தருமே
வான்விட்டது மண்விட்டது
மறவோனுட லறுமே

தேன்விட்டுகு மலரோன்படை
தீர்ப்பாயெனத் தெரிந்தான்
ஊன்விட்டவன் மறம்விட்டில
னெனவானவ ருவந்தார்.

'தான் விட்டது மலரோன் படை
எனின், மற்று இடை தருமே?
வான் விட்டதும், மண் விட்டதும்,
மறவோன் உடல் அறுமே,
'தேன்விட்டிடு மலரோன் படை
தீர்ப்பாய்' எனத் தெரிந்தான்;
'ஊன் விட்டவன் மறம் விட்டிலன்'
என, வானவர் உவந்தார்.

பொ:- இலக்குவன் ஏவியது பிரமாத்திரம் என்றால் அது (பகைவர் படையினை எதிர்த்துச் செல்வதன்றிப்) பின்னிடக் கூடியதோ? (அவன் பணித்த வண்ணம் அது) வானுலகத்தை (அழிக்காமல்) விட்டது; மண்ணுலகத்தை (அழிக்காமல்) விட்டது. (அதனால் இந்திரசித்தை அவன் கொல்ல எண்ணியிருப்பின்) வீரனாகிய இந்திர சித்தின் உடம்பு அறுபட்டு அழிந்திருக்கும். 'தேனைச் சொரியும் தாமரை மலரிடத்தோனாகிய பிரமனுக்குரிய பிரமாத்திரத்தினை மட்டும் அழித்தொழிப்பாய்' என்று அறிந்து செலுத்தினான். 'குற்றத்தினைக் களைந்தவனாகிய இலக்குவன் (தனக்கேயுரிய) வீரத்திறனை விட்டு நீங்கினானல்லன்' என்று தேவர்கள் உவந்து பாராட்டினார்கள்.

கு:- இடைதல்—தோற்றுப் பின்னிடுதல். வினா ஏகாரம் எதிர் மறைப் பொருள் தந்தது. 'வான் விட்டது, மண் விட்டது' என்றது, இலக்குவன் ஏவிய பிரமாத்திரத்தினை. ஊன் விட்டவன் என்றது, தன் கண் குற்றம் வாராது களைந்தோனாகிய இலக்குவனை. மறம் என்றது, தறுகண் வீரர்க்குரிய பண்புகளில் ஒன்றாகிப் பகைவர்பாலும் அருளுடையராய்ப் பழகும் கருணை மறத்தினை. (137)

9206 உருமேறுவந் தெதிர்ந்தாலத
னெதிரேநெருப் புய்த்தால்
வருமாங்கது தவிர்ந்தாலென
மறவோன்படை மாயத்

திருமா றனக் கிளையான்படை
யுலகேழையுந் தீய்க்கும்
அருமாகன லென நின்றது
விசும்பெங்கணு மாகி.

உரும்ஏறு வந்து எதிர்ந்தால், அதன்
எதிரே நெருப்பு உய்த்தால்,
வரும் ஆங்கது தவிர்ந்தாலென,
மறவோன் படை மாய,
திருமால் தனக்கு இளையான் படை
உலகு ஏழையும் தீய்க்கும்
அருமாகனல் எனநின்றது,
விசும்பு எங்கணும் ஆகி.

பொ:- பேரிடி வந்து எதிர்த்தால் அதன் எதிராகத் தீத்திரளைச் செலுத்தினால் எதிர்வரும் அந்த நெருப்பு (இடியால்) சிதைந்தழிந்தாற் போன்று, இந்திரசித்தினது (பிரமாத்திரமாகிய) படை சிதைந்தழியத் திருமாலின் அவதாரமாகிய இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குவன் செலுத்திய பிரமாத்திரம் ஏழுலகங்களையும் சுட்டெரிக்கும் அணுகுதற்கரிய (ஊழிக்காலத்துப்) பெருந்தீ என்னும்படி ஆகாயமெங்கும் பரவி நின்றது.

கு:-இலக்குவனது பிரமாத்திரத்திற்கு இடியேறும், அதனாற் சிதைவுற்றழிந்த இந்திரசித்தின் பிரமாத்திரத்திற்கு அவ்விடியினாற் சிதைவுற்றழியும் நெருப்பும் உவமையாயின. திருமால் என்றது, அம் முதல்வனது அமிசமாகிய இராமபிரானை. இளையான்—தம்பி; இலக்குவன்.

**9207** படையங்கது படராவகை
பகலோன்குல மருமான்
இடையொன்றது தடுக்கும்படி
செந்தீயுக வெய்தான்
தொடையொன்றினைக் கணமீமிசைத்
துறுவாயினி யென்றான்
விடமொன்றுகொ டொன்றீர்ந்தது
போறீர்ந்தது வேகம்.

படை அங்கு அது படரா வகை,
பகலோன் குல மருமான்,
இடை ஒன்று அது தடுக்கும்படி
செந்தீஉக எய்தரின்,
தொடை ஒன்றினை, கணைமீமிசைத்
துறுவாய் இனி' என்றான்;
விடம் ஒன்றுகொடு ஒன்று ஈர்ந்தது
போல் தீர்ந்தது, வேகம்.

பொ:- சூரியனது குலத்தில் தோன்றியவனாகிய இலக்குவன், அங்கு(த் தன்னால் ஏவப்பட்ட) பிரமாத்திரம் (வானத்திற்) பரவிச் செல்லாதபடி அதன் வன்மையைத் தடுத்துக் குறைத்தற் பொருட்டுத் தொடுக்கப்படுவதாகிய அம்பு ஒன்றினை(ப் பிரமாத்திரமாகிய)'அம்பின் மீது இனி நெருங்கிச் செல்வாயாக' என்று கூறியவனாகி அதனிடையே மற்றோரம்பினைச் சிவந்த தீப்பொறி சிதற ஏவினான். (அதனால்) ஒரு நஞ்சினைக் கொண்டு மற்றொரு நஞ்சு ஈரப்பட்டுத் தன் வலி கெட்டழிந் தாற்போன்று (பிரமாத்திரமாகிய) அதன் வேகம் தீர்ந்தொழிந்தது.

கு:- பகலோன் குலம்—சூரிய குலம். மருமான்—வழித்தோன்றல்; என்றது, இலக்குவனை. இலக்குவன், தன்னால் ஏவப்பட்ட பிரமாத்திர மானது, இந்திரசித்தின் பிரமாத்திரத்தை அழித்து விசும்பு முழுவதும் தீப்பிழம்பாகிப் பரவி நின்றதனை, மேலும் அதன்மீது ஓரம்பினைச் செலுத்தி அதன் வேகத்தைக் குறைத்தழித்தான் என்றவாறு. முன் செலுத்திய பிரமாத்திரத்தின் வேகம் பின்னே செலுத்திய மற்றோரம் பினால் குறைந்தழிந்ததற்கு ஒரு நஞ்சு மற்றொரு நஞ்சினால் தீர்ந் தொழிதலை உவமை கூறினார் ஆசிரியர். தொடை—தொடுக்கப்படுவ தாகிய அம்பு. துறுதல்—நெருங்குதல். (139)

தேவர்களது மகிழ்ச்சியும் சிவபெருமான் இராம இலக்குவரது பிறப்பின் உண்மையினை விளக்குதலும்

9208 விண்ணோரது கண்டார்வய
வீரர்க்கினி மேன்மேல்
ஒண்ணாதன வுளவோவென
மனந்தேறின ருவந்தார்

கண்ணார் நுதற் பெருமானிவர்க்
கரிதோவெனக் கடைபார்த்
தெண்ணாதிவை பகர்ந்தீர்பொருள்
கேளீரென விசைத்தான்.

விண்ணோர் அது கண்டார், 'வய
வீரர்க்கு இனி மேன்மேல்
ஒண்ணாதன உளவோ?' என
மனம் தேறினர், உவந்தார்;
கண் ஆர் நுதற் பெருமான், 'இவர்க்கு
அரிதோ?' எனக் கடைபார்த்து,
'எண்ணாது இவை பகர்ந்தீர்; பொருள்
கேளீர்!' என இசைத்தான்.

பொ:- தேவர்கள் (இலக்குவன் செய்த) அச்செயலைக் கண்டார்கள். 'வன்மைமிக்க பெரு வீரராகிய இராம இலக்குவர்கட்குச் செய்து முடிக்க ஒண்ணாத (அரிய) செயல்களும் இனி உள்ளனவோ?' என்று கூறி(க் கவலை நீங்கி) மனந் தெளிந்தவர்களாய் மகிழ்ச்சியுற்றார்கள். கண் பொருந்திய நெற்றியினையுடைய இறைவனாகிய சிவபெருமான், 'இவ்வீரர்கட்கு (இது) செய்தற் கரியதோ?' என்று சொல்லிக் கடைக்கண்ணோக்கஞ் செய்து, 'எண்ணிப் பாராது இம் மொழிகளைக் கூறினீர்கள். (இவ்விருவருடைய பேராற்றலாகிய) பொருளியல்பினை உள்ளவாறு கேட்பீராக என்று (பின்வருமாறு) கூறினன்.

கு;- கண் ஆர் நுதற் பெருமான்—கண் பொருந்திய நெற்றியையுடைய இறைவன்; சிவபெருமான். கடை பார்த்தல்—கடைக் கண்ணால் அருளுடன் நோக்குதல். சிவபெருமான் கூறியன பின்வரும் நான்கு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (140)

9209 நாராயண நரரென்றிவ
ருளராய்நமக் கெல்லாம்
வேராய்முழு முதற்காரணப்
பொருளாய் வினை கடந்தார்
ஆராயினுந் தெரியாததொர்
நெடுமாயையி னகத்தார்
பாராயணமறை நான்கையுங்
கடந்தாரிவர் பழையோர்.

'நாராயண நரர் என்று இவர்
உளராய், நமக்கு எல்லாம்
வேராய், முழு முதல் காரணப்
பொருளாய், வினை கடந்தார்;
ஆராயினும் தெரியாதது ஓர்
நெடு மாயையின் அகத்தார்;
பாராயண மறை நான்கையும்
கடந்தார்; இவர் பழையோர்.

பொ:- (இராம இலக்குவர் என்னும்) இவர்கள், நாராயணன் நரன் என்று உள்ளவர்கள்; நமக்கெல்லாம் மூலகாரணமாகவுள்ள முழுமுதற் பொருளாய் வினைத் தொடர்பைக் கடந்தவர்கள்; எத்திறத் தோராயினும் தெரிந்து உணர வொண்ணாத தொரு பெரிய மாயையி னுள்ளே மறைந்திருப்பவர்கள்; (அறிஞர்களால்) இடை விடாது ஓதப் பெறும் வேதங்கள் நான்கினையுங் கடந்து அப்பாற்பட் டுள்ளவர்கள். இவர்கள் மிகவும் தொன்மையுடையோர்.

கு:- காத்தற் கடவுளாகிய திருமால், உலகத்தாரிக்கு ஆசிரியர் மாணவர் நெறி முறையினை அறிவுறுத்தற் பொருட்டுப் பதரிகாச்சிர மத்தில் நரன் நாராயணன் என இருவராகத் தோன்றி, நரனாகிய மாணவனுக்கு நாராயணன் ஆசிரியனாக அமர்ந்து திருமந்திரப் பொருளை உபதேசித் தருளினான் என வைணவ நூல்கள் கூறும். அங்ஙனம் நாராயணனாகவும் நரனாகவும் அவதரித்த திருமாலே இப் பொழுது இராம இலக்குவராக அவதரித்துள்ளார் என்றவாறு. இச் செய்தி,

'உன்னை நான் பிரிவதில்லை
ஒருமுறை பிரிந்து மேனாள்
நன்னிலா வெறிக்கும் பூணாய்
நரனு நாரணனு மானோம்
பின்னொரு பிறப்பில் யாமே
இராமலக் குவப்பேர் பெற்றோம்'

என அருச்சுனனுக்குக் கண்ணன் கூறுவதாக அமைந்த வில்லிபாரதச் செய்யுளாலும் நன்கு விளங்கும். வேர்—மூலம். ஆராயினும்—யாவரா யினும்; யார் ஆர் என மருவியது. 'யாவராயினு மன்பரன்றி யறி யொணா மலர்ச் சோதியான்' என வரும் திருவாசகத் தொடர் இங்கு நினைத்தற் குரியதாகும். (141)

9210 அறத்தாறழி வுளதாமென
வறிவுந்தொடர்ந் தணுகாப்
புறத்தார்புகுந் தகத்தாரெனப்
பிறந்தாரது புரப்பார்
மறத்தார்குல முதல்வேரற
மாய்ப்பானிவன் வந்தார்
திறத்தாலது தெரிந்தியாவருந்
தெரியாவகை திரிவார்.

“அறத்தாறு அழிவு உளது ஆம்” என,
அறிவும் தொடர்ந்து அணுகாப்
புறத்தார், புகுந்து அகத்தார் எனப்
பிறந்தார், அது புரப்பார்;
மறத்தார் குலம் முதல் வேர் அற
மாய்ப்பான், இவண் வந்தார்;
திறத்தால் அதுதெரிந்து, யாவரும்
தெரியாவகை திரிவார்.

பொ:- அறிவும் தொடர்ந்து நெருங்க முடியாத (சிந்தைக்கு) அப்புறத்தே யுள்ளாராகிய அவர்கள், (உலகத்து) ‘அறநெறி அழிவுட்படுவதாயிற்று’ என்று அவ் அறத்தினை (நிலை நிறுத்தி)க் காப்பவராய், உலகின் அகத்திலும் நீங்காது உள்ளார் என்னும் படி புகுந்து (இராம இலக்குவர் எனப்) பிறந்தருளினர். (தமது அருளின்) திறத்தால் (அறத்தினைக் காத்தலாகிய) அம்முறையினை ஆராய்ந்து (பிறர் யார்க்கும் தமது இயல்பு) புலனாகாதவாறு சஞ்சரிப்பவர்களாகிய இவர்கள், தீவினையாளராகிய அரக்கர் குலத்தை அதன் மூலமாகிய வேருடன் அற்றுச் சிதைய அழித்தற் பொருட்டு (இலங்கையாகிய) இவ்விடத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

கு:- அறிவும் தொடர்ந்து அணுகாப் புறத்தார், ‘அறத்து ஆறு அழிவுளதாம்’என, அது புரப்பார், அகத்தார் எனப் புகுந்து பிறந்தார்; திறத்தால் அது தெரிந்து யாவரும் தெரியாவகை திரிவார், மறத்தார் குலம் முதல் வேர் அற மாய்ப்பான் இவண் வந்தார் என இயைத்துரைக்க. கற்றுணர்ந்த ஞானியர்களது நுண்ணிய அறிவினாலும் தொடர்ந்து ‘இன்ன வியல்பினர் இவர்’ என அறிய வொண்ணாதவாறு மாற்றம் மனங்கடந்து நிற்கும் முழுமுதற் கடவுளாகிய இவர்கள், அறத்திற்கு அழிவு நேர்ந்துளதாம் என அறிந்த நிலையில் இவ்வுலகின்

அகத்திலும் நீங்காதுள்ளவர் என்னும்படி புகுந்து இராம இலக்குவராக அவதரித்து, தமது அவதாரத்தின் நோக்கத்தினைப் பிறர் அறிந்து கொள்ளாதவாறு சஞ்சரிப்பவர்கள், அறத்தினைக் காக்கும் உபாயத்தினை அறிந்து, தீத் தொழிலாளராகிய அரக்கரது குலத்தை வேரறக் களைதற்பொருட்டு இலங்கையாகிய இவ் விடத்தின்கண் வந்துள்ளார்கள் என்பதாம். (142)

9

211 உயிர்தோறுமுற் றுளன்றோத்திரத்
தொருவன்னென வுரைக்கும்
அயிரா நிலை யுடையானிவ
னவனிவ்வுல கனைத்தும்
தயிர்தோய்பிரை யெனலாம் வகை
கலந்தேறிய தலைவன்
பயிராததொர் பொருளின்னதென்
றுணர்வீரிது பரமால்.

"உயிர்தோறும் உற்றுளன், தோத்திரத்து
ஒருவன்" என உரைக்கும்
அயிராநிலை உடையான் இவன்;
அவன், இவ் உலகு அனைத்தும்
தயிர்தோய் பிரை எனல் ஆம் வகை
கலந்து, ஏறிய தலைவன்;
பயிராதது ஓர் பொருள் இன்னது என்று
உணர்வீர்; இது பரமால்.

பொ:- உயிர்கள் தோறும் பொருந்தி யுள்ளவனுகிப் போற்றுதற் பொருளாயுள்ள ஒப்பற்ற முதல்வன் என்று உயர்த்துக் கூறப்படும் ஐயுறப்படாத இறை நிலையை யுடையவன் (இலக்குவன் என்னும்) இவன் ஆவன். (இராமனுகிய) அவன், இவ்வுலகங்கள் எல்லாவற்றிலும் (பால்) தயிராதற்குரிய பிரைமோர் என்று சொல்லும்படி (நீக்கமறக்) கலந்து பரவி நின்ற தலைவன் ஆவன். (இன்ன தன்மைய தென்று) சொல்லவொண்ணுத முழுமுதற்பொருள் இத்தன்மையதென்று உணர்வீராக. (நும் கண்ணுக்குப் புலனுகிய) இதுவே பரம் பொருளாகும்.

கு:- உயிர்க்குயிராகியும் உலகங்கள் எல்லாவற்றிலும் தயிர்தோய் பிரை எனக் கலந்து ஒன்றுகியும் முழுமுதற் பொருளே இராம இலக்குவர் என்னும் இருவராக அவதரித்துள்ளது என்பதாம். அயிரா நிலை— ஐயுறப்படாத (தெய்வ) நிலை. அயிர்த்தல்—ஐயுறுதல். பயிர்தல்

—அழைத்தல்; சொல்லுதல் என்ற பொருளிற் பயின்றது. பரம்—மேலான பொருள்; கடவுள். (143)

9212 நெடும் பாற்கடற் கிடந்தாரும்பண்
டிவர் நீர்குறை நேர
விடும்பாக்கிய முடையார்களைக்
குலத்தோடற வீட்டி
இடும்பாக்கியத் தறங்காப்பதற்
கிசைந்தாரென விதெலாம்
அடும்பாக்கிய தொடைச் செஞ்சடை
முதலோன் பணித் தமைந்தான்.

'நெடும் பாற்கடல் கிடந்தாரும், பண்டு,
இவர்; நீர் குறை நேர,
விடும்பாக்கியம் உடையார்களைக்
குலத்தோடு அற வீட்டி,
இடும்பாக்கியத்து அறம் காப்பதற்கு
இசைந்தார்' என இது எலாம்,
அடும்பு ஆக்கிய தொடைச் செஞ்சடை
முதலோன் பணித்து அமைந்தான்.

பொ:- 'நீண்ட பாற்கடலின் கண்ணே அறிதுயில் கொண்டவர்களும் இவர்களே. முன்னாளில் நீங்கள் நேரிற் குறையிரந்து வேண்டுதலால், இழக்கும் நற்பேற்றினை யுடையவர்களாகிய அரக்கர்களைக் குலத்தொடும் அற்றொழிடக் கொன்று அளிக்கும் நற்பேற்றினால் அறத்தினை (நிலைநிறுத்திக்) காப்பதற்கு உளம் பொருந்தி வந்துள்ளார்கள்' என்று இச் செய்தியினை யெல்லாம் அடப்ப மலர்களால் தொடுக்கப்பெற்ற|மாலையினையணிந்த செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமான் (தேவர்கட்கு) அறிவுறுத்தி அமைந்தனன்.

கு:- குறை நேர்தல்—குறையிரந்து வேண்டுதல். தாம் முன்னர்ப் பெற்றுள்ள நற்பேறுகளைத் தமது தீவினை காரணமாக இழக்கும் நிலையினையுடையராகிய அரக்கர்கள் என்பது புலப்பட, 'விடும்பாக்கிய முடையார்கள்' எனக் குறித்தார். பாக்கியம்—நற்பேறு. பாற்கடலில் அறிதுயில் கொண்டருளிய திருமாலே தேவர்களாகிய நீங்கள் முற்காலத்திற் குறையிரந்து வேண்டிய வண்ணம் தீவினையாள ராகிய

அரக்கர்களைக் குலத்துடன் அழித்து அறத்தினை நிலை நிறுத்திக் காத்தற்கு இராம இலக்குவராக அவதரித்து இங்கு வந்துள்ளார் என்று சிவபெருமான் இராம இலக்குவரது பிறப்பின் நோக்கத்தினை அறிவுறுத்தி யருளினன் என்பதாம். (144)

### உண்மையினை அறிவுறுத்திய சிவபெருமானைத் தேவர்கள் தொழுது போற்றுதல்

9213 அறிந்தேயிருந் தறியேமவ
னெடுமாயையி னயிர்ப்பேம்.
பிறிந்தேமினி முழுதையமும்
பெருமானுரை பிடித்தேம்
எறிந்தேம்பகை முழுதும்மினித்
தீர்ந்தேமிடர் கடந்தேம்
செறிந்தோர்வினைப் பகைவாவெனத்
தொழுதார்நெடுந் தேவர்.

'அறிந்தே, இருந்து அறியேம், அவன்
நெடு மாயையின் அயர்ப்பேம்;
பிறிந்தேம் இனி முழுது ஐயமும்;
பெருமான் உரை பிடித்தோம்;
எறிந்தேம் பகைமுழுதும்; இனித்
தீர்ந்தேம், இடர் கடந்தேம்;
செறிந்தோர் வினைப் பகைவா!'
எனத்தொழுதார், நெடுந்தேவர்.

பொ:- 'தன்னை அடைந்தவர்களது தீவினைகளைச் சினந்தழிப்பவனே! (இச் செய்தியினை நாங்கள்) முன்னர் அறிந்திருந்தோமாயினும் (மாயோனாகிய) அவனது நெடிய சூழ்ச்சியுள் அகப்பட்டு அவனை அறியாதேமாகி மறந்தோம். எங்கள் பெருமானாகிய நினது அருளுரையினை (உறுதியாகப்) பற்றிக்கொண்டோமாகி இப்பொழுது அம்மாயத்தினின்றும் (எம் மனத்திற் கொண்ட) சந்தேகங்கள் முழுவதும் நீங்கித் தெளிந்தோம். எமது பகை முழுவதனையும் அழித்துப் போக்கினோம்; இடர்களின் நீங்கி வென்றோம்' என்று சொல்லிப் பெருமைமிக்க தேவர்கள் (சிவபெருமானை) வணங்கினார்கள்.

கு:- அன்பினால் தன்னை அடைந்தவர்களது வினையை அழித் தொழித்தலால் 'வினைப்பகைவன்' என்னும் பெயர்க்குரிய பேரருளாளன் சிவபெருமானாகிய நீயே என்பார், 'செறிந்தோர் வினைப் பகைவா' என அழைத்துப் போற்றினார்கள். வினைப்பகைவன்—பாவ நாசனு; வினைக்கேடன். 'பாவநாசா உன் பாதமே யல்லாற்பற்று நான் மற்றிலேன் கண்டாய்' எனவும் 'நான் வினைக்கேடன் என்பாய் போல' எனவும் வரும் திருவாசகத் தொடர்கள் இங்கு ஒப்பு நோக்கி யுணரத் தக்கனவாகும். (145)

இதன்பின் 45, 52ல் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் உளது.

**9213 a** ஈதிங்கிவை நெடுவானிடை
நிகழ்கின்றதிப் பாலில்
காதுங்கொலை யரக்கன்னது
கண்டான்றகை மலர்மேல்
போதன்றரு படைபோக்கினன்
போலாமெனப் புகைந்தான்
ஏதிங்கிவன் வலிநன்றுமற்
றிதுகாண்பெனென் றிசைப்பான்.

மாயோன் படையினை இந்திரசித்து ஏவுதலும் இலக்குவன்,
தன்னைத் திருமாலாகத் தியானித்த அளவில் அது
விலகிப் போதலும்

**9214** மாயோனெடும் படைவாங்கிய
வளைவாளெயிற் றரக்கன்
நீயோவிது தடுத்தாயெனி
னினக்காரெதிர் நிற்பார்
போயோவிசும் படைவாயிது
பிழையாதெனப் புகலாத்
தூயோன்மிசை யுலகியாவையுந்
தடுமாறிடத் துரந்தான்.

மாயோன் நெடும்படை வாங்கிய
வளைவாள் எயிற்று அரக்கன்,
'நீயோ இது தடுத்தாய் எனின்,
நினக்கு ஆர் எதிர் நிற்பார்?
போயோ விசும்பு அடைவாய்? இது
பிழையாது' எனப் புகலா,
தூயோன்மிசை, உலகு யாவையும்
தடுமாறிட, துரந்தான்.

பொ:- திருமாலின் நெடிய படைக்கலத்தினைக் கையிற்கொண்ட வளைந்த கூரிய கோரப்பற்களையுடைய அரக்கனாகிய இந்திரசித்து, (இலக்குவனை நோக்கி,) 'நீ இதனைத் தடுத்தனையே யானால் நின்னை எதிர்க்க வல்லவர் யாருளர்? (உயிர் நீங்கி, இவ்வுலகினை விட்டுப்) போய் விண்ணுலகத்தினை அடைவாய். இப்படையானது (நினது உயிரைக் கொள்வதில்) தவறாது' என்று சொல்லி, உலகங்கள் யாவும் (மயங்கித்) தடுமாறும்படி தூய்மையுடையோனாகிய இலக்குவன்மேல் (அதனைச்) செலுத்தினான்.

கு:- மாயோன் நெடும்படை—சக்கராயுதம்; நாராயணாத்திரம் எனினும் பொருந்தும். அரக்கன்—இந்திரசித்து. தூயோன் என்றது இலக்குவனை—'நீயோ இது தடுத்தாயெனின்... இது பிழையாது' என்பது இந்திரசித்து இலக்குவனை நோக்கிக் கூறியது. அரக்கன், புகலா, உலகு யாவையும் தடுமாறிடத் தூயோன்மிசை (மாயோன் நெடும்படை) துரந்தான் என்க. (146)

இதன்பின் 45—52ல் பின்வருமாறு மிகைப்பாடல் ஒன்று உள்ளது.

**9214 a** உமைபற்றிய பாகன்முத
லிமையோர் பல வுருவஞ்
சமைவுற்றது தானல்லதோர்
பொருள்வேறில தெனவே
அமைவுற்றது பகிரண்டமு
மழிகாலமி தெனவே
குமைவுற்றிட வடவைப்பொறி
கொழிக்கின்றதெவ் வுலகும்.

9215 சேமித்தன ரிமையோர்தமைச்
சிரத்தேந்திய கரத்தால்
ஆமித்தொழில் பிறர்யாவரு
மடைந்தார் பழு தடையாக்
காமிப்பது முடிவிப்பது
படர்கின்றது கண்டான்
நேமித்தனி யரிதானென
நினைந்தானெதிர் நடந்தான்.

சேமித்தனர் இமையோர்தமை,
சிரத்து ஏந்திய கரத்தால்;
ஆம்இத்தொழில், பிறர் யாவரும்
அடைந்தார்; பழுது அடையாக்
காமிப்பது முடிவிப்பது,
படர்கின்றது கண்டான்;
'நேமித் தனி அரி,தான்' என
நினைந்தான், எதிர் நடந்தான்.

பொ:- தேவர்கள், தம் தலைமீது சுமந்த கைகளால் தம்மைப் யாது காத்துக் கொண்டனர். பொருந்திய இச் செயலையே (அங்குள்ள முனிவர் முதலிய) ஏனையோர் எல்லோரும் மேற்கொண்டனர். பழுதுறாத வண்ணம் விரும்பியதனை நிறைவேற்ற வல்லதாகிய அப் படைக்கலம் (தன்னைக் கைக்கூப்பித் தொழுவார் மேற்செல்லாது) நிலத்தில் படிந்து வருவதனைக் கண்ட இலக்குவன், ஒப்பற்ற சக்கரப் படையினை யேந்திய திருமாலேதான் என உணர்ந்தவனாகி (அப் படையின்) எதிரே நடந்து சென்றான்.

கு:- சக்கராயுதம் வருதலைக் கண்டு அஞ்சிய தேவர்களும் பிறரும் அப்படையினால் தமக்குத் தீங்கு நேராதவாறு தம் தலைமேற் கைகளைக் கூப்பித் தொழுது போற்றினாராக, விரும்பியதனை நிறைவேற்ற அப் படை அவர்கள் மேற்செல்லாது பூமியின்மேல் வருதலைக் கண்ட இலக்குவன், அப்படைக்குரிய திருமாலே தான் என எண்ணி அதன் எதிர் சென்றனன் என்றவாறு. நேமித்தனி அரி—ஒப்பற்ற சக்கரா யுதத்தினையுடைய திருமால். (147)

9216 தீக்கின்றதிவ் வுலகேழையு
மெனச் செல்வதுந் தெரிந்தான்
நீக்குந்தர மல்லாமுழு
முதலோனென நினைந்தான்
மீச்சென்றில தயல்சென்றது
விலங்காவலங் கொடுமேல்
போய்த்தங்கது கனன்மாண்டது
புகைவீய்ந்தது பொதுவே.

தீக்கின்றது இவ்வுலகு ஏழையும்
எனச் செல்வதும் தெரிந்தான்;
நீக்கும் தரம் அல்லா முழு
முதலோன் என நினைந்தான்;
மீச்சென்றிலது, அயல் சென்றது,
விலங்கா, வலங்கொடு, மேல்
போய்த்து, அங்கு அது; கனல் மாண்டது
புகை வீய்ந்தது, பொதுவே.

பொ:- இவ்வுலகங்கள் ஏழினையும் சுட்டெரிக்கின்ற தென்னும்படி (அப்படை) செல்வதனையும் தெரிய வுணர்ந்தான்; (ஒருவராலும்) அழித்துப் போக்குந் தன்மையில்லாதோனாகிய முழுமுதற் கடவுளாகிய திருமாலேதான் என்பதனையும் எண்ணினன். அந்நிலையிற் சக்கரப்படையாகிய அது, இலக்குவன் மேற் செல்லா தொழிந்தது; விலகி அவனை வலஞ் செய்துகொண்டு பக்கத்தே சென்றதாகி ஆகாயத்தின் மேற் போயிற்று. பொதுவாக (எங்கும் பரவிய) தீ அழிந்து புகையும் அற்றொழிந்தது.

கு:- அங்கு அது, மீச் சென்றிலது; விலங்கா, வலங்கொடு அயல் சென்றது மேல் போய்த்து; பொதுவே கனல் மாண்டது, புகை வீய்ந்தது என்க. மீ—மேல். போய்த்து—போயிற்று. (148)

9517 ஏத்தாடின ரிமையோர்களுங்
கவியின்குல மெல்லாம்
கூத்தாடின வரமங்கையர்
குனித்தாடினர் தவத்தோர்

காத்தாயுல கனைத்தும் மெனக்
களித்தாடினர் கமலம்
பூத்தானுமம் மழுவாளியு
முழுவாய்கொடு புகழ்ந்தார்.

ஏத்து ஆடினர், இமையோர்களும்
கவியின் குலம் எல்லாம்
கூத்து ஆடின; அர மங்கையர்
குனித்து ஆடினர்; தவத்தோர்
'காத்தாய் உலகு அனைத்தும்' எனக்
களித்து ஆடினர்; கமலம்
பூத்தானும் அம் மழுவாளியும்
முழுவாய்கொடு புகழ்ந்தார்.

பொ:– (அது கண்டு) தேவர்களும் (இலக்குவனைத்) துதித்து ஆடினார்கள்; குரங்கின் கூட்டம் யாவும் (மகிழ்ந்து) கூத்தாடின; தேவ மங்கையர்கள் பரதத் தொழிலை மேற்கொண்டு நடம் ஆடினார்கள்; தவச் செல்வர்களாகிய முனிவர்கள் (இலக்குவனை நோக்கி) 'உலகம் எல்லாவற்றையும் காத்தவன் ஆயினாய்' என்று சொல்லி மகிழ்ந்து ஆடினார்கள். (திருமாலின் உந்தித்) தாமரையிலே தோன்றிய பிரமனும் மழுப்படையினை ஏந்திய அச்சிவபெருமானும் தம் சொற்களைக் கொண்டு புகழ்ந்து பாராட்டினார்கள்.

கு:- ஏத்து—துதி. முழுவாய் கொடு புகழ்தலாவது, பொருள் நிரம்பிய சொற்களைக் கொண்டு வாயாரப் புகழ்ந்து பாராட்டுதல். (149)

சிவனது படையினை இந்திரசித்து விடுதல்

9518 அவனன்னது கண்டானிவ
ளுரோவென வயிர்த்தான்
இவனன்னது முதலேயுடை
யிறையோனென வியவா
எவனென்னினு நன்றுகுவ
தினியெண்ணல னென்னுச்
சிவனன்படை தொடுத்தாருயிர்
முடிப்பேனெனத் தெரிந்தான்.

அவன் அன்னது கண்டான்,
'இவன் ஆரோ?' என அயிர்த்தான்;
'இவன் அன்னது முதலே உடை
இறையோன் என வியவா,
'எவன் என்னினும் நின்று ஆகுவது
இனி எண்ணிலன்' என்னு,
'சிவன்நன்படை தொடுத்து
ஆருயிர் முடிப்பேன்' எனத் தெரிந்தான்.

பொ:- (இந்திரசித்து என்னும்) அவன், (இலக்குவனை வலங் கொண்டு சென்ற) படையினைக் கண்டான்; 'இலக்குவனாகிய இவன் அப்படையினைத் தொன்மையே கொண்டுள்ள (திருமாலாகிய) இறைவனே' என்று வியந்து, 'இவன் யாவன் ஆயினும் (எனது போர்ச் செயல்) நன்றாக நிறைவுறுக. இனி (வேறு எதனையும்) எண்ணுவே னல்லன்' என்று சிவபெருமானது நல்ல (பாசுபதப்) படையினைத் தொடுத்து இவனது அரிய உயிரைப் போக்குவேன்' என்று தேர்ந்து துணிந்தான்.

கு:- அவன் என்றது, இந்திரசித்தினை. அன்னது—அத்தன்மைய தாகிய மாயோனது படைக்கலம். இவன் என்றது, இலக்குவனை. அன்னது முதலேயுடை இறைவன்—அப்படையினை முன்னரே தனக் குரியதாகக் கொண்ட திருமால். 'திருமாலின் அமிசமே இலக்குவன்' என்னும் உண்மையினை இந்திரசித்து ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொண்டான் ஆயினும் வீரத்திற் குன்றாத மானமுடைய அவன், 'எவன் எனினும் நன்றாகுக, இனி எண்ணலன்' என்று சிவனது பாசு பதப்படையினை இலக்குவன் மேற் செலுத்துதற்கு ஆராய்ந்து துணிந் தான் என்பதாம். (150)

9219 பார்ப்பான்றரு முலகியாவையு
மொருநாளொரு பகலே
தீர்ப்பான்படை தொடுப்பேனெனத்
தெரிந்தானது தெரியா
மீப்பாவிய விமையோர்குலம்
வெருவுற்றதிப் பொழுதே
மாய்ப்பானென வுலகியாவையு
மறுகுற்றன மயங்கா.

பார்ப்பான் தரும் உலகு யாவையும்
ஒரு நாள் ஒருபகலே
தீர்ப்பான் படை தொடுப்பேன்'
எனத் தெரிந்தான்; அது தெரியா,
மீப் பாவிய இமையோர் குலம்
வெருவுற்றது; 'இப்பொழுதே
மாய்ப்பான்' என உலகு யாவையும்
மறுகுற்றன, மயங்கா.

பொ:- 'வேதியனாகிய பிரமன் படைத்த உலகங்கள் எல்லாவற்றையும் ஒரே நாளில் ஒரு பொழுதுக்குள் அழித்தலில் வல்லவனாகிய சிவனது படையினை (இலக்குவன் மேல்) தொடுத்து விடுவேன்' எனத் தெரிந்து எடுத்தான் (இந்திரசித்து); அதனைத் தெரிந்து ஆகாயத்தின் மேல் பரவி நின்ற தேவர் கூட்டம் அஞ்சி நடுங்கியது. 'இவன் இப்பொழுதே அழித்தொழிப்பான்' என்று எல்லா உலகங்களும் மயங்கித் தடுமாற்றமடைந்தன.

கு:- பார்ப்பான்—வேதங்களை ஓதுதலையுடைய வேதியன்; என்றது பிரமனை. பகல்—பொழுது; கணம் என்னும் பொருளில் ஆளப்பட்டது. 'ஒருபொழுதும் வாழ்வதறியார்' (திருக்குறள்—337) என்புழிப் பொழுது என்ற சொல் சிறிய கால அளவு என்ற பொருளில் வழங்கப் பெற்றிருத்தல் காண்க. தீர்ப்பான்—அழித்தற் கடவுளாகிய சிவபெருமான். அவனது படை என்றது, பாசுபத அத்திரத்தினை. மீ—மேலிடம்; விசும்பு. பாவுதல்—பரவிநிற்றல். உலகுயாவையும் மயங்கா, மறுகுற்றன என்க. (151)

9220 தானேசிவன் றரப்பெற்றது
தவநாள்பல வுழந்தே
தானேபிற ரறியாதது
தந்தேனெனச் சமைந்தான்
ஆனாலிவ னுயிர்கோடலுக்
கையம்மிலை யென்னா
மேனாளுமி தனையேவிடி
னெதிர் நிற்பவ ரில்லை.

'தானே சிவன் தரப் பெற்றது,
தவம் நாள்பல உழந்தே;
தானே, 'பிறர் அறியாதது
தந்தேன்' எனச் சமைந்தான்;

ஆனால், இவன் உயிர் கோடலுக்கு
ஐயம் இலை' என்னா,
மேல்நாளும் இதனையே விடின்
எதிர் நிற்பவர் இல்லை.

பொ:- (இது யான்) பல நாட்கள் வருந்தித் தவஞ் செய்தமையால் சிவபெருமான் தானே வந்து தரப்பெற்ற ஆயுதமாகும். அவ் இறைவன் தானே பிறர் பெற்றறிலாத இதனைத் தந்தேன் என்று சொல்லி (மேலும்) பொருந்தி அளித்தான். முற்காலத்திலும் இப் படையினைச் செலுத்தினால் இதன் எதிர் நிற்பவர் ஒருவரும் இல்லை. ஆதலால் (இப்படையானது) இவ் இலக்குவனது உயிரைக் கவர்ந்து செல்வதிற் சிறிதும் சந்தேகம் இல்லை என்று,

கு:- இச் செய்யுள், குளகம். 'என்னா' என்னும் வினையெச்சம், அடுத்த செய்யுளில் வரும் 'விட்டான்' என்னும் வினையைக் கொண்டு முடியும். (152)

**9221** மனத்தான்மலர் புனல்சாந்தமொ
டவிதூபமும் வகுத்தான்
நினைத்தானிவ னுயிர்கொண்டிவ
ணிமிர்வாயென நிமிர்ந்தான்
சினத்தானெடுஞ் சிலைநாண்டடந்
தோண்மேலுறச் செலுத்தா
எனைத்தாயதொர் பொருளாலிடை
தடையில்லதை விட்டான்.

மனத்தால், மலர் புனல் சாந்தமொடு
அவி தூபமும் வகுத்தான்;
நினைத்தான்; 'இவன் உயிர்கொண்டு இவண்
நிமிர்வாய்' என நிமிர்ந்தான்;
சினத்தால் நெடுஞ்சிலை நாண் தடந்
தோள்மேல் உறச் செலுத்தா,
எனைத்து ஆயது ஓர் பொருளால் இடை
தடை இல்லதை விட்டான்.

பொ:- பூவும் நீரும் சந்தனமும் திருவமுதும் நறும்புகையும் ஆகிய (வழிபாட்டுப்) பொருள்களைத் தன் மனத்தினாலே வகுத்துக் கொண்ட

வணங்கி நினைத்து வழிபட்டான். 'இவ் உலக்குவனது உயிரைக் கவர்ந்து கொண்டு இங்கு மேற்பட்டெழுவாயாக' என நிமிர்ந்த வணங்கி, வெகுளியால் நெடிய வில்லின் நாணினைத் தனது பெரிய தோள் வரையிலும் பொருந்த வலித்து இழுத்து, எத்தகைய தொரு பொருளாலும் இடை நின்று தடுத்தற்கியலாத (பாசுபதப்) படையினை (இலக்குவன்மேற்) செலுத்தினன் (இந்திரசித்து).

கு:- மலர் புனல் சாந்தமொடு அவி தூபம் மனத்தால் வகுத்தான், நினைத்தான், 'இவன் உயிர்கொண்டு இவண் நிமிர்வாய்' என நிமிர்ந்தான், சினத்தால் நெடுஞ்சிலை நாண் தடந்தோள் உறச் செலுத்தா, தடையில்லதை விட்டான் என்க. 'எனைத்தாயதொர் பொருளால் இடை தடை இல்லது' என்றது, எத்தகைய ஆற்றல்மிக்க ஆயுதத்தாலும் தடுத்து மாற்ற வெண்ணாத பேராற்றல் வாய்ந்த பாசுபதாத்திரத்தினை. (153)

## சிவனது படையினால் தோன்றிய விளைவுகள்

**9222** சூலங்களு மழுவுஞ்சுடு
கணையுங்கனல் சுடரும்
ஆலங்களு மரவங்களு
மசனிக்குல மெவையும்
காலன்றன துருவங்களுங்
கரும்பூதமும் பெரும்பேய்ச்
சாலங்களு நிமிர்கின்றன
வுலகெங்கணுந் தானாய்,

சூலங்களும், மழுவும், சுடு
கணையும், கனல் சுடரும்,
ஆலங்களும், அரவங்களும்,
அசனிக்குலம் எவையும்,
காலன்தனது உருவங்களும்,
கரும்பூதமும், பெரும் பேய்ச்
சாலங்களும் நிமிர்கின்றன,
உலகு எங்கணும் தான் ஆய்.

பொ:-(அப்பொழுது, அப்பாசுபதப் படையினின்றும்) சூலங்களும் மழுப் படைகளும் சுட்டெரிக்கும் அம்புகளும் கனன்றெரியும் தீச்சுடர்

களும் நஞ்சுகளும் பாம்புகளும் இடித்தொகுதிகள் யாவையும் இயமனுடைய வடிவங்களும் கரிய பூதங்களும் பெரிய பேய்க் கூட்டங்களும் உலகில் எவ்விடங்களிலும் ஆகி எழுந்து தோன்றுவனவாயின.

கு:- ஆலம்—நஞ்சு. சாலம்—கூட்டம்; தொகுதி. (154)

9223 ஊழிக்கன லொருபாலத
னுடனேதொடர்ந் துடற்றும்
சூழிக்கொடுங் கடுங்காற்றத
னுடனேவரத் தூர்க்கும்
ஏழிற்குமப் புறத்தாயுள
பெரும் போர்க்கட லிழிந்தாங்
காழித்தலைக் கிடந்தாலென
நெடுந்தூங்கிரு ளடைய.

ஊழிக் கனல் ஒருபால் அத
னுடனே தொடர்ந்து உடற்றும்;
சூழிக் கொடுங் கடுங்காற்று அத
னுடனே வர, தூர்க்கும்
ஏழிற்கும் அப்புறத்தாய் உள
பெரும் போர்க்கடல் இழிந்தாங்கு
ஆழித்தலைக் கிடந்தால் என
நெடுந்தூங்கு இருள் அடைய.

பொ:- ஊழி முடிவிலே தோன்றும் பெருந்தீ ஒரு பக்கத்தே அப் (பாசுபதப்) படையினுடனே தொடர்ந்து வந்து வருத்தும்; சுழன்று வீசுந் தன்மைய தாகிய கொடிய கடுங்காற்று, அப்படையி னுடனே தொடர்ந்து வர, ஏழு கடல்களுக்கும் அப்புறத்ததா யுள்ள (அலைகள்) பொருதலையுடைய பெரும் புறக்கடல் இறங்கி வந்து (சேனைக்) கடலினிடத்தே படிந்து கிடந்தாற் போன்று நெடியதாய்த் தங்கிய பேரிருள், (உலகம் எல்லாவற்றையும்) செறியத் தூர்த்தது.

கு:- ஊழிக்கனல்—யுகமுடிவில் உலகினை யழிக்கத் தோன்றும் பெருந்தீ. உடற்றும்—வருத்தும். சூழி—சுழன்று வீசுதலையுடைய. தூர்த்தல்—மூடுதல். ஆழித்தலை—(சேனைக்) கடலினிடத்தே; தலை, ஏழாம் வேற்றுமையுருபு. இருள், அடையத் தூர்க்கும் என முடிக்க. இந்திரசித்து ஏவிய பாசுபதத்தால் போர்க்களமெங்கும் தீயும் காற்றும் பேரிருளும் செறிந்தன என்பதாம். (155)

9224 இரிந்தார்குல நெடுந்தேவர்க
ளிருடிக்குலத் தெவரும்
பரிந்தாரிது பழுதாகில
திறுவானெனும் பயத்தால்
நெரிந்தாங்கழி குரங்குற்றது
பகருந்துணை நெடிதே
திரிந்தாரிரு சுடரோருல
கொருமூன்றுடன் றிரிய.

இரிந்தார் குலநெடுந் தேவர்கள்;
இருடிக்குலத்து எவரும்
பரிந்தார். 'இருபழுது ஆகிலது,
இறுவான்' எனும் பயத்தால்;
நெரிந்து ஆங்கு அழிகுரங்கு உற்றது
பகருந்துணை நெடிதே.
திரிந்தார், இரு சுடரோர்; உலகு
ஒரு மூன்று உடன் திரிய.

பொ:- சிறந்த பெருமை வாய்ந்த தேவர்கள் (பாசுபதாத்திரத்தைக் கண்டு) அஞ்சி ஓடினர்கள்; முனிவர் கூட்டத்திலுள்ளார் யாவரும், 'இப்படை (தன் இலக்கில்) தவறுபடாது; (எனவே, இலக்குவன்) இறந்துபடுவான்' என்னும் அச்சத்தால் வருத்த முற்றார்கள்; அங்கு நெரிதலுற்று அழிந்த குரங்குகள் அடைந்த துயரம் சொல்லுங்கால் அவ்வுரை மிகவும் நீளுந்தன்மையதே; (சூரிய சந்திரர்களாகிய) சுடர்கள் இருவரும் உலகங்கள் ஒரு மூன்றும் தம்முடன் திரிய (ஒரு நிலையில் நில்லாது) ஓடித் திரிந்தனர்.

கு:- குலம்—நன்மை; சிறப்பு. இருடிக்குலம்—முனிவர் கூட்டம். இருசுடரோர், உலகு ஒரு மூன்றும் உடன் திரியத் திரிந்தார் என்க.

அதுகண்டு அஞ்சிய வீடணன் 'இதனை விலக்க இயலுமோ' என வினவ இலக்குவன் அதனை நோக்கிச் சிரித்தல்

9225 பார்த்தானெடுந் தகைவீடண
னுயிர்காலுறப் பயத்தால்
வேர்த்தானிது விலக்குந்தர
முளதோ முதல் வீரா

தீர்த்தாவென வழைத்தானதற்
கிளங்கோளரி சிரித்தான்
போர்த்தாரடற் கவிவீரரு
மவன்ருளிழல் புகுந்தார்.

பார்த்தான் நெடுந்தகை வீடணன்,
உயிர்காலுற, பயத்தால்
வேர்த்தான், 'இது விலக்கும் தரம்
உளதோ, முதல் வீரா!
தீர்த்தா!' என அழைத்தான்;
அதற்கு இளங்கோளரி சிரித்தான்;
போர்த்தார் அடல் கவிவீரரும்,
அவன் தாள்நிழல் புகுந்தார்.

பொ:- பெருந்தன்மையுடையோனுகிய வீடணன், (அப்படையினைக்) கண்டான். பெருமூச்சு வெளிப்பட அச்சத்தால் (உடல் முழுவதும்) வேர்த்தவனுகி, 'இப்படையினை விலக்கும் உபாயம் உளதோ? வீரர்க்கெல்லாம் முதல்வனே! தூயோனே!' என (இலக்குவனை நோக்கி) அழைத்து முறையிட்டான்; அப்படையின் செயலுக்கு இளஞ்சிங்கம் போல்வானுகிய இலக்குவன் சிரித்தனன். போர்க்குரிய மாலையை யணிந்த கொலைத் தொழிலில் வல்ல வானர வீரர்களும் அவ் இலக்குவனுடைய திருவடி நீழலைத் தஞ்சமாக வந்தடைந்தார்கள்.

கு:- உயிர் காலுற—பெருமூச்சு வெளிப்பட. அதற்கு—அப் பாசுபதப் படையின் செயலுக்கு. போர்த்தார்—போர் நிகழ்ச்சியில் அணிதற்குரிய அடையாள மாலை. (157)

## அபயம் அடைந்தவர்களை அஞ்சற்க எனக் கையமைத்துத் தானும் சிவன் படையை விட, அது இந்திரசித்தின் படையினை விழுங்குதல்

9226 அவயம்முனக் கவயம்மெனு
மனைவோரையு மஞ்சேல்
அவயம்முமக் களித்தோமெனத்
தன்கைத்தலத் தமைத்தான்

உவயம்முறு முலகின்பய
முணர்ந்தேனினி யொழியேன்
சிவனைம்முக முடையான்படை
தொடுப்பேனெனத் தெளிந்தான்.

'அவயம்! உனக்கு அவயம்!' எனும்
அனைவோரையும், 'அஞ்சேல்
அவயம் உமக்கு அளித்தோம்' எனத்
தன் கைத்தலத்து அமைத்தான்
'உவயம் உறும் உலகின் பயம்
உணர்ந்தேன், இனி ஒழியேன்;
சிவன் ஐம் முகம் உடையான் படை
தொடுப்பேன்' எனத் தெளிந்தான்.

பொ:- 'உனக்கு அபயம், அபயம்' என்று சொல்லி முறையிடுகின்ற அனைவரையும் (இலக்குவன் அருளால் நோக்கி) 'அஞ்சற்க, உங்களுக்கு அபயம் அளித்தோம்' என்று தன் கைத்தலத்தால் அமைத்து ஆறுதல் கூறினன். '(மண்ணுலகும் விண்ணுலகும் என) இரண்டாகப் பொருந்திய உலகங்களின் அச்சத்தினை உணர்ந்து கொண்டேன்; இனி (என் கடமையினின்றும்) நீங்கேன்; ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமானது (பாசுபத) அத்திரத்தினைத் தொடுத்து விடுவேன்' என்று (தன் மனத்தில்) தெளிந்து துணிந்தான்.

கு:- அவயம்—அபயம் என்ற வடசொல்லின் திரிபு. பயம்—அச்சம்; இன்மைப் பொருள் தரும் அகரத்துடன் கூடி அபயம் என்றாயிற்று. பேரிடர் கண்டு அச்சமுற்றோர் தம்முடைய அச்சத்தினைப் போக்கி இடர்நீக்கி ஆதரிக்க வல்லாரை அடைந்து 'அபயம் அபயம்' என முறையிடுதலும், இவர்கள் 'அஞ்சற்க' என அபயமளித்தலும் முறை. உவயம்—உபயம் என்பதன் திரிபு. உபயம்—இரண்டு. உபயம் உலகு என்றது, வானுலகும் மண்ணுலகுமாகிய இரண்டுலகங்களை. (158)

9227 அப்பொற்படை மனத்தானினைந்
தர்ச்சித்ததை யழிப்பாய்
இப்பொற்படை தனைமற்றொரு
தொழில் செய்யலை யென்னாத்

துப்பொப்பதொர் கணைகூட்டினன்
றுரந்தானிடை தொடரா
எப்பொற்படை யெவையும்புக
விழுங்குற்றதொ ரிமைப்பின்.

அப்பொன்படை மனத்தால் நினைந்து,
அர்ச்சித்து அதை, 'அழிப்பாய்
இப்பொன் படைதனை மற்றொரு
தொழில் செய்யலை' என்று,
துப்பு ஒப்பது ஓர்கணை கூட்டினன்
துரந்தான்; இடை தொடரா
எப்பொன்படை எவையும் புக
விழுங்குற்றது, ஓர் இமைப்பின்.

பொ:- (சிவபெருமானுக்குரிய) அத்திண்மை வாய்ந்த பாசுபத அத்திரத்தினைத் தன் உள்ளத்தால் நினைந்து வழிபட்டு, 'இந்த (இந்திரசித்தினால் ஏவப்பட்ட) திண்ணிய படையினை அழித்தொழிப்பாய்; வேறொரு செயலையும் செய்யாது அமைவாயாக' என்று கூறி, (மந்திர வடிவாகிய) அதனை (அதன், வன்மைக்கு ஒத்ததாகிய அம்பு ஒன்றினோடு கூட்டிச் செலுத்தினான் (இலக்குவன்). (அப்படையானது) அவ்விடத்தே தொடர்ந்து சென்று எத்தகைய திண்மை வாய்ந்த படைக்கலங்களும் தன்னுள்ளே யடங்க ஓர் இமைப் பொழுதிற்குள் (அதனை) விழுங்கி விட்டது.

கு:- பொற்படை—திண்ணிய படைக்கலம். துப்பு—வன்மை. எப்பொற்படை என்றது, இந்திரசித்து ஏவிய பாசுபதாத்திரத்தினின்றும் இடையே கிளைத்தெழுந்த சூலம், மழு முதலிய படைத் தொகுதிகளைத் தொடரா என்னும் வினையெச்சம் விழுங்குற்றது என்னும் வினை கொண்டு முடிந்தது. (159)

9228 விண்ணார்த்தது மண்ணார்த்தது
மேலோர்மணி முரசின்
கண்ணார்த்தது கடலார்த்தது
மழையார்த்தது கலையோ
ரெண்ணார்த்தது மறையார்த்தது
விசயம்மனெ வியம்பும்
பெண்ணார்த்தன ளறமார்த்தது
பிறரார்த்தது பெரிதால்.

விண்ஆர்த்தது; மண் ஆர்த்தது,
மேலோர் மணிமுரசின்
கண்ஆர்த்தது, கடல் ஆர்த்தது,
மழைஆர்த்தது, கலையோர்
எண்ஆர்த்தது, மறை ஆர்த்தது,
விசயம் என இயம்பும்
பெண்ஆர்த்தனள், அறம் ஆர்த்தது,
பிறர்ஆர்த்தது பெரிதால்.

பொ:- (அது கண்டு) விண்ணுலகத்தார் ஆரவாரித்தனர். மண்ணுலகத்தார் ஆரவாரித்தனர். மேலுலகத்தவர்களாகிய தேவர்களது மணிகள் பதிக்கப் பெற்ற முரசின்கண் முழங்கியது. கடல் ஆரவாரித்தது. மேகம் முழங்கியது. கலை நூல்களை யுணர்ந்த அறிஞர்களின் உள்ளம் (மகிழ்ச்சிமிக்கு) ஆர்த்தது. வேதம் முழங்கியது. விசயம் எனப் போற்றப் பெறும் வெற்றி மகள் ஆரவாரித்தாள். அறமும் ஆர்த்தது, ஏனைய பிறர் யாவரும் எழுப்பிய ஆர்ப்பரவம் பெரிதாகும்.

கு:- விண், மண் என்பன, இடவாகு பெயரால், முறையே தேவர்களையும் மக்களையும் உணர்த்தின. முரசின் கண் என்பது குறுந்தடியால் அடித்து ஒலியொழிப்புதற் குரிய முரசத்தின் மேற்பகுதி; அது முழக்குவாரின்றித் தானே முழங்கியது என்பதாம். விசயம் என இயம்பும் பெண் என்றது, வெற்றிக்கு அதி தெய்வமாகிய வெற்றித் திருவை. (160)

## இலக்குவனது வன்மையைக் கண்டு திகைப்புற்ற இந்திரசித்து தன் வன்மையால் மேலும் அம்புகளைச் செலுத்துதல்

9229 இறுகாலையி னுலகியாவையு
மவிப்பானிகற் படையை
மறுகாவகை வலித்தானது
வாங்கும்படி வல்லான்
தெறுகாலனிற் கொடியோனுமற்
றதுகண்டகந் திகைத்தான்
அறுகால்வயக் கவிவீரரு
மரியென்பதை யறிந்தார்.

இறு காலையின் உலகு யாவையும்
அவிப்பான் இகல் படையை,
மறுகாவகை வலித்தான், அது
வாங்கும்படி வல்லான்;
தெறுகாலனின் கொடியோனும், மற்று
அதுகண்டு, அகம் திகைத்தான்;
அறுகால்வயக் கவிவீரரும்
அரிஎன்பதை அறிந்தார்.

பொ:- (ஊழி முடிவாகிய) இறுதிக் காலத்தில் உலகங்கள் எல்லாவற்றையும் (ஒருசேர) அழிப்பவனாகிய சிவபெருமானது ஆற்றல்மிக்க (பாகுபத) அத்திரத்தினை (வேறெங்குந்) திரியாதபடி வலித்து இழுத்தான்; அதனை (வலிதிற்) பற்றி வாங்குதற்கு வல்லவனாகிய இலக்குவன் அழிக்குந் திறனுடைய இயமனை விடக் கொடுமையிற் சிறந்தோனாகிய இந்திரசித்து, (இலக்குவனது) அத்திறமையைக் கண்டு மனம் திகைப்படைந்தான். செயல் அற்ற கால்களையுடைய வலிமிக்க வானர வீரர்களும் (இலக்குவனாகிய அவன்) திருமாலே என்னும் மெய்ம்மையை உணர்ந்தார்கள்.

கு:- ஊழி முடிவில் எல்லாவுலகங்களையும் தன்னுள் ஒடுக்க வல்ல அழித்தற் கடவுள் சிவபெருமான் ஆதலின், 'இறு காலையின் உலகுயாவையும் அவிப்பான்' எனக் குறித்தார். அது வாங்கும்படி வல்லான் என்றது, இலக்குவனை. வாங்கும்படி வல்லான், இகற்படையை மறுகாவகை வலித்தான் என்க. மறுகுதல்—எங்கும் திரிதல். தெறுகாலனிற் கொடியோன் என்றது, இந்திரசித்தினை. அறுகால்-நடக்கும் செயல் ஒய்ந்த கால்கள், வய—வலி. அரி—திருமால். (161)

9230 தெய்வப்படை பழுதுற்றது
வெனக்கூசுதல் சிதைவால்
எய்வித்தக முளதன்னது
பிழையாதென விசையாக்
கைவித்தக மதனாற்சில
கணைவித்தன னவையும்
மொய்வித்தகன் றடந்தோளினு
நுதற்சூட்டினு மூழ்க.

'தெய்வப்படை பழுது உற்றது
எனக் கூசுதல் சிதைவால்;
எய்வித்தகம் உளது; அன்னது
பிழையாது' என இசையா,
கைவித்தகம் அதனல் சில
கணைவித்தினன்; அவையும்
மொய்வித்தகன் தடந்தோளினும்
நுதற் சூட்டினும் மூழ்க.

பொ:- ("என்னல் ஏவப்பட்ட) தெய்வத் தன்மை வந்த அத்திரம் (இலக்குலன் ஏவிய அத்திரத்தினல்) பழுதுற்று அழிந்தது' என்று மனம் கூசி ஒடுங்குதல் (எனது வீரத்திற்குக்) குற்ற மாகும். (மேன் மேலும் அம்புகளை) எய்யும் தொழிலாகிய திறமை என்பால் (குறை வின்றி நிரம்பி) உள்ளது. அத்திறமை (என்றும்) தவறுபடாது" என்று சொல்லித் தன் கைத்திறமையால் சில அம்புகளைத் தூவினன்; அவ் அம்புகளும் வன்மை நிறைந்த சதுரப்பாடுடையவனுகிய இலக்கு வனுடைய பெரிய தோள்களிலும் நெற்றியின் உச்சியிலும் அழுந்திப் பதியும்படி.

கு:- 'தெய்வப்படை பழுதுற்றது எனக் கூசுதல் சிதைவு; எய் வித்தகம் என்பால் உளது; அன்னது சிதையாது' என்பது இந்திரசித் தின் கூற்று. வித்தகம்—சதுரப்பாடு; திறமை. இசையா—இசைத்து, கூறி.: மொய்வித்தகன் தடந்தோளினும் நுதற் சூட்டினும் மூழ்க, (இந்திரசித்து) கை வித்தகம் அதனல் சில கணை வித்தினன் என இயைத்துரைக்க. மொய் வித்தகன் என்றது இலக்குவனை. (162)

9231 வெய்யோன்மகன் முதலாகிய
விறலோர்மிகு திறலோர்
கையோய்விலர் மலைமாரியி
னிருதக்கடல் கடப்பார்
உய்யாரென வடிவாளிகள்
சதகோடிக ளுய்த்தான்
செய்யோனைய றனிநின்றதன்
சிறுதாதையைச் செறுத்தான்.

வெய்யோன் மகன்முதல் ஆகிய
விறலோர், மிகு திறலோர்,
கைஓய்வு இலர், மலைமாரியின்
நிருதக் கடல் கடப்பார்;

'உய்யார்' என வடி வாளிகள்
சதகோடிகள் உய்த்தான்.
செய்யோன் அயல் தனிநின்ற தன்
சிறுதாதையைச் செறுத்தான்.

பொ:- (அவ் இந்திரசித்து) வெம்மை வாய்ந்த கதிரவன் புதல்வனாகிய சுக்கிரீவன் முதலிய வெற்றித்திறம் வாய்ந்தோர், ஆற்றல்மிக்க வீரர்கள் கை தளராதவர்களாய் மலைகளை (ப் பறித்து) மழைபோற் சொரிதலால் அரக்கர் சேனையாகிய கடலைக் கடப்பவர்கள், 'இனிப் பிழைக்கமாட்டார்கள்' என்று (கண்டோர்) கருதும்படி (அவர்கள்மீது) கூர்மையுடைய நூறுகோடியளவினவாகிய அம்புகளைச் செலுத்தினன்; செம்மேனியனாகிய இலக்குவனது அருகே நின்ற தன் சிறிய தந்தையாகிய வீடணனை வெகுண்டான்.

கு:- வெய்யோன்—சூரியன்; அவன் மகன் சுக்கிரீவன். தன் சிறு தாதை— (இந்திரசித்தாகிய) தன்னுடைய சிறிய தந்தை: வீடணன். செறுத்தல்—வெகுளுதல். (163)

இலக்குவனது அயலில் நின்ற வீடணனை இந்திரசித்து இகழ்ந்துரைத்தல்

9232 ★ முரட்டடந் தண்டு மேந்தி
மனிசரை முறைமை கூறிப்
பிரட்டரிற் புகழ்ந்து பேதை
யடியரிற்றெழுது பின்சென்
றிரட்டுறு முரச மென்ன
விசைத்ததே யிசைக்கின் றுயைப்
புரட்டுவன் றலையை யின்று
பழியென வொழிவென் போலாம்.

'முரண் தடம் தண்டும் ஏந்தி,
மனிசரை முறைமை கூறிப்
பிரட்டரின் புகழ்ந்து, பேதை
அடியரின் பொழுது பின்சென்று,

இரட்டுறும் முரசம் என்ன,
இசைத்ததே இசைக்கின்றாயைப்
புரட்டுவன் தலையை, இன்று;
பழிஎன ஒழிவென் போலாம்.

பொ:- வலிய பெரிய தண்டத்தையும் கையில் ஏந்தி, (சாதி) நெறியின் நீங்கினோரைப் போன்று மனிதர்களை உறவுமுறை சொல்லிப் புகழ்ந்து கூறி, அறியாமையை யுடைய அடிமைகளைப் போன்று (அவர்களைத்) தொழுது பின்சென்று, (குறுந்தடியால் அடிக்கப்பட்ட) முறையே ஒலிக்கும் பறையினைப் போன்று, (அம் மனிதர்) கூறியவற்றையே இசைப்பவனாகிய உன்னை இன்று (கொன்று உனது) தலையினை(த் தரையில்) உருளச்செய்வேன்; (சிறிய தந்தை யைக்கொல்லுதல்) பழியென்று ஒழிவேனோ?

கு:- முரண் தடந் தண்டும் என்புழி உம்மை சிறப்பும்மை. நீ நின் கையில் வலிய தண்டாயுதத்தைக் கொண்டிருப்பதற்கும் நீ மேற் கொண்டு செய்யும் செயல்களுக்கும் சிறிதும் பொருத்தமில்லை என்பான், 'தண்டும் ஏந்தி, கூறிப் புகழ்ந்து, இசைத்ததே இசைக் கின்றாய்' என்றான். முறைமை கூறுதலாவது, தமையன், தம்பி என உறவுமுறை சொல்லி அழைத்தல். இராம இலக்குவர் வழிநின்று அவர் கூறியனவற்றையே கூறும் வீடணனுக்கு, பறையறைவோன் முழக்கிய வண்ணமே முழங்கும் முரசு உவமையாயிற்று. பிரட்டர்—பிரஷ்டர்; நெறியின் நீங்கினோர்; சாதி ஒழுக்கத்தில் தவறினர், 'பிரட்டரைக் காணுகண்' (திருவிசைப்பா-) என வருதல் காண்க. புரட்டுதல்—தள்ளி உருட்டுதல். (164)

**9233** விழிபட முதல்வ ரெல்லாம்
வெதும்பின ரொதுங்கி வீழ்ந்து
வழிபட வுலக மூன்று
மடிப்பட வந்த தேனும்
அழிபடை தாங்க லாற்று
மாடவர் யாண்டு மஃகாப்
பழிபட வந்த வாழ்வை
யாவரே நயக்கற் பாலார்.

'விழிபட, முதல்வர் எல்லாம்
வெதும்பினர் ஒதுங்கி வீழ்ந்து
வழிபட, உலகம் மூன்றும்
அடிப்பட வந்த தேனும்,

அழிபடை தாங்கல் ஆற்றும்
ஆடவர், யாண்டும் அஃகாப்
பழிபட வந்த வாழ்வை
யாவரே நயக்கற் பாலார்?

பொ:- (உலகினை இயக்கும்) முதன்மையுடைய கடவுளர் யாவரும் (தம் கண்ணின் பார்வைபட்ட அளவிலேயே (அச்சத்தால்) வெதும்பியவராகித் தரைமீது வீழ்ந்து வணங்க மூவுலக ஆட்சியும் (தம்) அடிக்கீழ் வந்து பொருந்திற்றாயினும், தோற்றுப் பின்னிடும் (தமது) சேனையினைப் (பின்னிடாது) பொறுத்துத் தாங்கவல்ல வீரர் களுள், எக்காலத்தும் குறையாத பழியுண்டாக வந்த (அடிமை) வாழ் வினை யார்தான் விரும்புந் தன்மையராவர்?

கு:- விழிபட— (தம்மேல்) கண்ணோக்கம் பட்ட அளவில். முதல்வர் என்றது, உலகினை நடத்தும் முதற்கடவுளாகிய அயன் அரி அரன் என்னும் மும்மூர்த்திகளை. அழிபடை தாங்கள் ஆற்றும் ஆடவர்—பகைவரை எதிர்த்து நிற்கலாற்றாது தோற்றுப் பின்னிடும் தம் சேனையினைத் தளராது ஊக்கி நின்று பகைவர் சேனையினைப் பொறுத்துத் தடுத்து நிறுத்துதலைச் செய்ய வல்ல வீரர்கள். யாண்டும்—எக்காலத்தும். அஃகாப்பழி—குறைதல் இல்லாத பெரும்பழி. அஃகுதல்—சுருங்குதல்; குறைதல். ஆடவர்களுள், பழிபட வந்த வாழ்வை யாவரே நயக்கற்பாலார்? நயப்பார் ஒருவருமிலர் என்பதாம். 'பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்' (புறம் 182) எனவரும் தொடருக்கு அமைந்த விரிவுரை போன்று இச் செய்யுள் அமைந்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும். (165)

9234 நீருள தனையு முள்ள
மீனென நிருத ரெல்லாம்
வேருள தனையும் வீவா
ரிராவண னோடு மீளார்
ஊருள தொருவ னின்றாய்
நீயுளை நிறைய நின்னோ
டாருள ரரக்கர் நிற்பா
ரரசுவீற் றிருக்க வையா.

'நீர் உள்ளதனையும் உள்ள
மீன் என, நிருதர் என, நிருதர் எல்லாம்
வேர் உளதனையும் வீவர்,
இராவணனோடு; மீளார்;

*ஊர் உளது; ஒருவன் நின்றாய்*
*நீ உளை உறைய; நின்னோடு*
*ஆர் உளர் அரக்கர் நிற்பார்,*
*அரசு வீற்றிருக்க? ஐயா!*

பொ:- நீர் இருக்கும் அளவும் உயிர் தாங்கியுள்ள மீன் என்னும் படி அரக்கர்கள் எல்லோரும் வேர் (மூலகாரணம்) உள்ள அளவும் (போர் செய்து) இராவணனோடு இறந்தொழிவர்; (அவர்களில் எவரும் உயிருடன்) மீளமாட்டார்கள். ஐயனே! இலங்கையாகிய ஊர்மட்டும் எஞ்சியிருக்கும். ஒருவனாக நின்றாயாகிய நீ (இங்குத்) தங்குதற்கு உயிரோடுள்ளாய். நீ அரசனாக வீற்றிருக்க (நினக்குத் துணையாக) நிற்பார் அரக்கரினத்தாரில் வேறு யார் உள்ளார்கள்?

கு:- 'மீன் உயிரோடு வாழ்தற்கு நீர் இன்றியமையாதவாறு போல அரக்கர் குலம் வாழ்வதற்கு இராவணன் இன்றியமையாதவன்; நீர் வறண்ட நிலையில் மீன் இனம் இறத்தல் போன்று இராவணன் இறந்த நிலையில் அரக்கரனைவரும் இறந்தொழிவர்; இலங்கை நகரம் மட்டும் எஞ்சியிருக்கும். அங்கு அரசு வீற்றிருக்க நீ ஒருவன்மட்டும் இருப்பாய்; உன் குலத்தாராகிய அரக்கர் ஒருவரும் இருக்கமாட்டார்கள்' என இந்திரசித்து வீடணனை நோக்கிக் கூறினான். 'நீருள வெனினுள மீனும் நீலமும்' (கம்பர்- அயோத்தியா- நகர் நீங்கு-156) என வரும் தொடர் இங்கு ஒப்பு நோக்குதற் குரியதாகும். (166)

**9235** முந்தைநா ளுலகந் தந்த
மூர்த்திவா னோர்கட் கெல்லாந்
தந்தையார் தந்தை யாரைச்
செருவிடைச் சாயத் தள்ளிக்
கந்தனார் தந்தை யாரைக்
கயிலையோ டொருகைக் கொண்ட
எந்தையா ரரசு செய்வ
திப்பெரும் பலங்கொண் டேயோ.

*'முந்தைநாள், உலகம் தந்த*
*மூர்த்தி வானோர்கட்கு எல்லாம்*
*தந்தையார் தந்தை யாரைச்*
*செருவிடைச் சாயத் தள்ளி,*

கந்தனுர் தந்தை யாரைக்
கயிலையோடு ஒருகைக் கொண்ட
எந்தையார் அரசு செய்வது,
இப்பெரும் பலம் கொண்டேயோ?

பொ:- முற்காலத்தில் இவ்வுலகினைப் படைத்தளித்த முதல்வரும் தேவர்கட்கெல்லாம் தந்தையாரும் ஆகிய பிரமதேவர்க்குத் தந்தையாராகிய திருமாலைப் போரிலே தளர்ந்து விடும்படி தள்ளி, கந்தக் கடவுளுக்குத் தந்தையாகிய சிவபெருமானைக் கயிலாய மலையுடன் ஒருகையிற் பெயர்த்தெடுத்துக்கொண்ட என் தந்தையாராகிய இராவணனுர் (இவ்வுலகினை) ஆட்சிபுரிவது, (நீ சரணடைந்துள்ள மனிதரின்) இந்தப் பெரிய வலிமையினைத் துணையாகக் கொண்டுதானே?

கு:- முந்தைநாள் உலகம் தந்த மூர்த்தி, வானேர்க்கெல்லாம் தந்தையார் என்றது பிரமதேவரை. அவருடைய தந்தையார் ஆவார் திருமால். இராவணன், திருமால் சிவன் ஆகிய தெய்வங்களை எதிர்த்து நின்ற செய்தி இராவணன் மந்திரப் படலம் 114-116-ஆம் செய்யுட்களில் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. 'இப் பெரும்பலம்' என்றது இகழ்ச்சிக் குறிப்பு. (167)

9236 பனிமலர்த் தவிசின் மேலோன்
பார்ப்பன குலத்துக் கெல்லாம்
தனிமுதற் றலைவனுன
வுன்னைவந் தமரர் தாழ்வார்
மனிதருக் கடிமை யாய்நீ
யிராவணன் செல்வ மாள்வாய்
இனியுனக் கென்னே மானம்
எங்களோ டடங்கிற் றன்றே.

'பனிமலர்த் தவிசின் மேலோன்
பார்ப்பன குலத்துக்கு எல்லாம்
தனிமுதல் தலைவன் ஆன
உன்னை வந்து அமரர் தாழ்வார்;
மனிதருக்கு அடிமையாய் நீ
இராவணன் செல்வம் ஆள்வாய்;
இனி உனக்கு என்னே, மானம்?
எங்களோடு அடங்கிற்று அன்றே.

பொ:- குளிர்ந்த தாமரை மலரின்மேல் உள்ளவனுகிய பிரமனை முதல்வனுகக் கொண்ட வேதியர் குலத்துக்கெல்லாம் ஒப்பற்ற முதன்மையுடைய தலைவனுகிய உன்னைத் தேவர்கள் வந்து வணங்கு வார்கள்; (அத்தகைய தலைமை வாய்ந்த) நீயோ (இழிந்த) மனிதர் களுக்கு அடிமையாகி (அவர்களது உதவி பெற்று) நின் தமையன் இராவணனுக்குரிய அரச செல்வத்தை ஆளுதற்கு உள்ளாய். இனி உனக்கு மானம் என்ன இருக்கிறது? அப் பெருமை (போரில் இறந் தொழியும் நிலையினேமாகிய) எங்களோடு அடங்கி யொழிந்தது.

கு:- தன்னை இகழ்வாராகிய பகைவர் பின்னே சென்று அவர்களது ஆதரவு பெற்று ஒருவன் சிறந்த வாழ்வு வாழ்தலைக் காட்டிலும் அவர்களைச் சாராத தன் முன்னை நிலையிலிருந்தபடியே இறந்தொழிதலே ஒருவனது பெருமைக்குரிய செயலாகும் என்னும் உண்மையினை மறந்து மனிதருக்கு அடிமையாய் நின் தமையனுக்குரிய அரச செல்வத்தை ஆளக் கருதினையாதலின் நின்னிடத்து மானம் என்ற குணம் அறவே இல்லையாய் ஒழிந்தது என்பான், ‘மனிதருக்கு அடிமையாய் நீ இராவணன் செல்வம் ஆள்வாய், இனி உனக்கு என்னே மானம்?’ என வீடணனை இகழ்ந்து வினவினுன் இந்திரசித்து. ‘ஒட்டார் பின் சென்ருெருவன் வாழ்தலின் அந்நிலையே, கெட்டான் எனப்படுதல் நன்று’ (967) எனவரும் திருக்குறட் பொருள் இங்கு நினைத்தற்குரிய தாகும். மானம் என்பது, குடிப்பிறந்தார்க்குரிய குணங்களுள் ஒன்று. அஃதாவது எக்காலத்தும் தன்னிலையி னின்றும் தாழாமையும் ஊழ் வயத்தால் தாழ்வு நேர்ந்துழி உயிர் வாழாமையுமாகிய பெருமை. (168)

9237 சொல்வித்தும் பழித்து நுங்கை
மூக்கினைத் துணிவித் தோரா
லெல்வித்தும் படைக்கை யுங்க
டமையனை யெங்க ளோடுங்
கொல்வித்துந் தோற்று நின்ற
கூற்றினர் குலத்தையெல்லாம்
வெல்வித்தும் வாழும் வாழ்வின்
வெறுமையே விழுமி தன்றே.

‘சொல்வித்தும், பழித்தும், நுங்கை
மூக்கினைத் துணிவித்தோரால்,
எல்வித்தும் படைக்கை உங்கள்
தமையனை எங்களோடும்

கொல்வித்தும், தோற்றுநின்ற
கூற்றினர் குலத்தை எல்லாம்
வெல்வித்தும், வாழும் வாழ்வின்
வெறுமையே விழுமிது அன்றே?

பொ:- (பிறர் வாயிலாகப்) பழியுரைகளைச் சொல்லச் செய்தும் (தாமே) பழித்தும் உன் தங்கையின் மூக்கினையறுத்தோராகிய மனிதர்களால், ஒளிவிடும் படைகளைக் கொண்ட கையினையுடைய உங்கள் தமையனாகிய இராவணனை(ச் சுற்றத்தாராகிய) எங்களோடு கொல்வித்தும் (இதுவரையிலும் எமக்குத் ) தோல்வியுற்று(ப்‌)பின்னே) நின்ற கூற்றுவனரது பரிவாரத்தையெல்லாம் (எங்களை) வெற்றி கொள்ளும்படி செய்தும் (அவற்றின் பயனாக நீ பெற்று) வாழ்கின்ற வாழ்க்கை வளத்தைவிட (ஒன்றுமில்லாத) வறுமைநிலையே மிகவும் சிறப்புடையதல்லவா?

கு:- பகைவர்க்கு உடந்தையாய்த் தன் குலத்திற்குக் கேடு சூழ்ந்து மானங்கெட அரசு வீற்றிருக்கும் வாழ்வைவிட மானம் இழவாத வறுமை நிலையே மிகவும் சிறப்புடையதென்று இந்திரசித்து வீடணனுக்கு அறிவுறுத்தியவாறு. (169)

9238 எழுதியே ரணிந்த திண்டோ
ளிராவண னிராம னம்பாற்
புழுதியே பாய லாகப்
புரண்டநாள் புரண்டு மேல்வீழ்ந்
தழுதியோ நீயுங் கூட
வார்த்தியோ வவனை வாழ்த்தித்
தொழுதியோ யாதோ செய்யத்
துணிந்தனை விசயத் தோளாய்.

எழுதி ஏர் அணிந்த திண்தோள்
இராவணன், இராமன் அம்பால்,
புழுதியே பாயல் ஆகப்
புரண்டநாள், புரண்டுமேல் வீழ்ந்து,
அழுதியோ? நீயும் கூட
ஆர்த்தியோ? அவனை வாழ்த்தித்
தொழுதியோ? யாதோ, செய்யத்
துணிந்தனை?-விசயத் தோளாய்!

பொ:- வெற்றித்திறம் வாய்ந்த தோள்களை யுடையவனே! (வரிக் கோலம்) எழுதப்பெற்று அழகினைக் கொண்ட திண்ணிய தோள்களை யுடைய இராவணன், இராமனது அம்பினால் (தாக்கப்பட்டுப்) புழுதி படிந்த தரையினையே பாயலாகக் கொண்டு புரள்கின்ற நாளிலே (அவன் தம்பியாகிய நீ அப்புழுதியிற்) புரண்டு அவனது உடம்பின் மேல் வீழ்ந்து அழப்போகின்றாயோ? (அன்றி) நீயும் (பகைவருடன்) சேர்ந்து (மகிழ்ச்சியால்) ஆரவாரிப்பாயோ? (தமையனது உயிர் கொண்ட) அந்த இராமனை வாழ்த்தி வணங்கப்போகின்றாயோ? (இவற்றுள்) எதனைச் செய்யத் துணிந்துள்ளாய்?

கு:- சந்தனத்தால் எழுதப்பெற்று வரிக்கோலம் அமைந்த தோள்களையுடைய தன் தந்தையாகிய இராவணனது உயர்ந்த தோற்றப் பொலிவினை எண்ணிய இந்திரசித்து அத்தகைய தந்தைக்கு நேரவிருக்கும் அழிவு நிலையினையும், உடன் எண்ணுகின்றான். ஆற்றல் மிக்க இராவணன் இராமபாணத்தால் தாக்கப்பட்டு வீழ்ந்து புழுதியிற் புரளநேரும் அவல நிலையினையும் அவனுடன் பிறந்த தம்பி யாகிய வீடணன் தன் தமையன் இறந்த நிலையில் அடைதற்குரிய பெருந் துயரினையும் அப்பொழுது பகைவர் அடையும் பெருமகிழ்ச்சி யினையும் எண்ணிப் பார்க்குமாறு தன் சிறிய தந்தையாகிய வீடண னுக்கு அறிவுறுத்தி, அவன் தனது நிலையினை மீண்டும் சிந்தித்துப் பார்க்கத் தூண்டும் முறையில் இச் செய்யுள் அமைந்திருத்தல் அறியத் தகுவதாகும். பகைவரை வெற்றி கொள்ளுதற்குரிய வலியதோள்களை யுடைய நீ இவ்வாறு பகைவரைச் சரணடைந்து நின் குலமழிய வாழ்தல் மிகவும் பேதைமையாகும் என்பான், 'விசயத்தோளாய்' என அழைத்தான். (170

9239 ஊனுடை யுடம்பி னீங்கி
மருந்தினு லுயிர்வந் துய்யு
மானிட ரிலங்கை வேந்தைக்
கொல்வரே நீயு மன்னுன்
தானுடைச் செல்வந் துய்க்கத்
தகுதியோ சரத்தி னேடும்
வானிடைப் புகுதி யன்றே
யான்பழி மறுக்கி னென்ருன்.

'ஊனுடை உடம்பின் நீங்கி,
மருந்தினுல் உயிர்வந்து உய்யும்
மானிடர் இலங்கை வேந்தைக்
கொல்வரே? நீயும் அன்னுன்

தானுடைச் செல்வம் துய்க்கத்
தகுதியோ? சரத்தி னோடும்
வானிடைப் புகுதி அன்றே,
யான்பழி மறுக்கின்!' என்றான்.

பொ:- ஊனையுடைய உடம்பினின்றும் (உயிர்) நீங்கி, மருந்தினாலே உயிர் வந்து சேரப் பெற்றுப் பிழைத்த மனிதர்கள் இலங்கை வேந்தனைக் கொல்ல வல்லரோ? நீயும் அவ்விராவணன் பெற்றுடைய செல்வத்தை நுகர்தற்குத் தகுதியுடையாய் ஆவாயோ? யான் (சிறிய தந்தையாகிய உன்னைக் கொல்லுதல்) பழி என்பதனை மறுத்து (நின்னை அம்பினால்) கொல்லப்புகின் நீ அந்த அம்பினோடும் வானுலகத்தை அடைவாய் அல்லையோ?

கு:- தான் ஏவிய பிரமாத்திரத்தினால் உடம்பை விட்டு உயிர் நீங்கிப் பின்னர் அனுமன் கொணர்ந்த (மருத்துமலையின்) மருந்தினால் மீண்டும் உயிர் வரப் பெற்றுப் பிழைத்த வலியற்ற எளிய மனிதர் இராம இலக்குவர் என்பது புலப்படுத்துவான், 'ஊனுடை உடம்பின் நீங்கி மருந்தினால் உயிர் வந்து உய்யும் மானிடர்' என்றான். கொல்வரே என்புழி வினா ஏகாரம். கொல்லும் வலியுடையாரல்லர் என எதிர் மறைப் பொருள் தந்தது. தகுதியோ—தகுதியுடையாயோ; ஓகாரம், எதிர்மறை. ஈண்டுப் பழி மறுத்தலாவது, தந்தை முறையினரைக் கொல்லுதல் பழி என்னும் உண்மையை உடன்படாது கொல்லுதல். வானிடைப் புகுதல்—இறந்து விண்ணுலகடைதல். (171)

### வீடணன், மறுமொழி பகர்தல்

9240 அவ்வுரை யமையக் கேட்ட
வீடண னலங்கன் மோலி
செவ்விதிற் றுளக்கி மூரன்
முறுவலுந் தெரிவ தாக்கி
வெவ்விது பாவஞ் சாலத்
தருமமே விழுமி தைய
இவ்வுரை கேட்டி யென்னா
வினையன விளம்ப லுற்றான்.

அவ்உரை அமையக் கேட்ட
வீடணன், அலங்கல் மோலி
செவ்விதின் துளக்கி, முரல்
முறுவலும் தெரிவது ஆக்கி,
'வெவ்விது பாவம்; சாலத்
தருமமே விழுமிது; ஐய;
இவ்உரை கேட்டி' என்று,
இனையன விளம்ப லுற்றான்.

பொ:- (இந்திரசித்து கூறிய) அந்த வார்த்தையினை (மனம்) பொருந்தக் கேட்ட வீடணன், மாலையினை யணிந்த முடியினை நன்கு அசைத்து, (தன் முகத்தே) புன்சிரிப்பு வெளிப்படச் செய்து, 'ஐயனே! பாவம் கொடுமையுடையது; அறமே மிகவும் சிறந்தது. (யான் கூறும்) இம் மொழியினைக் கேட்பாயாக' என்று (பின்வரும்) இம்மொழிகளைக் கூறத் தொடங்கினான்.

கு:- அவ்வுரை என்றது, வீடணனை நோக்கி இந்திரசித்து கூறிய மொழிகளை. அமையக் கேட்டல்—(மனம்) பொருந்தக் கேட்டல். அலங்கல்—மாலை. மோலி—முடி. துளக்கி—அசைத்து. முரல் முறுவல்-புன்சிரிப்பு. ஐய என்றது, இந்திரசித்தை நோக்கிய விளி. 'பாவம் வெவ்விது, தருமமே சால விழுமிது' என்னும் இக்கருத்து, இராம காதையாகிய இக்காப்பியத்தின் உயிரோட்டமாக அமைந்த பாவிகப் பண்பாகும். வீடணன் கூறுவன பின்வரும் ஐந்து செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (172)

**9241** அறந்துணை யாவ தல்லா
லருநர கமைய நல்கு
மறந்துணை யாக மாயாப்
பழியொடும் வாழ மாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை யெய்தும்
பொய்ம்மையே துறப்பதல்லால்
பிறந்திலே னிலங்கை வேந்தன்
பின்னவன் பிழைத்த போதே.

'அறம்துணை ஆவது அல்லால்,
அருநரகு அமைய நல்கும்
மறம்துணை ஆக, மாயாப்
பழியொடும் வாழ மாட்டேன்;

துறந்திலேன் மெய்ம்மை; எய்தும்
பொய்ம்மையே துறப்பது அல்லால்,
பிறந்திலேன் இலங்கை வேந்தன்
பின், அவன் பிழைத்தபோதே.

பொ:- அறமே துணையாவது. (அவ் அறத்தினை) அன்றி(க் கடப்பதற்கு) அரிய நரகத்தினைப் பொருந்தும்படி தரும் பாவத்தினைத் துணையாகக் கொண்டு நீங்காத பழியோடும் உயிர் வாழ மாட்டேன்; (இடையில்) வந்து அடையும் பொய்ம்மையினை விட்டு ஒழிப்பதல்லது மெய்ம்மையினை விட்டு நீங்கினேன் அல்லேன்; இலங்கை வேந்தனாகிய இராவணன் (பிறனில் விழைதலாகிய) பிழையினைச் செய்த பொழுதே அவன்பின் பிறவாதவன் ஆயினேன்.

கு:- மறம்—பாவம். நிலையின்றி அழிந்தொழியும் பொய்யாகிய செல்வத்திலே புக்கழுந்தி, நிலையுடைய அறத்தினைத் துறந்து வாழும் கொடியோர்களாகிய உங்களது தொடர்பால் இடையில் வந்து சேரும் பொய்ம்மையினை அறவே விட்டொழித்து மெய்ம்மையுடைய அறத்தினையே விடாது பற்றினேன் என்பான், "எய்தும் பொய்ம்மையே துறப்பதல்லால் மெய்ம்மை துறந்திலேன்" என்றான். இலங்கை வேந்தனாகிய இராவணன் தினைத்துணையுந் தேராதவனாகிப் பிறன்மனை விழைதலாகிய பெருங் குற்றத்தினைச் செய்த அந்தக் கணத்திலேயே அவனுக்குப் பின்னை பிறந்த தம்பி என்னும் உறவுத் தொடர்பினை யான் விட்டொழித்தேன் என்பான், 'இலங்கை வேந்தன் பிழைத்தபோதே அவன் பின் பிறந்திலேன்' என்றான். பிழைத்தல்—பிழை செய்தல்; குற்றம் புரிதல். (173)

**9242** உண்டிலெ னறவம் பொய்ம்மை
யுரைத்திலென் வலியா லொன்றுங்
கொண்டிலென் மாய வஞ்சங்
குறித்திலென் யாருங் குற்றங்
கண்டில ரென்பா லுண்டே
நீயிருங் காண்டி ரன்றே
பெண்டிரிற் றிறம்பி னுரைத்
துறந்தது பிழையிற் றாமோ.

'உண்டிலென் நறவம்; பொய்ம்மை
உரைத்திலென்; வலியால் ஒன்றும்
கொண்டிலென்; மாய வஞ்சம்
குறித்திலென்; யாரும் குற்றம்

கண்டிலர் என்பால்; உண்டே?
நீயிரும் காண்டிர் அன்றே?
பெண்டிரின் திறம்பினாரைத்
துறந்தது பிழையிற்று ஆமோ?

பொ:- (யான்) மதுவினை உண்டிலேன்; பொய்ம்மொழி உரைத்திலேன்; (பிறர்க்குரிய பொருள்களுள்) ஒன்றையும் வலிதிற் கவர்ந்து கொண்டிலேன்; (எவர்க்கும்) மாயத்தினாற் செய்யும் வஞ்சனைச் செயலை (மனத்தாற்) குறித்திலேன்; என்னிடத்து யாரும் குற்றத்தினைக் கண்டிலர்; நீங்களும் என்னை நன்கு அறிந்திருக்கிறீர்களல்லவா? என்பால் ஏதேனும் குற்றம் உளதோ? கற்புடைய பெண்டிரிடத்து முறை தவறி நடந்தவரை (யான்) விட்டு நீங்கியது தவறுடைய செயலாகுமோ?

கு.- அறவோர்களால் விலக்கப்பட்ட ஐவகைப் பெருங் குற்றங்களுள் எதனையும் யான் செய்திலேன் என்பான், 'நறவம் உண்டிலென், பொய்ம்மை உரைத்திலென், மாய வஞ்சம் குறித்திலென்' என்றான். என்னைக் குறித்து யான் கூறிய இம்மொழி பகை நொதுமல் நண்பு ஆகிய எல்லோராலும் ஏற்றுக் கொள்ளுதற்குரிய என்பான், 'யாரும் குற்றம் கண்டிலர்; என்பால் (குற்றம்) உண்டே? நீயிரும் காண்டிர் அன்றே' என்றான். பெண்டிரின் திறம்புதலாவது, பிறர் மனைவியராகிய கற்புடைப் பெண்டிரிடத்தே காமத்தால் முறை தவறி நடத்தல். பெண்டிரிற் றிறம்பினர் என்றது தூர்த்தனாகிய இராவணனை. இருமைப் பயன்களையும் இழக்கும் நிலையிற் பிறன்மனையாளைக் கவர்ந்து பகை பாவம் அச்சம் பழி என்பவற்றைத் தேடிக் கொண்ட தமையனை விட்டு விலகியது தவறுடைய செயலாகாது என்பான் 'பெண்டிரின் திறம்பினாரைத் துறந்தது பிழையிற்று ஆமோ?' என்றான்.

9243 மூவகை யுலகு மேத்து
முதலவ னெவர்க்கு மூத்த
தேவர்தந் தேவன் றேவி
கற்பினிற் சிறந்து ளாளை
நோவன செய்த நீதென்
றுரைப்பநுன் ருதை சீறிப்
போவெனப் போந்தே னின்று
நரகதிற் பொருந்து வேனே.

"மூவகை உலகும் ஏத்தும்
முதலவன், எவர்க்கும் மூத்த
தேவர்தம் தேவன், தேவி
கற்பினின் சிறந்துளாளை
நோவன செய்தல் தீது"
என்று உரைப்ப, நுன் தாதைசீறி
'போ' எனப் போந்தேன்; இன்று
நரகதில் பொருந்துவேனோ?

பொ:- 'மூன்று வகை உலகங்களும் துதித்துப் போற்றும் முதல்வனும் எல்லார்க்கும் முன்னே தோன்றி மூத்த தேவாதி தேவனும் ஆகிய திருமாலின் மனைவி கற்பினிற் சிறந்துள்ளவளாகிய பிராட்டியை மனம் நொந்து வருந்தத் தக்கன செய்தல். பாவம்' என்று (யான்) சொல்ல, உன் தந்தை (என்னை) வெகுண்டு, 'ஓடிப் போ' என்று கூற (அவனை விட்டு) வந்தேன். இப்பொழுது நரகத்திற் புகுவேனோ?

கு:- தவறு கண்டபோது எடுத்துக் காட்டித் திருத்துதற்குரிய உரிமையுடைய தம்பியாகிய நான், என் தமையனை நோக்கி 'இராமன் தேவியை நோவன செய்தல் தீது' என்று கூற, அவன் என்னைவெகுண்டு 'இவ்விடத்தை விட்டு ஓடிப்போ' என்று சொன்ன பின்னரே அவனைத் துறந்து போந்தேன். அத்தகைய யான் இப்பொழுது மீண்டும் அறத்திற்கு மாறாக நும்மைச் சார்ந்து நரகத்திற் சேர்தற்கு ஒருப்படேன் என்பான், 'போ' எனப் போந்தேன், இன்று நரகதிற் பொருந்துவேனோ' என்றான். (175)

9244 வெம்மையிற் றரும நோக்கா
வேட்டதே வேட்டு வீயும்
உம்மையே புகழும் பூண்க
துறக்கமு முமக்கே யாக
செம்மையிற் பொருந்தி மேலோ
ரொழுக்கினோ டறத்தைத் தேறும்
எம்மையே பழியும் பூண்க
நரகமு மெமக்கே யாக.

'வெம்மையின் தருமம் நோக்கா
வேட்டதே வேட்டு, வீயும்
உம்மையே புகழும் பூண்க;
துறக்கமும் உமக்கே ஆக;

செம்மையில் பொருந்தி, மேலோர்
ஒழுக்கினோடு அறத்தைத் தேறும்
எம்மையே பழியும் பூண்க;
நரகமும் எமக்கே ஆக.

பொ:- கொடுமை காரணமாக அறத்தினை நோக்காது (மனம்) விரும்பியதனையே விரும்பிக் கெட்டொழியும் உங்களையே புகழும் (அணியாகப்) பொருந்துக. துறக்கவுலக இன்பமும் உங்களுக்கே உரிய தாகுக. செவ்விதாகிய பண்பினைப் பொருந்தி மேன்மை யுடையோர் கொண்டொழுகிய ஒழுக்கத்தோடு அறத்தினைத் தெளிந்தொழுகும் எங்களையே பழி வந்து பொருந்துக. நரகத் துன்பமும் எங்களுக்கே அமைவதாகுக.

கு:- வெம்மை—கொடுமை. இன், ஏதுப் பொருளில் வந்தது. 'நோக்காது' என்பது கடைக் குறைந்து 'நோக்கா' என நின்றது, 'சென்ற விடத்தாற் செலவிடா தீ தொரீஇ' (திருக்குறள்-422) என் புழிப் போல. 'குதிரையை நிலமறிந்து செலுத்தும் யாகன் போல மனத்தைத் தீயதின் நீக்கி நல்லதிற் செலுத்தும் அறிவின்றி அறத்தினை நோக்காது நும் மனம் போனவாறு செல்லும் நும் செய்கை, இம்மை யிற் பழிக்குரிய தன்றிப் புகழுக்குரிய தாகாது, மறுமையில் துறக்கத் திற் செல்லவொட்டாது நரகத்திற் செலுத்துவதாகும்' எனக் குறிப் பால் அறிவுறுத்துவான் 'வெம்மையின் தருமம் நோக்காது வேட்டதே வேட்டு வீயும் உம்மையே புகழும் பூண்க, துறக்கமும் உமக்கேயாக' என்றான். மேலோர் சென்ற நெறியில் நின்று அறத்தினைத் தெளிந்து நடக்கும் எங்களைப் பழிசேராது, நரகத் துன்பமும் அணுகாது' என்பது பட 'மேலோர் ஒழுக்கினோடு அறத்தைத் தேறும் எம்மையே பழியும் பூண்க நரகமும் எமக்கேயாக' என்றான். (176)

9245 அறத்தினைப் பாவம் வெல்லா
தென்னும தறிந்து ஞானத்
திறத்தினு முறுமென் றெண்ணித்
தேவர்க்குந் தேவைச் சேர்ந்தேன்
புறத்தினிற் புகழே யாக
பழியொடும் புணர்க போதச்
சிறப்பினிற் பெறுக தீர்க
வென்றனன் சீற்றந் தீர்ந்தான்.

"அறத்தினைப் பாவம் வெல்லாது"
என்னும் அது அறிந்து "ஞானத்
திறத்தினும் உறும்" என்று எண்ணி,
தேவர்க்கும் தேவைச் சேர்ந்தேன்;
புறத்தினில் புகழே ஆக,
பழியொடும் புணர்க, போதச்
சிறப்பு இனிப் பெறுக; தீர்க'
என்றனன், சீற்றம் தீர்ந்தான்.

பொ:- 'அறத்தினைப் பாவம் வெல்லாது' என்று ஆன்றோர் கூறும் அவ்வுண்மையினை யறிந்து (அவ் அறத்தின் மூர்த்தியை அடைதலால்) ஞானத் திறத்தாலும் மிக்க பயன் பொருந்தும் என்று கருதித் தேவர்களெல்லார்க்கும் தேவனாகிய இராமபிரானைச் சரணடைந்தேன். (எனக்குப்) புறத்தே புகழே உண்டாகுக. அன்றிப் பழியொடு பொருந்துக, (பேதைமை தீர்ந்த) ஞானச் சிறப்பினை (யான்) பெறுக அன்றிப் பெறுதொழிக (அதுபற்றிக் கவலையில்லை)' என்று கூறினன் வெகுளியாகிய குற்றத்தினை விட்டவனாகிய வீடணன்.

கு:- 'அறத்தினைப் பாவம் வெல்லாது' என உலகில் வழங்கும் முதுமொழியினை ஆசிரியர் இக் காப்பியத்தின் உள்ளுறையாக எடுத்தாண்டுள்ளமை உளங்கொளத் தக்கதாகும். (177)

**9246** பெறுஞ்சிறப் பெல்லா மென்கைப்
பிறைமுக வாளி யொன்று
லிறுஞ்சிறப் பல்லா லப்பா
லெங்கினிப் போவ தென்னாத்
தெறுஞ்சிறைக் கலுழ னன்ன
தொருகணை தெரிந்து செம்பொன்
உறுஞ்சுடர்க் கழுத்தை நோக்கி
நூக்கின னுருமின் வெய்யோன்.

'பெறும் சிறப்பு எல்லாம் என்கைப்
பிறைமுக வாளி ஒன்றால்
இறும் சிறப்பு அல்லால், அப்பால்
எங்கு இனிப் போவது?' என்னா,
தெறும் சிறைக் கலுழன் அன்னது
ஒருகணை தெரிந்து, செம்பொன்
உறும் சுடர்க்கழுத்தை நோக்கி,
நூக்கினன், உருமின் வெய்யோன்.

பொ:- இடியினை யொத்த வெம்மை யுடையனாகிய இந்திரசித்து, (வீடணனை நோக்கி) 'நீ பெறக் கருதியுள்ள சிறப்புக்கள் யாவும் என் கையிலுள்ள பிறைமுக அம்பு ஒன்றினால் அழிந்தொழியும் சிறப்பாய் முடிதலன்றி (அழியாது) இனி அப்பாற் செல்வது எங்கே?' என்று சொல்லி, (பாம்பினை) அழிக்கும் சிறகினையுடைய கருடனை பொத்தாகிய ஓர் அம்பினைத் தெரிந்தெடுத்து, செம்பொன் அணிகள் பொருந்திய ஒளியினையுடைய (வீடணனது) கழுத்தை நோக்கிச் செலுத்தினான்.

கு:- உருமின் வெய்யோன், 'பெறுஞ் சிறப்பெல்லாம்......... எங்கு இனிப் போவது' என்னா, ஒருகணை தெரிந்து, கழுத்தை நோக்கி நூக்கினான் என முடிக்க. "ஞானத் திறத்தினும்' என்றெண்ணித் தேவர்க்குந் தேவைச் சேர்ந்தேன்" என்ற வீடணனை நோக்கி வெகுண்ட இந்திரசித்து, 'நீ அழியா நிலையில் இனிப் பெறக் கருதிய சிறப்புக்கள் யாவும் என் கையிலுள்ள அம்பு ஒன்றினால் இப்பொழுதே அழியுந் தன்மையதாகிய சிறப்பே' என்று சொல்லி, அம்பு ஒன்றைத் தெரிந்தெடுத்து அவனது கழுத்தினை இலக்காகக் கொண்டு எய்தனன் என்றவாறு. செம்பொன் என்றது பொன்னால் இயன்ற அணிகலன்களை. (178)

**9247** அக்கணை யசனி யென்ன
வன்றென வால முண்ட
முக்கணன் சூல மென்ன
முடுகிய முடிவை நோக்கி
இக்கணத் திற்று னிற்று
னென்கின்ற விமையோர் காணக்
கைக்கணை யொன்றால் வள்ள
லக்கணை கண்டங் கண்டான்.

அக் கணை அசனி என்ன
அன்று என, ஆலம் உண்ட
முக்கணன் சூலம் என்ன,
முடுகிய முடிவை நோக்கி,
'இக்கணத்து இற்றான்' இற்றான்'
என்கின்ற இமையோர் காண,
கைக்கணை ஒன்றால், வள்ளல்,
அக்கணை கண்டம் கண்டான்.

பொ:- (இந்திரசித்து ஏவிய) அந்த அம்பானது இடி எனவும் தீ எனவும் நஞ்சினை யுண்டருளிய மூன்று கண்களை யுடைய சிவபெரு

மானது சூலப்படை எனவும் விரைந்து செல்லுதலால் நேரும் முடி வினை எண்ணிப் பார்த்து, '(வீடணன்) இப்பொழுதே இறந்தான் இறந்தான் இறந்தான்' எனத் தம்முட் கூறுகின்ற தேவர்கள் காண, வள்ளன்மை யுடையோனாகிய இலக்குவன், தன் கையிற் கொண்ட அம்பு ஒன்றினால் (இந்திரசித்து விட்ட) அந்த அம்பினைத் துண்டித்து முறித்தான்.

கு:- இந்திரசித்து விட்ட அம்புக்கு இடியும் தீயும் முக்கணன் சூலமும் உவமை; வீடணனை நோக்கி முடுகிவரும் அக்கணையினைக் கண்ட தேவர்கள், 'வீடணன் இக்கணத்து இறந்தான் இறந்தான்' எனத் தம்முட் கூறினார்கள். அவ்வாறு துணிந்து கூறிய தேவர்கள் காணு மாறு இலக்குவன் செலுத்திய அம்பு இந்திரசித்தின் அம்பினைத் துண்டித்து வீழ்த்தி வீடணனை உய்வித்தது என்பதாம். இந்திரசித் தின் அம்பினால் வீடணன் இறவாதபடி அதனைத் துண்டித்து வீடண னுக்கு உயிர் வழங்கிய அருள் வண்மையினை எண்ணி, இலக்குவனை 'வள்ளல்' எனக் குறித்தார் ஆசிரியர். அசனி—இடி. ஆலம்—நஞ்சு. கண்டம் காணுதல்—துண்டித்தல். (179)

9248 கோலொன்று துணித லோடுங்
கூற்றுக்குங் கூற்ற மன்னான்
வேலொன்று வாங்கி விட்டான்
வெயிலொன்று விழுவ தென்ன
நாலொன்று மூன்று மான
புவனங்க ணடுங்க லோடும்
நூலொன்று வரிவி லானு
மதனையு நுறுக்கி வீழ்த்தான்.

கோல்ஒன்று துணிதலோடும்,
கூற்றுக்கும் கூற்றம் அன்னான்,
வேல்ஒன்று வாங்கி விட்டான்;
வெயில்ஒன்று விழுவது என்ன,
நால்ஒன்றும் மூன்றும் ஆன
புவனங்கள் நடுங்கலோடும்,
நூல் ஒன்று வரிவிலானும்,
அதனையும் நுறுக்கி வீழ்த்தான்.

பொ:- கூற்றுவனுக்கும் கூற்றுவனாகிய இந்திரசித்து (வீடணன் மேல் தான் ஏவிய) ஒப்பற்ற அம்பு துண்டிக்கப்பட்டவுடனே வேற் படையொன்றை யெடுத்து (அவ்வீடணன்மேல்) விட்டான். (அந்நிலை

யில்) சூரியனாகிய கோள் ஒன்று விழுவது என்னும்படி ஏழுலகங்களும் நடுக்க முறுதலும் வில்வேத முறைப்படி கட்டமைந்த வில்லினையுடைய னாகிய இலக்குவனும் அவ்வேற்படையையும் பொடியாக்கி வீழ்த் தினான்.

கு:- கூற்று—இயமன். கூற்றுக்குங் கூற்றமன்னான் என்றது இந்திர சித்தினை. நால் ஒன்று மூன்று—நாலுடன் கூடிய மூன்று; ஏழு. மூன்றும் என்புழி உம்மையினைப் புவனங்கள் என்பதுடன் கூட்டி, புவனங்களும் என இயைத்துரைக்க. நூல் —தனுவேதம். நூலொன்று வரிவிலான் என்றது வில் வீரனாகிய இலக்குவனை. நுறுக்குதல்—பொடியாக்குதல். (180)

**9249** வேல்கொடு கொல்லலுற்றா
னென்றொரு வெகுளி பொங்கக்
கால்கொடு காலிற் கூடிக்
கைதொடர் கனகத் தண்டால்
கோல்கொளு மொருவ னோடுங்
கொடித்தடந் தேரிற் பூண்ட
பால்கொளும் புரவி யெல்லாம்
படுத்தினான் றுடிப்பு மாற.

'வேல்கொடு கொல்லல் உற்றான்'
என்று, ஒரு வெகுளி பொங்க,
கால்கொடு காலின் கூடிக்
கைதொடர் கனகத் தண்டால்,
கோல்கொளும் ஒருவனோடும்,
கொடித் தடந்தேரில் பூண்ட
பால்கொளும் புரவி எல்லாம்
படுத்தினான், துடிப்பு மாற.

பொ:- ('இந்திரசித்து என்னும் இவன்) வேற்படையினைக்கொண்டு (என்னைக்) கொல்லுதற்கு முற்பட்டான்' என்று (தன்மனத்தே) கோபம் கிளர்ந்து எழ; காலினால் காற்றினைப் போன்று (விரைந்து அவனை) அடைந்து (தன்) கையிற் பற்றிய பொன்மயமான தண்டாயு தத்தால், தாற்றுக் கோலினைக் கொண்ட (தேர்ப்பாகனாகிய) ஒருவ னோடு கொடியினை யுடைய பெரிய தேரிற் பூட்டப்பட்டுள்ள தொகுதி

யினைக் கொண்ட குதிரைகள் எல்லாவற்றையும் (அவற்றின் உயிர்த்) துடிப்பு நீங்கக் கொன்று விழ்த்தினன்.

கு:- படுத்தினன் என்னும் பயனிலைக்குரிய 'வீடணன்' என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. கோல்—தாற்றுக்கோல். ஒருவன் என்றது, தேர்ப்பாகனை. பால்—பகுதி; ஈண்டுத் தொகுதியாகிய கூட்டம் என்ற பொருளைத் தந்தது. படுத்துதல்—கொன்று வீழ்த்துதல். துடிப்பு—உயிருண்மைக்கு அடையாளமாகிய நெஞ்சத்துடிப்பு. மாற—நீங்க. (181)

**9250** அழிந்ததேர் மீது நின்று
 றாயிர கோடி யம்பு
பொழிந்தவன் றோளின் மேலு
 மிலக்குவன் புயத்தின் மேலும்
ஒழிந்தம ருரத்தின் மேலு
 முதிர நீர் வாரி யோதம்
அழிந்திழிந் தோட நோக்கி
 யண்டமு மிரிய வார்த்தான்.

அழிந்த தேர்மீது நின்றான்
 ஆயிர கோடி அம்பு
பொழிந்து, அவன் தோளின் மேலும்,
 இலக்குவன் புயத்தின் மேலும்,
ஒழிந்தவர் உரத்தின் மேலும்
 உதிர நீர் வாரி ஓதம்
அழிந்து இழிந்து ஓட நோக்கி
 அண்டமும் இரிய ஆர்த்தான்.

பொ:- அழிவுற்ற (அந்தத்) தேரின்மேல் நின்றவனாகிய இந்திரசித்து, அவ் வீடணன் தோளின் மேலும் இலக்குவன் தோளின் மேலும் எஞ்சியுள்ள வானர வீரர்களின் மார்பின் மேலும் ஆயிரகோடியளவினவாகிய அம்புகளைச் சொரிந்து குருதி நீராகிய பெரு வெள்ளம் வரம்பழிந்து இழிந்து ஓடக்கண்டு அண்டமும் நிலை கெட்டு ஓடும்படி பேராரவாரஞ் செய்தான்.

கு:- அழிந்த தேர்—வீடணனது தண்டத்தால் தாக்கப்பட்டுத் தேர்ப்பாகனும் குதிரைகளும் கொல்லப்பட்டுச் சிதைந்த இந்திரசித்

தின் தேர். தேர் மீது நின்ருன், இந்திரசித்து தேர் மீது நின்ருன், அவன் தோளின் மேலும் இலக்குவன் புயத்தின் மேலும் ஒழிந்தவர் உரத்தின் மேலும் ஆயிர கோடி அம்பு பொழிந்து, உதிர நீர் வாரி ஓதம் அழிந்து இழிந்து ஓட நோக்கி, அண்டமும் இரிய ஆர்த்தான் என்க. அவன் என்றது வீடணனை. (182)

**9251** ஆர்த்தவ னனைய போழ்தி
னழிவிலாத் தேர்கொண் டன்றிப்
போர்த்தொழில் வெல்ல லாகா
தென்பதோர் பொருளை யுன்னிப்
பார்த்தவ ரிமையா முன்னம்
விசும்பிடைப் படர்ந்தா னென்னும்
வார்த்தையை நிறுத்திப் போனு
னிராவணன் மருங்கு புக்கான்.

ஆர்த்தவன்; அனைய போழ்தின்,
'அழிவுஇலாத் தேர்கொண்டு அன்றிப்
போர்த்தொழில் வெல்லல் ஆகாது'
என்பது ஓர் பொருளை உன்னி,
பார்த்தவர் இமையா முன்னம்
'விசும்பிடைப் படர்ந்தான்' என்னும்
வார்த்தையை நிறுத்திப் போனுன்,
இராவணன் மருங்கு புக்கான்.

பொ:- (அங்ஙனம்) ஆரவாரித்தவனுகிய இந்திரசித்து, அப்பொழுது அழிவுருத தேரினைக் கொண்டல்லாமல் போர்த்தொழிலில் வெற்றியடைதல் முடியாது என்பதொரு பொருளை (மனத்தில்) எண்ணித் தன்னை நோக்கியவர்கள் 'கண் இமையினை மூடித் திறப்பதற்குள் ஆகாயத்தில் மறைந்து சென்ருன் (இந்திரசித்து)' என்னும் சொல்லினை (ப் போர்க்களத்தில்) நிலைக்கச் செய்து (மறைந்து) சென்றவனுகி இராவணன் பக்கத்திற் புக்கவன்.

கு:- ஆர்த்தவன்—இந்திரசித்து. 'அழிவிலாத் தேர் கொண்டன் றிப் போர்த் தொழில் வெல்ல லாகாது' என்பது அவன் உட்கோள். 'இமையா முன்னம் விசும்பிடைப் படர்ந்தான்' என்பது அங்குள்ளோர் அவனைப் பற்றிக் கூறிய வார்த்தையாகும். (183)

# 27. இந்திரசித்து வதைப் படலம்

## முன்னுரை

இலக்குவன் இந்திரசித்தினைக் கொன்ற நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகலின் இப்பகுதி இந்திரசித்து வதைப்படலம். எனப் பெயர் பெறுகின்றது. சில ஏடுகளில் இப்படலம் நிகும்பலைப் படலத்தோடு சேர்ந்தே காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

விண்ணில் எழுந்து சென்று மறைந்த இந்திரசித்து உடம்பில் தைத்த அம்புகளோடும் ஒழுகுகின்ற இரத்தத்தோடும் இராவண னுக்கு முன் செல்கின்றான். அவனைக் கண்ட இராவணன் யாகம் முற்றுப் பெறவில்லை என்பதை அனுமானித்து அறிந்து கொண்டு அழிவில்லாத உடம்பையுடைய நீ மிகத் தளர்ந்திருக்கின்றாய்! நிகழ்ந் ததைச் சொல் என்று வினவுகின்றான். நின் தம்பியே உளவு சொல்லி இலக்குவனை அழைத்து வந்து யாகத்தைத் தடுத்து விட்டான்' என்று இந்திரசித்து கூறிவிட்டு இலக்குவனது வீரப் பண்புகளையும் தெய்வத் தன்மையையும் வியந்து சொல்லிவிட்டு, 'நீ சீதைமேல் காதலை விடுத் தால் அவர்கள் நாம் செய்த தீமையைப் பொறுத்துப் போரினை விடுத்துப் போதலும் புரிவர்' என்று அறிவுரை கூறுகின்றான்.

அவன் சொல்லைக் கேட்ட இராவணன் சிரித்து, 'ஐய! மனிதனுக்கு அஞ்சி வருந்தாதே; யான் இப்பொழுதே சென்று அவர்களை வில் லொன்றினால் வெற்றி கொள்கின்றேன்; என்னை நோக்கியே இந்த நெடும் பகையைத் தேடிக் கொண்டேன். நின் பேதைமையினால் சீதையை விட்டுவிடு' என்று எனக்குச் சொன்னாய்; இருபது திண்ணிய தோள்கள் இருக்கும்போது என் புகழ் நிலைபெறவும் தேவர் காணவும் போர்செய்து நீர்க்குமிழி போன்று நிலையிலாத உடம்பை விடுவதன்றிச் சீதையை விடுவேனோ? யான் வெற்றி பெறாவிட்டாலும் வெற்றிபெறும் இராமன் பேர் நிற்குமாயின் அக்காலம் வரையில் யானும் நின்றுளேன் அன்றோ? எவ்வுயிர்க்கும் பொதுவாகிய மரணத்தை யாரேனும் தவிர்க்க இயலுமா? இன்று உள்ளவர்கள் நாளை மாள்வார்கள்; ஆனால் புகழுக்கு அழிவுண்டாமோ? யான் சீதையை விட்டுவிட்டேன் என்றால் எனது எளிமையை யறிந்து தேவர்கள் என்னை நெருங்கிவந்து என்னைக் கட்டத்தொடங்கி விடுவார்களே யன்றி என்னை 'இராவணன்' என்று

கருதி அஞ்சி நிற்பார்களோ? எனவே, சீதையை விடுத்துத் தேவர் கட்கு எளியவனாய் உயிர்வாழ்வதைவிடப் பத்துத் திசைகளையும் வென்று சிறந்த யான் எளிமையாக இறந்து படமாட்டேன். பகைவர்க் குப் பெரிய இழப்பை உண்டாக்கியே இறப்பேன்; நீ நின் போர்த் தொழில் சிரமம் போக்கி இரவைக் கழிப்பாயாக'' என்று கூறிவிட்டுப் போரிக்கு எழலானான்.

எழுந்த இராவணனை இந்திரசித்து வணங்கி, 'எந்தாய்! சீற்றம் தணிக. யான் உறுதி சொன்னதைப் பொறுத்தருள்க. யான் போய்க் கழிந்தபின் நல்லவராகக் காண்பாய்' என்று சொல்லிவிட்டு ஓர் தெய்வத்தேர் ஏறிப் போர்க்களம் குறுகுகின்றான்.

இலக்குவன் இந்திரசித்து அப்பாற் போயினனோ? என விண்ணை நோக்கிக் கொண்டிருந்தவன் தேரொலி கேட்டு மகிழ்ந்து இந்திர சித்தோடு கடும் போர் புரிகின்றான். இந்திரசித்தின் தெய்வத்தேரைச் செலுத்தும் பாகனது தலையைக் கொய்கின்றான். இந்திரசித்து தானே தன் தேரைச் செலுத்திக்கொண்டு தன்னுடம்பில் தைத்துள்ள அம்பு களை எடுத்து வானரப் படைமேல் தூவுகின்றான். அதுகண்ட வீடணன் இவனை இப்போதே கொல்லுதல் வேண்டும். என்று வற்புறுத்து கின்றான். பொழுது விடிகின்றது. 'சிவன் கொடுத்த வில்லும் தேரும் இருக்கிறவரையில் இவன் அழியான்' என வீடணன் சொன்னது கேட்டு இலக்குவன், இந்திரசித்தின் தேரினை அச்சு வேறு ஆணி வேறாக அம்பினால் பிரித்து விடுகின்றான். தேரை இழந்த இந்திரசித்து விண்ணில் எழுந்து மேகத்தில் மறைந்து கல்மழை பொழிந்து வானர வீரர்களை அழிக்கின்றான்.

கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்துள்ள இந்திரசித்தின்மேல் படும்படி விண்ணினை நோக்கி ஆற்றல்மிக்க அம்புகளை விடுகின்றான். அம்பின் ஒளியால் கரிய மேகத்தில் இரத்தம் சொரியும் மேகம் இருப்பது போலச் சொரிகின்ற குருதியோடு இந்திரசித்து மேகத்தில் மறைந் திருப்பதைக் காண்கின்றான். 'அவன் கையில் உள்ள வில் அறுவிடினும் அவன் கையை அறுப்பேன்' என ஒரு பிறைவாயம்பினை ஏவுகின்றான். வில்லைப் பிடித்திருந்த இந்திரசித்தின் கை மணிப்பூணோடு நிலத்தில் வீழ்கின்றது. இந்திரசித்து ஒரு கையில் சூலத்தை எடுத்துக்கொண்டு நிலமிசைத் தோன்றி இலக்குவனை நோக்கி 'நின்னைக் கொன்றன்றி யான் இறவேன்' எனக் கூறி மாயப்போர் பல செய்துகொண்டு சூலத்தால் கொல்ல முற்படுகின்றான். அப்போது இலக்குவன் 'வேதங்கள் தெளிந்து கூறும் கடவுளும், அந்தணர் வணங்கும் கடவுளும் இராமனே' என்பது உண்மையானால் இந்திரசித்தினைக் கொல்க' என்று சொல்லிக்கொண்டு ஒரு பிறைவாய் அம்பினை விடுகின்றான். இந்திர

சித்தின் தலை சற்று மேற்சென்று தரையில் விழுகின்றது; உடம்பும் கீழ் வீழ்கின்றது. அது கண்ட அரக்கர் சேனை இரிந்தோடி இலங்கை புகுகின்றது. தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்கின்றனர். அயன் முதலிய மூவரும், வானரரும் காணத் தடையிடை வந்து காட்சி யளித்தனர். 'இறந்து பட்ட வானரர்கள் எல்லாம் உயிர்பெற்று எழுக' என்று அவர்கள் வாழ்த்தியவுடன் எல்லா வானரப் படையும் உயிர் பெற்று எழுகின்றது.

தரையில் அறுபட்டு விழுந்த இந்திரசித்தின் தலையை அங்கதன் அங்கையில் ஏந்தி முன்செல்ல, இலக்குவன் அனுமனது தோள்மேல் செல்கின்றான். அங்கதன் கையில் தன்பகைவனாகிய இந்திரசித்தின் தலையைக் கண்ட இந்திரன் பெருமகிழ்ச்சியுற்றுப் பலப்பல சொல்லி மகிழ்கின்றான். இலக்குவன் இந்திரசித்தினை வென்று வருவான் என்று அவன் வரவை ஆர்வத்தோடு எதிர் நோக்கியுள்ள இராமன், வெற்றி யோடு திரும்பிவரும் இலக்குவனைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்துகொண்டு எதிர்வருகின்றான். அவன் திருவடியில் இந்திர சித்தின் தலையைக் காணிக்கையாக வைக்கின்றான். அத்தலையைக் கண்ட இராமன் மகிழ்ச்சி மிகுதியினால் ஒன்றும் பேச இயலாதவனாய் அந்தத் தலையின் சிறப்பையும் அதைக் கொய்த இலக்குவனது வீரத் தோளின் சிறப்பினையும் அவனுக்கு ஊர்தியாக இருந்து உதவிய அனுமனின் வலிமையையும் நோக்கி மகிழ்ந்து இலக்குவனை மார்போடு அணைத்துக் கொள்கின்றான்.

இலக்குவனது போர்க் கோலத்தைத் தானே அவிழ்த்து அவன் மார்பில் உள்ள அம்பினாலாய புண்களைத் தன் தோளினால் ஒற்றி ஒற்றிப் போக்குகின்றான். பின்பு இலக்குவனை நோக்கி, 'ஆடவர் திலக! இந்த வெற்றி நின்னால் வந்தது அன்று; அனுமனென்னும் பெரு வீரனால் வந்ததும் அன்று; வீடணன் தந்த வென்றி இது' எனப் புகழ்ந்து கூறிவிட்டு அங்கு இனிதாக இருந்தான் என்பது இப்படலத் துக் கூறும் பொருளாகும்.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில் நிகும்பலையில் இலக்குவனோடு போர்செய்து கொண்டிருந்த இந்திரசித்து தனது தேர் இலக்குவனால் அழிவுற்றமை யால் மாயத்தால் மறைந்து சென்று இலங்கை நகரில் புகுந்து அழியாத மற்றொரு தேரோடு மீண்டும் போர்க்களம் புக்குப் போர் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது.

குருதியோடும் புண்களோடு இலங்கை புகுந்த இந்திரசித்து இராவணனைக் கண்டு இலக்குவனது ஆற்றலை வியந்தும் புகழ்ந்தும் கூறிச் சீதையை விட்டுவிடுவதே நல்லது எனக் கூறினான் எனவும், அது கேட்டு இராவணன் வெகுண்டு போர்க்கு ஆற்றாது இவ்வாறு கூறு கின்றாய்; நீ சென்று சிரமம் தீர்க, என்று கூறிவிட்டுத் தானே போர்க்குப் புறப்பட்டான் எனவும், அது கண்டு இந்திரசித்து வணங்கித் தன் பிழையைப் பொறுத்துக்கொள்ளுமாறு பணிவொடு கூறிவிட்டு அழியாத தெய்வத்தேர் ஏறிப் போர்க்களம் புகுந்தான் எனவும் கம்பர் கூறியுள்ளார். இது கம்பரின் புதிய படைப்பே யாகும். உயிர் போகும் நிலையிலும் இந்திரசித்து தன் தந்தையைக் காப்பாற்ற எண்ணி உறுதிமொழிகளைச் சொன்னான்; இராவணன் தன் மானத் தால் அதை யேற்றுக் கொள்ளவில்லை என்பதை வற்புறுத்தவே இத்தகைய புதிய கருத்துக்களைப் புகுத்தியுள்ளார் எனலாம்.

2. வான்மீகத்தில் இந்திரசித்தின் தலையைக் கொய்த இலக்குவன் அனுமனோடும் வீடணனோடும் இராமனிடம் வந்து வணங்கினான் என்றே உளது.

கம்பர் இலக்குவனால் கொய்து வீழ்த்தப்பட்ட இந்திரசித்தின் தலையை அங்கதன் கையில் எடுத்துக்கொண்டு முன்செல்ல, அனுமன் தோளின் மேல் ஏறிக்கொண்டு இலக்குவன் இராமனிடம் சென்றான் என்றும், அங்கதன் இந்திரசித்தின் தலையை எடுத்துச் செல்வது கண்ட இந்திரன் மகிழ்ச்சிமிக்குப் பலப்பல சொன்னான் என்றும் கூறியுள்ளார். இக் கருத்துகளும் கம்பரின் புதிய படைப்புகளே ஆம்.

3. வான்மீகத்தில் இலக்குவன் உடம்பில் பட்ட விழுப்புண்களைக் கண்ட இராமன், மருத்துவம் வல்ல சுடேணனை விளித்து அப்புண்களை ஆற்றுமாறு கூறியதாகவும், சுடேணன் அவ்வாறே ஒரு மருந்து தழையை இலக்குவன் மூக்கில் முகரச் செய்தவுடன் இலக்குவன் உடம்பில் இருந்த அம்புபட்ட புண்களும் வடுக்களும் நீங்கினதாகவும் கூறப்பட்டுளது.

கம்பர் இந் நிகழ்ச்சியைக் கூறாது விடுத்துள்ளார். இராமன் இலக்குவனது புண்பட்ட உடம்பைப் பன்முறை தழுவியதால் அப் புண்கள் மறைந்ததாகக் கூறியுள்ளார். இராமனுடைய அன்புறும் அணைப்பே இலக்குவனது விழுப்புண்களை ஆற்றியது என்றதால் அவன் அன்பின் சிறப்பைப் புலப்படுத்தியுள்ளார் என்பது புலனாகின்றது.

## படலப் பொருட் சிறப்பு

இப்படலத்தில் இந்திரசித்தும் இராவணனும் பேசும் உரையாடல் தனிச் சிறப்புடையது. இந்திரசித்துக்கு இராவணன் மேல் இருக்கும் அன்பும் இராவணனுக்கு மானவுணர்ச்சிமேல் இருக்கும் பற்றும் இங்குத் தெளிவாகக் காணலாம். கற்பின் கனலியாகிய சீதையை இராவணன் கவர்ந்தது பெரும்பிழை என்பதைப் பலர் பல முறை இராவணனுக்கு வற்புறுத்திக் கூறியுள்ளனர். சூர்ப்பணகையின் சூழ்ச்சிமிக்க சொல்லை நம்பி இராவணன் சீதையின்பால் காதல் கொண்டு மாரீசனை அணுகி அவளைக் கவரத் துணை செய்யுமாறு வேண்டிய போதே அம் மாரீசன் அந்த எண்ணம் அழிவினை விளைவிக்கும் என்பதை அறிவுறுத்தி யுள்ளான். கும்பகருணனும் 'வேறொரு குலத்தான் தேவியை நயந்து சிறைவைத்த செயல் நன்றோ?' என்று வினவி இடித்துரைக்கின்றான். ஆனால், சீதையை நாம் விட்டிடுது மேல் எளியம் ஆய்விடுவோம்; அவர் வெல்ல நாம் பட்டாலும் நன்று; பழி அன்று;' என்று இராவணனுக்குத் துணையாகப் பேசினவன் போர் மூண்டவுடன் உறக்கத்திலிருந்து எழுப்பப் பெற்ற பிறகு, 'தையலை விட்டவன் சரணம் தாழ்ந்து நின், ஐயறு தம்பியோடு அளவளாவுதல், உய்திறம்' என்று கூறிப் பின் இராவணன் வெகுண்டு பேசிப் போர்க்குப் புறப்படுவதைக் கண்டு அவனை வணங்கிப் 'பொறுத்துக் கொள்க' என்று கூறிவிட்டுப் போர்க்குப் புறப்படுகின்றவன்,

" வென்றிவண் வருவன் என்று உரைத்திலேன் விதி
நின்றது பிடர்பிடித்து உந்த நின்றது
பொன்றுவன் பொன்றினால் பொலன் கொள் தோளியை
நன்றென நாயக விடுதி நன்றரோ" எனவும்,

" என்னை வென்றுளரெனி லிலங்கை காவல
உன்னை வென்று உயருதல் உண்மை; ஆதலால்
பின்னை நின்று எண்ணுதல் பிழை; அப்பெய்வளை
தன்னை நன்கு அளிப்பது தவத்தின் பாலதே"

எனவும் கூறிவிட்டுப் 'பெற்றனன் விடை' என்று சொல்லிக் கொண்டே புறப்பட்டுச் சென்று கடும்போர் புரிந்து இராமன் அம்பினால் மாண்டு போயினான்.

மாலியவானும் சீதையை விட்டிடுதல் நல்லது என்பதைக் கூறுகின்றான். இராவணன் சிரித்து 'கிளியனாளை விட்டிட வெண்ணியோ நான் பிடித்தது' என்று மறுத்துரைக்கின்றான்.

போரில் ஊக்கமிகக் கொண்ட இந்திரசித்தும் மாலியவான் சொல்லையே உடன்பட்டவனுய்த் தன் தந்தைக்கு இராம இலக்குவரின் வீரப் பெருமையை விரித்துரைத்துத் தான் விடுத்த பிரமாத்திரமும் இராமனது மேனியைத் தீண்டாது சென்ற தெய்வத் தன்மையைச் சொல்லிவிட்டு, இராவணன் வெகுள்வானே என்ற அச்சத்தாற் போலும், அது பகர்தல் ஆண்மை அன்று என்று கூறினவன், நிகும்பலை வேள்வி செய்தால் அவர்களை வெல்லலாம் என்பது கூறி, இராவணன் மகிழ மாயா சீதையை யுண்டாக்கி, அனுமன் எதிரில் சென்று வெட்டி வீழ்த்திவிட்டு அயோத்திக்குப் புறப்படுவதாகக் காட்டிவிட்டு நிகும்பலையில் வேள்வி செய்து கொண்டிருக்கின்ருன்.

வீடணனுல் இதனை உணர்ந்த இலக்குவன் அவ்வேள்வி முடிவதற்குள் அந்த இந்திரசித்தினை வீழ்த்தி விடவேண்டும் என்ற குறிக்கோளோடு சென்று நிகும்பலையில் கடும்போர் செய்து இந்திரசித்தின் தேரினை அழித்து அம்புகளால் அவன் உடம்பினைத் துளைக்கின்ருன். இந்திரசித்துத் துடும் என விண்ணில் மறைந்து இராவணன் எதிரில் சென்று நின்றபோது இராவணன் பார்த்து நிகும்பலை வேள்வி முடியாதபடி பகைவர் நுழைந்து போர் செய்தனர் என்பதை அறிந்து கொண்டு, வந்த காரணம் வினவுகின்ருன்.

இந்திரசித்து நிகழ்ந்தது கூறி இலக்குவனுடைய ஆற்றலை வியந்து புகழ்ந்து கூறிவிட்டு, இது வரையில் சொல்லாத ஒன்றினைச் சொல்கின்ருன். வீடணனும், கும்பகருணனும் மாலியவானும் சொன்ன கருத்தைத்தான் அவனும் சொல்கின்ருன். ஆயினும், இதுகாறும் போரில் பகைவரை அழித்து வெற்றிக்கொடி பிடிக்கலாம் என்ற நம்பிக்கையுடன் இருந்த இந்திரசித்து—உலகெலாம் கலக்கி வென்ற இந்திரசித்து, இந்த நிகும்பலைப் போரில் உண்மை யுணர்ந்து 'ஆசை தான் அச்சீதைபால் விடுதி' என நயமாக இராவணனுக்குச் சொல்கின்ருன். முன்னர்க் கூறிய வீடணன் முதலியோர் சீதையை விடச் சொன்னுர்கள்; இவனே 'சீதைபால் ஆசையை விடுக' என்கின்ருன். 'சீதையை விடுக' என்ருல் உடனே அவனுக்குச் சினம் பொங்கும் என்ற கருத்தினனுய் அக்கருத்தையே மாற்றித் திறம்பட நயம்படக் கூறுகின்ருன் ஆயினும் இராவணனுக்கு அது புலப்படாமலில்லை. இந்திரசித்தினை எள்ளிச் சிரிக்கின்ருன். 'ஆதலால் அஞ்சினேன் என்று அருளலை' என இந்திரசித்து அடிப்படை அமைத்துக் கொண்டு பேசினுலும், அவன் இலக்குவனுக்கு அஞ்சித்தான் இங்ஙனம் கூறுகின்ருன் என்றே இராவணன் நினைக்கின்ருன். இந்திரசித்தின் நெஞ்சம் இராவணனுடைய வாழ்வை நினைக்கின்றது; இராவணன் நெஞ்சம் பகைவரின் வீழ்வை நினைக்கின்றது; தன் வீரப் பெருமையை நினைக்

கின்றது; மான வுணர்வை நினைக்கின்றது. 'மனிதனை அஞ்சலை வருந்தல் ஐய! சயங்கொடு தருவன் இன்றே மனிசரைத் தனுவொன் ருலே' என்று வீரமொழி பேசுகின்ருன். 'என்னையே நோக்கி யான் இந் நெடும்பகை தேடிக் கொண்டேன்' எனத் தன் வலிமையையும் வெற்றியில் கொண்ட நம்பிக்கையையும் விளம்புகின்ருன். இவ்வாறு கூறுகின்ற இராவணனுக்கு வரப் போவது யாது என்பது தெரியாது என நினைக்க நேரும். ஆனல் பின்பு அவன் கூறும் சொற்களால் தன்னுடைய முடிபு இன்னது என்பதை நன்கு விளக்கிவிடுகின்ருன். முதனுள் போரில் இராமனது இணையற்ற ஆற்றலைக் கண்டு இளைத்துத் திரும்பிய போதே தனக்கு முடிவு வந்து விட்டது என்பதை உணர்ந்து 'நாசம் வந்துற்ற போது நல்லதோர் பகையைப் பெற்றேன்' என மாலியவானிடத்து மகிழ்ச்சியோடு கூறியுள்ளான்.

இந்திரசித்துப் போரில் வல்லவன் என்ருலும் பிள்ளைமைப் பருவம் அவனை இவ்வாறு சொல்லச் செய்தது என இராவணன் நினைக்கின்ருன். அந்த நினைப்பில் நின்றே 'பேதைமை யுரைத்தாய் பிள்ளாய்!' என இந்திரசித்தினை விளிக்கின்ருன்.

'உலகெலாம் பெயரப் பேராக் காதை யென் புகழினேடு நிலை பெற, அமரர் காண, மீது எழு மொக்குள் அனைய யாக்கையை விடுவது அல்லால் சீதையை விடுவது உண்டோ' என்று வினவுகின்ருன். இராவணனுடைய இக்கருத்தை யூன்றி நோக்கினல் அவன் மானவுணர்ச்சியால் உந்தப்பட்டு இங்ஙனம் மொழிகின்ருன் என்பது புலப்படும். சீதை மேல் உள்ள காதலைக் காட்டிலும் அவனுக்குப் புகழ் மேலுள்ள காதலே பெரிது என்பது தெளிவாகும். வீரர்க்குச் சான்ருேர் என்று ஒரு பெயருண்டு; நிலையாமை யுணர்ந்தவர் என்பது பொருள். இராவணன் உடம்பின் நிலையின்மையையும் புகழின் நிலைபேற்றையும் நன்குணர்ந்த சான்ருேன்—வீரன்—ஆதலின் இவ்வாறு கூறுகின்ருன். சீதையை விடுத்தால் பழியே யுண்டாகும்; இராமனல் இறந்தால் புகழே யுண்டாகும். இராமன் பேர் நிற்கும் வரையில் தன் பேர் நிற்க வேண்டுமாயின், இராமன் தேவியை விடாது, நின்று தன் ஆவியை விடுதலே தக்கது என்ற முடிவை இராவணன் மேற்கொண்டு விட்டான். இந்திரசித்துக்கோ இந்த முடிவை நினைக்க அனுபவம் போதாது; எனவே தன் தந்தை உயிரோடு வாழ்ந்தால் போதும் என்ற கருத்தால் கூறினன். வீரத்திலும் மானத்திலும் அனுபவம் மிக்க கும்பகருணன் முன்பு கூறியது போல, 'விட்டிடுதுமேல் எளியம் ஆதும்; அவர் வெல்லப்பட்டிடுதுமேல் அதுவும் நன்று; பழி அன்ருல்' என்ற முடிபே இராவணனது முடிபும் ஆகும். இம் முடிபு சாலச் சிறந்த முடிபு; வீரர்க்கு ஏற்ற முடிபு; வீட்டுலகம் காட்டும் முடிபு; என்றே புகழலாம்.

# 27. இந்திரசித்து வதைப் படலம்

இந்திரசித்து வானரர் ஐயுற விண்ணிடைக் கரந்து
இராவணனை அடைதல்.

**9252** விண்ணிடைக் கரந்தா னென்பார்
வஞ்சனை விளக்கு மென்பார்
கண்ணிடைக் கலங்கி நோக்கி
யையுற வுழக்குங் காலை
புண்ணுடை யாக்கைச் செந்நீ
ரிழிதரப் புக்கு நின்ற
எண்ணிடை மகனை நோக்கி
யிராவண னினைய சொன்னான்.

விண்ணிடைக் கரந்தான் என்பார்,
வஞ்சனை விளக்கும் என்பார்,
கண்ணிடைக் கலங்கி நோக்கி,
ஐயுறவு உழக்குங்காலை,
புண்ணுடை யாக்கைச் செந்நீர்
இழிதர, புக்கு நின்ற
எண்ணுடை மகனை நோக்கி,
இராவணன் இனைய சொன்னான்.

பொ:- 'இந்திரசித்து விண்ணில் மறைந்தான்' என்பாரும், 'இனி வஞ்சனைச் செயலைச் செய்வான்' என்பாருமாய் வானரர் கண்கலங்கி விண்ணை நோக்கி ஐயத்தால் வருந்திக் கொண்டிருக்கும் போது, (விண்ணிடை மறைந்து நில்லாமல்) புண்ணுடைய தன் உடம்பில் இரத்தம் சோர, இராவணன் இல்லத்துப் புகுந்து நின்ற மதிப்புடைய மகனைப் பார்த்து இராவணன் இத்தகைய வார்த்தைகளைச் சொன்னான்.

கு:- போர் செய்து கொண்டிருக்கும் போதே விண்ணிடை மறைதலும் அங்கு நின்று மாயச் செயல் செய்தலும் இந்திரசித்துக்கு இயல்பாதல் பன்முறை கண்டவராதலின் வானரர் வஞ்சனை விளக்

கும் எனக் கண்கலங்கி விண்ணை நோக்கி ஐயுற்று வருந்துவாராயினர். இந்திரசித்தோ, அவர்கள் எண்ணியது போல விண்ணிலிருந்து மாயம் ஏதும் செய்யாது இராவணனை அடைந்தான் என்றவாறு. இலக்குவனது அம்புகள் தைத்த புண்களில் இரத்தம் ஒழுகா நிற்கும் உடம்போடு இந்திரசித்து இராவணனிடம் சென்று நின்றான் என்க. இதனால் தனது போர் முயற்சியும் இலக்குவனது இணையில் ஆற்றலும் இராவணனுக்குப் புலப்படுத்தியவாறும் ஆயிற்று. எண்—மதிப்பு. மற்றை மக்களினும் இராவணனுக்கு இந்திரசித்தின் பால் உள்ள நன் மதிப்புத் தோன்ற 'எண்ணுடை மகனை' என்றார். (1)

### உற்றது சொல் என இராவணன் இந்திரசித்தினை வினவுதல்

**9253** தொடங்கிய வேள்வி முற்றப்
பெற்றிலாத் தொழினின் றோண்மேல்
அடங்கிய வம்பே யென்னை
யறிவித்த தழிவில் யாக்கை
நடுங்கினை போலச் சாலத்
தளர்ந்தனை கலுழ னண்ணப்
படங்குறை யாவ மொத்தா
யுற்றது பகர்தி யென்றான்.

'தொடங்கிய வேள்வி முற்றப்
பெற்றிலாத் தொழில், நின் தோள்மேல்
அடங்கிய அம்பே என்னை
அறிவித்தது; அழிவுஇல் யாக்கை
நடுங்கினை போலச் சாலத்
தளர்ந்தனை; கலுழன் நண்ணப்
படம்குறை அரவம் ஒத்தாய்;
உற்றது பகர்தி' என்றான்.

பொ:- 'நீ தொடங்கிய வேள்வி முற்றுப் பெறாத தன்மையை நின் தோள்மேல் தைத்துள்ள அம்பே எனக்கு அறிவித்தது; அழிவு இல்லாத உடம்பு (முதுமையால்) நடுங்கினவன் போல மிகவும் தளர்ந்து கருடன் நெருங்கியதால் படம் ஒடுங்கின பாம்பு போன்றாய்; நிகழ்ந்ததைச் சொல்' என்று இராவணன் வினவினான்.

கு:- தோளில் தைத்த அம்போடும் புண் சொரிந்த இரத்தத் தோடும் இந்திரசித்து வந்துள்ளமையால், நிகும்பலை வேள்வி முற்றுப் பெற வொட்டாது பகைவர் பொருதனர் என்பதை இராவணன் அருத்தாபத்தியால் உணர்ந்தான் என்றவாறு. "வேள்வி முற்றுப் பெற்றிருந்தால் வெற்றியோடே திரும்பி யிருப்பன் என்றபடி." பொருதமை புண்ணே சொல்ல வென்றமை போந்த தன்மை, உரை செய வூர்தீயிட்ட தோரங்கிரும் புகையே யோதக், கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்டத், தெரிதர வுணர்ந்தேம்" (சுந்தர-திருவடிதொழுத-10) என்பது இச் செய்யுளின் முன்னிரண்டடியோடு ஒப்பு நோக்கத்தகும். நடுங்கினையாய் ஒத்தாய் என முற்றெச்சமாக்கி முடிக்க. இலக்குவன் கலுழன் போன்றவன்; இந்திரசித்து அரவம் போன்றவன் என்க. நாகபாசப் படலத்தில், கலுழன் நண்ண நாக பாசம் வலியிழந்த தன்மையை மறவாத நெஞ்சினனாகலின் இவ்வுவமையைக் கூறலானான். இந்திரசித்தின் உடம்பு எத்தகைய படையாலும் அழியாத வன்மை மிக்கது என அதன் சிறப்புணர்த்தியவாறு. (2)

## இந்திரசித்து சொல்வது 9254—9257

**9254** சூழ்வினை மாயை யெல்லா
 மும்பியே துடைக்கச் சுற்றி
வேள்வியைச் சிதைய நூறி
 வெகுளியா லெழுந்து வீங்கி
ஆள்வினை யாற்ற றன்னா
 லமர்த்தொழில் புக்கு நின்றான்
தாழ்விலாப் படைகண் மூன்றுந்
 தொடுத்தனென் றடுத்து விட்டான்.

சூழ்வினை மாயை எல்லாம்
 உம்பியே துடைக்க, சுற்றி
வேள்வியைச் சிதைய நூறி
 வெகுளியால் எழுந்து வீங்கி,
ஆள்வினை ஆற்றல் தன்னால்
 அமர்த்தொழில் புக்கு நின்றான்;
தாழ்வுஇலாப் படைகள் மூன்றும்
 தொடுத்தனென்; தடுத்து விட்டான்.

பொ:- யான் செய்த சூழ்ச்சியையும் மாயையையும் உன் தம்பி வீடணனே உண்மை சொல்லிப் பயனிலதாக்கி விட்டமையால் (இலக்குவன்) தன் சேனையோடு முற்றுகையிட்டு வேள்வியைச் சிதையுமாறு அழித்துவிட்டுக் கோபத்தால் கிளர்ச்சி பெற்றுப் பூரித்து முயற்சி மிக்க வலிமையினால் போர்த் தொழிலில் புகுந்து நின்றான்; யான் தாழ்வு இல்லாத தெய்வப் படைகள் மூன்றையும் தொடுத்து விட்டேன்; அவற்றை அவன் தடுத்து விட்டான்.

கு:- சூழ்வினை என்றது அயோத்திமேல் பொரச் செல்வதாகக் காட்டிய சூழ்ச்சியை. மாயை என்றது, மாயா சீதையை வகுத்து வெட்டி வீழ்த்தியதை. இவ்விரண்டும் பொய் என்பதை வீடணன், வண்டு உருவங்கொண்டு சென்று சீதையை நேரில் கண்டும், நிகும்பலை நோக்கி அரக்கர் செல்வது கண்டு இந்திரசித்து அயோத்திக்குப் போகாமல் நிகும்பலையில் வேள்வி செய்கின்றான் என்பதை அனுமானித்து அறிந்தும் வந்து இராமனுக்குக் கூறியதையே சூழ்வினை மாயையெல்லாம் உம்பியே துடைக்க' என்றான். சுற்றி நூறி, வீங்கி அமர்த் தொழில் புக்கு நின்றான் என இயையும். இலக்குவன் என்பது தோன்றா எழுவாயாகக் கொள்க. போரென்ன வீங்கும் பொருப்பன்ன திண்டோளினன் இலக்குவன் என்பது தோன்ற 'வெதுளியால் எழுந்து வீங்கி' என்றான். அமர்த்தொழில் புகுதலாவது அமர் தொடங்குதல், தாழ்விலாப் படைகள் மூன்று என்றது, பிரமன் முதலிய முத்தேவர்களின் படைகளை; அவை பிரமாத்திரம், நாராயணாத்திரம், பாசுபதம் என்பன. (3)

9255 நிலஞ்செய்து விசும்புஞ் செய்து
நெடியவன் படை நின்றானை
வலஞ்செய்து போயிற் றென்றால்
மற்றினி வலிய துண்டோ
குலஞ்செய்த பாவத் தாலே
கொடும்பகை தேடிக் கொண்டோம்
சலஞ்செயி னுலக மூன்று
மிலக்குவன் முடிப்பன் றானே.

'நிலம்செய்து விசும்பும் செய்து,
நெடியவன் படை, நின்றானை
வலம்செய்து போயிற்று என்றால்,
மற்று இனி வலியது உண்டோ?

குலம் செய்த பாவத்தாலே
கொடும்பகை தேடிக் கொண்டோம்
சலம்செயின் உலகம் மூன்றும்
இலக்குவன் முடிப்பன், தானே.

பொ:- யான் விட்ட நெடியவனுகிய திருமாலின் படை, நில முழுதும் பரவியதோடு விண் முழுதும் பரவி என் எதிர்நின்ற இலக்குவனை வலம் செய்துகொண்டு (அவனை ஒன்றும் செய்யாது) போவது என்றால், அப்படையினும் வலியதொரு படை நம்மிடத்து உளதோ? நம் அரக்கர் குலம் செய்த பாவத்தினுல் கொடுமையான பகையை நாம் தேடிக்கொண்டோம்; இலக்குவன் வெகுள்வானுயின் அவன் ஒருவனே உலகம் மூன்றையும் அழிப்பான்.

கு:- நெடியவன் என்றது திருமாலை: அவன் நெடியவனுய் வளர்ந்து மண்ணுலகையும் விண்ணுலகையும் அளந்தது போலவே அவன் படையும் அவ்விரு உலகங்களிலும் பரவி நின்று பின் இலக்குவனை ஒன்றும் செய்யாது அவனை வலம் செய்துகொண்டு போவது என்றது திருமாலின் படையும் வலம் செய்து வணங்கத் தக்க பெருமையுடையவன் இலக்குவன் என்பது காட்டியவாறு. முன்பு விண்ணும் மண்ணும் பரவிப் பெரிதாய் நின்ற நாராயணுத்திரம் இலக்குவனைக் கண்டபின்பு சிறிதாய் அவனை வலஞ்செய்து போய்விட்டது என்க. அரக்கரிடம் உள்ள படைகளில் மிக்க வலிமையுடையது திருமாலின் படையே ஆதலின் 'மற்றினி வலியது உண்டோ? என்றான். இராம இலக்குவர் தாமே வந்து வலிதின் போர் தொடுத்திலர்; சீதையைக் கவர்ந்து வந்து அவர் தம் கொடிய பகைமையை வரவழைத்துக் கொண்டோம் என்பான், 'கொடும்பகை தேடிக் கொண்டோம்' என்றான். இராவணன் செய்த பாவத்தால் இப்பகை நேர்ந்திருக்குமாயின் இராவணன் மட்டுமே அழிவெய்த வேண்டும்; இப்பகையால் அரக்கர் குலமுழுவதுமே அழிவெய்துதலின், இராவணன் பகை தேடிக்கொண்டதற்குக் காரணம் அரக்கர் குலம் செய்திருந்த பாவமே என்பது விளக்கி இராவணனது குறையைக் குறைத்தவாறு. 'அரக்கர் பாவமு மல்லவர் இயற்றிய அறமும் துறக்க நல்லருள் துறந்தனன் தூமொழி மடமான்'' (அயோத்தியா—மந்தரை சூழ்ச்சி—78) என்பது நினைக. (4)

9256 முட்டிய செருவின் முன்ன
முதலவன் படையை யென்மேல்
விட்டில னுலகை யஞ்சி
யாதலால் வென்று மீண்டேன்

கிட்டிய போதுங் காத்தா
னின்னமுங் கிளர்ப்பா னல்லன்
சுட்டிய வலியி னாலே
கோறலைத் துணிந்து நின்றான்.

முட்டிய செருவில் முன்னம்
முதலவன் படையை என்மேல்
விட்டிலன், உலகை அஞ்சி;
ஆதலால், வென்று மீண்டேன்;
கிட்டிய போதும் காத்தான்;
இன்னமும் கிளர்ப்பானல்லன்;
சுட்டிய வலியினாலே
கோறலைத் துணிந்து நின்றான்.

பொ:- நெருங்கிய போரில் முன்னம் பிரமன் படையை உலகம் அழியுமே என்று அஞ்சி என்மேல் விட்டிலன்; ஆதலால், (யான் பிரமாத்திரம் விடுத்து அவனை)வென்று மீண்டேன். நிகும்பலையில் வந்து நெருங்கிப் போர் செய்தபோதும் அந்தப் பிரமாத்திரத்தை என் மேல் விடாமல் யான் விட்ட பிரமாத்திரத்தை மட்டும் தடுத்தான்; இன்னமும் அந்தப் படையைத் தொடுக்காமலே;யாவரும் மதித்தற்குக் காரணமான தன் வில் வலிமையினாலே என்னைக் கொல்லத் துணிந்து நின்றான்.

கு:- முன்னம் என்றது, பிரமாத்திரப் படலத்துத் தான் பிரமாத்திரத்தைத் தொடுப்பதற்கு முன் என்றவாறு: அப்போது உலகை அஞ்சி இலக்குவன் பிரமாத்திரத்தை விட்டிலாமையை:- 'எண்ணமற்றிலை யயன்படைதொடுப்பெனென் றிசைத்தான்' (பிரமாத்திரம்-80) என்பதாலும், "ஆன்றவன்னது புகறலும் அறவ னீ முனிந்தால், ஈன்ற வந்தணன் படைக்கலந் தொடுக்க வெவ்வுலகம் மூன்றையும் சுடும் ஒருவனால் முடிகலது என்றான், சான்றவன் அது தவிர்ந்தனன் உணர்வுடைத் தம்பி" என்பதாலும் அறியலாம். 'அப்போது இலக்குவன் பிரமன் படையை விடுத்திருப்பின் யான் வென்று மீள முடியாமல் அழிந்திருப்பேன்' என்பான், 'ஆதலால் வென்று மீளமுடியாமல் அழிந்திருப்பேன்' என்பான், 'ஆதலால் வென்று மீண்டேன்' என்றான். கிட்டியபோதும் காத்தான் என்றது, நிகும்பலை வேள்வியில் போர் செய்ய நெருங்கியபோதும் பிரமாத்திரத்தை என்மேல் விடாது யான் விட்ட பிரமாத்திரத்தைத் தடுத்தற்கு மட்டும் விட்டான் என்றவாறு. காத்தல் - தடுத்தல். "தம்பியைத் தழுவினையயன் தாமரைத் தவிசின்மேலான், வெம்படை தொடுக்குமாயின் விலக்கும தன்றி வீர, அம்பு நீ துரப்பாயல்லை அனையது துரந்த காலை, உம்பரும் உலகும் எல்லாம் விளியும் அஃது ஒழிதி என்றான்" (நிகும்பலை-3) என இராமன்

கூறியவாறே இலக்குவன் இந்திரசித்தின்மேல் பிரமாத்திரத்தை விடாது அவன் விட்ட பிரமாத்திரத்தை விலக்குதற்கு மட்டும் விடுத்ததை நினைந்தே இங்குக் 'கிட்டிய போதுங் காத்தான்' என்றான் இந்திரசித்து. 'இன்னமுங் கிளர்ப்பா னல்லன்' என்றது, இனியும் என் மேல் பிரமாத்திரத்தைத் தொடுக்கமாட்டான் என்றவாறு. இராமனது ஆணை அதுவாதலின் இலக்குவன் அவன் ஆணையின்படியே இறுதிவரையில் அயன்கணையைத் தொடுக்காமல் வேறு கணைகளையே தொடுத்து இந்திரசித்தினைக் கொல்லுதலும் பின்னர்க் காணலாம். முதல்வன் என்றது, முதலாவதாகிய படைத்தல் தொழிலுக்குரிய பிரமனை. கிளர்த்தல் என்றது இங்கு எடுத்தலை உணர்த்தியது. 'உன் சிலைவலித் தருக்கினாலே புக்கவ னுவி கொண்டுபோதுதி"(நிகும்பலை-4) என இராமன் கட்டளையிட்டதற் கேற்பவே இலக்குவன் செய்வான் என்ற எண்ணத்தால் 'சுட்டிய வலியினாலே கோறலைத் துணிந்து நின்றான்' என இந்திரசித்து கூறினான். சுட்டுதல்-மதித்தல். யாவரும் மதித்தற்குக் காரணமான வில்வலியையே இங்குச் 'சுட்டிய வலி' என்றான். இலக்குவனுக்கு இராமன் இட்ட கட்டளையை ஒற்றர்வழி இந்திரசித்து அறிந்து இவ்வாறு கூறினான் என்னலாம். (5)

**9257** ஆதலா லஞ்சி னேனென்
றருளலை யாசை தானச்
சீதைபால் விடுதி யாயி
னனையவர் சீற்றந் தீர்வர்
போதலும் புரிவர் செய்த
தீமையும் பொறுப்ப ருன்மேல்
காதலா லுரைத்தே னென்றா
னுலகெலாங் கலக்கி வென்றான்.

'ஆதலால், "அஞ்சினேன்" என்று
அருளலை; ஆசைதான் அச்
சீதைபால் விடுதி ஆயின்,
அனையவர் சீற்றம் தீர்வர்;
போதலும் புரிவர்; செய்த
தீமையும் பொறுப்பர்; உன்மேல்
காதலால் உரைத்தேன்' என்றான்
உலகு எலாம் கலக்கி வென்றான்.

பொ:- அவர்கள் ஆற்றல் அத்தகையதாக இருத்தலால் அந்தச் சீதையினிடத்தில் ஆசையை விட்டுவிடு; விடுவாயானால், அவர்கள் கோபம் தணிவார்கள்; நம்மோடு போர் செய்யாது போதலும் செய்

வார்கள்; நாம் செய்த தீமையையும் பொறுத்துக் கொள்வார்கள்; உன்மேல் வைத்த அன்பினால் இதைச் சொன்னேன்; அவர்கட்கு அஞ்சிச் சொல்கின்றான் என்று கருதாதே' என்று உலக முழுவதையும் கலங்கச் செய்து வென்றவனாகிய இந்திரசித்து கூறினான்.

கு:- 'ஆதலால்'என்றது இராம இலக்குவரின் ஆற்றல் மிகுதியைச் சுட்டி, ஆசைதான் அச் சீதை பால் விடவேண்டும் என்று இந்திரசித்து இராவணனை வேண்டுதற்குக் காரணமாய் நின்றது. ஆதலால் அஞ்சினேன் என இயைத்து அஞ்சினேன் என்பதற்கு ஏதுவாக்குதல் பொருந்தாமை ஆழ்ந்து நோக்கின் புலனாம். 'ஆதலால் ஆசைதான் அச் சீதைபால் விடுதி ஆயின்' என இயையும். 'அஞ்சினேன் என்று அருளலை' என்பதை இடைப் பிறவரலாகக் கூறினான். முன்பு மாலியவான் இராமனது ஆற்றலைப் புகழ்ந்து கூறியபோது இராவணன், "அஞ்சினிர் வாழ்க்கை வேட்டீர் உய்ந்து நீர் போவீர்" (மாயா சீதை-11) என அஞ்சிக் கூறியதாக எண்ணிச் சினந்தமை அறிந்தவன் ஆதலின், இங்கு இந்திரசித்து 'அஞ்சினேன் என்று அருளலை' எனக் கூறவேண்டியவனானான். இராம இலக்குவர் அத்தகைய ஆற்றலுடையவராக இருத்தலால், அவரை வெல்ல இயலாது; சீதைபால் வைத்த ஆசையை விடுத்து அவளை இராமன்பால் விடுத்தால் அவர்கள் சீற்றமும் தணியும்; நாம் செய்த தீமையும் பொறுப்பர்; போர் புரியாது போதலும் செய்வர் என்பதில், நீ ஒரு தீமையை விடுத்தால் அவர்கள் மூன்று நன்மையைச் செய்வர் என அவர்தம் அறந்தரு சிந்தனையை அறிய விளக்கியவாறு. ஆசைதான் அச்சீதை பால் விடுதல் என்றது, அச்சீதையை இராமன்பால் ஒப்புவித்தலை உணர்த்தியது. "வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற் றண்ட முந்தணிதி நீ பண்டையிற் பெரிதே" (புறநா—10) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். பெரியோர்பால் சிறியவர் பேசும் மரபு தோன்ற இங்கு 'என்று கருதாதே' என்பதை 'என்றருளலை' என்ற வாய்பாட்டாற் கூறினான். இவ்வாறு தோல்வியை யேற்பதற்கு உரியவன் அல்லன் என்பது புலப்பட இந்திரசித்தினை 'உலகெலாம் கலக்கி வென்றான்' என்றார். உலகெலாம் கலக்கி வென்றவன் கூறுவது அஞ்சிக் கூறும் கூற்றன்று; உண்மைச் சொல்லே என்பது புலப்படுத்தியவாறு. (6)

### இராவணன் சினந்து கூறுதல் 9258—9263

**9258** இயம்பலு மிலங்கை வேந்த
ளெயிற்றிள நிலவு தோன்றப்
புயங்களுங் குலுங்க நக்குப்
போர்க்கினி யொழிதி போலாம்

மயங்கினை மனிசன் றன்னை
யஞ்சினை வருந்த லைய
சயங்கொடு தருவெ னின்றே
மனிசரைத் தனுவொன் றாலே.

இயம்பலும் இலங்கை வேந்தன்
எயிற்று இளநிலவு தோன்ற,
புயங்களும் குலுங்க நக்கு,
'போர்க்கு இனி ஒழிதி போலாம்!
மயங்கினை; மனிசன் தன்னை
அஞ்சினை வருந்தல்; ஐய!
சயம் கொடு தருவென், இன்றே,
மனிசரைத் தனு ஒன்றாலே.

பொ:- (என்று இந்திரசித்து) சொல்லிய அளவில், இலங்கைக்கு அரசனாகிய இராவணன், தன் கோரப் பற்களில் இள நிலவு தோன்றுமாறும், இருபது தோள்களும் குலுங்குமாறும் சிரித்து, ஐயனே! போர்க்குச் செல்லாமல் இனி நீங்குகின்றாய் போலும்! அறிவு மயங்கினவனே! மனிசனைக் கண்டு அஞ்சி வருந்தாதே; இன்றைக்கே என் ஒருவில்லினாலே மனிதரை வெற்றிகொண்டு தருவேன்.

கு:- நிலவு தோன்ற, குலுங்க, நக்கு என்ற வினையெச்சம் பன்னிரண்டாம் செய்யுளில் 'வரும் என்னா, எழுந்தனல்' என்ற வினையோடு முடியும். இந்திரசித்து கூறிய சொற்கள் அறிவொடு கூறிய சொற்கள் அல்ல; அறிவு மயங்கிக் கூறியன; என்பான் 'மயங்கினை' என்றான்; விளி. அஞ்சினை வருந்தல் என்புழி அஞ்சினை என்பது முற்றெச்சம். வருந்தல் என்புழி அல்விகுதி எதிர்மறை வியங்கோள் விகுதி; மகனெனல் (குறள்-196) என்புழிப்போல. சயம்-வெற்றி. இராம இலக்குவரின் எளிமை புலப்படவேண்டி 'மனிசரை' என்றும், வெல்லுதற்குக் காலமும் வேண்டா என்பது தோன்ற 'இன்றே' என்றும், போர்க்கருவிகளும் பல வேண்டா என்பது தோன்ற 'தனுவொன்றாலே' என்றும், கூறினான். (7)

**9259** முன்னையோ ரிறந்தோ ரெல்லா
மிப்பகை முடிப்ப ரென்றும்
பின்னையோர் நின்றோ ரெல்லாம்
வென்றனர் பெயர்வ ரென்றும்

உன்னை நீ யவரை வென்று
தருதியென் றுணர்ந்து மன்றால்
என்னையே நோக்கி யானிந்
நெடும்பகை தேடிக் கொண்டேன்.

'முன்னையோர் இறந்தார் எல்லாம்
இப்பகை முடிப்பர் என்றும்,
பின்னையோர், நின்றோர் எல்லாம்
வென்றனர் பெயர்வர் என்றும்,
உன்னை "நீ அவரை வென்று
தருதி" என்று உணர்ந்தும் அன்றால்;
என்னையே நோக்கி, யான் இந்
நெடும்பகை தேடிக் கொண்டேன்.

பொ:- (யான் இந்த நெடும்பகையைத் தேடிக்கொண்டது) முன்னே போர்க்குச் சென்றவராய் இறந்தவர்கள் எல்லாம் இந்தப் பகையை முடித்துவிடுவார்கள் என்றோ, பின்பு போர்செய்யத் தக்கவராய் உயிருடன் நிற்பவரெல்லாம் அப்பகைவரை வென்று, மீள்வர் என்றோ, உன்னைக் குறித்து, நீ அவரை வென்று தருவாய் என்றோ, எண்ணி அன்று; என் வலிமையை எண்ணியே யான் இந்த நெடிய பகையைத் தேடிக்கொண்டேன்.

கு:- என்றும் உணர்ந்து அன்று என உம்மை விரித்துக் காட்டப் பட்டது. என்றும் அன்று என்று தனித்தனி இயையும். என்றும் என்றும் என்றும் அன்று என எண்ணும்மையாக்கி இயைத்தலும் ஆம். என்னையே நோக்கி என்றது, என் வலிமையே நோக்கி என்றவாறு. 'என் வலிமை மிகுதியால் அவர்களை வெல்ல இயலும் என்று யானே வலிதிற் சென்று அவர் பெரும்பகையைத் தேடிக்கொண்டேன்' என்றான் என்க. இதனால் இராவணனது தன்னம்பிக்கை புலனாகும். (8)

9260 பேதைமை யுரைத்தாய் பிள்ளா
யுலகெலாம் பெயரப் பேராக்
காதையென் புகழி னோடு
நிலைபெற வமரர் காண
மீதெழு மொக்கு ளென்ன
யாக்கையை விடுவ தல்லால்
சீதையை விடுவ துண்டோ
விருபது திண்டோ ளுண்டாய்.

'பேதைமை உரைத்தாய்; பிள்ளாய்!
உலகு எலாம் பெயரப், பேராக்
காதை என் புகழினோடு'
நிலைபெற, அமரர் காண,
மீது எழும் மொக்குள் அன்ன
யாக்கையை விடுவது அல்லால்,
சீதையை விடுவது உண்டோ,
இருபது திண்தோள் உண்டாய்?

பொ:- பிள்ளாய்! அறிவொடு பொருந்தாத சொற்களைச் சொன்னாய்; உலகங்கள் எல்லாம் நிலைபெயரவும் அழியாத காதை எனது புகழினோடு நிலைபெறுமாறும் அதனைத் தேவர்கள் காணுமாறும், நீர் மேல் எழுகின்ற குமிழிபோன்ற நிலையில்லாத உடம்பை விடுவதல்லது இருபது திண்ணிய தோள்கள் எனக்கு இருக்கச் சீதையை விடுவதும் உண்டோ?

கு:- மேல் இந்திரசித்து சீதையை விடுமாறு வேண்டினமையால் இங்கு இராவணன் சீதையை விடுவது உண்டோ? எனக் கூறலானான். உடம்பை விடுவதால் புகழ் நிலைபெறும் என்பதை:- "நத்தம் போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும் வித்தகற் கல்லா லரிது'' (குறள்—235) என்பதால் அறியலாம். உளதாகும் சாக்காடாவது, புகழுடம்பு நிற்கப் பூத உடம்பு இறத்தல் என்ற பரிமேலழகர் விளக்கமும் இங்கு நினையத் தகும். இராவணன் இங்குக் கூறிய காதை, இராமாயணமே யாதலும் அதில் இராவணன் புகழ் நிலைபெற்றிருத்தலும் தெளிவு. காதை—கதைபொதி பாட்டு. உலகங்கள் பலமுறை நிலைபெயரவும் இராமாயணம் அழியாது வழங்கப்பட்டு வருதல் கண்கூடு. இராவணன் புகழ் இன்றி இராமன் புகழ் விளக்கம் பெறுதல் கூடாமை நினைந்து "பேராக் காதை என் புகழினோடு நிலைபெற' என்றான். தன்னை இழிவாகக் கருதி எள்ளிய தேவர்கள் எல்லாம் இராமன் காதையோடு தன் புகழ் நிலை பெறக் காண்பார்கள் என்பான் 'நிலைபெற அமரர் காண' என்றான். யாக்கையின் நிலையாமை புலப்பட 'மீதெழு மொக்குளன்ன யாக்கையை' என்றான். மொக்குள்—நீர்க்குமிழி; அது தோன்றியவுடன் உடைந்தழியும் இயல்பினது ஆதலின் நிலையாமைக்கு அதனை எடுத்துக் காட்டல் மரபு. "கொப்புளே போலத் தோன்றி அதனுளே அழியக் கண்டும் இக்களே பரத்தை யோம்ப என் செய்வான் தோன்றினேனே'' (அப்பர் தேவாரம்.4-79-1) என்பதும் காண்க. சீதையை விடாது யாக்கையை விடுவதால் அமரர் வியந்து காணுமாறு என் புகழ் இராமன் காதையில் நிலைபெறும். இப் புகழைப் பெறுதற்காகவே சீதையை விடாதிருக்கிறேன். 'இருபது திண்ணிய தோள்களிருக்கும்

போது அத்தோள் வலிசொண்டு போர் செய்து வீரமரணம் எய்திப் புகழ்பெறுது உயிரை நச்சிச் சீதையை விடமாட்டேன்' என்று தன் முடிவை இராவணன் கூறியவாறு. "நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்" (கும்பகருணன் வதை. .31) என இராவணன் முன்னமே தனக்கு நாசம் வந்துவிட்டது என்பதை உணர்த்தியிருத் தலும் நினைக. (9)

**9261** வென்றிலெ னென்ற போதும்
வேதமுள் ளளவும் யானும்
நின்றுளெ னன்றோ மற்றவ்
விராமன்பேர் நிற்கு மாயின்
பொன்றுத லொருகா லத்துந்
தவிருமோ பொதுமைத் தன்றோ
இன்றுளார் நாளை மாள்வார்
புகழுக்கு மிறுதி யுண்டோ.

'வென்றிலென் என்ற போதும்
வேதம் உள்ளளவும், யானும்
நின்றுளென் அன்றோ, மற்று
அவ் இராமன் பேர் நிற்கும் ஆயின்?
பொன்றுதல் ஒருகாலத்தும்
தவிருமோ? பொதுமைத்து அன்றோ?
இன்று உளார் நாளை மாள்வார்;
புகழுக்கும் இறுதி உண்டோ?

பொ:- யான் வெற்றி பெறவில்லையாயினும் (வெற்றி பெற்ற) அந்த இராமன்பேர் நிற்கும் ஆயின், (அவனால் வெல்லப் பெற்ற) யானும் வேதம் இருக்கின்ற காலம் வரையில் நிலைபெற்றுளேன் அன்றோ? இறத்தல் என்பது ஒரு காலத்தும் தவிரக்கூடியதோ? அது எவ்வுயிர்க்கும் பொதுவானது அன்றோ? இன்று இருப்பவர் நாளைக்கு இறப்பார்கள்; ஆனால், புகழுக்கும் அத்தகைய இறுதி உளதாமோ?

கு:- மேல் 'பேராக் காதை என் புகழினோடு நிலைபெற' என்றதில் உண்டாகும் ஐயத்தைப் போக்கி விளக்கம் தந்தவாறு. வென்றவர்க்குத் தானே புகழ் உண்டாதல் இயல்பு? வெல்லப்பட்ட இராவணனுக்குப் புகழுண்டாதல் யாங்ஙனம் எனின்? வென்ற இராமன் பேர் நிற்

கிற வரையில் வெல்லப்பட்ட இராவணன் பேரும் நிற்கும் அன்றே என விளக்கியவாறு. இராவணனை வென்றவன் இராமன் என்றுதானே இராமனைப் புகழ்வார்கள். இராமன் பேர் வேதம் உள்ள அளவும் நிற்பது உறுதி என அறிந்தவன் ஆதலின் 'வேதம் உள்ளளவும் யானும் நின்றுளென் அன்றோ?' என்றான். இச் செய்யுளின் பின் இரண்டடிகளில் இறப்பின் உண்மையை விளக்கிப் புகழின் நிலைபேற்றினை வற்புறுத்துகின்றான். இன்றுளார் நாளை மாள்வார் என்பதோடு, "இன்றுளேன் நாளையில்லேன் என் செய்வான் தோன்றினேனே" (அப்பர் தேவாரம் 4:78-1) என்பது ஒத்திருத்தல் காண்க. 'ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற் பொன்றாது நிற்ப தொன்றில்'' (குறள்—233) ஆதலின் 'புகழுக்கும் இறுதி உண்டோ' என்றான். (10)

இச் செய்யுளின்பின் பின்வரும் மிகைப்பாடல்கள் 63 என்ற எண்ணுள்ள சுவடியில் காணப்படுகின்றன.

**9261** a
என்றவ னிகழ்ந்த தெல்லா
மிந்திர சித்துக் கேளான்
நன் றுநம் மாணை யென்ற
நகைசெய்யா வவனைப் பார்த்து
கொன்றுநா னிருவர் தம்மைக்
குரக்கினத் தோடு மாய்த்து
வென்றுநான் வருவ னெந்தாய்
கேளென விளம்ப லுற்றான்.

b
வாசக் குழலாள் மயில்சீதையை நீ
யாசைப் படுகின்றது நன்றல காண்
நாசத்தை யுறும் முயிர்போய் நானே
நேசப் படுகின்றனன் என்றனனே.

c
சிறியோர் செயல்துன் மதிசெய் தனை நீ
வெறியார் குழல்சீ தையைவிட் டகலச்
செறியார் மணிமா ளிகைசேர் தருநின்
அறியா மையினா லழிவா னதுவே.

d
வண்டார் குழலாள் மலர்மா தினை நீ
கண்டே மனம்வைப் பதுகற் பிலகாண்
விண்டே யெதிர்வா லிதன்மார் புருவக்
கண்டோ னவனே கணையொன் றதனால்.

உ ஆரே பிறர்தார முறுப் பதனில்
நேரே நினைகின்றவர் நீ நினைவாய்
பாரே யிழிவானது தான் நிலையின்
பேரே யொழிவானது வென்று சொன்னான்.

9262 விட்டனென் சீதை தன்னை
யென்னலும் விண்ணோர் நண்ணிக்
கட்டுவ தல்லாற் பின்னை
யானெனக் கருது வாரோ
பட்டன னென்ற போது
மெளிமையிற் படுகிலேன் யான்
எட்டினோ டிரண்டு மான
திசைகளை யெறிந்து வென்றேன்.

'விட்டனென், சீதை தன்னை
என்றலும் விண்ணோர் நண்ணி,
கட்டுவது அல்லால், என்னை
யான் எனக் கருதுவாரோ?
"பட்டனென்" என்றபோதும்,
எளிமையின் படுகிலேன்யான்
எட்டினோடு இரண்டும் ஆன
திசைகளை எறிந்து வென்றேன்.

பொ:- சீதையை இராமனிடம் விட்டுவிட்டேன் என்றவுடன், தேவர்கள் என்னை நெருங்கி வந்து கட்டுவார்களே அல்லாமல் பிறகு என்னை இராவணன் எனக் கருதி அஞ்சி நிற்பார்களோ? (ஆதலால் சீதையை விடாது போர் செய்து இறத்தலே நல்லது) பத்துத் திசைகளில் உள்ளோரையும் படைக்கலங்களை எறிந்து வென்றேனாகிய யான் இறந்துபட்டேன் என்றாலும் எளிமையாக இறந்துபட மாட்டேன்; (பலரையும் கொன்றே இறப்பேன் என்றவாறு).

கு:- சீதையை விட்டவுடன் எனது அச்சமும் எளிமையும் புலப்படும் ஆதலால் இராமனைத் துணையாகப் பெற்ற தேவர்கள் என்னைக் கண்டு அஞ்சி ஓடிய நிலைமாறி, என்னை நெருங்கி வந்து, கயிற்றால் கட்டவும் தொடங்கிவிடுவார்கள்; ஆதலால், பழைய பெருமித நிலையோடு நின்று சீதையை விடாது போர் செய்து இறந்துபடுதலே சிறப்பு என்று

இராவணன் இந்திரசித்துவின் வேண்டுகோளைக் காரணம் காட்டி மறுத்தவாறு. 'திசைகளை யெல்லாம் வென்ற வீர முடைய யான், என் வலிமை யெல்லாம் காட்டிப் போர் செய்து பகைவர் படையை அழித்து விட்டு அரிதில் கொல்லப்படுவேனே யன்றி எளிமையில் இறந்து படமாட்டேன்' எனத் தன் வலிமையைப் புகழ்ந்தவாறு. திசைகள் என்றது ஆகுபெயராய் அத்திசைகளில் உள்ளோரை உணர்த்தியது. (11)

இச் செய்யுளின்பின் 54, 63 என்ற எண்ணுள்ள ஏடுகளில் பின் வரும் செய்யுட்கள் காணப்படுகின்றன.

**9262 a** வட்டமா மதிமுகத்தெம்
மங்கையை மூக்க ரிந்த
கட்டைமா னிடவர் தங்கள்
கைவலி காட்டி னும்
இட்டநா ளெல்லை தன்னை
யாவரால் மறுக்க லாமோ
பட்டுநான் விழுந்தா லன்றிப்
பாவையை விடுவ தென்றான்.

**b** பழுதிலா வடிவி னாளைப்
பாலினன் மொழியி னாளைத்
தழுவினா லன்றி யாசை
தவிருமோ தவமி லாதாய்
முழுதும்வா னவரை வென்றேன்
மூவரென் முன்னில் லார்கள்
அழிவுதா னெனக்கு முண்டோ
வாளலாய் பேடி யென்றான்.

**9263** சொல்லியென் பலவு நீநின்
னிருக்கையைத் தொடர்ந்து தோளில்
புல்லிய பகழி வாங்கிப்
போர்த்தொழிற் சிரமம் போக்கி

எல்லியுங் கழித்தி யென்ன
வெழுந்தன னெழுந்து பேழ்வாய்
வல்லிய முனிந்தா லன்னான்
வருகதேர் தருக வென்றான்.

‘சொல்லி என், பலவும்? நீநின்
இருக்கையைத் தொடர்ந்து, தோளில்
புல்லிய பகழி வாங்கி,
போர்த்தொழில் சிரமம் போக்கி,
எல்லியும் கழித்தி’ என்ன,
எழுந்தனன்; எழுந்து பேழ்வாய்
வல்லியம் முனிந்தால் அன்னான்,
‘வருக, தேர் தருக!’ என்றான்.

பொ:- ‘பலவும்’ சொல்லிப் பயன் என்னே? நீ நின் இருப்பிடத்தை அடைந்து அழுந்திய அம்புகளையெல்லாம் வாங்கிவிட்டு போர்த்தொழிலால் உண்டாகிய துன்பத்தைப் போக்கிக் கொண்டு இந்த இரவு முழுமையும் கழிப்பாயாக" என்று கூறிவிட்டு எழுந்தனன்; எழுந்து, பிளந்த வாயினையுடைய புலி வெகுண்டாற் போன்றவனாய், இங்கு வருக; என் தேரைக் கொணர்க; என்று (தன் தேர்ப்பாகனை நோக்கிக்) கூறினான்.

கு:- எல்லி—இரவு. வல்லியம்—புலி. இந்திரசித்து போர்த்தொழிலால் நேர்ந்த சிரமத்தால்தான் இவ்வாறு கூறினான் என்ற எண்ணமுடையவன் இராவணன் ஆதலின், அவனை நோக்கி இவ்வாறு கூறலானான். (12)

போர்க்கு எழுந்த இராவணனைத் தடுத்து
இந்திரசித்து போர்க்குப் புறப்படுதல்

9264 எழுந்தவன் றன்னை நோக்கி
யிணையடி யிறைஞ்சி யெந்தாய்
ஒழிந்தருள் சீற்றஞ் சொன்ன
வுறுதியைப் பொறுத்தி; யான்போய்க்
கழிந்தனெ னென்ற பின்னர்
நல்லவாக் காண்டி யென்னா
மொழிந்துதன் தெய்வத் தேர்மே
லேறினான் முடிய லுற்றான்.

எழுந்தவன் தன்னை நோக்கி,
இணைஅடி இறைஞ்சி, 'எந்தாய்!
ஒழிந்தருள், சீற்றம்; சொன்ன
உறுதியைப் பொறுத்தி; யான்போய்க்
கழிந்தனென் என்ற பின்னர்,
'நல்லவா காண்டி' என்று
மொழிந்து தன் தெய்வத் தேர்மேல்
ஏறினன், முடியலுற்றான்.

பொ:- அவ்வாறு போர்க்கு எழுந்த இராவணனைப் பார்த்து அவனுடைய இரண்டு அடிகளையும் வணங்கி, 'என் தந்தையே! கோபத்தை விடுவாயாக! யான்சொன்ன உறுதிச் சொற்களைப் பற்றி என்மேல் வெகுளாது பொறுத்துக்கொள்வாயாக! யான் போர்க்குச் சென்று இறந்தேன் என்று கேள்விப்பட்ட பின்பு என் சொற்களை நல்லனவாகக் காணுவாய்' என்று கூறிவிட்டுத் தனது தெய்வத் தன்மையுடைய தேரின்மேல் இறக்கும் உறுதி கொண்டவனாய் ஏறினான்.

கு:- எழுந்தவன் என்றது, வினையாலணையும் பெயர். ஒழிந்தருள் சீற்றம் என்பதைச் சீற்றம் ஒழிந்தருள் என மாற்றுக. ஒழிந்தருள் என்ற பயனிலையை முதலிற் கூறி அதனாலும் ஒரு குறிப்புத் தோற்றுவித்தவாறு; எங்ஙனமெனின்? 'நீ எப்படியேனும் ஒழிவாயாக' என்ற பொருளும் அதில் குறிப்பாக அமைந்திருத்தல் காணலாம். கழிதல் இங்கு இறத்தலை உணர்த்தியது. தான் சொன்னதை இராவணன் இப்போது நல்லவாக ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் தான் போரில் இறந்தபின் நல்லனவாகத் தன் சொல்லைக் காண்பான் என்ற நம்பிக்கையால் இங்ஙனம் கூறினான். முடியலுற்றானாய் ஏறினான் என முற்றெச்சமாக்கி முடிக்க. (13)

### இந்திரசித்து தானம் செய்து விட்டு இராவணனை நோக்கிக் கண்ணீர் பெருக்கிக்கொண்டு போதல்

9265 படைக்கலம் விச்சை மற்றும்
படைத்தன பலவுந் தன்பால்
அடைக்கல மாகத் தேவ
ரளித்தன வெல்லாம் வாங்கிக்

கொடைத்தொழில் வேட்டோர்க் கெல்லாங்
கொடுத்தனன் கொடியோன் றன்னைக்
கடைக்கணுல் நோக்கி நோக்கி
யிருகணீர் கலுழப் போனுன்.

படைக்கலம், விஞ்சை மற்றும்
படைத்தன பலவும், தன்பால்
அடைக்கலமாகத் தேவர்
அளித்தன, எல்லாம் வாங்கி,
கொடைத்தொழில் வேட்டோர்க்கு எல்லாம்
கொடுத்தனன் கொடியோன் தன்னைக்
கடைக்கணுல் நோக்கி நோக்கி,
இருகண் நீர் கலுழப் போனுன்.

பொ:- (முன்னமே தொன்று தொட்டிருந்த) படைக்கலங்களும், தன் அறிவினுல் புதிதாக மேலும் உண்டாக்கின பலவகையான படைக்கலங்களும், தேவர்கள் தன்பால் அடைக்கலமாக இருக்குமாறு அளித்த படைக்கலங்களும் ஆகிய எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, தானம் விரும்பினவர்க்கெல்லாம் பெரும் பொருளைக் கொடுத்துவிட்டுக் கொடியவனுகிய இராவணனைக் கடைக்கண்ணுல் நோக்கி நோக்கி இரு கண்களும் நீர் சொரியப் போர்க்களம் நோக்கிப் போனுன்.

கு:- இந்திரசித்து போர் செய்ய எடுத்துக் கொண்ட படைக்கலங்களை மூவகையாகப் பகுத்துக் கூறியவாறு. படைக்கலம் என்றது பண்டுதொட்டுப் பயின்று வந்த பழமையான படைக்கலங்களை. இந்திரசித்து தன் அறிவு முதிர்ச்சியினுல் புதியனவாகப் படைத்த படைக்கலங்களையே 'விச்சை மற்றும் படைத்தன பலவும்' என்றுர். இதனுல் இந்திரசித்து புதுவதாகப் பலவகையான படைக்கலங்களைப் புதிய முறையில் உண்டாக்கியுள்ளான் என்பது பெறப்படும். மூன்ருவதாகக் கூறப்படும் படைக்கலம், தேவரால் கொடுக்கப் பெற்றனவாகும். அயன், அரி, அரன் என்ற முப்பெருந் தேவரையும் 'தேவர்' எனப் பொது வகையால் குறித்தவாறு. இந்திரசித்து செய்த தவத்திற்கு மகிழ்ந்த முத்தேவரும் தத்தம் பெயர் படைத்த படைக்கலங்களை அவ் இந்திரசித்துக்கே பணி செய்யுமாறு உரிமையாக்கிக் கொடுத்தனர் என்பார், 'தன்பால் அடைக்கலமாகத் தேவர் அளித்தன' என்றுர். வாங்குதலும் கொடுத்தலும் ஆகிய முரண் பட்ட இரு தொழிலையும் இந்திரசித்து செய்தான் என்பார்போல

'எல்லாம் வாங்கி' எனவும் 'எல்லாங் கொடுத்தனன்' எனவும் கூறியுள்ளார். நயம் ஓர்க. தானம் என்ற வடசொல்லைக் கொடைத் தொழில் எனத் தமிழில் கூறியவாறு. 'எல்லாம் கொடுத்தனன்' என்றது, ஏற்போர் விரும்பிய பொருள் எல்லாவற்றையும் கொடுத்தமை விளக்கியவாறு. இராவணனைக் கொடியோன் எனக் கவி குறித்தது, அவன் பிறனில் விழைந்த கொடுமையை நினைந் தமையாலாகும். நேரே நோக்குவதற்கு அஞ்சினமையால் கடைக் கணால் நோக்குவானானான். தான் சொன்ன சொல்லை ஏற்றுக் கொள்ளாமையால், தான் அழிவதோடு தன் தந்தையாய் மூவுலகும் ஆண்ட பெருமையுடைய இராவணன் அழியப் போகின்றானே என்ற பரிவினால் இந்திரசித்தின் இரு கண்களும் தாமே கலுழ்ந்தன என்ற வாறு. இதனால் இந்திரசித்தின் அன்புணர்ச்சி புலப்படும்.

## தன்னைத் தொடர்ந்த அரக்கியரை விலக்கி, மன்னனைக் காக்குமாறு இந்திரசித்து கூறித் தேற்றுதல்

**9266** இலங்கையி னிருத ரெல்லா
மெழுந்தனர் விரைவி னெய்தி
வலங்கலந் தோள நின்னைப்
பிரிக்லம் விளிது மென்னு
வலங்கொடு தொடர்ந்தார் தம்மை
மன்னனைக் காமின் யாதும்
கலங்கலி நின்றே சென்று
மனிசரைக் கடப்ப லென்றான்.

இலங்கையின் நிருதர் எல்லாம்
எழுந்தனர், விரைவின் எய்தி,
'விலங்கல் அம் தோளாய்! நின்னைப்
பிரிகலம்; விளிதும்' என்று,
வலங்கொடு தொடர்ந்தார் தம்மை,
'மன்னனைக் காமின்; யாதும்
கலங்கலிர்; இன்றே, சென்று,
மனிசரைக் கடப்பல்' என்றான்.

பொ:- இலங்கையில் உள்ள அரக்கியர்கள் எல்லாம் எழுந்து விரைந்து வந்து இந்திரசித்தினை அடைந்து 'மலைபோன்ற அழகிய

தோளை யுடையவனே! நின்னைப் பிரிய மாட்டோம். (நின்னைத் தொடர்ந்து வந்து) இறப்போம் என்று தன்னை வலஞ்செய்து கொண்டு தொடர்ந்தவர்களை நோக்கி, (இந்திரசித்து); மன்னவனாகிய இராவணனை அருகிருந்து காப்பாற்றுங்கள்; ஏதும் கலக்கம் கொள்ளா தீர்கள்; இப்பொழுதே சென்று அந்த மனிதரை வெல்வேன்' என்று கூறினான்.

கு:- அரசிளங்குமரன் ஆகிய இந்திரசித்து கண்கலங்கிப் போர்க்குச் செல்வது கண்ட இலங்கை அரக்கியரெல்லாம், 'இவன் போரிற் சென்று பொருது இறப்பது திண்ணம்' என எண்ணினவராய் இந்திரசித்தினைப் பின்தொடர்ந்து தாமும் வந்து இறப்பதாகக் கூற, இந்திரசித்து அவர்க்குத் தேறுதல் கூறிச் சென்றமை புலப்படுத் தியவாறு. எல்லா அரக்கியரும் தன்னைப் பின்பற்றி வந்து இறப் பாராயின் இராவணனுக்குத் துணையில்லாதுபோம் என்ற கருத் தால் அவர்களைத் தடுத்து நிறுத்தினான் இந்திரசித்து என்க. கடத்தல்—வெல்லுதல். நிருதர் என்று இங்குக் கூறியது அரக்கியரையே என்பது அடுத்துவருஞ் செய்யுளால் புலனாம். (15)

தன்னைச் சூழ்ந்துகொண்டு வருந்தும் அரக்கியரை நீங்கி
இந்திரசித்து அரிதிற் செல்லுதல்

9267 வணங்குவார் வாழ்த்து வார்தன்
வடிவினை நோக்கித் தம்வாய்
உணங்குவா ருயிர்ப்பா ருள்ள
முருகுவார் வெருவ லுற்றுக்
கணங்குழை மகளி ரீண்டி
யிரைத்தவர் கடைக்க ணென்னும்
அணங்குறை நெடுவேல் பாயு
மமர்கடந் தரிதிற் போனான்.

வணங்குவார், வாழ்த்துவார், தன்
வடிவனை நோக்கித் தம் வாய்
உணங்குவார், உயிர்ப்பார், உள்ளம்
உருகுவார், வெருவலுற்றுக்

கணங்குழை மகளிர் ஈண்டி
இரைத்தவர், கடைக்கண் என்னும்
அணங்குடை நெடுவேல் பாயும்
அமர்கடந்து, அரிதின் போனான்.

பொ:- திரண்ட குழையணிந்த அவ் அரக்க மகளிர் (இந்திரசித்து நடுக்கவும் நில்லாது) நெருங்கிவந்து, வணங்குகின்றவர்களும் வாழ்த்து கின்றவர்களும், தன் வடிவத்தைப் பார்த்துத் தம்முடைய வாய் உலர்பவரும், பெருமூச்செறிவாரும், உள்ளம் உருகுகின்றவரும் ஆகி அஞ்சி அரற்றினவர்தம் கடைக்கண் நோக்கு என்கின்ற வருந்தும் தன்மை பொருந்திய நீண்ட வேல் பாய்கின்ற போரினை அரிதாகக் கடந்து இந்திரசித்து (இலக்குவனோடு செய்யும் போருக்கு)போனான்.

கு:- கணங்குழை மகளிரீண்டி வணங்குவார், வாழ்த்துவார், வாய் உணங்குவார், உயிர்ப்பார் உருகுவாராய் வெருவலுற்று இரைத்தவர் கடைக்கண் என்னும் நெடுவேல் பாயும் அமர் அரிதிற் கடந்து போனான் என இயையும். 'இன்றே மனிசரைக் கடப்பல்' என்ற இந்திரசித்து, முதலில் மகளிர் கண்ணென்னும் வேல் பாயும் அமரை அரிதிற் கடந்து செல்ல வேண்டியவனானான் என்றவாறு. வேல் பாயும் அமர் கடந்து அம்பு பாயும் அமருக்குப் போனான் என்ற நயமும் காண்க "மண்ணெனுந் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல், பண்ணெனுஞ் சொல்லினார்தம் தோளெனும் பணைத்த வேயும், கண்ணெனுங் காலவேலும் மிடைநெடுங் கானம் புக்கான்'' (கைகேசி சூழ்வினை-84) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். மேலைச் செய்யுளில் 'நின்னைப் பிரிகிலம்' என்று தொடர்ந்துவந்து பெண்டிர் செயல்களை இங்கு விவரித்தவாறு. கடைக்கண் என்னும் நெடுவேல் என்றது உருவகம். அணங்குறை நெடுவேல் என்புழி அணங்கு என்பது வருந்தும் தன்மை எனக் கண்ணுக்கு ஏற்பவும் தெய்வம் என வேலுக்கு ஏற்பவும் பொருள்தந்து நிற்றல் காணலாம். வேலில் வீர இலக்குமி தங்கியிருப்பதாகக் கூறுவது மரபு. (16)

இலக்குவன் இந்திரசித்தின் தேர் வரும் ஓசை கேட்டல்

9268 ஏயின னின்ன னாக
விலக்குவ னெடுத்த வில்லான்
சேயிரு விசும்பை நோக்கி
வீடண தீயோ னப்பால்

போயின ஞதல் வேண்டும்
  புரிந்தில ஞென்று மென்பான்
ஆயிரம் புரவி பூண்ட
  தேரின்பே ரரவங் கேட்டான்.

ஏயினன் இன்னன் ஆக,
  இலக்குவன் எடுத்த வில்லான்,
சேய் இரு விசும்பை நோக்கி
  'வீட ண! தீயோன் அப்பால்
போயினன் ஆதல் வேண்டும்;
  புரிந்திலன் ஒன்றும்' என்பான்,
ஆயிரம் புரவி பூண்ட தேரின்
  பேர் அரவம் கேட்டான்.

பொ:- தன்மேல் அம்புகளை ஏவினவனுகிய இந்திரசித்து இத்தன்மையனுக (மறைந்து சென்று இராவணனை யடைந்து தன் கருத்தைக் கூறிப் பின் போர்க்குப் புறப்பட்டானுக) கையில் எடுத்த வில்லினையுடையவனுய்ச் சேய்மையதாகிய அகன்ற ஆகாயத்தை நோக்கிக்கொண்டு "வீடணு! தீயவனுகிய இந்திரசித்து அப்பாற் போய்விட்டிருக்க வேண்டும். ஒன்றும் செய்திலனே" என்று வீடணனை வர்ணித்துக் கூறுகின்ற இலக்குவன், ஆயிரம் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரின் பெரிய ஆரவாரத்தைக் (காதுகளால்) கேட்டான்.

கு:- அழிந்த தேர்மேல் நின்று இலக்குவன்மேல் ஆயிரங்கோடி அம்புகளைச் சொரிந்து குருதி பெருகச் செய்த இந்திரசித்து 'அழிவிலாத் தேரைக் கொணர்ந்து தான் இவனோடு போர் செய்ய வேண்டும் என இலக்குவனது ஆற்றலை மதித்து விண்ணில் சென்று மறைந்தவன்' இராவணனை அடைந்து தன் கருத்தைக் கூறி அவன் வெகுண்டவுடன் தெய்வத் தேர்மேலேறிப் போர்க்களம் சேர்ந்தான் என்பதைத் தொடர்ச்சியாக கூறிவந்த கம்பர், இங்கு 'ஏயினன் இன்னனுக' என இந்திரசித்தினைக் குறிப்பிட்டுள்ளார். தன்மேல் அம்புகளைச் சொரிந்த இந்திரசித்தின்மேல் அம்புகளைச் சொரியும் எண்ணத்தனுய் இலக்குவன் எடுத்த வில்லனுய் விண்ணினை நோக்கினுன் என்க. ஏயினன்-இலக்குவன் மேல் அம்புகளை ஏவினவன்—இந்திரசித்து "அழிந்த தேர்மீது நின்முன் ஆயிர கோடி அம்பு பொழிந்து, அவன் தோளின்மேலும், இலக்குவன் மேல்புயத்தின்மேலும் ஒழிந்தவர் உரத்தின்மேலும், உதிரநீர் வாரியாக அழிந்திழிந்தோட நோக்கி" (நிகும்பலைப்—182) என்பதை நினைந்து இங்கு 'ஏயினன்' என அவனைக் குறிப்பிட்டார். இந்திரசித்து விசும்

வில் மறைந்தானாகலின் எடுத்த வில்லோடு இலக்குவன் அவ் விசும்பை நோக்கலானான். தீயோன் என்றது இந்திரசித்தினை. 'ஒன்றும் புரிந்திலன்' என்றது, இதற்கு முன்பு அவன் விசும்பில் மறைந்து நாகபாசத்தையும் பிரமாத்திரத்தையும் சொரிந்தாற்போல ஒன்றும் மாயச் செயல் செய்திலன் என்னும் கருத்தினது. ஒன்றும் புரியாமையால் அவன் வீட்டிற்குப் போயிருத்தல் வேண்டும் என அனுமானித்தவாறு. அவ்வாறு அனுமானித்து வீடணனை விளித்துக் கூறிக் கொண்டிருக்கையிலே தேரொலி கேட்டான் என்றவாறு. என்பான் என்பது வினைப்பெயர்; என்பான் கேட்டான் என இயையும். அரவம்-ஒலி. 'போயினன்' என்னும்போது 'வந்தனன்' என்று தேரொலி கூறிற்று என்றபடி. (17)

## இந்திரசித்தின் தேர் வருதல்

**9269** குன்றிடை நெரிதர வடவரையின்
குவடுருள் குவதென முடுகுதொறும்
★ பொன்றிணி கொடியின திடியுருமி
னதிர்குரன் முரல்வது புனைமணியின்
மின்றிரள் சுடரது கடல்பருகும்
வடவனல் வெளியுற வருவதெனச்
சென்றது திசைதிசை யுலகிரியத்
திரிபுவ னமுமுறு தனியிரதம்.

குன்று இடை நெரிதர, வடவரையின்
குவடு உருள்வது என முடுகுதொறும்
பொன்திணி கொடியது, இடி உருமின்
அதிர்குரல் முரல்வது, புனைமணியின்
மின்திரள் சுடரது, கடல் பருகும்
வடஅனல் வெளிஉற வருவது எனச்
சென்றது, திசை திசை உலகுஇரிய
திரிபுவனமும் உறுதனி இரதம்.

பொ:- மூன்று உலகங்களிலும் திரிந்த (இந்திரசித்தின்) ஒப்பற்ற தேர், பொன்கம்பில் கட்டிய கொடியினையுடையதாய், குன்றுகள் எல்லாம் இடையில் அகப்பட்டு நெரியுமாறு; மேருமலையின் சிகரம் உருள்கின்றது என்னுமாறு உருண்டு விரைந்து செல்லுந்தோறும்

இடிக்கின்ற இடிபோல அதிர்க்கும் குரல் கொண்டு முழங்குவதாய், அலங்காரமாகப் புனைந்த மணிகளால் மின்னல் போன்று திரண்ட ஒளியினையுடையதாய், கடல் நீரைப் பருகும் இயல்பினதாகிய வடவைக் கனல் அக்கடலினின்று வெளியிடத்துப் பொருந்த வருவது என்னுமாறு திசைகள்தோறும் உலகுயிர்கள் நிலைகெட்டு ஓடச் சென்றது.

கு:- தனி இரதம் சென்றது என இயையும். மேருமலையின் சிகரம் போன்ற தோற்றத்தையும் அந்த மலையிற் படிந்த மேகம் போன்ற கொடிகளையும், இடிபோன்று முரலும் அதிர்குரலையும், மின்னல் போன்று ஒளிரும் புனைமணிகளையும் வடவனல் வெளிவருவது போன்ற வெம்மையை உடையதாய் உலகம் நிலைகெட்டுத் திசைதோறும் ஓடச் சென்றது என்றவாறு. மலையும் மேகமும் இடியும் மின்னலும் ஆகிய இயைபுடைய பொருள் களையே தேர்க்கு உவமையாகத் தேர்ந்து கூறியுள்ளமை காணலாம். கொடிக்கு, மேகத்தை உவமையாக வெளிப்படக் கூறுராயினும் குறிப்பால் இனம்பற்றிக் கொள்ள வைத்தார் எனக் கொள்க. (18)

**9270** கடன்மறு கிடவுல குலையநெடுங்
கரியிரி தரவெதிர் கவிகுலமும்
குடன்மறு கிடமலை குலையநிலங்
குழியொடு கிழிபட வழிபடரும்
இடமறு கியபொடி முடுகிடவும்
மிருளுள தெனவெழு மிகலரவின்
படமறு கிடவெதிர் விரவியதவ்
விருள்பக லுறவரு பகையிரதம்.

கடல்மறுகிட, உலகுஉலைய, நெடுங்
கரி இரிதர, எதிர் கவிகுலமும்
குடல் மறுகிட, மலை குலைய, நிலம்
குழியொடு கிழிபட, வழிபடரும்
இடம் மறுகிய பொடி முடுகிடவும்,
இருள் உளது எனஎழும் இகல் அரவின்
படம்மறுகிட, எதிர்விரவியது-அவ்
இருள்பகல் உறவரு பகைஇரதம்.

பொ:- அந்த இரவு இருள் பகலாகப்பொருந்துமாறு ஒளியுடன் வருகின்ற பகைவனுடைய இரதம்.-எதிர்க்கின்ற குரக்கினங்கள் குடல்

கலங்கவும், கடல் கலங்கவும், உலகம் வருந்தவும், நெடிய திசை யானைகள் அஞ்சி ஓடவும், அட்ட குலமலைகள் குலுங்கவும், நிலம் குழி யாதலோடு கிழிபடவும், செல்லுகின்ற வழியாகிய இடம் கலங்கிய தாலாய புழுதி விண்ணில் விரைந்து செல்லவும், இருள்உளது என்று கண்டோர் கருதுமாறு நஞ்சினைக் கக்கிக்கொண்டு மேல் எழுகின்ற, வலிமையுள்ள ஆதிசேடனுடைய படம் வருந்தவும் இலக்குவனுக்கு எதிரே வந்தது.

கு:- இந்திரசித்தின் தேர் விரைந்துவரும் அதிர்ச்சியால் வானர சேனை குடல்நடுக்கம் கொண்டது; கடல் கலங்கியது; உலகம் வருந்தி யது; திசையானைகள் அஞ்சி ஓடின; திசைமலைகள் நடுங்கின; நிலம் குழிபட்டுக் கீண்டது; வழியிடம் புழுதிபட்டு விண்ணில் விரைந்து பரந்தது; நிலத்தைத் தாங்கும் ஆதிசேடன் என்னும் பாம்பின் படம் சுமைதாங்காமல் நஞ்சினைக் கக்கிக் கலங்கியது என்றவாறு. நஞ்சைக் கக்கிக்கொண்டு எழுகின்ற பாம்பின் படத்தைப் பார்த்தவர்கள் அப்படத்தில் இருள் உளது என்று எண்ணுமாறு இருந்தது என்றவாறு. நஞ்சின் நிறம் கரிது ஆதலின் இங்ஙனம் எண்ண நேரும் என்றபடி. இரதத்தின் ஒளியால் இருள் விலகிற்று என்பார், இருள் பகலுற வரும் இரதம் என்றார். (19)

## இந்திரசித்தும் இலக்குவனும் பொருதல்

**9271** ஆர்த்தது நிருதர்த மனிகமுட
　　ளமரரும் வெருவினர் கவிகுலமும்
வேர்த்தது வெருவலொ டலம்வரலால்
　　விடுகணை சிதறின னடுதொழிலோன்
தீர்த்தனு மவனெதிர் முடுகிநெடுந்
　　திசைசெவி டெறிதர விசைகெழுதிண்
போர்த்தொழில் புரிதலு முலகுகடும்
　　புகையொடு சிகையனல் பொதுளியதால்.

ஆர்த்தது நிருதர்தம் அனிகம்; உடன்,
　　அமரரும் வெருவினர்; கவிகுலமும்
வேர்த்தது, வெருவலொடு அலம்வரலால்,
　　விடுகணை சிதறினன்; அடுதொழிலோன்,

தீர்த்தனும், அவன் எதிர்முடுகி; நெடுந்
திசைசெவிடு எறிதர, விரைகெழுதிண்
போர்த்தொழில் புரிதலும், உலகு கடும்
புகையொடு சிகைஅனல் பொதுளியதால்.

பொ:- அரக்கர்கம் சேனை ஆரவாரித்தது; உடனே தேவர்களும் அஞ்சினர்; வானரசேனையும் அஞ்சுதலோடு துன்புறுதலால் வேர்த்தது; கொல்லும் தொழிலையுடைய இந்திரசித்து விடுதற்குரிய அம்புகளை வில்லில் கோத்து விடுத்தான்; தூயவனாகிய இலக்குவனும் அந்த இந்திரசித்தின் எதிரே விரைந்து சென்று நெடிய திசைகள் எல்லாம் செவிடுபடும்படி (ஆரவாரித்து) விரைவு பொருந்திய திண்ணிய போர்த்தொழிலைச் செய்தலும் உலகில் கடுமையான புகையோடு கொழுந்துவிட்டு எரியும் தழல் நிரம்பியது.

கு:-அனிகம்-சேனை. வெருவல்-அஞ்சுதல். அலம்வரல்-வருந்துதல். சிகை-கொழுந்து. பொதுளுதல்-நிரம்புதல். அரக்கர்தம் ஆரவாரம் எழுந்தவுடன் தமக்கு எது நேருமோ என அமரரும் அஞ்சினர்: வானர சேனையும் வெருவி வருந்துதலால் வேர்க்கலாயினர் என்க. அடுதொழி லோன் என்றது இந்திரசித்தினை. தீர்த்தன் என்றது, தூயவனாகிய இலக்குவனை. செவிடெறிதல்-செவிடுபடுதல். திசை என்றது இட வாகுபெயராய் அங்குள்ள உயிர்களை உணர்த்தியது. இலக்குவன் செய்த போர் ஆரவாரத்தால் திசை செவிடுபட்டது. இருதிறத் தாரும் பொழியும் கணைகளால் புகையும் கொழுந்துமுடைய கனல் உலகெலாம் பரவியது என்க. (20)

### வீடணன் இலக்குவனுக்கு ஆலோசனை கூற அவன் கடும்போர் புரிதல்

9272 வீடண னமலனை விறல்கெழுபோர்
விடலையை யினியிடை விடலுளதேல்
சூடலை துறுமலர் வாகையெனத்
தொழுதன னவளவி லழகனுமக்
கோடணை வரிசிலை யுலகுலையக்
குலவரை பிதிர்பட நிலவரையின்
சேடனும் வெருவுற வுருமுறழ்
திண்டெறுகணை முறைமுறை சிதறினனால்.

வீடணன் அமலனை, 'விறல் கெழு போர்
விடலையை இனி இடைவிடல் உளதேல்,
சுடலை, துறுமலர் வாகை' எனத்
தொழுதனன்; அ(வ்) அளவில் அழகனும் அக்
கோடு அணை வரிசிலை உலகு உலைய,
குலவரை விதிர்பட, நிலவரையில்
சேடனும் வெருவுற, உரும் உறழ்
திண் தெறுகணை முறைமுறை சிதறினனால்.

பொ:- வீடணன், தூயவனாகிய இலக்குவனை நோக்கி, "வெற்றி பொருந்திய போர் செய்தலில் வல்லவனாகிய இந்திரசித்தினை இனி, நடுநிலை (முன்போல் மறைய) விடுதல் உண்டாகுமாயின்; நீ நெருங்கிய மலர்களையுடைய வாகைமாலையை (வெற்றியை)ச் சூடமாட்டாய்;" என்று கூறித் தொழுதானாக, அழகனாகிய இலக்குவனும் அவ்வளவில் அந்த பெருமுழக்கத்தையுடைய கட்டமைந்த வில்லில், உலகெலாம் வருந்துமாறும் பெருமலைகள் பிதிர்பட்டு உதிரவும் நிலத்தின் அடியிலுள்ள ஆதிசேடனும் அஞ்சுதல் செய்யவும் இடியை ஒத்த திண்ணிய அழித்தல் தன்மை பொருந்திய, அம்புகளை முறைமுறையாகக் கோத்து எய்தான்.

கு:-விறல்கெழு போர் விடலை என்றது இந்திரசித்தினை. இந்திரன் முதலிய அந்தமில் பகைவரை வென்று பழகிய வீரனாகலின் இவ்வாறு புகழ்ந்து கூறினான். முன் இடைவிட்டதால் இந்திரசித்து விண்ணில் மறைந்து நாகபாசமும் பிரமாத்திரமும் விட்டு வென்றதை நினைப்பிக்க 'இனியிடைவிடலுளதேல் சூடலை வாகை' என்று வீடணன் கூறியவாறு. விடலை-வீரன்- வாகை வென்றோர் சூடும் பூவாதலின், வாகை சூடுதல் வெற்றிபெறுதலைக் குறிப்பான் உணர்த்தும். கோடணை-பெருமுழக்கம். வரிசிலையில் தெறுகணை கோத்து முறைமுறை சிதறினன் என வேண்டும் சொல் வருவிக்க. அம்புகள் விரைந்து செல்லும்போது உளதாகும் பேரொலியால் உலகு உலையும்; குலவரை பிதிர்படும்; ஆதிசேடனும் அஞ்சுவான் என்றவாறு. நிலவரை என்றது, இங்கு நிலத்திற்குக் கீழுள்ள பாதலத்தை. ஆதிசேடன் என்பது முதற்குறையாய்ச் சேடன் என வந்தது. தெறுகணை-அழிக்கும் அம்பு. விடலையை விடலுளதேல் என்புழி மடக்கணி காணலாம். அவ்வளவில் என்பது இடைக்குறையாய் 'அவளவில்' என்று வந்தது. சிதறுதல் மிகுதியாகச் சொரிதலை உணர்த்தியது. (21)

9273 ஆயின வளைவயி னனன் முகவாய்
வடுகணை யவன்விட விவன்விடவத்
தீயினு மெரிவன வுயிர்பருகச்
சிதறின கவிகளொ டினநிருதர்

போயின போயின திசைநிறையப்
புரள்பவர் முடிவிலர் பொருதிறலோர்
ஏயின ரொருவரை யொருவர்குறித்
தெரிகணை சொரிவன விருமழைபோல்.

ஆயினஅளவையின் அனல்முகவாய்
அருகணை அவன்விட, இவன்விட, அத்
தீயினும் எரிவன உயிர்பருக,
சிதறின கவிகளோடு இனநிருதர்;
போயின போயின திசை நிறையப்
புரள்பவர் முடிவிலர்; பொருதிறலோர்
ஏயினர், ஒருவரை ஒருவர் குறித்து,
எரிகணை சொரிவன இருமழைபோல்.

பொ:- அந்தச் சமயத்தில் அனல்சிந்தும் முனையை யுடையவாய்க் கொல்லுகின்ற அம்புகளை, அவ்விந்திரசித்து விடவும் அவனுக்கு எதிரே இலக்குவன் விடவும், அந்தத் தீயினும் மிக்கு எரிவனவாய் உயிரைப் பருகுதலால், சிதறுண்ட வானரங்களோடு கூட்டமான அரக்கர்கள் (ஆற்றுமல்) சென்ற சென்ற திசைகள் நிறையுமாறு புரள்கின்றவர்கள் எண்ணற்றவ ராயினர்; போர் செய்கின்ற திறல்மிக்க இந்திரசித்தும் இலக்குவனும் எரிகணைகளையே சொரிகின்ற இரு மேகங்களைப் போல ஒருவரை ஒருவர் குறித்து அம்புகளை ஏவினர்.

கு:- அவன் என்றது இந்திரசித்தினையும், இவன் என்றது இலக்கு வனையும் சுட்டின. உயிர் பருகலால் சிதறின எனச் செயவெனெச் சத்தைக் காரணப் பொருட்டதாக்குக. சிதறின இனநிருதர் எனப் பின்னும் கூட்டுக. இருதிறப்படையிலும் ஆற்றுமல் ஓடித் திசைகள் எல்லாம் நிறையுமாறு புரள்கின்றவர்கள் அளவிலர் என்றவாறு. முடிவிலாராயினம் என ஆக்கச்சொல் வருவித்து முடிக்க. பொருதிற லோர் என்றது போர்செய்வதில் திறல் மிகப் படைத்த இந்திரசித்து இலக்குவன் என்ற இருவரையும். எரிகணை சொரிவன இருமழைபோல் என்றது, இல்பொருளுவமை. திறலோர் இருமழைபோல் ஏயினர் என இயையும். மழை, என்றது மேகத்தை. இரு வீரரும் கணைகளைச் சொரிகின்ற இரு மேகங்களைப் போல ஒருவரை ஒருவர் குறித்து அம்பு களை ஏவினர் என்றவாறு. (22)

**9274** அற்றன வனல்விழி நிருதன்வழங்
கடுகணை யிடையிடை யடலரியின்
கொற்றவன் விடுகணை முடுகியவ
னுடல்பொதி குருதிகள் பருகினகொண்

டுற்றன வொளிகிளர் கவசநுழைந்
துறுகில தெறுகில வனுமனுடல்
புற்றிடை யரவென நுழையநெடும்
பொருசர மவனவை யுணர்கிலனல்.

அற்றன, அனல்விழி நிருதன் வழங்கு
சுடுகணை இடைஇடை: அடல்அரியின்
கொற்றவன் விடுகணை முடுகி, அவன்
உடல்பொதி குருதிகள் பருகின கொண்டு
உற்றன; ஒளிகிளர் கவசம் நுழைந்து
உறுகில; தெருகில அனுமன் உடல்;
புற்றிடை அறவு என நுழைய நெடும்
பொருசரம் அவன் அவை உணர்கிலனல்.

பொ:. நெருப்புப் போன்ற கண்களை யுடைய இந்திரசித்து எய்த கொல்லும் இயல்புள்ள அம்புகள் (இலக்குவனல் துணிக்கப் பெற்று) இடைஇடையே அற்று வீழ்ந்தன; வலிய சிங்கத்தைப் போன்ற வெற்றியை யுடைய இலக்குவன் விடுகின்ற அம்புகள் விரைந்து சென்று அவ்வரக்கனது உடலில் நிறைந்த இரத்தத்தைப் பருகிக்கொண்டு அங்கே தங்கின; இந்திரசித்து விடும் நெடிய அம்புகள் இலக்குவனது ஒளியோடு விளங்கும் கவசத்தில் நுழைந்து உடம்பில் தைக்கவுமில்லை; அவனை வருத்தவுமில்லை; ஆயின், (அவன் ஊர்தியாக விளங்கிய அனுமனது உடம்பில். புற்றிடை நுழையும் அம்புகள்போல எளிதாக நுழைந்தன; அவ்வனுமன் அவற்றை உணராதவனு யிருந்தான்.

கு:- சினத் தீ பொங்கும் கண்களை யுடையவன் என்பார், 'அனல் விழி நிருதன்' என்றார். இந்திரசித்தின் கணைகள் இலக்குவன் விடும் எதிர்கணைகளால் இடையே அற்றுவீழவும், இலக்குவன் விடுங்கணை முடுகிச் சென்று இந்திரசித்தின் உடலில் உறைந்து குருதியைப் பருகிக் கிடந்தன என இலக்குவனது வில்லாற்றலை விளக்கியவாறு. குருதி ஒன்றாயினும் உறுப்புக்கள் பலவாதல் நோக்கிக் குருதிகள் எனப் பன்மையாகக் கூறினர். இந்திரசித்தின் கணைகள் இலக்குவ னுடம்பில் உள்ள கவசத்தைப் பிளந்துகொண்டு புகுமாற்றல் இல்லன ஆதலின், அவனை வருத்தும் தன்மை இலவாயின; ஆனல் அவன் ஊர்தியாக உள்ள அனுமனது உடம்பில் எளிதாக அவன் கணைகள் நுழைந்தன; ஆயினும் அனுமன் அவற்றால் சிறிதும் வருத்தம் இலனாயினன் என்பார் 'புற்றிடை அரவு என நுழைய' என உவமை கூறினர். (23)

9275 ஆயிடை யிளையவன் விடமனையா
னவனிடு கவசமு மழிவுபடத்
தூயின னயின்முக விசிகநெடுந்
தொளைபட விழியனல் சொரியமுனிந்
தேயின நிருதன தெரிகணைதா
னிடனில படுவன விடையிடைவந்
தோய்வுறு வனவது தெரிவுறலா
லுரறின ரிமையவ ருவகையினால்.

ஆயிடை, இளையவன், விடம் அனையான்
அவன் இடு கவசமும் அழிவுபடத்
தூயினன், அயில்முக விசிகம்: நெடுந்
தொளைபட, விழிகனல் சொரிய, முனிந்து,
ஏயின நிருதனது எரிகணை தான்
இடன் இல படுவன இடைஇடை வந்து
ஓய்வுறுவன; அது தெரிவுறலால்,
உரறினர் இமையவர், உவகையினால்.

பொ:- (அனுமன் மேல் இந்திரசித்து அம்புகளை எய்த) அப்போது இளையவனாகிய இலக்குவன், நஞ்சு போன்ற கொடிய வனாகிய இந்திரசித்து அணிந்திருந்த கவசமும் அழியுமாறு கூரிய முனையினை யுடைய அம்புகளைத் தூவினன்; அந்த அம்புகளால் தன் உடம்பில் நெடிய தொளையுண்டாகப் பொறுது கண்களில் தீப் பொறி சிந்த வெகுண்டு, ஏவிய அரக்கனது எரிகின்ற அம்புகள், குறிப்பிட்ட விடத்திலன்றி வேறிடத்தில் படுவனவும் இடையிடையே வந்து ஒய்வுறுவனவும் ஆயின; அச்செயலைத் தேவர் தெரிந்து கொண்டதால் மகிழ்ச்சி மிக்கு ஆரவாரித்தனர்.

கு:- விடமனையானவன் என்புழி, அவன் என்னும் சுட்டு காரணப்பெயரை ஒட்டி நின்றது; இருபெயரொட்டு. நஞ்சு போன்ற கொடுமையும் நிறமும் உடைமை பற்றி இந்திரசித்தை 'விடமனையான்' என்றார். தூயினன் என்றது தொடுத்தனன் என்ற பொருளதே ஆயினும் தொடுத்தற்கண் எளிமை புலப்பட அச்சொல்லால் சொல்லியவாறு. விழியனல் சொரிய முனிந்தவன் நிருதன். நிருதன் முனிந்து ஏவிய எரிகணைகள் குறி தவறி விழுவனவும், இடையில் ஒய்ந்து வீழ்வனவும் ஆயின என்றவாறு. இந்திரசித்தின் வலிமைமிக்க அம்புகள் இவ்வாறு பயன்படாமை கண்டு தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரிப்பாராயினர் என்க. உரறுதல் —

ஆரவாரித்தல். "உருமுரறு கருவிய பெருமலை பிற்பட" (மலைபடு கடாம்—357) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காணலாம். ஒய்வுறுதல்—வலி குறைதல். (24)

## இந்திரசித்து விட்ட வேலினை இலக்குவன் துணித்தல்

**9276** வில்லினின் வெல்லுத லரிதெனலால்
வெயிலினு மனலுமிழ் அயில்விரைவில்
செல்லென மிடல்கொடு கடவினன்மற்
றதுதிசை முகன்மக னுதவியதால்
எல்லினும் வெளிபட வெதிர்வதுகண்
டிளையவ னெழுவகை முனிவர்கடம்
சொல்லினும் வலியதொர் சுடுகணையா
னடுவிரு துணிபட வுரறினனால்.

'வில்லினின் வெல்லுதல் அரிது' எனலால்,
வெயிலினும் அனல்உமிழ் அயில், விரைவில்
செல் என, மிடல் கொடு கடவினன்; மற்று
அது திசைமுகன் மகன் உதவியதால்;
எல்லினும் வெளிபட எதிர்வது கண்டு,
இளையவன் எழுவகை முனிவர்கள்தம்
சொல்லினும் வலியது ஓர் சுடுகணையால்,
நடுஇரு துணிபட உரறினனால்.

பொ:- வில்லினால் இலக்குவனை வெல்லுதல் அரிது என (இந்திரசித்து) எண்ணியதால் சூரியனைக் காட்டிலும் வெப்பமான கனலை உமிழ்கின்ற வேலினை எடுத்து 'விரைவில் செல்வாயாக!' என வலிமைகொண்டு செலுத்தினன். அவ்வேல் பிரமன் மகன் கொடுத்தது; பகற்பொழுதினும் விளக்கம் உண்டாகத் தன்னை எதிர்த்து வருவதைக் கண்டு இலக்குவன், ஏழு முனிவர்களின் சாபச் சொல்லினும் வலியதாகிய ஒரு சுடும் இயல்புடைய அம்பினால் நடுவே அது இரண்டு துண்டாக எய்துவிட்டு மகிழ்ச்சியினால் ஆரவாரித்தான்.

கு:- வில்லினால் இலக்குவனை வெல்ல இயலாது என்று இந்திரசித்து வேலை ஏவ அவ்வேலையும் இலக்குவன் தன் அம்பு

ஒன்றினுல் முரித்துவிட்டான் என்றவாறு. திசைமுகன் மகன் உருத்திரன். இந்திரசித்தின் தவத்திற்கு இரங்கி உருத்திரன் வேலினைக் கொடுத்தான் என்றவாறு. எல்—இரவு. முனிவரின் சாபச் சொல் தப்பாததுபோல் தப்பாத அம்பு என்பார் 'எழுவகை முனிவர்கள் தம் சொல்லினும் வலியதோர் சுடுகணை' என்றார். எழுவகை முனிவர் என்றது, சத்த இருடிகளை. அத்திரி, மருகு, குச்சன், வசிட்டன், கௌதமன், காசியபன்; ஆங்கீரசன் என்பார் அவர். தப்பாது பலனளிப்பதில் சிறந்திருந்தமை காட்ட, ஒரு முனிவர் சொல்லைக் கூருது, 'எழுவகை முனிவர்கள் தம் சொல்லினும் வலியது' என்றார். (25)

9277 ஆணியி னிலையென விசிகநுழைந்
தாயிர முடல்புக வழிபடுசெஞ்
சோணித நிலமுற வுலறிடவுந்
தொடுகணை விடுவன மிடல்கெழுதிண்
பாணிகள் கடுகின முடுகிடலும்
பகலவன் மருமக னடுகணைவன்
றூணியை யுருமுறழ் பகழிகளாற்
றுணிபட முறைமுறை சிதறினனுல்.

ஆணியின் நிலை என விசிகம் நுழைந்து
ஆயிரம் உடல்புக, அழிபடு செஞ்
சோணிதம் நிலம் உற உலறிடவும்,
தொடுகணை விடுவன மிடல்கெழு திண்
பாணிகள் கடுகின முடுகிடலும்,
பகலவன் மருமகன், அடுகணைவன்
தூணியை உரும் உறழ் பகழிகளால்
துணிபட, முறைமுறை சிதறினனுல்.

பொ:- இலக்குவன் விடுத்த ஆயிரம் அம்புகள் ஆணிகள் போலத் தைத்து இந்திரசித்தின் உடம்பில் புகுதலால் அங்கிருந்து பெருகுகின்ற சிவந்த இரத்தம் நிலத்தில் விழ உடம்பு இரத்தம் இல்லாமல் வற்றவும் (சோராது) வில்லில் தொடுக்கின்ற அம்புகளை விடுவனவாகிய வலிமை பொருந்திய திண்ணிய கைகள் அம்புகளை அம்பறாத்தூணியிலிருந்து எடுக்க மிகவும் விரைந்து சென்ற அளவில் சூரியனது மரபில் தோன்றிய இலக்குவன், கொல்லும் அம்புகள் நிறைந்த வலிய

தூணியை இடியை யொத்த வலிய அம்புகளால் துணிபடுமாறு முறை முறையே எய்தான்.

கு:- விசிகம்—அம்பு. இலக்குவன் விடுத்த அம்புகள் ஆயிரக் கணக்காக இந்திரசித்தின் உடம்பில் புகுதலால் இரத்தம் உடம்பி லிருந்து வெளிப்பட உடம்பு வற்றிய நிலையிலும் அவன் சோராது தொடுத்தற்குரிய கணையை எடுத்தற்காக அவன் கைகள் விரைந்து பின் செல்லக் கண்ட இலக்குவன், இடி போன்ற தன் அம்புகளால் அத் தூணியைத் துணிபடச் செய்தான் என்றவாறு. மிடல்—வலிமை; பாணி—கை; திசைச்சொல். மருமகன்—வழித்தோன்றல். சூரியன் மரபில் தோன்றினவன் இலக்குவன் ஆதலின் 'பகலவன் மருமகன்' என்றார். பகலவன்—சூரியன். தூணி—அம்புப் புட்டில். உரும்—இடி. உலறுதல்—வற்றுதல். (26)

### இலக்குவன் இந்திரசித்தின் தேர்ப்பாகனை வீழ்த்தல்

**9278** தேருள தெனினிவன் வலிதொலையா
னெனுமது தெரிவுற வுணருறுவான்
போருறு புரவிகள் படுகிலவாற்
புனைபிணி துணிகில பொருகணையால்
சீரிது பெரிதித னிலைமையெனத்
தெரிபவ னொருசுடு தெறுகணையால்
சாரதி மலைபுரை தலையை நெடுந்
தரையிடை யிடுதலு நிலைதிரிய.

'தேர் உளது எனின், இவன்வலி தொலையான்'
எனும் அது தெரிவுற, உணர் உறுவான்
'போர் உறு புரவிகள் படுகிலவால்;
புனைபிணி துணிகில, பொருகணையால்;
சீரிது, பெரிது, இதன் நிலைமை' எனத்
தெரிபவன் ஒரு சுடு தெறுகணையால்,
சாரதி மலை புரை தலையை நெடுந்
தரையிடை இடுதலும் நிலை திரிய.

பொ:- தேர் அழியாதிருக்குமாயின் இந்த இந்திரசித்து வலிமை அழியான் என்கின்ற அதனைத் தெளிவாக உணர்ந்துள்ள இலக்குவன்,

(தேரை அழிக்க முயன்று பார்த்து) நமது போர்செய்யும் கணைகளால் இவன் தேரில் பூட்டியுள்ள போர்த் தன்மை பொருந்திய குதிரைகள் வீழ்ந்தில; தேர் உறுப்புக்கள் பொருந்தியுள்ள மூட்டுவாய்களும் துணி படவில்லை; இத்தேரின் நிலைமை மிக்க சிறப்புடையது' என்று தெரிந்தவனாய், ஒரு சுடுகின்ற கொலை அம்பினால் அத்தேர்ப்பாகனது மாலை போன்ற தலையைக் கொய்து அவன் நிலைகெடப் பெரிய தரையினில் இடுதலும்.

கு:- குளகம்; வரும் செய்யுளில், திண்டேர் பொய்வினை மகளிர் கற்பும் போன்றது என முடியும். இந்திரசித்து முன்பு ஏறி வந்த தேர் அழிந்தவுடன்'அழிவிலாத் தேர் கொண்டன்றிப் போர்த்தொழில் புரியலாகாது' என்று உன்னி விண்ணிடைப் பாய்ந்து சென்றதாகக் கூறப்பட்டுள்ளதனால், இப்போது அவன் ஏறி வந்துள்ள தேர் அழிவிலாத் தேர் என்பது புலனாம். தேர் உள்ள வரையில் இவன் தொலையான் என்பதை நன்குணர்ந்த இலக்குவன் அத் தேரினை அழிக்கப் பல அம்புகள் விடுத்தும், "அத் தேரில் பூட்டியுள்ள குதிரைகள் இறக்கவில்லை. புனைபிணியும் துணியவில்லை' என்று வருந்திக் கூறலானான் என்க. புனைபிணி என்றது, தேர் உறுப்புக்களைப் பொருந்த வைத்துள்ள பொருத்துவாய்களை. இதனிலை பெரிது சீரிது என இயையும். தேரைச் சிதைக்கவும் தேரிற் பூட்டியுள்ள குதிரைகளைக் கொல்லவும் இயலாத நிலையில் அத்தேரைச் செலுத்தும் பாகனைக் கொன்றான் இலக்குவன் என்க. தலையை நிலை திரிய நெடுந்தரையிடை யிடுதலும் என இயையும். (27)

பாகனை யிழந்த தேரின் நிலைமை

**9279** உய்வினை யொருவன் றூண்டா
துலத்தலிற் றவத்தை நண்ணி
அய்வினை நலிய நைவா
னறிவிற்கு முவமை யாகி
மெய்வினை யமைந்த காமம்
விற்கின்ற விரகிற் றேலாப்
பொய்வினை மகளிர் கற்பும்
போன்றதப் பொலன்பொற் றிண்டேர்.

உய்வினை ஒருவன் தூண்டாது
உலத்தலின், தவத்தை நண்ணி,
அய்வினை நலிய நைவான்
அறிவிற்கும் உவமை ஆகி,

மெய்வினை அமைந்த காமம்
விற்கின்ற விரகில் தோலாப்
பொய்வினை மகளிர் கற்பும்
போன்றது—அப்பொலம் பொன் திண்தேர்.

பொ:- தேரைச் செலுத்துகின்ற வினையை மேற்கொண்ட ஒப்பற்ற பாகன் குதிரையைத் தூண்டாமல் (பகைவர் கையில்) இறந்துபட்டதனால் அந்தப் பொன்மயமான அழகிய தேர்—தவ வேடத்தை மேற்கொண்டும் (அவ்வேடத்திற்குப் பகையாய) ஐம்பொறிகளின் செயல் தன்னை வருத்த வருந்துகின்றவனது (அழிவுற்ற) ஞானத்திற்கும் உவமையாகப் பொருந்தி, உளம் ஒன்றாது) உடம்பின் செயலாக மட்டும் அமைந்த காமநுகர்ச்சியை வேண்டுவார்க்கு விலை பெற்று விற்கின்ற தந்திரத்தில் தோல்வியுறாமல் தேர்ச்சிபெற்ற பொய்யான செயல்களைச் செய்கின்ற வேசியரின் அழிவுற்ற கற்பொழுக்கமும் போன்றது.

கு:- திண்தேர், உய்வினை ஒருவன் தூண்டாது உலத்தலின் நைவான் அறிவிற்கு முவமையாகிப் பொய்வினை மகளிர் கற்பும் போன்றது என இயையும். பாகனை யிழந்த தேரின் நிலைமையை உவமை முகத்தான் விளக்கியவாறு. ஓடுஞ் செயலுக்குரிய உயர்ந்த தோற்றம் பெற்றும் உய்ப்போன் மாண்டமையால் ஓடாது அழிவெய்தி நிற்கும் தேரும், ஐம்பொறி யடக்குதற்குரிய உயர்ந்த தவவேடத்தின் தோற்றம்பெற்றும் அவற்றை அடக்கும் உரம் இன்மையால் அவற்றால் தாக்குண்டவனது அழிவெய்திய ஞானமும் தம்முள் ஒப்புமையுடையவாதல் காணலாம். உய்வினை என்றது தேரை யோட்டும் செயலை. ஒருவன் என்றது பாகனை. உலத்தல்—அழிதல். தவம் என்றது தவவேடத்தை. குதிரையை நிலையறிந்து செலுத்தும் வாதுவன்போல வேறுக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவு (திருக்குறள்—422) எனப் பரிமேலழகர் தந்துள்ள விளக்கம் இங்கு நினைத்தற் குரியது. காம நுகர்ச்சியாவது உடம்பினால் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று, அறிந்து நுகர்தற்குரியது ஆதலின் 'மெய்வினை யமைந்த காமம்' என்றார். பொறிவழி போவோனிடத்து ஞானமும் பொய்வினை மகளிர்பாலே கற்பும் இல்லையாதல்போல அத்தேரின் செயல் இல்லையாயது என்க.

## இந்திரசித்து தன் மார்பில் தைத்திருந்த அம்புகளைப் பறித்து வீசுதல்

**9280** துள்ளுபாய் புரவித் தேரு
முறைமுறை தானே தூண்டி
அள்ளினன் பறிக்குந் தன்பே
ராகமே யாவ மாக
வள்ளன்மே லனுமன் றன்மேன்
மற்றையோர் மற்றிண் டோண்மேல்
உள்ளுறப் பகழி தூவி
யார்த்தன னெவரு முட்க.

துள்ளுபாய் புரவித் தேரும் முறை
முறை தானே தூண்டி,
அள்ளினன் பறிக்கும் தன்பேர்
ஆகமே ஆவம் ஆக,
வள்ளல்மேல் அனுமன் தன்மேல்
மற்றையோர் மல்திண் தோள்மேல்,
உள்ளுறப் பகழி தூவி,
ஆர்த்தனன் எவரும் உட்க.

பொ:- (இந்திரசித்து) துள்ளுதலோடு பாய்ந்து செல்லுகின்ற குதிரைகளைப் பூட்டியுள்ள தேரையும் தானே முறை முறையாகத் தூண்டிக்கொண்டே தனது பெரிய மார்பகமே அம்பறாத்தூணியாகக் கொண்டு கையால் பற்றிப் பறித்த அம்புகளை இலக்குவன் மேலும், அனுமன் மேலும், மற்றையோர்தம் மல்தொழில் பயின்ற தோள்கள் மேலும் அழுந்துமாறு தூவிவிட்டு, யாவரும் அஞ்சுமாறு ஆரவாரித்தான்.

கு:- இந்திரசித்து பாகன் இறந்தமையால் தானே புரவித் தேரைத் தூண்டினன் எனவும் அம்பறாத்தூணி அற்று வீழ்ந்தமையால் தன் மார்பில் தைத்திருந்த அம்புகளைப் பறித்துத் தூவினன் எனவும் கொள்க. அள்ளுதல் இங்குப் பல அம்புகளையும் சேர்த்துப் பற்றுதலை உணர்த்தியது. முற்றெச்சம்; அள்ளிப் பறிக்கும் என்க. அம்புகளை எடுத்தற்கு இடமானமை பற்றி இந்திரசித்தின் மார்பு அம்பறாத்தூணியாகப் பயன்பட்டது என்பார், 'தன் பேராகமே யாவமாக' என உருவகமாக்கினர். வள்ளல் என்றது இலக்குவனை. இலக்குவனுக்கு

ஊர்தியாக அமைந்திருந்தமையால் அனுமன்மேல் தூவியதைத் தனியே சிறப்பித்துக் கூறியவாறு. உள்ளூற என்றது, அழுந்துமாறு என்றவாறு. அள்ளிப் பறிக்கும் பகழி தூவி எவரும் உட்க ஆர்த்தனர் என இயையும். "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் மெய்வேல் பறியா நகும்" (திருக்குறள்—774) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இத்தகைய போர்ச் செயலை 'நூழிலாட்டு' என்பர். "களங்கெழுமிய படையிரிய வுளங்கழிந்த வேல் பறித்தோய் இன்று" (புறப்பொருள் வெண்பாமாலை, தும்பைப்: 16) என்பது காணலாம். (29)

இந்திரசித்தின் வீரச் செயல் கண்டு தேவர் மலர் சிந்துதல்

9281 வீரரென் பார்கட் கெல்லா
முன்னிற்கும் வீரர் வீரன்
பேரரென் பார்க ளாகும்
பெற்றியிப் பெற்றித் தாமே
சூரரென் றுரைக்கற் பாலார்
துஞ்சும்போ துணர்விற் சோராத்
தீரரென் றமரர் செப்பிச்
சிந்தினர் தெய்வப் பொற்பூ.

வீரர் என்பார்கட்கு எல்லாம்
முன்னிற்கும் வீரர் வீரன்
பேரர் என்பார்கள் ஆகும்
பெற்றியிப் பெற்றித்து ஆமே?
சூரர் என்று உரைக்கற் பாலார்
துஞ்சும் போது உணர்வின் சோராத்
தீரர் என்று அமரர் செப்பிச்
சிந்தினர், தெய்வப் பொற்பூ.

பொ:- "இவன் வீரர் என்று புகழப்படுவோர்கட்கு எல்லாம் முன் நிற்பதற்குரிய வீரர் வீரன்; வீரத்தில் பேர் பெற்றவர்கள் ஆதற்குரிய தன்மை இந்தத் தன்மையதே ஆகும். சூரர் என்று சிறப்பித்துக்கூறத் தக்கவர்கள் இறக்கும்போது வீர வுணர்ச்சியில் சோர்வடையாத துணிவுடையவர் ஆவர்" என்று தேவர்கள் சொல்லிக்கொண்டு தெய்வத் தன்மை வாய்ந்த கற்பக மலர்களாகிய பொன்மலர்களைச் சொரிந்தார்கள்.

கு:- பேர் என்றது புகழை. வீரத்தில் பேர்பெற்றவர்களாகத் திகழ்தற்குரிய தன்மை இவன்பால் இருக்கின்றது என்பார், 'பேரர் என்பார்களாகும் பெற்றி யிப் பெற்றித்தாமே' என்றார்: ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டி 'இப்பெற்றித்தே ஆம்' என்க. சூரர்-வீரர். துஞ்சுதல் இறத்தல். தீரர்-துணிவுடையவர். (30)

இச்செய்யுளுக்குப்பின் 23, 26, 29, 43, 44, என்ற எண்ணுள்ள சுவடிகளில் பின்வரும் செய்யுள் காணப்படுகின்றது.

9281-a அச்செென லாக முன்பின்
தோன்றலு மருத மெய்யன்
தச்சன பகழி மாரி
யெண்ணலாந் தகவுந் தத்திப்
பச்செனு மரத்த வாறு
பெருக்கவும் பதையா நின்றான்
நிச்சயம் போரி லாற்றல்
ஓய்விலன் நெஞ்சும் அஞ்சான்.

இந்திரசித்தின் செயல் கண்டு இலக்குவன் வியத்தல்

9282 எய்தவன் பகழி யெல்லாம்
பறித்திவ னென்மே லெய்யும்
கய்தடு மாறு துள்ள
முயிரினங் கலங்கா யாக்கை
மொய்கணை கோடி கோடி
மொய்க்கவு மிளைப்பொன் றில்லான்
அய்யனு மிவனோ டெஞ்சு
மாண்டொழி லாற்ற லென்றான்.

எய்தவன் பகழி எல்லாம் பறித்து,
இவன் என்மேல் எய்யும்;
கய்தடுமாறு; உள்ளம்,
உயிர் இனம் கலங்காது யாக்கை

மொய்கணை கோடி கோடி
மொய்க்கவும் இளைப்பு ஒன்று இல்லான்;
அய்யனும், 'இவனோடு எஞ்சும்
ஆண்தொழில் ஆற்றல்' என்றான்.

பொ:- இலக்குவனும், 'யான் எய்த வலிய அம்புகளையெல்லாம் பறித்து இவன் என்மேல் எய்கின்றான்; இவன் கை தடுமாறவில்லை. இவன் உள்ளமும் உயிரும் இன்னும் கலங்காமல் இருக்கின்றன; (இவன்) உடம்பில் வலிமைவாய்ந்த அம்புகள் கோடி கோடியாக மொய்த்துத் தைக்கவும் இணைப்புச் சிறிதும் இல்லாதவனாக இருக்கின்றான்; (ஆதலால்) ஆண்மைத் தொழிலாகிய ஆற்றல் இவனோடு அழியும்' என்று வியந்து கூறினான்.

கு:- எய்த வன்பகழி என்றது இலக்குவனால் எய்யப்பட்டு இந்திரசித்தின் மார்பில் தைத்திருந்த அம்புகளை. ஐயன் என்றது இலக்குவனை. மேல் தேவர்கள் வியந்து மலர்மாரி சொரிந்ததை நினைப்பித்து 'ஐயனும்' என இறந்தது தழுவிய எச்ச உம்மை கொடுத்துக் கூறினர். எஞ்சுதல் - அழிதல். "வழியெஞ்சல் எஞ்ஞான்றுமில்" (குறள்-44) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காணலாம். (31)

## இவன் பகலில் அல்லால் இறவான் என வீடணன் இலக்குவனுக்குச் சொல்லுதல்

9283 தேரினைக் கடாவி வானிற்
செல்லினுஞ் செல்லுஞ் செய்யும்
போரினைக் கடந்து மாயம்
புணர்க்கினும் புணர்க்கும் போயக்
காரினைக் கலந்து வஞ்சம்
கருதினுங் கருதுங் காண்டி
வீரமெய்ப் பகலி னல்லால்
விளிகில னிருளின் வெய்யோன்.

"தேரினைக் கடாவி, வானில்
செல்லினும் செல்லும்; செய்யும்
போரினைக் கடந்து மாயம்
புணர்க்கினும் புணர்க்கும்; போய் அக்

காரினைக் கலந்து. வஞ்சம்
கருதினும் கருதும்; காண்டி,
வீர ; மெய்; பகலின் அல்லால்,
விளிகிலன் இருளின், வெய்யோன்.

பொ:- தேரினைச் செலுத்திக்கொண்டு வானத்தில் சென்றாலும் செல்வான்; நேரே செய்யும் போரைவிடுத்து (இவ்விடத்தே) மாயச் செயல்களைச் செய்தாலும் செய்வான்; விண்ணில் போய் அந்த மேகத்தில் கலந்துகொண்டு வஞ்சனைச் செயல்கள் செய்ய நினைத்தாலும் நினைப்பான்; வீரனே! கருத்தோடு காண்பாயாக! கொடியவனாகிய இந்த இந்திரசித்து பகலில் அன்றி இருளில் இறக்க மாட்டான்; இது உண்மை.

கு:- இந்தப் போர் நடைபெறுங் காலம் இரவாதலின் வீடணன் இவ்வாறு கூறலானான். 'போரினைக் கடந்து' என்புழிக் கடத்தல் விடுத்தலை உணர்த்தியது. புணர்த்தல்—செய்தல். வீர! காண்டி என மாற்றுக. வெய்யோன் பகலின் அல்லால் இருளில் விளிகிலன்; மெய்; என இயையும். இந்திரசித்தின் பழைய வஞ்சகப் போரை நினைப்பித்து இலக்குவனைத் தூண்டியவாறு. (32)

## இலக்குவன் இப்பொழுதே வெல்வேன் எனல்

**9284** என்றெடுத் திலங்கை வேந்தற்
கிளையவ னியம்ப வின்னே
பொன்றுவ தல்லா லப்பா
லினியொரு போக்கு முண்டோ
சென்றுழிச் செல்லு மன்றே
தெறுகணை வலியிற் றீர்ந்தான்
வென்றியிப் பொழுதே கோடுங்
காணென விளம்பு மெல்லை.

என்று எடுத்து இலங்கை வேந்தற்கு
இளையவன் இயம்ப, 'இன்னே
பொன்றுவது அல்லால், அப்பால்
இனி ஒரு போக்கும் உண்டோ?

சென்றுழிச் செல்லும் அன்றே
தெறுகணை; வலியில் தீர்ந்தான்;
வென்றி இப்பொழுதே கோடும்;
காண்' என விளம்பும் எல்லை.

பொ:- என்று வீடணன் எடுத்துச் சொல்ல, (இலக்குவன்) 'இப்பொழுதே அவன் இறப்பது அல்லால் இனி ஒருமுறை அப்பால் போதலும் உண்டோ? அழிக்கின்ற என் அம்புகள் அவன் சென்ற இடத்திற்குச் செல்லும் அன்றோ? (அவன்) வலிமை நீங்கினன்; இப்பொழுதே வெற்றி கொள்ளுவோம் பார்ப்பாயாக' என்று சொல்லும் அளவில்.

கு:- 'உதித்தனன் அருக்கன்' என வருஞ் செய்யுளில் முடியும். இலங்கை வேந்தற்கு இளையவன் என்றது, வீடணனை. இலங்கை வேந்தன் மகனைக் கொல்ல உபாயங் கூறுகின்றவன் பிறன் அல்லன். அவ்விலங்கை வேந்தனுக்கு இளையவனே என்பது புலப்படுத்தி வீடணனது இராமபத்தியை விளக்கியவாறு. வலியில் தீர்ந்தான் என்றது, வலிமைத் தன்மையிலிருந்து நீங்கிச் சோர்ந்துவிட்டான் என்றவாறு. கொள்ளுதும் என்பது முதல் நீண்டு கோடும் எனப் புணர்ந்தது. (33)

சூரியன் உதித்தல்

9285 செம்புனற் சோரிச் செக்கர்
திசையுறச் செறிகை யாலும்
அம்பென வுற்ற கொற்றத்
தாயிரங் கதிர்க ளாலும்
வெம்புபொற் றேரிற் றேன்றுஞ்
சிறப்பினு மரக்கன் வெய்யோன்
உம்பரிற் செல்கின் றானைத்
துதித்தன னருக்க னுப்பால்

செம்புனல் சோரிச் செக்கர்
திசை உறச் செறிகையாலும்,
அம்பு என உற்ற கொற்றத்து
ஆயிரம் கதிர்களாலும்,

வெம்புபொன் தேரில் தோன்றும்
சிறப்பினும், அரக்கன் வெய்யோன்
உம்பரில் செல்கின்றான் ஒத்து
உதித்தனன் அருக்கன் உப்பால்.

பொ:- செந்நீராகிய இரத்தம் போன்ற செக்கர் வானம் (கீழ்த்) திசையின்கண் பொருந்த நெருங்குகையினாலும், அம்புகளைப்போலப் பொருந்திய வெற்றிவாய்ந்த ஆயிரங் கதிர்களை யுடைமையாலும் வெம்புகின்ற பொன் தேரில் தோன்றுகின்ற சிறப்புடைமையாலும் இந்திரசித்தாகிய கொடியோன் தரையிலிருந்து விண்ணில் செல்பவனைப் போன்று சூரியன் கிழ்த்திசையில் உதித்தான்.

கு:- சூரியன் கீழ்த்திசையிலிருந்து உதித்து விண்மிசை எழுந்தோற்றம், இந்திரசித்து தரையிலிருந்து விண்மிசை பாய்வதுபோல இருந்தது என்றவாறு. சூரியன் உதித்தவுடன் இந்திரசித்து தன்னுடம்பில் இரத்தம் சோரவும் ஆயிரக் கணக்கான அம்புகள் பொத்துண்டு நீண்டு கிடக்கவும், விண்ணில் பாய்ந்து மறையும் செய்தி பின் நிகழ இருத்தலின் இவ்வாறு உவமை கூறினர். சூரியன் உதிக்கும்போது செவ்வானம் தோன்றுதலும், ஆயிரங் கிரணங்களும் நீண்டு தோன்றுதலும் இயல்பு. செவ்வானத்தின் தோற்றம், இந்திரசித்தின் உடம்பில் நின்று வழியும் இரத்தம் போன்று தோன்றிற்று; சூரியனுடைய ஆயிரங் கிரணங்களும் நீண்டு தோன்றுவது, இந்திரசித்தின் உடம்பில் ஆயிரக் கணக்கான அம்புகள் தைத்துக் கொண்டிருத்தலைப்போலத் தோன்றிற்று என்க. பொற்றேரில் தோன்றும் சிறப்பு இந்திரசித்துக்கும் சூரியனுக்கும் பொதுவாக அமைந்துளது. உப்பால் என்ற சுட்டுக் கிழ்த்திசையை உணர்த்தியது. அருக்கன் அரக்கனை ஒத்து தோன்றினன் என்றவாறு. (34)

அமரரின் மகிழ்ச்சி

9286 விடிந்தது பொழுதும் வெய்யோன்
விளங்கின னுலக மீதா
இடுஞ்சுடர் விளக்க மென்ன
வரக்கரி னிருளும் வீயக்
கொடுஞ்சின மாயச் செய்கை
வலியொடுங் குறைந்து குன்ற
முடிந்தன னரக்க னென்னு
முழங்கின ரமர ரெல்லாம்.

விடிந்தது பொழுதும்; வெய்யோன்
விளங்கினன், உலகம் மீதா
இடுஞ்சுடர் விளக்கம் என்ன,
அரக்கரின் இருளும் வீய,
'கொடுஞ்சின மாயச் செய்கை
வலியொடுங் குறைந்து குன்ற
முடிந்தனன், அரக்கன்' என்னு,
முழங்கினர் அமரர் எல்லாம்.

பொ:- 'பொழுதும் விடிந்தது. அரக்கரைப் போன்று இருளும் அழியுமாறு சூரியன் உலகத்திற்குமேல் இட்ட சுடர் விடுகின்ற விளக்கு என்னும்படி விளக்கம் பெற்றுவிட்டான்; இனி, இந்திரசித்து தன் வலிமையொடு கொடிய கோபமும் மாயச் செயலும் குறைந்து அழியும் ஆதலால் முடிந்தனனே ஆவன்' என்று தேவர்கள் எல்லாம் ஆர வாரித்தனர்.

கு:- அரக்கர் பகலில் வலிகுறைந்து அழியும் இயல்பினர் ஆதலின், இருள் அழிவிற்கு உவமையாக அரக்கரைக் கூறினர். இன், உவம உருபு. இருளும் வீய, வெய்யோன் உலக மீதா இடும்சுடர் விளக்கம் என்ன விளங்கினன் என இயையும். 'உலகமீதா இடும் சுடர் விளக்கம் என்ன' என்பது தற்குறிப்பேற்ற அணி. வீட்டில் இடும் விளக்கினை விலக்க 'உலகமீதா இடுஞ்சுடர் விளக்கம்' என்றார். அரக்கன் வலியொடு கொடுஞ்சினம் மாயச் செய்கை குறைந்து குன்ற முடிந்தனன் என இயையும். குறை என்பது காரணப் பொருளில் வந்த வினையெச்சம். குன்றும் ஆதலால் முடிந்தனனே ஆவன் என்ற படி. முடிவான் என்னுது முடிந்தனன் என இறந்த காலத்தாற் கூறியது, தெளிவுபற்றிய காலவழுவமைதி. இனி, இருளும் வீய, மாயச் செய்கை வலியொடுங் குறைந்து குன்ற, வெய்யோன் விளங்கினன் ஆதலால், அரக்கன் முடிந்தனன், என இயைத்துப் பொருள் கூறலும் ஆம். குன்றுதல் இங்கு அழிதலை உணர்த்தியது. அரக்கரின் இருள் என்பதற்கு அரக்கராலாய துன்ப இருளும் வீய என்றும் பொருள் கூறலாம். இப் பொருள் கூறுங்கால் அரக்கரின் இருளும் என்ற இறந்தது தழுவிய எச்ச உம்மையால் இரவிருள் வீதல் கொள்ளப் படும். (35)

வீடணன் இந்திரசித்தின் வரத்தைப் பற்றிக் கூறியது

9287 ஆரழி யாத சூலத்
தண்ணற னருளி னீந்த
தேரழி யாத போதுஞ்
சிலைகரத் திருந்த போதும்

போரழி யானிவ் வெய்யோன்
புகழழி யாத பொற்ருேள்
வீரவி தாணை யென்ருன்
வீடணன் விளைவ தோர்வான்.

'ஆர் அழியாத சூலத்து
அண்ணல் தன் அருளின் ஈந்த
தேர் அழியாத போதும்,
சிலை கரத்து இருந்த போதும்,
போர் அழியான், இவ் வெய்யோன்;
புகழ் அழியாத பொன்-தோள்
வீர! இது ஆணை' என்ருன்—
வீடணன், விளைவது ஓர்வான்.

பொ:- மேல் நிகழ்வதை அறிந்தவனுகிய வீடணன்,-(இலக்குவனை நோக்கி) "புகழ் அழியாமைக்குக் காரணமாகிய தோள்களையுடைய வீர! கூர்மை கெடாத சூலப்படையேந்திய சிவபிரான் தன்னருள் நோக்கால் கொடுத்த தேர் அழியாதிருக்கும்போதும், வில் அவன் கரத்தில் இருக்கும்போதும் போரில் இந்தக் கொடியவன் அழிய மாட்டான்; இது அவ்விறைவனது ஆணையாகும்" என்று கூறினுன்.

கு:- அழியாத என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமை யால் இச் செய்யுள் சொற்பின்வருநிலை அணி. ஆர்-கூர்மை. 'அழல் வாய் நரகத்தாரெயிறழுந்தினர்' (சிலப்-5:124) என்புழியும் 'ஆர்' இப் பொருளதாதல் காணலாம். முருகனுடைய வேலும், திருமாலின் சக்கரப் படையும்போல யார்மேலும் ஏவப்பட்டில தாதலின் சிவ பிரானது சூலப்படை கூர்மை யழியாதது ஆதல் காணலாம். (36)

இலக்குவன், கடையாணியை நீக்கித் தேரைப் பிரித்தல்

9288 பச்சைவெம் புரவி வீயா
பல்லியற் சில்லி பாரின்
நிச்சய மற்று நீங்கா
வென்பது நினைந்து வில்லின்

விச்சையின் கணவ ஞானன்
வின்மையால் வயிர மிட்ட
அச்சினே டாழி வெவ்வே
ருக்கின ஞணி நீக்கி.

'பச்சை வெம்புரவி வீயா;
பல்லியற் சில்லி பாரில்
நிச்சயம் அற்று நீங்கா'
என்பது நினைந்து, வில்லின்
விச்சையின் கணவன் ஆனான்,
வின்மையால், வயிரம் இட்ட
அச்சினோடு ஆழி வெவ்வேறு
ஆக்கினன், ஆணி நீக்கி.

பொ:- வில்வித்தைக்குத் தலைவனாகிய இலக்குவன், (இந்திர சித்தின் தேரில் பூட்டியுள்ள) கொடிய பச்சைக் குதிரைகள் இறந்து படா; பல இயல்புகள் அமைந்த (தேரின்) சக்கரங்கள் உறுதியற்று பூமியில் அழியா; என்பதை நினைந்து தன் வில்லின் திறத்தால் கடையாணியை நீக்கிவிட்டு வயிரத் தன்மை பொருந்திய அச்சினோடு சக்கரத்தை வெவ்வேறாகப் பிரித்துவிட்டான்.

கு:- வில்விச்சையின் கணவன் என்றது இலக்குவனை. விற்றொழிலில் அவனுக்கிருந்த திறங் கருதி இங்ஙனம் கூறினார். வில்லின் விச்சை என்புழி இன் தவிர்வழிச் சாரியை.

விச்சை-கல்வி. நிச்சயம்-உறுதி. இங்குச் சக்கரத்தின் உறுதித் தன்மையை யுணர்த்தியது. ஆணி என்றது கடையாணியை. (37)

தேர் அழிந்தது; குதிரைகள் ஆற்றாமல் வருந்துதல்

**9289** மணிநெடுந் தேரின் கட்டு
விட்டது மறித லோடும்
அணிநெடும் புரவி யெல்லா
மாற்றல வாய வன்றே

திணிநெடு மரமொன் ருழி
வாண்மழுத் தாக்கச் சிந்திப்
பணைநெடு முதலு நீங்கப்
பாங்குறு பறவை போல.

மணிநெடுந் தேரின் கட்டு விட்டு,
அது மறித லோடும்,
அணிநெடும் புரவி எல்லாம்
ஆற்றல ஆய அன்றே—
திணிநெடு மரம் ஒன்று.
ஆழிவாள் மழுத் தாக்க, சிந்திப்
பணை நெடு முதலும் நீங்க,
பாங்கு உறை பறவை போல.

பொ:- ஒளி மணிகள் பதித்துச் செய்யப்பட்ட நெடிய தேரின் கட்டுக்கோப்பு நீங்கி அத்தேர் கீழ்மேல் ஆனவுடன், அழகிய நீண்ட குதிரைகள் எல்லாம்—திண்மையான நீண்ட மரம் ஒன்று, சக்கரப் படையைப் போன்ற கூர்மையுடைய கோடலி தாக்குதலால், சிதறிப் பருத்த நெடிய அடிமரமும் துணிபட்டு வேருகி நீங்க, அம்மரத் திடத்தே தங்கியிருந்த பறவைகளைப் போலப் பிரிவாற்ருதனவாய் வருந்துவனவாயின.

கு:- தேர் மரம் போன்றது; இத்தேரில் பூட்டப்பெற்ற குதிரைகள் அம்மரத்தில் வாழ்ந்திருந்த பறவைகள் போன்றன. மரம் கோடலியால் வெட்டுண்டு வீழ்ந்தவுடன் அதில் வாழ்ந்திருந்த பறவைகள் அம்மரத்தை விட்டு நீங்கிப் பிரிவாற்ருது, வருந்துவது போலத் தேர் வேருகிப் பிரிந்து வீழ்ந்தவுடன் அத்தேரில் பூட்டியிருந்த குதிரைகள் அத் தேரினை விட்டுப் பிரிந்து பிரிவாற்ருது வருந்துவன ஆயினஎன்க. ஆழி வாள் என்ற இரண்டும் மழுவுக்கு அடையாக வந்தன. வாள்-கூர்மை, கூர்மையிற் சிறந்தது சக்கரப் படையாதலின் கூர்மைக்கு அதனை உவமையாக்கி ஆழிவாள் மழு என்ருர். ஆற்றல-ஆற்ருதன. பணை-பருமை; இனி, கிளை என்று கொண்டு கிளைகளுடன் கூடிய நெடிய அடிமரம் எனக் கூறலும் ஆம். பாங்கு-பக்கம் இங்கு மரத்திடத்தை யுணர்த்தியது. மணி நெடுந்தேர் என்பதற்கு ஒலிக்கும் மணிகள் கட்டியுள்ள நெடிய தேர் என்று பொருள்கூறலும் ஆம். குதிரைகட்குப் பறவையை உவமை கூறுதல் உண்டு. "புள்ளியற் கலிமா" (தொல்-கற்பியல்-53) என்றது காண்க. (38)

## இந்திரசித்து விண்மிசைச் சென்று மறைந்து ஆரவாரித்தல்

9290 அழிந்ததேர்த் தட்டி னின்று
மங்குள்ள படையை யள்ளிப்
பொழிந்தன னிளைய வள்ளல்
கணைகளாற் றுணித்துப் போக்க
மொழிந்ததோ ரளவின் விண்ணை
முட்டினு னுலக மூன்றும்
கிழிந்தன வென்ன வார்த்தான்
கண்டில ரோசை கேட்டார்.

அழிந்த தேர்த்தட்டில் நின்றும்.
அங்குள்ள படையை அள்ளிப்
பொழிந்தனன்; இளைய வீரன்
கணைகளால் துணித்துப் போக்க,
மொழிந்தது ஓர் அளவின் விண்ணை
முட்டினன், உலகம் மூன்றும்
கிழிந்தன என்ன ஆர்த்தான்;
கண்டிலர், ஓசை கேட்டார்.

பொ:- அழிந்துபட்ட தேரின் தட்டில் நின்றுகொண்டு அத் தட்டில் இருந்த படைக் கலங்களை யெல்லாம் அள்ளிக்கொண்டு இலக்குவன்மேல் பொழிந்தான் இந்திரசித்து; அவற்றை யெல்லாம் இலக்குவன் தன் அம்புகளால் துண்டித்து அழிக்க; (அவ்விந்திரசித்து முன் வீடணன்) சொன்ன ஒரு முறையின்படி விண்ணிலே சென்று நெருங்கி, உலகங்கள் மூன்றும் கிழிந்தன என்று எண்ணுமாறு ஆரவாரித்தான்; அவன் வடிவைக் கண்டிலர் யாரும்; ஆனல், அவன் ஆரவாரத்தை மட்டும் கேட்டனர்.

கு:- விளைவ தோர்வான் ஆகிய வீடணன் முன்பு சொன்ன முறையில் இந்திரசித்து விண்மிசைச் சென்ருன் என்பார். 'மொழிந்த தோரளவில்' என்ருர். "போயக் காரினைக் கடந்து வஞ்சங் கருதினும் கருதும்" (32) என முன்பு வீடணன் இந்திரசித்தின் வஞ்சச் செயல் பற்றிக் கூறியிருத்தலை இங்கு நினைப்பித்தவாறு. மூவுலகமும் கிழி பட்டால் உண்டாகும் பேரோசை போன்றிருந்தது இந்திரசித்தின் ஆரவாரம் என்றவாறு. இந்திரசித்து விண்ணில் சென்று மேகத்திடை

மறைந்தான் ஆகலின், யாரும் காண வியலாதவனானான் என்பார் 'கண்டிலன்' என்றார். (39)

## இந்திரசித்து மறைந்து நின்று சொரிந்த கன்மாரியால் வானரர் அழிதல்

9291 மல்லின்மா மாரி யன்ன
தோளினான் மழையின் வாய்ந்த
கல்லின்மா மாரி பெற்ற
வரத்தினாற் சொரியுங் காலைச்
செல்லும்வான் றிசைக ளோரார்
சிரத்தினோ டுடல்கள் சிந்திப்
புல்லினார் நிலத்தை நின்ற
வானர வீரர் போகார்.

மல்லின் மாமாரி அன்ன
தோளினான், மழையின் வாய்ந்த
கல்லின்மா மாரி, பெற்ற
வரத்தினால், சொரியுங் காலை,
செல்லும் வான் திசைகள் ஓரார்,
சிரத்தினோடு உடல்கள் சிந்திப்
புல்லினார் நிலத்தை, நின்ற
வானர வீரர், போகார்.

பொ:- மற்போர்ப் பயிற்சியினையுடையதும் கரிய மேகம் போன்ற நிறத்தினை யுடையதுமான தோளினை யுடைய இந்திரசித்து மேகத்தில் பொருந்தியிருந்த கல்லினாலாகிய மழையைத் தான் முன் பெற்ற வரத்தினால் சொரியும்போது தப்பிச் செல்லுதற்குரிய சிறந்த திசைகளையும் அறியாதவராய்ப் போக வியலாமல் நின்ற வானர வீரர்கள் தலைகளோடு உடல்கள் சிதறப் பெற்றுத் தரையில் வீழ்ந்து கிடந்தார்கள்.

கு:- மேல் 'கண்டிலர்' என்றதற்கு விளக்கம் தோன்ற இங்கு 'மாமாரி யன்ன தோளினான்' என இந்திரசித்தினைக் குறிப்பிட்ட வாறு. நிறத்தால் மேகம் போன்ற தோளினை யுடையவனாதலின் மேகத்திற்கும் தனக்கும் வேற்றுமை தோற்றாதபடி அம்மேகத்தில்

மறைந்து நின்று கன் மழை பொழிந்தான் என்றவாறு. மல்லின் தோளினுன் மாமாரியன்ன தோளினுன் எனத் தனித்தனி இயையும். கற்களைச் சொரியும் மேகமும் உண்டாகலின் 'மழையின் வாய்ந்த கல்லின் மாமாரி' என்ருர். மேகம் தான் விரும்பும்போது சொரிய வேண்டியிருக்க, இந்திரசித்து தான் பெற்ற வரத்தினுல் அம்மேகத்தில் உள்ள கற்களைத் தன் விருப்பப்படி மாரியாகச் சொரியலானுன் என்றவாறு. ஏழு மேகங்களில் கல்லைப் பொழியும் மேகமும் உண்டு என்பதும் அது காளமுகி என்று பெயர்பெறும் என்பதும் இங்கு நினையத்தகும். தோளினுன் சொரியுங் காலை திசைகள் ஓரார் போகார் நின்ற வானர வீரர் சிரத்தினேடு உடல்கள் சிந்தி நிலத்தைப் புல்லினர் என இயையும். நிலத்தைப் புல்லுதலாவது தரையில் வீழ்தல். ஓராராய்ப் போகாராய் நின்ற வானர வீரர் என்று முற்றெச்சமாக்கி முடிக்க. (40)

### இலக்குவன் விண்ணை நோக்கி அம்புகளை எய்தல்

**9292** காண்கிலன் கல்லின் மாரி
யல்லது காளை வீரன்
சேண்கலந் தொளித்து நின்ற
செய்கையாற் றிசைக ளெங்கும்
மாண்கலந் தளந்த மாயன்
வடிவென முழுதும் வௌவ
ஏண்கலந் தமைந்த வாளி
யேவினு னிடைவி டாமல்.

காண்கிலன், கல்லின் மாரி
அல்லது, காளை வீரன்,
சேண்கலந்து ஒளித்து நின்ற
செய்கையால், திசைகள் எங்கும்
மாண் கலந்து அளந்த மாயன்
வடிவு என, முழுதும் வௌவ,
ஏண்கலந்து அமைந்த வாளி
ஏவினுன், இடைவிடாமல்.

பொ:- காளைப் பருவமுடைய வீரனுகிய இலக்குவன், (இந்திரசித்து) வானத்தில் சென்று மேகத்தில் மறைந்து நின்ற செய்கை

யினல் சல்லின் மழை அல்லது அவன் வடிவினைச் சிறிதும் காண மாட்டாதவனைப் பெருமையொடு பொருந்தித் திசைமுழுவதையும் அளந்த (திருவிக்கிரமன் ஆன) திருமாலின் வடிவுபோல விண் முழுவதையும் கவர்ந்து கொள்ளுமாறு வலிமை கலந்து பொருந்திய அம்புகளை இடைவிடாமல் ஏவினன்.

கு:- வீரன், (இந்திரசித்து) ஒளித்து நின்ற செய்கையால் மாரியல்லது காண்கிலன் என இயையும். விண் முழுவதும், தன் வடிவமேயாக வளர்ந்த திருமால்போல விண்ணிட முழுவதும் அம்புகளே யாகுமாறு இலக்குவன் அம்புகளை எய்தான் என்றவாறு. ஏண்—வலிமை. இந்திரசித்து மேகத்தில் ஒளித்துக் கொண்டுள்ளமை யால் கண்ணில் காண வியலாதவன் ஆயினும் அவன், கன்மாரி சொரிதற்கிடமான விண்ணினை நோக்கிப் பல அம்புகளை இலக்குவன் சொரியலானன் என்க. (41)

## இந்திரசித்து மேகக் கூட்டத்திடையே காணப்படுதல்

**9293** மறைந்தன திசைக ளெங்கு
மாறுபோய் மலையு மாற்றல்
குறைந்தன னிருண்ட மேகக்
குழாத்திடைக் குருதிக் கொண்மூ
உறைந்துள தென்ன நின்று
னுருவினை யுலக மெல்லாம்
நிறைந்தவன் கண்டான் காணு
வினையதோர் நினைப்ப ஞனன்.

மறைந்தன திசைகள் எங்கும்;
மாறுபோய் மலையும் ஆற்றல்
குறைந்தனன்; இருண்ட மேகக்
குழாத்திடைக் குருதிக் கொண்மூ
உறைந்துளது என்ன நின்றான்
உருவினை, உலகம் எல்லாம்
நிறைந்தவன் கண்டான்; காணு,
இனையது ஓர் நினைப்பன் ஆனன்.

பொ:- (இலக்குவன் விட்ட அம்புகளால்) திசையிட முழுவதும் மறைந்தன; (அவனுக்கு)மாருகச் சென்று போர் செய்யும் வலிமை

குறைந்தவனாய், இருண்ட மேகக் கூட்டத்தினிடையே இரத்தம் சொரியும் மேகம் ஒன்று தங்கியுளது என்னுமாறு நின்றவனாகிய இந்திரசித்தினது உருவத்தை உலக முழுமையும் நிறைந்து நிற்பவனாகிய இலக்குவன் பார்த்தான்; பார்த்து இத்தகையதொரு நினைப்புடையனாக ஆயினன்.

கு:- குருதிக் கொண்மூ உறைந்துள தென்ன நின்றான் என்றது தற்குறிப்பேற்ற உவமையணி. குறைந்தனனாய் நின்றான் என முற்றெச்சமாக்கி முடிக்க. நின்றானது உருவினை என்க. நின்றான் வினையால் அணையும் பெயர். உலகம் எல்லாம் நிறைந்தவன் என்றது இலக்குவனை. 'இவ்வுலகனைத்தும் தயிர் தோய்பிரை யெனலாம் வகை கலந்தேறிய தலைவன்' (நிகும்பலை—143) என முன்னும் இவன் புகழப் பட்டிருத்தல் காணலாம். இனையதோர் நினைப்பு' என்றது வருஞ் செய்யுளில் கூறப்படும். 'சிலையறுது எனினும் தோளாம் மலைஅறுது ஒழியாது' என்ற நினைப்பினை. (42)

## இந்திரசித்தின் வில்லேந்திய கையை இலக்குவன் கொய்தல்

**9294** சிலையறு தெனினு மற்றத்
திண்ணியோன் றிரண்ட தோளாம்
மலையறு தொழியா தென்னா
வரிசிலை யொன்று வாங்கிக்
கலையறுத் திங்க ளன்ன
வாளியாற் கையைக் கொய்தான்
விலையறு மணிப்பூ ணோடும்
வில்லொடு நிலத்து வீழ.

'சிலை அறுது எனினும், மற்றுஅத்
திண்ணியோன் திரண்ட தோளாம்
மலை அறுது ஒழியாது' என்னா,
வரிசிலை ஒன்று வாங்கி,
கலை அறுத் திங்கள் அன்ன
வாளியால், கையைக் கொய்தான்,—
விலை அறு மணிப்பூணோடும்,
வில்லொடும், நிலத்து வீழ.

பொ:- '(இந்திரசித்தின்) வில் என் அம்பினுல் அறுபடாத தெய்வத்தன்மை யுடையது எனினும் அத்திண்மை மிக்கவனுகிய இந்திரசித்தின் திரண்ட தோளாகிய மலை அருமலிருக்காது' என்று கருதிக் கொண்டு கட்டமைந்ததொரு வில்லை வளைத்து ஒரு கலை அருதுள்ள பிறைத்திங்களைப் போன்ற அம்பினுல் அந்த இந்திரசித்தின் கையை விலை தீராத (விலை மதிப்புடைய) மணிகள் பதித்த அணிகலன்களோடும் வில்லோடும் தரையில் வீழுமாறு அறுத்துத் தள்ளினுன்.

கு:- இந்திரசித்தின் வில் அருத இயல்பினது என்பதை வீடணன் முன்பு கூறினுன் ஆகலின், இலக்குவன் இவ்வாறு நினையலானுன். முன்பு கையாண்ட வில் வலிமை தளர்ந்திருக்கு மாகலின் இலக்குவன் புதியதொரு வில்லை வளைக்கலானுன். கலையருத் திங்கள் என்றது பிறைச்சந்திரனை. ஒரு கலை நீங்காத சந்திரன் என்க; பிறைமுக அம்பினைக் குறிப்பிட்டவாறு. கையை நிலத்து வீழக் கொய்தான் என இயையும். வில் அரு மணிப்பூண் என்றது விலைமதிப்பு இல்லாத மணிகள் பதித்த அணிகலனை. (43)

## இந்திரசித்தின் கை அற்றுத் தரையில் வீழ்தல்

**9295** பாகவான் பிறைபோல் வெவ்வாய்ச்
சுடுகணை படுத லோடும்
மாகவான் நடக்கை மண்மேல்
விழுந்தது மணிப்பூண் மின்ன
வேகவான் கடுங்கா லெற்ற
முற்றும்போய் விளியு நாளின்
மேகமா காயத் திட்ட
வில்லொடும் வீழ்ந்த தென்ன.

பாக வான் பிறைபோல்
வெவ்வாய்ச் சுடுகணை படுதலோடும்,
மாக வான் தடக்கை மண்மேல்
விழுந்தது மணிப்பூண் மின்ன—
வேக வான் கடுங்கால் எற்ற
முற்றுப்போய் விளியும் நாளில்
மேகம் ஆகாயத்து இட்ட
வில்லொடும் வீழ்ந்தது என்ன.

பொ:- (இலக்குவன் விடுத்த) வானில் தோன்றும் (சந்திரனது) தேகமாகிய பிறைச்சந்திரனைப் போல், கொடிய வாயினை யுடையதாய்ச் சுடுகின்ற இயல்புடைய அம்பு (இந்திரசித்தின்மேல்) பட்டவுடனே,— மிக்க வேகத்தையுடைய கடுங்காற்று மோதுதலினால் உலக முழுவதும் சென்று அழியும் ஊழியிறுதியில் மேகம் ஆகாயத்தில் இட்ட இந்திர வில்லினோடும் மண்மிசை வீழ்ந்தது என்னும்படி, ஆகாயத்தில் இருந்த சிறந்த பெரிய அவ்விந்திரசித்தின் கை, மணிகள் பதித்த அணிகலன் மின்ன வீழ்ந்தது.

கு:- பாகப் பிறை என்க. பிறைவாய்க் கணையைப் புலப்படுத்த "பிறைபோல் வெவ்வாய்ச் சுடுகணை' என்றார். இலக்குவன் விட்ட பிறை முகக் கணை பட்டவுடன் இந்திரசித்தின் கை வில்லோடும் வீழ்ந்த தோற்றம், ஊழி இறுதியில் கடுங்காற்று மோதுதலால் கரியமேகம் இந்திர தனுவோடு மண்மேல் வீழ்ந்தது போல இருந்தது எனத் தற்குறிப்பேற்ற உவமையாகக் கூறினர். இந்திரசித்தின் கரிய பெரிய கை கரியமேகம் போன்றது; அக்கையிலிருந்த வில் இந்திர வில்லைப் போன்றது என்க. மேகம் இந்திர வில்லோடு மண்மிசை வீழ்தல் இயல்பாக நிகழும் செயலன்மையின், முற்றும் போய் விளியும் ஊழியிறுதியில் கடுங்கால் எற்றுதலால் மேகம் ஆகாயத்திட்ட வில் லொடும் வீழ்ந்ததென்ன என ஊழியிறுதியைக் குறிப்பிட்டார். முற்றும்போய் விளியும் நாள் என்றது ஊழி இறுதியை மேகம் வில்லொடும் வீழ்தற்கு வேகவான் கடுங்கால் காரணம் ஆதல்போல, இந்திரசித்தின் கை வில்லொடு வீழ்தற்கு இலக்குவன் விட்ட வெவ் வாய்ச் சுடுகணை காரணம் என்பார், வெவ்வாய்ச் சுடுகணை படுத லோடும் தடக்கை மண்மேல் விழுந்தது என்றார். மணிப்பூண் என்றது, இந்திரசித்தின் கையில் செல்வச் சிறப்புத் தோன்ற அணிந் திருந்த அணிகளை. (44)

### துணிபட்ட இந்திரசித்தின் கை தரையில் விழுந்து துடித்தல்

9296 படித்தலஞ் சுமந்த நாகம்
 பாகவான் பிறையைப் பற்றிக்
கடித்தது போலக் கோல
 விரல்களா லிறுகக் கட்டிப்
பிடித்தவெஞ் சிலையி னோடும்
 பேரெழில் வீரன் பொற்றோள்
துடித்தது மரமுங் கல்லுந்
 துகள்படக் குரங்குந் துஞ்ச.

படித்தலம் சுமந்த நாகம்
பாக வான் பிறையைப் பற்றிக்
கடித்தது போல, கோல
விரல்களால் இறுகக் கட்டிப்
பிடித்த வெஞ்சிலையினேடும்,
பேர் எழில் வீரன் பொன்-தோள்
துடித்தது,—மரமும் கல்லும்
துகள்பட குரங்கும் துஞ்ச.

பொ:- பூமியைச் சுமந்து கொண்டுள்ள ஆதிசேடன் என்னும் பாம்பு வானில் உள்ள சந்திரனின் பாகமாகிய பிறைச்சந்திரனைப் பற்றிக் கடித்தது போல, அழகிய விரல்களால் இறுகக் கட்டிப் பிடித்த கொடிய வில்லினேடும் பேரழகுடைய இந்திரசித்தின் அழகிய தோள், மரங்களும் கற்களும் துகளாகவும் குரங்குகள் இறந்துபடவும் நிலத்தில் வீழ்ந்தது துடித்தது,

கு:– இந்திரசித்தின் கை ஆதிசேடனைப் போன்றது; அக்கை இறுகப் பற்றியுள்ள வில் அந்த ஆதிசேடன் வாயில் கடித்துக்கொண்டுள்ள பிறைச்சந்திரனைப் போன்றது என்க. இராகு என்னும் பாம்பு சந்திரனைப் பற்றுகின்றது என்ற புராண மரபு நினைந்து இங்ஙனம் உவமை கூறினர். இராகு என்னும் பாம்பு நிறைமதியையே பற்றும் இயல்பினது; இங்கு ஆதிசேடன் என்னும் பாம்பு பிறைமதியைப் பற்றியதுபோன்றது எனத் தற்குறிப்பேற்ற உவமையாகக் கூறியுள்ளார். இந்திரசித்தின் கை விண்ணிலிருந்து மண்ணில் வீழ்ந்த வேகத்தாலும் கனத்தாலும் மரமும் கல்லும் துகளாயின; குரங்குகள் இறந்துபட்டன என்றவாறு. (45)

இந்திரசித்தின் கை யற்று வீழ்ந்தது கண்ட தேவர்கள் வியப்பு

9297 அந்தர மதனி னின்ற
வானவ ரருக்கன் வீழா
சந்திரன் வீழா மேரு
மால்வரை தகர்ந்து வீழா,
இந்திர சித்தின் பொற்ளு
ளிற்றிடைவீழ்ந்த தென்றுல்,
எந்திர மனைய வாழ்க்கை
யினிச்சில ருகந்தெ னென்ருர்.

அந்தரம் அதனில் நின்ற
வானவர், 'அருக்கன் வீழா,
சந்திரன் வீழா, மேருமால்வரை
தகர்ந்து வீழா;
இந்திர சித்தின் பொன்-தோள்
இற்று இடை வீழ்ந்தது என்றால்,
எந்திரம் அனைய வாழ்க்கை
இனிச்சிலர் உகந்து என்?' என்றார்.

பொ:- (போர் நிகழ்ச்சிகளைக் கண்டுகொண்டு) வானத்தில் நின்ற தேவர்கள்,—சூரியன் வீழாதபோது, சந்திரன் வீழாமல் இருக்கும் போது, பெரிய மேருமலை உடைந்து வீழாது நிற்கும்போது, இந்திர சித்தின் அழகிய தோள் அறுபட்டு நடுவே வீழ்ந்தது என்றால், நிலை பேறின்றித் தேர்ச் சக்கரம் போன்று மாறிமாறிச் செல்கின்ற உயிர் வாழ்க்கையை இனிச் சிலர் நிலையெனக் கருதி மகிழ்வதால் பயன் என்னை ?

கு:- சூரியனும் சந்திரனும் மேருமலையும் இருக்கின்ற வரையில் இருக்கத்தக்க உரமுடைய இந்திரசித்தின் கை, அவை முற்றும் வீழாமல் நிலைபெற்றிருக்கும்போதும் வீழ்ந்தது கண்ட தேவர்கள், நில்லாத வுலகியல்பை நினைந்து கூறியபடி. இவ்வளவு வல்லமையுடைய இந்திரசித்தின் கையே வீழ்ந்தபோது, ஏனையோர் உடம்பு வீழ்ந் தழிவது சொல்லவேண்டுமோ ? இத்தகைய நிலைபேறில்லாத வாழ்க் கையை நிலையுடைய வாழ்க்கையாக நினைந்து மகிழ்தல் பேதைமை என்றவாறு, எந்திரம் என்றது தேர்ச்சக்கரத்தை. சக்கரம் கீழ் மேலாகவும், மேல் கீழாகவும் மாறி வருவதுபோல மாறும் இயல் புடைய உயிர்வாழ்க்கை என்க. (46)

இந்திரசித்தின் கையற்றது கண்டு அரக்கர் கலங்குதல்

9298 மொய்யற மூர்த்தி யன்ன
மொய்ம்பினா னம்பி னாலப்
பொய்யறச் சிறிதென் றெண்ணும்
பெருமையான் புதல்வன் பூத்த
மெய்யறக் கரிதென் றெண்ணு
மனத்தினான் வயிர மன்ன
கய்யறத் தலையற் றார்போற்
கலங்கினார் நிருதர் கண்டார்.

மொய் அறமூர்த்தி அன்ன
மொய்ம்பினன் அம்பினால், அப்
பொய் அறச் சிறிது என்று எண்ணும்
பெருமையான் புதல்வன், பூத்த
மை அறக் கரிது என்று எண்ணும்
மனத்தினன், வயிரம் அன்ன,
கை அற, தலை அற்றார் போல்
கலங்கினர், நிருதர் கண்டார்.

பொ:- வலிமை பொருந்திய அறக்கடவுள் போன்றவனை இலக்குவனது அம்பினால், பொய்யைப் பெரும்பாதகமாக நினையாமல் மிகவும் எளிமையானது என்று கருதி மேற்கொள்ளும் பெருமையுடைய இராவணன் மகன்,— அப்போது உண்டானமை (இவன் மனம் நம்மினும்) 'மிகக் கரியது' என்று எண்ணுதற்குரிய கருமத்தினன் ஆகிய இந்திரசித்தின் வயிரம்போன்ற கை அற்றுப் போகக் கண்டவர்களாகிய அரக்கர்கள், தம் தலை யற்றவர்களைப் போல மனங்கலங்கினார்கள்.

கு:- மொய்—வலிமை. 'மொய் வளம் செருக்கி' (பதிற்றுப்பத்து—49, 8) என்புழியும் இச்சொல் இப் பொருள் படுதல் காண்க. மொய்ம்பினன் என்றது வலியவனை இலக்குவனை. அறத்தெய்வமே வலிமையிற் சிறந்தது ஆதலின், அறவழிச் செல்லும் இலக்குவனுக்கு அத் தெய்வத்தையே உவமை கூறியவாறு. அப் பெருமையன் எனச் சுட்டினைப் பின்னர் இயைக்க. பெருமையன் என்பது குறிப்புச் சொல்; பெருமையற்றவன் என்றவாறு. பொய், பெருந்தீமை விளைக்கும் மாபாதகம் எனக் கருதி அதற்கு அஞ்சி ஒழுக வேண்டியிருக்க, இராவணன் அதனை எளிதெனக் கருதி மேற்கொண்டொழுகிச் சீதையை வஞ்சித்தமை நினைந்து 'பொய்யறச் சிறிதென் றெண்ணும் பெருமையான்' என அவனை இழிவு படுத்தியவாறு. தந்தையின் பொய்யொழுக்கமும் இந்திரசித்தின் இருண்ட மனமுமே கையறுதற்குக் காரணமாயின என்டதைக் குறிப்பால் புலப்படுத்தியவாறு. அப்போது உண்டாக்கப்பட்ட மை கருமை மிக்கது ஆதலின் 'பூத்தமை' என அதனையே கூறினர். மை, எண்ணும் மனத்தினன் என இயையும். மையினும் கரிய மனத்தன் இந்திரசித்து என்றவாறு. பாவ எண்ணங்களையுடைய மனம் கரிதாயிருக்கும் என்பது கவிமரபு. "கூழின் மலி மனம் போன்றிருளா நின்ற கோகிலமே" (திருக்கோவை: 322) 'அகங்குன்றி மூக்கிற் கரியா ருடைத்து' (குறள்: 277) என்பன நினைக்கத் தகும். இந்திரசித்தின் கையற்றது கண்ட நிருதர் தம் தலையற்றாற் போன்ற துன்பமுற்றனர் என்றவாறு. (47)

## வானர சேனே அரக்கர் சேனையை அழித்தல

**9299** அன்னது நிகழும் வேலே
யார்த்தெழுந் தரியின் வெள்ளம்
மின்னெயிற் றரக்கர் சேனே
யாவரு மீளா வண்ணம்
கொன்னகக் கரத்தாற் பல்லான்
மரங்களான் மானக் குன்ருல்.
பொன்னெடு நாட்டை யெல்லாம்
புதுக்குடி யேற்றிற் றன்றே.

அன்னது நிகழும் வேலே,
ஆர்த்து எழுந்து, அரியன் வெள்ளம்
மின் எயிற்று அரக்கர் சேனே
யாவரும் மீளாவண்ணம்,
கொல் நகக் கரத்தால், பல்லால்,
மரங்களால், மானக் குன்ருல்,
பொன்நெடு நாட்டை எல்லாம்
புதுக்குடி ஏற்றிற்று அன்றே.

**பொ:-** இந்திரசித்தின் கையற்று வீழ்ந்தது கண்டு அரக்கர் கலங்கியபோது, குரங்குச் சேனே ஆரவாரித்து எழுந்து, மின்னலைப் போன்று ஒளிவீசும் கோரப் பல்லினையுடைய அரக்கர் சேனையில் எவரும் மீளாதபடி, கொல்லுதற்குரிய நகத்தையுடைய கையினுலும் பல்லினுலும் மரங்களாலும் பெரிய குன்றுகளாலும் (கொன்று) பொன்னுடு முழுவதிலும் புதுக்குடி ஏற்றிற்று.

**கு:-** அரக்கர் கலக்கமுற்றது கண்டு வானர சேனே நகங்களாலும் பல்லாலும் மரங்களாலும் குன்றுகளாலும் கொன்று குவித்தது என்பார், 'பொன்னெடு நாட்டையெல்லாம் புதுக்குடி யேற்றிற்று' என்ருர். அரக்கர் யாவரும் வீரப்போர் செய்து இறந்தவர் ஆதலின், பொன்னுலகம் புகுதல் தப்பாது என்ற கருத்தால் அங்ஙனம் கூறினர். நாட்டை என்பதை நாட்டின்கண் என உருபு மயக்கமாக்கிக் கொள்க. இறந்த அரக்கரின் மிகுதி புலப்படப் பொன்னெடு நாட்டையெல்லாம் குடியேற்றியதாகக் கூறினர். (48)

## இந்திரசித்தின் வீரப் பேச்சு

9300 காலங்கொண் டெழுந்த மேகக்
கருமையான் செம்மை காட்டும்
ஆலங்கொண் டிருண்ட கண்டத்
தமரர்கோ னருளிற் பெற்ற
சூலங்கொண் டெறிவ லென்று
தோன்றினன் பகையிற் றோற்ற
மூலங்கொண் டுணரா நின்னை
முடித்தன்றி முடியே னென்றான்.

காலம் கொண்டு எழுந்த மேகக்
கருமையான், 'செம்மை, காட்டும்
ஆலம் கொண்டு இருண்ட கண்டத்து
அமரர் கோன் அருளின் பெற்ற
சூலம் கொண்டு எறிவல்' என்று
தோன்றினன், 'பகையில் தோற்ற
மூலம் கொண்டு உணரா நின்னை
முடித்து அன்றி முடியேன்' என்றான்.

**பொ:-** கார் காலத்து நீர் கொண்டு எழுந்த மேகம் போன்ற கருமையுடைய இந்திரசித்து,- திருப்பாற் கடலில் வாசுகி வெளிப் படுத்திக் காட்டிய நஞ்சினை உட்கொண்டு (அதனால்) இருண்ட கண்டத்தினை யுடைய தேவர் கோமானாகிய செம்மேனி காட்டும் சிவனது அருளினால் தரப்பெற்ற சூலத்தைக் கையில் கொண்டு இலக்குவனை நோக்கி, 'போர்க்களத்தில் தோல்வியுற்ற தொடக் கத்தையே யாரிடத்தும் கொண்டறியாதவாறு பெருவீரனாகிய நின்னைக் கொன்று அன்றி யான் இறவேன்' என்று கூறினன்.

**கு:-** முன்பு விண்ணில் சென்று மேகத்தில் மறைந்து நின்றவன், கையை இழந்தவுடன் ஒரு கையோடு தரைக்கு வந்து தோன்றினன் என்பார், 'தோன்றினன்' என்றார். 'சிவனளித்த சூலத்தைக் கையிற் கொண்டு இலக்குவனை எறிவேன்' என்று இந்திரசித்து தனக்குள் நினைந்துகொண்டு வெளிப்பட்டான் என்க. தோன்றினன், முற்றெச் சம். பகை என்றது பகைத்துக் கொள்ளுதற்கு இடமாகிய போர்க் களத்தை. யாரிடத்தும் தோல்விகொண்டறியாத பெருவீரன் இலக்கு வன் என்று புகழ்பவனாய், 'பகையில் தோற்ற மூலங்கொண்டு உணரா நின்னை' என்றான். மூலம் என்றது தொடக்கத்தை. தோல்வி கொண்ட தொடக்கத்தையே அறியாதவன் என்றவாறு. 'நின்னால் யான் முடிவது உறுதியாயினும் பெருவீரனாகிய நின்னைக் கொன்ற பின்

அன்றி யான் இறக்கமாட்டேன்’ என்றது இந்திரசித்தின் தன் மேம் பாட்டுரையாகும். (49)

## இந்திரசித்தின் தோற்றங்கண்ட இலக்குவன் அவனைக் கொல்லத் துணிதல்

**9301** காற்றென வுருமே றென்னக்
கனலெனக் கடை நா ளுற்ற
கூற்றமோர் சூலங் கொண்டு
குறுகிய தென்னக் கொல்வான்
தோற்றினு னதனைக் காணு
வினித்தலை துணிக்குங் காலம்
ஏற்ற தென் றயோத்தி வேந்தற்
கிளையவ னிதனைய செய்தான்.

**காற்று என, உரும் ஏறு என்ன,**
**கனல் என, கடைநாள் உற்ற**
**கூற்றம் ஓர் சூலங்கொண்டு**
**குறுகியது என்ன, சொல்வான்**
**தோற்றினுன்; அதனைக் காணு,**
**‘இனி, தலைதுணிக்கும் காலம்**
**ஏற்றது’ என்று, அயோத்தி வேந்தற்கு**
**இளையவன் இதனைச் செய்தான்.**

பொ:- ஊழி யிறுதியில் வந்த காற்று என்னும்படியும் இடியேறு என்னும்படியும், வடவைக்கனல் என்னும்படியும், எமன் ஒரு சூலத்தைக் கொண்டு நெருங்கினுன் என்னும்படியும் (இலக்குவனைக்) கொல்வதற்காகப் பெருங்கோபத்தோடு போர்க்களத்தில் தோன்றினுன்; அதனை, இராமனுக்கு இளையவனுகிய இலக்குவன் கண்டு, ‘இப்பொழுது இவன் தலையைத் துணிக்கும் காலம் வந்துவிட்டது’ என்று இச் செயலைச் செய்தான்.

கு:- வெகுளி மிக்க இந்திரசித்தின் தோற்றத்தைக் கண்டவர்கள் ஊழி யிறுதியில் தோன்றும் காற்றென்றே, இடி என்றே, வடவைக் கனல் என்றே, உலகை யழிக்கும் கூற்றென்றே, கருதுவார்கள் என்ற படி. கடைநாளுற்ற என்பது இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் சென்றியைந்தது. சூலத்தைக் கையில் கொண்டு நிற்கும் ஒற்றுமை நினைந்து ‘கூற்றமோர் சூலங்கொண்டு குறுகிய தென்ன’ என்றார். தோற்றினுன் தன்வினை. அயோத்தி வேந்தன் என்றது இராமனை.

பரதனுக்குரியதே யாயினும் அவன் வேண்டுகோளின்படி பதினுன்கு ஆண்டுகள் கழிந்தபின் அயோத்தி அரசை யேற்றுக்கொள்வதாக இராமன் வாக்களித்துள்ளமை நினைந்து இங்கு இங்ஙனம் கூறினர். ஏற்றது என்பது நெருங்கியது என்னும் பொருளது. (50)

## இந்திரசித்தின்மேல் பிறைவாய் அம்பினை எய்தல்

**9302** மறைகளே தேறத் தக்க
வேதியர் வணங்கற் பால
இறையவ னிராம னென்னு
நல்லற மூர்த்தி யென்னின்
பிறைபெயிற் றிவனைக் கோறி
யென்றொரு பிறைவாய் வாளி
நிறையுற வாங்கி விட்டா
னுலகெலா நிறுத்தி நின்றான்.

'மறைகளே தேறத்தக்க,
வேதியர் வணங்கற் பால
இறையவன் இராமன் என்னும்
நல் அறமூர்த்தி என்னின்,
பிறை எயிற்று இவனைக் கோறி'
என்று, ஒரு பிறைவாய் வாளி
நிறைஉற வாங்கி விட்டான்—
உலகுஎலாம் நிறுத்தி நின்றான்.

பொ:- 'வேதங்களே தெளியத்தக்க கடவுள்—அந்தணர் வணங்கத்தக்க கடவுள்—இராமன் என்கின்ற நல்ல தருமமூர்த்தியே என்பது உண்மையாயின், பிறைச்சந்திரனைப் போன்ற கோரப் பல்லினையுடைய இந்த இந்திரசித்தினைக் கொல்வாயாக' என்று ஒரு பிறைவாய் அம்பினைத் தன் வலிமை முழுவதும் பொருந்த வில்லில் தொடுத்து விட்டான்; அதனால் இலக்குவன் உலக முழுவதையும் அரக்கரால் அழிவு எய்தாதவாறு நிறுத்தித் தானும் புகழுடன் அவ்வுலகம் உள்ளளவும் நின்றவனாயினன்.

கு:- 'கடவுள் இராமனே என்பது உண்மையானால் இந்திரசித்தினைக் கொல்க' என்று இலக்குவன் அம்பினை விட்டது, இராமன்

பரம்பொருள் என்பதை உலகம் உணர்தற் பொருட்டாகும். "மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்மதி சூடும், அண்ணலார் அடியார்தமை யமுது செய்வித்தல், கண்ணினலவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல், உண்மையாமெனில் உலகர்முன் வருகென வுரைப்பர்" (பெரியபு — திருஞானசம்பந்தர்புரா—1087) எனத் திருஞானசம்பந்தர் கூறி என்பினைப் பெண்ணாக்கிய செய்தி இங்கு ஒப்பு நோக்குதற்கு உரியது. 'உலகெலா நிறுத்தி நின்றான்' என்பதற்கு, 'உலகத்தைச் சுமந்தகொண்டு நின்றவனாகிய ஆதிசேடனின் அமிசமாகிய இலக்குவன்' எனப் பொருள் கூறலுமாம். (51)

## இலக்குவன் விடுத்த அம்பு இந்திரசித்தின் தலையை யறுத்துத் தள்ளுதல்

**9303** நேமியுங் குலிச வேலு
நெற்றியி னெருப்புக் கண்ணான்
நாமவே ருனு மற்றை
நான்முகன் படையு நாணத்
தீமுகங் கதுவ வோடிச்
சென்றவன் சிரத்தைத் தள்ளிப்
பூமழை யமரர் சிந்தப்
பொலிந்ததப் பகழிப் புத்தேள்.

நேமியும், குலிச வேலும்,
நெற்றியின் நெருப்புக் கண்ணான்
நாமவேல்தானும், மற்ற
நான்முகன் படையும், நாண,
தீமுகம் கதுவ ஓடிச் சென்று,
அவன் சிரத்தைத் தள்ளி,
பூமழை அமரர் சிந்த,
பொலிந்தது—அப் பகழிப் புத்தேள்.

பொ:- (இலக்குவன் விடுத்த) அந்த அம்புத் தெய்வம், (திருமாலின்) சக்கரப்படையும் (இந்திரனின்) வச்சிரப்படையும், நெற்றியில் நெருப்புக் கண்ணையுடைய உருத்திரனின் அஞ்சத்தக்க சூலவேலும், எஞ்சியுள்ள பிரமனுடைய பிரமாத்திரமும் நாணுமாறு

நெருப்பு முனையில் பற்றி பெரியும்படி ஓடிச் சென்று, அந்த இந்திர சித்தின் தலையை அறுத்துத் தள்ளிவிட்டு, தேவர்கள் மலர்மாரி சொரிய விளங்கிற்று.

கு:- எந்தப் படையும் செய்யாத அருஞ்செயலைச் செய்தமையின் 'பகழிப் புத்தேள்' என அதனை உருவகஞ் செய்தார். தம்மால் அறுக்க முடியாத இந்திரசித்தின் தலையை அறுத்தமையின், நேமி முதலிய படைகள் நாணுவன ஆயின. தம் வேந்தனுனை இந்திரன் பகைவனைக் கொன்ற அம்பின்மேல் தேவர் மகிழ்ச்சியால் மலர்மாரி சொரிந்தனர் என்க. பகழிப் புத்தேள், நேமியும்.........படையும் நாண ஓடிச் சென்று அவன் சிரத்தைத் தள்ளிப் பொலிந்தது என இயையும். (52)

## இந்திரசித்தின் உடம்பு தரையில் வீழ்தல்

**9304** அற்றவன் றலைமீ தோங்கி
யண்டமுற் றணுகா முன்னம்
பற்றிய சூலத் தோடு
முடனிறை பகழி யோடும்
எற்றிய காலக் காற்றுன்
மின்னொடு மிடியி னோடும்
சுற்றிய புயல்வீழ்ந் தென்ன
வீழ்ந்தது சோரன் யாக்கை.

அற்ற வன்தலை மீது ஓங்கி,
அண்டம் உற்று அணுகா முன்னம்,
பற்றிய சூலத்தோடும்
உடன்நிறை பகழியோடும்,
எற்றிய காலக் காற்றில்,
மின்னொடும் இடியினோடும்
சுற்றிய புயல் வீழ்ந்தென்ன,
வீழ்ந்தது, சோரன் யாக்கை.

பொ:- (இலக்குவனது பிறைவாய் அம்பினால்) அறுபட்ட வலிய தலை, மேலே உயர்ந்து சென்று விண்முகட்டை முட்டிவிட்டுத் தரையை அணுகுவதற்கு முன்னமே,—வீசிய ஊழிக்காற்றினால் தாக்

குண்டு சுற்றிக்கொண்டிருந்த மேகம், மின்னலோடும் இடியினேடும் தரையில் வீழ்ந்தாற்போல, வஞ்சகனுகிய இந்திரசித்தின் உடம்பு, ஒரு கையிற் பற்றிய சூலத்தோடும் தன்பால் ஒருங்கே நிறைந்த அம்பு களோடும் தரையில் வீழ்ந்தது.

கு:- இந்திரசித்தின் தலை தரையில் வீழ்தற்கு முன் உடம்பு தரையில் வீழ்ந்தது என்றவாறு. அம்பினுல் அறுப்புண்ட தலை விண் முகடுவரை சென்று மீண்டு தரையில் வீழ்தற்குக் காலம் தாழ்ந்தது ஆகலின், தலைக்கு முன் உடம்பு வீழ்வதாயிற்று. அண்டம் என்றது அண்ட முகட்டினை. அண்டம் உற்றுத் தரையில் அணுகா முன்னம் என்க. எற்றிய காலக் காற்றுப் போன்றது இலக்குவனது பிறைவாய் அம்பு. மேகம் போன்றது, இந்திரசித்தின் உடம்பு; மின்னல் போன்றது சூலம்; இடியைப் போன்றது பகழி என்க. இடியாவது நெருப்புப் பிழம்பே யாதலின் செந்நீரால் சிவந்து கிடக்கும் அம்பு கட்கு உவமையாயின. சோரன் என்றது இந்திரசித்தினை. சோரன்- கள்ளன், கற்புடைச் சீதையைக் களவிற் கவர்ந்த இராவணன் மகனு தலின் இந்திரசித்து சோரன் எனப்பட்டான். (53)

### இந்திர சித்தின் தலை தரையில் வீழ்தல்

9305 விண்டலத் திலங்கு திங்க
ளிரண்டொடு மின்னு வீசும்
குண்டலத் துணைக ளோடுங்
கொந்தளக் குஞ்சிச் செங்கேழ்ச்
சண்டவெங் கதிரின் கற்றைத்
தழையொடு மிரவி தானிம்
மண்டலம் வீழ்ந்த தென்ன
வீழ்ந்தது தலையு மண்மேல்.

விண்தலத்து இலங்கு திங்கள்
இரண்டொடும் மின்னு வீசும்
குண்டலத் துணைகளோடும்
கொந்தளக் குஞ்சிச் செங்கேழ்ச்
சண்டவெங் கதிரின் கற்றைத்
தழையொடும் இரவிதான் இம்
மண்தலம் வீழ்ந்தது என்ன
வீழ்ந்தது தலையும் மண்மேல்.

பொ:- வானத்தில் விளங்கும் இரு பிறை மதிகளோடும், ஒளி வீசுகின்ற இரு குண்டலங்களோடும், சுருண்ட குடுமியாகிய செந்நிறத்தையுடைய கொடிய வெப்பமான கதிர்களின் தாழ்ந்த கற்றையோடும் சூரியன் தான் இந்த மண்தலத்தில் வீழ்ந்தது என்று எண்ணுமாறு, இந்திரசித்தின் தலையும் இருகோரப் பற்களோடும் குண்டலங்களோடும் செம்பட்டை மயிர்க் குடுமியோடும் மண்மேல் வீழ்ந்தது.

கு:- இந்திரசித்தின் தலை இரு கோரப் பற்களோடும் இரு குண்டலங்களோடும் செம்பட்டை மயிர்க் குடுமியோடும் தரையில் வீழ்ந்த தோற்றம், சூரியன், இரு பிறைச்சந்திரன்களோடும் குண்டலங்களோடும் செங்கதிர்க் கற்றையோடும் மண்தலத்தில் வீழ்ந்தது போன்றது என்றவாறு. சூரியன், திங்களிரண்டோடு வீழ்ந்தது போன்றது என்றது, இல்பொருளுவமை; தற்குறிப்பேற்ற உவமையாதலின் இல்பொருளையும் இயைத்துக் கூறினர். குண்டலம் சூரியனுக்கும் இந்திரசித்துக்கும் உண்டு ஆதலின் அது உவமையன்று. கொந்தளக் குஞ்சி—சுருண்ட குடுமி, கொந்தளக் குஞ்சியாகிய கதிரின் கற்றை என்றது, உருவகம். இந்திரசித்தின் குடுமி செம்பட்டை மயிரினாலியன்றது ஆகலின், அதனைக் கதிரின் கற்றையாக உருவகஞ் செய்தார். செங்கேழ்க்கதிர், சண்டவெங்கதிர் என்க. கதிரின் தழை கற்றை என மாறிக் கூட்டுக. இந்திரசித்தின் தலை சூரியனைப் போன்றது என்று புகழ்ந்தவாறு. "செம்புனல் கோரிச் செக்கர் திசையுறச் செறிதலை யாலும், அம்பு என வுற்ற தோற்றத் தாயிரம் கதிர்களாலும் வெம்பு பொன் தேரில் தோன்றும் விசையினும் அரக்கன் மெய்யோடு, உம்பரில் செல்கின்றானைத் துதித்தனன் அருக்கன் உப்பால்" (34) என முன்னும் இப்படலத்தில் இந்திரசித்தினைப் சூரியனோடு ஒப்பிட்டுக் கூறியிருத்தல் நினையலாம். (54)

### இந்திரசித்து வீழ்ந்ததும் அரக்கர்படை இரிந்தோடுதல்

9306 உயிர்புறத் துற்ற காலை
யுண்ணின்ற வுணர்வி னேடும்
செயிரறு பொறியு மந்தக்
கரணமுஞ் சிந்து மாபோல்
அயிலெயிற் றரக்க ருள்ளா
ராற்றல ராகி யான்ற
வெயிலுடை யிலங்கை நோக்கி
யிரிந்தனர் படையும் விட்டார்.

உயிர் புறத்து உற்ற காலை
உள்நின்ற உணர்வினோடும்
செயிர் அறு பொறியும் அந்தக்
கரணமும் சிந்துமாபோல்
அயில் எயிற்று அரக்கர் உள்ளார்,
ஆற்றலர் ஆகி, ஆன்ற
எயிலுடை இலங்கை நோக்கி,
இரிந்தனர், படையும் விட்டார்.

பொ:- உயிர் உடம்பிலிருந்து புறத்தே சென்றதும் (இதற்குமுன்) உள்ளிருந்த உணர்வும் குற்றமற்ற ஐம்பொறிகளும், மனம் முதலிய அந்தக் கரணங்களும் அழிவது போலக் கூர்மையான பற்களையுடைய அரக்கராக உள்ளவர் எல்லாம் (இந்திரசித்து இறந்தவுடன்) ஒன்றும் செய்ய இயலாராய்க் கையில் இருந்த படைகளையும் விட்டுவிட்டுச் சிறந்த மதிலையுடைய இலங்கையை நோக்கி ஓடினார்கள்.

கு:- உயிர் போன்ற இந்திரசித்து இறந்தவுடன் அவ்வுயிரின் உணர்வும் ஐம்பொறிகளும் அந்தக்கரணமும் போன்ற தொடர்புடைய அரக்கர் சேனை முழுவதும் செயலற்று இலங்கைக்குள் ஓடியொளிந்தது என்றவாறு. 'உயிர் புறத்துற்ற காலை' என்ற உவமையால் இந்திரசித்து இறந்தவுடன் என்ற உவமேயம் வருவிக்கப்பட்டது. இந்திரசித்து இறந்தான் என்று மேல் பெறப்பட்டமையின் 'உயிர் புறத்துற்ற காலை' என்ற பாடமே பொருத்தமானது; 'உயிரிறப் புக்க காலை' என்ற பாடம் பொருத்தமான தன்று என்பது தெளிவு. பொறிகளாவன, மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. அந்தக் கரணம்—உட்கருவிகள்; அவையாவன: மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. உயிரின் தன்மை உணர்வே யாகலின் அதனை முற் கூறினார். உயிர் நீங்கினவுடன் உணர்வும் பொறிகளும், அந்தக்கரணமும் கெட்டொழிதல் உலகியல் காட்சியாற் காணத்தக்கது ஆதலின், இந்திரசித்து இறந்தவுடன் அவன் சேனை கெட்டோடியதற்கு உவமையாக அந் நிகழ்ச்சியைக் கூறினார். அயில் எயிறு என்றது கோரப் பல்லினை. இரிந்தோடுவார்க்குப் பாதுகாவலாக உள்ளது மதில் ஆகலின், எயிலுடை இலங்கை எனச் சிறப்பித்தார். போர் செய்யும் கருத்தே இல்லாமல் உயிர் பிழைத்தால் போதும் என்று ஓடினர் என்பது புலப்பட, 'படையும் விட்டார்' என்றார். படையும் விட்டாராய் இரிந்தனர் என இயையும். (55)

## தேவர்கள் ஆடையை வீசி ஆரவாரித்தல்

**9307** வில்லாள ரானுர்க் கெல்லா
மேலவன் விளித லோடும்
செல்லாதவ் விலங்கை வேந்தற்
கர செனக் களித்த தேவர்
எல்லாருந் தூசு வீசி
யேறிட வார்த்த போது
கொல்லாத விரதத் தார்தங்
கடவுளர் கூட்ட மொத்தார்.

வில்லாளர் ஆனுர்க்கு எல்லாம்
மேலவன் விளிதலோடும்
'செல்லாது அவ் இலங்கை வேந்தற்கு
அரசு, எனக் களித்த தேவர்
எல்லாரும் தூசு வீசி
ஏறிட ஆர்த்த போது,
கொல்லாத விரதத்தார்தம்
கடவுளர் கூட்டம் ஒத்தார்.

பொ:- 'வில்வீரர்க்கு எல்லாம் மேம்பட்டவனுகிய இந்திரசித்து இறந்து விட்டமையால், அந்த இலங்கை வேந்தனுகிய இராவணனுக்கு அரசு நடவாது' என்று களிட்படைந்த தேவர்கள் யாவரும் மேலாடையோடு தம் அரையில் உடுத்திருந்த ஆடையையும் அவிழ்த்து விண்ணில் ஏறிடுமாறு வீசி ஆரவாரித்த போது (அத்தேவர்கள் அம்மணமாக இருத்தலின்) கொல்லாத விரதம் பூண்ட அருக சமயத்தவரின் கடவுளர் கூட்டத்தை ஒத்துத் தோன்றினுர்கள்.

கு:- இராவணன் ஆட்சியில் அல்லலுற்ற அமரர் இந்திரசித்தின் வீழ்ச்சி கண்டதும் இனி அவ்விராவணன் ஆட்சி நடவாது என்ற மகிழ்ச்சியினுல் மேலாடையையும் உடுத்த ஆடையையும் விண்ணில் ஏறுமாறு வீசி ஆரவாரம் செய்தனர் என்க. மகிழ்ச்சி மிகுதியினுல் இவ்வாறு ஆடைகளை விண்ணில் வீசி ஆரவாரித்தல் உண்டு என்பதை: "மறையோ ரெல்லாம் உத்தரியம் விண்ணி லேறவிட்டு ஆர்த்தார்" (பெரியபு — வெள்ளானைச் — 13) என்பதாலும், "மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர் குழாம் மருங்கு சூழ்ந்த, தாம் அருவை உத்தரியம் தனி விசும்பில் எறிந்து ஆர்க்கும் தன்மையாலே"

(பெரியபு—திருஞான சம்பந்தர்—95) என்பதாலும் அறியலாம். கொல்லாத விரதத்தார் என்றது சமண மதத்தினரை; அவருள் திகம்பரர் என்பார் ஆடையின்றி அமணமாக இருப்பர்; அவர் வணங்கும் கடவுளரும் அத்தகையினரே ஆதலின், 'கொல்லாத விரதத்தார்தம் கடவுளர் கூட்டம் ஒத்தார்' என்றார். தூசு ஏற வீசினார் தேவர் ஆதலின் கொல்லாத விரதத்தாரைக் கூறாமல் அவர்தம் கடவுளர் கூட்டத்தை உவமை கூறினார். கொல்லாத விரதத்தார் வணங்கும் கடவுள் ஒருவரே ஆதலின் கடவுளர் கூட்டம் ஒத்தார் என்றது, தேவர்களின் பன்மை நோக்கி வந்த இல் பொருள் உவமையாகக் கொள்க. (56)

## முதல் தேவர்கள் தரையிடைத் தோன்றி நிற்றல்

**9308** வரந்தரு முதல்வன் மற்றை
மான்மறிக் கரத்து வள்ளல்
புரந்தரன் முதல்வ ராய
நான்மறைப் புலவர் பாரில்
நிரந்தரந் தோன்றி நின்று
ரருளினு னிறைந்த நெஞ்சர்
கரந்தில ரவரை யாக்கை
கண்டன குரங்குங் கண்ணால்.

வரந்தரு முதல்வன், மற்றை
மான்மறிக் கரத்து வள்ளல்,
புரந்தரன் முதல்வர் ஆய,
நான்மறைப் புலவர், பாரில்
நிரந்தரம் தோன்றி நின்றார்;
அருளினால் நிறைந்த நெஞ்சர்
கரந்திலர் அவரை யாக்கை;
கண்டன குரங்கும் கண்ணால்.

பொ:- முதற்கடவுளாகிய—வரங்களைத் தருகின்ற திருமாலும், மான் குட்டியைத் தாங்கிய கையினையுடைய வள்ளலாகிய சிவனும், நான்மறைப் புலமையுடைய பிரமனும் இந்திரனும் பூமியில் வந்து நிரந்தரமாகத் தோற்றம் அளித்து நின்றார்கள்; அருளினால் நிறைந்த நெஞ்சர் ஆதலினால் அவர்தம் உடம்பை மறைக்காமல் நின்றனர்; குரங்குகளும் தம் கண்களால் அவர்தம் உடம்பைக் கண்டன.

கு:- முதல்வராய வரந்தரு முதல்வன், வள்ளல் நான்மறைப் புலவர், புரந்தரன் பாரில் தோன்றி நின்றார் எனக் கொண்டு கூட்டுக. குரங்கும் என்புழி உம்மை இழிவு சிறப்புப் பொருளது. குரங்கும் அவரை யாக்கை கண்டன என்க. அவரது யாக்கை என்பது உருபு மயக்கமாயிற்று. (57)

**9309** அறந்தலை நின்றார்க் கில்லை
யழிவெனு மறிஞர் வார்த்தை
சிறந்தது சரங்கள் பாயச்
சிந்திய சிரத்த வாகிப்
பறந்தலை யதனின் மற்றப்
பாதக வரக்கன் கொல்ல
இறந்தன கவிக ளெல்லா
மெழுந்தன விமையோ ரேத்த.

'அறந்தலை நின்றார்க்கு இல்லை
அழிவு' எனும் அறிஞர் வார்த்தை
சிறந்தது—சரங்கள் பாயச்
சிந்திய சிரத்த ஆகி,
பறந்தலை அதனில் மற்று அப்
பாதக அரக்கன் கொல்ல,
இறந்தன கவிகள் எல்லாம்
எழுந்தன, இமையோர் ஏத்த.

பொ:- 'அறநெறியின்கண் நின்று ஒழுகினவர்க்கு அழிவு இல்லை' என்ற அறிஞர் மொழி உண்மையாய்ச் சிறப்புற்றது; (யாங்ஙனம் எனின்?) அம்புகள் பாய்ந்ததனால் தலை சிதறப்பெற்றன வாகிப் போர்க்களத்தில் அந்தப் பாதகனாகிய இந்திரசித்தினால் கொல்லப்பட்டனவாகிய குரங்குகள் எல்லாம் மும்மூர்த்திகளும் வாழ்த்தியதால் உயிர் பெற்று எழுந்தன; (ஆகலின் என்க.)

கு:- அறநெறி செல்லும் இராமனுக்குத் துணையாக நின்று போர் செய்த குரங்குகள், போர்க்களத்தில் இறந்ததும், அங்கு வந்திருந்த மும்மூர்த்திகளின் வாழ்த்தினால் உயிர்பெற்று எழுந்தன வாதலின், 'அறந்தலை நின்றார்க்கு அழிவில்லை' என்னும் அறிஞர் வார்த்தை உண்மையாயிற்று என்றவாறு. கவிகள்—குரங்குகள். இமையோர் என்றது, முன்னைச் செய்யுளில் தோன்றி நின்றதாகக்

கூறிய முத்தேவரை. ஏத்துதலாவது, 'இராமனுக்குத் தொண்டு செய்த இக்குரங்குகள் உயிர்பெற்றெழுக' என வாழ்த்துதல். பறந்தலை - போர்க்களம். அல்ல லருளாள் வார்க் கில்லை வளி வழங்கு மல்லன்மா ஞாலங் கரி'' (குறள்—245) என்பது இங்கு நினைக்கத்தகும். (58)

அங்கதன் இந்திரசித்தின் தலையை முன்தூக்கிச் செல்ல
இலக்குவன் அனுமன் தோள்மேல் செல்லுதல்

**9310** ஆக்கையி னின்று வீழ்ந்த
வரக்கன்றன் றலையை யங்கை
தூக்கின னுள்ளங் கூர்ந்த
வாலிசேய் தூசி செல்ல
மேக்குயர்ந் தமரர் வெள்ள
மள்ளியே தொடர்ந்து வீசும்
பூக்கிளர் பந்தர் நீழ
லனுமன்மே லிளவல் போனான்.

ஆக்கையின் நின்று வீழ்ந்த
அரக்கன்தன் தலையை அம்கை
தூக்கினன், உள்ளம் கூர்ந்த
வாலி சேய் தூசி செல்ல,
மேக்கு உயர்ந்து அமரர் வெள்ளம்
அள்ளியே தொடர்ந்து வீசும்
பூக்கிளர் பந்தர் நிழல்,
அனுமன்மேல் இளவல் போனான்.

பொ:- உடம்பில் நின்று அறுபட்டு விழுந்த இந்திரசித்தின் தலையை மனமகிழ்ச்சி மிக்க வாலியின் மகனாகிய அங்கதன் அகங்கையில் தூக்கிக்கொண்டு முன்னணியில் செல்லா நிற்க, விண்ணில் உயர்ந்து நின்று தேவர்களின் திரள் அள்ளினராய்த் தொடர்ந்து சொரிகின்ற மலர்களின் கிளர்ச்சி மிக்க பந்தல் நீழலில் இலக்குவன் அனுமன் தோள்மேலனாய்ப் போனான்.

கு:- உள்ளம் கூர்தலாவது, மகிழ்ச்சியால் மனம் கிளர்ச்சி கொள்ளுதல். அகங்கை என்பது இடையது கெட்டு அங்கை யாயிற்று; உள்ளங்கை என்பது பொருள். தூசி—முன்னணி.

"தொண்டர்காள் தூசி செல்லீர்'' (திருவாசகம்-திருப்படையெழுச்சி-2) என்றதும் நினைக. மேக்கு—மேலிடம்; விண். தேவர்கள் தம் பகையை மாய்த்த இலக்குவன்மேல் தொடர்ந்து மலர்மாரி சொரிந்து கொண்டே இருந்தமையால், அம்மலர்கள் இலக்கு வனுக்கு—நடைப் பூம்பந்தர்போல அமைந்து நிழல் செய்தது என்பார், 'பூக்கிளர் பந்தர் நீழல்' என்றார். நீழல், நீட்டல் விகாரம். இந்திரசித்தினை அனுமனை ஊர்ந்து நின்றே வென்றான் இலக்குவனாதலின் அந்தக் கோலத்தோடே இராமன் முன்பு செல்கின்றான் என்றவாறு. வாலி சேய் அரக்கன்றன் தலையைத் தூக்கினனாய்த் தூசி செல்ல, இளவல் அனுமன்மேல் போனான் என்க. (59)

## அங்கதன் கையில் இந்திரசித்தின் தலையைக் கண்ட இந்திரன் மகிழ்ச்சி

9311 வீங்கிய தோளன் றேய்ந்து
மெலிகின்ற பழியன் மீதுற்
றோங்கிய முடியன் றிங்க
ளொளிபெறு முகத்த னுள்ளால்
வாங்கிய துயரன் மீப்போய்
வளர்கின்ற புகழன் வந்துற்
றோங்கிய வுவகை யாள
னிந்திர னுரைக்க லுற்றான்.

வீங்கிய தோளன், தேய்ந்து
மெலிகின்ற பழியன், மீதுற்று
ஓங்கிய முடியன், திங்கள்
ஒளிபெறும் முகத்தன், உள்ளால்
வாங்கிய துயரன், மீப்போய்
வளர்கின்ற புகழன், வந்துற்று
ஓங்கிய உவகை யாளன்,
இந்திரன், உரைக்க லுற்றான்.

பொ:- (அக்காட்சியைக் கண்ட இந்திரன்) பூரித்த தோள்களை யுடையவனாய், தனக்கிருந்த பழி தேய்ந்து மெலியப் பெற்றவனாய், மேலே நிமிர்ந்த முடியை யுடையவனாய்ச் சந்திரனைப் போல ஒளி பெற்ற முகத்தனை யுடையனாய், உள்ளத்திருந்த துயரம் வாங்கப்

பெற்றவனுய், மேலே சென்று வளர்கின்ற புகழை யுடையவனுய்ப் புதிதாக வந்து பொருந்தி உயர்ந்துள்ள மகிழ்ச்சி யுடையவனுய்ச் சொல்லத் தொடங்கினுன்.

கு:- இராவணன் மகனுகிய மேகநாதன் தன்னை வென்றதைப் புலப்படுத்தி இந்திரசித்து என்ற பெயர் தாங்கி வெற்றியோடு உலாவியது, இந்திரனுக்கு மெலிவினையும் பழியையும் தலைகுனிவையும் ஒளிகாம்பும் முகத்தையும் உள்ளத்துத் துயரத்தையும் உண்டாக்கிக் கொண்டிருந்தது ஆதலின், அந்த இந்திரசித்தின் தலை இப்போது இலக்குவனுல் தள்ளப்பட்டு அங்கதனுல் தூக்கிச் செல்லப்படுவது கண்டபோது, அந்த இந்திரனுக்கு வீங்கிய தோளும் தேய்கின்ற பழியும் ஓங்கிய முடியும் ஒளிபெறு முகமும் வாங்கிய துயரமும் வளர்கின்ற புகழும் ஓங்கிய உவகையும் உண்டாயின என்றவாறு. வீங்கிய தோளன் முதலியன வடமொழி நடை என்பர். 'அருங்கேடன்' (குறள்—210). 'சென்று சேக்கல்லாப் புள்ள யுள்ளி லென்றூழ் வியன் குளம்' (அகநா—42) எனத் தமிழிலும் அந்நடை வந்துள்ளமை காணலாம். (60)

## இந்திரன் மகிழ்ச்சி மொழி 9312-9313

9312 எல்லிவான் மதியி னுற்ற
கறையென வென்மேல் வந்து
புல்லிய வடுவும் போகா
தென்றகம் புலம்பு கின்றேன்
வில்லிய ரொருவர் நல்கத்
துடைத்துறும் வெறுமை தீர்ந்தேன்;
செல்வமும் பெறுதற் குண்டோ
குறையினிச் சிறுமை யாதோ.

“ எல்லிவான் மதியின் உற்ற
கறை என, என்மேல் வந்து
புல்லிய வடுவும் போகாது”
என்று அகம் புலம்புகின்றேன்.
வில்லியர் ஒருவர் நல்க,
துடைத்து உறும் வெறுமை தீர்ந்தேன்;
செல்வமும் பெறுதற்கு உண்டோ
குறை? இனிச் சிறுமை யாதோ?

பொ:- 'இரவில் விளங்கும் வெள்ளிய சந்திரனிடத்துப் பொருந்திய களங்கம் போல என்மேல் வந்து பொருந்தியுள்ள பழியும் நீங்காது போலும்' என்று மனம் புலம்புகின்ற யான் இப்போது வில் வீரராகிய ஒருவர் அருளியதால் அந்த வடு துடைக்கப்பெற்று, இதுகாறும் இருந்த என் வெறுமைத் தன்மையும் தீர்ந்தேன்; இனி என் அரசச் செல்வத்தையும் பெறுதற்குக் குறையேதும் உண்டோ? இனிச் சிறுமைதான் யாதுளது?

கு:- எல்லி—இரவு. வால்—வெண்மை. 'சந்திரனிடத்தில் பொருந்திய களங்கம் நீங்காதது போல, என்மேல் வந்து புல்லிய வடிவும் நீங்காது போலும் என இந்திரன் இதுகாறும் புலம்பிக் கொண்டிருந்தான் என்றவாறு. வடுவாவது, மேகநாதன் 'இந்திரசித்து' எனப் பெயர் தாங்கி இந்திரன் தனக்குத் தோற்றமையை என்றும் புலப்படுத்திக் கொண்டிருந்ததேயாம். புலம்புகின்றேன் வினைப்பெயர். புலப்புகின்ற யான், வில்லியர் நல்குதலால் அவ்வடுவைத் துடைத்து வெறுமையும் தீர்ந்தேன் என்றவாறு. வில்லியர் ஒருவர் என்றது இலக்குவனை. உயர்த்தற்கண் பலர்பாலாய் வந்தது. வடுவும் துடைத்து இதுகாறும் உறும் வெறுமையும் தீர்ந்தேன் என்றவாறு. வெறுமையாவது, வீரம் சிறிதும் இல்லாமை. இந்திரசித்தினை யாதும் செய்ய இயலாதிருந்த வெறுமைத்தன்மை இலக்குவனால் நீங்கியது என்றவாறு. வடுத் துடைக்கப்பெற்ற யான் என விண்ணுலக அரசச் செல்வத்தையும் பெறுதற்குத் தடையில்லை என்பான், 'செல்வமும் பெறுதற் குண்டோ குறை? இனிச் சிறுமை யாது?' எனவும் கூறினான். ஓகாரம் ஈற்றசை. சிறுமை—துன்பம். இந்திரசித்து இறந்தமையால் விண்ணுலகத்து ஆட்சி பெற்றுத் துன்பம் நீங்கியிருக்கலாம் என்றவாறு. (61)

**9313** சென்றலை யாழி தொட்டோர்
சேயருட் சிறுவன் செம்மல்
வென்றலைத் தென்னை யார்த்துப்
போர்த்தொழில் கடந்த வெய்யோன்
தன்றலை யெடுப்பக் கண்டு
தானவர் தலைகள் சாய
என்றலை யெடுக்க லானே
னினிக்குடை யெடுப்பெ னென்றான்.

சென்று அலை ஆழி தொட்டோர்
சேய் அருள் சிறுவன் செம்மல்,
வென்று அலைத்து என்னை ஆர்த்துப்
போர்த்தொழில் கடந்த வெய்யோன்,

தன்தலை எடுப்பக் கண்டு,
தானவர் தலைகள் சாய,
என் தலை எடுக்கலானேன்;
இனிக்குடை எடுப்பென்' என்றான்.

போ:- 'சென்று சென்று அலைகின்ற அலைகளையுடைய கடலைத் தோண்டினவர்களாகிய சகரர் மரபில் தோன்றிய இலக்குவன் அருளால் என் சிறுவன் வாலியின் புதல்வனாகிய அங்கதன்.—என்னை வென்று வருத்திக் கட்டிப் போர்த்தொழிலில் வெற்றி பெற்ற கொடியவனாகிய இந்திரசித்தினது தலையை எடுப்பக் கண்டு, அசுரர் கள் தலைகள் அச்சத்தால் சாயுமாறு, என்னுடைய தலையைத் தூக்கிப் பார்க்கலானேன்; இனி என் வெண்கொற்றக் குடையையும் எடுப் பேன்' என்று கூறினன்.

கு:- ஆழி தொட்டோர் என்றது சகரரை; அவர் சேய் என்றது இலக்குவனை. கடல் தோண்டுதலாகிய செயற்கரிய செய்த சகரர் போல இலக்குவன், இந்திரசித்தினை வெற்றிகொண்ட செயற்கு அரிய செயலைச் செய்தமையின் 'ஆழிதொட்டோர் சேய்' என உபசரித்த வாறு. சாபம் நீக்கும் தன்மை கண்டு இராமனை "மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை யிழிந்தோன் மைந்த" (பால—அகலிகைப்—72) என கோசிக முனிவன் விளித்துள்ளதும் நினைக. சேய் என்றது, வழித்தோன்றலை. சகரரும் சூரிய குலத்தவராதலின் இங்ஙனம் கூறினர். இது இந்திரன் கூற்றாகலின் அங்கதனைச் 'சிறுவன் செம்மல்' என்றான். சிறுவன் என்றது தன் மகனாகிய வாலியை. இலக்குவனது குறிப்பின்படி அங்கதன் இந்திரசித்தின் தலையை யெடுத்தான் என்பான், "சேயருட் சிறுவன் செம்மல்......வெய்யோன் தன் தலை எடுப்ப" என்றான். பெரும் பகைவந்து தலை வீழ்ந்தமையால் அச்சமின்றி இந்திரன் தலைதூக்கிப் பார்த்தான் என்றவாறு.

இச் செய்யுள் சில புத்தகங்களில் கீழ்க்கண்டவாறு காணப் படுகிறது.

தென்றலை யாழி சூழ்ந்த
திருள்மதி லிலங்கை காக்கும்
புன்றலைக் கள்வன் பெற்ற
புதல்வனை யிளவல் வீழ்த்த
வன்றலை யெடுத்து நீமுன்
வருதலால் வான ரேச
என்றலை யெடுக்க லானே
னினிக்குடை யெடுப்பெ னென்றான்.

## இராமன் அருகிலுள்ளோர் அங்கதனைப் புகழ்தல்

9314 வான்றலை யெடுக்க வேலை
மண்டலை யெடுக்க வானோர்
கோன்றலை யெடுக்க வேதக்
குலந்தலை யெடுக்கக் குன்றாத்
தேன்றலை யெடுக்குந் தாராய்
தேவரை வென்றான் றீய
ஊன்றலை யெடுத்தாய் நீயென்
றுரைத்தன ருவகை மிக்கார்.

'வான்தலை எடுக்க, வேலை
மண்தலை எடுக்க, வானோர்
கோன்தலை எடுக்க, வேதக்
குலம் தலை எடுக்க, குன்றாத்
தேன்தலை எடுக்கும் தாராய்!
தேவரை வென்றான் தீய
ஊன்தலை எடுத்தாய், நீ' என்று
உரைத்தனர் உவகை மிக்கார்.

பொ:- 'குறையாத தேன் பெருக்கெடுக்கும் மலர் மாலையணிந்த அங்கதனே! வானுலகத்துள்ள தேவர் (குனிதல் நீங்கித்) தலை தூக்கவும் மண்ணுலகத்தோர் அச்சம் நீங்கித் தலை எடுக்கவும், தேவர் கோனாகிய இந்திரன் துன்பம் ஒழிந்து தலை நிமிரவும், வேதக் கூட்டம் தலை நிமிரவும், தேவரை வென்றவனாகிய இந்திர சித்தின் தீயதாகிய ஊன்மிக்க தலையை நீ எடுத்தாய்' என்று இராமன் அருகில் நின்றவர்கள் மகிழ்ச்சி மிக்கவராய்க் கூறினர்.

கு:- அங்கதன் இந்திரசித்தின் தலையை எடுத்தது வான் தலை எடுத்தல் முதலிய செயற்குக் காரணமாயது எனப் புகழ்ந்து கூறிய வாறு. தலையெடுத்தல் என்ற சொல் பன்முறை வரத் தொகுத்தமை யால் இது சொற்பின்வருநிலை யணியாகும். தேவரை வென்றான் என்றது இந்திரசித்தினை. இச் செய்யுள் நல்ல பல ஏடுகளில் இல்லை. இடைச் செருகலாக இருக்கலாம் என எண்ண இடமுண்டு. (63)

## இராமன் இலக்குவன் வரவை யெதிர்நோக்கியிருத்தல்

**9315** வரதன்போய் மறுகா நின்ற
மனத்தினன் மாயத் தோனைச்
சரதம்போர் வென்று மீளும்
தருமமே தாங்க வென்பான்
விரதம்பூண் டுயிரி னோடுந்
தன்னுடை மீட்சி நோக்கும்
பரதன்போன் றிருந்தான் றம்பி
வருகின்ற பரிசு பார்த்து.

வரதன், போய் மறுகாநின்ற
மனத்தினன், 'மாயத்தோனைச்
சரதம் போர் வென்று மீளும்,
தருமமே தாங்க' என்பான்,
விரதம் பூண்டு, உயிரினோடும்
தன்னுடை மீட்சி நோக்கும்
பரதன் போன்று இருந்தான், தம்பி
வருகின்ற பரிவு பார்த்து.

பொ:- வரம் தரத்தக்க பெருமையனாகிய இராமன், மிகவும் கலங்கா நின்ற மனத்தை யுடையவனாய், 'தருமமே துணை நின்று தாங்க, மாயத்தவனாகிய இந்திரசித்தினைப் போரில் வென்று (இலக்குவன்) நிச்சயமாகத் திரும்புவான்' என்று எண்ணுகின்றவனாய், (அயோத்தியில்) உயிரோடு விரதம் பூண்டு தனது மீட்சியை எதிர் நோக்கியிருக்கும் பரதன் போன்று, தம்பி இலக்குவன் மீண்டும் வருகின்ற தன்மையை எதிர்பார்த்துக்கொண்டு இருந்தான்.

கு:- இந்திரசித்தினை வென்று இலக்குவன் திரும்பி வருவான் என்று இராமன் எதிர்நோக்கியிருக்கும் தன்மை, பரதன் விரதத்தோடு தன் மீட்சியை எதிர்நோக்கி இருப்பது போன்றது எனப் பின் நிகழ்ச்சியையே இங்கு உவமையாக்கிக் கூறிய நயம் சிந்தித்து மகிழ் தற்குரியது. 'இராமன் பதினான்கு ஆண்டுகள் கழிந்தவுடன் அயோத்திக்கு வராதிருந்தால் தீயில் மூழ்கி உயிர் துறப்பேன்' எனப் பரதன் உயிரினோடு விரதம் பூண்டு நந்திக் கிராமத்தில் இராமனை எதிர் நோக்கியிருக்கிறான் என்பது புலப்பட 'உயிரினோடும் விரதம் பூண்டு' என்றார். இனி, உயிரினோடு தான் மீளுகின்ற தன்மையை எதிர்

பார்க்கும் எனக் கூறலும் ஆம். பரதன் உயிரோடு விரதம் பூண்டு இராமன் மீண்டும் வருதலை எதிர்பார்ப்பது போல, இராமன் இலக்குவன் மீட்சியை யெதிர்பார்த்திருக்கின்றான் என்றமையால், இலக்குவன் மீண்டு வாரானாயின் இராமன் உயிர் துறக்கும் உள்ள உறுதியோடு இருக்கின்றான் என்பதும் புலப்படுத்தியவாறு. இந்திர சித்து மாயம் பல வல்லவன் ஆதலின், 'இலக்குவனுக்கு யாது நிகழுமோ' என்ற அச்சத்தால் இராமன் உள்ளம் பெரிதும் கலங்கி யிருந்தான் என்றவாறு. அத்தகைய கலக்கத்திலும் 'தருமமே தாங்கச் சரதம் போர் வென்று மீளும்' என்ற உறுதியும் இருந்தது. வரதன் சரதம் வென்று மீளும் என்பானாய்த் தன்னுடை மீட்சி நோக்கும் பரதன் போன்று, தம்பி வருகின்ற பரிசு பார்த்து இருந்தான் என இயையும். இதனால் இலக்குவன் மீட்சியில் இராமனுக் கிருந்த ஆராக் காதல் புலப்படுத்தியவாறு. (64)

## மீளும் தம்பியைப் பார்த்து இராமன் கண்ணீர் சொரிதல்

**9316** வன்புலங் கடந்து மீளுந்
தம்பிமேல் வைத்த மாலைத்
தன்புல நயன மென்னுந்
தாமரை சொரியுந் தாரை
அன்புகொ லழுக ணீர்கொ
லானந்த வாரி யேகொல்
என்புக ளுருகிச் சோருங்
கருணைகொல் யார தோர்வார்.

வன்புலம் கடந்து மீளும்
தம்பிமேல் வைத்த மாலைத்
தன்புல நயனம் என்னும்
தாமரை சொரியும் தாரை,
அன்புகொல்? அழு கணீர்கொல்?
ஆனந்த வாரியே கொல்?
என்புகள் உருகிச் சோரும்
கருணைகொல்? யார் அது ஓர்வார்?

பொ:- வலிதாகிய பகைப்புலத்தில் சென்று வென்று மீளுகின்ற தம்பிமேல் வைத்த தன் கட்புலம் என்கின்ற தாமரை மாலை மாலை

யாகச் சொரிகின்ற கண்ணீர்த்தாரை, அன்பு காரணமாகச் சொரியும் கண்ணீரோ? அல்லது, (அவன் பிரிந்த துன்பம் நினைந்து வருந்தி) அழுத கண்ணீரோ? அல்லது, அவனது வெற்றி கண்டு மகிழ்ந்து சொரியும் உவகைக் கண்ணீரோ? அல்லது, என்புகளும் உருகிச் சோர்கின்ற கருணைக் கண்ணீரோ? அதை யறிபவர் யார்? யாருமிலர்.

கு:- ஒருவர்க்குக் கண்ணீர் பெருகுதற்குரிய காரணங்கள் அன்பும், அழுகையும், உவகையும், கருணையும் ஆகிய நான்குமேயாம். இராமன் இலக்குவனைக் கண்டு சொரிந்த கண்ணீர் இந்த நான்கனுள் எந்தக் காரணத்தால் விளைந்தது என்பதை அறிதல் அரிது என்றவாறு. இராமன் கண்ணீர் சொரிந்தமைக்கு இந்த நான்கும் காரணம் ஆகலாம் ஆதலின், இவற்றுள் ஒன்றினால் நிகழ்ந்தது என்று அறுதியிட்டு ஓர்ந்து கூறுதல் இயலாது ஆயிற்று என்க. நயனப்புலம் என மாறுக. கட்புலம் என்றவாறு. நயனப்புலம் என்னும் தாமரை என்றது உருவகம். தாமரை, மாலை சொரியும் தாரை என இயையும். மாலை போல் பெருக்குகின்ற கண்ணீர்த் தாரை என்க. "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்" (குறள்-71) என்றதனால், அன்பு காரணமாகக் கண்ணீர் சொரிதல் உண்டு என்பது தெளிவாகின்றது. பிரிந்தவர் கூடுங்கால் அழுகைக் கண்ணீர் வருதல் உண்டு என்பதை உலகியலில் வைத்து அறியலாம். ஆனந்த வாரி என்றது, உவகைக் கலுழ்ச்சியை. இது இலக்குவனது வெற்றிகண்ட மகிழ்ச்சியினாலாயது. "வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன் களிறெறிந்து பட்டன னென்னு முவகை, ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர், நோன்கழை துயல்வரும் வெதிரத்து, வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே" (புறநா—277) என்றதனால் உவகையினால் கண்ணீர் சொரிதலுண்டு என்பது பெறப்படும். கருணை என்பது தொடர்பு கருதாத மன நெகிழ்ச்சி; இந்த நெகிழ்ச்சி உண்டாகும்போது வலிதாகிய என்பும் நெக்கு உருகுதல் இயல்பு. இலக்குவனது வெற்றியால் விண்ணும் மண்ணும் வாழ்ந்தன என்னும் பெருங் கருணையால் இராமன் கண்ணீர் சொரிந்தான் என்பதே உண்மை என்ற குறிப்புத் தோன்ற அதனை இறுதியில் கூறினர். (65)

## இராமன் திருவடியில் இந்திரசித்தின் தலையை வைத்தல்

**9317** விழுந்திழி கண்ணி னீரு
முவகையுங் களிப்பும் வீங்க
எழுந்தெதிர் வந்த வீர
னிணையடி முன்ன ரிட்டான்

கொழுந்தெழுஞ் செக்கர்க் கற்றை
வெயில்விட வெயிற்றின் கூட்டம்
அழுந்துற மடித்த பேழ்வாய்த்
தலையடி யுறையொன் ருக.

விழுந்து இழி கண்ணின் நீரும்,
உவகையும், களிப்பும், வீங்க,
எழுந்து எதிர் வந்த வீரன்
இணையடி முன்னர் இட்டான்-
கொழுந்து எழும் செக்கர்க் கற்றை
வெயில்விட, எயிற்றின் கூட்டம்
அழுந்துற மடித்த பேழ்வாய்த்
தலை அடி உறை ஒன்ருக.

பொ:- கண்களிலிருந்து விழுந்து இழிகின்ற உவகைக் கண்ணீரும், மகிழ்ச்சியும், களிப்பும் பெருக, எழுந்து எதிர்வந்த இராமனுடைய இருதிருவடிகட்கு முன்னர்,- ஒளிக்கொழுந்து எழுகின்ற செவ்வானம் போன்ற செம்பட்டை மயிர்க் கற்றை வெயில் வீசா நிற்க, பற்களின் கூட்டம் அழுந்துமாறு மடித்துள்ள பிளந்த வாயை யுடைய இந்திர சித்தின் தலையை ஓர் அடியுறைப் பொருளாக வைத்தான்.

கு:- வீரன் அடி முன்னர் அடியுறை ஒன்ருக இட்டான் என இயையும். இலக்குவன் நெருங்க நெருங்க இராமனுடைய கண்ணீரும் உவகையும் களிப்பும் மிகுவன ஆயின என்க. இந்திரசித்தின் தலை செம் பட்டை மயிர்க் கற்றையோடும் வீரந் தோன்றப் பற்களைக் கடித்து மடித்த வாயோடும் இருந்தது என்க. செவ்வானம் போன்ற செம் பட்டை மயிர்க் கற்றையைச் செக்கர்க் கற்றை என்ருர். இருந்த இராமன் இலக்குவனைக் கண்டவுடன் ஆர்வம் தோன்ற எழுந்து எதிர் வந்தான் என்றும், வந்த அவ் இராமன் திருவடி முன்னர் அங்கதனுல் எடுத்து வரப்பெற்ற இந்திரசித்தின் தலையை ஓர் அடியுறைப் பொருளாக இலக்குவன் வைத்தான் என்றும் கொள்க. பெரியோர் களைக் காணச் செல்லுங்கால் அவர்கள் திருவடியில் ஏதேனும் ஒரு சிறந்த பொருளை வைத்து வணங்குதல் மரபு. இதனைப் பாதகாணிக்கை என்பர். "ஈட்டிய பல பொருள்களெம்பிரானுக்கு அடியுறை என்று" (திவ்விய பிரபந்-பெரியாழ்வார் 4. 3. 9) என்றது காண்க. உயிர் நீங்கிய பின்னும் இந்திரசித்தின் கோபக் குறிப்பு நீங்கவில்லை என்பது புலப்பட, 'எயிற்றின் கூட்டம் அழுந்துற மடித்த பேழ்வாய்' என்ருர். (66)

## இந்திரசித்தின் தலையினை நோக்கிய இராமனது மகிழ்ச்சி நிலை

**9318** தலையினை நோக்குந் தம்பி
கொற்றவை தழீஇய பொற்றோள்
மலையினை நோக்கு நின்ற
மாருதி வலியை நோக்கும்
சிலையினை நோக்குந் தேவர்
செய்கையை நோக்குஞ் செய்த
கொலையினை நோக்கு மொன்று
முரைத்திலன் களிப்புக் கொண்டான்.

தலையினை நோக்கும்; தம்பி
கொற்றவை தழீஇய பொன்தோள்
மலையினை நோக்கும்; நின்ற
மாருதி வலியை நோக்கும்;
சிலையினை நோக்கும்; தேவர்
செய்கையை நோக்கும்; செய்த
கொலையினை நோக்கும்; ஒன்றும்
உரைத்திலன், களிப்புக் கொண்டான்.

பொ:- (தன் அடியுறையைக் கண்டு) களிப்புக் கொண்டவனாகிய இராமன், ஒன்றும் பேசாதவனாய்த் தன் முன் வைக்கப்பட்டுள்ள இந்திரசித்தின் தலையினை நோக்குவான்; பின்பு அத்தலையை வீழ்த்திய தம்பியின் வெற்றித் திரு தழுவிய அழகிய தோளாகிய மலையினை நோக்குவான்; பின்பு அவனுக்கு ஊர்தியாக இருந்த அனுமனது வலிமையை நோக்குவான்; பின்பு இலக்குவன் கையிலுள்ள வில்லின் சிறப்பினை நோக்குவான்; இந்திரசித்தின் வீழ்ச்சி கண்டு தேவர்கள் அங்ஙனம் மகிழுமாறு இலக்குவன் செய்த கொலையின் சிறப்பை நோக்குவான்.

கு:- களிப்புக் கொண்டான் என்றது இராமனை. வினைப் பெயர். உரைத்திலன் முற்றெச்சம்; உரைத்திலனாய் நோக்கும் என இயையும். களிப்பு மிகுங்கால் பேச்சு நிகழாது ஆகலின், 'களிப்புக் கொண்டான் ஒன்றும் உரைத்திலன்' என்றார். ஒன்றும் உரையாமைக்குக் காரணம் புலப்படுத்தியுள்ளமையும் காண்க. நோக்குதல் கண்ணால் நோக்குதல், கருத்தால் நோக்குதல் என இருவகைப்படும். மாருதி வலியை நோக்கியதும் செய்த கொலையினை நோக்கியதும் கருத்தால்

நோக்கியன. இவை 'நோக்கநோக்கம்' எனப்படும். வெற்றிபெற்ற தோள் ஆதலின் 'கொற்றவை தழீஇய பொறதோள்' எனச் சிறப்பிக்கப் பட்டது. வெற்றியையே இங்குக் கொற்றவையாகக் கூறினர். பொற்றோள் மலை என்றது தோளின் பெருமை தோன்றச் செய்த உருவகம் ஆகும். இந்திரனையும் வென்ற பெருவீரன் தலையாகலின் அதன் பெருமை நினைந்து அதனையே முதற்கண் நோக்குவானானான். அத்தகைய தலையை வீழ்த்திய வீரம் நினைந்து தம்பியின் தோள்களை நோக்கினான். இலக்குவனுக்கு ஊர்தியாய் நின்று உதவியவன் அனுமன் ஆதலின் அவன் வலிமையை நோக்குவானானான். இந்திரசித்தின் தலையை வீழ்த்த வளைந்த வில்லின் சிறப்பை நினைந்து அதனை நோக்கினான். தேவர் செய்கையாவது மகிழ்ச்சியால் விண்ணில் உடைகளை வீசி ஆரவாரித்தல். தேவர்கள் தம் வலியினால் செய்ய முடியாத கொலையாதலின் அதன் அருமை நினைந்து நோக்குவா னாயினான். (67)

## தன் தாளின் மேல் வணங்கிய தம்பியை இராமன் தழுவிக் கொள்ளுதல்

**9319** காள மேகத்தைச் செக்கர்
கலந்தெனக் கரிய குன்றின்
நாள்வெயிற் பரந்த தென்ன
நம்பிதன் றம்பி மார்பில்
தோளின்மே லுதிரச் செங்கேழ்ச்
சுவடுதன் னுருவிற் றோன்றத்
தாளின்மேல் வணங்கி னானைத்
தழுவினன் தனித்தொன் றில்லான்.

காள மேகத்தைச் செக்கர்
கலந்தென, கரிய குன்றின்
நாள்வெயில் பரந்தது என்ன,
நம்பி தன் தம்பி மார்பில்
தோளின்மேல் உதிரச் செங்கேழ்ச்
சுவடு தன் உருவில் தோன்ற,
தாளின்மேல் வணங்கினானைத்
தழுவினன், தனித்து ஒன்று இல்லான்.

பொ:- (இலக்குவனை யன்றித் தனக்கெனத்) தனித்து ஒன்றும் இல்லாதவனாகிய இராமன், தன் தம்பி இலக்குவன் மார்பிலும் தோளின்மேலும் இருந்த இரத்தத்தின் செந்நிறமுடைய சுவடுகள் தன் உருவத்தில்,—கரிய மேகத்தைச் செவ்வானம் கலந்தாற்போலவும், கரிய குன்றத்தில் காலை வெயில் பரவியது போலவும் தோன்றுமாறு, தன் திருவடிமேல் வணங்கிய அத் தம்பியைத் தழுவிக்கொண்டான்.

கு:- இன்ப துன்பங்களில் இலக்குவனை யன்றித் தனக்கு என ஒன்றும் இல்லாதவன் என்றது இலக்குவன் துன்பத்தையும் இன்பத்தையும் தன் துன்பமாகவும் இன்பமாகவும் கொள்கின்ற ஒற்றுமை யுணர்வுடையன் இராமன் என்றவாறு. இலக்குவன் மார்பிலும் தோளிலும் உள்ள விழுப்புண்களில் தோன்றிய ரத்தச் சுவடுகளை இராமன் தன் மார்பிலும் தோளிலும் படுமாறு தழுவிக்கொண்ட ஒற்றுமையை விளக்கவே, 'இராமனைத் தனித் தொன்றில்லான்' எனக் குறிப்பிட்டவாறு. இலக்குவன் பட்ட புண்களிலும் பங்குகொண்டு தனித்தொன்றில்லாமையைக் காட்டினான் என்றவாறு. கரிய வண்ணனாகிய இராமன் மார்பில் இலக்குவனது மார்பில் இருந்த இரத்தச் சுவடு பட்டது, காளமேகத்தைச் செவ்வானம் கலந்தாற்போன்றிருந்தது எனவும், அவன் குன்றுபோன்ற தோள்களில் இலக்குவனது தோளிலிருந்து இரத்தச் சுவடு தோய்ந்தது, கரிய குன்றில் நாட்காலை வெயில் பரந்தது போன்றிருந்தது எனவும் நிரனிறையாக உவமையை விரித்துக்கொள்க. காளமேகம்—கரியமேகம். செக்கர்—செவ்வானம். நாள்வெயில் –காலைவெயில். தனித்தொன்றில்லானாகிய நம்பி என இயையும். "அயிரா நெஞ்சும் ஆவியும் ஒன்றே எனுமச்சொல் பயிரா எல்லைப் பாதகனேற்கும் பரிவுண்டோ ?" (பிரமாத்திரப் படலம் 210) என்றது இங்கு நினையலாம். (68)

தம்பியை இராமன் பாராட்டுதல்

9320 கம்ப மதத்துக் களியானைக்
காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பு மென்பா லினிவந்து
குறுகி னாளென் றகங்குளிர்ந்தேன்
வம்பு செறிந்த மலர்க்கோயின்
மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பி யுடையான் பகையஞ்சா
னென்னு மாற்றந் தந்தனையால்.

கம்ப மதத்துக் களியானைக்
காவல் சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனிவந்து
குறுகினுள் என்று அகம்குளிர்ந்தேன்;
வம்பு செறிந்த மலர்க்கோயில்
மறையோன் படைத்த மாநிலத்தில்,
"தம்பி உடையான் பகை அஞ்சான்"
என்னும் மாற்றம் தந்தனையால்.

பொ:- (இலக்குவ! நீ இந்திரசித்தினை வென்றதனுல்) அசைந் தாடும் இயல்புடைய மதக்களிப்பு மிக்க யானை போன்று தன் இனத் தைக் காக்கும் காவற் சிறப்பினையுடைய சனகன் பெற்ற பூங்கொம்பு போன்றவளாகிய சீதையும் இனி என்னிடம் வந்து நெருங்கிவிட்டாள் என்று மனங்குளிர்ந்தேன்; மணம் நிறைந்த தாமரை மலரைக் கோயி லாகக் கொண்ட பிரமன் படைத்த இப்பெரிய உலகத்தில் தம்பியை உடையவன் பகைக்கு அஞ்சமாட்டான்' என்னும் சொல்லை எனக்குத் தந்தனை' (என்று பாராட்டினுன்).

கு:-கம்பம்-அசைவு. ஆடியல் யானை என்றது நினைந்து கம்ப... யானை என்றவாறு. யானை தன் இனத்தைக் காப்பதில் தலைசிறந்தது ஆதலின், சனகனது காவற்சிறப்புக்கு யானைக் காவலை உவமை கூறிய வாறு. இந்திரசித்தினை வென்று விட்டமையால் இராவணனைக் கொன்று சீதையை யடைதல் எளிது என்ற கருத்தால் 'சனகன் பெற் றெடுத்த கொம்பும் இனி வந்து குறுகினுளென்று அகங் குளிர்ந்தேன்' என்ருன். 'தம்பியுடையான் பகை யஞ்சான்' என்ற சொல்லைத் (இலக்குவன் இந்திரசித்தினை வென்றமையால் இராவணனை வெல்லு தற்கு அஞ்சாநிலையை) தனக்கு அளித்ததாகப் பாராட்டியவாறு. "எம்பியை யிங்குப் பெற்றேன் என்னெனக் கரியதென்ருன்"—சீவக (சிந்தாமணி-கனகமாலை-204) என்ற சீவக சிந்தாமணி அடி இங்கு ஒப்பு நோக்கத்தகும். இச் செய்யுள் பல ஏடுகளில் இல்லை. எனவே இது மிகைப் பாடலாகக் கொள்ளத்தக்கது. (69)

## தம்பியைப் பன்முறை தழுவுதல்

9321 தூக்கிய தூணி வாங்கித்
தோளொடு மார்பைச் சுற்றி
வீக்கிய கவச பாச
மொழித்தது விரைவி னீக்கித்

தாக்கிய பகழிக் கூர்வாய்
தடிந்தபுண் டழும்பு மின்றிப்
போக்கினன் றழுவிப் பல்காற்
பொற்றடந் தோளி னொற்றி.

தூக்கிய தூணி வாங்கி,
தோளொடு மார்பைச் சுற்றி
வீக்கிய கவச பாசம்
ஒழித்து, அது விரைவின் நீக்கி,
தாக்கிய பகழிக் கூர்வாய்
தடிந்த புண் தழும்பும் இன்றிப்
போக்கினன்-தழுவிப் பல்கால்,
பொன்தடந் தோளின் ஒற்றி.

பொ:- இலக்குவன் தோளில் தொங்கவிட்டிருந்த அம்பறாத் தூணியைக் கழற்றிவிட்டுத் தோளோடு சேர்த்து மார்பைச் சுற்றிக் கட்டியிருந்த கவசத்தின் கயிற்றை அவிழ்த்து, அக்கவசத்தை விரைவாக நீக்கிவிட்டு, (பகைவன்) தாக்கிய அம்பின் கூரிய வாய் வெட்டிய புண்ணின் சுவடும் இல்லாதபடி, பலமுறை தழுவியும் அழகிய பெரிய தோளினால் ஒற்றியும் போக்கினான்.

கு:- இலக்குவனது போர்க்கோலத்தை நீக்கி உடம்பில் அம்பு பட்ட புண்களையெல்லாம், மார்பினால் பன்முறை தழுவியதாலும்; தன் தோள் கொண்டு ஒற்றியதாலும் போக்கினான் இராமன் என்றவாறு. போர் செய்து இளைத்து வந்த இலக்குவனுக்கு இராமன் அன்பு மிகுதியினால் இவ்வாறு இளைப்பாற்றுவித்தான் என்க. (70)

இராமன் வீடணன் உதவியைப் புகழ்தல்

9322 ஆடவர் திலக நின்னா
லன்றிக லனும னென்னுஞ்
சேடனா லன்று வேறோர்
தெய்வத்தின் சிறப்பு மன்று
வீடணன் றந்த வென்றி
யீதென விளம்பி மெய்ம்மை
ஏடவி ழலங்கன் மார்ப
னிருந்தன னினிதி னிப்பால்.

'ஆடவர் திலக ! நின்னல்
அன்று! இகல் அனுமன் என்னும்
சேடனல் அன்று; வேறு ஓர்
தெய்வத்தின் சிறப்பும் அன்று;
வீடணன் தந்த வென்றி,
ஈது' என விளம்பி மெய்ம்மை,
ஏடு அவிழ் அலங்கல் மார்பன்
இருந்தனன், இனிதின், இப்பால்.

பொ:- இதழ்கள் விரியப்பெற்ற மலர்மாலை பணிந்த மார்பினை யுடைய இராமன், (இலக்குவனை நோக்கி) 'ஆடவர்களிற் சிறந்தவனே! இப்போது பெற்ற இவ்வெற்றி நின்னல் உண்டானது அன்று; அனுமன் என்கிற வல்லமை மிக்க உயர்ந்த பண்பினனாலும் அன்று; வேறோர் தெய்வத்தின் சிறப்பினாலும் அன்று; வீடணன் தந்த வென்றி' என மெய்யான காரணத்தைச் சொல்லிப் பாராட்டிவிட்டு இங்கு இனி தாக இருந்தான்.

கு:—இந்திரசித்தினை இலக்குவன் அனுமன் துணை கொண்டு வென்றது உண்மையாயினும் வீடணன், தன் நுண்ணறிவால் மாயா சீதையே இறந்தனள்; சீதை இறக்கவில்லை என்பதைத் தெரிவித்த தோடு, இந்திரசித்து நிகும்பலையில் ஓமம் செய்கின்முன் என்பதையும் அனுமானத்தால் அறிந்து, அந்த ஓமம் முடிவதற்குள் இந்திரசித்தினைக் கொல்ல வேண்டும் என்று கூறி, இலக்குவனை அழைத்துச் சென்று இந்திரசித்தின் மாயங்களை அவ்வப்போது அறிந்து கூறவில்லை யென்றால், இலக்குவன் வென்றிருக்க முடியாது ஆதலின், 'வீடணன் தந்த வென்றியீது' என இராமன் உண்மையைக் கூறினன் என்க. "தலையினை நோக்கும்; தம்பி கொற்றவை தழீஇய பொற்றோள் மலையினை நோக்கும், நின்ற வலியை நேர்க்கும்" (67) என முன் கூறியுள்ள தால் இராமன் தன்னேக்கினலேயே இலக்குவனும் அனுமனும் தந்த வென்றி என்பதை அறிவித்துவிட்டமையால் இங்கு அவ்வெற்றிக்குக் காரணமாக இருந்த வீடணனைப் புகழ்ந்தான் என்க. மாயத்தில் வல்ல பெரும் பகையைத் தொலைத்தமையால் 'இருந்தனன் இனிதின் இப்பால்' என இராமன் இனிதின் இருந்ததாகக் கூறினர். இப்பால் இனிதின் இருந்தனன் என இயையும். மேல்வரும், இராவணன் சோகப் படலத்திற்குத் தோற்றுவாயாக 'இப்பால்' என்று இறுதியிற் கூறினர் எனலும் ஆம். (71)

# 28. இராவணன் சோகப் படலம்

## முன்னுரை

தன்னுடைய மைந்தன் இந்திரசித்து இறந்ததை அறிந்த இராவணன் பெருந்துயருற்றுப் புலம்பியதைப் புலப்படுத்தும் பகுதி யாதலின் இது இராவணன் சோகப்படலம் எனப் பெயர் பெறு கின்றது. 'இராவணன் பிரலாபப் படலம்' என்றும் இப்படலத்தின் பெயர் ஓர் ஏட்டில் காணப்படுகின்றது.

இந்திரசித்து இலக்குவனால் இறந்ததும் ஒற்றர் சிலர் போர்க் களத்தை அரிதிற் கடந்து சென்று இலங்கைக்குள் நுழைந்து இரா வணனைக் கண்டு இந்திரசித்தின் இறப்பை நடுக்கத்தோடு அறிவிக் கின்றனர். அருகில் நின்ற தேவர் முதலியோர் உலகுக்கு என்ன நேருமோ! என்று அஞ்சி ஒளிக்கின்றனர். இராவணன் துயரமும் சின மும் மிக்கவனாய்ச் செய்தி சொன்ன ஒற்றர்களை வாளினால் வீசி விட்டுத் தரையில் வீழ்கின்றான். பின்பு தன் மகனிடத்து வைத்த பேரன்பும் கடுங்கோபமும் வெளிப்பட இருபது கண்களிலும் இரத்தக்கண்ணீர் பெருகப் பற்களை நெறுநெறுவெனக் கடித்தும் கைகளால் தரையை மோதியும் வருந்தித் தன் பத்து வாய்களாலும் பலபல சொல்லிப் புலம்புகின்றான். பின்பு, இறந்து கிடக்கும் தன் மகனது உடம்பைக் காணப் புறப்பட்டுச் சென்று போர்க்களம் புகுந்து அங்கு வீழ்ந்து கிடக்கும் பிணங்களை ஒரு நாளெல்லாம் புரட்டிப் புரட்டிப் பார்க் கின்றான். இந்திரசித்தின் கை கண்ணுக்குப் புலப்படுகின்றது. பெரு மூச்சுடன் அந்தக் கையினைத் தலையில் வைத்துக் கொள்வதும் மார்பில் அணைத்துக் கொள்வதும் கழுத்தில் சுற்றிக் கொள்வதும் கண்களில் ஒற்றிக் கொள்வதுமாயிருந்து வருந்துகின்றான். பின்பு தலையற்ற இந்திரசித்தின் உடலைக் காண்கின்றான். அவ்வுடலின்மேல் பதைத்து வீழ்கின்றான். இதுகாறும் ஒருவரும் அடையாத பெருந் துயரத் தோடு புலம்புகின்றான். பின்பு அந்த உடலை எடுத்துக்கொண்டு பெண்கள் கூட்டம் அழுதுகொண்டிருக்கும் தன் அரண்மனைக்குள் புகுகின்றான் மகனுடலைக் கிடத்துகின்றான். இதை யறிந்த மண் டோதரி, கலங்கி வந்து தன் மகனுடைய உடம்பின்மேல் மலைமேல் மயில் உயிர் நீங்கி வீழ்தல் போலச் சோர்ந்து வீழ்கின்றாள். பின்பு சிறிது தெளிந்து பல சொல்லிப் புலம்புகின்றாள். அப்புலம்புதலைக் கேட்டு மனம் கலங்கிய இராவணன் 'இத்துயரம் எல்லாம் சீதையினால் அன்றோ வந்தது!' என்று எண்ணி அவளை வாளால் வெட்டி வீழ்த்த

விரைகின்றாள். அருகில் நின்ற மகோதரன் அவ்விராவணனைத் தடுத்துப் பெண் கொலை செய்தல் வீரர்க்கு அழகன்று என்று பல நீதி களைக் கூறுகின்றான். அவன் சொற்களைக் கேட்ட இராவணன் சினம் சிறிது தணிந்து 'பகைவர் தம் சிரம் கொண்டன்றி மீளேன்' என வஞ் சினம் கூறிவிட்டு, மகனுடலைத் தயிலத் தோணியில் இடுமாறு பணிக் கின்றான் என்பது இப்படலத்துக் கூறப்படும் பொருளாகும்.

கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்.

1. வான்மீகத்தில்: இந்திரசித்தின் இறப்பை இராவணனுக்கு அவனுடைய அமைச்சர்களே அறிந்து வந்து கூறியதாகவும், அது கேட்ட இராவணன் துன்பத்தில் மூச்சற்று வீழ்ந்ததாகவும் உள்ளது.

கம்பர்: போர்க்களத்திருந்த ஒற்றர்கள் இந்திரசித்து இறந்ததை நேரில் அறிந்து வருந்தி இரத்தக் கடலையும் பிண மலைகளையும் அரிதிற் கடந்து வந்து இராவணனுக்குச் சொன்னதாகவும், அது கேட்ட இரா வணன் துன்பமும் சினமும் மிக்கவனாய் அத்துன்பச் செய்தியைச் சொன்ன ஒற்றர்களை வாளால் வீசியதாகவும் கூறியுள்ளார்.

இராவணனோடு இருக்கும் அமைச்சர்கள், போர்க்களத்தில் நிகழ்ந்ததை நேரிற் காணும் வாய்ப்பு இல்லாதவர்கள் ஆதலானும், இந்திரசித்தின் சிறப்பினை யறிந்து கூறுவதற்குரியோர், போர்க்கள நிகழ்ச்சிகளை ஆய்ந்தறியும் ஒற்றர்களே ஆதலானும் அவ்வொற்றர்கள் அச்செய்தியை இராவணனுக்குத் தெரிவித்ததாகச் சொல்வதே பொருத்தமானது என்று கம்பர் கருதினார் போலும்.

மேலும், இந்திரசித்து இறந்த செய்தியைச் சொன்ன ஒற்றர்களை இராவணன் வாளால் வீசினான் என்பதும் வான்மீகத்தில் கூறப்படாத நிகழ்ச்சியேயாம். நற்செய்தியைச் சொன்னவர்க்கு மகிழ்ந்து பரிசில் தருவது போல நல்லதல்லாத செய்தியைச் சொன்னவர்க்கு வெகுண்டு வாள்வீச்சினைத் தந்தான் இராவணன் எனப் புதுவதாகக்கூறி இராவண னுடைய கோபத்தையும் அடாத செயலையும் உயர்வு நவிற்சியாகப் புலப்படுத்தினார் கம்பர் என்றே கொள்ள வேண்டியுளது.

2. இராவணன் தன் பத்துத் தலைகளிலும் உள்ள பத்து வாய் களாலும் இந்திரசித்தின் பெருமைகளை வெவ்வேறு வகையாகக் கூறிப் புலம்பினான் என்று கம்பர் கூறியுள்ள செய்தி வான்மீகத்தில் கூறப்படாத செய்தியேயாகும். திருமுருகாற்றுப்படையில் முரு கனது ஆறுமுகங்களும் ஆறு வகையான தொழிலைச் செய்கின்றதாக நக்கீரர் கூறியுள்ளதைக் கண்ட கம்பர், தாம் செய்யும் அரிய காப்பி

யத்திலும் அத்தகைய நிகழ்ச்சியைப் பெய்து அழகு செய்ய வேண்டும் என்ற கருத்தால் இராவணனுடைய பத்து முகங்களும் பத்து வகையாகச் சொல்லிப் புலம்பினவாகப் புதுவதாகப் படைத்துக் கூறியுள்ளார் என்றே கொள்ள வேண்டியுளது.

3. இராவணன் தன் மகன் இந்திரசித்து இறந்தது கேட்டுப் புலம்பிப் போர்க்களம் புகுந்து இந்திரசித்தின் உடம்பை ஒரு நாளெல்லாம் தேடிப் பின் அவனது கையையும் தலையில்லாத உடம்பையும் கண்டு பல சொல்லிப் புலம்பிவிட்டு, அவ்வுடம்பைத் தூக்கிக் கொண்டு அரண்மனைக்குள் புகுந்தான் என்பதும், வான்மீகத்தில் சொல்லப்படாததாய்க் கம்பரால் புதுவதாகப் படைக்கப்பெற்ற படைப்பேயாகும்.

இந்தப் புதிய படைப்பினால் கம்பர் ஓர் அரிய கருத்தைப் புலப்படுத்தியுள்ளார் என்பதை நுனித்து நோக்கி யுணரலாம். புறநானூற்றில் மறக்குடிப் பிறந்த முதுமகள் ஒருத்தி தன் மகன் பகைவர் படைக்குத் தோற்றுப் புறங்காட்டினன் என்று பலர் கூறக்கேட்டு, அவர்கூற்றை நம்பாமல், போர்க்களம் புகுந்து படு பிணங்களைப் புரட்டிப் பார்த்துத் தேடித் தான் கேள்விப்பட்டதற்கு மாறாக விழுப்புண் பட்டுத் தன் மகன் இறந்து கிடப்பதைக் கண்டு அவனைப் பெற்ற ஞான்றினும் பெரிதுவந்தாள் என்ற செய்தி (புறநா—278) கூறப்பட்டிருத்தலை நினைத்து அத்தகைய செய்தி தம் காப்பியத்திலும் அமைய வேண்டும் என்ற கருத்தால் இதனைக் கூறியிருக்கவேண்டும். இந்திரனையும் புறங்கண்டு இந்திரசித்து எனப் பெயர் பெற்ற தன் மகன், ஒரு மனிதனால் இறந்துபட்டான் என்பது நம்பமுடியாத செய்தியாக இருப்பதால் இராவணன் தானே போர்க்களம் புகுந்து தன் மகனுடம்பைத் தேடினன் என்று கூறியதால் இந்திரசித்தின் பெருவீரத்தை இராவணன் மதித்துள்ள சிறப்பைப் புலப்படுத்தியவா றுதலும் காணலாம்.

> "கெட்ட தூதர் கிளத்தின வாறொரு,
> கட்ட மானுடன கொல்ல என் காதலன்
> பட்டொழிந் தனனே" (14)

என்பதும்,

> "கூற்ற முன்னெதிர் வந்துயிர் கொள்வதோர்
> ஊற்றந் தானுடைத்தன்று; எனையும் ஒவித்து,
> ஏற்ற எவ்வுலகு உற்றனை? எல்லையில்
> ஆற்றலாய்! என்று உரைக்கும் அங்கு ஓர்தலை" (22)

என்பதும்,

முக்கணன் முதலி னோரை
யுலகொரு மூன்றி னோடும்
புக்கபோர் எல்லாம் வென்று
நின்றஎன் புதல்வன் போலாம்
மக்களில் ஒருவன் கொல்ல
மாய்பவன்? வான மேரு
உக்கிட அணுஒன்று ஓடி
உதைத்தது போலும் அம்மா!

என்ற மண்டோதரியின் கூற்றும் இங்கு நினையத்தக்கன.

4 அரண்மனைக்குள் இராவணனால் கொண்டுவரப்பட்ட இந்திர சித்தின் உடம்பின் மேல் மண்டோதரி வீழ்ந்து சோர்ந்து புலம்பிய தாகக் கம்பர் கூறிய செய்தியும் வான்மீகத்தில் சொல்லப்படாததே யாகும். இந்திரசித்தின் சிறப்பினை அறிந்து தந்தை புலம்பியதாகக் கூறித் தாய் புலம்பியதை இனம் பற்றிக் கொள்ளவைத்த வான்மீகியின் கருத்தினை யுணர்ந்த கம்பர் இதைக் கூறினராதல் வேண்டும். தந்தை யினும் அன்பினால் பெரிய நீரளான தாய், தன் மகன் இறந்ததைக் கண்டு புலம்பியதாகக் கூறாமல், தந்தை புலம்பியதை மட்டும் கூறின் குன்றக் கூறலாய்க் குற்றப்படுதலும் காணலாம்.

இந்திரசித்தின தாயாகிய மண்டோதரி அழுது புலம்பியதைப் படைத்து மொழிந்த கம்பர், வான்மீகி, மூலபல வதைக்குப்பின், கூறி யுள்ள அரக்கியரின் பிரலாபத்தைக் கூறாமல் அறவே விடுத்துள்ளதை யும் நினைதல் வேண்டும். இலங்கையிலுள்ள அரக்கியர் யாவரும் ஒன்றுகூடி, இந்தப் போர்க்குக் காரணமாய் இருந்த சூர்ப்பணகையின் பொருந்தாக் காமம் முதலியவற்றை விரித்துக் கூறி இராவணனது கொடுமையால் இந்த நிலை நேர்ந்தது என்பதைப் புலப்படுத்திப் புலம் பியதாக வான்மீகி விரித்துக் கூறியுள்ளார். இந்த அரக்கியரின் புலம் டல் இக்கதை நிகழ்ச்சிக்கு இன்றியாத தன்று என்ற கருத்தால் கம்பர் விடுத்தார் எனவே கொள்ள வேண்டும்.

5. சீதையால் அன்றோ நமக்கு இத்துயர் நேர்ந்தது என— 'இராவணன் அச் சீதையை வாளால் வெட்டி வீழ்த்த அசோக வனத் திற்கு வாளேந்திச் செல்கின்றான். வாளேந்தி வெகுண்டு வரும் இராவணனைக் கண்ட சீதை, "இவன் கருத்திற்கு இசையாத என்மேல் வெறுப்புக் கொண்டு என்னை வெட்டி வீழ்த்த வருகின்றான் போலும்! இராம இலக்குவரும் இவனால் வீழ்த்தப்பட்டார்கள் போலும்! என் காரணமாக மன்னர் மன்னரின் மைந்தர்க்கு இந்த நிலை நேர்ந்ததே! போரில் என் கணவர் வீழ்ந்திருப்பின் ஒரே புதல்வராகிய அவரைப்

பெற்ற கோசலையின் இதயம் பிளந்து விடும். அத்தேவியார் தன் மகனுடைய குழந்தைப் பருவ முதலாக இதுகாறும் நிகழ்ந்துள்ள செயல்களை யெல்லாம் நிரல்பட நினைந்து நினைந்து பித்துப் பிடித்த வளாய் ஈமக்கடன் முடிந்ததும் தீயில் குதித்திடுவாள்; இல்லையேல் நீரில் மூழ்கியிறப்பாள்; இது திண்ணம்! கோசலையின் இந்தப் பெருந் துயருக்குக் காரணமாயிருந்த கூனியாகிய மந்தரையை உலகம் எப் பொழுதும் பழித்துக் கொண்டே இருக்கும்." என்ற ஆழ்ந்த சிந்தனை களில் இருந்தாள்' என்று வான்மீகி விரித்துக் கூறியுள்ள செய்திகளைக் கம்பர் இங்கே கூறவில்லை.

இராவணன் வாளோடு அரண்மனையில் புறப்படும் போதே மகோதரன் தடுத்துப் பல நீதிகள் கூறி நிறுத்தியதாகக் கம்பர் அமைத்துவிட்டார். ஆகலின், சீதை, இராவணனை வாளோடு வெகுண்டு வருவதைக் காண்பதற்கே இடமில்லாது போயது; எனவே, அவள் ஆழ்ந்த சிந்தனைகளைக் கூறுதற்கு இயைபில்லையாயது.

6 அமைச்சர்கள் தடுக்கவும் விரைந்து சீதையை வெட்டி வீழ்த்த அசோகவனத்திற்குச் சென்று அவளை நெருங்கும் இராவணனைச் சுபாரிசுவன் என்ற அமைச்சன் துணிவுடன் தடுத்து, 'இந்தக் கோபத்தை மெல்லியலாளாய சீதைபால் காட்டுவது பழியாகும்; இராமன்பால் காட்டி வெற்றி பெறுவது புகழ்ச்சிக் குரியதாகும்' என இன் சொல்லால் சொல்லி நிறுத்தியதாக வான்மீகி கூறியுள்ளார்.

சீதையை வெட்டி வீழ்த்த வேண்டும் என்று வெகுண்டு புறப்படும் இராவணனை அரண்மனையிலேயே 'மகோதரன்' என்னும் அமைச்சன் பல நீதிகளைக் கூறித் தடுத்து நிறுத்தியதாகக் கம்பர் அமைத்துள்ளார். அசோக வனத்திலுள்ள சீதையை நெருங்கும் போது இராவணனைத் தடுப்பதினும் அரண்மனையிலிருந்து புறப்படும் போதே தடுத்ததாக அமைத்தது சிறப்புடையதாதல் தெளிவு. கம்பர்—சுபாரிசுவன் என்ற பெயருடைய அமைச்சனையே கூறுது விடுத்தார் ஆதலின், இராவண னுக்கு மிக நெருங்கிய அமைச்சனாகிய மகோதரன், சீதையின் மேற் சினந்து செல்லும் இராவணனைத் தடுத்து நிறுத்தியதாகக் கம்பர் கூறி யுள்ளார் என்பது உளங் கொளல் வேண்டும். முதற் போரில் தோற் றுத் திரும்பிய இராவணனுக்குத் துணிவுரை கூறி மீண்டும் போர்க்கு ஆயத்தம் ஆகுமாறு செய்தவன் மகோதரனே ஆவன். அவன் சொற் களைக் கேட்டு மகிழ்ந்த இராவணன்,

"பெறுதியே யெவையுஞ் செல்வம் பேரறிவாள சீரிற்று
அறிதியே யென்பால் அன்பினுக்கு அவதிஉண்டோ?
உறுதியே சொன்னாய் என்னா உள்ளமும் வேறுபட்டான்"
(கும்பகருணன் வதைப்—42)

என்பது இங்கு நினைதல் தகும். இவ்வாறு இராவணனால் புகழப்பெற்ற அன்புள்ள அமைச்சனே வெகுண்டு செல்லும் இராவணனை அமைதி கூறித் தடுத்து நிறுத்தற்குரியவன் ஆவான் என்ற கருத்தினாலேயே வான்மீகி கூறியபடி கூறாது பெயரை மாற்றிக் கூறியுள்ளார் என்க. வழி நூல் செய்வார்க்கு இத்தகைய மாற்றம் ஏற்புடைத் தாதலும் நினைதல் வேண்டும்.

## படலப் பொருள் சிறப்பு

இலக்குவன் கணையால் இந்திரசித்து இறந்ததைக் கண்ட ஒற்றர் கள் அத்துன்பச் செய்தியை இராவணனிடம் சொல்லும் முறை சிறப் பாக அமைக்கப்பட்டுள்ளது. நான்கு அடிகள் கொண்ட செய்யுளில் முதலிரண்டடியானும் இறுதியடியானும் ஒற்றர்களின் அச்சத்தையே விளக்கி, மூன்றும் அடியில் 'இல்லையாயினன் உன் மகன் இன்று' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறை நினைந்து நினைந்து இன்புறற் குரியதாக உள்ளது. 'இறந்தான்' என்று மங்கலம் அல்லாத சொல்லைச் சொல்லாது அப்பொருள் தோன்றற்குரிய 'இல்லையாயினன்' என்ற வேறு சொல்லால் தாம் உணர்த்தக் கருதியதை முதற்கண் உரைத்து விட்டு, 'யார்?' என்று அறிய அவாவச் செய்து, 'உன்மகன்' என்று அதற்கு விடையும் கூறி, எப்பொழுது? என்ற வினவிற்கு விடை யாக 'இன்று' என்றும் சொல்லி முடித்திருக்கும் முறை இலக்கியச் சுவை நுகர்வார்க்குப் பெரு விருந்தாய் விளங்குகின்றது. 'உன் மகன் இன்று இல்லையாயினன்' என இத்தொடரை மாற்றிக் கூறியிருப்பினும் இப்பொருள் தோன்றும் ஆயினும் பயனிலையாகச் சொல்ல வேண்டி யதை முதற்கண் அமைத்ததால் அச்சொல்லின் ஆற்றல் சிறந்து காட்டுவதை ஆழ்ந்து சிந்திப்பார் அறிவர். அன்று போருக்குச் சென்றிருந்தவன் இந்திரசித்து; போர்க்களத்திலிருந்து வரும் ஒற்றர் களிடம் இராவணன் எதிர்பார்ப்பது இந்திரசித்தின் வெற்றியை அல்லது வீழ்ச்சியை. இந்த நிலையில் 'இல்லையாயினன்' என்று ஒற்றர் கூறியவுடன் இல்லையாயினன் இந்திரசித்தே என்பதையும், இன்று தான் இல்லையாயினன் என்பதையும், உய்த்துணர்ச்சியாலும் இராவணன் அறிந்து கொள்ளலாம். எனவே 'உன்மகன்' என்ற சொல்லைக் காட்டிலும் 'இன்று' என்ற சொல்லைக் காட்டிலும் 'இல்லை யாயினன்' என்ற சொல்லே இன்றியமையாத சொல்—முதற்கண் சொல்லுதற்குரிய சிறப்புடைய சொல்—என்பது பெறப்படும்.

ஒற்றர்கள் இராவணனிடம் என்ன சொல்லவேண்டும்— எப்படிச் சொல்லவேண்டும் என்பதைச் சிந்தித்தும் பன்முறை சொல்லிப் பார்த்துக்கொண்டும் வழியில் நடந்துவந்திருப்பார்கள். சொற்களின் ஆற்றலை அறிந்து, முறை தெரிந்து சொல்லவேண்டும் என்பதை

இராவணன் அரசியலில் அமைந்துள்ள பயிற்சியால் அறிந்தவர்கள். இராவணனைக் கண்டவுடன் நாம் சொல்லப்போகும் செய்தியின் துன்பநிலையை நினைந்து ஒற்றர்கள் 'எப்படிச் சொல்வது' என்று அஞ்சுகின்றார்கள். அவர்களை அச்சம் சுற்றிக் கொள்கின்றது. வாயில் பேசுதற்குச் சிறந்த கருவியாக உள்ள பற்கள் பறையடிப்பதுபோல மேலும் கீழும் தாக்கி நடுங்குகின்றன. பேசுதற்குரிய நாக்கும் தழுதழுத்து நடுங்குகின்றது. பேசத் துணிவூட்டும் மனமும் நடுங்குகின்றது. மனத்திற்கு ஆதாரமாக உள்ள உடம்பும், உடம்பைத் தாங்கிநிற்கும் பாதங்களும் நடுங்குகின்றன. ஒற்றர்களை நிலை தடுமாறுகின்றனர். இவ்வளவு நடுக்கத்திற்கு நடுவிலும் தாம் சொல்லக் கருதியதை மெல்லச் சொல்லி முடித்துவிடுகின்றார்கள். இராவணனிடம் சொல்ல வந்த சொற்கள் சில என்பதும் அச் சொற்களைச் சொல்ல அவர்கள் நடுங்கிய நடுக்கமே பெரிது என்பதும், அந் நடுக்கத்திற்கு நடுவில் அந்தச் சில சொற்களை முறைதெரிந்து, ஆற்றல் அறிந்து சொல்லி விட்டார்கள் என்பதும் செய்யுளின் அமைப்பிலேயே தோன்றுமாறு கம்பர்,

> பல்லும் வாயும் மனமும்தம் பாதமும்
> நல்லுயிர்ப் பொறையோடு நடுங்குவார்,
> "இல்லையாயினன் உன்மகன் இன்று" எனச்
> சொல்லினர் பயம் சுற்றத் துளங்குவார்.

என அழகாக அமைத்துள்ள கவியின் அருமையை ஆழ்ந்து நோக்கி உணரலாம்.

ஒற்றர்கள் கூறிய பெருந்துன்ப நிகழ்ச்சியைக் கேட்டவுடன் துன்பவுணர்ச்சியாலும் சினக்கிளர்ச்சியாலும் ஆட்கொள்ளப்பெற்ற இராவணன் தன் கையிலிருந்த வாளினை அவ்வொற்றர் மேல் வீசிவிட்டுத் தரையில் சோர்ந்து விழுந்தான் என்று கம்பர் கூறி இராவணனது கடுங்கோபத்தையும் புத்திர சோகத்தையும் நன்கு புலப்படுத்தியிருத்தல் காணலாம்.

இராவணனுடைய பத்துத் தலைகளிலும் உள்ள பத்து வாய்களும் இந்திரசித்தின் வீரப் பெருமையைச் சொல்லிச் சொல்லிப் புலம்பியதாக அமைந்தது, சிறப்புமிக்க அமைப்பாக- இரக்க மிக்க நிகழ்ச்சியாக அமைந்து, கற்போர் நெஞ்சினைக் கரைவிக்கின்றது.

போர்க்களத்தில் புகுந்து தேடிய இராவணன், இந்திரசித்தின் வெட்டுண்ட கையினைக் கண்டவுடன் அன்புணர்ச்சியால் செய்த செயல்களைக் கம்பர்,

கற்றின் மார்பில் தழுவும்; கழுத்தினில்
சுற்றும்; சென்னியில் சூட்டும்; சுழல்கணோடு
ஒற்றும்; மோந்திட்டு உருகும்; உழைக்குமால்;
முற்றும் நாளில் விடுநெடு மூச்சினன். (29)

என்று கூறி நம் கண்முன் அவ்விராவணனுடைய அன்புறு செயல்களை அழகுற நிறுத்திக் காட்டுகின்றார். பிறர்க்கெல்லாம் கேடு விளைக்கும் இராவணனது வன்னெஞ்சம் தன் மகன் இறந்ததை அறிந்தபோது மென்னெஞ்சாய்க் கரைந்து உருகும் இயல்பான நிகழ்ச்சியை இச் செய்யுள் எவ்வளவு அழகாக நமக்குக் காட்டுகின்றது காண்மின்! அவலச் சுவையின் உச்ச நிலையை இங்கு இராவணன்பால் காண்கின்றோம். பின் இந்திரசித்தின் தலையில்லா உடம்பினைக் காணும் போது இத்துன்ப உணர்ச்சி மேலும் மிகுகின்றது.

இந்திரசித்தின் மார்பில் இலக்குவனது அம்பு வைத்திருப்பதைக் கண்டவுடன் அழுகை வெகுளியாக மாறுகின்றது. இம்மாற்றத்தால் இராவணன் செய்யும் வெகுளிச் செயல்களைக் கம்பர்,

பறிக்கும் மார்பின் பகழியை, பன்முறை
முறிக்கும்; மூர்ச்சிக்கும்; மோக்கும்; முயங்குமால்;
'எறிக்கும் வெங்கதிரோடு உலகு ஏழையும்
கறிக்கும் வாயிலிட்டு இன்று' எனக் காந்துமால். (33)

என ஒவ்வொன்றாக நம் கண்முன் நிறுத்துகின்றார்.

இந்திரசித்தின் தலையில்லாத உடம்பைக் கண்ட இராவணன் உள்ளத்தில் பழைய தன் வீரப் பெருமையும் இப்போது நேர்ந்துள்ள சிறுமையும் தோன்றுதல் இயல்புதானே! திசை யானைகளின் மருப்புகளைப் பறித்த தன் வீரச்செயலையும் நெற்றிக் கண்ணனது வெள்ளி மலையை அள்ளியெடுத்த தீரச்செயலையும் பெரியவாக எண்ணிப் புகழ்ந்துகொள்ளும் இராவணன், இன்று, தன் புதல்வனது தலையையும் உயிரையும் கொண்ட சிறு மனிசனை ஒன்றும் செய்ய இயலாத தன் இழிநிலையையும் உணர்கின்றான். இந்த இழிநிலையோடு உயிர்வாழ்வதில் உள்ள சிறுமையையும் உணர்கின்றான்; உரைக்கின்றான்.

நிலையு மாதிரத்து நின்ற யானையும் நெற்றிக் கண்ணன்
மலையுமே.எளியவோ நான் பறித்தற்கு? மறுவில் மைந்தன்
தலையும் ஆருயிருங் கொண்டார் அவர்உடலோடுந் தங்கப்
புலையனேன் இன்னும் ஆவி சுமக்கின்றேன் போலும் போலும்!

எனபது அவன் துன்பக்குரல். இதற்கு மேலும் ஒன்று சொல்கின்றான்;

'நேரிழை ஒருத்தி நீரால், எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி உனக்கு நான் செய்வதானேன்; என்னின் யார் உலகத்து உள்ளார்?' என்கின்ருன். இச் சொற்கள் எத்தகைய கல்நெஞ்சையும் கரைவிக்கும் பெருமையவாய் அமைந்திருத்தல் காணலாம்.

மண்டோதரி இந்திரசித்தின் தலையிலா உடம்பைக் கண்டு சொல்லும் சொற்கள் தாயுள்ளத்தின் தன்மையைப் படம்பிடித்துக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

> கலையினுல் திங்கள் போல வளர்கின்ற காலத்தே உன்
> சிலையினுல் அரியை வெல்லக் காண்பதோர் தவமுன் செய்தேன்
> தலையிலா ஆக்கை காண எத்தவம் செய்தேன் அந்தோ?

என்று அவள் கூறும் சொற்கள் இரக்க உணர்ச்சிக்கு எல்லையாய்த் திகழ்ந்து, உணர்வோர் நெஞ்சினை நீராய் உருக்குதல் காணலாம்.

இந்திரசித்து, தவழ்கின்ற பிள்ளைப் பருவத்தில் இரண்டு சிங்கங்களைப்பற்றிப் போர்மூட்டிக் கண்டு களித்த அவன் வீர விளையாட்டையும், அம்புலிப் பருவத்தில் திங்களை அழைத்துப்பற்றி அத் திங்களில் உள்ள களங்கத்தை முயலாக மயங்கி அதை எடுக்க முயன்ற அவன் இன்ப விளையாட்டினையும் தான் காண ஆசைப்பட்டதைக் கூறி 'எழுந்திராய்' என்று எழுப்பும் மண்டோதரியின் சொற்கள் அழுகைச் சொற்களாயினும் அழகுச் சொற்களாய் இலக்கிய நயங்கள் எல்லாம் செறிந்து நமக்கு இன்பமூட்டுதலை அறியலாம். மேலும் தம் பிள்ளைகளின் விளையாட்டைக் காண்பதில் தாயர்க்கு உள்ள விருப்ப மிகுதியும் இதனுல் புலப்படுதல் காணலாம்.

சீதையை வாளால் வெட்டி வீழ்த்த வெகுண்டு ஓடும் இராவணனைத் தடுத்து மகோதரன் இராவணனது நெஞ்சு கொள்ளும் வகையில் கூறும் அறிவுரைகள் படித்துப் படித்து இன்புறத் தக்கனவாக உள்ளன.

# 28. இராவணன் சோகப் படலம்

## சாதுவர் இராவணனிடம் சொல்ல ஓடுதல்

9323 ஓத ரோதன வேலை கடந்துளார்
பூத ரோதரம் புக்கெனப் போர்த்திழி
சீத ரோதக் குருதித் திரையொரீஇத்
தூத ரோத வெங்காலின் துதைந்துளார்.

ஓத ரோதன வேலை கடந்துளார்,
பூத ரோதரம் புக்கென, போர்த்து இழி
சீத ரோதக் குருதித் திரை ஒரீஇ
தூதர் ஓதவெங் காலின் துதைந்துளார்.

பொ:- அழுகையாகிய அலைகடலைக் கடந்தவர்களாகிய தூதர், (தந்தையிடம்) சொல்லும் பொருட்டு, தரை முழுவதும் போர்த்துக் கொண்டு வழிகின்ற, குளிர்ந்து துன்புறுத்தும் இரத்தக் கடலையும் கடந்து மலை வயிற்றுள் புகுந்தாற்போல (கோபுர வாயிலில் புகுந்து) கொடிய காற்றுப் போல விரைந்து சென்றனர்.

கு:- இந்திரசித்தின் இறப்பினால் தமக்குண்டான அழுகை யென்னும் கடலைக் கடந்த தூதுவர் இரத்தக் கடலையும் நீந்திக் கடந்து சென்று கோபுரவாயில் வழியாக இராவணனிடம் சொல்லு தற்கு ஓடினர் என்றவாறு. ரோதனம்—அழுகை. ரோதன ஓத வேலை என மாறுக. ஓதம்—அலை. வேலை—கடல். வேலைக்கு ஓதம் இயற்கை யடையாக வந்தது; அழுகை யென்னும் கடலுக்கு அலை இன்மை தெளிவு. இந்திரசித்தின் இறப்பினை நினைந்து அழுது கொண்டிராமல் தணிந்து, இராவணனுக்குச் சொல்லவேண்டும் என்ற கடப்பாடு நினைந்து, குருதிக் கடலைக் கடந்து சென்று மலைவயிறு புக்காற் போலக் கோபுர வாயில் நுழைந்து காற்றுப் போல ஓடினர் என்றவாறு. அழுகையின் மிகுதி தோன்ற 'ரோதன வேலை' என்றார். பூதரம்—மலை. உதரம்—வயிறு. பூதரோதனம் புக்கெனத் துதைந்துளார் என இயையும். கோபுர வாயிலில் புகுந்தமை மலைவயிற்றுள் நுழைவது போல இருந்தது என்பார், உவமை முகத்தால் 'பூத ரோதனம் புக்கெனக் துதைந்துளார்' என்றார். திரை—அலை; ஆகு

பெயராய்க் கடலை உணர்த்தியது. குருதித் திரை—குருதிக் கடல் சீதரோதக் குருதித் திரை என்றது, குளிர்ச்சியால் துன்பஞ் செய்யும் இரத்தக் கடல் என்றவாறு. ரோதம்—துன்பம். முன்னமே ஒரு கடலைக் கடந்து, மலையிலும் புகுந்து, ஓதத் துதைந்துளார் என்று நயம் தோன்றக் கூறியுள்ளது காண்க. விரைந்து, செல்லுதற்குள்ள தடைகளை யெல்லாம் விவரித்து அவற்றையும் தூதுவர் விரைந்து கடந்தமை யுணர்த்தியவாறு. (1)

### சாதுவர் இராவணனை அடைதல்

**9324** அன் றி லங்கரும் பேடைக ளாமென
முன் றி லெங்கு மரக்கியர் மொய்த்தழ
இன் றி லங்கை யழிந்ததென் றேங்குவார்
சென் றி லங்கையிற் றாதையைச் சேர்ந்துளார்.

அன்றில் அம் கரும் பேடைகள் ஆம் என,
முன்றில் எங்கும் அரக்கியர் மொய்த்து அழ,
'இன்று இலங்கை அழிந்தது' என்று ஏங்குவார்,
சென்று, இலங்கு ஐயில் தாதையைச் சேர்ந்துளார்.

பொ:- அழகிய கரிய அன்றிலின் பேடைகளைப் போல அரக்கியர் தம் முன்றில் எங்கும் மொய்த்துக்கொண்டு அழ, 'இன்று இலங்கை நகரம் அழிந்தது' என்று கூறிக்கொண்டு ஏங்கு வாராய்ச் சென்று விளங்குகின்ற வேற்படையை யுடைய இந்திர சித்தின் தந்தையைச் சேர்ந்தார்கள்.

கு:- ஆணைப் பிரிந்த பெண் அன்றிற் பறவைகள் அரற்றுவது போல இந்திரசித்தினைப் பிரிந்த அரக்க மகளிர் மொய்த்துக் கொண்டு அழுமாறு தூதுவர் ஏங்குவாராய்ச் சென்று தந்தையைச் சேர்ந்தார் என்க. பிரிவாற்றாது அரற்றலாலும் கருநிறத்தாலும் அரக்க மகளிர்க்கு அன்றிற் பேடை உவமையாயிற்று. இந்திரசித்துப் போர்க்குப் புறப்பட்டபோதே அவனோடு உடன் சென்று உயிர்விடத் துணிந்தவராதலின் போர்க்களத்திலிருந்து விரைந்துவந்த தூதுவர் சொல்லினைக் கொண்டே தம் காதலன் இறந்தான் என்பதை யுணர்ந்து கொண்டு அரக்கியர் மொய்த்தழுதனர் என்றவாறு. அரக்கியர் எனப் பொதுவகையாகக் கூறியிருப்பினும் அன்றிற் பேடை களை யுவமை கூறியதனால் இந்திரசித்தின் மனைவியராகிய அரக்கி

யரையே கொள்ள வைத்தார் என்க. இலங்கைக்கு இளவரசாகிய இந்திரசித்து இறந்ததனையே 'இன்று இலங்கை அழிந்தது' எனக் கூறிய வாறு. அயில் என்பது எதுகை நோக்கி ஐயில் எனப் போலியாக வந்தது. தூதுவர் 'இன்றிலங்கை யழிந்தது' என்று சொல்லி ஏங்கிக் கொண்டே சென்று இராவணனைச் சேர்ந்தனர் என்க. (2)

## தூதுவர் இராவணனிடம் இந்திரசித்து இறந்ததைத் தெரிவித்தல்

**9325** பல்லும் வாயு மனமுந்தம் பாதமும்
நல்லு யிர்ப்பொறை யோடு நடுங்குவார்
இல்லை யாயின னுன்மக னின்றெனச்
சொல்லி னார்பயஞ் சுற்றத் துளங்குவார்.

*பல்லும் வாயும் மனமும் தம் பாதமும்*
*நல் உயிர்ப் பொறையோடு நடுங்குவார்,—*
*'இல்லை ஆயினன்; உன்மகன் இன்று'எனச்*
*சொல்லினார்—பயம் சுற்றத் துளங்குவார்.*

பொ:- (சேர்ந்த தூதுவர்) தம் பல்லும் வாயும் மனமும் பாதமும் சிறந்த உயிர்ப்பாரத்தோடு நடுங்கப் பெற்றவரும், அச்சம் சூழ்ந்து கொள்ள நிலை கலங்கினவரும் ஆகி 'உன் மகன் இன்று இல்லை ஆயினன்' என்று இராவணனிடம் சொன்னார்.

கு:- உயிர்ப்பொறை—உயிராகிய பாரம். 'உயிர்ப்பாரம் குறைந்து தேய' (குகப்-69) என முன்வந்துள்ளதும் காண்க. அருவாகிய உயிரும் பாரமாகத் தோன்றிற்று அச்சத்தினால் என்றவாறு. இறந்தான் என்ற மங்கலமல்லாத சொல்லைச் சொல்லுதற்கும் அஞ்சி 'இல்லை ஆயினன்' என வேறு சொல்லினால் சொன்னவாறு. நடுங்குவோர், துளங்குவாராய்ச் சொல்லினார் என்க. (3)

## வானவர் முதலோர் ஓடி ஒளிதல்

**9326** மாடி ருந்தவர் மாதவர் வானவர்
ஆடல் நுண்ணிடை யார்மற்றும் யாவரும்
வீடு மின்றிவ் வுலகென விம்முவார்
ஓடி யெங்கணுஞ் சிந்தி யொளித்தனர்.

மாடு இருந்தவர், மாதவர், வானவர்,
ஆடல் நுண்ணிடையார் மற்றும் யாவரும்,
'வீடும்' இன்று, இவ் உலகு' என விம்முவார்.
ஓடி. எங்கணும் சிந்தி ஒளித்தனர்.

பொ:- (அவர் சொன்னபோது) இராவணன் பக்கத்திலிருந்தவர்களாகிய பெருந் தவமுடையவர்களும், தேவர்களும், ஆடும் இயல்பினராகிய நுண்ணிய இடையையுடைய பெண்டிரும் மற்றும் யாவரும் 'இவ்வுலகம் இன்று அழியும்' எனப் புலம்புவாராய் ஓடி எங்கும் சிதறி ஒளித்துக் கொண்டனர்.

கு:- மாடு—பக்கம். வீடுதல்-அழிதல். விம்முதல்—தேம்பிப் புலம்புதல். விம்முவார், முற்றெச்சம். விம்முவாராய் ஓடி, சிந்தி ஒளித்தனர் என இயையும். (4)

சொன்ன தூதுவரை இராவணன் வாளால் வீசுதல்

**9327** சுடர்க்கொ ழும்புகை தீவிழி தூண்டிடத்
தடற்று வாளுரு வித்தருந் தூதரை
மிடற்று வீசலு ருவிழுந் தானரோ
கடற்பெ ருந்திரை போற்கரஞ் சோரவே.

சுடர்க் கொழும்புகை தீவிழி தூண்டிட,
தடற்று வாள் உருவித் தரும் தூதரை
மிடற்று வீசல்உறு, விழுந்தான் அரோ—
கடல் பெருந்திரைபோல் கரம் சோரவே.

பொ:- கண்கள், கொழுவிய புகையையும் ஒளிவாய்ந்த சின நெருப்பினையும் கக்க, இராவணன் தன் உறையிலிருந்த வாளை உருவித் துன்பச் செய்தியைக் கொணர்ந்த தூதரைக் கழுத்தின்கண் வீசத் தொடங்கிப் பெரிய கடல் அலைகள்போல் இருபது கரங்களுஞ் சோர்ந்து விழுந்தான்.

கு:- விழி புகையும் தீயும் தூண்டிட என்க. சுடர்த்தீ என இயையும். தடறு—உறை. 'தடற்றிடங் கொள்வாள்' (களவழி-18) என்றும், 'குடத்துள் விளக்கும், தடற்றுள் வாளும் போல இதுகாண் அன்பு என்று போத்தந்து காட்டலாகாது' (இறையனர் களவிய

லுரை சூத்திரம்.1) என்றும் வருதல் காணலாம். இராவணனுக்கு கைகள் இருபது ஆகலின் கடலின் திரைகளை உவமை கூறினர். (5)

## இராவணன் கண் தீ உகுத்தல்

9328 வாய்ப்பி றந்து முயிர்ப்பின் வளர்ந்தும்வான்
காய்ப்பு றுந்தறு கண்ணிடைக் காந்தியும்
போய்ப்பி றந்திவ் வுலகைப் பொதியும் வெந்
தீப்பி றந்துள தின்றெனச் செய்ததால்.

'வாய்ப்பிறந்தும், உயிர்ப்பின் வளர்ந்தும், வான்
காய்ப்பு உறும்தறு கண்ணிடைக் காந்தியும்,
போய்ப் பிறந்து, இவ் உலகைப் பொதியும்வெந்
தீப்பிறந்துளது, இன்று' எனச் செய்ததால்.

பொ:- (இராவணனது) வாயில் பிறந்தும், அவனது மூச்சுக் காற்றில் வளர்ந்தும், விண்ணுலகத்தை வெதுப்புகின்ற கொடுமையையுடைய கண்ணிடத்தில் வெப்பம் கொண்டும் போய்த் தோன்றி, இவ்வுலகத்தை எல்லாம் மூடுகின்ற வெப்பமிக்க தீ இன்று பிறந்தது' என்று உலகம் சொல்லுமாறு வெப்ப மிக்கதாப் பரவியது.

கு:- இராவணனது, சினத்தால் அவன் வாயிலும் மூக்கிலும் கண்ணிலும் தோன்றிய வெப்பம், இவ்வுலகத்தையே மூடிக்கொண்டிருத்தற்குரிய வெந்தீ என்னுமாறு வெப்பத்துடன் பரவியது என்றவாறு. சினத் தீ, வாயிற் பிறந்து, உயிர்ப்பில் வளர்ந்து, கண்ணில் வெப்பங்கொண்டு போய்த்தோன்றி 'இன்று இவ்வுலகைப் பொதியும் வெந்தீப் பிறந்தது' என்னுமாறு உலகெலாம் பரவியது என்று சினத்தீயின் வளர்ச்சி முறை அழகுறக் காட்டப்பட்டுளது காணலாம். தறுகண் என்றது கொடுமையுடைய கண்ணினை. 'எரியுமிழ் தறுகணர்' என்றவாறு. (கம்பரா—அதிகாயன்-138) (6)

9329 படம்பி றங்கிய பாந்தளும் பாரும்பேர்ந்
திடம்பி றங்கி வலம்பெயர்ந் தீடற
உடம்பி றங்கிக் கிடந்துழைத் தோங்குதீ
விடம்பி றந்த கடலென வெம்பினன்.

படம்பிறங்கிய பாந்தளும் பாரும் பேர்ந்து,
இடம்பிறங்கி, வலம் பெயர்ந்து ஈடு அற,
உடம்பு இறங்கிக் கிடந்து உழைத்து, ஓங்கு தீ
விடம் பிறந்த கடல் என வெம்பினன்.

பொ:- படம் விளங்குகின்ற ஆதிசேடனும் அவனால் தாங்கப் பட்ட பூமியும் இடப்பக்கமாகப் பேர்ந்து பொருந்தியும், வலப்பக்க மாகப் பெயர்ந்து பொருந்தியும், வலிமை கெட்டு வருந்த, இராவணன் தன் ஆசனத்திலிருந்து இறங்கித் தரையில் கிடந்து உடம்பு வருந்தி, ஓங்கிய கொடுமையுடைய நஞ்சு தோன்றிய கடல்போல வெதும் பினன்.

கு:- இராவணன் ஆசனத்திருந்து இறங்கித் தரையில் கிடந்து புரண்டு உடம்பு வருந்தும்போது, பூமியும் அதைத் தாங்கும் ஆதிசேட னும், அவன் இடப்பக்கம் புரளும்போது இடப்பக்கம் பேர்ந்தும் அவன் வலப்பக்கம் புரளும்போது வலப்பக்கம் பேர்த்தும் வலிகெட்டு நிலைகெட்டு வருந்தின என்றவாறு. இறங்கிக்கிடந்து உடம்பு உழைத்து என மாறிக் கூட்டுக. நஞ்சு தோன்றிய கடல் அந்நஞ்சினால் வெதும் பியதுபோல இராவணன் தன் கண் தோன்றிய புத்திர சோகத்தினால் வெதும்பினன் என்றவாறு. உழைத்தல்-வருந்துதல். (7)

**9330** திருகு வெஞ்சினத் தீநிகர் சீற்றமும்
பெருகு காதலும் துன்பும் பிறழ்ந்திட
இருப தென்னு மெரிபுரை கண்களும்
உருகு செம்பென வோடிய தூற்றுநீர்.

திருகு வெஞ்சினத் தீநிகர் சீற்றமும்,
பெருகு காதலும், துன்பும், பிறழ்ந்திட,
இருபது என்னும் எரிபுரை கண்களும்;
உருகு செம்பு என, ஓடியது ஊற்றும்நீர்.

பொ:- (பகைவர் மேல் எழுந்த)மாறுபட்ட கொடிய சினம் என்று சொல்லப்படுகின்ற தீயை ஒத்த சீற்றமும் (மகன்மேல் ஒருகாலைக் கொருகால்) பெருகுகின்ற காதலும் (அவன் இறந்தமையா லுளதாய) துன்பமும் மாறி மாறித் தோன்றுதலால், இராவணனுடைய தீயை ஒத்த இருபது என்ற எண்ணிக்கையுடைய கண்களும் ஊற்றுகின்ற துன்பக் கண்ணீர், உருகிய செம்பு போலப் பெருகி ஓடியது.

கு:- இராவணன் உள்ளத்தில் இலக்குவனை நினைந்து எழுந்த பெருங்கோபமும், மகன் மேல் பெருகுகின்ற அன்பும், அவன் இறந்து பட்டமையால் உளதாய துன்பும் மாறி மாறித் தோன்றுதலால், அவன் இருபது கண்களிலும் இரத்தக் கண்ணீர் பெருகியது என்ற வாறு. பிறழ்தல்-மாறி மாறித் தோன்றுதல்; துன்பக் கண்ணீரின் வெப்பமும் இரத்தக் கலப்பும் புலப்பட 'உருகு செம்பென ஓடியது ஊற்றும் நீர் என்றார். இராவணனது சீற்றத்தின் மிகுதி புலப்படத் திருகு வெஞ்சினச் சீற்றம் என்றும் தீநிகர் சீற்றம் என்றும் சிறப்பித் தார். 'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள்-306) என்பது இங்கு நினைத்தற்குரியது. சினத்தின் முதிர்ந்த நிலை சீற்றம் எனப் படும். (8)

## இராவணன் பற்களைக் கடித்துக்கொண்டு கைகளால் தரையை மோதல்

**9331** கடித்த பற்குலங் கற்குலங் கண்ணற
இடித்த காலத் துருமென வெங்கணும்
அடித்த கைத்தல மம்மலை யாழிநீர்
வெடித்த வாய்தொறும் பொங்கின மீச்செல.

கடித்த பற்குலம், கற்குலம் கண் அற
இடித்த காலத்து உரும் என எங்கணும்,
அடித்த கைத்தலம் அம்மலை, ஆழிநீர்,
வெடித்த வாய்தொறும் பொங்கின, மீச்செல.

பொ:- மலைக்கூட்டங்கள் துகளாக அற்றுப் போமாறு மேகம் இடித்த காலத்து உண்டாகும் இடி ஒலியே' என்று எவ்விடத்தவரும் பேசுமாறு, இராவணனது பல்வரிசைகள் கடித்தன; அத்திரிகூட மலை வெடித்த வாய்தோறும் கடல்நீர் பொங்கி மேல் வழியுமாறு அவன் கைகள் தரைமேல் மோதின.

கு:- இராவணன் பற்களைக் கடித்தபோது உண்டான ஒலி இடி யோசை போல இருந்தது; அவன் தரைமேல் கைகளால் மோதிய போது அத்திரிகூடமலை பலவாக வெடித்தது என அவன் சினக்குறிப் பால் பற்களைக் கடித்ததையும் தரைமேல் அடித்ததையும் உயர்த்திக் கூறியவாறு. அவன் கைகளால் அடித்தபோது அம்மலை வெடித்த

வாயிலே அருகிருந்த கடல்நீர் நுழைந்து பொங்கி மேலெழுந்தது என்று அவன் அடியினை மேலும் சிறப்பித்தவாறு. உரும் என்றது இங்கு உருமின் ஒலியை. ஆழிநீர்-கடல். திரிகூட மலையைச் சுற்றிலும் கடல் இருத்தலின் அம்மலை வெடித்த வாயில் அக்கடல்நீர் புகுதல் எளிதாயது. (9)

## இராவணன் வாய்திறந்து அரற்றல்

**9332** மைந்த வோவெனு மாமக னேயெனும்
எந்தை யோவெனு மென்னுயி ரேயெனும்
உந்தி னேனுனை யானுள னேயெனும்
வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்.

'மைந்தவோ !' எனும்; மாமகனே !' எனும்;
'எந்தையோ !' எனும்; என் உயிரே !' எனும்
'உந்தினேன் உனை யான் உளனே' எனும்
வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்.

பொ:- வெந்த புண்ணில் வேல்பட்டாற் போன்ற கொடுந் துன்பத்தை யடைந்தவனான இராவணன், 'மைந்த ஓ !' என்பான்; "சிறந்த மகனே !' என்பான்; 'என் அப்பா ஓ' என்பான்; 'என் உயிரே' என்பான்; என்னுயிர் போன்றவனாகிய நீ உன்னைப் போருக்குச் செல்லுமாறு செய்த யான் இறவாது இருக்கின்றேனே என்பான்.

கு:- கும்பகருணனை இழந்த துன்பம் வெந்தபுண் போன்றது எனவும் இந்திரசித்தினை இழந்த துன்பம் அப்புண்ணில் வேல் நுழைந்தது போன்றது எனவும் கொள்க. வெந்ததோர் புண்ணில் வேல் படுவது பெருந்துன்பம் தருவதாகும். "வெந்தபுண் வேலெறிந்தற்று இஃதொன்று" (கலி 84-30) என்பதும், "வெந்ததோர் புண்ணின் கண் வேல் கொண்டு நுழைப்பான் போல்" (கலி 120-17) என்பதும் காண்க. ஓ என்பது இரக்கக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். இந்திரசித்து இராவணன் மக்களுள் முதல் மகன் ஆதலின், மாமகனே, என விளிக்கலானான். மகனை எந்தை என்றது அன்பு பற்றிவந்த வழுவமைதி. (10)

**9333** புரந்த ரன்பகை போயிற்றன் றேவெனும்
அரந்தை வானவ ரார்த்தன ரோவெனும்
கரந்தை சூடியும் பாற்கடற் கள்வனும்
நிரந்த ரம்பகை நீங்கின ரோவெனும்.

'புரந்தரன் பகை போயிற்று அன்றோ!' எனும்;
'அரந்தை வானவர் ஆர்த்தனரோ!' எனும்;
'கரந்தை சூடியும், பாற்கடல் கள்வனும்;
நிரந்தரம் பகை நீங்கினரோ!' எனும்.

பொ:- இந்திரனது பகை போயிற்று அல்லவோ! என்பான்; நம்மால் துன்பத்தையடைந்த தேவர்கள் (துன்பம் நீங்கி மகிழ்ச்சியால்) ஆரவாரித்தனரோ என்பான்; 'கரந்தையைச் சூடிய சிவனும், பாற்கடலில் ஒளிந்துக்கொண்டுள்ள கள்வனாகிய திருமாலும் நிரந்தரமாகத் தம் பகை நீங்கப் பெற்றனரோ! 'என்பான்.

கு:- அரந்தை—துன்பம். கரந்தை—சிவ கரந்தை. இந்திரசித்து இருக்கின்ற வரையில் தேவர்களும் இந்திரனும் சிவனும் திருமாலும், அஞ்சி அடங்கி இருந்தனர். அவன் இப்போது மாண்டமையால் அவர்கள் பகை நீங்கப்பெற்று மகிழ்வார்கள் என்பது நினைந்து இராவணன் வருந்தியவாறு. (11)

**9334** நீறு பூசியு நேமியங் கையனும்
மாறு முன்றொடு வேலை மறைந்துளார்
ஊறு நீங்கின ராயுவ ணத்திறோ
டேறு மேறியு லாவுவ ரென்னுமால்.

நீறு பூசியும் நேமி அம் கையனும்
மாறு முன்றொடு வெலை மறைந்துளார்
ஊறு நீங்கினராய் உவணத்திறோடு
ஏறும் ஏறி உலாவுவர் என்னுமால்.

பொ:- 'திருநீறு பூசிய சிவனும், சக்கரப்படை தாங்கிய கையனாகிய திருமாலும் மேடும் பள்ளமுமாய் மாறுபட்டுள்ள மலையிலும் கடலும் மறைந்துள்ளவர்கள். இப்போது ஊறுபாடு நீங்கினவராய்க் கருடன்மீதும் ஏற்றின்மீதும் ஏறிக்கொண்டு உலாவுவார்கள்' என்று கூறுவான்.

கு:- இந்திரசித்து இருந்தபோது சிவனும் திருமாலும் ஏற்றினும் உவணத்தினும் ஏறாது கயிலை மலையிலும் திருப்பாற்கடலிலும் மறைந்து கொண்டிருந்தார்கள்; அவன் இறந்தமையால் இப்போது ஊறுபாடு நீங்கினவராய்த் தத்தம் ஊர்திகளில் ஏறி அச்சமின்றி

உலாவி வருவார்கள் என்பது நினைந்து இராவணன் வருந்தியவாறு. ஊறு—துன்பம். உவணம்-கருடன். ஒரு தன்மையான இடத்தில் இருந்தால் இந்திரசித்து வந்து வருத்துவான் என்ற எண்ணத்தால் மேடும் பள்ளமுமாய் மாறுபட்டிருக்கும் மலையினும் கடலினும் சிவனும் திருமாலும் ஒளிந்து கொண்டிருந்தனர் என்றவாறு. நீறுபூசியும் நேமி யங்கையனும் குன்றொடு வேலை மறைந்துளார் என்பது நிரனிறைப் பொருள்கோள்; உவணத்தினோடு ஏறும்—ஏறி என்பது எதிர் நிர னிரைப் பொருள்கோள். (12)

**9335** வான மானமும் வானவ ரீட்டமும்
போன போன திசையிடம் புக்கன
தான மானவை சார்கில சார்குவ
தூன மானிடர் வென்றிகொண் டோவெனும்.

'வான மானமும், வானவர் ஈட்டமும்,
போன போன திசை இடம்புக்கன.
தானம் ஆனவை சார்இல; சார்குவது,
ஊன மானிடர் வென்றி கொண்டோ?' எனும்.

பொ:- 'தேவர்களின் கூட்டமும் அவர்கள் ஏறிச் செல்லுதற்குரிய வான விமானமும் (இந்திரசித்துக்கு எதிர் நிற்க லாற்ருது) போன போன திசை யிடங்களில் புகுந்தனவாய் மறைந்திருந்து தம் இருப் பிடத்தை இதுகாறும் சேர்ந்தில; அவை மீண்டும் சேர்வது, குறை பாடுடைய மனிதர்களின் வெற்றியைத் துணையாகக் கொண்டுதானே' என்பான்.

கு:- மானம் என்பது விமானம் என்பதன் முதற்குறை. ஈட்டம் அஃறிணையாகலின் சார்கில என அஃறிணை முடிபு கொண்டது. தானம் என்றது, அவர் அவர் இருப்பிடத்தை. ஊனமானிடம் என்றது, குறைபாடுடைய மனிதரை—உயர்வுடைய தேவர்கள் குறை பாடுடைய மனிதர்களின் வென்றி கொண்டு தம் தம் தானத்தைச் சார்ந்தது வியத்தற்குரியது என்று எண்ணி இரங்கியவாறு. தானம்—இடம். (13)

**9336** கெட்ட தூதர் கிளத்தினர் பொய்யொரு
கட்ட மானிடன் கொல்லவென் காதலன்
பட்டொ ழிந்தன னேயெனும் பன்முறை
விட்ட ழைக்கு முழைக்கும் வெதும்புமால்.

'கெட்ட தூதர் கிளத்தினர் பொய்; ஒரு
கட்ட மானிடன் கொல்ல, என்காதலன்
பட்டு ஒழிந்தனனே?' எனும்; பன்முறை
விட்டு அழைக்கும் உழைக்கும் வெதும்புமால்.

பொ:- 'வருத்தமிக்க மானிடன் ஒருவன் கொல்ல, என் மகன் இறந்தொழிந்தா இருப்பான்? அறிவு கெட்ட ஒற்றர்கள் பொய் சொல்லியிருப்பார்கள்' என்பான்; பலமுறை 'மகனே! மகனே!' என்று குரல் விட்டு அழைப்பான்; (அவன் வாராமையால்) வருந்துவான்; பின் மனம் வெதும்புவான்.

கு:- தேவரையும் மூவரையும் வெற்றி கொண்ட பேராற்றலை யுடைய இந்திரசித்து, கவலை மிக்க மானிடன் ஒருவனால் இறந்து பட்டான் என்ற ஒற்றன் சொல் நம்பத்தக்கதாக இல்லாமையால் 'தூதர் கிளத்தினர் பொய்' என்று எண்ணுவான் ஆனான். அந்த எண்ணத்தினால் தன் மைந்தனைப் பன்முறை அழைத்தலும் செய்தான்; பன்முறை அழைத்தும் இந்திரசித்து வாராமையால், தூதர் கூறியது மெய் போலும் என்ற எண்ணத்தால் உழைத்தலும் வெதும்பு தலும் செய்தான் இராவணன் என்க. பொய் கூறுதற் கேற்றவர் என்பான், கெட்ட தூதர் என்றான். (14)

9337 எழுமி ருக்கு மிரைக்கு மிரக்கமுற்
றழும ரற்று மயர்க்கும் வியர்க்கும்போய்
விழும்வி ழிக்கு முகிழ்க்குந்தன் மேனியால்
உழுநி லத்தை யுருளும் புரளுமால்.

எழும்; இருக்கும்; இரைக்கும்; இரக்கம் உற்று
அழும்; அரற்றும்; அயர்க்கும்; வியர்க்கும்; போய்
விழும்; விழிக்கும்; முகிழ்க்கும்; தன் மேனியால்
உழும் நிலத்தை; உருளும்; புரளுமால்.

பொ:- (துன்ப மிகுதியால் இராவணன்) எழுவான்; பிறகு தரையில் இருப்பான்; பெருமூச்சு விடுவான்; இரக்கமிக்கு அழுவான்; வாய்திறந்து அரற்றுவான்; சோர்வுறுவான்; வியர்ப்பான்; சிறிது நடந்து விழுவான்; கண்களை விழிப்பான்; பின்பு மூடுவான்; தன் உடம்பினால் நிலத்தை உழுவான்; பின்பு தரையில் உருண்டு செல் வான்; மீண்டும் புரண்டு வருவான்.

கு:- இரைத்தல் - பெருமூச்சு விடுதல். அயர்த்தல்-சோர்தல். முகிழ்த்தல்-கண்களை மூடுதல். கலப்பையால் உழுவது போல இராவணன் தன்னுடம்பினால் தரையை முட்டிப் பிளவுண்டாக்கினன் என்பார் 'தன் மேனியால் உழும் நிலத்தை' என்றார். ஓரிடத்திலிருந்து உருண்டுகொண்டு நெடுந்தொலைவு செல்வதை 'உருளும்' என்றும், அவ்விடத்திருந்து மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே அவ்வாறு வருவதைப் 'புரளும்' என்றும் கூறினர். ஆல்-அசை. (15)

இராவணனுடைய ஒவ்வொரு தலையும் சொல்வன

1338 அய்ய னேயெனு மோர்தலை யானினம்
செய்வெ னேயர சென்னுமங் கோர்தலை
கய்ய னேனுனைக் காட்டிக் கொடுத்துநான்
உய்வெ னேயென் றுரைக்குமங் கோர்தலை.

'அய்யனே!' எனும் ஓர் தலை; 'யான் இனம்
செய்வெனே அரசு!' என்னும், அங்கு ஓர் தலை;
'கய்யனேன். உனைக் காட்டிக் கொடுத்து நான்
உய்வெனே!' என்ன உரைக்கும், அங்கு ஓர் தலை.

பொ:- (இராவணனுடைய பத்துத் தலைகளுள்) ஒருதலை 'அய்யனே!' என்று அழைக்கும்; மற்றொரு தலை 'யான் இன்னும் அரசு செய்வேனோ!' என்று சொல்லும்; 'கீழ் மகனாகிய யான் பகைவனுக்கு உன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டு உயிர் வாழ்ந்திருப்பேனோ' என்று மற்றொரு தலை சொல்லும்.

கு:- இராவணனுடைய பத்துத் தலைகளில் மூன்று தலைகள் சொன்னவற்றை இச் செய்யுளால் விளக்கியவாறு. முருகப்பெருமானுடைய ஆறுமுகங்களும் அறுவேறு தொழில் செய்வதாக நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் கூறியிருப்பதை :-மாயிருண் ஞால மருவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன் றொருமுகம்; ஒருமுகம், ஆர்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக், காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே; யொருமுகம்; மந்திரவிதியின் மரபுளி வழாஅ, அந்தணர் வேள்வி யோர்க்கும்மே; ஒருமுகம், எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித் திங்கள்போலத் திசைவிளக்கும்மே யொருமுகம்; செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக் கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே;

யொருமுகம், குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின், மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே'' (திருமுருகாற்றுப்-91-102) என்ற அடிகளால் உணரலாம். நக்கீரரின் இம்மரபை யுளங்கொண்டே கம்பரும் இராவணனுடைய பத்துத் தலைகளும் வேறு வேறு கூறிய தாகச் சொல்லியிருக்கலாம். வாய் கூறியதைத் தலை கூறியதாகச் சொன்னது தானியாகு பெயர். கய்யன்-கீழ்மகன்; தன் மகனைப் பகை வனுக்குக் காட்டிக்கொடுத்துவிட்டுத் தான் உயிர்வாழ விரும்புதல் கீழ் மகன் தன்மை என்பது புலப்படுத்தியவாறு. (16)

**9339** எழுவிற் கோல மெழுதிய தோள்களால்
தழுவிக் கொள்ளலை யோவெனு மோர்தலை
உழுவைப் போத்தை யுழையுயி ருண்பதே
செழுவிற் சேவக னேயெனு மோர்தலை.

'எழுவின் கோலம் எழுதிய தோள்களால்
தழுவிக் கொள்ளலையோ' எனும் ஓர்தலை;
'உழுவைப் போத்தை உழை உயிர் உண்பதே!
செழுவில் சேவகனே!' எனும், ஓர்தலை.

பொ:- இராவணனது ஓர் தலை, 'சந்தனக் கோலம் எழுதிய இரும்புத் தூண்போன்ற தோள்களால் தழுவிக்கொள்ள மாட் டாயோ!' என்று சொல்லும்; மற்றொருதலை, 'செழுமையான வில் லேந்திய வீரனே, ஆண் புலியைப் பெண்மான் உயிர்வாங்குவதோ' என்று சொல்லும்.

கு:- கோலம் எழுதிய தோள், எழுவின் தோள் எனத் தனித்தனி இயையும். எழு-இருப்புத்தூண். ஆடவர் தோள்களுக்குக் கோலம் எழுதுதல் இல்லை எனினும், மகளிர் மார்பில் எழுதிய தொய்யிற் கோலம் பட்டமை புலப்பட இங்ஙனம் கூறப்பட்டது என்க. சேவகன்-வீரன். உழுவைப்போத்து—ஆண்புலி. உழை-பெண்மான். பேராற்றல் பெற்ற இந்திரசித்தினைச் சிறு மனிதன் கொன்றது வியப்பாகும் என் பான், 'உழுவைப் போத்தை உழை உயிர் உண்பதே' எனப் பிறிது மொழித லணிபடக் கூறியவாறு. புலிக்கு உணவாகத் தக்க புல்வாய் புலியைக் கொன்றது என்பதை நம்பமுடியாதவாறு போல, இந்திர சித்தினை இலக்குவன் கொன்றான் என்பது நம்ப முடியாததாக உள்ளது என்றவாறு. (17)

**9340** நீலங் காட்டிய கண்டனு நேமியும்
ஏலுங் காட்டி னெறிந்த படையெலாம்
தோலுங் காட்டித் துரந்தனை மீண்டநின்
கோலங் காட்டலை யோவெனு மோர்தலை.

'நீலம் காட்டிய கண்டனும், நேமியும்,
ஏலும் காட்டின் எறிந்த படை எலாம்,
தோலும் காட்டித் துரந்தனை மீண்டநின்
கோலம் காட்டிலை யோ!' எனும், ஓர் தலை.

பொ:- நீலநிறம் பொருந்திய கண்டத்தையுடைய சிவனும், சக்கரப் படையை யுடைய திருமாலும் பொருந்திய காடுபோல வீசிய ஆயுதங்களையெல்லாம், நின் கேடகத்தைக் காட்டித் துரத்தி மீண்ட நின் போர்க்கோலத்தைக் காட்டவில்லையோ என்று மற்றோர் தலை சொல்லும்.

கு:- நஞ்சுண்ட கண்டம் நீல நிறத்தது ஆகலின், சிவனை நீலங் காட்டிய கண்டன், என்றான். சிவனும் திருமாலும் இந்திரசித்தின் மேல் தாம் படைக்கலங்களை காடுபோல மிகுதியாகச் செலுத்தினர் என்பது கருத்து. சிவனும் திருமாலும் விட்ட படைக்கலங்கள் எல்லாவற்றையும் துரந்து மீண்ட நின் வீரக்கோலம் இலக்குவன் துரந்த படைக்கு இல்லாது போயதே என்ற கருத்தால் 'மீண்ட நின் கோலங் காட்டலை கொல்' என ஒருதலை கூறியது என்க. பெருந்தேவர் இருவரை வென்ற வீரக்கோலத்தைக் கண்டு களித்த இராவணனுக்கு இலக்குவன் படைகளையும் வீழ்த்தி வரும் அவன் வீரக் கோலமும் காண விரும்புதல் இயல்பாதலின் இங்ஙனம் கூறலானான். (18)

**9341** துஞ்சி னாய்கொல் துணைபிரிந் தேனெனும்
வஞ்ச மோவெனும் வாரலை யோவெனும்
நெஞ்சு நோவ நெடுந்தனி யேகிடந்
தஞ்சி னேனென் றரற்றுமங் கோர்தலை.

'துஞ்சினாய் கொல்? துணைபிரிந்தேன்' எனும்;
'வஞ்சமோ;' எனும்; 'வாரலையோ!' எனும்;
'நெஞ்சு நோவ, நெடுந்தனியே கிடந்து,
அஞ்சினேன்!' என்று அரற்றும்;—அங்கு ஓர் தலை.

பொ:- 'நீ உண்மையாக இறந்து விட்டாயோ? யான் என் துணையாயிருந்த உன்னைப் பிரிந்தேனே! என்று சொல்லும்; (நீ மறைந்திருப்பது) வஞ்சனையோ! என்று சொல்லும்; என் முன் வரமாட்டாயோ! என்று சொல்லும்; 'நெஞ்சு நோவுமாறு நெடிது போது தனியே கிடந்து அஞ்சினேன்' என்று வாய்விட்டு அரற்றும் அங்கு ஒரு தலை.

கு:- இந்திரசித்து இறந்தான் என்பதை நம்ப இயலாமையின் 'வஞ்சமோ' என்றும், வஞ்சனையை விடுத்து என் முன் வருவாயாக என்ற கருத்தால் 'வாரலையோ' என்றும், தான் விரும்பியவாறு அவன் வாராமையின் 'அஞ்சினேன்' என்றும் ஒருதலை அரற்றுவதாயிற்று. (19)

9342 காக யாடுக ளத்திடைக் காண்பெனோ
பாக சாதனன் மோலி பறித்திட
ஓசை மாதவ ருச்சியின் வைத்தநின்
வாகை நாண்மல ரென்னுமற் றோர்தலை.

'காகம் ஆடு களத்திடைக் காண்பெனோ
பாக சாதனன் மோலி பறித்திட
ஓசை மாதவர் உச்சியின் வைத்தநின்
வாகை நாண்மலர்?' என்னும்;— மற்றுஓர்தலை.

பொ:- 'இந்திரனுடைய முடியை நீ பறிக்க அது கண்டு மகிழ்ந்த பெரிய தவமுனிவர்கள் நின் உச்சியில் வைத்த வாகையின் அன்றலர்ந்த மலர் மாலையை, இப்போது காகங்கள் (பிணங்களை உண்டு) ஆடுகின்ற போர்க்களத்திடையில் காண்பேனோ?' என்று மற்றோர் தலை சொல்லும்.

கு:- இந்திரனை வென்று அவன் முடியைப் பறித்தபோது முனிவர்கள், வாகை மாலையை இந்திரசித்தின் உச்சியில் சூட்டி அப்பெயர்ப் பொருட்கேற்ற செயலை மகிழ்ச்சியோடு செய்தார்கள். அன்று இந்திரசித்தின் உச்சியில் கண்ட வாகை மாலையை இன்று போர்க்களத்திடைச் சிதறிக் கிடக்கக் காண நேர்ந்ததே என்று ஒரு தலை இரங்கியவாறு. (20)

9343 சேலி யற்கணி யக்கர்தந் தேவிமார்
மேலி னித்தவிர் கிற்பர்கொல் வீரநின்
கோல விற்குரல் கேட்டுக் குலுங்கித்தந்
தாலி யைத்தொட லென்னுமற் றோர்தலை.

'சேல் இடல் கண் இயக்கர்தம் தேவிமார்,
மேல் இனித் தவிர்கிற்பர்கொல், வீர! நின்
கோல வில் குரல் கேட்டுக் குலுங்கித் தம்
தாலியைத் தொடல்?' என்னும்—மற்று ஓர்தலை.

பொ:- மற்றோர் தலை,—வீரனே! சேல்மீனை ஒத்த கண்களை யுடைய இயக்கர்தம் மனைவியர், நினது அழகிய வில்லின் நாண் ஒலி கேட்டு நடுங்கித் தத்தம் தாலியைத் தொட்டுப் பார்த்துக் கொள்ளும் இயல்பை இனிமேல் நீங்குவார்களோ? என்று சொல்லும்.

கு:- இந்திரசித்து உயிரோடு இருக்கும்போது, அவன் வில் நாணின் ஒலி எழுமாயின் தம் கணவர்களாய இயக்கர்க்குத் தீங்கு உண்டாகுமோ என்று ஐயுற்றுத் தத்தம் தாலியைத் தொட்டு அதில் உறைகின்ற தெய்வத்தை வேண்டிக் கொள்ளும் இயல்புடைவர்களாக இருந்தார்கள்; இப்போது அவன் இறந்து பட்டமையால், அவன் வில் நாண் ஒலி கேட்டலும், நடுங்கித் தாலியைத் தொட்டுப்பார்த்து வேண்டுதலும், இல்லையாயவே! எனத் தன் மகனது பகைநடுக்கும் ஆற்றலை நினைத்து இரங்கியவாறு. இயக்கர் என்பார் தேவர் இனத் தவர் ஆதலின், இந்திரசித்துக்குப் பகைவர் ஆவர். (21)

**9344** கூற்ற முன்னெதிர் வந்துயிர் கொள்வதோ
ரூற்றந் தானுடைத் தன்றெனை யும்மொளித்
தேற்ற வெவ்வுல குற்றனை யெல்லையில்
ஆற்ற லாயென் றுரைக்குமங் கோர்தலை.

'கூற்றம் உன் எதிர் வந்து உயிர் கொள்வது ஓர்
ஊற்றம் தான் உடைத்து அன்று; எனையும் ஒளித்து
ஏற்ற எவ் உலகு உற்றனை? எல்லை இல்
ஆற்றலாய்!' என்று உரைக்கும்—அங்கு ஓர்தலை.

பொ:- 'எல்லை யில்லாத வல்லமையுடையவனே! கூற்று, உன் எதிரில் வந்து உனது உயிரைக் கொள்ளத்தக்க மிகுவலியுடையதன்று; (ஆதலால், நீ இறந்திருக்கமாட்டாய்; உனக்கு ஏற்ற எந்த உலகத் துக்கோ சென்றிருக்கின்றாய்;) எனக்கும் தெரியாமல் மறைந்து உனக் கேற்ற எந்த உலகத்தை அடைந்தாய்?' என்று வினவும் அங்கு ஒரு தலை.

கு:- கூற்றம், உடலையும் உயிரையும் கூறுபடுத்துவது என்ற காரணம் பற்றி வந்த பெயர்; கூற்று, கூற்றுவன் எனவும் இப்பெயர்

வழங்கும். இந்திரசித்து எல்லை இல்லாத வல்லமை யுடையவன் ஆதலின், அவன் எதிர் வருதற்குக் கூற்றம் அஞ்சும்; அதற்குமேல் அவனுடைய உயிரைக் கொள்வது யாங்ஙனம்: என்னும் கருத்தால் 'உன் எதிர் வந்து' எனவும், 'உயிர் கொள்வதோர் ஊற்றம்தான் உடைத்தன்று' எனவும், கூறினன். கூற்றுவன் உனது உயிரைக் கொள்ள மாட்டான்; நீயோ இங்கு இல்லை; எனவே நீ வேறோர் உலகுக்குத்தான் சென்றிருக்க வேண்டும் என அருத்தாபத்தி அளவை கொண்டு நிறுவி, அவ்வுலகம் யாது? என வினவியவாறு. எனையும் ஒளித்து என்புழி உம்மை உயர்வு சிறப்பு. நின்பால் பேரன்பு கொண்ட என்னையும் ஒளித்து என்றவாறு. ஒளித்தல், இங்குத் தெரிவிக்காமை. 'ஏற்ற எவ்வுலகுற்றனை' என்றது அறிந்த பொருள்வயின் ஐயந்தீர்தற்கு வந்த வினா, இது இராவணனது பத்தாவது தலை கூறியது. இந்திர சித்தின் பேராற்றலையே தலைகள் பத்தும் கூறின எனினும் இந்தப் பத்தாவது தலை கூறிய வீரப்பெருமை மிகு சிறப்புடையதாகும். "கும் பிட்டு வாழ்கிலேன் யான் கூற்றையும் ஆடல் கொண்டேன்'' (கும்ப கருணன் வதைப்—160) என்பதும், 'ஆரணு வுன்னுயிரை யஞ்சாதே கொண்டகன்றார்' (இராவணன் வதைப்—224) என்பதும் இங்கு நினையலாம். (22)

**9345** இன்ன வாறழைத் தேங்குகின் றானெழுந்
துன்னு மாத்திரத் தோடின னூழிநாள்
பொன்னின் வானன்ன போர்க்களம் புக்கனன்
நன்ம கன்றன தாக்கையை நாடுவான்.

இன்னவாறு அழைத்து ஏங்குகின்றான் எழுந்து,
உன்னும் மாத்திரத்து ஓடினன், ஊழிநாள்
பொன்னின் வான் அன்ன போர்க்களம் புக்கனன்.
நன் மகன் தனது ஆக்கையை நாடுவான்.

பொ:- இவ்வாறு இந்திரசித்தினை அழைத்து ஏங்குகின்ற இராவணன் எழுந்து, நினைக்கும் அளவில் ஓடிச்சென்று, ஊழியிறுதியில் தோன்றும் பொன்னிறமுடைய செவ்வானம் போன்று இரத்தத்தால் சிவந்து காட்டும் போர்க்களத்தில், தனது சிறந்த புதல்வனுடைய உடம்பைத் தேடுதற்காகப் புகுந்தான்.

கு:- ஏங்குகின்றான் என்பது வினையாலணையும் பெயர். ஏங்கு கின்றான் எழுந்து, ஓடினனாய் மகன்றனது ஆக்கையை நாடுவான், போர்க்களம் புக்கனன் என இயையும். காலச் சிறுமையை யுணர்த்த

'உன்னு மாத்திரத்து' என்றார். மனோ வேகத்தில் சென்றான் என்ற வாறு. போர்க்களத்தின் செந்நிற மிகுதியைப் புலப்படுத்தவேண்டி ஊழிநாள் தோன்றும் செவ்வானத்தை உவமை கூறினர். இந்திரசித்து, தன்னினும் வீர மிக்கவனுய்த் தன் குடிப்பெருமையை விளக்கினவனு கலின் இராவணனுக்கு நன்மகன் ஆயினன். யாக்கை, ஆக்கை என மருவியது. (23)

## தேவர் முதலிய சேவகர் பின் சென்று அஞ்சி இரங்குதல்

**9346** தேவ ரேமுத லாகிய சேவகர்
யாவ ரும்முட னேதொடர்ந் தேகினர்
மூவ கைப்பே ருலகின் முறைமையும்
ஏவ தாகுமென் றெண்ணி யிரங்குவார்.

தேவரே முதலாகிய சேவகர்
யாவரும் உடனே தொடர்ந்து ஏகினர்,
'மூவகைப் பேர் உலகின் முறைமையும்
ஏவது ஆகும்?' என்று எண்ணி இரங்குவார்.

பொ:- தேவர் முதலிய பணியாளர்கள் யாவரும் இராவணன் உடனே தொடர்ந்து சென்று, (இராவணன் கோபத்தால்) மூவுலகங் களின் முறைமையும் இனி என்னகுமோ? என்று எண்ணி இரங்குவா ராயினர்.

கு:- சேவகர் பல இனத்தவர் ஆதலின், தேவரே முதலாகிய சேவகர் எனச் சிறப்புப்பற்றித் தேவரை முதற்கண் எண்ணினர். விண்ணும் மண்ணும் பாதலமும் என உலகங்கள் மூவகையன என்பது புராண மரபு. இராவணன் பெருஞ் சீற்றத்தால் அவ்வுலகங்கள் மேல் கீழாய், கீழ்மேலாய், மாறிவிடுமோ எனச் சேவகர் அஞ்சினர் என்பது கூறி இராவணனது சினத்தின் கொடுமையைப் புலப்படுத்திய வாறு. (24)

## இராவணனைக் கண்ட பறவைகளும் பேய்களும் பட்ட பாடு

**9347** அழுத வாற்சில வன்பின போன்றடி
தொழுத வாற்சில தூங்கின வாற்சில
உழுத வானைப் பிணம்புக் கொளித்தவால்
கழுதும் புள்ளு மரக்கனைக் காண்டலும்.

அழுதவால் சில; அன்பின போன்று, அடி
தொழுதவால் சில; தூங்கினவால் சில;
உழுத யானைப் பிணம் புக்கு ஒளித்தவால்-
கழுதும் புள்ளும், அரக்கனைக் காண்டலும்.

பொ:- போர்க்களத்தில் பிணங்களைத் தின்றுகொண்டிருந்த பேய்களும் கழுகு முதலிய பறவைகளும் இராவணனைக் கண்டவுடனே அஞ்சிச் சில அழுதன; சில அவன்பால் அன்பு கொண்டவை போலத் தொழுதன; சில சோர்வுற்றன; சில, ஆனைப் பிணங்களைத் தலையால் உழுது வழிசெய்து கொண்டு புகுந்து ஒளித்துக் கொண்டன

கு:- மகனை இழந்த இராவணன் கோபத்தால் தம்மை என்ன செய்துவிடுவானோ என்ற அச்சத்தால் சில அழுவனவாயின. அவன் கொடுமையினின்றும் தப்பித்துக்கொள்ளும் தந்திரம் அறிந்த சில, அவன்பால் அன்புடையனபோலத் தொழுதன. தூங்குதல் இங்குச் சோர்ந்து போதலை உணர்த்தியது. துன்ப மிகுதியால் துன்பத் துயில் கொண்டன எனலும் ஆம். யானைப் பிணங்கள் மலைபோல் பெருகிக் கிடத்தலின் அதனுள் வழிசெய்து கொண்டு புகுந்து ஒளித்தன என்க. உழுதல் இங்கு யானைப் பிணங்களுக்குள் தலையால் இடஞ் செய்து கொண்டதை உணர்த்தியது. கழுது-பேய. (25)

## இராவணன் பிணங்களைக் கிளறி மகனைத் தேடுதல்

9348 கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்
ஆடல் வென்றி யரக்கர்த மாக்கையும்
ஓடை யானையுந் தேரு முருட்டினன்
நாடி னான்றன் மகனுட லாளெலாம்.

கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்,
ஆடல் வென்றி அரக்கர்தம் ஆக்கையும்,
ஓடை யானையும், தேரும், உருட்டினன்,
நாடினான் தன் மகன் உடல் நாள் எலாம்

பொ:- (இராவணன்) தன் மகன் உடலைத் தேடுபவனாய் கோடி கோடிக் குதிரைப் பிணங்களின் கூட்டங்களையும். வலிமையும் வெற்றியு முடைய அரக்கர்தம் உடம்புகளையும் முகபட்டத்தை யுடைய

வாளைப் பிணங்களையும் தேர்களையும் ஒருநாள் முழுவதும் புரட்டிப் புரட்டிப் பார்த்தான்.

கு:- குதிரையின் கூட்டம் என்றது குதிரைப் பிணங்களின் கூட்டத்தை. ஆடல், முதல் நீண்டது; அடல்—வலிமை. போர்க்களத்து அழிந்து கிடந்த நால்வகைப் படைகளையும் புரட்டித் தன் மகன் உடம்பைத் தேடுவானானான் என்க. தேடிய காலத்தின் நெடுமை புலப்பட 'நாளெலாம்' என்றார். (26)

## இராவணன் இந்திரசித்தின் கையினைக் காணுதல்

9349 மெய்கி டந்த விழிவழி நீர்விழ
நெய்கி டந்த கனல்புரை நெஞ்சினன்
மொய்கி டந்த சிலையொடு மூரிமாக்
கய்கி டந்தது கண்டனன் கண்களால்.

மெய் கிடந்த விழிவழி நீர் விழ,
நெய்கிடந்த கனல்புரை நெஞ்சினன்,
மொய்கிடந்த சிலை யொடு மூரிமாக்
கய்கிடந்தது கண்டனன், கண்களால்.

பொ:- உடம்பில் பொருந்திய (பத்துத் தலைகளிலும் உள்ள) இருபது விழிகளிலும் நீர் ஒழுக, நெய் பெய்த நெருப்புப்போல எரியும் நெஞ்சினையுடைய இராவணன், வலிமை பொருந்திய வில்லோடு வலிய பெரிய கை போர்க்களத்தில் விழுந்து கிடந்ததைக் கண்களால் கண்டான்.

கு:- கண்ணில் நீரும் கருத்தில் நெருப்பும் உடையவனாக இராவணன் இருந்தான் என்றது, இந்திரசித்தின் இழப்பினால் பெருகும் துன்பமும், இவனைக் கொன்ற இலக்குவன்பால் பெருகும் சீற்றமும் உடையவனாக இருந்தான் என்னும் கருத்தினது. மொய்—வலிமை. மூரி—வலிமை. கை, எதுகை நோக்கிக் 'கய்' எனப் போலியாயிற்று. நெஞ்சினன் என்பது வினையாலணையும் பெயராய் இராவணனை உணர்த்தியது. இந்த அவலக் கோலத்தைப் பார்க்கக்கூடாத கண்கள், என்று தான் வேண்டிய உயர்பு புலப்படுத்தக் 'கண்களால்' என வேண்டா கூறினார். (27)

## இந்திரசித்தின் தோளை இராவணன் தலைமேற் கொள்ளுதல்

**9350** பொங்கு தோள்வளை யுங்கணைப் புட்டிலும்
அங்க தங்களு மம்பு மிலங்கிட
வெங்க ணாக மெனப்பொலி வெய்யகை
செங்கை யாலெடுத் தான்சிரஞ் சேர்த்தினன்.

பொங்கு தோள்வளையும் கணைப்புட்டிலும்
அங்கதங்களும் அம்பும் இலங்கிட
வெங்கண் நாகம் எனப் பொலி வெய்ய கை
செங்கையால் எடுத்தான் சிரம் சேர்த்தினன்.

பொ:- ஒளி விளங்குகின்ற தோள்வளையும், அம்புப் புட்டிலும் வாகுவலயங்களும் அம்பும் விளங்கிடக் கொடுங் கண்ணையுடைய நாகம்போலப் பொலிகின்ற இந்திரசித்தின் விரும்பத்தக்க கையை இராவணன் தன் சிவந்த கையால் எடுத்துத் தலைமேல் வைத்துக்கொண்டான்.

கு:- அங்கதம்—வாகுவலயம். கொடுமையும் வடிவும் பற்றி இந்திரசித்தின் தோளுக்கு வெங்கண் நாகம் உவமையாயிற்று. இராவணன் கையைச் செங்கை என்றது, உத்தம இலக்கணமுடைமை புலப்படுத்த வேண்டி இனிப் போர்க்களத்தில் பிணங்களை யெல்லாம் புரட்டியதனால் இரத்தம் பட்டுச் சிவந்தமை தோன்றச் 'செங்கை' என்றார் எனலும் ஆம். இந்திரசித்தின் கையைத் தலையில் சேர்த்தியது அன்பு பற்றியாகும். (28)

## இராவணன் இந்திரசித்தின் கையோடு கவலுதல்

**9351** கற்றிண் மார்பிற் றழுவுங் கழுத்தினில்
சுற்றுஞ் சென்னியிற் சூட்டுஞ் சுடர்க்கணோ
டொற்று மோக்கு முருடு முளைக்குமால்
முற்று நாளில் விடுநெடு மூச்சினன்.

கல்திண் மார்பில் தழுவும்; கழுத்தினில்
சுற்றும்; சென்னியில் சூட்டும்; சுடர்க்கணோடு
ஒற்றும்; மோக்கும்; உருகும்; உளைக்குமால்;
முற்றும் நாளில் விடும் நெடு மூச்சினன்.

பொ:- (இறக்கும் நாளில் வியத்தக்க நெடு மூச்சையுடையனும் அக் கையினைத் தன்) மலை போன்ற மார்பில் தழுவுவான்; பின் கழுத்தினில் மாலை போலச் சுற்றுவான்; தலையில் கண்ணி போலச் சூட்டுவான்; ஒளி வாய்ந்த கண்களோடு ஒற்றிக் கொள்வான்; மூக்கில் வைத்து மோந்து பார்ப்பான்; அக் கையின் பழைய நிலையை நினைத்து உருகுவான்; அது இப்போது பட்ட நிலையை நினைந்து வருந்துவான்.

கு:- அறுபட்டிருந்த இந்திரசித்தின் கையினைக் கண்ட இராவணன் இறக்குங்கால் உறும் துன்பத்தை யுற்றான் என்பது புலப்படுத்த 'முற்று நாளில் விடும் நெடு மூச்சினன்' என்று அவனைக் குறிப்பிட்டார். முற்றுதல்—இறத்தல். இறக்குந் தருவாயில் நெடு மூச்சு உண்டாதல் இயல்பு. அந்தக் கையினை மார்பில் தழுவியதும், கழுத்தினில் சுற்றியதும், தலையில் சூட்டியதும், கண்ணோடு ஒற்றியதும். மூக்கில் மோந்ததும் இராவணனது பிரிவாற்றாத அன்பினால் நிகழ்ந்தவை. சீதை அனுமான் கொடுத்த இராமனது மோதிரத்தைக் கண்ட போது அவள் செய்த அன்புறு செயல்கள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவை.

"வாங்கினள் முலைக்குவையில் வைத்தனள் சிரத்தால், தாங்கினள் மலர்க்கண்மிசை யொற்றினள் தடந்தோள், வீங்கினள், மெலிந்தனள், குளிர்ந்தனள் வெதுப்போடு, ஏங்கினள், உயிர்த்தனள் இதின்னதெனல் ஆமே" (சுந்தர—உருக்காட்டு—66) என்பதும், 'மோக்கு முலை வைத்துற முயங்கும்' (67) என்பதும் காண்க. (29)

## இந்திரசித்தின் உடம்பைக் கண்டு அதன் மேல் வீழ்ந்து அழுதல்

**9352** கய்கண் டான்பின் கருங்கடல் கண்டன
மெய்கண் டானதன் மேல்விழுந் தானரோ
பெய்கண் டாரை யருவிப் பெருந்திரை
மொய்கெண் டார்திரை வேலையை மூடவே.

கய்கண்டான், பின் கருங்கடல் கண்டன
மெய்கண்டான், அதன்மேல் விழுந்தான் அரோ—
பெய்கண் தாரை அருவிப் பெருந்திரை,
மொய்கொண்டு ஆர்திரை வேலையை மூடவே.

பொ:- கையைக் கண்ட இராவணன், பின்பு கருங்கடலைக் கண்டாற் போன்ற இந்திரசித்தின் உடம்பைக் கண்டான்: கண்கள் தாரையாகப் பொழிகின்ற கண்ணீர் அருவியின் பெரிய அலைகள் வலிமை கொண்டு ஆரவாரிக்கின்ற அலைகளோடு கூடிய கடலையும் சென்று மூடுமாறு அழுது கொண்டு அவ்வுடம்பின் மீது விழுந்தான்.

கு:- கய் கண்டான் என்பது வினையாலணையும் பெயராய் இராவணனை உணர்த்தியது. கருங்கடல், இந்திரசித்தின் உடம்பிற்குக் கருமையும் பரப்பும் பற்றி உவமையானது. இராவணனது இருபது கண்களும் சொரிந்த கண்ணீர் அருவியின் அலைகள் அருகிலுள்ள கடலையும் மூடிக் கொள்ளும்படி பெரியன வாயின என்க. கண் தாரை பெய் அருவிப் பெருந்திரை வேலையை மூட அதன் மேல் விழுந்தான் என இயையும். மொய்—வலிமை. ஆர் திரை, வினைத்தொகை; ஆர்க்கும் திரை என்க. (30)

## இந்திரசித்தின் உடம்பைத் தழுவி யரற்றுதல்

**9353** அப்பு மாரி யழுந்திய மார்பைத்தன்
அப்பு மாரி யழுதிழி யாக்கையின்
அப்பு மாரி லணைக்கு மரற்றுமால்
அப்பு மானுற்ற தியாவருற் றாரரோ.

அப்பு மாரி அழுந்திய மார்பைத் தன்
அப்பு மாரி அழுது இழி யாக்கையின்
அப்பும்; மாரில் அணைக்கும், அரற்றுமால்;
அப் புமான் உற்றது யாவர் உற்றார் அரோ!

பொ:- அம்பு மாரி அழுந்தியிருந்த இந்திரசித்தின் மார்பை அழுது அழுது கண்ணீர் மாரி இழிகின்ற தன் உடம்பின் கண் ஒற்றிக் கொள்வான்; பின் மார்பில் அணைத்துக் கொள்வான்; வாயால் அரற்றுவான்; அந்த ஆண்மையுள்ள இராவணன் உற்ற துன்பம் இவ்வுலகில் யாவர் அடைந்திருக்கின்றார்கள்!

கு:- அம்பு மாரி, அப்பு மாரி எனத் தம்மின வன் தொடராயிற்று. இலக்குவன் விடுத்த அம்பு மழை அழுந்திக் கிடந்த இந்திரசித்தின் மார்பினை இராவணன் அம்பு மாரி யிழிகின்ற தன்னுடம்பில் ஒற்றிக் கொள்வான் என்க. இரண்டாவது அம்புமாரி, கண்ணீர் மழை என்ற

பொருளது. அழுது கொண்டே யிருந்ததால் கண்ணீர் மழை இறங்கிக் கொண்டிருக்கின்ற இராவணன் உடம்பு என்க. அப்புதல், ஒற்றிக் கொள்ளுதலை உணர்த்தியது. புமான் என்றது ஆடவன் என்ற பொருளையுடைய வட சொல். இந்திரசித்தினை இழந்தமையால் இராவணன் உற்ற துன்பத்தை இவ்வுலகில் எவரும் உற்றிருக்க மாட்டார்கள் என அவன் துன்ப மிகுதியைப் புலப்படுத்தியவாறு. இச் செய்யுளில் நான்கடியினும் முதற்சீர் முழுமையும் ஒத்துவந்தமையால் யமகம் என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காணலாம். (31)

### அவன் மார்பில் தைத்துள்ள அம்புகளைப் பறித்து வெகுளல்

9354 பறிக்கும் மார்பிற் பகழியைப் பன்முறை
முறிக்கு மூர்ச்சிக்கு மோக்கு முயங்குமால்
எறிக்கும் வெங்கதி ரோடுல கேழையும்
கறிக்கும் வாயினிட் டின்றெனக் காந்துவான்.

*பறிக்கும், மார்பின் பகழியை; பல்முறை*
*முறிக்கும்; மூர்ச்சிக்கும்; மோக்கும்; முயங்குமால்;*
*எறிக்கும் வெங்கதிரோடு உலகு ஏழையும்*
*கறிக்கும் வாயின் இட்டு இன்று எனக் காந்துவான்.*

பொ:- இந்திரசித்தின் மார்பில் தைத்திருக்கும் அம்புகளை அவன் மார்பிலிருந்து இராவணன் பறிப்பான்; அவற்றைப் பலமுறை முறிப்பான்; பின்பு மூர்ச்சையுறுவான்; பின் மூக்கில் வைத்து மோந்து பார்ப்பான்; பின் மார்பில் அணைப்பான்; 'வெயில் வீசும் வெப்பமுள்ள சூரியனோடு உலகம் ஏழினையும் வாயில் இட்டு இன்று கறிப்போம்' என்று வெகுள்வான்.

கு:- தன் மகன் மார்பில் பட்ட அம்புகளைப் பறித்தலும் முறித்தலும் செய்தது அவன் உயிரை வாங்கியதே என்னும் வெறுப்புப்பற்றியாகும்; அவ்வம்புகளை மோந்ததும் முயங்கியதும் தன் மகனுடம்பில் பட்டு அவன் குருதியில் தோய்ந்தமை நினைந்து செய்தனவாகும். தன் மகன் இறந்துபடவும் தடுத்தல் செய்யாது பார்த்துக் கொண்டிருந்த ஞாயிற்றையும் ஞாயிறு சூழும் ஏழுலகங்களையும் தண்டிக்கும் நினைவால் 'அவற்றை இன்று வாயிலிட்டுக் கடிப்போம்' என இராவணன் கோபிப்பானானான். கறிக்கும் என்பது உம்மீற்றுத் தன்மைப் பன்மை வினைமுற்று. 'இன்று வாயினிட்டுக் கறிக்கும் எனக் காந்து

வான்' என இளையயும். கறித்தல்—கடித்தல். இவன் தங்கை சூர்ப்பண கையும் இவ்வாறே தன்னை வருத்தும் மதியையும் மாரனையும் தின்ன நினைப்பதை:

''கலையுவாமதியே கறியாகவன்
சிலையின் மாரனைத் தின்னும் நினைப்பினுள்''
(சூர்ப்பணகைப்-74)

என முன் கூறியிருப்பதால் அறியலாம். (32)

## இராவணனது பெருஞ் சீற்றத் தன்மை

9355 தேவ ரோடு முனிவருஞ் சீரியோர்
ஏவ ரோடு மியம்பிய மூர்த்திகள்
மூவ ரோடு முலகொரு மூன்றொடும்
போவ தேகொன் முனிவெனும் பொம்மலான்.

'தேவரோடும், முனிவு அருஞ் சீரியோர்
ஏவரோடும், இயம்பிய மூர்த்திகள்
மூவரோடும், உலகு ஒரு மூன்றொடும்,
போவதே கொல் முனிவு?' எனும்; பொம்மலான்.

பொ:- 'இந்த இராவணன் சீற்றம்,—தேவர்களோடும், வேதங்களில் சொல்லப்பட்ட மூர்த்திகள் மூவரோடும் மூவுலகங்களோடும் மட்டும் போகக் கூடியதோ?' என்று பிறர் எண்ணுதற்குரிய சீற்ற மிகுதியுடையவனானன்.

கு:-இராவணனது சீற்றம், தேவரையும்,முனிவரையும் மும்மூர்த்திகளையும்அழித்தாலும் முடிவுறாது என்றுபிறர் எண்ணத்தக்க பொருமலை யுடைவனானன் இராவணன் என்றவாறு. முனிவு அரும் சீரியோர் என்றது முனிவர்களை. 'காமமொடு கடுஞ்சினங் கடிந்த காட்சியர்'(திருமுருகாற்றுப்படை) என்றது நினைக. போவதே கொல்? என்ற வினா போகாமை விளக்கி நின்றது. பொம்மல்—மிகுதி; இங்குச் சீற்ற மிகுதியை உணர்த்தியது. தன்மகன் இந்திரசித்து இறக்கவும் பார்த்துக் கொண்டிருந்த தேவர் முதலியோர்மேல் இராவணன் சீற்றம் பொங்கி நின்றது என்றபடி. (33)

### இத்திரசித்தின் தலையைக் காணுது இராவணன் அரற்றுதல்

**9356** கண்டி லன்றலை காதிய மானிடன்
கொண்டி றந்தன னென்பதுங் கொண்டவன்
புண்டி றந்தன நெஞ்சன் பொருமலன்
விண்டி றந்திட விம்மி யரற்றினுன்.

கண்டிலன் தலை; 'காதிய மானிடன்
கொண்டு இறந்தனன்' என்பது கொண்டவன்,
புண் திறந்தன நெஞ்சன், பொருமலன்,
விண் திறந்திட, விம்மி, அரற்றினுன்.

பொ:- (கையையும் உடம்பையும் கண்ட) இராவணன், தலையைக் காணுதவனுய், 'அவனைக் கொன்ற இலக்குவன் எடுத்துச் சென்றனன்' என்று அறிந்து கொண்டு, புண் திறந்தாற் போன்ற நெஞ்சத்தோடு பொருமுகின்ற இராவணன், விண்முகடு பிளக்குமாறு விம்மி விம்மி வாய்திறந்து அரற்றலானுன்.

கு:- காதுதல்—கொல்லுதல். காதிய மானிடன் என்றது இலக்குவனை. தலையைக் காணுமையால், இலக்குவன் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் என இராவணன் உய்த்துணர்ந்துகொண்டு வருந்தி வாய் திறந்து அரற்றலானுன் என்க. இறத்தல்-கடத்தல். பொருமல் — துன்பம். இராவணனது அரற்ருெலியால் விண்முகடு பிளந்துவிடும் என எண்ணத் தக்கவாறு அவன் அரற்ருெலி மிகுதியாக இருந்தது என்றவாறு. (34)

### இராவணனது அரற்றல் 9357—9361

**9357** நிலையுமா திரத்து நின்ற
யானையு நெற்றிக் கண்ணன்
★ மலையுமே யெளிய வோ நான்
பறித்தற்கு மறுவில் மைந்தன்
தலையுமா ருயிருங் கொண்டா
ரவருட லோருந் தங்கப்
புலையனே னின்னு மாவி
சுமக்கின்றேன் போலும் போலும்.

'நிலையும் மாதிரத்து நின்ற
யானையும், நெற்றிக் கண்ணன்
மலையுமே, எளியவோ, நான்
பறித்தற்கு? மறுஇல் மைந்தன்
தலையும் ஆர்உயிரும் கொண்டார்
அவர் உடலோடும் தங்க,
புலையனேன் இன்னும் ஆவி
சுமக்கின்றேன் போலும் போலும்!

பொ:- நிலத்துள்ள எட்டுத் திசையிலும் நின்ற யானைகளும், நெற்றிக் கண்ணை யுடைய சிவன் தங்கியுள்ள கயிலை மலையுமே யான் பறித்தற்கு எளிய ஆயினவோ? (இம்மானிடர் எளியரல்லரோ) குற்ற மற்ற என் மகன் தலையையும் அரிய உயிரையுங் கொண்டவர் உடலோடும் தங்கியிருக்க, இழிவுடையவனாகிய யான் உயிர்சுமந்திருக்கின் றேன் போலும் போலும்!

கு:- திசையானை மருப்பு ஒசித்த தன் ஆற்றல், வெள்ளிமலையை அள்ளியெடுத்த தன் ஆற்றல்,—இம்மனிதருயிரைப் பறிக்கப் பயன்பட வில்லையே என இராவணன் இரங்கியவாறு. இவ்வாறே இராமனும் இலக்குவன் பிரமாத்திரத்தால் இறந்து கிடந்த போது,

வேலைப்பள்ளக் குண்டகழிக்கும் விராதற்கும்,
காலிற் செல்லாக் கவந்தனுயிர்க்கும், கரனுக்கும்,
மூலப் பொத்தல் செத்த மரத்தேழ் முதலுக்கும்,
வாலிக்கும்மே யாயினவாறு என்வலி அம்மா"
(பிரமாத்திரப்—216)

என்று கூறி இரங்கியிருத்தல் காணலாம். திசையானைகளில் மருப்பும் கயிலை மலையும் பறித்த யான், என்மகனைக் கொன்ற சிறு மானிடரின் உயிரைப் பறிக்காமல் உயிர் சுமந்திருத்தல் மிக்க இழிவு என்பான், 'புலையனேன் இன்னும் ஆவி சுமக்கின்றேன் போலும் போலும், என்று புலம்புவானானான். பகைவரை அழிக்க இயலாத யான் இறத்தலே தக்கது என்றவாறு. (35)

9358 எரியுண வளகை மூதூ
ரிந்திர னிருக்கை யெல்லாம்
பொரியுண வுலக மூன்றும்
பொதுவறப் புரந்தேன் போலாம்

சுரியுணு மலங்கல் மௌலி
யிழந்தவென் மதலை யாக்கை
கரியுணக் கண்டே னூணி
ஞயுணு முணவு நன்ருல்.

'எரிஉண அளகை மூதூர்,
இந்திரன் இருக்கை எல்லாம்
பொரிஉண; உலகம் மூன்றும்
பொது அறப் புரந்தேன் போலாம்!
அரிஉணும் அலங்கல் மௌலி
இழந்த என் மதலை யாக்கை
நரிஉணக் கண்டேன், ஊனின்
நாய்உணும் உணவு நன்ருல்.

பொ:- குபேரனுக்கு உரிமையான அளகை என்னும் பழைய ஊர் எரியுண்ணவும், இந்திரன் இருப்பிடமாகிய அமராவதி தீயில் பொரிந்து போகவும் செய்து, உலக மூன்றும் பிறர்க்கும் பொது என்பது இல்லாமல், (எனக்கே உரிமையாக்கிக்) காப்பாற்றினேன் போலும். வண்டுகள் தேனை உண்கின்ற மாலையையணிந்த தலையை இழந்த என் புதல்வனது உடம்பை நரி உண்ணக் கண்டேனுகிய யான் உண்ணும் உணவைக் காட்டிலும், (தான் கக்கியதையே உண்கின்ற) நாய் உண்ணும் (எச்சில்) உணவு சிறந்ததாகும்.

கு:- அளகையை ஆளும் குபேரனையும் அமராவதியை ஆளும் இந்திரனையும் வென்று அவர்கள் நகரங்களை எரியூட்டி மூவுலகாட்சியும் ஏற்றுச் செங்கோல் செலுத்திய இராவணன் வீரப் பெருமைக்கு, மகன் உடம்பை நரியுணக் கண்டும் வாளா உயிர்வாழ்தல் ஏலாத இழிவுடையது ஆதலின், 'உலகம் மூன்றும் பொதுவறப் புரந்தேன் போலாம்' என்று ஐயந் தோன்றக் கூறியவாறு. தன் மகன் உடம்பை நரியுணக் கண்டும் பகைவரை அழிக்காது உயிர்வாழ்ந்திருக்க உண்ணும் உணவினும், இழிந்த நாய் உண்ணும் எச்சில் உணவு சிறந்தது எனத் தன்னை இழித்துக் கூறிக்கொண்டவாறு. தன் மகனை இழந்த பின்னும் உண்டு உயிர்வாழ்ந்திருத்தல் தகாது என்னும் கருத்தால் இராவணன் இங்ஙனம் கூறுகின்ருன். நாயினும் கடையாயினேன் என்றவாறு. (36)

**9359** பூண்டொரு பகைமேற் புக்கென்
புத்திர னேடும் போனர்
மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார்
விரதிய ரிருவ ரோடும்

ஆண்டுள குரங்கு மொன்று
மமர்க்களத் தாரு மின்னும்
மாண்டில ரினிமற் றுண்டோ
விராவணன் வீர வாழ்க்கை.

'பூண்டு ஒரு பகைமேல் புக்கு, என்
புத்திர ஞேடும் போஞர்
மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார்;
விரதியர் இருவரோடும்
ஆண்டு உள குரங்கும், ஒன்றும்
அமர்க்களதது, ஆரும் இன்னும்
மாண்டிலர்; இனிமற்று உண்டோ,
இராவணன் வீர வாழ்க்கை.

பொ:- போர்க்கோலம் பூண்டு, ஒரு பகைமேல் (இலக்குவன்-மேல் போர் செய்யப்) புகுந்து என் மகனேடும் போனவர்கள் எல்லாம் மீண்டிலர்; இறந்து வீழ்ந்தார்கள்: தவ விரதம் பூண்ட இருவரோடும் அங்கு இருக்கின்ற குரங்கும் பொருந்திய போர்க்களத்தில் யாரும் இன்னும் இறந்திலர்; இராவணனது வீர வாழ்க்கை இனி வேறு உண்டோ?

கு:- போர்க்கோலம் பூண்டு எனச் செயப்படு பொருள் வருவிக்க. என்பக்கத்தார் எல்லாரும் மாண்டு போகவும், பகைப்பக்கத்தார் எல்லாரும் மாளாதிருக்கவும், கண்டு கொண்டு இருக்கின்ற யான் வீரன் என்று சொல்லிக்கொள்ளவே தகுதியற்றவன் என்பான், 'இனி மற்றுண்டோ இராவணன் வீர வாழ்க்கை?' என்ருன். ஒன்றும் அமர்க் களத்து என இயையும். விரதியர் இருவர் என்று கூறியது தவ விரதம் பூண்டுள்ள இராம இலக்குவரை. இராவணன் இவ்வாறு மூன்று செய் யுட்களிலும் தன்னையே இழித்துக் கூறிக் கொண்டான் என்க. படர்க் கையில் வைத்துக் கூறியது. (37)

**9360** கந்தர்ப்ப ரியக்கர் சித்த
ரரக்கர்தங் கன்னி மார்கள்
செந்தொக்குஞ் சொல்லி ஞருள்
ரேவியர் திருவி னல்லார்

வந்துற்றெங் கணவன் றன்னைக்
காட்டென்று மருங்கு வீழ்ந்தால்
அந்தொக்க வரற்ற வோநான்
கூற்றையு மாடல் கொண்டேன்.

'கந்தர்ப்பர், இயக்கர், சித்தர்,
அரக்கர்தம் கன்னிமார்கள்,
செந்து ஒக்கும் சொல்லினர், உன்
தேவியர், திருவின் நல்லார்,
வந்து உற்று 'எம் கணவனைக்'
காட்டு' என்று, மருங்கில் வீழ்ந்தால்,
அந்து ஒக்க அரற்றவோ, நான்
கூற்றையும் ஆடல் கொண்டேன்.

பொ:- கந்தருவர், இயக்கர், சித்தர், அரக்கர் என்பார்தம் புதல்வியராய்ச் செந்து என்னும் பண்ணினை ஒத்துப் பேசும் சொல்லினையுடையவர்களும் திருமகளினும் அழகுமிக்கவர்களு மாகிய உன் மனைவிமார்கள் வந்து அடைந்து 'எம் கணவனைக் காட்டு' என்று அரற்றிக் கொண்டு என் பக்கத்தே வீழ்ந்தால் எமனையும் பணி கொண்ட யான், அப்படியே அவர்களோடு சேர்ந்து அரற்றுவேனோ?

கு:- கந்தருவர், இயக்கர், சித்தர், அரக்கர் என்ற மரபில் வந்த பெண்டிரை இந்திரசித்து மணந்துகொண்டிருந்தான் என்பது இதனால் அறியலாம். செந்து என்பது பண். அந்து—அப்படி. கூற்றையும் ஆடல் கொண்ட யான் நின் மனைவியர் 'எம் கணவனைக் காட்டி' என்று அரற்றும்போது கூற்றுவனை அழைத்து நின்னுயிரை நின்னுடம்பில் செலுத்தச் சொல்லி நின்னை எழுப்ப ஆற்றலின்றி அவர்கள் அரற்றுவது போலவே யானும் ஒக்க அரற்றுவேனோ?' என்று இராவணன் இந்திரசித்தினை விளித்து அரற்றியவாறு. (38)

9361 சினத்தொடுங் கொற்ற முற்றி
யிந்திரன் செல்வ மேவி
நினைத்தது முடித்து நின்றே
னேரிழை யொருத்தி நீரால்

எனக்குநீ செய்யத் தக்க
கடனெலா மேங்கி யேங்கி
உனக்குநான் செய்வ தானே
னென்னின்யா ருலகத் துள்ளார்

'சினத்தொடும் கொற்றம் முற்றி,
இந்திரன் செல்வம் மேவி,
நினைத்தது முடித்து நின்றேன்;
நேரிழை ஒருத்தி நீரால்,
எனக்கு நீ செய்யத் தக்க
கடன் எலாம், ஏங்கி ஏங்கி,
உனக்கு நான் செய்வதானேன்!
என்னின் யார் உலகத்து உள்ளார்.

பொ:- சினத்தோடு நின்று வெற்றியை நிறைவேற்றி இந்திர சித்தினுடைய செல்வத்தை அடைந்து நினைத்ததைச் செய்து முடித்து நின்ற யான், இப்போது பொருந்திய அணிகலன்களை அணிந்த சீதை என்கின்ற ஒருத்தியின் காரணமாக (அந்நிலை யிழந்து) எனக்கு, நீ செய்யத்தக்க இறுதிக் கடன்களை யெல்லாம் வருந்தி வருந்தி, உனக்கு யான் செய்யும் நிலைமையை யடைந்தேன்; என்னைவிட இழிந் தவர்கள் இவ்வுலகத்து யாருளர்?

கு:- முதிர்ந்த தந்தை யிருக்க இளைய மகன் இறக்கும் நிலை ஏற்பட்டது. சீதைமேல் வைத்த காதலால்தான் என்பதை இராவ ணன் அறிந்து இரங்கியவாறு. இந்திரனை வென்று அவன் செல் வத்தை யெய்திய தனக்குச் சிறிய மனிதரை வெல்ல இயலாது போய தோடு தன் மகனையும் இழக்க நேர்ந்தது தவறான காதலால் வந்த இழிவுதான் என்பதை இராவணன் இங்கு உடன்பட்டுக் கூறுகின்றது. முன்பு இந்திரசித்து "எந்தாய் ஒழிந்தருள் சீற்றம் சொன்ன உறுதி யைப் பொறுத்தி யான் போய்க் கழிந்தனன் என்ற பின்னர் நல்லவா காண்டி" (இந்திரசித்து வதைப்—13) என்று கூறியதை நினைப்பிப்ப தாக இருத்தல் காணலாம். 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி உனக்கு நான் செய்வதானேன்' என்பது, "காக்கு நுந்தைக்கு நீ செயக் கடவன கடன்கள், இரக்க முற்றுனக்கு அவன் செயும் என்றனன் இளையோன்" (பிரமாத்திரப்—67) என்ற இலக்கு வனது கூற்றினை மெய்ப்பிப்பதாக அமைந்திருத்தல் காணலாம். (39)

## இராவணன் இந்திரசித்தின் உடம்பினை யெடுத்துக்கொண்டு இலங்கைக்குள் புகுதல்

**9362** என்பன பலவும் பன்னி
யெடுத்தழைத் திரங்கி யேங்கி
அன்பினுன் மகனைத் தாங்கி
யரக்கிய ரரற்றி வீழப்
பொன்புனை நகரம் புக்கான்
கண்டவர் புலம்பும் பூசல்
ஒன்பது திக்கு மற்றை
யொருதிக்கு முற்ற தன்றே.

என்பன பலவும் பன்னி,
எடுத்து அழைத்து இரங்கி, ஏங்கி,
அன்பினல் மகனைத் தாங்கி,
அரக்கியர் அரற்றி வீழ,
பொன்புனை நகரம் புக்கான்;
கண்டவர் புலம்பும் பூசல்,
ஒன்பது திக்கும், மற்றை
ஒருதிக்கும், உற்றது அன்றே.

பொ:- என்பன போன்ற பலவற்றையும் சொல்லிக் கொண்டு உரத்த குரலில் மகனை அழைத்து இரக்கமுற்று வருந்தி, அன்பினல் மகனுடைய உடம்பைத் தூக்கிக்கொண்டு, அரக்கியர்கள் எல்லாம் அரற்றிக்கொண்டு சோர்ந்து வீழப் பொன்கொண்டு புனைந்த இலங்கை நகரத்தில் புகுந்தான்; அதைக் கண்டவர்கள் புலம்பும் அழுகை ஒலி பத்துத் திசைகளிலும் பரவியது.

கு:- மகனைத் தாங்கிப் புக்கான், அரக்கியர் அரற்றி வீழப் புக்கான் என்க. பூசல்—அழுகை ஆரவாரம். பத்துத் திசைகளிலும் ஒரு திசையைப் பிரித்துக் கூறியது ஏனைய ஒன்பது திசைகளைப் போலாது விண்ணுகிய திசை சேய்மையில் இருத்தல் பற்றிப்போலும். "ஒன்பதொடொன் றெடேழு" என்ற ஞானசம்பந்தரின் கோளறு பதிகம் இங்கு ஒப்பு நோக்கத்தகும். (40)

## துயர்பொறுக்காத அரக்கர்களின் செயல்கள்

**9363** கண்களைச் சூல்கின் றாருங்
கருத்தினைத் தடிகின் றாரும்
புண்கொளத் திறந்து மார்பி
னீருளைப் போக்கு வாரும்
பண்கள்புக் கலம்பு நாவை
யுயிரொடு பறிக்கின் றாரும்
எண்களிற் பெரிய ரந்த
விருந்துயர் பொறுக்க லாதார்.

கண்களைச் சூல்கின் றாரும்,
கருத்தினைத் தடிகின்றாரும்,
புண்கொளத் திறந்து, மார்பின்
ஈருளைப் போக்கு வாரும்,
பண்கள் புக்குஅலம்பும் நாவை
உயிரொடு பறிக்கின்றாரும்,—
எண்களில் பெரியர்—அந்த
இருந்துயர் பொறுக்க லாதார்.

பொ:- (இந்திரசித்து இறந்த) அந்தப் பெரிய துயரைப் பொறுக்க முடியாதவர்களாய்த் தம் கண்களைத் தோண்டுகின்றவர்களும், தம் கழுத்தினை வெட்டுகின்றவர்களும் புண்கொள்ளுமாறு மார்பினைப் பிளந்து திறந்து ஈரலை வெளிப்படுத்துகின்றவர்களும், பண்கள் புகுந்து ஒலிக்கின்ற நாக்கினை உயிரோடு பறிக்கின்றவர்களும் ஆய பெண்டிர் எண்ணில் அடங்காதவர் ஆயினர்.

கு:- அந்த இருந்துயர் பொறுக்கலாதாராய், சூல்கின்றாரும், போக்குவாரும், பறிக்கின்றாருமாய பெண்டிர், எண்களில் பெரியராயினர் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. எண்ணிறந்தவர் என்பார், எண்களில் பெரியர் என்றார். சூல்கின்றார் தடிகின்றார் முதலியன வினையாலணையும் பெயராய்ப் பெண்டிரை யுணர்த்தின. துன்பம் பொறுக்காதவர்கள் இவ்வாறு தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்ளுதலுண்டு. சேரமான் பெருமாள் நாயனார் குதிரைமேல் கயிலாயம் சென்றபோது அவருடைய வீரர்கள் "எதிர் விசும்பினிற் கண்டு பின் கண்டிலராதலி னெல்லாரும் முதிரு மன்பினி லுருவிய சுரிகையால் முறை முறை யுடல்வீழ்த்தார். (பெரியபு-வெள்ளானைச்-37) எனச் சேக்கிழாரும் கூறியிருத்தல் காணலாம். (41)

## அரக்கியர் கண்ணீர்

**934** மாதிரங் கடந்த திண்டோண்
மைந்தன்றன் மகுடச் சென்னி
போதலைப் புரிந்த யாக்கை
பொறுத்தனன் புகுதக் கண்டார்
ஓதநீர் வேலை யன்ன
கண்களா லுகுத்த வெள்ளக்
காதனீ ரோடி யாடற்
கருங்கடன் மடுத்த தன்றே.

*மாதிரம் கடந்த திண்தோள்*
*மைந்தன் தன் மகுடச் சென்னி*
*போதலைப் புரிந்த யாக்கை*
*பொறுத்தனன் புகுதக் கண்டார்,*
*ஓதநீர் வேலை அன்ன*
*கண்களால் உகுத்த வெள்ளக்*
*காதல் நீர் ஓடி, ஆடல்*
*கருங்கடல் மடுத்தது அன்றே.*

பொ:- திசைகளை யெல்லாம் வென்ற திண்ணிய தோள்களை யுடைய மைந்தனது முடியணிந்த தலை நீங்கப்பெற்ற உடலைச் சுமந்த வனாய் இராவணன் இலங்கைக்குள் புகக்கண்ட பெண்டிர், வெள்ள மான நீரைக்கொண்ட கடலைப்போன்று பரந்த கண்களால் சொரிந்த, அன்பினை வெளிப்படுத்தும், வெள்ளநீர் ஓடிச்சென்று அலையாடுதலை யுடைய கரிய கடலைக் கலந்தது.

கு:- பெண்டிர் இந்திரசித்தின் தலையில்லாத உடலைக் கண்டு அழுத கண்ணீர் வெள்ளம் போய்க் கடலைக் கலந்தது என அவர்தம் கண்ணீர் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. மாதிரம்—திசை. பொறுத்தல்—சுமத்தல். கண்களின் பரப்புப் புலப்பட 'வேலையன்ன கண்கள்' என்றார். 'கடலினும் பெரிய கண்கள்' (மாரீசன் வதைப்-70) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். வேலையன்ன கண்களா லுகுத் நீர் கடலை மடுத்தது என்புழிக் கடலுகுத்தநீர் கடல் மடுத்தல் இயல்புதானே என்பது பட அமைந்திருக்கும் நயம் காண்க. கண்களால் உகுத்த வெள்ளநீர், காதல் வெள்ளநீர், எனத் தனித்தனி இயையும். மடுத்தல்-கலத்தல். ஆடல் என்றது, அலைகளின் அசைவை. (42)

## இராவணன் அரண்மனைக்குள் புகுதல்

**9365** ஆவியி னினிய காத
லரக்கியர் முதல்வ ராய
தேவியர் குழாங்கள் சுற்றிச்
சிரத்தின்மேற் றளிர்க்கை சேர்த்தி
ஓவியம் வீழ்ந்து வீழ்ந்து
புரள்வன வொப்ப வொல்லைக்
கோவியல் கோயில் புக்கான்
குருதிநீர்க் குமிழிக் கண்ணன்

ஆவியின் இனிய காதல்
அரக்கியர் முதல்வர்ஆய
தேவியர் குழாங்கள் சுற்றி,
சிரத்தின்மேல் தளிர்க்கை சேர்த்தி,
ஓவியம் வீழ்ந்து வீழ்ந்து
புரள்வன ஒப்ப, ஒல்லைக்
கோஇயல் கோயில் புக்கான்,
குருதிநீர்க் குமிழிக் கண்ணன்.

பொ:- இந்திரசித்தின் உயிரினும் இனிய காதலையுடைய அரக்கியர் முதலோராகிய அவன் மனைவியரின் கூட்டங்கள் சூழ்ந்து கொண்டு தத்தம் சிரங்களின்மேல் தளிர்போன்ற கரங்களைச் சேர்த்துக் குவித்துக்கொண்டு, சித்திரப்பதுமைகள் தரையில் வீழ்ந்து புரள்வனபோலப் புரளாநிற்க, இரத்த நீர்க் குமிழினை யுடையவனான கண்களையுடையவனான இராவணன் விரைவாக அரசியற்குரிய அரண்மனையில் புகுந்தான்.

கு:- இந்திரசித்துக்கு மனைவியர் பலவகையினர் ஆகலின் 'அரக்கியர் முதல்வராய தேவியர்' என்றார். 'கந்தர்ப்பர், இயக்கர், சித்தர், அரக்கர்தம் கன்னிமார்கள் சிந்தொக்கும் சொல்லினார் உன் தேவியர்' (38) என முன் இராவணன் இந்திரசித்தினை விளித்துக் கூறியிருத்தல் காணலாம். இராவணன் நினைத்தவாறே அத் தேவியர் குழாங்கள் அவனைச் சுற்றி வீழ்ந்து புரளலானார் என்க. சிரத்தின்மேல் கரங்குவித்து வணங்கத்தக்க எங்கள் கணவனார் எங்கே? என்னும் குறிப்புத் தோன்றவே அத் தேவியர் இராவணனைச் சுற்றிக்கொண்டு சிரத்தின்

மேல் தனிர்க்கை சேர்த்திக்கொண்டு புரள்வாராயினர் என்க. தேவியரின் அழகிய தோற்றம் புலப்பட 'ஓவியம் புரள்வன ஒப்ப' என உவமை கூறியவாறு. 'ஒப்பப் புரள' என ஒருசொல் வருவிக்க. கண்ணன் ஒலிலைப் புக்கான் என்க. துன்ப மிகுதியால் இராவணன் கண்களில் குருதிநீரே பெருகியது என்பதும் அக் குருதிநீரில் குமிழிகள் கொப்புளித்தன என்பதும் புலப்பட, 'குருதிநீர்க் குமிழிக் கண்ணன்' என்றார். இந்திரசித்தின் இறப்பினால் அவன் தேவிமார் படும் பெருந்துயர் கண்டு பொழுது குருதி நீர்க் குமிழிகளை யுடைய கண்ணினனாய் விரைந்து கோயில் புக்கான் என்றவாறு. அவன் தேவியர்க்குக் கூறிக் காட்டும் அமைதியுரை யின்மையின் விரைந்து புகலானான். (43)

52 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:-

9365 a தொழும்பு செய்து உளராம் தேவர்
துயரினர் போலத் தாமும்,
பழங்கண் உற்று, உடைய வேந்தன்
இணையடி விடாது பற்றி,
உளம் களிப்புறுவோர் ஓயாது
அழுதனர்; மைந்தன் ஆவி,
இழந்தனன் என்னக்கேட்டு ஆங்கு,
இடிஉறும் அரவை ஒத்தான்.

9365 b உம்பரின் உலவும் தெய்வ
உருப்பசி முதல வாய,
ஐம்பது கோடி தெய்வத்
தாதியர் அழுது சூழ்ந்தார்;
தும்பியின் இனத்தை எல்லாம்
தொலைத்திடும் குருளை மாய,
கம்பம் உற்று அரியின் பேடு
கலங்கியது என்னச் சோர்ந்தாள்.

மண்டோதரி கலங்கி வருதல்

9366 கருங்குழற் கற்றைப் பாரங்
காரோடக் கமலப் பூவால்
குரும்பையைப் புடைக்கின் றாள்போற்
கைகளான் முலைமேற் கொட்டி

அருங்கலச் சும்மை தாங்க
வகலல்கு லன்றிச் சற்றே
மருங்குலு முண்டுண் டென்ன
மயன்மகண் மறுகி வந்தாள்.

கருங்குழல் கற்றைப் பாரம்
கால்தொட, கமலப் பூவால்
குரும்பையைப் புடைக்கின் றுள்போல்
கைகளால் முலேமேல் கொட்டி,
'அருங்கலச் சும்மை தாங்க,
அகல் அல்குல் அன்றி, சற்றே
மருங்குலும் உண்டு உண்டு' என்ன,
மயன் மகள்—மறுகி வந்தாள்.

பொ:- மயன் மகளாகிய மண்டோதரி—பாரமுள்ள கரிய கூந்தல் கற்றை அவிழ்ந்து கால்களைத் தொடாநிற்க, தாமரைப் பூவினுல் தென்னங் குரும்பை அடிப்பவளைப் போலக் கைகளால் முலேகள்மேல் அடித்துக்கொண்டு 'அரிய அணிகலன்களாகிய சுமையைத் தாங்குவதற்கு அகன்ற அல்குல் மட்டும் அல்லாது, சிறிது இடையும் உண்டு உண்டு' எனக் கண்டோர் வியந்து கூறுமாறு (ஒல்கி நடந்து) மனம் கலங்கி வந்துற்றுள்.

கு:- பாரக் கருங்குழற் கற்றை என்க. துன்ப மிக்கபோது கூந்தல் அவிழ்ந்து வீழ்தல் இயல்பு. மண்டோதரியின் கூந்தல் காலைத் தொடும் அளவிற்கு நீண்டிருந்தது என்பது இதனுல் புலப்படுத்தியவாறு. தாமரைப் பூப்போன்ற கைகளால் குரும்பை போன்ற முலேகள்மேல் அடித்துக்கொண்டாள் என்பார், "கமலப் பூவால் குரும்பையைப் புடைக்கின்றுள்போல் முலேமேற் கொட்டி" எனத் தற்குறிப்பேற்ற உவமையாற் கூறினுர். மண்டோதரியின் இடை கண்ணிற்குப் புலப்படாமையின் இல்லையென்று முடிவு கட்டியவர்கள், இப்போது அவள் கைகளால் மார்பைப் புடைத்துக்கொண்டு வரும்போது இடை சிறிது காணப்பட்டமையின் சற்றே மருங்குலும் உண்டு உண்டு என்ன வியந்து கூறினர் என்க. மறுகுதல்-மனம் கலங்குதல். (44)

## மண்டோதரி மகன்மேல் வீழ்தல்

9367 தலேயின்மேற் சுமந்த கைய
டழலின்மேன் மிதிக்கின் றுள்போல்
நிலேயின்மேற் பதைக்குந் தாள
ளேக்கத்தா னிறைந்த நெஞ்சள்

கொலையின்மேற் குறித்த வேடன்
கூர்ங்கணை யுயிரைக் கொள்ள
மலையின்மேன் மயில்வீழ்ந் தென்ன
மைந்தன்மேன் மறுகிவீ ழ்ந்தாள்.

தலையின்மேல் சுமந்த கையள்.
தழலின்மேல் மிதிக்கின்றாள்போல்
நிலையின்மேல் பதைக்கும் தாளள்,
ஏக்கத்தால் நிறைந்த நெஞ்சள்
கொலையின்மேல் குறித்த வேடன்
கூர்ங்கணை உயிரைக் கொள்ள,
மலையின்மேல் மயில் வீழ்ந்தென்ன,
மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தாள்.

பொ:- மண்டோதரி தலையின்மேல் வைத்த கையை யுடையவளாய், நெருப்பின் மேல் மிதிப்பவளைப்போல நிலையாக உள்ள தரைமேல் வைத்துப் பதைக்கும் பாதங்களையுடையவளாய், ஏக்கத்தால் நிறைந்த நெஞ்சினையுடையவளாய் வந்து, கொலைமேல் சென்ற குறிப்புடைய வேட்டுவனது கூரிய அம்பு தன் உயிரை வாங்க ஒரு மயில், மலையின்மேல் வீழ்ந்தாற் போல மகனது உடம்பின்மேல் சுழன்று வீழ்ந்தாள்.

கு:- துன்பம் மிக்கபோது தலைமேல் கையை வைத்துக்கொள்ளுதல் இயல்பு. தன் மகனைத் தெய்வமாகக் கருதும் குறிப்பால் தலைமேல் கைகுவித்தாள் எனலும் ஆம். தலைமேல் வைத்த தன் கைகளே துன்ப மிகுதியால் சுமையாகத் தோன்றிற்று என்னும் குறிப்புப் புலப்பட 'சுமந்த கையள்' என்றார். தலையில் நிலைக்காமல் பதைக்கும் மண்டோதரியின் துன்ப நிலையைப் புலப்படுத்த 'தழலின்மேல் மிதிக்கின்றாள்போல் நிலையின்மேல் பதைக்கும் தாளள்' என்றார். இதனால், மண்டோதரியின் தலையும் கையும் காலும் நெஞ்சும் என்ற இவற்றை நம் நெஞ்சினுள் எழுதுகின்றார் கம்பர் என்னலாம். வேடனது அம்பு பட்டு உயிர் இழந்த மயில் மலையில் வீழ்வதுபோல, உயிர்போன்ற இந்திரசித்தினை இழந்த மண்டோதரி அவன் மலைபோன்ற உடம்பின் மேல் சுழன்று வீழ்ந்தாள் என்றவாறு. மயில் மண்டோதரிக்கும் மலை இந்திரசித்தின் உடம்புக்கும் உவமை. மகனை இழந்த மண்டோதரியின் நிலை உயிரை யிழந்த மயிலின் நிலைபோன்றது என மண்டோதரியின் துன்ப நிலையைப் புலப்படுத்தியவாறு. (45)

## மண்டோதரியின் துன்பநிலை

9368 உயிர்த்தில ளுணர்வு மில்ல
ளுயிரிலள் கொல்லோ வென்னப்
பெயர்த்திலள் யாக்கை யொன்றும்
பேசலள் பில்கி யாதும்
வியர்த்தில ணெடிது போது
விம்மலண் மெல்ல மெல்ல
அயர்த்தில ளரிதிற் றேறி
வாய்திறந் தரற்ற லுற்ருள்.

உயிர்த்திலள்; உணர்வும் இல்லள்;
'உயிர் இலள் கொல்லோ' என்னப்
பெயர்த்திலள், யாக்கை; ஒன்றும்
பேசலள்; பில்கி யாதும்
வியர்த்திலள்; நெடிது போது
விம்மலள்; மெல்ல மெல்ல,
அயர்த்திலள் அரிதின் தேறி,
வாய்திறந்து, அரற்றலுற்ருள்.

பொ:- (வீழ்ந்த மண்டோதரி) நெடிதுபோது, மூச்சுவிட்டிலள்; உணர்ச்சியும் இல்லாதவளாளுள்; உயிர் நீங்கப் பெற்ருளோ ! என்று ஐயுறுமாறு உடம்பை அசைத்தலும் செய்திலள்; ஒன்றும் பேசவில்லை; நீர் கசியச் சிறிது வியர்த்தலும் செய்திலள்; தேம்புதலும் செய்திலள்; பின்பு மெல்லமெல்ல அயர்ச்சி நீங்கி அரிதில் தெளிந்து, வாய்திறந்து அரற்றத் தொடங்கினள்.

கு:- நெடிது போது என்பது இடைநிலை விளக்காய் முன்னும் இயைந்தது. நெடிதுபோது உயிர்த்திலள்; நெடிதுபோது உணர்வும் இல்லள்; நெடிதுபோது யாக்கை பெயர்த்திலள்;நெடிதுபோது பேசலள் என எல்லாவற்ருேடும் இயைக்க. பில்கி-நீர்கசிந்து செய்தென் னெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரித்து நீர் பில்க வியர்த்திலள் எனப்பொருள் கூறலும் ஆம். அயர்ந்தல்-சோர்தல். விம்மதல்-தேம்புதல். இலக்குவன் பிரமாத்திரத்தால் இறந்துகிடந்த நிலையைக் கண்ட இராமனும் இவ்வாறே இருந்தான் என்பதை :- "உயிர்த்திலன் ஞெருநாழிகை யுணர்ந்திலனென்றும், வியர்த்திலனுடல் விழித்திலன் கண்ணிணை விண்ணோர், அயர்த்தனன் கொல் என்று அஞ்சினர்.

அங்கையுந் தாளும், பெயர்த்திலனுயிர் பிரிந்திலன் கருணையாற் பிறந் தான்." (பிரமாத்திரம்.200) என்றதால் அறியலாம். இவ்விரு செய் யுளும் பெரிதும் கருத்தொற்றுமை யுடையவாக இருத்தல் காணலாம்.

மண்டோதரி இந்திரசித்தினை விளித்துப் புலம்புதல் 9369-9375

**9369** கலையினுற் றிங்க ளென்ன
வளர்கின்ற காலத் தேயுன்
சிலையினு லரியை வெல்லக்
காண்பதோர் தவமுன் செய்தேன்
தலையிலா வாக்கை காண
வெத்தவஞ் செய்தே னந்தோ
நிலையிலா வாழ்வை யின்னு
நினைவெனே நினைவி லாதேன்.

'கலையினுல் திங்கள் என்ன
வளர்கின்ற காலத்தே உன்,
சிலையினுல் அரியை வெல்லக்
காண்பதோர் தவம்முன் செய்தேன்;
தலை இலா ஆக்கை காண
எத்தவம் செய்தேன்! அந்தோ!'
நிலை இலா வாழ்வை இன்னும்
நினைவெனே, நினைவு இலாதேன்?

பொ:- நாளுக்கு நாள் கலையினுல் வளர்கின்ற சந்திரனைப்போல வளர்கின்ற இளம்பருவத்தே உன் வில்லினுல் இந்திரனை வெல்லக் காண்பதொரு தவத்தை முன் செய்திருந்தேன்; தலையில்லாத நின் னுடம்பைக் காண்பதற்கு எந்தப் பாவத்தைச் செய்தேன்! அந்தோ! நல்ல நினைவு இல்லாத யான் இவ்வாறு நிலையில்லாத வாழ்வினை இனியும் மதித்திருப்பேனே?

கு:- அரி என்றது இந்திரனை. வெல்லுதற்குரிய பருவம் நிரம் பாத முன்னமே இந்திரனை வெல்லக்கண்டு மகிழும் தவமுடையனாக இருந்த எனக்கு, இன்று நின் தலையிலா உடம்பைக் காணும் பாவம் எவ்வாறு நேர்ந்ததோ? என இரங்கியவாறு. எத்தவஞ் செய்தேன் என் புழித் தவம் எதிர்மறைக் குறிப்பால் பாவத்தை உணர்த்தியது.

இளமைக் காலத்தே இந்திரனை வென்று இந்திரசித்து எனப் பெயர் பெற்றவன், தருணனாயிருக்கும்போது ஒரு மனிதனால் தலை கொய்யப் படும் எளிமையும் பெறுகின்ற வாழ்வு நிலையிலா வாழ்வு என்பது மண்டோதரியின் கருத்து; இனி இத்தகைய நிலையிலா வாழ்வை விரும்பாது உயிர் விடுதலே தக்கது என்பாள், 'இன்னும் நினைவெனோ?' என்றாள். (47)

**9370** அய்யனே யழக னேயென்
　　னரும்பெற லமிழ்தே யாழிக்
கய்யனே மழுவ னேயென்
　　றவர்வலி கடந்த கால
மொய்யனே முளரி யன்ன
　　நின்முகங் கண்டி லாதேன்
உய்வெனே யுலக மூன்றுக்
　　கொருவனே செருவ லோனே.

'அய்யனே! அழகனே! என்
　　அரும்பெறல் அமிழ்தே! ஆழிக்
கய்யனே, மழுவனே, என்
　　றவர் வலி கடந்த கால
மொய்யனே!—முளரி அன்ன
　　நின்முகம் கண்டிலாதேன்,
உய்வெனே?—உலகம் மூன்றுக்கு
　　ஒருவனே! செருவலோனே!

பொ:- என் ஐயனே! அழகிற் சிறந்தவனே! என் பெறுதற்கரிய அமிழ்தம் போன்றவனே! சக்கரப் படையை யேந்திய கையை யுடைய திருமாலும் மழுப்படையை யுடைய சிவனும் என்று சொல்லப் படுகின்ற முதற்றேவர்களின் வலிமையை வெற்றி கொண்ட, எமனைப் போன்ற வலிமையை யுடையவனே! உலக மூன்றுக்கும் ஒருவனாய்ச் சிறந்தவனே! போரில் வல்லவனே! தாமரை மலர்போன்ற நினது முகத்தைக் கண்டிலாத யான் உயிர்வாழ்ந்திருப்பேனோ? (வாழேன்.)

கு:- ஆழிக்கையன் என்றது திருமாலை. மழுவன் என்றது சிவனை. அரியரர்களின் வலியைக் கடந்த நினது வலிமை குறைந்து தலையையும் இழந்த நிலை வியப்பாக வுள்ளது என்பாள், 'ஆழிக்கை

யனே மழுவனே என்றவர் வலி கடந்த கால மெய்யனே! முளரி யன்ன நின்முகங் கண்டிலாதேன் என்றாள், என்றும் மகிழ்ச்சியால் மலர்ந்தே இருக்கும் முகம் என்பது தோன்ற 'முளரியன்ன நின் முகம்' என்றாள். உயிர் நீங்கினும் அவன் முகத்தைக் கண்டேனும் அமைதி யுறலாம்; அதுவும் வாய்க்கப் பெறுதயான் உயிர்வாழ்தல் இயலாதென் பாள், 'உய்வெனே?' என்றாள். செரு-போர். சென்ற போர் தோறும் வென்றியே புனையும் அவன் திறமை நினைந்து 'செருவலானே' என விளித்தாள். (48)

**9371** தாளரிச் சதங்கை யார்ப்பத்
தவழ்கின்ற பருவந் தன்னில்
கோளரி யிரண்டு பற்றிக்
கொணர்ந்தனை கொணர்ந்து கோபம்
மூளுறப் பொருத்தி மாய
முன்றிலின் முறையி னேடி
மீளுற விளையாட் டின்னுங்
காண்பெனோ விதியி லாதேன்.

'தாள் அரிச் சதங்கை ஆர்ப்பத்
தவழ்கின்ற பருவம் தன்னில்,
கோள் அரி இரண்டு பற்றிக்
கொணர்ந்தனை; கொணர்ந்து, கோபம்
மூளுறப் பொருத்தி, மாட
முன்றிலின் முறையின் ஓடி
மீளுற விளையாட்டு இன்னும்
காண்பெனோ, விதியிலாதேன்!

பொ:- காலில் பரலோடுங் கூடிய சதங்கை ஆரவாரிக்கத் தவழ்ந்து விளையாடுகின்ற இளம்பருவத்தில் வலிமையுள்ள சிங்கங்கள் இரண்டினைப் பிடித்து மாடத்தின் முற்றத்தில் கொணர்ந்தாய்; அவ் வாறு கொணர்ந்து அவற்றிற்குக் கோபம் மூளுமாறு ஒன்றோடு ஒன் றினைப் பொருத்திவிட்டு முறையாக ஓடி மீளா நிற்க, அவ் விளையாட் டினை நல்லூழ் இல்லாத யான் இனிமேலும் காண்பேனோ?

கு:: அரி, சதங்கையின் உள்ளிடும் பரல். கோள் அரி—வலிமை யுள்ள சிங்கம். தவழ்கின்ற குழந்தைப் பருவத்தில் சிங்கத்திற்கு அஞ் சாது பற்றிப் போர் மூட்டி மகிழும் துணிவு இந்திரசித்தினுக்கு

இருந்தது என அவன் இளம்பருவ நிகழ்ச்சியை நினைந்து மண்டோதரி சொல்லிப் புலம்பியவாறு. சிங்கங்கள் இரண்டிற்கும் கோபம் மூளுறப் பொருத்தி விட்டு அவை ஒன்றோடொன்று போர் செய்யும் போது பார்த்து மகிழ்ந்து மீளுகின்ற இந்திரசித்தின் விளையாட்டையே இங்கு 'விளையாட்டு' என்று கூறினாள். (49)

**9372** அம்புலி யம்ம வாவென்
றழைத்தலு மவிர்வெண் டிங்கள்
இம்பர்வந் தானை யஞ்ச
லெனவிரு கரத்தி னேந்தி
வம்புறு மறுவைப் பற்றி
முயலென வாங்கும் வண்ணம்
எம்பெருங் களிறே காண
வேசற்றே னெழுந்தி ராயோ.

'அம்புலி! அம்ம வா!' என்று
அழைத்தலும் அவிர் வெண் திங்கள்
இம்பர் வந்தானை 'அஞ்சல்'
என இருகரத்தின் ஏந்தி
வம்பு உறும் மறுவைப் பற்றி
முயல் என வாங்கும் வண்ணம்
எம் பெருங்களிறே! காண
வேசற்றேன்; எழுந்திராயோ!

பொ:- இளம் பருவத்தில் சந்திரனைக் கண்டு நீ, 'அம்புலி! அம்ம! வா' என்று அழைத்த அளவில் (நின் கட்டளையை மறுக்க அஞ்சி) விளக்கமுடைய வெண் திங்கள் இந்த உலகத்திற்கு வந்தவனை, 'அஞ்சாதே' என்று கூறிக் கொண்டு இரண்டு கைகளாலும் ஏந்திக் கொண்டு பயமில்லாமல் பொருந்தியிருக்கும் மதிக்கண் மறுவை முயல் எனக் கருதிப் பற்றி எடுக்க முயலும் தன்மையைக் காண ஆசைப்பட்டேன். எம் பெரிய களிறே! அந்த ஆடலை மீண்டும் செய்து காட்ட எழுந்திருக்க மாட்டாயோ!

கு:- அம்புலி—சந்திரன். சந்திரனை அம்ம வா! என்றது அன்பு பற்றிவந்த மரபு வழுவமைதி. வம்பு—பயமின்மை. தான் அழைத்தவுடன் விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்த சந்திரனது அஞ்சும் நிலை கண்டு 'அஞ்சல்' என இந்திரசித்து அபயங் கொடுத்தான் என்க. சந்தி

ரவில் உள்ள களங்கம் முயலைப் போன்ற அமைப்புடையது ஆதலின் முயலெனப் பற்றி வாங்கினான் என்க. இது மயக்க உணர்வுபற்றி நிகழ்ந்தது. திங்களுள் தோன்றியிருந்த குறுமுயால், எங்கேளிதகைத் துள்வழி காட்டீரோ'' (கலி— 27—18) என் புழியும் திங்களுள் முயலிருப்பதாகக் கூறியிருத்தல் காணலாம். அவ்விளையாட்டை இன்னொரு முறை யான் காணு மாறு விளையாட, நீ எழுந்திருக்க மாட்டாயோ! என மண்டோதரி அவனது அம்புலிப் பருவம் நினைந்து புலம்பியவாறு. ஏசறல்—ஆசைப்படுதல். (50)

52ல் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது.

**9372a** பத்தெனும் திசையும் வென்று
கயிலையில் பரனை எய்தி
அத்தனை அமர்செய்து ஆற்றான்;
அவன்இடத்து உமை அன்பால்தன்
கைத்தலக் கிளிநிற் கீய,
கவர்ந்து எனக்கு அளித்து நின்ற
வித்தகக் களிறே! இன்னும்
வேண்டினேன் எழுந்தி ராயே.

**9373** இயக்கிய ரரக்கி மார்கள்
விஞ்சைய ரேழை மாதர்
முயற்கறை பயிலாத் திங்கள்
முகத்தியர் முருக நின்னை
மயக்கிய முயக்கந் தன்னான்
மலரணை யமளி மீதே
அயர்த்தினை யுறங்கு வாயோ
வமர்பொரு தலசி னாயோ.

'இயக்கியர் அரக்கி மார்கள்
விஞ்சையர், ஏழை மாதர்
முயல் கறை பயிலாத் திங்கள்
முகத்தியர், முழுதும் நின்னை
மயக்கிய முயக்கம் தன்னால்,
மலர் அணை அமளி மீதே
அயர்த்தனை உறங்குவாயோ?
அமர் பொருது அலசினாயோ?

பொ:- இளமை அழகுடைய முருகனே! முயற் களங்கம் பொருந்தாத சந்திரனைப் போன்ற முகத்தினையுடைய இயக்கியரும், அரக்கியரும் விஞ்சையர் மகளிரும் ஆகிய நின் மனைவியர் நின்னைக் காதலால் மயக்கிச் சேர்ந்து புணர்ச்சியாலாய மெலிவினுல் மலரணை பரப்பிய படுக்கை மீது சோர்ந்து உறங்குகின்றுயோ? அல்லது, போர் செய்து இளைத்தமையால் படுத்திருக்கின்றுயோ?

கு:- இதுகாறும் இந்திரசித்து காதற் புணர்ச்சியால் அயர்ந்து உறங்குவதும் போரின் அலைவால் படுத்திருப்பதும் இயல்பாகக் கொண்டவன் ஆதலின், இப்போது கிடக்கின்ற கிடக்கையும் அவற்றில் ஒன்றுதானே என்று மண்டோதரி முன்னைய நிலைமை நினைந்து புலம்பியவாறு. இந்திரசித்து அழகில் முருகனைப் போன்ற சிறப்புடையவன் ஆதலின், முருக! என அவனை அழைத்தாள். அனுமன் இலங்கையில் இந்திரசித்தினைக் கண்டபோது, 'முக்கணேக்கினன் முதன் மகனது வகைமுகனும் திக்கு நோக்கிய புயங்களும் சில கரந்தனையான்' (சுந்தர—ஊர்தேடு—140) என்று கூறியிருப்பதும் இங்கு நினையலாம். காதலால் உளதாய அயர்ச்சியும் பொருதமையா லுளதாய அலைவும் அன்றி அசைவற்றுக் கிடத்தற்குக் காரணம் வேறு இருக்க இயலாது என்று இந்திரசித்தின் இறப்பினுல் பொங்கும் துன்பத்தை மாற்ற முயன்றவாறு. (51)

**9374** முக்கணுன் முதலி னேரை
யுலகொரு மூன்றி னேடும்
புக்கபோ ரெல்லாம் வென்று
நின்றவென் புதல்வன் போலாம்
மக்களி லொருவன் கொல்ல
மாள்பவன் மான மேரு
உக்கிட வணுவொன் ருேடி
யுதைத்தது போலு மம்மா.

'முக்கணுன் முதலினேரை,
உலகு ஒரு மூன்றினேடும்,
புக்க போர் எல்லாம் வென்று
நின்ற என் புதல்வன் போலாம்,
மக்களில் ஒருவன் கொல்ல,
மாள்பவன்? மான மேரு
உக்கிட, அணு ஒன்றுஓடி
உதைத்தது போலும் அம்மா!

பொ:- புகுந்த போரில் எல்லாம் ஒரு மூன்று உலகத்தோடும் மூன்று கண்களையுடைய சிவன் முதலிய தேவர்களை வென்று நின்ற என் மகனை, மக்களில் ஒருவனாகிய இலக்குவன் கொல்ல இறப்பவன்? (இந் நிகழ்ச்சி,) 'பெருமையை யுடைய மேருமலை சிதறும்படி ஓர் அணு ஓடிச் சென்று' உதைத்தது என்று சொல்வது போல உளது; என்னே வியப்பு!

கு:- முத்தேவரையும் மூவுலகத்தையும் வென்ற இந்திரசித்து ஒரு மனிதனால் கொல்லப்பட்டான் என்பது, ஒரு சிறு அணு பெரிய மேரு மலையைச் சிதறுண்ணும்படி உதைத்தது என்பது போன்று நம்பத்தக்க தாக இல்லை என்றபடி. தோல்வி என்பதை என்றும் அறியாதவன் என்பாள், புக்க போர்தோறும் வென்று நின்றவன் என்றாள். "அவ னேறிய தெய்வ மாத்தேர்—பொன் சென்றறியா வுவணத்தனிப் புள்ளி னுக்கும், மின் சென்றறியா மழுவாளன் விடைக்கும் மேனாள், பின் சென்ற தல்லாற் பெருஞ்சிறப் புற்றபோதும், முன் சென்றறியாதது மூன்றுலகத்தினுள்ளும்" (நாகபாசப்-20) என இந்திரசித்தின் தேர் சிறப்பிக்கப் பெற்றிருத்தல் இங்கு நினைத்தற்குரியது. (52)

63 என்ற எண்ணுள்ள எட்டுச்சுவடியில் பின் வரும் மிகைப்பாடல் உளது.

9374a மஞ்சன மேனி வள்ளல்
 வளருநாள் மன்னர் தோள்சேர்
நஞ்சன விழியா என்றி
 நகைமணிப் புதல்வர் நல்லோர்
செஞ்சிலை மலரால் கோலித்
 திரிந்தவா வென்னிற் செல்லும்
வெஞ்சம ரின்னுங் காண
 வல்லனோ விதியி லாதேன்.

9375 பஞ்செரி யுற்ற தென்ன
 வரக்கர்தம் பரவை யெல்லாம்
வெஞ்சின மனிசர் கொல்ல
 விளிந்ததே மீண்ட தில்லை
அஞ்சினே னஞ்சி னேனிச்
 சீதையென் றமிழ்தாற் செய்த
நஞ்சினா லிலங்கை வேந்த
 னாளையித் தகைய னன்றே.

'பஞ்சு எரி, உற்றது என்ன
அரக்கர்தம் பரவை எல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல,
விளிந்ததே மீண்டது இல்லை;
அஞ்சினேன் அஞ்சினேன்; அச்
சீதை என்று அமிழ்தால் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன்
நாளை இத்தகையன் அன்றோ?'

பொ:- பஞ்சுப் பொதியில் நெருப்புப் பொருந்தினாற்போல அரக்கர்தம் படைக்கடல் எல்லாம் கொடிய கோபத்தையுடைய மனிதர் கொல்ல இறந்ததே யன்றி உயிர் மீண்டது இல்லை; அந்தச் சீதை என்ற பெயரையுடைய அமிழ்தினால் செய்த நஞ்சினால் இலங்கைக்கு அரசனாகிய இராவணன் நாளைக்கு இத்தகையன் (இறந்துபட்டவன், அன்றோ? என்று அஞ்சினேன் அஞ்சினேன்!

கு:- சிறிய நெருப்புப் பொறியால் பெரிய பஞ்சுப் பொதி எரிந்தழிதல் போலச் சிறிய மனிதரால் பெரிய அரக்கர் படைக்கடல் அழிந்தது அழிந்ததே; பின் உயிர் மீண்டதில்லை. வானரப் படை இந்திரசித்தினால் இறந்து பின்பு உயிர்பெற்றது போல் அரக்கர் மீண்டிலர் என்பது கருத்து. இராவணனுக்கு வாழ்வளிக்கும் அமிழ்து போல் தோன்றி அவன் உயிரை வாங்கும் தன்மையில் நஞ்சுபோல்பவள் சீதை ஆதலின் 'அமிழ்தாற் செய்த நஞ்சினால்' என்றாள். இன்று இந்திரசித்து இறந்தான்; இராவணனும் நாளைக்கு இறப்பான் என்று முன்கூட்டியே மண்டோதரி உய்த்துணர்ச்சியால் முடிவு செய்து விட்டாள். இராவணன் இறப்புக்குச் சீதை மேல் வைத்த காதலே என்பது புலப்படுத்தியவாறு. "சனகி யென்னும் பெரு நஞ்சு கண்ணாலே நோக்கவே போக்கியதே யுயிர் நீயும் களப்பட்டாயே' (இராவணன் வதை-220) என வீடணன் பின் கூறுவதும் காணலாம். (53)

## இராவணன் சீதையை வாளால் வெட்ட விரைதல்

**9377** என்றழைத் திரங்கி யேங்க
வித்துயர் நமர்கட் கெல்லாம்
பொன்றழைத் தனைய வல்குற்
சீதையாற் புகுந்த தென்ன

வன்றழைக் கல்லி னெஞ்சின்
வஞ்சகத் தாளை வாளால்
கொன்றிழைத் திடுவே னென்னு
வோடின னரக்கர் கோமான்.

என்று அழைத்து இரங்கி
ஏங்க, 'இத்துயர் நமர்கட்கு எல்லாம்
பொன்தழைத்தனைய அல்குல்
சீதையால் புகுந்தது' என்ன
'வன்தழைக் கல்லின் நெஞ்சின்
வஞ்சகத்தாளை, வாளால்
கொன்று இழைத்திடுவென்' என்னு,
ஓடினன், அரக்கர் கோமான்.

பொ:- என்று, மண்டோதரி அழைத்து இரங்கி ஏங்கா நிற்க, (அதைக் கேட்டிருந்த) அரக்கர் வேந்தனுகிய இராவணன் நம்மவர்க்கு எல்லாம் இந்தத் துயரம் பொன்தழைத்தாற் போன்ற அல்குலையுடைய சீதையால் வந்தது என்று சினந்து, வன்மை தழைத்த கல்போன்ற நெஞ்சினையுடைய வஞ்சகத்தாளை வாளால் கொன்று பகைவர்க்குத் தீங்கு புரிகின்றேன் என்று (சீதை யருகில்) ஓடினுன்.

கு:- மண்டோதரியின் புலம்பல் கேட்ட இராவணன் சீதையால் இத்துயரம் எல்லாம் வந்தது என நினைந்து சினந்து 'அவளை வெட்டிப் போடுவேன்' என ஓடலானுன். சீதை மேல் தான் ஆசை கொண்டமையால் இத்துயரம் வந்தது எனத் தன்னையே தண்டிக்க வேண்டிய இராவணன்,சீதைமேல் குற்றமிருப்பதாகக் கற்பித்து அவளை வெட்டித் துயர்தீர எண்ணியது பொருந்தாச் செயலாகும். "ஆசைதான் அச் சீதைபால் விடுதியாயின் அனையவர் சீற்றம் தீர்வர்; போதலும் புரிவர்; செய்த தீமையும் பொறுப்பர்" (இந்திரசித்து வதைப்;6) என இந்திர சித்து முன்பு உண்மையுணர்ந்து கூறியுள்ளது காணலாம். இராவணன் விருப்பிற்கு இசையாத கற்புத் திண்மையுடைய சீதையின் நெஞ்சினைக் கல்லின் நெஞ்சு என்றும் வஞ்சகமற்று இராமனையே நினையும் நேர்மை யுள்ளத்தை யுடையவளை வஞ்சகத்தாள் என்றும் கூறியது தன் தீமை அவள்பேல் ஏற்றிக் கூறிய ஏலாச் சொற்களேயாம். கொடியவர் களுக்கு நல்லோர் செயலெல்லாம் கொடுமையாகவே தோன்றுதல் இயல்பு என்பதை இதனுலறிவித்தவாறு. (54)

## இராவணனை மகோதரன் தடுத்தல்

9377 ஓடுகின் றானை நோக்கி
யுயர்பெரும் பழியை யுச்சிச்
சூடுகின் றானென் றஞ்சி
மகோதரன் துணிந்த நெஞ்சன்
மாடுசென் றடியின் வீழ்ந்து
வணங்கிநின் புகழ்க்கு மன்னா
கெடுவந் தடுத்த தென்னா
வினையன கிளத்த லுற்றான்.

ஓடுகின்றானை நோக்கி
'உயர்பெரும் பழியை உச்சிச்
சூடுகின்றான்' என்று அஞ்சி,
மகோதரன், துணிந்த நெஞ்சன்,
மாடு சென்று, அடியின் வீழ்ந்து,
வணங்கி, 'நின் புகழ்க்கு மன்னா!
கேடு வந்து அடுத்தது' என்னா,
இனையன கிளத்தலுற்றான்.

பொ:- அவ்வாறு ஓடுகின்ற இராவணனைப் பார்த்து உயர்ந்த பெரிய பழியைத் தலையில் சூடிக்கொள்கின்றான் என்று அஞ்சி மகோதரன் துணிந்த நெஞ்சனாய் அவன் பக்கத்தில் சென்று அவன் அடியில் வீழ்ந்து வணங்கி, 'மன்னா! நின்னுடைய புகழ்க்குக் கேடு வந்து விட்டது' என்று முன் சொல்லி, இத்தன்மையான சொற்களைப் பின் சொல்லலானான்.

கு:- இராவணன் எண்ணத்திற்கு மாறாகப் பேசுதற்கு எவரும் அஞ்சுவர் ஆகலின், மகோதரன் அது செய்யத் துணிந்தது, அவன் துணிந்த நெஞ்சத்தால்தான் என்பார், 'மகோதரன் துணிந்த நெஞ்சன்' என்றார். எல்லாப் பழியினும் கற்புடைப் பெண்டிரைக் கொல்லும் பழி மிகப் பெரியதாகலின் 'உயர் பெரும் பழியை' என்றும் அப்பழியை உலகவர் அறிய மேற்கொள்ளப் போகின்றான் என்பான், 'உச்சிச் சூடுகின்றான்' என்றும் கூறினான். தலையில் சூடும் மாலைபோல எல்லோராலும் நன்கறியப்படும் என்ற கருத்தால் 'பழியை யுச்சிச் சூடுகின்றான்' என்றார். மாடு—பக்கம். இதுகாறும் பெண் கொலை புரியாது வாழ்ந்த வீரப் புகழ்ச்சி யெல்லாம் இச்செயலால் பயனற்ற தாகிவிடும் என்றவாறு. அவன் கிளந்தன வருஞ் செய்யுட்களால் அறியலாம். (55)

## மகோதரன் சொன்னது 9378-9382

**9378** நீருள தனையுஞ் சூழ்ந்த
நெருப்புள தனையு நீண்ட
பாருள தனையும் வானப்
பரப்புள தனையுங் காலின்
பேருள தனையும் பேராப்
பெரும்பழி பிடித்தி போலாம்
போருள தனையும் வென்று
புகழுள தனையு முள்ளாய்.

'நீர் உளதனையும், சூழ்ந்த
நெருப்புள தனையும், நீண்ட
பார் உளதனையும், வானப்
பரப்பு உளதனையும், காலின்
பேர் உளதனையும், பேராப்
பெரும்பழி பிடித்தி போலாம்—
போர் உளதனையும் வென்று,
புகழ் உளதனையும் உள்ளாய்.

பொ:- போர்கள் அத்தனையும் வென்று புகழ் அத்தனையும் பெற்றுள்ள இராவண! ஐம்பெரும் பூதங்கள் இருக்கின்ற வரையும் நீங்காத பெரும்பழியைப் பெறுகின்றாய் போலும்!

கு:- உலகம் உள்ளளவும் நீங்காத பழியைப் பெண் கொலை தரும் என்று மகோதரன் தடுத்தவாறு. செய்யுளாதலின் ஐம்பூதங்கள் முறையில் கூறப்படவில்லை. தோற்ற முறையில் கூறின், வானும், காற்றும், நெருப்பும், நீரும், பாரும் எனக் கூறல் வேண்டும். ஒடுக்க முறையில் பார் முதலாக எண்ணுதல் வேண்டும். சூழ்ந்த நீர், நீண்ட நெருப்பு என மாறிக் கூட்டுக. வீரப் போர் செய்து பெரும் புகழ் பெற்ற இராவணன், வீரத்திற்கு இழுக்குத் தரும் பெண் கொலை செய்து பெரும்பழி பெறுதல் பொருந்துவதன்று என்றவாறு. (56)

**9379** தெள்ளருங் கால கேயர்
சிரத்தொடுந் திசைக்கை யானை
வெள்ளிய மருப்புச் சிந்த
வீசிய விசயத் தோள்வாள்

வள்ளிய மருங்கிற் செவ்வாய்
மாதர்மேல் வைத்த போது
கொள்ளுமே யாவி தானே
நாணத்தாற் குறைவ தல்லால்.

'தெள்ளருங் கால கேயர்
சிரத்தொடும், திசைக்கை யானை
வெள்ளிய மருப்புச் சிந்த
வீசிய விசயத்து ஒள்வாள்,
வள்ளி அம்மருங்குல், செவ்வாய்,
மாதர்மேல் வைத்தபோது
கொள்ளுமே ஆவி தானே,
நாணத்தால் குறைவது அல்லால்?

பொ:- (இவர்கள் வலிமை எவ்வளவு என்று) தெளிதற்கு அரிய பெருவலி பெற்ற காலகேயர் சிரத்தோடு திசையானைகளின் வெள்ளிய கொம்பு சிதற வீசிய நின் வெற்றியையுடைய ஒள்ளிய வாள், கொடி போன்ற இடையினையும் சிவந்த வாயினையும் உடைய மாதர்மேல்—வைத்தபோது தானே நாணத்தால் குன்றுவதல்லால் அவள் உயிரைக் கொள்ளுமோ? (கொள்ளாது.)

கு:- வீரர்மேல் வீசும் வாளைப் பேதைப் பெண்ணின்மேல் வீசினல் வாள்தானே நாணிக் குன்றுவதே யல்லாது பெண்ணைக் கொல்லாது, பெண் கொலை முயன்றனை யென்ற பழியே விஞ்சும் என்றபடி. எனவே அம் முயற்சியை விடுக என்றவாறு. காலகேயர் என்பார், காசிபருக்குக் கலை என்பவளிடம் பிறந்த அசுரர் ஆவர்; இவர் பொன்னிறமுடையவர், வலிமை மிக்கவர். இந்திரனை வென்றவர்கள். கடலில் இருந்த இவர்களை இராவணன் வருணனை வெல்லச் செல்லுங்கால் வென்றான் என்பது உத்தரகாண்டத்தில் உள்ளது. (57)

9380 மங்கையைக் குலத்து ளாளைத்
தவத்தியை முனிந்து வாளால்
சங்கையொன் றின்றிக் கொன்றான்
குலத்துக்கே தக்கா னென்று
கங்கையஞ் சென்னி யானுங்
கண்ணனுங் கமலத் தோனும்
செங்கையுங் கொட்டி யுன்னைச்
சிரிப்பராற் சிறிய னென்ன.

'மங்கையை குலத்துளாளை,
தவத்தியை, முனிந்து, வாளால்
சங்கை ஒன்று இன்றித் கொன்றால்.
'குலத்துக்கே தக்கான்', என்று
கங்கை அம் சென்னியானும்
கண்ணனும் கமலத் தோனும்,
செங்கையும் கொட்டி, உன்னைச்
சிரிப்பரால் 'சிறியன்' என்று.

பொ:- பெண்ணினத்தவளை,—உயர்ந்த குலத்தில் பிறந்தவளை,—தவ ஒழுக்கமுடையவளை—வெகுண்டு ஐயம் சிறிதுமின்றி வாளால் கொன்றால், கங்கையைத் தரித்த தலையை யுடைய சிவனும் திருமாலும், பிரமனும், 'அரக்கர் குலத்துக்குத் தக்கவனே' என்றும் சிவந்த கைகளையும் கொட்டி உன்னை எள்ளிச் சிரிப்பர்.

கு:- மங்கை என்றது, பருவத்தைக் குறிக்காமல் பெண்ணினத்தைக் குறித்து நின்றது. சீதையைக் கொல்வதால் மூன்று வகையான பெரும் பாவங்கள் வந்து சேரும் என்பார், மங்கையை, குலத்துளாளை, தவத்தியை என மூன்றாகப் பிரித்துக் கூறினர். 'பெண் கொலை புரிந்த பாவம், உயர்குலத்துள்ளவளைக் கொன்ற பாவம், தவவொழுக்க முடையவளைக் கொன்ற பாவம் என பாவம் மூவகையவாதல் காணலாம். குலப் பிறப்பும் தவவொழுக்கும் இல்லாதவளைக் கொன்றாலும் பெண் கொலைப் பாவம் வரும்; அதனோடு குலப்பிறப்பும் தவவொழுக்கமும் உடையவளைக் கொல்வது மிகப்பெரும் பாவத்திற்குக் காரணம் ஆகும் என்றவாறு. குலத்துக்கே தக்கான் என்பதில் குலம் என்றது அரக்கர் குலத்தை. பாவத்தைச் செய்தலை அறமாக மதிக்கின்றவர் அரக்கர் ஆகலின் இராவணன் சீதையைக் கொன்றால் அவன் அரக்கர் குலத்துக்கேற்ற செயலையே செய்தான்; சிறியன்; என்று முத்தேவரும் எள்ளிக் கை கொட்டிச் சிரிப்பர் என்றவாறு. முத்தேவரின் எள்ளலை எண்ணியேனும் சீதையைக் கொல்லக் கூடாது என்றவாறு. (58)

9381 நிலத்தியல் பன்று வானி
னெறியன்று நீதி யன்று
தலத்தியல் பன்று மேலோர்
தருமமே லதுவு மன்று

புலத்தியன் மரபின் வந்து
புண்ணிய விரதம் பூண்டாய்
வலத்தியல் பன்று மாயாப்
பழிகொள மறுகு வாயோ.

'நிலத்து இயல்பு அன்று; வானின்
நெறி அன்று; நீதி அன்று;
தலத்து இயல்பு அன்று; மேலோர்
தருமமேல் அதுவும் அன்று;
புலத்தியன் மரபின் வந்து,
புண்ணிய விரதம் பூண்டாய்!
வலத்து இபல்பு அன்று; மாயாப்
பழிகொள மறுகு வாயோ?

பொ:- புலத்தியன் என்பவனுடைய மரபில் பிறந்து புண்ணிய விரதங்களை மேற் கொண்டவனே! பெண்ணைக் கொலைபுரிதல் என்பது மண்ணுலக இயல்பன்று. வானுலகத்தோர் நெறியும் அன்று; நீதியும் அன்று; பாதலத்தில் உள்ள நரகர் இயல்பும் அன்று; சத்தியலோகம் முதலிய மேலுலகத் துள்ளோர் தருமமும் அன்று; வலிமையின் இயல்பும் அன்று (இங்ஙனமாகவும் அப் பெண் கொலையைச் செய்து) அழியாப் பழி உன்னை ஆட்கொள்ளக் கலங்கி நிற்பாயோ?

கு:- புலத்தியன் என்பவன் பிரமனுக்கு மகன். புலத்தியன் மகன் விச்சிரவசு; விச்சிரவசுவின் மகன் இராவணன் ஆதலின் 'புலத்தியன் மரபின் வந்து' என்றார். இராவணன் புண்ணிய விரதம் பூண்டது, "அற்ற கரத்தோ டுன்றலை நீயே யனன் முற்றிப் பற்றினை உய்த்தாய் பற்பல காலம் பசிகூர, உற்றுயிருள்ளே தேய உலந்தாய் பினையன்றோ பெற்றனை செல்வம்'' (மாரீசன்வதைப்—178) என்ற மாரிசன் கூற்றால் உணரலாம். நிலமும் வானும் முன்கூறினமையின் தவம் என்றது எஞ்சி நின்ற பாதலத்தை என்பது உய்த்துணரலாம்; முதற்குறை. மேலோர் என்றது சத்திய உலகம் முதலிய மேலுகத்து உள்ளோரை. வீர மரபு அன்று என்பான், வலத்தியல்பு அன்று என்றான். மறுகுதல்—கலங்குதல். (59)

9382 இன்றுநீ யிவளை வாளா
லெறிந்துபோ யிராமன் றன்னை
வென்றுமீண் டிலங்கை மூதா
ரெய்தினை வெதும்பு வாயோ

பொன்றினள் சீதை யென்றே
புரவல புதல்வன் றன்னைக்
கொன்றவர் தம்மைக் கொல்லக்
கூசினை போலும் என்றான்.

'இன்று நீ இவளை வாளால்
எறிந்து போய், இராமன் தன்னை
வென்று மீண்டு, இலங்கை மூதூர்
எய்தினை வெதும்புவாயே
பொன்றினள் சீதை என்றே?
'புரவல! புதல்வன் தன்னைக்
கொன்றவர் தம்மைக் கொல்லக்
கூசினை போலும்' என்றான்.

பொ:- இன்றைக்கு நீ இவளை வாளால் வெட்டி விட்டுச் சென்று இராமன் தன்னை வென்று விட்டு, இலங்கையாகிய பழைய ஊரை அடைந்து 'சீதை இறந்து விட்டாளே' என்று மனம் வெதும்புவாயோ? 'அரசே! புதல்வனைக் கொன்றவர் தம்மைக்கொல்லக் கூசினாய் போலும்' என்று கூறினான்.

கு:- இச் சீதையை வெட்டி விட்டு இராமனை வென்றாலும் பின்பு சீதையை நினைந்து வெதும்ப வேண்டி யிருக்கும் என்பதை நினைவுறுத்தியதோடு, புதல்வனைக் கொன்றவர் தம்மைக் கொல்வதே வீரம் என்று கூறி வீரத்தில் எழுச்சியுண்டாக்கியவாறு. 'பொன்றினள் சீதை யென்றே வெதும்பு வாயோ' என மாறிக் கூட்டுக. கூசுதல்—மனம் பின் வாங்குதல். (60)

மகோதரன் சொல்லைக் கேட்டு இராவணன்
வாளினைத் தரையிலிட்டு வஞ்சினங் கூறுதல்

9383 என்னலு மெடுத்த கூர்வா
ளிரு நிலத் திட்டு மீண்டு
மன்னவன் மைந்தன் றன்னை
மாற்றலர் வலியிற் கொண்ட

சின்னமு மவர்க டங்கள்
சிரமுங்கொண் டன்றிச் சேரேன்
தொன்னெறித் தயிலத் தோணி
வளர்த்துமி னென்னச் சொன்னுன்

என்னலும் எடுத்த கூர்வாள்
இருநிலத்து இட்டு, மீண்டு
மன்னவன் 'மைந்தன் தன்னை
மாற்றலர் வலியிற் கொண்ட
சின்னமும், அவர்கள் தங்கள்
சிரமும் கொண்டு அன்றிச் சேரேன்;
தொல் நெறித் தயிலத் தோணி
வளர்த்துமின்' என்னச் சொன்னுன்.

பொ:- என்று மகோதரன் கூறிய அளவில் மன்னவனுகிய இராவணன், தான் சீதையை வெட்ட எடுத்த கூரிய வாளைப் பெரிய நிலத்தின் மேல் போட்டு விட்டு, தான் செய்யக் கருதியதினின்றும் நீங்கி 'மைந்தன் இந்திரசித்தினைப் பகைவர்கள் வலிமையால் கொன்று கொய்து வெற்றிக்குச் சின்னமாகக் கொண்டு சென்ற தலையையும் அப் பகைவர் தங்கள் தலையையும் கொண்டல்லது, இங்கு வரமாட்டேன்; இந்திரசித்தின் உடம்பைப் பழைய முறைப்படி எண்ணெய்த் தாழியில் இட்டுவையுங்கள்' என்று சொன்னுன்.

கு:- மன்னவன், வாள் நிலத்திட்டு, மீண்டு, மாற்றலர் வழியிற் கொண்ட சென்னியும் அவர்கள் சிரமும் கொண்டு அன்றிச் சேரேன் என்னச் சொன்னுன் என மாற்றி இயைக்க. மீண்டு என்றது தான் செய்ய நினைத்த கொலைத் தொழிலினின்றும் மீண்டு என்றவாறு. சின்னம் என்றது இலக்குவன் வெற்றிக்குச் சின்னமாகக் கொண்டு சென்ற இந்திரசித்தின் தலையை. அது அங்கதனுல் எடுத்துச் செல்லப் பட்டு இராமனது திருவடியில் காணிக்கையாக வைத்தமை முன்ன ரறிந்தது. தலையைக் கொண்டு வரும் வரையில் உடம்பைத் தயிலத் தோணியில் இட்டு வைக்க எனக் கட்டளையிட்டவாறு. இந்திரசித்தின் தலையைக் கொணரச் சென்று அப் பகைவர் தலையையும் கொய்து வருவேன் என வஞ்சினங் கூறியவாறு. வளர்த்துதல்—கிடத்துதல். (61)

# 29. படைக் காட்சிப் படலம்

## முன்னுரை

தன் ஆணையை யேற்று வந்த படைகளின் வரவை இராவணன், தூதுவர்களால் அறிந்து, அப் படையைக் காண்பதைத் தெரிவிக்கும் பகுதியாகலின் இது படைக் காட்சிப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. இப்படலத்தின் பெயர் சில ஏடுகளில் 'மூலபல வரவுகாண் படலம்' எனவும், 'மூலபலத் தானைகாண் படலம்' எனவும், 'மூலத்தானைகாண் படலம்' எனவும், 'மூலபல வரத்துப் படலம்' எனவும், 'படைக் காட்டுறு படலம்' எனவும், 'படை காட்டுப் படலம்' எனவும், 'படை வரவுப் படலம்' எனவும் 'படை வரலாற்றுப் படலம்' எனவும், வெவ்வேறு பெயருடன் காணப்படுகின்றது.

உலகில் பல இடங்களிலும் உள்ள அரக்கர் படைகளை யெல்லாம் வருமாறு அழைத்த இராவணனது ஆணையைத் தூதுவர் ஆங்காங்குச் சென்று அறிவிக்க, அந்த அரக்கர் சேனை எல்லாம் தந்தம் தலைவர்களுடன் திரண்டு வருகின்றன. அச் சேனையின் வரவைத் தூதுவர் இராவணனுக்கு அறிவிக்கின்றனர். இராவணன் அது கேட்டு மகிழ்ந்து, வந்த அரக்கர் சேனையைக் காண விழைந்து கோபுரத்தின் மேல் ஏறிப் பார்க்கின்றான். தூதுவர்கள் அப்படைகளின் பிறப்பிடங்களையும் மற்றைச் சிறப்பியல்புகளையும் இராவணனுக்குக் கூறிக் காட்டுகின்றனர். பின்பு இராவணன் 'இச் சேனையின் முழு அளவு என்னை?' என்று வினவுகின்றான். 'இதன் அளவு ஓராயிர வெள்ளம் எனச் சில பித்தர் சொல்லுவர்; இதன் பெருமைக்கு அந்த அளவு மிகச் சிறியது' என்கின்றனர். அது கேட்டு மகிழ்ந்த இராவணன் இந்தப் படைகளின் தலைவர்களை யெல்லாம் அழைத்து வருமாறு பணிக்கின்றான். அவன் பணித்தவண்ணம் வந்து வணங்கிய தானைத் தலைவர்களை நாம் வினவியறிந்தபின், அத் தலைவர்கள் தம்மை வரவழைத்த காரணம் வினவுகின்றனர். இராவணன் சீதையின் காதலால் விளைந்தவற்றையெல்லாம் விளக்குகின்றான், அது கேட்ட அத் தலைவர்கள், 'சிறு மனிதர்மீதும் குரங்குகள்மீதும் ஏவவோ எம்மை அழைத்தீர்கள்?' என்று வினவி எண்ணிச் சிரிக்கின்றனர். அப்போது புட்கரத் தீவின் மன்னனாகிய வன்னி என்பவன் அவர்களைக் கையமைத்துவிட்டு, இராவணனை நோக்கி, 'அம்மானிடர் யார்? அவர் வலி எத்தகையது?' என்று வினவுகின்றான். மாலியவான் எழுந்து இராம இலக்குவரின் பெருமைகளையும் வானரங்களின் வலிமையையும்

விரித்துக் கூறிச் சீதையை விட்டுவிடுதலே விரும்பத்தக்கது என்ற தன் கருத்தைக் குறிப்பால் புலப்படுத்துகின்றான். மாலியவான் சொல்லைக் கேட்ட வன்னி, 'சீதையை விடுவதை முன்னமே செய்திருக்க வேண்டும். இந்திரசித்து இறந்துபட்ட பின் செய்தல் தக்கதன்று. இப்போது விடுவதனால் இறந்த வீரர்கள் வரமாட்டார்கள்; இறந்தவர் இறந்தவர்களே. இனி, செய்யத்தக்கது பகைவரை அழிப்பதேயாகும்' என்று சொல்கின்றான். 'பகை வென்று வருவோம்' என்று வஞ்சினம் கூறி, அரக்கர் எல்லோரும் எழுகின்றனர்; என்பது இப்படலத்தில் கூறும் பொருள்.

### கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

வான்மீகத்தில் சுபாரிசுவன் சொல்லைக் கேட்டுச் சினம் தணிந்து, சீதைமேற் செல்லாது அரண்மனைக்குள் புகுந்த இராவணன் மீண்டும் வேத்தவைக்கு வந்து படைத் தலைவர்களை அழைத்து,'கடிய ஊர்திகளையும் கொடிய ஆயுதங்களையும் கொண்டு இராமனைத் தாக்குங்கள், அவனைக் கொல்ல இயலவில்லை என்றால் நாளைக்கு நான் வந்து அவனை அழிக்கின்றேன்' என்று சொல்லிச் சேனைத் தலைவர் எல்லோரையும் போர்க்கு அனுப்பியதாகவே உள்ளது. இப் பகுதிக்கே 'மூலபல யுத்தம்' என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது.

அப்பகுதியில், உலகில் பல்வேறிடங்களிலும் உள்ள அரக்கர் சேனைகள் வந்து குவிந்தன என்றோ, அச் சேனைகள் இந்த இந்த இடத்திலிருந்து வந்தன; இத்தகையன, என்று தூதுவர் இராவணனுக்குக் காட்டிக் கூறியதாகவோ இல்லை. அச் சேனையின் அளவு ஆயிரம் வெள்ளம் என்ற கணக்கும் அங்கு இல்லை. புட்பகத் தீவின் மன்னன் வன்னி என்பவன் பேரும் அங்கு இல்லை. படைக் காட்சிப் படலம் கம்பரின் புதிய படைப்பேயாகும்.

நாடகக் காப்பிய நடைக்கேற்பச் சிலவற்றைப் புதியனவாகப் படைத்துக் கூறுதல் வழிநூலாசிரியருக்கு இயல்பேயாகும். இந்திரசித்தினை இழந்து மிகவருந்தும் இராவணனுள்ளம் எழுச்சிகொள்ளும் வண்ணம் செய்தற்கு இப் படைக் காட்சிப் படலம் உதவவேண்டும் என்ற கருத்தால் கம்பர் இதைப் படைத்தார் என்றே கொள்ள வேண்டும்.

இப்படலத்தில் பல தீவிலிருந்து வந்துள்ள அரக்கர்களைத் தூதுவர் இராவணனுக்கு அறிமுகம் செய்யுமுறை வியப்பூட்டும் வகையில் விரிவாக அமைந்துள்ளது. அவ்வரக்கரின் சிறப்பு இயல்புகளும் உயர்வு நவிற்சியாகவே விளங்குகின்றன. அவர்கள் பிறப்பு வரலாறுகள் யாவும் புதுமையாகத் தோன்றுகின்றன.

"பார் அணைத்த வெம்பன்றியை அன்பினால் பார்த்த
காரணத்தினின் ஆதியில் பயந்த பைங்கழலோர்'

என்று சிலரையும்,

'காலன் மார்பினில் சிவன் கழல்பட அன்று கான்ற
வேலையே அன்ன குருதியில் தோன்றிய வீரர்'

என்று சிலரையும்,

'வடவைத் தீயினில் வாசுகி கான்ற மாகடுவை
இட அத்தீயிடை எழுந்தவர்'

என்று சிலரையும் குறிப்பிட்டிருத்தல் காணலாம்.

தன் கட்டளைப்படி வந்த படைத்தலைவர்க்கு இராவணன் தனக்கு நேர்ந்த துன்பங்களைப் பற்றிக் கூறியபோது, அப்படைத் தலைவர், இராம இலக்குவரின் திறமையையும் வானரங்களின் வலிமையையும் ஒரு சிறிதும் அறியாதவர்கள் ஆதலின்,

'கும்ப கன்னனோடு இந்திரசித்தையும் குலத்தின்
வெம்பு வெஞ்சினத்து அரக்கர்தம் குழுவையும் வென்றார்
அம்பினால் சிறு மனிதரே? நன்று நம் ஆற்றல்!
நம்பு சேனையும் வானரமே?'

என்று வினவி எள்ளிச் சிரிக்கின்ற பகுதி சுவை மிக்கதாய் அவர்கள் அறியாமையை விளக்குகின்றது. அரிய பெரிய செயல்களைச் செய்தற்குரிய தம்மை மிகமிக எளியவர்மேல் போர்க்கு அனுப்பவோ அழைத்தது? என்று அவர்கள் சினக்குறிப்புடன் கூறும் சொற்கள் அவர்கள் அறியாமையையும் செருக்கையும் மேலும் விளக்கி நகைச் சுவையைத் தோற்றுவிக்கின்றன.

"உலகைச் சேடன்தன் உச்சிநின்று எடுக்க அன்று, ஓர்ஏழ்
மலையை வேரொடும் வாங்க அன்று; அங்கையால் வாரி
அலைகொள் வேலையைக் குடிக்க அன்று; அழைத்தது மலரோடு
இலைகள் கோதும் அக்குரங்கின்மேல் ஏவக் கொல் எம்மை?..

என்பது அவர்கள் வினா. இதனால் இவ்வரக்கர்கள், இவ்வுலகத்தை ஆதிசேடனது உச்சியிலிருந்து எடுக்க வல்லவர்கள், ஏழு குல மலைகளை வேரோடும் பறிக்கவல்லவர்கள்; எழுகடல் நீரைக் கையால் வாரி முழுமையும் குடிக்க வல்லவர்கள், என்பவற்றைத் தாமே கூறிக் கொள்ளும் சிறுமையர் என்பது புலனாகின்றது. சீதையை வஞ்சித்துக்

கவர வந்த இராவணனும், துறவியின் வேடத்தில் நின்று கொண்டு இவ்வாறே,

"மேருவைப் பறிக்க வேண்டின் விண்ணினை இடிக்க வேண்டின்
நீரினைக் கலக்க வேண்டின் நெருப்பினை அவிக்க வேண்டின்
பாரினை எடுக்க வேண்டின் பலவினை சிலசொல் ஏழாய்!
யார் எனக் கருதிச் சொன்னாய் இராவணற்கு அரிது என்?"

என்று கூறியுள்ளது காணலாம். இவ்விரு திறத்தாரின் தம் மேம்பாட்டுரையைக் காணும்போது ஆண்டானாகிய இராவணனுக்கு அடுத்த செயல் அவன் சொல்வழி நிற்கும் அரக்க வீரர்க்கும் உரியதாயது இயல்புதானே! என்று எண்ணத்தான் நேர்கின்றது.

இவ்வளவு வீர மொழிகளைப் பேசிய படைத்தலைவர்களின் நெஞ்சில் அச்சம் விஞ்சுமாறு மாலியவான் இராமனுடைய ஆற்றலை விவரிக்கு முறை மிகச் சிறப்பாக அமைந்துளது. இராமனது தோள்வலியைச் சுருங்கிய முறையில் நிரல்படச் சொல்லும் மாலியவானது சொல்லை நோக்கும்போது, 'இது இராமாயணச் சுருக்கமோ?' என்று எண்ணத் தோன்றுகின்றது.

## 29. படைக் காட்சிப் படலம்

### தூதுவர், அரக்கர் சேனை வந்து நிறைந்ததைச் சொல்லுதல்

9384 அத்தொழி லவருஞ் செய்தா
ராயிடை யனைத்துத் திக்கும்
பொத்திய நிருதர் தானை
கொணரிய போய தூதர்
ஒத்தன ரணுகி வந்து
வணங்கின ரிலங்கை யுன்னூர்
பத்திய னமைந்த தானைக்
கிடமிலை பணியெ னென்றார்.

அத்தொழில் அவரும் செய்தார்;
ஆயிடை, அனைத்துத் திக்கும்
பொத்திய நிருதர் தானை
கொணரிய போய தூதர்,
ஒத்தனர் அணுகி வந்து
வணங்கினர், 'இலங்கை உன் ஊர்ப்
பத்தியின் அடைந்த தானைக்கு
இடம் இலை; பணி என்? என்றார்.

பொ:- (இந்திரசித்தின் உடலைத் தயிலத் தோணியில் இடும்) அத் தொழிலை அந்த ஏவலாளரும் செய்தார்கள்: அப்போது எல்லாத் திசைகளிலும் நிரம்பியுள்ள அரக்கர் சேனையைக் கொண்டுவரச் சென்ற தூதர்கள் ஒரு சேர நெருங்கி வந்து வணங்கினராய், '(அரசே!) இலங்கையாகிய உனது ஊரில் வரிசையாக வந்து அமைந்த சேனைக்கு இடம் இல்லை; இனி, யாம் செய்யத்தக்க பணி என்னை?' என்று வினவினார்கள்.

கு:- பொத்துதல்—நிறைதல். கொணரிய என்பது செய்ய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; வணங்கினராய்ப் பணி என்? என்றார் என முற்றெச்சமாக்கி முடிக்க. பத்தி—வரிசை. இலங்கை நோக்கி வரிசையாக வந்தமைந்த சேனைக்கு அங்கு இடமில்லை என்றமையால் அச்சேனையின் மிகுதி புலப்படுத்தியவாறு. (1)

## எங்கு எய்தியது? என்ற இராவணனுக்குத் தூதுவர் கூறுதல்

**9385** ஏம்பலுற் றெழுந்த மன்ன
னெவ்வழி யெய்திற் றென்றான்
கூம்பலுற் றுயர்ந்த கைய
ரொருவழி கூற லாமோ
வாம்புனற் பரவை யேழு
மிறுதியின் வளர்ந்த தென்னத்
தாம்பொடித் தெழுந்த தானைக்
குலகிடந் தானில் லென்றார்.

ஏம்பலுற்று எழுந்த மன்னன்
'எவ்வழி எய்திற்று' என்றான்;
கூம்பலுற்று உயர்ந்த கையர்,
ஒருவழி கூற லாமோ?
வாம்புனல் பரவை ஏழும்
இறுதியின் வளர்ந்தது என்னத்
தாம் பொடித்து எழுந்த
தானைக்கு உலகு இடம் தான் இல் என்றார்.

பொ:- மகிழ்ச்சியுற்று எழுந்த இராவணன், எவ்விடத்து வந்துளது? என்று வினவினான்; குவிந்து உயர்ந்த கையை யுடையவர்களாகிய தூதுவர்கள், (அச்சேனை இன்ன இடத்தில் இருந்தது என்று சுட்டி) ஓரிடத்தைச் சொல்லுதல் கூடுமோ? 'தாவுகின்ற அலைகளோடுங்கூடிய நீரையுடைய கடல்கள் ஏழும் ஊழி இறுதியில் பொங்கியது என்னும்படி தாமே கிளர்ந்து எழுந்த சேனை தங்குவதற்கு உலகம் இடமுடையதாக இல்லை,' என்று கூறினார்கள்.

கு:- ஏம்பல்—மகிழ்ச்சி. கூம்பலுற்றுயர்ந்த கையர் என்றது சிரமேற் குவித்த கரத்தவராய தூதுவர் என்றவாறு. இலங்கை முழுவதுமே சேனை நிரம்பியிருக்கும்போது எவ்விடத்தைச் சுட்டிக்காட்டவியலும் என்பார், ஒரு வழி கூறலாமோ? என்றார். ஊழி இறுதியில் எழுகடலும் ஒன்றாகப் பொங்கியெழுதல் உண்டு ஆதலின் பொங்கியெழுந்த சேனை மிகுதி புலப்படுத்த அக்கடலை உவமித்தவாறு. தான்-அசை. பொடித்தல்—பொங்குதல். (2)

9385 a தொல்லைசேர் அண்ட கோடித்
தொகையில் மற்றரக்கர் சேனை
இல்லையா லெவரு மின்னே
யெய்திய விலங்கை யென்னும்
மல்லல்மா நகரும் போதா
வான்முதல் திசைகள் பத்தின்
எல்லை யுற்றளவு நின்றங்
கெழுந்தது சேனை வெள்ளம்.

அரக்கர் சேனை இலங்கையை எய்துதல்

9386 மண்ணுற நடந்த தானை
வளர்ந்தமாத் தூளி மண்ட
விண்ணுற நடக்கின் ருரு
மிதித்தன ரேக வேகக்
கண்ணுற லரிது காணக்
கற்பத்தின் முடிவிற் கார்போல்
எண்ணுற வரிய சேனை
யெய்திய திலங்கை நோக்கி.

*மண் உற நடந்த தானை*
*வளர்ந்த மாத்தூளி மண்ட,*
*விண் உற நடக்கின்றுரும்*
*மிதித்தனர் ஏக ஏக,*
*கண்ணுறல் அரிது காண்*
*அக் கற்பத்தின் முடிவில் கார்போல்*
*எண்ணுற அரிய சேனை*
*எய்தியது, இலங்கை நோக்கி.*

*பொ:- பூமியில் பொருந்த நடந்த சேனையால் பெருகிய பெருந் தூளி நெருங்குதலால் விண்ணிற் பொருந்த நடக்கின்ற தேவர்களும் (மண்ணில் நடப்பதுபோல) அத்தூளியின் செறிவை மிதித்து நடக்க நடக்க (அத்தூளி கண்களிலும் புகுந்து நிரம்பியதால்) காணுதல் அரிதாயது; அந்தக் கற்பக் காலத் திறுதியில் எழுகின்ற கரிய மேகங்*

களைப் போல, எண்ண இயலாத சேனை இலங்கை நோக்கி வந்து எய்தியது.

கு:- மண்ணில் நடந்து வந்த சேனையால் எழுந்த துகள் விண்ணில் எழுந்து படர்ந்து விண்ணையும் மண்ணுக்கியதால் விண்ணிற் செல்லும் தேவர்களும் அத்தூளியின் செறிவை மிதித்துச் செல்லா நிற்க, அவர்களிலும் அந்தத் தூளி பட்டமையால் இமையா நாட்ட முடைய அவர்கள் காண்டல் தொழிலைச் செய்தல் அரிதாயிற்று என்ற வாறு. அக் கற்பம் என்புழி அகரம், உலகறிசுட்டு. பிரம கற்பத்தின் முடிவில் உலகை அழிக்க மேகங்கள் மிகுதியாகத் திரண்டு இருண்டு வருவதுபோல, எண்ணிலாத அரக்கர் சேனை இலங்கை நோக்கி வந்தது என்றவாறு. அரக்கரின் கருமைக்கும் பருமைக்கும் உவமையாகக் கற்பகாலத்துக் கார் கூறப்பட்டது. (3)

**9387** வாட்டனின் வயங்க மின்னு
மழையதி னிருள மாட்டா
ஈட்டிய முரசி னார்ப்பை
இடியது முழங்க மாட்டா
மீட்டினி யுரைப்ப தென்னே
வேலைமீச் சென்ற தென்னத்
தீட்டிய படையு மாவும்
யானையுந் தேருஞ் செல்ல.

வாள்தனில் வயங்க மின்னு; மழை அதின் இருள மாட்டா;
ஈட்டிய முரசின் ஆர்ப்பை, இடியது முழங்க மாட்டா;
மீட்டினி உரைப்பது என்னே? வேலைமீச் சென்றது என்னத்
தீட்டிய படையும், மாவும், யானையும், தேரும், செல்ல.

பொ:- கடலே மேல் எழுந்து சென்றது என்னும்படி; கூர்மை பெறத் தீட்டிய படைகலங்களையுடைய காலாட்படையும், குதிரைப் படையும், யானைப்படையும், தேர்ப்படையும் செல்லாநிற்க, (அப் படையில் உள்ள) வாளைப்போல் மின்னல் விளக்கமாக மின்ன மாட்டா வாயின; அப்படையில் உள்ள அரக்கர் சேனையைப்போல மேகமும் இருளமாட்டாவாயின; அப்படையில் உள்ள முரசங்களின் ஆரவாரத் தைப் போல இடியும் முழங்க மாட்டாவாயின; எனவே, மீட்டும் வேறு உவமை சொல்வது எப்படி?

கு:- அரக்கரின் நால்வகைப் படையின் பரப்புப் புலப்பட வேண்டித் தற்குறிப்பேற்றமாக 'வேலை மீச்சென்ற தென்ன' என்ருர். தரை மட்டத்தில் உள்ள கடல் தரைமட்டத்துக்கு மேல் எழுந்து நடந்து சென்ருற்போல அரக்கர் படை விரிந்து பரந்து சென்றது என்றவாறு. கடலைப்போன்று அச்சேனை செல்கின்றபோது காலாட் படை யேந்திய வாளின் ஒளி மின்னலினும் மிக்கிருந்தது; அரக்கரின் மேனி கரிய மேகத்தினும் இருண்டிருந்தது; முரசின் ஒலி இடி முழக்கத் தினும் பெரியதாயிருந்தது. ஆதலின் இங்ஙனம் கூறினுர். அதின் என்ற சுட்டு அந்த அரக்கர் சேனையைக் குறித்தது. வாட்டனின் முதலிய மூவிடத்தும் 'இன்' உவம உருபுகள் ஈண்டிய என்பது எதுகை நோக்கி 'ஈட்டிய' என வலித்தது. படை என்றது, தீட்டிய என்ற அடையால் படைக்கலங்களையே குறித்தது என்பது தெளிவு. அச் சொல் ஆகு பெயராய் அடிப்படைக் கலங்களை யேந்திய காலாட்படை யைக் குறித்தது என்பது, மாவும் யானையும் தேரும் என உடன் எண் ணப்பட்டவற்ருல் புலனும். மின்னு ஆயின; மாட்டா வாயின என ஆக்கச் சொல் வருவிக்க. வாளுக்கு மின்னும் மேனியின் கருமைக்கு மேகமும் ஆர்ப்பிற்கு இடியும் அன்றி வேறு சிறந்த உவமை இன்மை யின் 'மீட்டினி யுரைப்பதென்னே' என்ருர். (4)

**9388** உலகினுக் குலகு போய்ப்போ
யொன்றினென் ருெதுங்க லுற்ற
தொலைவருந் தானை மேன்மே
லெழுந்தது தொடர்ந்து சுற்ற
நிலவினுக் கிறையு மீனு
நீங்கின நிமிர்ந்து நின்ருன்
அலரியு முந்து செல்லு
மாறுநீத் தஞ்சி யப்பால்.

உலகினுக்கு உலகு போய்ப் போய்,
ஒன்றின் ஒன்று ஒதுங்க லுற்ற,
தொலைவு அருந்தானை மேன்மேல்
எழுந்தது தொடர்ந்து சுற்ற,
நிலவினுக்கு இறையும் மீனும்
நீங்கின; நிமிர்ந்து நின்ருன்,
அலரியும், முந்து செல்லும்
ஆறுநீத்து, அஞ்சி, அப்பால்,

பொ:—அழிவு இல்லாத சேனை மேலும் மேலும் எழுந்து தொடர்ந்து வந்து சூழாநிற்க, உலகத்திற்கு உலகம் நெருங்கிச்சென்று ஒருலகத்தில் மற்றோருலகம் மறைந்து ஒதுங்கத்தொடங்கின; நிலவுக்குத் தலைவனாகிய சந்திரனும் விண்மீன்களும் (அஞ்சி அப்பால்) நீங்கின; சூரியனும் அஞ்சி முன் சென்றுகொண்டிருந்த வழியை விடுத்து அப்பால் உயர்ந்து நின்றான்.

கு:- மண் அண்டத்தில் அரக்கர் சேனை எழுந்து தொடர்ந்து சுற்றுவது கண்ட விண்ணில் உள்ள பிற அண்டங்கள், 'அச்சேனைக்கு இடம் போதாமையால் நம்மிடத்தும் வந்து நெருக்குமோ' என்ற அச்சத்தால், ஓரண்டத்திற்கு அருகே மற்றோரண்டம் சென்று நெருங்கி மறைந்து ஒதுங்கலாயின என்க. நிலவினுக்கு இறை என்றது சந்திரனை. மீன் என்றது விண்மீன்களை. அலரி-சூரியன். 'அலரி கிட்டிசைப் பொன்றிணி நெடுவரை பொலிவுறுத முன்.' (கிட்கிந்தா-688) என முன்னும் வந்துளது காண்க. அலரியும் அஞ்சி முந்து செல்லும் ஆறு நீத்து அப்பால் நிமிர்ந்து நின்றான் எனக்கொண்டு கூட்டுக. (5)

**9389** மேற்படர் விசும்பை முட்டி
மேருவின் விளங்கி நீண்ட
நாற்பெரு வாயி லூடு
மிலங்கையூர் நடக்குந் தானை
கார்ப்பெருங் கடலை மற்றோ
ரிடத்தினிற் காலன் றானே
சேர்ப்பது போன்றதி யாண்டுஞ்
சுமைபொறு துலக மென்ன.

மேற்படர் விசும்பை முட்டி, மேருவின் விளங்கி, நீண்ட
நாற்பெரு வாயிலூடும் இலங்கைஊர் நடக்கும் தானை;
கார்ப்பெருங் கடலை, மற்றோர் இடத்தினிற் காலன் தானே
சேர்ப்பது போன்றது, யாண்டும் சுமைபொருது உலகம் என்ன.

பொ:- மேலே படர்ந்துள்ள விண்முகட்டினை முட்டிக்கொண்டு மேருமலையைப்போல விளங்கி நீண்டுள்ள நான்கு பெரிய வாயில்களின் வழியாகவும் இலங்கையாகிய ஊர்க்கு நடந்து செல்லும் சேனையானது, எமன் தானே, எவ்விடத்தும் உலகம் இச்சுமையைப் பொருது என்று கரிய பெரிய கடலை எடுத்து மற்றோர் இடத்தினில் சேர்ப்பதைப் போன்று இருந்தது.

கு:- கருங்கடல் போன்ற கரிய அரக்கர்சேனை நாற்பெருவாயில் வழியாகவும் இலங்கைக்குச் செல்லும் தோற்றத்தைக் கண்டவர்கள் பூமி இவர்கள் சுமையைப் பொறுது என்று எமனே கரியகடலை மற்றொ ரிடத்தில் சேர்க்கின்றானோ என்பர் என்றவாறு. 'இந்த அரக்கர்களின் பெரிய சேனையை அழிப்பதற்காகவே எமன் இலங்கையில் புகுத்து கின்றானோ' என்று எண்ணும்படியுள்ளது அவ்வரக்கர் நெருங்கி நுழையும் தோற்றம் என்றவாறு. கரிய நிறத்தாலும் பரப்பாலும் அரக்கர் சேனை கருங்கடலை நிகர்த்தலின் இங்ஙனம் கூறினார். 'உலகம் யாண்டும் சுமைபொறுது' என்னக் காலன்தானே, கார்ப்பெருங்கடலை மற்றோரிடத்தினில் சேர்ப்பது போன்றது என மாறிக்கூட்டுக. தானை போன்றது என இயையும். (6)

**9390** நெருக்குடை வாயி லூடு
புகுமெனி னெடிது காலம்
இருக்குமத் துணையே யென்னா
மதிலினுக் கும்ப ரெய்தி
அரக்கன திலங்கை யுற்ற
வண்டங்க ளனைத்தி னுள்ள
கருக்கிளர் மேக மெல்லா
மொருங்குடன் கலந்த தென்ன.

'நெருக்குடை வாயிலூடு புகும் எனின், நெடிது காலம்
இருக்கும் அத்துணையே' என்னா, மதிலுக்கு உம்பர் எய்தி,
அரக்கனது இலங்கை உற்ற— அண்டங்கள் அனைத்தின் உள்ள
கருக்கிளர் மேகம் எல்லாம் ஒருங்கு உடன் கலந்தது என்ன.

பொ:- 'நெருக்கையுடைய வாயிலின் வழியாகப் புகுவோம் என்றால், நெடிதுகாலம் காத்துக்கொண்டிருக்கும் அவ்வளவே; (உள்ளே புகல் அரிது)' என்று கருதி மதிலுக்குமேல் ஏறிச்சென்று, எல்லா அண்டங்களிலுமுள்ள கருக்கொண்ட மேகங்கள் எல்லாம் ஒருசேர உடன் கலந்தது என்னுமாறு வந்த சேனைகள் அரக்கனாகிய இராவண னுடைய இலங்கை நகரை அடைந்தன.

கு:- கோபுரவாயிலின் வழியாகச் செல்லக் காலம் தாழ்க்கும் என்று எண்ணி மதில் மேலேறிக் குதித்து அரக்கர் சேனை இலங்கையுள் புகுந்தன என்றவாறு. வந்த அரக்கரின் அரிய பெரிய தோற்றமும் மிகுதியும் புலப்பட 'அண்டங்கள் அனைத்தின் உள்ள கருக்கிளர் மேகம் எல்லாம் ஒருங்குடன் கலந்ததென்ன' என்று உவமை கூறினார். சேனை

யில் உள்ள ஒவ்வோர் அரக்கனும் கருக்கொண்ட மேகம்போலக் கருத்தும் பருத்தும் இருந்தான் என்றவாறு. அவ் வரக்கரின் தொகைக்கு ஓரண்டத்திலுள்ள மேகங்கள் போதாமையின் அண்டங்கள் அனைத்தி னுள்ள கருக்கிளர் மேகங்களை உவமை கூறினர். இலங்கைக்குள் விரைந்து புகுதல்வேண்டும் என்ற ஆர்வத்தால் மதிலினுக்கு உம்பர் எய்திப் புகுந்தனர் என்க. உம்பர்-மேல். (7)

## இராவணன் வந்த சேனையைக் கோபுரத்திலிருந்து காணுதல்

9391 அதுபொழு தரக்கர் கோனு
மணிகொள்கோ புரத்தி னெய்திப்
பொதுவுற நோக்க லுற்று
னொருநெறி போகப் போக
விதிமுறை காண்ப னென்றும்
வேட்கையான் வேலை யேழும்
கதுமென வொருங்கு நோக்கும்
பேதையிற் காதல் கொண்டான்.

அதுபொழுது, அரக்கர்கோனும், அணிகொள் கோபுரத்தின்எய்தி,
பொதுவுற நோக்கலுற்றான், ஒருநெறி போகப் போக,
விதிமுறை காண்பென் என்னும் வேட்கையான், வேலை ஏழும்
கதுமென ஒருங்கு நோக்கும் பேதையின் காதல் கொண்டான்.

பொ:- அப்பொழுது அரக்கர் தலைவனாகிய இராவணனும் அழகு பொருந்திய கோபுரத்தின் மேலேறி அச் சேனையைப் பொதுவகையால் பார்க்கத் தொடங்கினவன், கடல்கள் ஏழினையும் விரைவாக ஒருங்கே நோக்க விரும்பும் அறிவிலியைப் போலக் காதல் கொண்டவனாய், தன் பார்வை ஒரு நெறியே செல்லுமாறு செலுத்தி விதிமுறைப்படி தனித் தனியே காண்பேன் என்னும் விருப்பத்தை யுடையவனாயினான்.

கு:- வந்த சேனையின் அளவு காண இராவணன் கோபுரத்தின் மேலேறிப் பொதுவாகப் பார்த்தவன் பின்பு தனித்தனியே இது இது இச் சேனை எனச் சிறப்பாகத் தெரிந்துகொள்ளவும் விரும்பினான் என்றவாறு. மிகப் பெரிய இச் சேனையைத் தனித்தனியே பிரித்து அறிந்துகொள்ளுதல் இயலாது ஆதலின் வேலையேழும் கதும் என ஒருங்கு நோக்கும் பேதையின் என உவமை கூறி விளக்கியவாறு.

இயலாததேயாயினும் காதலால் காணலுற்ருன் என்றவாறு. வேலே ஏழாவன:- உவர்க்கடலும், கருப்பஞ்சாற்றுக் கடலும், கள்ளின் கடலும்,நெய்க்கடலும், தயிர்க்கடலும், பாற்கடலும், நன்னீர்க்கடலும் என்பர். (8)

## தூதுவர் இராவணனுக்குப் படையினரை வகுத்துக் காட்டுதல்

9392 மாதிர மொன்றி னின்று
மாற்ருரு திசைமேன் மண்டி
ஓதநீர் செல்வ தன்ன
தானையை யுணர்வு கூடா
வேதவே தாந்தங் கூறும்
பொருளினை விரிக்கின் ருர்போல்
சாதுவ ரணிக டோறும்
வரன்முறை காட்டிச் சொன்ஞர்.

மாதிரம் ஒன்றின் நின்று, மாறுஒரு திசைமேல் மண்டி
ஓதநீர் செல்வது அன்ன ‘தானையை உணர்வு கூடா,
வேத வேதாந்தம் கூறும், பொருளினை விரிக்கின்ருர் போல்
தூதுவர் அணிகள் தோறும் வரன்முறை காட்டிச் சொன்ஞர்.

பொ:- ஒரு திசையில் நின்று மற்ருரு திசைமேல் கடல்நீர் விரைந்து செல்வதுபோன்று இலங்கை நோக்கிச் செல்கின்ற சேனையை, தூதுவர்கள், உணர்வுக்கு எட்டாத வேதங்களும் வேதாந்த நூல்களும் கூறும்- பரம்பொருளின் இயல்பினை விளக்குகின்ற மேலோர்போல இராவணனுக்குக் காட்டி அணிகள்தோறும் உள்ளவர்களை வரன் முறையாக விளக்கிச் சொல்லலாஞர்கள்.

கு:- அரக்கர் சேனையின் மிகுதி புலப்பட ‘ஓதநீர் செல்வதன்ன தானை’ என்ருர். உணர்வுகூடாப் பொருள்-வேத வேதாந்தங்கூறும் பொருள் எனத் தனித்தனி இயையும். பரம்பொருள் உயிர்களின் உணர்வுக்குப் புலப்படாத அருமையது ஆயினும் தன் மாணுக்கர்க்கு அதன் தன்மையை விரித்துக் கூறும் ஞாஞசிரியர்போலத் தூதுவர்கள், தம் சேனையின் இயல்புகள் முழுவதையும் தெளிவுபடுத்த இயலா தாயினும், காண விரும்பிய இராவணனுக்குச் சொல்லத் தொடங் கினர் என்றவாறு. விதிமுறை காண்பென் என்னும் வேட்கையுடைய ஞயினன் இராவணன் என்பது மேலே கூறப்பட்டுள்ளமை காண்க.

வேத வேதாந்தம் என்றது உம்மைத் தொகை. வேதநூல்களும் வேதாந்த நூல்களும் என விரியும். இதனால் வந்த சேனையின் பெருமை பரம்பொருளின் பெருமைபோல விளக்குதற்கு அரிது என்பது புலப் படுத்தியவாறு. (9)

### சாகத்தீவினர்

9393 சாகத் தீவினி னுறைபவர்
தானவர் சமைத்த
யாகத் திற்பிறந் தியைந்தவர்
தேவரை யெல்லாம்
மோகத் திற்பட முடித்தவர்
மாயையின் முதல்வர்
மேகத் தைத்தொடு மெய்யின
ரிவரென விரித்தார்.

'சாகத் தீவினின் உறைபவர், தானவர் சமைத்த
யாகத்தில் பிறந்து இயைந்தவர், தேவரை எல்லாம்
மோகத்தின்பட முடித்தவர், மாயையின் முதல்வர்,
மேகத்தைத் தொடும் மெய்யினர், இவர்' என விரித்தார்.

பொ:- 'இவர் சாகத்தீவில் வாழ்பவர்; தானவர்கள் செய்த யாகத்தில் பிறந்து பொருந்தியவர்; தேவர்களையெல்லாம் மோகத்தில் விழுமாறு மாயை செய்து முடித்தவர்; மாயை செய்வதில் முதன்மை பெற்றவர்; விண்ணில் இயங்கும் மேகத்தைத் தொடும்படி உயர்ந்துள்ள உடம்பினையுடையவர்' என ஒரணியைக் காட்டி விரித்துக் கூறினர் தூதுவர்.

கு:- சாகத்தீவிலிருந்து வந்த அரக்கர், தேவர்க்கும் மோகத்தையுண்டாக்கும் மாயையில் வல்லவர் என்பதும் மேகமண்டலம் வரையுயர்ந்த உடம்பினர் என்பதும் கூறி விளக்கியவாறு. (10)

### குசைத்தீவினர் இயல்பு

9394 குசையின் றீவினி லுறைபவர்
கூற்றுக்கும் விதிக்கும்
வசையும் வன்மையும் வளர்ப்பவர்
வான நாட் டுறைவோர்

இசையுஞ் செல்வமு மிருக்கையு
மிழந்ததிங் கிவரால்
விசையந் தாமென நிற்பவ
ரிவர்நெடு விறலோய்.

'குசையின் தீவினில் உறைபவர், கூற்றுக்கும் விதிக்கும்
வசையும் வன்மையும் வளர்ப்பவர், வானநாட்டு உறைவோர்
இசையும் செல்வமும் இருக்கையும் இழந்தது; இங்கு, இவரால்,
விசையம் தாம் என நிற்பவர், இவர்—நெடு விறலோய்!

பொ:- நீண்ட வெற்றியை யுடையவனே! இவர், குசைத்தீவில் வாழ்பவர்; எமனுக்கும் பிரமனுக்கும் பழியையும் வலிமையையும் வளர்க்கின்றவர்; விண்ணுலகத்து வாழ்கின்ற தேவர்கள் தம் புகழை யும் செல்வத்தையும் இருப்பிடத்தையும் இழந்தது இங்கு உள்ள இவராலேயாம்; வெற்றி என்றால் அதற்குப் பொருள் தாமே என்னு மாறு வெற்றியே பெற்று நிற்கும் இயல்பினர் ஆவர்.

கு:- கூற்றுக்கு வசையையும் விதிக்கு வல்லமையையும் வளர்ப்ப வர் என முறை நிரனிறையாகக் கொள்க. எல்லோரையும் கொல்லும் எமன் தம்மைக் கொல்ல வியலாத வலிமை பெற்றிருப்பதால் எமனுக் குப் பழியை வளர்ப்பவர் ஆகின்றனர். 'எமனால் அழியாவண்ணம் பிரமன் இவர்களைப் படைத்துள்ளான்' என்று பிரமனது வன்மையைப் பிறர் புகழும் வண்ணம் அழிவின்றி நிற்கின்றவர் ஆதலின், விதிக்கு வன்மை வளர்ப்பவர் ஆகின்றனர். விசையம்—வெற்றி. சென்ற போர் தோறும் வென்றியே புனைதலின் வெற்றியே இவர் வடிவம் போலும் என்று பிறர் வியக்கும் வாழ்வினர் என்பார். 'விசையம் தாமென நிற்பவர்' என்றார். (11)

## இலவத் தீவினர் இயல்பு

9395 இலவத் தீவினி லுறைபவ
ரிவர்கள்பண் டிமையாப்
புலவர்க் கிந்திரன் பொன்னக
ரழிதரப் பொருதார்

நிலவைச் செஞ்சடை வைத்தவன்
வரந்தர நிமிர்ந்தார்
உலவைக் காட்டுறு தீயென
வெகுளிபெற் றுடையார்.

'இலவத் தீவினில் உறைபவர், இவர்கள்; பண்டு இமையாப்
புலவர்க்கு இந்திரன் பொன்னகர் அழிதரப் பொருதார்;
நிலவைச் செஞ்சடை வைத்தவன் வரம்தர, நிமிர்ந்தார்;
உலவைக் காட்டு உறு தீ என வெகுளி பெற்றுடையார்.

பொ:- இவர்கள், இலவத் தீவினில் வாழ்பவர்கள்; முன்பு, இமையா நாட்டமுடைய தேவர்க்கு அரசனாகிய இந்திரனது பொன்னகரம் அழியுமாறு போர் செய்தவர்கள்; பிறைச் சந்திரனைச் சிவந்த சடையில் வைத்த சிவபிரான் வரம் தந்தமையால் மேன்மை பெற்றவர்கள்; உலர்ந்த மலர்கள் நெருங்கிய காட்டில் உற்ற தீப்போல் பெருங்கோபம் கொண்டவர்கள்.

கு:- இலவ மரங்கள் நிறைந்த இடம் ஆதலின் இலவத்தீவு எனப் பெயர் பெற்றது. இமையாப் புலவர் என்றது இமையாத கண்களையுடைய தேவர்களை. தவறு செய்து சாபம் பெற்ற சந்திரன் தன்னை அடைக்கலம் அடைந்த காரணத்தால் சிவன், அச்சந்திரனை முடிமிசை வைத்த அருளாளன் ஆகலின், தீமையே புரிகின்ற இந்த இலவத் தீவினர்க்கும் அவர் தவத்தையே நோக்கி வரந்தந் தான் என்ற குறிப்பு மூன்றும் அடியில் அமைந்துள்ளமை காண்க. உலவை—உலர்ந்த மலர்கள். காட்டில் தீ பரவுதல் எளியது; அதனினும் உலர்ந்த காட்டில் தீ பரவுதல் மிக எளியது ஆதலின், அத் தீமையை இவர்தம் விரைந்து பொங்கும் வெகுளிக்கு உவமையாக்கினர். உலவை—உலர்ந்த மரம். 'புனல் வர வுயிர் வரும் உலவை போல்கின்றார்' (ஆரணிய. அகத்தியப்—4) என்புழியும் இப் பொருளில் இச் சொல் வழங்கியிருத்தல் காண்க. (12)

## அன்றில் தீவினர் இயல்பு

9396 அன்றிற் றீவினி லுறைபவ
ரிவர்பண்டை யமரர்க்
கென்றைக் கும்மிருந் துறைவிட
மென்றிட மேருக்

குன்றைக் கொண்டு போய்க்
குரைகட லிடவறக் குலைந்தோர்
சென்றித் தன்மையைத் தவிருமென்
றிரந்திடத் தீர்ந்தோர்.

"அன்றில் தீவினில் உறைபவர், இவர்; பண்டை அமரர்க்கு
என்றைக்கும் இருந்து உறைவிடம் என்றிட மேருக்
குன்றைக் கொண்டு போய்க் குரைகடல் இட, அறக்குலைந்தோர்
சென்று, 'இத் தன்மையைத் தவிரும்' என்று இரந்திடத்தீர்ந்தோர்.

பொ:- இவர் அன்றில் தீவில் வாழ்பவர்; பழங்காலத்தில், 'தேவர்கட்கு எக்காலத்தும் இருந்துறைகின்ற இடம்' (இது) என்று பிறர் கூறிய அளவில், அந்த மேரு மலையைப் பெயர்த்துக் கொண்டு சென்று ஒலிக்கின்ற கடலில் இடமுயலா நிற்க, முழுதும் நடுக்க முற்ற அத் தேவர்கள் சென்று 'இந்தச் செயலை விடுமின்' என்று இரந்து கேட்டுக் கொள்ள, அச் செயலை விடுத்த வீரமுடையவர்கள்.

கு:- அன்றில் பறவைகள் நிறைந்த இடமாதலின் இப் பெயர் பெற்றது. தம் பகைவராகிய தேவர்கட்கு என்றைக்கும் உறைவிடம் என்பதை அறிந்தவுடன் அம் மேரு மலையைப் பெயர்த்து எடுத்துக் கடலில் போட முயன்ற போது, அந்தத் தேவர்கள் வந்து 'இச் செயலைச் செய்யாமல் விடுங்கள்' என்று வேண்டிக் கொண்டார்களாக, அம் மேரு மலையைப் பெயர்க்காமல் விட்டு வைத்தவர் என அவர் வலிமையைப் புலப்படுத்தியவாறு. அற உலைந்தோர் என்றது, முழுவதும் நடுக்க முற்ற தேவர்களை. இத்தன்மை என்றது இச் செயல் என்னும் பொருளது. தவிரும் என்புழி, 'தவிர்மின்' என்னும் மின்னீற்றேவல் உம்மீறுகத் திரிந்து நின்றது. பிற்காலத்தோர் இதனை உம்மீற்று ஏவலாகவே கொள்வர். தீர்தல்—விடுதல். மேருமலையையே பெயர்க்கும் வண்ணம் என்றவாறு. "மேருவைப் பறிக்க வேண்டின்............ இராவணற் கரிதென்" (சடாயு வதைப்—62) என்றதும் இங்கு நினைக. (13)

பவளக் குன்றினர்

9397 பவளக் குன்றினி லுறைபவர்
வெள்ளிபண் பழிந்தோர்
குவளைக் கண்ணியங் கிராக்கதக்
கன்னியைக் கூட

அவளிற் றேன்றின ரையிரு
கோடியர் நொய்தின்
திவளப் பாற்கடல் வறள்படத்
தேக்கினர் சிலநாள்.

பவளக் குன்றினில் உறைபவர்; வெள்ளி பண்பு அழிந்து, ஓர்
குவளைக் கண்ணி, அங்கு, இராக்கதக் கன்னியைக் கூட,
அவளில் தோன்றினர், ஐ-இரு கோடியர்; நொய்தின்
திவளப் பாற்கடல் வறள்படத் தேக்கினர், சிலநாள்.

பொ:- (இவர்கள்) பவளக் குன்றினில் வாழ்பவர்கள்; (அசுர குருவாகிய) வெள்ளி தன் பண்பு கெட்டுக் காமுகனாய் ஒரு குவளை மலர் போன்ற கண்களையுடையவளாகிய இராக்கதக் கன்னியை அங்குப் புணர, அவளிடத்துத் தோன்றியவர்; பத்துக்கோடி என்னும் தொகையினர்; வெண்ணிறமுடைய பாற்கடல் விரைவில் வறண்டு போகுமாறு சிலநாள் பருகினவர்கள்.

கு:- வெள்ளி என்றது சுக்கிரனை. தனக்குரியளல்லாதவளை விரும்பாத பெருந்தன்மையை இழந்தமையையே பண்பழிந்ததாகக் கூறினர். குவளைக் கண்ணியாகிய இராக்கதக் கன்னி என இருபெயரொட்டாக்குக. அங்குக் கூட என இயையும். வெள்ளிக்கு இராக்கதக் கன்னிபால் தோன்றிய பத்துக்கோடி பேரும் பாற்கடலில் உள்ள பாலைச் சிலநாள் பருகி வளர்ந்தனர். அவர்கள் பருகியதால் அப்பாற்கடல் வறண்டுவிட்டது என்றவாறு. நொய்தின் வறள்பட என இயையும். திவளப் பாற்கடல்—வெண்ணிறமுடைய பாற்கடல். தேக்குதல் இங்கு வயிறாரப் பருகுதலை உணர்த்தியது. பிள்ளைப் பருவத்திலேயே பாற்கடலை வறள்வித்த வன்மையர் எனச் சிறப்பித்தவாறு. (14)

கந்தமாதனத்தோர்

9398 கந்த மாதன மென்பதிக்
கருங்கடற் கப்பால்
மந்த மாருத மூர்வதோர்
கிரியதில் வாழ்வோர்

அந்த காலத்தவ் வாலகா
லத்துடன் பிறந்தோர்
இந்த வாளெயிற் றரக்கரெண்
ணிறந்தவ ரிறைவ.

"கந்த மாதனம் என்பது, இக் கருங்கடற்கு அப்பால்
மந்த மாருதம் ஊர்வது ஓர்கிரி; அதில் வாழ்வோர்,
அந்த காலத்து அவ் ஆலகாலத்துடன் பிறந்தோர்;
இந்த வாள்எயிற்று அரக்கர் எண்ணிறந்தவர் இறைவ!

பொ:- அரசே! இந்த வாள்போன்ற கோரைப் பல்லினையுடைய அரக்கர்கள், கரிய கடலுக்கு அப்புறத்தே தென்றல் தவழ்கின்ற கந்த மாதனம் என்பதோர் மலை, அம் மலையில் வாழ்பவராவர்; அக்காலத்து ஆலகாலத்தோடு உடன் பிறந்தவர் என்று சொல்லத்தக்கவர்; எண்ணிக்கை யில்லாதவர்.

கு:- அந்தக் காலம் என்பது எதுகை நோக்கி அந்த காலம் என இயல்பாயிற்று. கருங்கடற்கப்பால் மந்தமாருதமூர்வது கந்த மாதனம் என்பது ஓர் கிரி என இயையும். மந்தமாருதம் என்றது மெல்லிய பூங்காற்று, தென்றல். ஆலகாலம் போன்ற கருமையும் கொடுமையும் உடையவர் என்பார், ஆலகாலத்துடன் பிறந்தோர் என்றார். இனித் திருப்பாற்கடலில் ஆலகாலம் தோன்றியபோது அவ் ஆலகாலத்தோடு பிறந்தவர் எனலும் ஆம். (15)

மலையத்து மறவோர்

9399 மலைய மென்பது பொதியமா
மலையதின் மறவோர்
நிலைய மன்னது சாகரத்
தீவிடை நிற்கும்
குலையுமிவ் வுலகெனக் கொண்டு
நான்முகன் கூறி
உலைவி லீரிதி லுறையுமென்
றிரந்திட வுறைந்தார்.

'மலையம் என்பது பொதிய மாமலை: அதில் மறவோர்
நிலையம் அன்னது சாகரத் தீவிடை நிற்கும்;
"குலையும் இவ் உலகு" எனக் கொண்டு, நான்முகன்கூறி,
"உலைவிலீர்! இதில் உறையும்'' என்று இரந்திட, உறைந்தார்.

கு:-மலயம் என்பது பொதிய மாமலையாகும்; அதில் பிறந்த மறவோராகிய இவர், இருப்பிடமானது கடலில் உள்ள தீவில் இருக்கிறது; இவர்கள் இங்கிருந்தால் இந்த உலகமே அழியும் என்று நினைந்து பிரமன், 'அழிவில்லாதவர்களே' இதில் தங்கியிருங்கள்" என்று கூறி இரந்து வேண்ட அத்தீவில் தங்கினர்.

பொ:- மலயம் என்பது பொதியமலைக்கு வடமொழிப் பெயர் ஆதலின் இங்ஙனம் விளக்கலானார். மறவோர்-வீரர். சாகரத்தீவு—கடலிடையிலுள்ள தீவு. பொதிய மலையில் தோன்றிய இம்மறவர்கள் இங்கு இருப்பாராயின் இவ்வுலகமே அழியும் என்ற எண்ணத்தால் பிரமன் அவர்களுக்கு வேறு தீவு காட்டி அதில் உறையுமாறு கூறி வேண்டினான் என்றவாறு. பிரமனுக்கும் அச்சத்தை உண்டாக்கியவர் இவ் வீரர் என்க. உறையும் என்பது உம்மீற்றுப் பலர்பால் ஏவல்; புதியன புகுதல். உலைவு-அழிவு. (16)

## புட்கரத் தீவினர்

9400 முக்க ரக்கையர் மூவிலை
வேலினர், முசுண்டி
சக்க ரத்தினர் சாபத்த
ரிந்நின் ற தலைவர்
நக்க ரக்கட லொலொடு
மூன் றுக்கு நா தர்
புக்க ரப்பெருந் தீவிடை
யுறைபவர் புகழோய்.

முக்கரக் கையர், மூஇலை வேலினர்; முசுண்டி
சக்கரத்தினர், சாபத்தால் இந்நின்ற தலைவர்,
நக்கரக் கடல் நாலொடு மூன்றுக்கும் நாதர்;
புக்கரப் பெருந் தீவிடை உறைபவர்—புகழோய்!

பொ:- புகழினேய்! மூன்று கைகளையுடையவர்களும், அந்த மூன்று கைகளில் மூன்று இலைகளையுடைய வேலினை யுடையவர்களும் முசுண்டி சக்கரம் என்னும் ஒருவகை சக்கரப் படையினையுடையவர்களும் ஆகி இங்கு நின்ற இந்தத் தலைவர்கள், முதலைகளையுடைய ஏழு கடலுக்கும் தலைவர்; பெரிய புட்கரத் தீவில் வாழ்பவர் ஆவர்.

கு:- கரக்கை என்றது மீமிசைச் சொல். மூன்று கைகளையுடைய அரக்கர்கள், புட்கரத் தீவில் இருந்து வந்தவர்கள், வேலும் முசுண்டி சக்கரமும் வில்லும் அம் மூன்று கைகளில் தாங்கியுள்ளனர் என்க. கடல் நாலொடு மூன்று என்றது, ஏழுகடல் என்றவாறு. நக்கரம்—முதலை. (17)

## இறலித் தீவினர்

**9401** மறலி யைப்பண்டு தம்பெருந்
தாய்சொல வலியால்
புறநி லைப்பெருஞ் சக்கர
மால்வரைப் பொருப்பின்
விறல்கெ டச்சிறை யிட்டய
னிரந்திட விட்டோர்
இறலி யப்பெருந் தீவிடை
யுறைபவ ரிவர்கள்.

'மறலியை, பண்டு தம் பெருந்தாய் சொல, வலியால்,
புறநிலைப் பெருஞ் சக்கர மால்வரைப் பொருப்பின்,
விறல் கெடச் சிறையிட்டு, அயன் இரந்திட, விட்டோர்;
இறலி அப் பெருந்தீவிடை உறைபவர் இவர்கள்.

பொ:- இவர்கள் இறலி என்கின்ற அந்தப் பெரிய தீவில் வாழ்பவர்கள்; முன்பு தம் பெருமையுடைய தாய்சொல்ல, எமனைத் தமது வலிமையினுல் அவன் வலிகெட வென்று, (ஏழுலகங்கட்கும்) புறத்தே நிலைத்துள்ள பெரிய சக்கரவாளம் என்கின்ற பெரிய மலையில் சிறை வைத்துப் பின் பிரமன் இரந்து வேண்டியதால் அவனை விடுத்தவர்கள்.

கு:- தாய் சொற்கேட்டு எமனைச் சிறைவைத்துப் பிரமன் சொற்கேட்டு அவனை விடுவித்தவர் எனவே இவர்தம் தாயிடத்து வைத்த

அன்பும் பிதாமகனிடத்து வைத்த மதிப்பும் தெளியலாம். எமனையே இவ்வாறு சிறை வைத்து மீட்க வல்லவர் எனவே இவர்தம் ஆற்றலின் மிகுதி புலப்படும். இறலி என்பது ஒருவகை மரம். அம்மரம் நிறைந் துள்ள இடதுமாகலின் இறலித்தீவு எனப் பெயர் பெற்றது. எழு கடலுக்கப்பால் சக்ரவாளம் என்கிற மலை ஒன்று உண்டு என்பது புராண மரபு. (18)

### பாதாளத்தர்

**9402** வேதா ளக்கரத் திவர்பண்டு
புவியிடம் விரிவு
போதா துந்தமக் கெழுவகை
யாய்நின்ற புவனம்
பாதா ளத்துறை வீரென
நான்முகன் பணிப்ப
நாதா புக்கிருந் துனக்கன்பி
னுலிவ ணடந்தார்.

வேதாளக் கரத்து இவர், "பண்டு புவியிடம் விரிவு
போதாது உம்தமக்கு, எழுவகையாய் நின்ற புவனம்,
பாதாளத்து உறைவீர்" என, நான்முகன் பணிப்ப,
நாதா! புக்கு இருந்து, உனக்கு அன்பினல் இவண் நடந்தார்.

பொ:- தலைவனே! வேதாளத்தின் கையைப் போன்ற கையை யுடைய இவர்கள், நான்முகனாகிய பிரமன் முற்காலத்து "உமக்கு இந் நிலவுலகத்தின் பரப்பு விரிவு போதாது ஆதலால், எழுவகையாக நின்ற புவனங்களில் பாதாளத்தில் தங்குவீர்களாக" எனக் கட்டளை யிட அங்குச் சென்று வாழ்ந்திருந்து, உன்பால் கொண்ட அன்பால், இங்கு வந்தவர்களாவர்.

கு:- வேதாளம்—பேய். இவர்கள் உலவுவதற்கு நிலவுகைத்தின் விரிவு போதாது எனப் பிரமனே இவர்களைப் பாதாளத்தில் இருக்கச் செய்தான் என்றமையால் இவர்தம் வலிமையும் வடிவும் மிகப் பெரியன என்பதுணரலாம். (19)

## நிருதி குலத்தினர்

9403 நிருதி தன்குலப் புதல்வர்நின்
குலத்துக்கு நேர்வர்
பருதி தேவர்கட் கெனத்தக்க
பண்பினர் யானைக்
குருதி பெற்றில ரேற்கட
லேழையுங் குடிப்பார்
இருணி றத்திவ ரொருத்தரேழ்
மலையையு மெடுப்பார்.

'நிருதிதன் குலப்புதல்வர்; நின் குலத்துக்கு நேர்வர்;
"பருதி தேவர்கட்கு" எனத்தக்க பண்பினர்; யானைக்
குருதி பெற்றிலரேல், கடல் ஏழையும் குடிப்பார்;
இருள் நிறத்து இவர், ஒருத்தர் ஏழ்மலையையும் எடுப்பார்.

பொ:- இருள்போன்ற நிறத்தினையுடைய இவர்,-நிருதி என்னும் திசைக்காவலனது குலப் புதல்வர்கள்; நின்குலத்துக்கு ஒப்பானவர்கள்; நம் குலத்துக்கு இவர்கள், தேவர்கட்குச் சூரியன் எனத்தக்க பண்பு உடையவர்கள்; யானையின் இரத்தம் ஒரு நாளைக்குக் கிடைத்தில தாயின் எழுகடல் நீரையும் குடித்திடுவர்; ஒருத்தரே ஏழு மலையையும் எடுக்கத் தக்க மிடுக்குடையவர்கள்.

கு:- நிருதி என்பவன், தென்மேற்குத் திசைக்குக் காவலன். இவன் மனைவி தீர்க்காதேவி; இவன் வாகனம் நரன். இவன் நகரம் கிருட்டிணாங்கனை; இவன் ஆயுதம் குந்தம் ஆகும். குலப்புதல்வர் எனவே இவன் மனைவி தீர்க்காதேவியின் வயிற்றுதித்த புதல்வர் என்பது புலப்படும். நிருதி என்பவனும் அரக்கனாகலின் 'நின்குலத்துக்கு நேர்வர்' என்றார். தேவர்களில் பருதி சிறந்தவனாதல்போல அரக்கர்களில் இவர் சிறந்த பண்பினர் என்றவாறு. ஒவ்வொருநாளும் பகைவரொடு போர் செய்து அவர் யானைப் படைகளைக் கொன்று அவற்றின் குருதி குடித்து வயிறு நிரப்பும் இயல்பினர் இவர் ஆதலின் அந்தக் குருதி பெறாதவிடத்து எழுகடலையும் குடித்துவிடுவர் என அவர் தாகத்தையும் ஆற்றலையும் புலப்படுத்தியவாறு. 'ஒருத்தர் ஏழ்மலையையும் எடுப்பார்' என்றமையால் இவர்தம் மெய்வலி புலப்படுத்தியவாறு. பருதி-சூரியன். (20)

## பூமிதேவிக்குப் பிறந்தவர்

**9404** பார ணைத்தவெம் பன்றியை
யன்பினுற் பார்த்த
கார ணத்தின ஞதியிற்
பயந்தபைங் கழலோர்
பூர ணத்தடந் திசைதொறு
மிந்திரன் பொருவில்
வார ணத்தினை நிறுத்திய
திவர்வர வஞ்சி.

'பார் அணைத்த வெம் பன்றியை அன்பினுல் பார்த்த
காரணத்தின், அனுதியின் பயந்த பைங்கழலோர்;
பூரணத்தடந் திசைதொறும் இந்திரன் பொருவுஇல்
வாரணத்தினை நிறுத்தியது, இவர்வரவு அஞ்சி.

பொ:- பூமிதேவி, தன்னை அணைத்த வராகமூர்த்தியை அன்பினுல் பார்த்த காரணத்தினுல் முற்காலத்துப் பெற்ற பசுமையான வீரக் கழலினை அணிந்தவர்களாகிய இவர்தம் வருகைக்கு அஞ்சியே இந்திரன், நிறைவுடைய பெரிய திசைகள் தோறும் ஒப்பற்ற யானைகளை நிறுத்திவைக்க நேர்ந்தது.

கு:- இரணியாக்கதன் பூமியைப் பிரளய வெள்ளத்தில் அழுத்தி விடத் திருமால் வராக மூர்த்தியாய்ச் சென்று அப் பூமியைத் தன் கோட்டில் தாங்கி வெளிக்கொணர்ந்தார் என்ற புராண வரலாறு இங்கு நினைத்தற்குரியது. தன்னை அணைத்துக் கொடு வந்து காப்பாற்றிய பன்றியைப் பூமிதேவி அன்பினுல் பார்த்த அளவில் அப் பூமிதேவிக்குப் பிறந்தவர்களே இங்குக் குறிக்கப் பெற்றவர்கள். இவர்கள் நிலவுலகிற்குள் வரின் என்ன துன்பம் நேருமோ என்ற அச்சத்தால், இந்திரன் திசைகள்தோறும் ஒப்பற்ற யானைகளை நிறுத்தி அவர்கள் வரவு நிகழாமல் தடுத்தான் என்பது கருத்து. கழலோராகிய இவர் வரவு அஞ்சியே இந்திரன் திசைதோறும் வாரணத்தினை நிறுத்தியது என இயையும். உலகம் காக்கும் நாற்பெருந் தெய்வங்களில் இந்திரன் ஒருவன் ஆதலின் இங்ஙனம் உலகுக்கு இடையூறு வாராமல் தடுத்தான் என்க. (21)

## பாதலத்தின் அடிப்பகுதியில் வாழ்பவர்

**9405** மறக்கண் வெஞ்சின மலையென
விந்நின்ற வயவர்
இறக்கங் கீழிலாப் பாதலத்
துறைகின்ற விகலோர்
அறக்கண் டுஞ்சில னுயிரம்
பணந்தலை யனந்தன்
உறக்கந் தீர்ந்தன னுறைகின்ற
திவர்தொடர்ந் தொறுக்க.

மறக்கண் வெஞ்சின மலைஎன இந்நின்ற வயவர்,
இறக்கம் கீழ் இலாப் பாதலத்து உறைகின்ற இகலோர்;
அறக்கண் துஞ்சிலன், ஆயிரம் பணந்தலை அனந்தன்,
உறக்கம் தீர்ந்தனன், உறைகின்றது, இவர் தொடர்ந்து ஒறுக்க.

பொ:- கொடுங் கண்ணையும் கடுஞ்சினத்தையும் உடைய மலை போல இங்கு நின்ற வீரர்கள், (தன்னினும் இரக்கமுடைய கீழிடம் இல்லாத, பாதலத்தில் வாழ்கின்ற வலிமையுடையராவர்; ஆயிரம் படத்தோடு கூடிய தலைகளையுடைய ஆதிசேடன், முழுவதும் கண் துஞ்சாமல் உறக்கம் நீங்கினவனாய்த் தங்கியிருப்பது இவ்வீரர் அவனைத் தொடர்ந்து வருத்துதலாலே யாம்.

கு:- மலைக்கு மறக்கண்ணும் வெஞ்சினமும் இல்லை யாதலின். 'மறக்கண் வெஞ்சின மலையென' என்பது இப்பொருளுவமையாகும். மலைபோன்ற பெருந்தோற்றமுடையவர் என்றபடி. பாதலத்தின் கீழ் எல்லை என்பது தோன்ற 'இறக்கங் கீழிலாப் பாதலம்' என்றார். இந்நின்ற வயவர் இகலோர் ஆவர் என்று ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. கண்படாது உறங்குவாரும் உளராதலின், அறக் 'கண் துஞ்சிலன்' எனவும் 'உறக்கந் தீர்ந்தனன்' எனவும் கூறினர். அனந்தன் உறக்கம் தீர்ந்தனன் உறைகின்றது, இவர் ஒறுத்தலானே ஆம் என முடிக்க. உறைகின்றது தொழிற்பெயர். உறைகின்றது என்ற எழுவாய்க்கேற்ற ஆம் என்ற பயனிலை வருவிக்கப்பட்டது. அற-முழுவதும். உலகத்தைச் சுமந்து நிற்கும் அனந்தன், இவர்கள் கொடுக்கும் துன்பத்தால் கண்துஞ்சாது இருக்கின்றான் என்றது ஏதுத் தற்குறிப்பேற்ற வணி. (22)

9405 a மேய சக்கரப் பொருப்பிடை
மேவிய திறலோர்
ஆயிரத் தொகை பெருந்தலே
யுடையவர் அடங்கா
மாயை கற்றவர் வரத்தினர்
வலியினர் மறப்போர்த்
தீய ரித்திசை வரும்படை
அரக்கர் திண்டிறலோய்.

காளியின் சினத் தீயில் பிறந்தவர்

9406 காளி யைப்பண்டு கண்ணுதல்
காட்டிய காலே
மூள முற்றிய சினக்கடுந்
தீயிடை முளேத்தோர்
கூளி கட்குநல் லுடன்பிறந்
தார்பெருங் குழுவாய்
வாளி மைக்கவும் வாளெயி
றிமைக்கவும் வருவார்.

'காளியைப் பண்டு கண்ணுதல் காட்டிய காலே,
மூள முற்றிய சினக் கடுந் தீயிடை முளேத்தோர்;
கூளிகட்கு நல் உடன் பிறந்தார்;—பெருங்குழுவாய்
வாள் இமைக்கவும், வாள் எயிறு இமைக்கவும், வருவார்.

பொ:- வாள், ஒளிவிசவும், வாள்போன்ற பற்கள் ஒளிவீசவும், பெருங்கூட்டமாய் வருகின்றவர்களாகிய இவர்கள்,-நெற்றிக் கண்ணே யுடைய சிவன், முற்காலத்துக் காளியை (வெல்ல ஊர்த்துவ தாண் டவஞ் செய்து) காட்டிய காலத்தில் (அந்தக் காளியின்) மூளுமாறு முதிர்ந்த சினமாகிய கடுமையான நெருப்பில் தோன்றியவர்கள்; பேய் கட்டு நல்ல உடன்பிறப்புப் போன்றவர்கள்.

கு:- காளியை நடனத்தில் வெல்லச் சிவன் ஒரு காலேத் தலே வரை யில் தூக்கி ஊர்த்துவ தாண்டவம் புரியக் காளி அங்ஙனம் செய்து காட்டி வெல்ல முடியாமையால் நாணிச் சிவன் செய்த வஞ்சகச்

செயலுக்காகச் சினந்தாளாக, அச்சினத் தீயில் தோன்றினவர்கள் இவர்கள் என்றவாறு. பேயின் செயலைச் செய்கின்றவர்கள் என்ற கருத்தால் 'கூளிகட்கு நல் உடன் பிறந்தார்' என்றார். கூளி-பேய். (23)

## பாவத்தோடு பிறந்தவர்கள்

**9407** பாவந் தோன்றிய காலமே
தோன்றிய பழையோர்
தீவந் தோன்றிய முழைத்துணை
யெனத்தெறு கண்ணர்
கோவந் தோன்றிடிற் றாயையு
முயிருணுங் கொடியோர்
சாவந் தோன்றிட வடதிசை
மேல்வந்து சார்வார்.

'பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்;
தீவம் தோன்றிய முழையெனத் தெறு கண்ணர்;
கோவம் தோன்றிடின், தாயையும் உயிர் உணும் கொடியோர்;
சாவம் தோன்றிட, வட திசை மேல் வந்து சார்வார்.

பொ:- வில் கையில் தோன்ற வடதிசைமேல் வந்து தோன்றுகின்ற இவர்கள், பாவம் தோன்றிய காலத்திலே தோன்றிய பழையவர்கள்; விளக்குகள் காணப்படும் இரு குகைகள் என்று சொல்லத் தக்க அச்சுறுத்தும் சிறுகண்களையுடையவர்கள்; கோபம் வந்தால் தாயையும் உயிர் உண்கின்ற கொடியவர்கள் ஆவர்.

கு:- வில்லேந்திய கையினராய்த் தென் திசையிலிருந்து வட திசைமேல் வந்து சார்கின்றவர்களைச் சுட்டிக் காட்டி இராவணனுக்கு அவர்கள் இயல்பை விளக்கியவாறு. பாவமும் அறமும் உயிர்களின் தோற்ற முதற் கொண்டு இருப்பனவாதலின் இவர் தோன்றிய காலமும் அத்தகையதே என்றாயிற்று. புண்ணியத்தைக் கூறாமல் 'பாவந் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்' என்றமையால் இவர்கள் பாவத்தில் பற்றுள்ளவர்களாய்ப் பன்னெடுங் காலமாக அதனையே செய்து பழகி கை வந்தவர்கள் என்றவாறு. மலை போன்ற தலையில் குகை போன்று குழிந்து ஆழ்ந்த சிறு கண்களை யுடையவர் என்பார். 'தீவம் தோன்றிய முழைத்துணை எனத் தெறு கண்ணர்' என்றார். 'கொள்ளி கொண்டிரண்டே முழையுட்புக, குன்றி தோன்றுவபோல

விழிப்பன' (கலிங்கத்துப்—65) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். அன்புருவான தாயையும் கொல்லும் கோபத்தினர் என இவர் சினத்தின் கொடுமை புலப்படுத்தியவாறு. "தாயை யாயினும் சலித்திடு வஞ்சனை தவிரா மாயையாள்" (இலங்கை கேள்விப்—36) என்பது இங்கு நோக்கத் தகும். நான்கடியிலும் இரண்டாம் எழுத்துப் பகரம் தமிழ் நடைக் கேற்ப வகரமாயது. (24)

சிவனது நெற்றிக் கண்ணில் பிறந்தவர்

9408 சீற்ற மாகிய வைம்முக
னுலகெலாந் தீப்பான்
ஏற்ற மாநுதல் விழியிடைத்
தோன்றின ரிவரால்
கூற்ற மாகிப் பண்டுதித்துள
ரெனக்கொடுந் தொழிலால்
தோற்றி னரிவர் வலியெலாந்
தொலைவுறத் தொலைப்பார்.

'சீற்றம் ஆகிய ஐம்முகன், உலகு எலாம் தீப்பான்
ஏற்ற மா நுதல் விழியிடைத் தோன்றினர், இவரால்;
கூற்றம் ஆகிப் பண்டு உதித்துளர் எனக் கொடுந் தொழிலால்
தோற்றினர் இவர் வலி எலாம் தொலைவுறத் தொலைப்பார்.

பொ:- இவர், சீற்றம் மிக்கவனாகிய ஐந்து முகங்களையுடைய சிவன், உலகம் முழுவதையும் எரிக்கும்படி கொண்டுள்ள பெரிய நெற்றிக் கண்ணில் பிறந்தவர்கள்; இவர், முன்பு எமனாகப் பிறந்துள்ளவர் என்று பிறர் சொல்லுமாறு தாம் செய்யும் கொடிய தொழிலால் தோற்றம் அளிப்பவர்; பகைவரின் வலிமை முழுவதும் தொலையும்படி தொலைப்பவராவர்.

கு:- பிறப்பும் பிற சிறப்பும் கூறி விளக்கியவாறு. சிவனது நெற்றிக் கண்ணில் பிறந்தவர்; முன் பிறப்பில் எமனாகப் பிறந்து கொடுந் தொழில் பழகியிருத்தல் வேண்டும் எனப் பிறர் நினைக்கத் தக்க கொடுந் தொழிலினர்; பிறர் வலிமையெல்லாம் தொலைக்கும் ஆற்றலர் என்க. சிவன் உலகத்தை யழிக்கத் தொடங்குங்கால் அவன் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவராதலின் உலகை அழிக்கும் செயலில்

கொடுமை மிக்கவராக இருந்தார் என்க. இப் பிறப்பில் இவர் கொடுமையைக் கண்டவர்கள், முன் பிறப்பில் எமனாகப் பிறந்து கொடுந் தொழில் பயின்றனரோ? என எண்ணுவார் என்றவாறு. (25)

9408 a சீறு கோளரி முகத்தினர் திறற்புலி முகத்தைஞ்
ஞூறு வான்றலை யுடையவர் நூற்றிதழ்க் கமலத்
தேறு வான் றரும் வரத்தின ரேழ்பிலத் துறைவோர்
ஈறிலாதபல் லரக்கர் மற்றெவரினும் வலியோர்.

எமன் குருதியில் பிறந்தவரும் ஆலகாலத்தில் பிறந்தவரும்

9409 காலன் மார்பிடைச் சிவன்கழல்
படப் பண்டு கான்ற
வேலை யேழன்ன குருதியிற்
றோன்றிய வீரர்
சூல மேந்திமுன் னின்றவ
ரிந்நின்ற தொகையார்
ஆல காலத்தி னமிழ்தின் முன்
பிறந்த போரரக்கர்.

காலன் மார்பிடைச் சிவன்கழல் பட, பண்டு, கான்ற
வேலை ஏழ் அன்ன குருதியில் தோன்றிய வீரர்,
சூலம் ஏந்தி முன் நின்றவர்; இந்நின்ற தொகையார்,
ஆல காலத்தின், அமிழ்தின் முன் பிறந்த போர் அரக்கர்.

பொ:- சூலம் ஏந்திக் கொண்டு நம்முன் நின்ற இவர், எமனுடைய மார்பில் சிவனது திருவடி படுதலால் முன்பு எமனது உடம்பிலிருந்து வெளிப்பட்ட எழுகடல் போன்ற இரத்தத்தில் தோன்றிய வீரர் ஆவர்; இங்கு நின்ற இக்குழுவினர் அமிழ்தின் முன் தோன்றிய ஆல காலத்தில் பிறந்த போர்த் திறமிக்க அரக்கர் ஆவர்.

கு:- எமனுடம்பில் நின்று வெளிப்பட்ட குருதியின் மிகுதி புலப்பட 'வேலை ஏழ் அன்ன குருதி' என்றார். சூலப்படை ஏந்திய எமன் குருதியில் தோன்றியவர் ஆதலின் இவர்களும் சூலம் ஏந்தி முன்னின்றனர் என்க. அமிழ்தின் முன் வெளிப்பட்ட ஆல காலத்தில் பிறந்தவர் அப் பெரு நஞ்சு போன்று கொலைத் தொழிலில் சிறந்து போர் அரக்கர் ஆயினர் என்றவாறு. (26)

## வடவைத் தீயிலும் முப்புரத் தீயிலும் தோன்றியவர்கள்

9410 வடவைத் தீயிடை வாசுகி
கான்றமாக் கடுவை
இடவத் தீயிடை யெழுந்தவ
ரிவரிவர் மழையைத்
தடவித் தீநிமிர் குஞ்சியர்
சங்கரன் றடந்தேர்
கடவத் தீந்தவெம் புரத்திடைத்
தோன்றிய கழலோர்.

'வடவைத் தீயிடை வாசுகி கான்ற மாக் கடுவை
இட, அத்தீயிடை எழுந்தவர் இவர்; இவர்,—மழையைத்
தடவித் தீநிமிர் குஞ்சியர்—சங்கரன் தடந்தேர்
கடவத் தீந்த வெம்புரத்திடைத் தோன்றிய கழலோர்.

பொ:- இவர்கள்,—வடவைக் கனலில் வாசுகி கக்கிய பெரிய நஞ்சினை இட, அத்தீயில் தோன்றியவராவர்; மேகத்தைத் தடவிக் கொண்டு தீயைப் போல் நிமிர்ந்து தோன்றுகின்ற மயிரையுடைய இவர்கள் சிவன் பெரிய தேரைச் செலுத்தவே (அவன் புன்சிரிப்பினால்) தீந்து போன வெவ்விய முப்புரத்தில் தோன்றிய வீரக் கழலினர் ஆவர்.

கு:- குஞ்சியராகிய இவர் என்க. வடவைத் தீ என்பது கடலிடையில் பெண் குதிரையின் முகம் போன்ற வடிவுடன் கடல் நீர் கரை கடவாது இருக்கச் செய்யும் பெரிய நெருப்பு. பாற் கடல் கடைந்த போது கடைகயிறாக இருந்த வாசுகி வருந்தி நஞ்சினைக் கக்கினளாக, அது அக் கடலிலுள்ள வடவைக் கனலில் பட்டவுடன் அத்தீயில் தோன்றியவர்கள் என்க. இவர் பிறப்பிற் கேற்ப வடவைக் கனலினைப் போன்ற வெகுளியும் ஆலகாலம் போன்ற கொலைத் தன்மையும் உடையவர் என்பது உய்த்துணரலாம். சிவன் திரிபுரத்தை அழிக்கப் பூமியைத் தேராகவும் வேதங்களைக் குதிரைகளாகவும் பிரமனைப் பாகனாகவும் சூரிய சந்திரரைத் தேர்ச் சக்கரங்களாகவும் மேருவை வில்லாகவும் ஆதிசேடனை வில் நாணாகவும் திருமால் காற்று நெருப்பு என்ற மூன்றையும் அம்பாகவும் கொண்டு சென்று தன் புன்னகையினாலே புரமூன்றையும் எரிசெய்தான் என்பது புராண வரலாறு. முப்புரத்தீயில் தோன்றியதற் கேற்ப இவர்கள் மழையைத் தடவி தீநிமிர் குஞ்சியர் ஆயினர் என்க. (27)

**6410 a** சாலு மாபெருந் தலைவர்கள் தயங்கெரி நுதற்கண்
சூல பாணிதன் வரத்தினர் தொகுத்த பல்கோடி
மேலையா மண்டத் துறைபவ ரிவர்பண்டு விறலால்
கோல வேலுடைக் குமரனைக் கொடுஞ்சமர் துரந்தோர்.

## படையினர் பெருமை 9411-9412

**9411** இனைய ரின்னவ ரென்பதோ
ரளவில ரைய
நினைய வுங்குறித் துரைக்கவு
மரிதிவர் நிறைந்த
வினைய மும்பெரு வரங்களுந்
தவங்களும் விளம்பின்
அனைய பேருக மாயிரத்
தளவினு மடங்கா.

*இனையர் இன்னவர் என்பது ஓர் அளவு இலர்—ஐய!—*
*நினையவும், குறித்து உரைக்கவும்; அரிது; இவர் நிறைந்த*
*வினையமும் பெருவரங்களும் தவங்களும் விளம்பின்,*
*அனைய பேர் உகம் ஆயிரத்து அளவினும் அடங்கா.*

பொ:- ஐயனே! இவர் இத்தன்மையர் என்று தனித்தனியே சொல்லுதற்குரிய சிறிய அளவினர் அல்லர்; இவர்கள் தன்மை நினைப்பதற்கும் குறித்துச் சொல்லுதற்கும் அரிது; இவர்தம் நிறைந்த வஞ்சகங்களும் பெற்ற பெருவரங்களும் அவ்வரங்களைப் பெற இவர் செய்த தவங்களும் சொல்லத் தொடங்கின், அத்தன்மையான பெரிய ஊழிகள் ஆயிரத்தினும் அடங்காவாம்.

கு:- வினையம்—வஞ்சகம். அனைய என்பது நெஞ்சறி சுட்டாய் மிகப்பல ஆண்டுகளை விளக்கின. இவர்தம் வஞ்சனையும் வரமும் தவமும் தனித்தனியே சொல்லத் தொடங்கின் ஆயிரம் உகம் சென்றாலும் சொல்லி முடிவுறா என்றவாறு. (28)

**9412** ஒருவரே சென்றவ் வுறுதிறற்
குரங்கையு முரவோர்
இருவ ரென்றவர் தம்மையு
மொருகைகொண் டெற்றி

வருவர் மற்றினிப் பகர்வதென்
வானவர்க் கரிய
திருவ வென்றனர் தூதுவ
ரிராவணன் செப்பும்.

'ஒருவரே சென்று, அவ் உறுதிறல் குரங்கையும், உரவோர்
இருவர் என்றவர் தம்மையும், ஒருகையோடு எற்றி,
வருவர்; மற்று இனிப் பகர்வது என்?—வானவர்க்கு அரிய
திருவ என்றனர் தூதுவர்: இராவணன் செப்பும்.

பொ:- 'தேவர்கட்கும் பெறுதற்கரிய பெருஞ் செல்வத்தைப் பெற்றவனே! இப்படையில் உள்ள ஒருவரே சென்று அந்த மிக்க திற மையுடைய குரங்கையும் வலியவர் இருவர் என்ற இராம இலக்குவர் தம்மையும் ஒரு கையினால் தாக்கி அழித்து வருவர்; வேறு இனிச் சொல் வது என்னே?' என்று கூறினர் தூதுவர்; அவர் சொல் கேட்ட இரா வணன் சொல்லுவான்.

கு:- இவ்வளவு பெரிய சேனையே வேண்டா; இச் சேனையிலுள்ள ஒருவரே பகைவரை அழிப்பதற்குச் சாலும் என்று படையின் பெரு மையைத் தூதுவர் சொன்னார் என்க. குரங்கு என்றது அனுமனை. இனிச்சாதி ஒருமையெனக் கொண்டு வானரப் படையைக் குறித்த தாகக் கூறலும் ஆம். படைக்கலமும் வேண்டா என்பார்,' ஒரு கை கொண்டெற்றி' என்றார். தூதுவர் சொல்லைக் கேட்ட இராவணன் பின் வருமாறு சொல்லலானான் என்க. (29)

## இராவணன் வினவும் தூதுவர் விடையும்

9413 எத்துணைத்திதற் கெண்ணெனத்
தொகைவகுத் தியன்ற
அத்தி றத்தினை யறைதிரென்
றுரைசெய அவர்கள்
ஒத்த வெள்ளமோ ராயிர
முளதென வுரைத்தார்
பித்த ரிப்படைக் கெஞ்சிறி
தென்றனர் பெயர்ந்தார்.

'எத்துணைத்து இதற்கு எண் எனத் தொகைவகுத்து, இயன்ற
அத்திறத்தினை அறைதிர்' என்று உரை செய; அவர்கள்
'ஒத்த வெள்ளம் ஓர் ஆயிரம் உளது' என உரைத்தார்,
பித்தர்; இப் படைக்கு எண் சிறிது' என்றனர், பெயர்ந்தார்.

பொ:- 'இப்படைக்கு எண் எவ்வளவினது எனத் தொகையாக வகுத்து அமைத்த அத்தன்மையைச் சொல்லுங்கள்' என்று இராவணன் வினவ, அத்தூதுவர்கள் 'ஒத்த அளவினையுடைய வெள்ளம் ஓராயிரம் உளது என்று சொன்னார்கள்; அவர் பித்தராவர்; இப் படையின் அளவிற்கு அந்த எண் சிறிது' என்று கூறினராய்ச் சென்றார்.

கு:- பல்லாயிர வெள்ளம் என்று மதிக்கத்தக்க இப்படையை ஆயிரம் வெள்ளம் என்று முன்னோர் கூறியது பொருந்தாது என்ற கருத்தால் 'உரைத்தார் பித்தர்' என இகழ்ந்து கூறிவிட்டு 'இப் படைக்கு எண் சிறிது' என்று தம் கருத்தைத் தூதுவர் கூறிச் சென்றனர் என்க. எண் என்றது, ஆயிர வெள்ளம் என்ற எண்ணினை. (30)

9413 a ஆதி யம்படைத் தலைவர்கள் வெள்ள நூறடு போர்
மோது வீரர் மற் றுயிர வெள்ள மொய் மனத்தோர்
காது வெங் கொலைக் கரிபரி கருந்திறல் காலாள்
ஓது வெள்ள மற் றுலப்பில கோடி யென் றுரைப்பார்.

இராவணன், படைத்தலைவரைக் கொணர்க எனல்

9414 படைப்பெ ருங்குலத் தலைவரைக்
கொணருதி ரென்பால்
கிடைத்து நானவர்க் குற்றுள
பொருளெலாங் கிளத்தி
அடைத்த நல்லுரை விளம்பின
னளவளா யமைவுற்
றுடைத்த பூசனை வரன்முறை
யியற்றவென் றுரைத்தான்:

'படைப் பெருங் குலத் தலைவரைக் கொணருதிர், என்பால்—
கிடைத்து, நான் அவர்க்கு உற்றுள பொருள் எலாம் கிளத்தி
அடைத்த நல் உரை விளம்பினன் அளவளாய், அமைவுற்று,
உடைத்த பூசனை வரன் முறை இயற்ற' என்று உரைத்தான்.

பொ:- (இராவணன் தூதுவரை நோக்கி) 'நான் அவர்களை நெருங்கியிருந்து, இங்கு நிகழ்ந்துள்ள செய்திகள் எல்லாவற்றையும் விளக்கி, என் மனத்தே அடைத்து வைத்துள்ள நல்ல இனிய சொற்களைச் சொல்லி அளவளாவி மனம் நிறைவுற்று அவர்களுக்கு உரித்தான பூசனையை வரன் முறையாகச் செய்யப் படையிலுள்ள பெருஞ் சிறப்புடைய தலைவர்களை என்னிடம் கொணர்வீர்களாக' என்று சொன்னான்.

கு:- குலம்—சிறப்பு. கிடைத்தல்—நெருங்குதல். உற்றுள பொருள் என்றது, இராமனுக்கும் தனக்குமாக நிகழ்ந்துள்ள செய்திகளை. அளவளாவுதல் என்றது, நெஞ்சு கலப்பினை. அவர் அளவினையும் தன் அளவினையும் உசாவியறிதலால் வருவதாகலின் ஆகுபெயரால் அதனை 'அளவளாய்' என்றார். பூசனை என்றது, வீரர்களுக்குச் செய்ய வேண்டிய பெருஞ்சோறு அளித்தல் முதலியவற்றை. வரன் முறை என்றது, மேல் தொட்டு வருகின்ற முறைப்படி என்றவாறு. படைத் தலைவர்களை அணுகியிருந்து, இதுகாறும் நிகழ்ந்துள்ளவற்றை யெல்லாம் உணர்த்தி, நெஞ்சுகலந்து நிறைவெய்தி, வீரர்க்குரிய பூசனை இயற்ற என்பால் அத் தலைவரைக் கொணர்க என இராவணன் தூதுவர்க்கு உரைத்தான் என்க. (13)

### படைத் தலைவரின் வினாவும் இராவணன் விளக்கமும்

**9415** தூதர் கூறிடத் திசைதொறுந்
திசைதொறுந் தொடர்ந்தார்
ஓத வேலையி னாயக
ரெவரும்வந் துற்றார்
போது தூவினர் வணங்கின
ரிராவணன் பொலன்றாள்
மோது மோலியின் பேரொலி
வானினை முட்ட.

தூதர் கூறிட, திசைதொறும்
திசைதொறும் தொடந்தார்,
ஓத வேலையின் நாயகர்
எவரும் வந்து உற்றார்;

போது தூவினர், வணங்கினர்,
இராவணன் பொலன் தாள்
மோதும் மோலியின் பேர்
ஒலி வானினை முட்ட.

பொ:- (இராவணன் சொன்னதை) தூதுவர்கள் சொல்லிய வுடன், படைத் தலைவர்கள் யாவரும் திசைதோறும் திசைதோறும் இருந்து தொடர்ந்து வந்தவராய், அலைகளையுடைய கடல்போன்ற பரப்பினராய் வந்தடைந்து, இராவணனது அழகிய திருவடிகளில் மலர்களைத் தூவினவராய், மகுடத்தோடு மகுடம் மோதுவதால் உளதாய பெரிய ஒலி வானை முட்டுமாறு ஒருவர்க்கொருவர் முற்பட்டு வணங்கினர்.

கு:- படைத் தலைவர்களின் மிகுதி புலப்பட, ஓத வேலையின் வந்துற்றார் என்றார். ஒருவர்க்கு ஒருவர் முற்பட்டு வணங்குவ தால் அவர்கள் அணிந்திருந்த மோலிகள் மோதலாயின. அவ் வொலி மிகப் பெரிதாய் விண்ணினையும் நண்ணியதென்க. வந்துற் றார், இராவணன் பொலன்தாள் போது தூவினர், பேரொலி வானினை முட்ட, வணங்கினர் என இயையும். தொடர்ந்தாராய், உற்றாராய், தூவினராய், ஒலிமுட்ட வணங்கினர்; என முற்றெச்சங் களாக்கி முடிக்க. ஓதம்-அலை. மோலி-மகுடம். (32)

வணங்கிய தலைவர்களை இராவணன் உசாவுதல்

9416 அனையர் யாவரு மருகுசென்
றடிமுறை வணங்கி
வினைய மேவின ரினிதினங்
கிருந்ததோர் வேலை
நினையு நல்வர வாகநும்
வரவென நிரம்பி
மனையு மக்களும் வலியரே
யென்றனன் மறவோன்.

அனையர் யாவரும் அருகுசென்று, அடிமுறை வணங்கி,
வினையம் மேவினர், இனிதின் அங்கு இருந்தது ஓர் வேலை,
'நினையும் நல்வரவு ஆக, நும் வரவு!' என நிரம்பி,
'மனையும் மக்களும் வலியரே?' என்றனன், மறவோன்.

கு:- (அவ்வாறு) அப்படைத் தலைவர் யாவரும் இராவணன் அருகிற் சென்று அவனடிகளை முறையாக வணங்கிப் பணிவு பொருந்தினவராய் இனிதாக அங்கு இருந்தபோது, பெருவீரனாகிய இராவணன் (அவர்களை நோக்கி) நும் வரவு யான் நினைக்கின்றபடி நல்வரவு ஆவதாக! என்று வரவேற்பு செய்து முடித்து, 'நும் மனைவியும் மக்களும் மெலிவின்றி வலியராக இருக்கின்றனரோ?' என நலம் உசாவினான்.

கு:- மேல், 'போது தூவினர் வணங்கினர்' என்பதையே இச் செய்யுளிலும் அடிமுறை வணங்கி என அனுவதித்தவாறு. வினயம்-பணிவு; இராவணன் தனக்கு வெற்றியுண்டாக இவர்கள் வரவு துணை செய்யும் என்ற நம்பிக்கையால் வரவேற்கின்றான் ஆதலின் 'நினையும் நல்வரவாக நுப்வரவு' என்கின்றான். நிரம்புதலாவது வரவேற்பு செய்து முடித்தல். வலியரோ என்பது நலமாக உள்ளனரோ? என இக்காலத்து உசாவுதல் போன்றது. 'வாலி வலியன் கொல்? (பிணிவீட்டு-83) என முன்னும் இராவணன் அனுமனை உசாவியிருத்தல் நினையலாம். (33)

**9417** பெரிய திண்புய னீயுளை
தவவரம் பெரிதால்
உரிய வேண்டிய பொருளெலா
முடிப்பதற் கொன்றோ
இரியல் தேவரைக் கண்டனம்
பகைபிறி தில்லை
அரிய தென்னெமக் கென்றன
ரவன்கருத் தறிவார்.

'பெரிய திண்புயன் நீஉளை; தவ வரம் பெரிதால்;
உரிய வேண்டிய பொருள் எலாம் முடிப்பதற்கு ஒன்றோ?
இரியல் தேவரைக் கண்டனம்; பகைபிறிது இல்லை;
அரியது என் எமக்கு? என்றனர், அவன் கருத்து அறிவார்.

பொ:- அவ் விராவணனது கருத்தை அறியும் நோக்கத்தினராய் (படைத் தலைவர் இராவணனை நோக்கி) பெரிய வலிமையான தோள்களையுடைய தலைவன் நீ யிருக்கின்றாய்; யாங்கள் தவத்தினால் பெற்றுள்ள வரமும் மிகப் பெரியது; நமக்கு உரியனவாய் வேண்டியுள்ள காரியங்களையெல்லாம் முடிப்பதற்கு அரிதோ? தேவரைத் தோற்

றேடச் செய்துவிட்டோம்; வேறு பகையும் இல்லை; எமக்குச் செய் தற்கு அரியது என் உளது? என்றனர்.

கு:- உளை, முன்னிலை ஒருமை வினைமுற்று. தவத்தால் பெற்ற வரத்தைத் தவ வரம் என்றார். ஒன்றோ என்பது, ஒரு பொருளோ? என்னும் பொருளது. தேவரை இரியல் கண்டனம் என மாறுக. படைத் தலைவர், அறிவாராய், என்றனர்; என இயையும். இனி, அறிவார் என்பதை வினைப் பெயராக்கிப் படைத் தலைவரைக் குறித்த தாகவும் கொள்ளலாம். (34)

## படைத் தலைவரின் வினாவும் இராவணன் விளக்கமும்

**9418** மாத ரார்களு மைந்தரு
நின்மருங் கிருந்தார்
பேது ருதவ ரில்லைநீ
வருந்தினை பெரிதும்
யாது காரண மருளென
வனையவ ரிசைத்தார்
சீதை காதலிற் பிறந்துள
பரிசெலாந் தெரித்தான்.

'மாதரார்களும் மைந்தரும் நின்மருங்கு இருந்தார்
பேது உருதவர் இல்லை; நீ வருந்தினை, பெரிதும்;
யாது காரணம்? அருள்' என அனையவர் இசைத்தார்;
சீதை காதலின் பிறந்துள பரிசு எலாம் தெரித்தான்.

பொ:- 'நின் பக்கத்து இருந்தவர்களாகிய பெண்டிர் பிள்ளைகளில் கலக்கமுறுதவர்கள் இல்லை; நீ பெரிதும் வருந்திக் கொண்டிருக் கின்றாய்; காரணம் யாது? அருள் செய்க' என அப் படைத் தலைவர் வினவினர்; (இராவணன்) சீதைமேல் வைத்த காதலால் உண்டான தன்மைகள் எல்லாவற்றையும் அவர்கட்குத் தெரிவித்தான்.

கு:- பேதுறல்-கலங்குதல். இந்திரசித்தின் இறப்பினால் பெண் டிரும் பிள்ளைகளும் இராவணனும் துன்புற்றுள்ள நிலைமையை நேரில்

கண்ட படைத் தலைவர்கள் அத் துன்பத்திற்குக் காரணம் யாது என வினவியபோது இராவணன், சீதையின்மேல் வைத்த காதலால் கும்ப கருணன் என்னும் இளவலும் இந்திரசித்து என்ற நன்மகன் முதலி யோரும் இறந்த நிகழ்ச்சியை யெல்லாம் சொன்னான் என்றவாறு. "அஞ்சினேன் அஞ்சினேன் அத் சீதை யென் றமிழ்தில் தோய்த்த, நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளை யித்தகையன் அன்றே" (இராவணன் சோகப்-53) என மண்டோதரி சொல்லியழுத சொற்கள் இராவணன் நெஞ்சுவிட்டு அகலவில்லை யாதலின் இங்கு 'சீதை காதலிற் பிறந்துள பரிசு' என்று தன் கிளைஞரின் அழிவைக் குறிப்பிடுவானானான். (35)

படைத்தலைவர் வியந்து சிரித்தல் 9419-9420

9419 கும்ப கன்னனொ டிந்திர
சித்தையுங் குலத்தின்
வெம்பு வெஞ்சினத் தரக்கர்தம்
குழுவையும் வென்றார்
அம்பி னாற்சிறு மனிசரே
நன்றுநம் மாற்றல்
நம்பு சேனையும் வானர
மேயென நக்கார்.

'கும்ப கன்னனொடு இந்திரசித்தையும், குலத்தின்
வெம்பு வெஞ்சினத்து அரக்கர்தம் குழுவையும், வென்றார்
அம்பினால், சிறுமனிதரே! நன்று, நம் ஆற்றல்!
நம்பு! சேனையும் வானரமே!' என நக்கார்.

பொ:- 'கும்பகன்னனோடு இந்திரசித்தையும், நம் குலத்திற் பிறந்த, மனம் வெதும்புகின்ற கொடிய கோபத்தையுடைய அரக்கர்தம் கூட்டத்தையும் அம்பினால் வென்றவர்கள் சிறிய மனிதர்களா? அவர் விரும்பும் சேனையும் குரங்கா' நமது வலிமை நன்று!? என்று எண்ணிச் சிரித்தார்கள் படைத் தலைவர்கள்.

கு:- கூற்றையும் ஆடல் கொண்ட கும்பகன்னனையும் இந்திர சித்தினையும் சிறு மனிதர்கள் வென்றார்கள் என்பதும் அவர்கள் விரும்பத்தக்க சேனை குரங்குகளே என்பதும் நம்பத்தக்க நிகழ்ச்சிகளாக இல்லையாதலின், 'வென்றார் சிறு மனிசரே? சேனையும் வானரமே?' என வினவி எண்ணிச் சிரிக்கலானார். ஏகாரம் இரண்டும் எள்ளல் குறிப்

புணர்த்தும் விஞப்பொருளில் வந்தன, நம்மாற்றல் நன்று என்றது, குறிப்பால் நன்றன்று என்பதை யுணர்த்தியது. (36)

9420 உலகைச் சேடன்ற னுச்சிநின்
றெடுக்கவன் ரோரேழ்
மலையை வேரொடும் வாங்கவன்
றங்கையால் வாங்கி
அலைகொள் வேலையைக் குடிக்கவன்
றழைத்தது மலரோ
டிலைகள் கோதுமக் குரங்கின்மே
லேவக்கொ லெம்மை.

உலகைச் சேடன்தன் உச்சிநின்று எடுக்க அன்று, ஓர் ஏழ்
மலையை வேரொடும் வாங்க அன்று, அங்கையால் வாரி
அலைகொள் வேலையைக் குடிக்க அன்று, அழைத்தது; மலரோடு
இலைகள் கோதும் அக்குரங்கின்மேல் ஏவக்கொல், எம்மை?'

பொ:- (நீ) எம்மை இங்கு வர அழைத்தது- உலகத்தை ஆதி சேடனது உச்சியினின்றும் எடுப்பதற்கு அன்று, ஒப்பற்ற ஏழு குல மலைகளை வேரோடும் பறிக்க அன்று, உள்ளங்கையால் அள்ளி அலை களைக் கொண்ட கடலைக் குடிக்கவும் அன்று, மலர்களோடு இலைகளைக் கோதித் தின்னுகின்ற அந்தச் சிறிய குரங்கின்மேல் ஏவுவதற்குத் தானே!

கு:- உலகை எடுத்தலும் ஏழ்மலையைப் பறித்தலும் கடலைக் குடித்தலும் ஆகிய அரிய செயல்களைச் செய்யத்தக்க எம்மைச் சிறிய குரங்குகளோடு போர் செய்யவோ அழைத்தது எனப் படைத்தலைவர் இராவணனிடம் வினவி எள்ளியவாறு. உணவின் எளிமையால் உடம்பின் வலிவின்மையும் பெறப்படுதலின் 'மலரோடு இலைகள் கோதும் அக் குரங்கு' என எள்ளிக் கூறினர். "வாலிபாம் பூக்கவர்ந் துண்ணியும் போலும் என்றெனைத் தாக்க வந்தனை" (கும்ப-288) என்பது காண்க. பூமியை ஆயிரந் தலைகளையுடைய ஆதிசேடன் என்னும் பாம்பு தாங்கிக்கொண்டிருப்பதாகக் கூறுவது புராண மரபு. வந்த படைத்தலைவர் சிறு மனிசரின் சிறந்த வீரத்தையும் வானரப் படையின் வலிமையையும் அறியாராதலின் செருக்கினால் இங்ஙனம் கூறி இகழ்ந்தனர் என்க. (37)

எள்ளிச் சிரித்தவரை விலக்கி வன்னி என்னும் மன்னன்
அம்மனிதர் யார்? அவர் வலிமை யாது? என வினவுதல்

9421 என்னக் கையெறிந் திடியுரு
மேறென நக்க
மின்னும் வெள்ளெயிற் றரக்கரை
யங்கையால் விலக்கி
வன்னி யென்பவன் புட்கரத்
தீவுக்கு மன்னன்
அன்ன மானுட ரார்வலி
யாவதென் றறைந்தான்.

என்ன, கை எறிந்து, இடி உரும் ஏறு என நக்கு,
மின்னும் வாள் எயிற்று அரக்கரை அம் கையால் விலக்கி,
வன்னி என்பவன், புட்கரத் தீவுக்கு மன்னன்,
அன்ன மானுடர் ஆர்? வலி யாது? என்று அறைந்தான்.

பொ:- என்று கூறிக் கைதட்டி, இடிக்கின்ற இடியேறு போலச் சிரித்த மின்னுகின்ற வெள்ளிய பல்லினையுடைய அரக்கர்களை (அவ்வாறு சிரிக்காமலிருக்குமாறு) தன் அகங்கையால் அமைத்து விலக்கிவிட்டு, புட்கரத் தீவுக்கு மன்னனாகிய வன்னி என்பவன் (இராவணனை நோக்கி) அந்த மானிடர் என்பவர் யார்? 'அவரது வலிமை எத்தகையது' என்று வினவினான்.

கு:- மானிடவரையும் குரங்குகளையும் எண்ணிச் சிரிக்கின்ற அரக்கர் படைத்தலைவரைக் கையமைத்துவிட்டு வன்னி என்பவன் இராவணனை நோக்கி அந்த மானிடர் என்பார் யார்? அவர் வலிமை எத்தகையது என்பதை வினவினான் என்றவாறு. (38)

மாலியவான் அம்மனிதரின் வலிமையைச் சொல்லுதல்

9422 மற்ற வாசகங் கேட்டலு
மாலிய வான்வந்
துற்ற தன்மையு மனிதர
தூற்றமு முடனும்

கொற்ற வானரத் தலைவர் தந்
தகைமையுங் கூறக்
கிற்றுங் கேட்டிரா லென்றவன்
கிளத்துவான் கிளர்ந்தான்.

மற்று அ(வ்) வாசகம் கேட்டலும், மாலியவான் வந்து,
'உற்ற தன்மையும், மனிதரது ஊற்றமும், உடன் ஆம்
கொற்ற வானரத் தலைவர்தம் தகைமையும், கூறக்
கிற்றும், கேட்டிரால்' என்று அவன் கிளத்துவான் கிளர்ந்தான்.

பொ:- (வன்னி கூறிய) அச் சொல்லைக் கேட்டவுடனே, மாலியவான் முன்வந்து, 'இதுகாறும் நிகழ்ந்துள்ள தன்மையையும் மனிதர்களின் வலிமையையும், அம் மனிதரோடு வந்துள்ள வெற்றி பொருந்திய வானரத் தலைவர்தம் பெருமையயும் சொல்லும் வல்லமை யுடையேம்; கேட்பீர்களாக' என்று அவன் சொல்லுவதற்கு எழுச்சி கொண்டான்.

கு:- மற்று அவ் வாசகம் என்புழி வகரம் தொகுத்தல் விகாரம். ஊற்றம்- வலிமை. கிற்றும்-வலிமையுடையேம். இல் என்பது ஆற்ற லுணர்த்துவதோர் இடைச் சொல்; கிற்றும், என்பது அச்சொல்லின் அடியாகப் பிறந்த தன்மைப் பன்மை வினை முற்று. (39)

வாலியை யழித்தது

**9423** ஆழி யன்னநீ ரறிதிரன்
றேகட லனைத்தும்
ஊழிக் காலெனக் கடப்பவன்
வாலியென் போனை
ஏழு குன்றமு மெடுக்குறு
மிடுக்கனை யிந்நாள்
பாழி மார்பகம் பிளந்துயிர்
குடித்ததோர் பகழி.

'ஆழி அன்னநீர் அறிதிர் அன்றே, கடல் அனைத்தும்
ஊழிக் கால் எனக் கடப்பவன் வாலி என்போனை?
ஏழு குன்றமும் எடுக்குறும் மிடுக்கனை- இந்நாள்
பாழி மார்பகம் பிளந்து உயிர் குடித்தது, ஓர் பகழி.

பொ:- கடலைப் போன்று பரவியுள்ள நீங்கள், கடல்கள் எல்லாவற்றையும் ஊழிக்காற்றுப் போல விரைந்து கடந்து செல்பவனாகிய வாலி என்பவனை அறிவீரன்றோ? ஏழு குல மலைகளையும் எடுக்கவல்ல மிடுக்கினையுடைய அவ்வாலியை, இந் நாளில் இராமனுடைய ஓர் அம்பு, வலிமைமிக்க மார்பகத்தைப் பிளந்து உயிரைக் குடித்தது.

கு:- படைத்தலைவரின் தொகை மிகுதி புலப்பட 'ஆழியன்ன நீர்' என்றான். வாலி என்பவன் நாள்தோறும் எழுகடலைக் கடந்து பெரும் புறக்கடலில் சிவபூசை செய்யும் இயல்பினன் ஆதல் தோன்ற 'கடலனைத்தும் ஊழிக்காலெனக் கடப்பவன்' என்றான். "அலையின் வேலைசூழ் கிடந்த ஆழிமா மலையினின்றுமிம் மலையின் வாவுவான்" (கிட்சிந்தா-நட்புக்கோட்-39) என்பதும், "எட்டு மாதிரத் திறுதி நாலு மூற்று, அட்ட மூர்த்திதான் பணியு மன்பினான்" (நட்புக்கோட்-40) என்பதும் காணலாம். 'ஏழுகுன்றமும் எடுக்குறும் மிடுக்கன்' என்பதை "மேருவே முதற் கிரிகள் வேரொடும் பேருமே யவன் பேருமேல்" (நட்புக்கோட்-42) என முன்கூறியது கொண்டு தெளியலாம். பாழி-வலிமை. உயிர்குடித்தல் என்பது, உயிரை அது தங்கிய உடம்பினின்று பிரித்தலை. மிடுக்கனை மார்பகத்தைப் பிளந்து என்புழி இரண்டு செயப்படு பொருள்கள் வந்தன எனலாம். இனி, மிடுக்கனை மார்பின்கண் பிளந்து எனக் கண்ணுருபு விரித்தலும் ஆம். (50)

## விராதன் முதலியோரைத் தொலைத்தது

9424 பரிய தோளுடை விராதன்மா
ரீசனும் பட்டார்
கரிய மால்வரை நிகர்கர
தூடணர் கதிர்வேற்
றிரிசி ராவவர் திரைக்கட
லனபெருஞ் சேனை
ஒருவி லாலொரு நாழிகைப்
பொழுதினி னுலந்தார்.

பரிய தோளுடை விராதன், மாரீசனும் பட்டார்;
கரிய மால்வரை நிகர் கரதூடணர், கதிர்வேல்
திரிசிரா, அவர் திரைக்கடல் அன பெருஞ்சேனை,
ஒரு விலால், ஒருநாழிகைப் பொழுதினின் உலந்தார்.

பொ:- (இராமனுடைய) ஒரே வில்லினால், பருத்த தோள்களை யுடைய விராதனும் மாரீசனும் இறந்துபட்டார்கள்; கரிய பெரிய மலை போன்ற தோற்றத்தையுடைய திரிசிரா என்கின்ற அவர்கள், அலைகடல் போன்ற தம் பெரிய சேனையோடு ஒருநாழிகைப் பொழுதி னில் அழிந்தனர்.

கு:- ஒரு வில்லால் கரதூடணர், திரிசிரா என்பவர்கள் தம் கடலன்ன பெருஞ் சேனையோடு இறந்தார் என்பதில் உறுப்புக் குறை விசேட அணியும், நாழிகைப் பொழுதில் உலர்ந்தார் என்பதில் காலக் குறை விசேட அணியும் அமைந்திருத்தல் காணலாம். இராமனது ஒரு வில்லினால் விராதனும், மாரீசனும், கரனும், தூடணனும், திரிசிராவும் அழிந்தமை கூறியவாறு. (41)

## படைத் தலைவரை வினவியது

**9425** இங்கு வந்துநீர் வினயதென்
னெறிதிரைப் பரவை
அங்கு வெந்தில தோசிறி
தறிந்தது மிலிரோ
கங்கை சூடிதன் கடுஞ்சிலை
யொடித்தவக் காலம்
உங்கள் வான்செவி புகுந்தில
தோமுழங் கோதை

'இங்கு வந்து நீர் வினயது என்? எறிதிரைப் பறவை
அங்கு வெந்திலதோ? சிறிது அறிந்ததும் இலிரோ?
கங்கை சூடிதன் கடுஞ்சிலை ஒடித்த அக் காலம்,
உங்கள் வான் செவி புகுந்திலதோ, முழங்கு ஓதை?

பொ:- நீர், (இராம இலக்குவரின் ஆற்றலைப்பற்றி) இங்கு வந்து வினவியது ஏன்? (இராமனுடைய அங்கியங்கணையால்) அலைவீசும் கடல் அங்கு வேகவில்லையோ? அது இராமனால் நிகழ்ந்தது என்ப தைச் சிறிதும் அறிந்ததும் இல்லீரோ? கங்கையைச் சடையில் கொண்டுள்ள சிவனது கடுமையான வில்லை (இராமன் சீதையை மணக்கும் பொருட்டு) ஒடித்த அக் காலத்து அவ்வில் ஒடிந்ததாலாய முழங்கும் பேரொலியானது உங்களது சிறந்த செவியில் புகுந் திலதோ ?

கு:- கடல் வெந்தது கண்டும், வில்லொடிந்த அவ்வொலி கேட்டும், இருந்த இடத்திருந்தே இராம இலக்குவரின் ஆற்றலை அறிந்திருக்க வேண்டிய நீவிர், இங்கு வந்து வினவியது மிகை என்ற கருத்தால் 'இங்கு வந்து நீர் வினையது என் என்றான். கடல் வழி விடாதது கண்டு சினந்து இராமன் அங்கியங் கணை தொடுத்தபோது எல்லாக்கடல்களும் ஒக்க வெந்ததாகலின், இப்படைவீரர் இருந்த இடத்துள்ள கடலும் வேவாதிருக்க இயலாதாகலின் அது வெந்தது யாரால் என்பதை முன்னரே அறிந்திருக்க வேண்டியவர்கள் என்பதை வற்புறுத்தவே இங்ஙனம் கூறினர். மிதிலையில் சீதையின் பொருட்டுச் சிவன் வில்லை இராமன் ஒடித்த ஒலி எத்திசையினும் புக்கு ஒலித்ததாகலின் அவ்வொலி கொண்டு இராமனது வில்லாற்றலை உணர்ந்திருக்க வேண்டியவர்கள் படைத் தலைவர் என்றவாறு.

"பாழி பன்னெடுங் கொடுஞ்சிலை வழங்கிய பகழி, ஏழு வேலையும் எரியொடு புகைமடுந்தேகி, ஊழிவெங்கனற் கொழுந்துக ளுருத்தெழுந்தோடி, ஆழிமால்வரைக் கப்புறத்திருளையும் அவித்த" (வருணனை வழிவேண்டு படலம்-20) என்பதால் இராமனுடைய அங்கியங் கணையின் ஆற்றல் புலப்படும். "ஆரிடைப் புகுதும் நாமென்று அமரர்கள் கமலத்தோன்றன் பேருடை யண்டகோளம் பிளந்தது என்று ஏங்கி நைந்தார்; பாரிடை யுற்றதன்மை பகர்வதென் பாரைத் தாங்கி வேரெனக் கிடந்த நரகம் இடியென வெருவிற் றன்றே" (பால-கார்முகப்-35) என்பதால் வில்லொடித்த ஒலியின் பெருமையை யறியலாம். (42)

## இலங்கையின் ஆயிரவெள்ளச் சேனையும் அழித்தமை விளம்பல் 9426—9428

9426 ஆயி ரம்பெரு வெள்ளமுண்
டிலங்கையி னளவில்
தீயின் வெய்யபோ ரரக்கர்தஞ்
சேனையைச் சேனை
போய தந்தகன் புரம்புக
நிறைந்தது போலாம்
ஏயு மும்மை நூன் மார்பின
ரெய்தவி லிரண்டால்.

'ஆயிரம் பெருவெள்ளம் உண்டு, இலங்கையின் அளவில்,
தீயின் வெய்யபோர் அரக்கர்தம் சேனை; அச்சேனை
போயது, அந்தகன் புரம்புக நிறைந்தது போலாம்.
ஏயும் மும்மைநூல் மார்பினர் எய்தவில் இரண்டால்.

பொ:- இலங்கையின் எல்லையில் நெருப்பினும் கொடியவர்களாய்ப் போர் செய்யும் அரக்கர்தம் சேனை ஆயிரம் பெருவெள்ளம் உண்டு. அச்சேனை முழுவதும் அழிந்து போயது; எமபுரத்தில் புக, அது நிறைந்தது போலும்! (இவ்வளவும் செய்தவை) முந்நூல் பொருந்திய மார்பினர் ஆகிய இராம இலக்குவர் எய்த வில் இரண்டே ஆம்.

கு:- ஆயிரம் வெள்ளம் சேனையும் அழிந்தது நேரே பார்த்தது; அச் சேனை முழுவதும் அந்தகன் புரம் புக்கு நிறைந்தது பாராதது ஆகலின், 'நிறைந்தது போலாம்!' என்றான். உடம்பில் நின்றும் பிரிந்த உயிர்களை எமபுரத்துச் செலுத்துவது என்பது நூலணியாலன்றிக் காட்சியளவைக்கு எட்டாமையும் தெளியலாம். ஆயிரம் வெள்ளம் அரக்கர் சேனையையும் எய்து அழித்த வில் இரண்டு என்பது உறுப்புக் குறை விசேட அணி. மும்மை மூன்று என்னும் பொருளது 'தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' (பரிபாடல்) என்புழிப் போல. மும்மை நூல் ஏயும் மார்பினர் என இயையும்.

9426 a அன்ன தன்றியு மாழிநீர்க் கப்புறத் துலகில்
துன்னு றும்சத கோடி வெள்ளத் தொகை யரக்கர்
தன்னை யோர்கணத் தெரித்தது சலபதி வேண்ட
மன்னி ராகவன் வாளியொன் றவையறிந் திலிரோ.

9427 கொற்ற வெஞ்சிலைக் கும்பகன்
னனு நுங்கள் கோமான்
பெற்ற மக்களும் பிரகத்தன்
முதலினர் பிறரு
மற்றை வீரரு மிந்திர
சித்தொடு மடிந்தார்
இற்றை நாள்வரை யானுமற்
றிவனுமே யிருந்தேம்.

'கொற்ற வெஞ்சிலைக் கும்பகன்னனும், நுங்கள் கோமான்
பெற்ற மைந்தரும், பிரகத்தன் முதலிய பிறரும்,
மற்றை வீரரும், இந்திரசித்தொடு மடிந்தார்;
இற்றை நாள்வரை, யானும் மற்று இவனுமே இருந்தேம்.

பொ:- வெற்றியே பெறுதற்குரிய கொடிய வில்லை யேந்திய கும்பகன்னனும், நும் அரசனாகிய இராவணன் பெற்ற மைந்தர்களும், பிரகத்தன் முதலிய பிறரும், மற்றைய வீரர்களும் இந்திரசித்தோடு மடிந்தார்கள்; இன்று வரையில் யானும் இந்த இராவணனுமே மடியா திருந்தோம்.

கு:- இந்திரசித்தும் இராவணன் மைந்தனே ஆயினும் மற்றவர் களினும் அவன் சிறந்த மைந்தன் ஆதல்பற்றி, 'இந்திரசித்தொடு' என உயர்பின் வழி வரத்தக்க ஒடுக் கொடுத்துப் பிரித்துக் கூறினார். (44)

**9428** மூலத் தானையென் றுண்டது
மும்மைநூ றமைந்த
கூலச் சேனையிவ் வெள்ளமற்
றதற்கின்று குறித்த
காலச் செய்கையா னீர்வந்தி
ராயினக் கழலோர்
சீலச் சேனையின் செய்வினைச்
செய்கையும் தெரிவீர்.

மூலத்தானை என்று உண்டு; அது மும்மைநூறு அமைந்த கூலச்சேனையிவ் வெள்ளம்; மற்று அதற்கு இன்று குறித்த காலச் செய்கையான் நீர் வந்திர்ஆயின் அக்கழலோர் சீலச் சேனையின் செய்வினைச் செய்கையும் தெரிவீர்.

பொ:- மூலபலப்படை என்று ஒன்று உண்டு; அது மூன்று நூறாக அமைந்த திரண்ட சேனையாகிய வெள்ளம்; அம் முந்நூறு வெள்ள சேனைக்கும் இன்று போர் செய்யுமாறு குறிக்கப்பெற்ற காலத்தின் செயலால் (அச் சேனைக்கு உதவியாக) நீவிர் வந்திருக் கின்றீர்கள்; ஆதலால், அந்த வீரக் கழலை அணிந்த இராம இலக்குவர் தம் ஒழுக்கத்திற் சிறந்த குரங்குச் சேனையின் செய்வினை போன்ற செய்கையும் தெரிந்து கொள்வீராக.

கு:- முந்நூறு வெள்ளம் மூலத் தானை போர் செய்யவேண்டிய நாள் இன்று ஆதலின் அந்தத் தானைக்குத் துணையாக நீவிர் வந்துளீர் என்றவாறு. இராமனது வில்லாற்றலைப்பற்றி முன்னமே கூறிவிட்ட மையால் இங்குச் 'சேனையின் செய்கையும்' தெரிவீர் எனக் கூறலானான். உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது. காலச் செய்கையான்

என்றது, போர் செய்தற்குரிய நாளாகக் குறிக்கப்பட்ட செய்கையால் என்றவாறு. ஆயின்—ஆதலால். அக்கழலோர் என்றது வீரக்கழலை அணிந்த இராம இலக்குவரை. அரக்கர் படைபோலச் சிலமில்லாத செயல்களைச் செய்யாத படை என்பான், சிலச் சேனை என இராமனது சேனையைச் சிறப்பித்தவாறு, செய்வினை என்றது, மந்திரத்தால் விரைந்து செய்து முடிக்கும் செயலை. அந்தச் செய்வினையோ எனப் பிறர் எண்ணுமாறு வானரப்படை அரிய செயல்களைச் செய்து முடிக்க வல்லது என்றவாறு. (45)

## அனுமனின் சிறப்பு 9429-9430

**9429** ஒருகு ரங்குவந் திலங்கையை
மலங்கெரி யூட்டித்
திருகு வெஞ்சினத் தக்கனை
நிலத்தொடுந் தேய்த்துப்
பொருது தூதுரைத் தேகிய
தரக்கியர் புலம்பக்
கருகு சேனைமாக் கடலையுங்
கடலையுங் கடந்து.

ஒருகுரங்கு வந்து இலங்கையை மயங்கு எரி ஊட்டி,
திருகு வெஞ்சினத்து அக்கனை நிலத்தொடும் தேய்த்து,
பொருது, தூது உரைத்து, ஏகியது,—அரக்கியர் புலம்ப,
கருகு சேனைமாக் கடலையும்; கடலையும் கடந்து.

பொ:- ஒரு குரங்கு வந்து, இலங்கையைக் கலங்குதற்குக் காரணமான தீக்கொள்வித்து, மாறுபட்ட சினத்தையுடைய அக்க குமாரன் என்பவனை நிலத்தோடும் தேய்த்துக் கொன்று, போர் செய்து, தூது சொல்லி, அரக்கியர் புலம்புமாறு கரிய அரக்கர் சேனையாகிய பெருங்கடலையும் கருங்கடலையும் வென்றும் கடந்தும் சென்றது.

கு:- ஒரு குரங்கு என்றது அனுமனை. மலங்கெரி என்றது கலங்குதற்குக் காரணமான எரி என்றவாறு. திருகுதல்—மாறுபடுதல். அக்கன் என்றது அதிககுமாரனை. கருகு சேனை என்றது, கருநிறத்தையுடைய அரக்கர் சேனையை. சேனைமாக்கடல் என்றது உருவகம்; சேனையின் பெருக்கை யுணர்த்த இங்ஙனம் உருவகஞ் செய்தவாறு.

கடந்து என்றது 'வென்று' என்றும் தாண்டி என்றும் இருபொருள் படும் சொல்லாதலின் அவ்விருபொருளும் படுமாறு இங்குச் 'சேனை மாக்கடலையும் கடலையும் கடந்து' என்றார். சேனைமாக்கடலை வென்று, கடலைத் தாண்டி என்று இருபொருளும் கூறுக. கடந்து ஏகியது என இயையும். குரங்குதானே; என எள்ளிச் சிரித்தார்க்கு அதன் வலிமை புலப்படுத்தியவாறு. (46)

**9430** கண்டி லீர்கொலாங் கடலினை
மலைகொண்டு கட்டி
மண்டு போர்செய வானர
ரியற்றிய மார்க்கம்
உண்டு வெள்ளமோ ரெழுபது
மருந்தொரு நொடியின்
கொண்டு வந்தது மேருவிற்
கப்புறங் குதித்தே.

கண்டிலீர் கொலாம், கடலினை மலைகொண்டு கட்டி,
மண்டு போர்செய, வானரர் இயற்றிய மார்க்கம்?
உண்டு வெள்ளம் ஓர் எழுபது; மருந்து ஒரு நொடியில்
கொண்டு வந்தது, மேருவிற்கு அப்புறம் குதித்தே.

பொ:- (நீவிர் இகழ்ந்து கூறிய) குரங்குகள், நெருங்கிய போர் செய்யும் பொருட்டுக் கடலினை மலைகொண்டு அடைத்துக் கட்டிய சேதுவைக் காணவில்லையோ? (பகைவரிடம்) எழுபது வெள்ளம் வானரப் படை உண்டு; (அப்படையில் ஒரு குரங்கு) மேருவிற்கு அப் புறங் குதித்து ஒரு நொடிப் பொழுதில் மருந்துகொண்டு வந்தது.

கு:- மார்க்கம் என்றது இங்குச் சேது அணையை. அனுமன் மருத்து மலையைக் கொணர்ந்த அரிய செயலையும் சேது அணையைக் கட்டிய திறலையும் படைத் தலைவர்கள் விளக்கிப் பகைவர் எளியரல்லர் என்பதைப் புலப்படுத்தியவாறு. (47)

**9431** இதுவி யற்கையோர் சீதையென்
றிருந்தவத் தியைந்தாள்
பொதுவி யற்கைதீர் கற்புடைப்
பத்தினி பொருட்டால்

விதிவி ளைத்ததவ் வில்லியர்
வெல்கநீர் வெல்க
முதுமொ ழிப்பதஞ் சொல்லினெ
னென்றுரை முடித்தான்.

"இது இயற்கை; ஓர்சீதை என்று இருந் தவத்து இயைந்தாள்
பொது இயற்கை தீர் கற்புடைப் பத்தினி பொருட்டால்,
விதி விளைத்தது அவ் வில்லியர் வெல்க! நீர் வெல்க!
முதுமொழிப் பதம் சொல்லினென்' என்று உரை முடித்தாள்.

பொ:- 'இது பகைவர்தம் சேனையின் இயல்பு; பெரிய தவத்தொடு பொருந்தினவளான, ஒப்பற்ற சீதை என்ற சிறப்பியல்புடைய கற்புடைப் பத்தினியின் பொருட்டாக விதியே (இத்தகைய பெரும் பகையை) விளைத்தது; அந்த வில் வீரராகிய இராம இலக்குவரே வெல்க! அல்லது நீங்களே வெல்க! முதுவோர் மொழிதற்குரிய சொல்லைச் சொன்னேன்' என்று மாலியவான் தன் சொல்லை முடித்துக் கொண்டான்.

கு:- மேல் "சேனையின் செய்வினைச் செய்கையும் தெரிவீர்" என்று தொடங்கினன் மாலியவான் ஆகலின் இங்கு 'இது இயற்கை' என, அப்படையின் ஆற்றலைத் தெரிவித்தபின் கூறினன். இத்தகைய பெரும்பகையைச் சீதையின் பொருட்டாக விதியே விளைத்தது என்பது மாலியவான் கருத்து. சீதையை வஞ்சித்துக் கவர்ந்ததால் வந்த விளைவே இத் துன்பங்கள் என்றவாறு விதி விளைத்தது என்றமையால் இராவணன் வெல்ல இயலாது என்பதை மாலியவானே கூறி விட்டான் என்று அப்படைத் தலைவர் வருந்தா வண்ணம் 'அவ் வில்லியர் வெல்க! நீர் வெல்க! முதுமொழிப் பதம் சொல்லினென்' என இறுதியில் கூறினன். முதுவோர் மொழியத்தக்க சொல் இது என்றவாறு. (48)

வன்னியின் வினாவிற்கு இராவணன்,
புன்மை நோக்கிக் குரங்கொடு பொருதிலேன் எனல்

9432 வன்னி மன்னனை நோக்கிநீ
யிவரெலா மடிய
என்ன காரண மிகல்செயா
திருந்ததென் றிசைத்தான்

புன்மை நோக்கிநான் நாணினன்
பொருதில னென்றான்
அன்ன தேலினி யமையுமெங்
கடனஃ தென்றான்.

வன்னி, மன்னனை நோக்கி, 'நீ இவர் எலாம் மடிய,
என்ன காரணம், இகல் செயாது இருந்தது?' என்று இசைத்தான்;
'புன்மை நோக்கி நான் நாணினன் பொருதிலன்' என்றான்!
'அன்னதேல், இனி அமையும் எம் கடன் அஃது' என்றான்.

பொ:- வன்னி, இராவணனை நோக்கி, 'இவர்கள் எல்லாம் மடியவும் நீ போர் செய்யாது இருந்ததற்கு என்ன காரணம் என்று வினவினான்; இராவணன் (கூற்றையும் ஆடல் கொண்ட நான் குரங்கொடு பொருதல்) புன்மை என நோக்கி நாணிப் போர் செய்யாதிருந்தேன்" என்று கூறினான். (வன்னி) அப்படியானால் அவரோடு போர் செய்வது எம் கடமையாக அமையும் என்றான்.

கு:- அவரெலாம் என்றது கும்பகன்னன் இந்திரசித்து போன்ற பெருவீரரை. அவரெலாம் மடிய நீ இகல் செயா திருந்தது என்ன காரணம் என்று இசைத்தான் என இயையும். அற்பக் குரங்கோடும் மனிதரோடும் போர் செய்வது புன்மையாகும் என நாணிப் போர் செய்திலேன் என இராவணன் கூறியது பொருத்தமாக இருத்தலின் வன்னி, 'அன்னதேல் இனி அஃது எம் கடன் அமையும்' என்று கூறலானான். வானரப் படையோடும் மனிதரோடும் போர் செய்வது இனி எம் கடமையாக அமையும் என்று வன்னி ஏற்றுக்கொண்டவாறு. (49)

வன்னி, மாலியவான் கருத்துப்படி செய்தற்கு
இது காலம் அன்று எனல்

9433 மூது ணர்ந்தவிம் முதுமகன்
கூறிய முயற்சி
சீதை யென்பவ டனைவிட்டம்
மனிதரைச் சேர்தல்

ஆதி யின்றலை செயத்தக்க
தினிச்செய்வ திழிவால்
காத லிந்திர சித்தையும்
மாய்வித்தல் கண்டும்.

"மூது உணர்ந்த இம் முதுமகன் கூறிய முயற்சி
சீதை என்பவள் தனை விட்டு, அம் மனிதரைச் சேர்தல்;
ஆதியின் தலை செயத்தக்கது; இனிச் செய்வது இழிவால்,
காதல் இந்திர சித்தையும் மாய்வித்தல் கண்டும்.

பொ:- பழையனவற்றை உணர்ந்த இம் முதியவன் மாலியவான் கூறிய முயற்சிப் பயன், சீதை என்பவளைச் சிறையிலிருந்து விடுத்து அந்த மனிதரைச் சேர்வது என்பதாகும்; அது, முன்னமே தொடக்கத்தில் செய்யத்தக்க செயல் ஆகும்; அன்பிற்குரிய இந்திரசித்தினையும் பகைவர் கொல்லக் கண்டும் இனி அவ்வாறு செய்வது இழிவாகும்.

கு:- மாலியவான் இராமனது ஆற்றலையும் வானரப் படையின் வலிமையையும் புகழ்ந்து கூறி, விதியின் விளைவு இது என்று கூறியதன் கருத்துச் சீதையை விடுத்து இராமனோடு நட்புக் கொள்ள வேண்டும் என்பதே யாதலின் அக் கருத்து நோக்கி வன்னி இவ்வாறு கூறினான் என்க. மாலியவான் இவ்வாறு வெளிப்படக் கூறவில்லை, இந்திரசித்தையும் மாய்வித்தல் கண்டும் இனிச் செய்வது இழிவு என இயையும். தொடக்கத்தில் செய்திருந்தால் கும்பகன்னன் இந்திரசித்து முதலிய, பெரு வீரர் அனைவரும் உய்ந்திருப்பர்; இனி அவ்வாறு செய்வதால் இராவணன் ஒருவனே உய்வான் ஆதலின், இந்திரசித்தை இழந்தும் உயிரையும் அரசையும் இராவணன் பெரிதென மதித்துப் பகைவரைப் பணிந்தான் என்ற இழிவு உண்டாகும் என்றவாறு. கும்பகன்னனும் "மட்டவிழ் மலர்க்குழலினாளை யினி மன்னு விட்டிடுதுமே லெளிய மாது மவர் வெல்லப், பட்டிதுடுமே லதுவு நன்று பழியன்றால்" (இராவணன் மந்திரப்—53) என முன்னமே கூறியிருத்தல் காணலாம். (50)

இனிச் செய்யத் தக்கது போரே எனல்

9434 விட்ட மாயினு மாதினை
வெஞ்சமம் விரும்பிப்
பட்ட வீரரைப் பெறுகிலம்
பெறுவது பழியால்

முட்ட மற்றவர் குலத்தொடு
முடிக்குவ தல்லால்
கட்ட மத்தொழில் செருத்தொழி
லினிச் செயுங் கடமை.

'விட்டம் ஆயினும் மாதினை, வெஞ்சமம் விரும்பிப்
பட்ட வீரரைப் பெறுகிலம்; பெறுவது பழியால்;
முட்ட மற்றவர் குலத்தொடு முடிக்குவது அல்லால்,
கட்டம், அத் தொழில்; செருத்தொழில் இனிச் செயும் கடமை.

பொ:- இப்போது சீதையை விடமாட்டோமாயினும், கொடிய போரை விரும்பிச் சென்று இறந்து பட்ட வீரரைப் பெற இயலாது; பெறுவது பழியையே; ஆதலால், பகைவர்தம் குலத்தோடு முழுவதும் அழிப்பது அல்லது, அந்தச் சமாதானத் தொழில் வருத்தம் தருவதாகும்; இனிச் செய்யத் தக்க கடமை போர்த் தொழிலை மேற்கொள்வதே ஆம்.

கு:- முட்ட என்பது முற்ற என்னும் பொருளது. 'முட்ட நித்திலம் நிரைத்த பந்தரின்' (வில்லிபாரதம்—கிருட்டினன் தூது—103) என்புழியும் இச் சொல் இப் பொருளில் வந்துள்ளமை காணலாம். கட்டம் என்பது வடமொழித் திரிபு. கொடுந் தொழில்–போர்த் தொழில். (51)

வென்று மீளுவம் என வஞ்சினம் கூறிச் செல்லுதல்

9435 என்றெழுந்தன ரிராக்கத
ரிருத்திநீ யாமே
சென்று மற்றவர் சில்லுடற்
குருதிநீர் தேக்கி
வென்று மீளுதும் வெள்குது
மேன்மிட லில்லாப்
புன்றொழிற்குல மாதுமென்
றுரைத்தனர் போனார்.

'என்று, எழுந்தனர் இராக்கதர், 'இருக்க நீ; யாமே
சென்று, மற்றவர் சில்லுடல் குருதி நீர் தேக்கி,
வென்று மீளுதும்; வெள்குதுமேல், மிடல் இல்லாப்
புள் தொழில் குலம் ஆதும்' என்று உரைத்தனர் போனர்.

பொ:- என்று சொல்லிப் படைத் தலைவராகிய இராக்கதர்கள் எழுந்தவர்களாய், (இராவணனை நோக்கி) 'நீ இங்கு இருப்பாயாக! யாங்களே சென்று அப்பகைவரின் சிறிய உடலில் உள்ள இரத்தத்தைக் குடித்து வென்று மீள்வோம்; அவர்களுக்கு நாணிப் பின் வாங்குவோமாயின் வலிமை யில்லாத சிறு தொழில் செய்யும் குலத்தவர் ஆவோம் என்று சொல்லிப் போயினர்.

கு:- இராவணனை விலக்க 'யாமே சென்று' என்றனர். அம்மனிதரை வெல்ல இராவணன் உடன் வரல் வேண்டாம் என்றவாறு. சில் உடல் என்றது சிறிய உடலே. அரக்கர் உடலை நோக்க மனிதருடல் சிறியது ஆதலின் இராம இலக்குவர் உடலைச் 'சில்லுடல்' என்றான். வன்னியோடு உடன் வந்த இராக்கதப் படைத் தலைவர் யாவரும் எழுந்தனர் என்க. வெள்குதல் இங்கு நாணிப் பின் வாங்குதலே. மிடல்—வலிமை புன் தொழிற் குலம் என்றது மாதர்குலத்தை; மனிதர் குலம் என்னலும் ஆம். (52)

# 30. மூலபல வதைப் படலம்

## முன்னுரை

இராமபிரான் இராவணனது மூலப்பெருஞ்சேனையை அழித்த செய்தியைக் கூறும் படலமாதலின் இது மூலபலவதைப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இது, மூலபெலவதைப் படலம் எனவும், மூலப்படைவதைப் படலம் எனவும், மூலபலவதப்படலம் எனவும் ஏடுகளிற் குறிக்கப்பட்டுள்ளது. மூலபலம்—மூலப்படை. ஒரு நாட்டிற்கு இன்றியமையாத படைகளை மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை, என ஆறு வகையாகப் பகுத்துரைப்பர். அவ்வறுவகைப் படைகளிலும் சிறப்புடையது மூலப் படையாதலால், அதனை அரசன் 'வெல்பொறியும் நாடும் விழுப்பொருளும் தண்ணடையும், கொல்களிறும் மாவும் கொடுத்தளிக்க' என்பது விதி. இம்மூலப் படையானது, நாட்டில் தொன்று தொட்டுத் தொடங்கி நிலைபெற்றுவரும் தன்மையதாதல் நோக்கி இதனைத் தொல்படை எனக் குறிப்பிடுவர் திருவள்ளுவர். தான் அளவாற் சிறியதாய வழியும் அரசற்குப் போரின்கண் உலைவு வந்தால் தன்மேல் உறுவதற்கு அஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை இத்தொல் படைக்கல்லது ஏனைய படைகட்கு இல்லையென்பதனை,

> 'உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
> தொல்படைக் கல்லால் அரிது' (762)

என வரும் திருக்குறளில் ஆசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார்.

மாற்றுரைத் தாமே போரில் வென்று வருவதாக அரக்கர் கூறியது கேட்ட இராவணன், 'வானரசேனையை யானே உயிருண்பேன். நீங்கள் ஒருங்கு சென்று இராம இலக்குவராகிய அவ்விருவரையும் கொன்றொழிப்பீராக' என அவ்வரக்கர்க்குக் கட்டளையிட்டான். அவ்வரக்கர்கள் தத்தமக்குரிய ஊர்திகளில் ஏறிச் சேனையுடன் சேர்ந்தனர். இராவணன் அச்சேனைகளின் முன்னே தனது மூலப்படைகளை அனுப்பும்படி கட்டளையிட்டுத் தான் தேரில் ஏறி வானர சேனைகளின்மேற் சென்றான். 'படைகள் போர்க்குப் புறப்படுக' என வள்ளுவர் யானைமேல் முரசறைந்து அறிவித்தனர். இராவணனுடைய மூலப்படைகள் எல்லாத்திசைகளிலும் வந்து நிறைந்தன. அவற்றைக் கண்டு நடுக்கமுற்ற தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். 'இராமபிரான்

அரக்கர்களை ஒரு சேர அழித்தொழிப்பான். நீங்கள் சிறிதும் அஞ்சாதீர்கள்' எனச் சிவபெருமான் தேவர்கட்கு ஆறுதல் கூறியருளினார்.

மூலப்படையைக் கண்ணுற்ற வானரசேனைகள் அஞ்சி நிலைகெட்டு ஓடின. சுக்கிரீவன், அனுமன், அங்கதன் என்னும் இவர்களைத் தவிர ஏனைய வானர சேனைத் தலைவர்கள் யாவரும் அஞ்சி ஓடிய செயலைக் கண்ணுற்ற இராமபிரான், வீடணனை நோக்கி, 'கொடிய இவ்வரக்கர் சேனை எங்கிருந்து வந்தது ?' என வினவ, ,எல்லாத் திசைகளிலும் ஏழு பெருந்தீவுகளிலும் கீழ் உள்ள உலகங்களிலும் இராவணனுக்கு உரியனவாகவுள்ள மூலப்பெருஞ் சேனைகளாகிய இவை தீவினை தள்ள இங்கு வந்துள்ளன. இவை யாவும் விரைவில் அழிந்தொழிவன' என இறைஞ்சிக் கூறினான் வீடணன். அது கேட்ட இராமன், 'ஒரு கணத்தே எனது ஆற்றலைக் காட்டுகின்றேன்' எனக் கூறி, அங்கதனை நோக்கி, 'வன்மை படைத்தவனே ! அஞ்சி ஓடிய வானர சேனையை அச்சமகற்றி விரைவில் அழைத்து வருக' எனக் கூற, அங்கதனும் விரைந்து சென்று வானர சேனையை அடைந்து, 'பல திசைகளிலும் ஓடுகின்றவர்களே ! யான் கூறுவதனைச் சிறிது பொழுது நின்று கேட்டபின் செல்வீராக' எனக் கூறினான். 'நாங்கள் ஒன்றையும் கேட்க மாட்டோம்' என்று சொல்லிக் கொண்டு குரங்கினங்கள் ஓடின. பெரிய படைத்தலைவர்கள் மட்டும் மீண்டுவந்து வடதிசையில் உள்ள மலையொன்றிற் கூடினார்கள். அங்கதன் சேனைத் தலைவர்களாகிய அவர்களை நோக்கி, 'நீங்கள் எதனைக் கருதி இவ்வாறு அஞ்சி ஓடியது?' என வினவினான். 'எங்களை ஆளும் தலைவனே! நீ அவ்வரக்கர்களின் பெருவன்மையினைச் சிறிதும் அறிந்திலைபோலும். நாம் இறந்த பின்பு செய்தற்குரியது யாதுளது?' எனக் கூறினர் சேனைத் தலைவர்கள். அங்கதன் சாம்பவானை நோக்கி, "யாவர்க்கும் அச்சமகற்றி அறிவுரை கூற வல்ல பெரியோனாகிய நீயும் இவ்வாறு அஞ்சியோடுதல் நினது தகுதிக்கு ஒத்ததன்று' எனக் கூறினான். அது கேட்ட சாம்பவான் நாணத்தாற் சிறிதுநேரம் வாட்டமுற்றிருந்து, 'வீரனே! இவ்வரக்கரது தோற்றத்தைக் கண் விழித்துக் காணவோ கண்டு நிற்கவோ இறைவனுக்கும் இயலுமோ? எளிய மலர்களையுண்டு உயிர்வாழும் குரங்கின்மேற் குற்றமுண்டோ? முற்காலத்தில் தேவர் அசுரர் செய்த போர்களிலும் இவ் வரக்கரளவு ஆற்றல்மிக்க வீரர்களை நான் கண்டதில்லை. கூற்றுவனும் இவர்களை எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையா னல்லன். முற்காலத்தில் இருந்த மாலி, மாலியவான், இரணியன், மதுகைடவர் முதலியோர்க்கும் இவ் வரக்கர்க்குள்ள ஆற்றல் இல்லை. தேவர்களும் இவர்களைக் கண்டு மெலிவாராயின் நாங்கள் அஞ்சியதில் வியப்பில்லை. ஆயினும் போரில் இறப்பதனைவிட்டு அஞ்சி ஓடிவந்த செயல் முறையன்று. இந்

நிலையில் மீண்டும் இராமபிரான் முன்பு சென்று எவ்வாறு விழித்து நிற்போம்?' என வருந்திக் கூறினன். அதுகேட்ட அங்கதன், 'நம்மால் இப்போரில் செய்யத்தகுவது எதுவுமில்லையாயினும் நாம் எல்லோரும் இராமபிரானைச் சார்ந்து நிற்போம். அவன் பகைவரைக் கொன்று வெற்றி பெறுவானாயின் நாமும் வெற்றிகொள்வோம். அன்றேல் நாமும் அவனுடன் உயிர் துறப்போம்' என்றான். அம் மொழியினைச் செவிமடுத்த வானரசேனைத் தலைவர் அனைவரும் அங்கத னுடன் சேர்ந்து இராமபிரான்பால் அடைந்தனர்.

அந்நிலையில் இராமன், இலக்குவனை நோக்கி வானர சேனையைப் பாதுகாக்குமாறு பணித்துச் சுக்கிரீவன் முதலியோரை இலக்கு வனுக்குத் துணையாகுமாறு கூறித் தான் மூலப்படைமேல் போர்க்குப் புறப்பட்டான். அனுமன் இராமனைப் பணிந்து நின்று, 'எந்தையே! எனது தோளின்மேல் ஏறிச் செல்லுதல் நன்றெனக் கருதுகின்றேன். அன்றேல் நாயேன் உன்பின் தனியே நின்ற போதும் எனது அடிமையில் தவறேன்' எனக் கூறினன். இராமன் அனுமனை நோக்கி, 'வீரனே! இலக்குவன் நின்னைப் பிரியானாயின் இனியும் வெற்றி கொள்வான் என எண்ணுகின்றேன். நீ வானர சேனையையும் என் தம்பியையும் சுக்கிரீவனையும் பாதுகாத்து வானுலகினையும் மண்ணுல கினையும் வாழச் செய்வாயாக' என்றான். அனுமனும் அதற்கு மாறுரைக்க மாட்டாதவனாய் இலக்குவன் பின்னே எழுந்து சென்றான். 'வீடணனே! நீயும் உன் தம்பி இலக்குவனுடன் சென்று அரக்க ருடைய வஞ்சனைகளைத் தெரிந்து கூறி வெற்றி பெறுதற்குரிய சேனையைத் தாங்கி நில்லாயாயின் நமக்குத் தீங்குளதாம்' என இராமன் கூறினன். வீடணனும் அதற்கு இசைந்தனன். சுக்கிரீவனும் இராமன் கருத்தின்படி இலக்குவன் பின்னே சென்றான். இவர்கள் எல்லோரும் வானர சேனையைக் காத்து நின்றனர்.

இராமன் போர்க்கோலம் பூண்டான். நூறு யோசனைப் பரப் புள்ள அரக்கருடைய முன்னணிச் சேனைகள் இராமனைச் சூழ்ந்து கொண்டன. அது கண்டு தேவர்கள் நடுக்கமுற்றனர். வானமெங்கும் புழுதிகள் பரவின. அன்புடைய முனிவர்கள் கண்ணீர் மல்கியவராய், 'பாவிகளாகிய அரக்கர்கள் தோல்வியுறுக. அண்ணல் இராமன் வெல்க' என ஆசி கூறினர்கள். மற்றுள்ள தேவர்களும் 'அரக்கர் தீர்க இராமன் வெல்க' என வாழ்த்தினர். தேர் முதலியன இன்றித் தனியனாய் எதிர்த்து நின்ற இராமனது உள்ளத் திண்மையைக் கண்டு அரக்க வீரர்கள் வியந்து பாராட்டினர்; 'தனியனாக நின்ற இவன், ஆற்றல் மிக்க நன்மை அகன்று தப்புதல் இயலுமோ?' என்று கூறி அவனைச் சூழ்ந்துகொண்டனர்.

அந்நிலையில் இராமன் தனது வில்லின் நாணைத் தெறித்தான். அவ்வொலியினைக் கேட்ட அளவில் அரக்கருடைய நால்வகைச் சேனைகளும் ஆற்றல் குன்றின. அச்சேனைகளினிடையே பலவகைத் தீய நிமித்தங்கள் உண்டாயின. இராமன் அரக்கர் சேனைகளின்மேல் ஒழியாத அம்பு மழையினைப் பொழிந்தனன். அதனால் அரக்கர் சேனைகள் அழிவுற்றன. பலகோடியளவினராகிய அரக்கர்கள் தெய்வப் படைக்கலங்களை இராமன்மேல் ஏவிக் கடும்போர் புரிந்தனர். இராமன் தான் ஒருவனாகவே சாரி திரிந்து அரக்கர்களை வென்றனன். அரக்கரிற் பெரும்பாலோர் போரில் மடிந்தனர். போர்க்களத்திலே தலையற்ற உடல்கள் எழுந்து ஆடின. குருதிநீர் கடல்போன்று எங்கும் பரவியது. அந்நிலையில் வன்னி என்னும் அரக்கர் தலைவன் 'ஒருவனாகிய இவ்விராமன் நம் சேனைகளை யெல்லாம் தனி நின்று கொல்வதோ? மலைபோன்ற அரக்கர்களாகிய நாம் ஒன்றும் செய்யவியலாது வெண்பல்லை மெல்வதோ' என வெகுண்டுரைத்துத் தளர்ந்து பின்னிட்ட சேனைத் தலைவர்களை ஊக்குவித்து இராமன்மேற் செலுத்தினான். முற்பட்டுச் சென்ற அரக்கர்களால் ஏவப்பட்ட பல்வகைப் படைக்கலங்களையும் இராமபிரான் அம்பினால் பொடியாக்கி அரக்கர் எல்லோரையும் பொருதழித்தனன். அந்நிலையில் நூறு நூறு கோடியளவினரான அரக்கர் படைத்தலைவர்கள் இராமனைச் சூழ்ந்து கொண்டு கடும்போர் புரிந்தனர்.

அது கண்டு கலங்கிய தேவர்கள், சிவபெருமானை அணுகி வணங்கி 'அரக்கர்கள் பலகோடி யளவினராகச் சூழ்ந்துள்ளார்கள். இராமனோ தனித்துள்ளான். இனி நிகழப்போவது யாதோ? அதனைத் தெரிவித்தருள்க' எனக் கூறி வருந்தி நின்றனர். கறைமிடற் றிறைவனாகிய அக்கடவுள் தேவர்களை நோக்கி, 'அஞ்சாதீர்கள்! இவ்வரக்கர் எத்துணை பேராயினும் இராமன் ஒருவனே இவர்களைக் கொன்று விரைவில் வெற்றி பெறுவான்' எனக்கூறித் தேற்றினன். பிரமனும் அதுவே நிகழ்தற்குரியது என உடன்பட்டுரைத்தனன். தேவர்கள் அச்சம் நீங்கி அமைதி பெற்றனர். இராமன் அம்பினைச் சொரிந்து அரக்கர் தலைகளை பலைபோற் குவித்தனன். அரக்கரது அழிவு கண்டு தேவர்கள் மலர் மழை பொழிந்தனர். அரக்கர் படைத் தலைவர்கள் சிதறியோடும் தம்முடைய சேனைகளைத் தடுத்து நிறுத்தி இராமன் மேற்செலுத்திக் கடும்போர் புரிந்தனர். இராமனும் அரக்கர் சேனைகளைக் கொன்று அவர்களது சேனைகள் சுருங்கிய நிலையில் அவர்கள் தப்பியோடாதபடி அம்புகளால் மதில் அமைத்தனன். அம்மதிலைக் கடக்க மாட்டாத அரக்கர் பலரும் இராம பாணத்தால் மாண்டொழிந்தனர். இராமனது பேராற்றலை யறிந்து இவன் திருமாலேயாதல் வேண்டும் என்று எண்ணிய அரக்கர்கள், 'இப்பொழுது நம்மாற் செய்

யத்தகுவதனை ஒரே முடிபாக ஆராய்ந்துணர்க' எனக் கூற, அதுகேட்ட வன்னி என்பவன், 'இப்போரில் பொருது நமது உடம்பினைக் கழித்துப் புகழைப் பெறுதலே இனி நம்மாற் செய்யத் தகுவதாகும்' என அறிவுறுத்தினன். அது கேட்டு அரக்கரெல்லோரும் பலவகைப் படைக் கலங்களையும் இராமன் மேற் சொரிந்தனர். அந்நிலையில் இராம பிரான் காந்தருப்பம் என்னும் தெய்வப் படையினை அவ்வரக்கர்கள் மேல் ஏவினன். அப்படைக்கலமானது முக்கண்ணும் ஐந்து முகங்களும் பெற்றுத் திரிபுரமெரித்த இறைவனை யொத்த தோற்றமுடைய கணைகள் பலவற்றைத் தோற்றுவித்துப் பத்துக்கோடிச் சேனைத் தலைவர்களையும் அழித்து நீருக்கியது. அதனால் இராவணனது மூலப்பெரும் படை விரைவில் அழிந்தது. அந்நிலையில், இராவணனிடத்து அன்புடைய அரக்கர் சேனைத் தலைவர் பலர் பாதாள வுலகங்களிலிருந்தும் பல திசைகளிலிருந்தும் வந்து கூடினர். இராவணனை யொத்த பெரு வன்மை படைத்த அவ்வீரர்கள், வன்னி என்ற படைத்தலைவன் சொல்லிய வண்ணம் அனைவரும் ஒருங்குகூடி ஆரவாரித்து இராமனை வளைத்து நின்று கடும் போர் செய்தனர். இராமனும் பல்லாயிர கோடியரான அவ்வரக்கர் மேல் ஊழித் தீயினை யொத்தகடிய அம்புகளைச் சொரிந்தனன்.

தங்களுக்கு முன்னே தங்கள் தேர் மேலும் குதிரை மேலும் யானை மேலும் நிலத்தின் மேலும் விரைந்து எதிர் நின்று பொருத இராமனது விரைவுத் தோற்றத்தைக் கண்ணுற்ற அரக்கர்கள் இராமன் ஒருவனல்லன் பல்லாயிர இராமர் நின்று பொருகின்றனர் எனக்கூறித் திகைப்புற்றவராய், கையிலுள்ள படைக்கலங்களை எங்கேனும் எய்து துன்புற்றழிந்தனர். இராமனது வில்லிற் கட்டப் பெற்ற மணி கண கண என ஒலிக்குந்தோறும் யானை குதிரைகள் இறந்து வீழ்ந்தன; தேர்கள் பொடியாயின; கடல்கள் சேறுபட்டன. விரைந்து அம்பு எய்யும் நிலையில் இராமனுடைய இரு கைகளும் ஆயிரம் கைகள் செய்த செயலைச் செய்தன. ஒரு முகத்தனாகிய இராமன் ஆயிர வெள்ளம் அரக்கர்களோடும் எதிர் நின்று பெரும் நிலையில் ஆயிரத்தினும் மிக்க அளவில்லாத முகத்தினனாகக் காணப்பட்டான். அவன் எய்த அம்புகளை எண்ணி யளவிட இயலாத சிவபெருமானும் பிரமனும் மகிழ்ச்சியால் தோள்கள் பூரிக்கப் பெற்றனர். தேவர்களும் முனிவர்களும் வியந்து இராமனைப் பாராட்டினர்.

பத்துக்கோடி யரக்கர்கள் இறந்து பட்டழிய எஞ்சி நின்ற அரக்கர்கள் இராமபிரானை நெருங்கி நின்று அவன்மேல் தெய்வப்படைக்கலங்களைச்செலுத்தினர். இராமன் அப்படைக் கலங்களை அந்தந்தப் படைக் கலங்களால் தடுத்துப் போக்கி அளவிடற்கியலாத கோடிக்கணக்கான

அம்புகளால் அவ்வரக்கர் தலைகளை அறுத்து வீழ்த்தினன். ஆயிர வெள்ளந் தொகையினராய அவ்வரக்கர்கள் யாவரும் இறந்தொழிந் தனர். அதனால் நிலமகள் தனது வன்பொறை நீங்கப் பெற்று உயர்ந் தனள். தேவர் முதலியோர் துயரொழிந்து மகிழ்ந்தனர். போர்க் களத்தில் தனியனாக நின்ற இராமன் வானோர் அள்ளிச் சொரிந்த மலர்களும் சந்தனமும் தனது செருத்தொழில் அயர்ச்சியைப் போக்க, அவ்விடத்தை விட்டு நீங்கி, இலக்குவனுடன் இராவணன் எதிர்ந்த போர்க்களத்தை நோக்கிச் சென்றனன். 'பெரும் படைத்தலைவர் யாவரும் போர்க்களத்தை நோக்கி மீண்டார்கள். நாமும் நமது பழியைத் துடைப்போம்' எனத் துணிந்து வானர சேனையும் போர்க் களத்தை நோக்கி மீண்டது என்பது இப்படலத்தின் பொருட் சுருக்க மாகும்.

இப்படலத்தில், இராவணனது மூலப்படை வீரர்களின் இயல்பு களை விரித்துரைக்கும் பகுதி அவ்வரக்க வீரர்களின் அளவிலாற்றலைப் புலப்படுத்துகின்றது. மூலப்படையினைக் கண்டு அஞ்சியோடிய குரங்குகள், 'மனிதர் ஆளிலென் இராக்கதன் ஆளிலென் வையம்' என்றாங்கு தமக்குள் உரையாடும் பகுதி, அச்சங் காரணமாகத் தமக்குள்ள பொறுப்புக்களை விட்டு விலக முயலும் வலியற்றோரது மன வியல்பினை இனிது புலப்படுத்துவதாகும். அஞ்சி யோடிய வானர சேனைத் தலைவர்களை அச்சமகற்றி மீண்டும் போர்த் தொழிலில் ஈடுபடச் செய்யும் நோக்கத்துடன் அங்கதன் சாம்பவானை நோக்கிக் கூறும் ஊக்க வுரைகள் பொறுப்புள்ள சேனைத் தலைவர்கள் பால் இன்றியமையாது அமைந்திருக்க வேண்டிய கடமை யுணர்ச்சியினை விளக்குவதாகும். இராமன் தான் ஒருவனாகவே தனி நின்று மூலப் பெருஞ் சேனைகளைப் பொருதழித்த திறம், தன்னிகரற்ற திருமாலின் அவதாரமே இராமன் என்னும் உண்மையை வற்புறுத் துவதாகும். மூலப்பெருஞ்சேனை அழிவுறவும் வன்னி முதலாக எஞ்சியுள்ள படை வீரர்கள் இராவணன்பால் தாம் கொண்ட அன்பின் திறத்தால் இராமனை எதிர்த்துப் பொருது உயிர்துறந்த செயல், அப்படைத் தலைவர்களது தறுகண் உணர்வினையும் செஞ்சோற்றுக் கடமையினை யுன்னும் அவர்களது செய்ந்நன்றி யுணர்வினையும் இனிது விளக்கும் நிகழ்ச்சியாகும். அரக்கர்களைக் கண்டு அஞ்சி நடுங்கியும், இராமபாணத்தால் அரக்கர் மடிதலைக் கண்டு மகிழ்ந்தும் அஞ்சாது மூற்பட்ட அரக்கர்களைக் கண்டு அஞ்சியும் மீண்டும் சிவபெருமான் தேற்றத் தெளிந்தும் இவ்வாறு ஒரு நிலையில் நில்லாது உழன்ற தேவர்களின் நிலை, அவர்தம் செயலற்ற தன்மையினைப் புலப்படுத்துவதாகும்.

மூலபல வதையாகிய இந்நிகழ்ச்சி, முதல் நூலாகிய வான்மீ கத்தில் 94-ஆம் சர்க்கத்தில் கூறப்பட்டுள்ளது. மூலச் சேனைகளுக்கும்

இராமபிரானுக்கும் இடையே நிகழ்ந்த இப்போரின் நிகழ்ச்சிகளைச் சிவபெருமான் பிரமன் இந்திரன் முதலியோர் வானத்தில் இருந்து கண்ணுற்றனர் எனவும், மூலப்படை வீரர்களைக் கண்டு தேவர்கள் அஞ்சி நடுங்கி இப்போரில் யாது நிகழுமோ என வருந்திய நிலையில் சிவபெருமான் தேவர்களது அச்சத்தைப் போக்கி ஆறுதலளிக்கும் முறையில் இராமபிரானது தெய்வப் பேராற்றலை எடுத்துக் கூறிய தாகக் கம்பர் இப்படலத்தில் புனைந்துரைத்துள்ளார். இவ்வாறு முதனூலாகிய வான்மீகத்திற் கூறப்படவில்லை. இராமன் இராவண னது மூலப்படையை அழித்தபொழுது கந்தர்வர்கள் உள்ளிட்ட தேவர்களும் சித்தர்களும் முனிவர்களும் இராமபிரானது வெற்றித் திறத்தை நன்று நன்றெனப் புகழ்ந்து கொண்டாடினார்கள் எனவும், அப்போது இராமன், தன் அருகிலுள்ள சுக்கிரீவன், வீடணன், அனுமன், சாம்பவான் முதலியோரை நோக்கி, 'இந்தச் சிறந்த அஸ்திர சக்தியானது எனக்கும் முக்கண்ணருக்குமே' எனக் கூறினான் எனவும் வான்மீகம் கூறும். இக்கூற்றினை யுளங்கொண்ட கம்பர், இவ்வாறு இராமன் தன் பெருமையைத் தானே கூறினான் என்று கூறுவதைவிட, அம்முதல்வன் தன்னோடொத்த பேராற்றல் படைத்த முக்கண்ணராகிய சிவபெருமானால் பாராட்டப்பெற்றான் என்று கூறுவதே சிறப்புடைத்தெனக் கொண்டு, இராமனது போர்த் திறமையைச் சிவபெருமான் தேவர்களுக்கு எடுத்துரைத்து அவர்களது அச்சத்தை யகற்றி யருளினர் என இப்படலத்திற் கூறியுள்ளமை மிகவும் பொருத்தமுடையதே யாகும்.

## மூலபல வதைப் படலம்

இராவணன், முதற்கண் இராம இலக்குவரைப் பொருதழிக்கு
மாறு படைத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டு அவர்க்குத்
துணையாக மூலபலச் சேனையை உடன் அனுப்புதல்

9436 வான ரப்பெருஞ் சேனையை
யானொரு வழிசென்
றூன றக்குறைத் துயிருண்ப
னீயிர்போ யொருங்கே
யான மற்றவ ரிருவரைக்
கோறிரென் றறைந்தான்
தான வப்பெருங் கிரிகளை
வாள்கொண்டு தடிந்தான்.

'வானரப் பெருஞ் சேனையை
யான் ஒரு வழி சென்று,
ஊன் அறக்குறைத்து உயிர் உண்பன்;
நீயிர் போய் ஒருங்கே
ஆன மற்றவர் இருவரைக்
கோறிர்' என்று அறைந்தான்—
தானவப் பெருங் கிரிகளை
வாள்கொண்டு தடிந்தான்.

பொ:- அசுரர்களாகிய பெரிய மலைகளை வாளால் வெட்டி வீழ்த்தியவனாகிய இராவணன், (சேனைத் தலைவர்களை நோக்கி) 'யான் ஒரு பக்கமாகச் சென்று பெரிய குரங்குச் சேனையை உடல் துணியும்படி சிதைத்து உயிரை உண்பேன்; நீங்கள் எல்லோரும் ஒருசேரச் சென்று (பகைமை கொண்டு) பொருந்தி ஏனை இருவரையும் கொல்வீராக' எனப் பகர்ந்தான்.

கு:- தானவப் பெருங்கிரிகளை வாள்கொண்டு தடிந்தான் என்றது, இராவணனை. தானவர் என்போர் வானவர்க்குப் பகைவ ராகிய அசுரர்கள். கிரி—மலை. சலியாத திண்மையுடைமைபற்றி

அவர்களைப் பெருமலைகளாக உருவகித்தார். வாள்கொண்டு-வாளால். தடிதல்-வெட்டி வீழ்த்துதல். தடிந்தான், வினையாலணையும் பெயர். தடிந்தான் அறைந்தான் என முடியும். ஊன்-உடல். இருவர் என்றது, இராம இலக்குவர்களை. மலைபோன்று நிலைகலங்காத் திண்மையுடையோராகிய அசுரர்களை வாளால் தடிந்த பெருவீரனாகிய இராவணன், பிறனில் விழைதலாகிய பெருங் குற்றத்திற்பட்டுத் தன் வலி தளர்ந்து 'நான் வானர சேனையைக் கொன்றொழிப்பேன்; நீவிர் சென்று ஏனையிருவரையும் கொல்வீராக' எனத் தன் படைத் தலைவர்களைத் துணைவேண்டி நிற்கும் எளிமை நிலையினனாயினன் என்பது குறிப்பு. (1)

9437 எனவு ரைத்தலு மெழுந்துதம்
ஊர்திமே லேறிக்
கனைக டற்பெருஞ் சேனையைக்
கலந்தது காணா
வினைய மற்றிலை மூலமாத்
தானையை விரைவோ
டினையர் முற்செல வேவுகென்
றிராவண னிசைத்தான்.

என உரைத்தலும், எழுந்து, தம் ஊர்திமேல் ஏறி,
கனை கடல் பெருஞ் சேனையைக் கலந்தது காணா,
'வினையம் மற்று இலை; மூல மாத் தானையை விரைவோடு
இனையர்முன் செல, ஏவுக' என்று இராவணன் இசைத்தான்.

பொ:- என்று (தான்) சொல்லியவுடனே (அச் சேனைத் தலைவர்கள் விரைந்து) எழுந்து தத்தமக்குரிய (தேர் முதலிய) ஊர்தியில் ஏறி, ஒலிக்கின்ற கடல்போற் பரந்த பெருஞ்சேனையை அடைந்ததைக் கண்ணுற்று, '(இனிச் செய்தற்குரிய) செயல் பிறிதொன்றுமில்லை. பெரிய மூலபலச் சேனையை விரைந்து (போரில் மூண்டெழுந்த) இத் தன்மையரான இவர்கட்கு முன்னே செல்லுமாறு ஏவுக' என்று இராவணன் கட்டளையிட்டான்.

கு:- இராவணன், காணா, 'ஏவுக' என்று இசைத்தான் என்க. ஊர்தி—வாகனம். கனைகடல்—ஒலிக்கும் கடல். காணா—கண்டு. வினையம்—எண்ணித் துணிதற்குரிய செயல். (2)

## இராவணனும் தன் தேர்மேலேறி இராமன் சேனையைத் தாக்க ஒருபுறம் செல்லுதல்

**9438** ஏவி யப்பெருஞ் சேனையைத்
தானும்வேட் டெழுந்தான்
தேவர் மெய்ப்புகழ் தேய்த்தவன்
சில்லியந் தேர்மேல்
காவன் மூவகை யுலகமு
முனிவருங் கலங்கப்
பூவை வண்ணத்தன் சேனை
மேலொருபுறம் போனான்.

ஏவி அப்பெருஞ் சேனையை, தானும் வேட்டு எழுந்தான்,
தேவர் மெய்ப் புகழ் தேய்த்தவன், சில்லி அம் தேர்மேல்,
காவல் மூவகை உலகமும் முனிவரும் கலங்க,
பூவை வண்ணத்தன் சேனைமேல் ஒருபுறம் போனான்.

பொ:- தேவர்களுடைய மெய்ம்மையான புகழை அழித்துப் போக்கியவனாகிய இராவணன், அந்தப் பெரிய மூலச் சேனையை (இராம இலக்குவர்மேற் செல்லும்படி) ஏவித் தானும் (போர் செய்தலை) விரும்பி எழுந்தவனாகி(த் தனது) காவலில் உள்ள மூவகை யுலகமும் முனிவர்களும் கலங்கும்படி சக்கரத்தையுடைய அழகிய தேர்மேல் (ஏறிக்) காயாம் பூப்போலும் நிறமுடையவனான இராமனது (வானர) சேனைமேல் ஒருபுறம் சென்றான்.

தேவர் மெய்ப் புகழ் தேய்த்தவன் என்றது, நல்வினைத் திறத்தாற் புகழுடன் வாழும் தேவர்களின் சிறப்பினைத் தன்கொடு வினைத்திறத்தாற் சிதைத்துப் போக்கியவனாகிய இராவணனை. தேய்த்தவன், தானையை ஏவிப் போர்வேட்டு எழுந்தான்; மூவகை யுலகமும் முனிவரும் கலங்கச் சில்லியந்தேர்மேல், பூவைவண்ணத்தன் சேனைமேல் ஒருபுறம் போனான் என இயையும். பூவை—காயா மரம். ஆகு பெயராய் அதன் பூவினை யுணர்த்தியது. காயாம் பூப் போலும் திருமேனியையுடைய மாயோனது அவதாரமாகிய இராமனைப் பூவை வண்ணத்தன் எனப் போற்றினர். 'மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற், றாவா விழுப்புகழ்ப் பூவை நிலை' (தொல்—புறத்:5) எனவரும் தொடர் இங்கு நினைக்கத் தகுவதாகும். (3)

## போருக்கு எழுந்த மூலபலச் சேனையின் இயல்பு

9439 எழுக சேனையென் றியானைமே
லணிமுர செற்றி
வழுவில் வள்ளுவர் துறைதொறும்
விளித்தலும் வல்லைக்
குழுவி யீண்டிய தென்பராற்
குவலய முழுதுந்
தழுவி விண்ணையுந் திசையையுந்
தடவுமாத் தானை.

'எழுக, சேனை'' என்று, யானைமேல் அணிமுரசு எற்றி,
வழு இல் வள்ளுவர் துறைதொறும் விளித்தலும், வல்லைக்
குழுவி ஈண்டியது என்பரால், குவலயம் முழுதும்
தழுவி, விண்ணையும் திசையையும் தடவும் மாத் தானை.

பொ:- (தம் வினைத்திறத்திற்) குற்றமில்லாதவராகிய வள்ளுவர், 'சேனைகள் போர்க்கு எழுக' என்று யானையின்மேல் அழகிய முரசினை அறைந்து இடங்கள்தோறும் (சென்று) அறிவித்து அழைத்த அளவில் மண்ணுலக முழுவதனையும் வளைத்து ஆகாயத்தையும் திசைகளையும் கிட்டிய பெரிய சேனை விரைந்து திரளாக நெருங்கிக் கூடியது.

கு:- வள்ளுவர் என்போர் அரசன் பணித்த செய்திகளை நாட்டில் வாழ்வாருக்குப் பறையறைந்து அறிவிப்போர். 'அரசு கொற்றத் தருங்கடம் பூண்ட முரசெறி வள்ளுவ முதியனை' எனவும், 'திருநாள் படைநாள் கடிநாளென்றிப் பெருநாட் கல்லது பிறநாட் கறையாச் செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்' எனவும் வரும் தொடர்கள் இவ் வள்ளுவர்க்குரிய கடமையை விரித்துரைத்தல் காணலாம். வழு என்றது, தம் கடமையில் தவறுதலாகிய குற்றத்தினை. வள்ளுவர், எழுக சேனை என்று, அணி முரசு எற்றி துறைதொறும் விளித்தலும், குவலயம் முழுதும் தழுவி விண்ணையும் திசையையும் தழுவும் மாத் தானை வல்லை குழுவி ஈண்டியது என்க. வல்லை—விரைவு. குழுவுதல்—கூட்டமாகத் திரளுதல். ஈண்டுதல்—நெருங்கிச் செறிதல். என்பர், ஆல் என்பன அசைகள். (4)

9440 அடங்கும் வேலைக ளண்டத்தி
னகத்தகன் மலையும்
அடங்கு மன்னுயி ரனைத்துமவ்
வரைப்பிடை யவைபோல்
அடங்கு மேமற்றப் பெரும்படை
யரக்கர்த மியாக்கை
அடங்கு மாயவன் குறளுருத்
தன்மையி னல்லால்.

அடங்கும் வேலைகள், அண்டத்தின்
அகத்து அகல் மலையும்
அடங்கும், மன் உயிர் அனைத்தும் அவ்
வரைப்பிடை அவைபோல்
அடங்குமே, மற்று அப் பெரும்படை
அரக்கர்தம் யாக்கை,
அடங்கும் மாயவன் குறள் உருத்
தன்மையின் அல்லால்?

பொ:- அண்டத்தின் உள்ளிடத்திலே கடல்கள் அடங்குவன; அவ் எல்லைக்குள் அகன்றுயர்ந்த மலைகளும் நிலை பெற்ற உயிர்கள் யாவும் அடங்குவன; அவ்வெல்லையுட்பட்டு அடங்கிய, அவற்றைப் போன்று, (எல்லா வுலகங்களும்) தன்கண் அடங்குந் தன்மையதாய் திருமால் கொண்ட குறள் வடிவத்தின் தன்மையாலன்றி, அப்பெரிய மூலப்படையும் அதன்கண் உள்ள அரக்கர் உடம்புகளும் (இலங்கை யென்னும் அந்தச் சிறிய தீவின் எல்லைக்குள்) அடங்குவனவோ? (அடங்கா).

கு:- திருமால் கொண்ட வாமன வடிவம் உலக முழுவதனையும் தன் ஈரடிக்குள் அடக்குந் தன்மையாதல் போன்று, இலங்கையில் வந்த மூலப் படையும் அண்ட முழுவதனையும் அடக்கி மேற்படும் பேரளவினது என்பதாம். அடங்குமே என்புழி வினு ஏகாரம் எதிர் மறைப் பொருள் தந்தது. (5)

போருக்கு எழுந்த மூலபலச் சேனை வீரர்களின் இயல்பு

9441 அறத்தைத் தின்றருங் கருணையைப்
பருகிவே றமைந்த
மரத்தைப் பூண்டுவெம் பாவத்தை
மணம்புணர் மணாளர்

நிறத்துக் காரன்ன நெஞ்சினர்
நெருப்புக்கு நெருப்பாய்
புறத்துப் பொங்கிய பங்கியர்
காலனும் புகழ்வார்.

அறத்தைத் தின்று, அருங்கருணையைப்
பருகி, வேறு அமைந்த
மறத்தைப் பூண்டு, வெம் பாவத்தை
மணம்புணர் மணாளர்,
நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர்,
நெருப்புக்கு நெருப்பாப்
புறத்துப் பொங்கிய பங்கியர்,
காலனும் புகழ்வார்.

பொ:- (அந்த மூலப் பெருஞ் சேனையிலுள்ள வீரர்கள்) அறத்தை (சோறென)த் தின்று தீர்த்து, அருமை வாய்ந்த கருணையை (நீராகப்) பருகித் தீர்த்து, அறத்திற்கு மாறாக அமைந்த மறச் செயலை (ப் பூணாக) மேற்கொண்டு வெவ்விய பாவத்தினை (மனையாளாக) மணம் புணர்ந்த மணவாளப் பிள்ளைகள்; நிறத்தால் கரு மேகத்தை யொத்து இருண்ட நெஞ்சத்தினை யுடையவர்கள்; நெருப்பினையும் வெதுப்பும் கொடு நெருப்பாக (நெஞ்சத்திலுள்ள வெகுளித் தீ) புறத்தேயும் வெளிப்பட்டாற் போன்ற (செம்பட்டை) மயிரினை யுடையவர்கள்; (எதிர்ப்பட்டா ருயிரைக் கவருந் திறத்தில்) கூற்றுவனாலும் புகழத் தக்கவர்கள்.

கு:- தின்னுதல், பருகுதல் என்னும் சிறப்பு வினைகளால் அறம் சோறாகவும் கருணை நீராகவும் கொள்ளப் பட்டன. இது குறிப்புருவகம். தின்னுதல் பருகுதல் என்பன ஈண்டு அவ்வினை நிகழ்ச்சிகளைக் குறிக்காமல் அவ்வினைகட்குரிய செயப்படு பொருள்களை அறவே அழித்துப் போக்குதல் என்ற பொருளைத் தந்தன. வேறு அமைந்த மறம் என்றது, அறத்தின் தொடர்பின்றி டமைந்த வீரத்தினை. பூணுதல்— அணியாக மேற் கொள்ளுதல். பாவம்—கொடுஞ் செயல். பாவம் தம்மோடு என்றும் பிரியாதுடனுறையும் நிலையில் தீவினைகளை மேலும் மேலும் விரும்பிச் செய்யும் இழிந்த இயல்பினர் என்பார் 'பாவத்தை மணம் புணர் மணாளர்' என்றார். புறத்தே நிறத்தாற் கரியராகிய அவ் அரக்கர்கள் வஞ்சனைச் சூழ்ச்சிகளால் அகமும் கரியர் என்பார், 'நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர்' என்றார்.

அவர்களது உள்ளத்திலே கிளர்ந்தெழுந்த வெகுளித் தீ புறத்தேயும் பொங்கி வெளிப்பட்டாற் போன்ற செம்பட்டை மயிரினையுடையவர் என்பார், 'நெருப்புக்கும் நெருப்பாப் புறத்துப் பொங்கிய பங்கியர்' என்றார். பங்கி—தலை மயிர். அந்தந்த உயிர்களுக்கு வகுத்த காலம் பார்த்துக் கொல்லும் தன்னைக் காட்டிலும் காலம் நோக்காது நினைத்த பொழுதே கொல்லுங் கொடுந் திறல் படைத்தமை பற்றிக் கூற்றுவனாலும் புகழத்தக்க கொடியோர் இவர் என்பார், 'காலனும் புகழ்வார்' என்றார். புகழ்வார்—புகழப்படுவார்; செயப்படு பொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது. கருங்கடலினுள்ளேயுள்ள வடவைத் தீ புறத்தே வெளிப்பட்டெழுந்தாற் போன்று, பாவம் நிறைந்த நெஞ்சத்தே தோன்றிய வெகுளித் தீ பொங்கி மேலெழுந்தது என்னும்படி மேல் நோக்கிய செந்நிறக் குஞ்சியர் என அவ்வரக்கரது அகத்தியல்பினையும் புறத்தோற்றத்தையும் தொடர்பு பெறப் புலப்படுத்திய நயம் உணர்தற் குரியதாகும். (6)

9442 நீண்ட தாள்களால் வேலையைப்
புறஞ்செல நீக்கி
வேண்டு மீனெடு மகரங்கள்
வாயிட்டு விழுங்கித்
தூண்டு வானுரு மேற்றினைச்
செவிதொறுந் தூக்கி
மூண்ட வான்மழை யுரித்துடுத்
துலாவரு மூர்க்கர்.

நீண்ட தாள்களால் வேலையைப் புறம்செல நீக்கி;
வேண்டும் மீனெடு மகரங்கள் வாயிட்டு விழுங்கி,
தூண்டு வான் உரும் ஏற்றினைச் செவிதொறும் தூக்கி,
மூண்ட வான்மழை உரித்து உடுத்து, உலாவரும் மூர்க்கர்.

பொ:- (மேலும் அவ்வரக்கர்கள்) நெடிய கால்களால் கடல் நீரைப் புறத்தே செல்லுமாறு எற்றிப் போக்கித் தாம் விரும்பியுண்ணும் மீன்களுடன் மகரமாகிய பெரு மீன்களையும் வாயிலிட்டு விழுங்கி மேகத்தால் தோற்றுவிக்கப் பெறும் பேரிடியுடனமைந்த மின்னலைச் செவிகளில் அணியாகத் தொங்க விட்டு வானிடத்தே மிக்கெழுந்த மேகங்களை உரித்து உடையாக வுடுத்திக் கொண்டு (எங்கும்) உலாவித் திரியும் கொடுமைக் குணமுடையவர்கள்.

கு:- கையால் இறைத்தற்குரிய நீரைச் சிறுமை பற்றிக் கால்களால் எற்றி நீக்கும் வழக்கம் உலகியலிற் கண்டது. கடல் நீரைக் கால்களால் எற்றியிறைத்தல் என்பது எத்தகையோராலும் செய்ய வொண்ணாத அரிய செயல். அச்செயலையும் எளிதிற் செய்ய வல்லவர் இவ்வரக்கர் என்பதுபட, 'நீண்ட தாள்களால் வேலையைப் புறஞ்செல நீக்கி' என்றார். 'பிறங்கிரு முந்நீர் வெறுமணலாகப் புறங்காலிற் போக இறைப்பேன்' (கலித்தொகை—நெய்தல்—27) எனவரும் தொடர் இங்கு ஒப்பு நோக்குதற் குரியதாகும். வேலை—கடல். மகரம்—பெருமீன். தூண்டுதல்—தோற்றுவித்தல். உரும் ஏறு—பேரிடி; என்றது, அதனிற் பிறந்த மின்னலை. (7)

9443 மால்வ ரைக்குலம் பரலென
மழைக்குலஞ் சிலம்பாக்
கால்வ ரைப்பெரும் பாம்புகொண்
டசைத்தபைங் கழலார்
மேல்வ ரைப்படர் கலுழன்வன்
காற்றெனும் விசையோர்
நால்வ ரைக்கொணர்ந் துடன்பிணித்
தாலன்ன நடையார்.

மால் வரைக்குலம் பரல் என, மழைக்குலம் சிலம்பா,
கால் வரைப் பெரும்பாம்பு கொண்டு அசைத்த பைங் கழலார்;
மேல் வரைப்படர் கலுழன் வன்காற்று எனும் விசையோர்;
நால் வரைக் கொணர்ந்து உடன் பிணித்தால் அன்ன நடையார்.

பொ:- (மேலும் அவ்வரக்கர்கள்,) பெரிய மலைத் தொகுதிகள் (உள்ளிடு) பரல்களாக (அவற்றை மூடிய) மேகங்கள் சிலம்பாக (அமையத்தம்) கால்களிலே மலைப் பாம்பினை நாணாகக் கொண்டு சுட்டிய பசிய பொன்னாலாகிய வீரக் கழல்களை யுடையவர்கள்; மேலெல்லையிற் (பறந்து) செல்லுகின்ற கருடனும் வலிய காற்றும் என்று சொல்லத் தக்க வேகத்தை யுடையவர்கள்; தொங்கும் (வாயினையுடைய) மலையாகிய யானைகளைக் கொணர்ந்து ஒரு சேரக் கட்டினாற் போன்ற (பெருமித) நடையினை யுடையவர்கள்.

கு:- பரல்—சிலம்பு ஒலித்தற் பொருட்டு அதனுள்ளே யிடப்பெறும் சிறுகற்கள். போர் மேற்கொண்டு வந்த அவ்வரக்கர்கள் நடக்குங்கால் பெரிய மலைகளும் மேகத் தொகுதிகளும் அவர்தம் கால்

களில் அணியப்பட்ட சிலம்பு போற் காணப்படுமெனவும், அன்னோர் தம் கால்களில் பாம்பினை நாணாகக் கொண்டு அமைத்த பசும் பொன்னாலாய வீரக்கழல்களை அணிந்துள்ளார் எனவும், கருடனையும் காற்றினையும் ஒத்த விரைவும் யானைகள் பல ஒருங்கு கூடி வந்தாற் போன்ற பெருமித நடையும் வாய்க்கப் பெற்றவர் எனவும் அவர்தம் உயர்ந்த தோற்றப் பொலிவினை விரித்துரைத்தவாறு. நால்வாய் என்பது, தொங்கும் வாயினை யுடைமை பற்றி யானைக்கு வழங்கும் ஏதுப்பெயர். வரை-மலை. நால் வாய்வரை எனற்பாலது நால்வரை என ஒரு சொல் தொக்கு நின்றது. நால்வரையைக் கொணர்ந்து என இரண்டா முருபு விரித்துரைக்க. (8)

**9444** உண்ணுந் தன்மைய வூன்முறை
தப்பிடி னுடனே
மண்ணி னின்றமால் யானையை
வாயிடும் பசியார்
தண்ணி னீர்முறை தப்பிடிற்
றடக்கையாற் றடவி
விண்ணின் மேகத்தை வாரிவாய்ப்
பிழிந்திடும் விடாயர்.

உண்ணும் தன்மைய ஊன்முறை தப்பிடின் உடனே
மண்ணின் நின்ற மால் யானையை வாயிடும் பசியார்;
தண்ணின் நீர்முறை தப்பிடின், தடக்கையால் தடவி,
விண்ணின் மேகத்தை வாரி வாய்ப் பிழிந்திடும் விடாயர்.

பொ:- (அவ் அரக்கர்கள், தாம்) உண்ணுந் தன்மையின வாகிய ஊன் உணவுகள் கால முறையிற் கிடைக்காமல் தப்புமாயின், பூமியில் (திசைக்குக் காவலாக) நின்ற யானைகளையே வாயிலிட்டு விழுங்கும் (பெரும்) பசியை உடையவர்கள்; குளிர்ந்த இனிய நீர் குடிக்க வேண்டிய நேரத்திற் கிடைக்காமல் தவறுமாயின் (தம்முடைய) பெரிய கைகளால் தடவி வானத்திற் செல்லும் மேகத்தை ஒரு சேர வாரி(த் தமது) வாயிற் பிழிந்து கொள்ளும் (அடங்காத) நீர் வேட்கை யுடையவர்கள்.

கு:- முறை தப்புதல்—கிடைக்க வேண்டிய நேரத்திற் கிடைக்காமல் தடைப்படுதல். மண்ணின் நின்ற மால் யானை—பூமியிற் காவலாக நின்ற திசை யானைகள். ஆற்றல் மிக்க அவ்வரக்கர்களது பெரும் பசியும் அடங்காத நீர் வேட்கையும் இதனாற் புலப்படுத்தியவாறு. (9)

9445 உறைந்த மந்தர முதலிய
கிரிகளை யுருவ
வெறிந்து வேனிலை காண்பவ
ரிந்துவால் யாக்கை
சொறிந்து தீர்வுறு தினவினர்
மலைகளைச் சுற்றி
அறைந்து கற்றமாத் தண்டின
ரசனியி ளுர்ப்பார்.

**உறைந்த மந்தரம் முதலிய கிரிகளை உருவ**
**எறிந்து, வேல்நிலை காண்பவர்; இந்துவால் யாக்கை**
**சொறிந்து, தீர்வுஉறு தினவினர்; மலைகளைச் சுற்றி**
**அறைந்து, கற்ற மாத்தண்டினர்; அசனியின் ஆர்ப்பார்.**

பொ:- (மேலும் அவ்வரக்கர்கள், நில எல்லையில்) தங்கிய மந்தர மலை முதலாகவுள்ள பெருமலைகளை ஊடுருவிப் பிளக்குமாறு வீசி எறிந்து தம் வேலின் கூர்மை நிலையைச் சோதித்து அறிபவர்கள்; (வானிடத்தே உலவும்) சந்திரனால் தம் உடம்பினைச் சொறிந்து தீர்த்துக் கொள்ளும் உடல் தினவு உடையவர்கள்; மலைகளின் மீது சுழற்றி அறைந்து பயின்ற பெரிய தண்டாயுதத்தை உடையவர்கள்; இடியினை யொத்துப் பெரு முழக்கஞ் செய்பவர்கள்.

கு:- உறைதல்—தங்குதல். உருவுதல்—துளைத்து உட் செல்லுதல். வேல்நிலை—வேற் படையின் கூர்மை நிலை. காணுதல்—சோதித்து அறிதல். இந்து—சந்திரன். தம் உடம்பின் தினவு நீங்கச் சந்திரனையே சிப்பியாகக் கொண்டு சொறிந்து கொள்ளும் பெருவன்மை படைத்தவர் என்பார், 'இந்துவால் யாக்கை சொறிந்து தீர்வுறு தினவினர்' என்றார். மாத்தண்டு—பெரிய தண்டாயுதம். அசனி—இடி. (10)

9446 சூலம் வாங்கிடிற் சுடர்மழு
வேந்திடிற் சுடர்வாள்
கோலும் வெஞ்சிலை பிடித்திடிற்
கொற்றவேல் கொள்ளிற்
சால வன்றண்டு தரித்திடிற்
சக்கரந் தாங்கிற்
காலன் மால்சிவன் குமரனென்
றிவரையுங் கடப்பார்.

சூலம் வாங்கிடின், சுடர்மழு
ஏந்திடின், சுடர் வாள்
கோலும் வெஞ்சிலை பிடித்திடின்,
கொற்றவேல் கொள்ளின்,
சால வன்தண்டு தரித்திடின்,
சக்கரம் தாங்கின்,
காலன், மால், சிவன், குமரன், என்று
இவரையும் கடப்பார்.

பொ:- (அவ்வரக்கர்கள்) சூலப்படையைக் கையிற் கொண்டால், ஒளியினையுடைய மழுப்படையைக் கையில் ஏந்தினுல், ஒளிவீசுகின்ற வாட்படை, வளைந்த கொடிய வில் என்பவற்றைக் கையிற் பிடித்தால், வெற்றி பொருந்திய வேற்படையைக் கையிற்கொண்டால், மிக்க வன்மையினை யுடைய தண்டாயுதத்தைக் கையிற் பிடித்தால், சக்கரப் படையைத் தாங்கினுல், கூற்றுவன், திருமால், சிவன், முருகன் எனப் போற்றப்பெறும் இத் தெய்வங்களையும் வெற்றிகொள்ள வல்லவர்கள்.

கு:- சூலம் வாங்கிடிற் காலனையும், சுடர் மழுவேந்திடிற் சிவனையும், சுடர்வாள் கோலும் வெஞ்சிலை பிடித்திடின் சால வன் தண்டு தரித்திடின் சக்கரம் தாங்கின மாலையும், கொற்றவேல் கொள்ளின் குமரனையும் வென்று மேம்படும் பேராற்றல் படைத்தவர்கள் இவ் வரக்கர்கள் என்றவாறு. கடத்தல்—போரில் வென்று மேம்படுதல். (11)

9447 ஒருவரே வல்ல ரோருல
கத்தினை வெல்ல
இருவர் வேண்டுவ ரேழுல
கத்தையு மிறுக்கத்
திரிவ ரேலுடன் றிரிதரு
நெடுநிலஞ் செவ்வே
வருவ ரேலுடன் கடல்களுந்
தொடர்ந்துபின் வருமால்.

ஒருவரே வல்லர், ஓர் உலகத்தினை வெல்ல;
இருவர் வேண்டுவர், ஏழ்உலகத்தையும் இறுக்க;
திரிவரேல், உடன் திருதரும் நெடுநிலம்; செவ்வே
வருவரேல், உடன்கடல்களும் தொடர்ந்து, பின் வருமால்.

பொ:- ஒருலகத்தினை வெல்வதற்கு (அவ்வரக்கருள்) ஒருவரே (போதிய) வன்மை படைத்தவர். ஏழுலகங்களையும் அழித்தொழிக்க வேண்டுமாயின் (அவருள்) இருவர் வேண்டப்படுவர். (அன்னோர்) புறத்தே திரிவராயின் அவருடனே நீண்ட நிலம் முழுவதும் உடன் திரியும். (மீண்டு) நேரே வருவராயின் (அவரது வேகத்தால் ஈர்க்கப் பட்டுக்) கடல்களும் (அவருடன்) தொடர்ந்து பின்வரும்.

கு:- ஒருலகத்தினை வெல்ல ஒருவரே வல்லவர்; ஏழுலகத்தையும் இறுக்க இருவர் வேண்டுவர்; திரிவரேல் நெடுநிலம் உடன்திரிதரும்; செவ்வே வருவரேல் கடல்களும் தொடர்ந்து பின்வரும் என இயையும். ஆல்—அசை. இறுத்தல்—அழித்தல். திரிதல் புறத்தே சென்று உலவுதல். செவ்வே வருதல்—சென்ற நெறியே நேரே மீளுதல். மூலப் படையிலுள்ள அவ்வரக்கர்கள் ஒருவராகவோ அன்றி இருவராகவோ நின்று இவ்வுலகினையும் ஏழுலகங்களையும் அழிக்க வல்ல பேராற்றல் படைத்தவர் என்பதாம். (12)

## நால்வகைச் சேனைகளின் மிகுதி

**9448** மேக மெத்தனை யத்தனை
மால்கரி விரிந்த
நாக மெத்தனை யத்தனை
தேர் நனி நாளாப்
போக முற்றின வெத்தனை
யத்தனை புரவி
ஆக முற்றன வெத்தனை
யத்தனை யனிகம்.

மேகம் எத்தனை, அத்தனை மால்கரி; விரிந்த
நாகம் எத்தனை, அத்தனை தேர்; நனி நாளாப்
போகம் முற்றின எத்தனை, அத்தனை புரவி;
ஆகம் உற்றன எத்தனை, அத்தனை அனிகம்.

பொ:- (பிரமன் படைத்த அண்டத்துள்) மேகங்கள் எத்தனையோ அத்தனை மிகப்பெரிய யானைகள்; விரிந்து பரவிய மலைகள் எத்தனையோ அத்தனை தேர்கள்; நீண்ட நாட்களாக விளைந்து முற்றிய நெற்கதிர்கள் எத்தனையோ அத்தனை குதிரைகள்; உடம்பினைப் பெற்ற உயிர்கள் எத்தனையோ அத்தனை காலாட்படைகள்.

கு:- மூலப் பெரும்படையி லுள்ள நால்வகைச் சேனைகளின் மிகுதியை உணர்த்துவது இச் செய்யுள். வானிற் பரவிய மேகங்களை யொத்தது யானைக் கூட்டம் எனவும், உலகில் விரிந்து பரவிய மலைகளை யொத்தது தேர்களின் தொகுதி எனவும். நன்றாக விளைந்து முற்றிய நெற்கதிர்களை யொத்தது குதிரைத் திரள்' எனவும், உலகில் உடம் பொடு கூடிய ஏனைய உயிர்கள் எத்துணையோ அத்துணை அளவினது காலாட்படை எனவும் உவமை கூறி விளக்கியவாறு. நாகம்—மலை. போகம்—விளைவு; இச்சொல் இங்கு விளையுளாகிய நெற்கதிர்களை உணர்த்தி நின்றது. முற்றி வளைந்த நெற்கதிர்களைக் குதிரைத் திரளுக்கு உவமை கூறும் மரபுண்மை, 'மருங்கு விளைகதிர்ச் செந்நெல் வயப்புரவி முகங்காட்ட' (பெரிய-திருநாவுக்கரசர் புராணம்) என வரும் தொடரால் இனிது விளங்கும். ஆகம்—உடம்பு. அனிகம்—சேனை; ஈண்டுக் காலாட்படையினை உணர்த்தியது. (13)

## சேனைகளின் அணிநலம்

**9449** இன்ன தன்மைய யானைதே
  ரிவுளியென் றிவற்றின்
பன்னு பல்லணம் பருமமற்
  றுறுப்பொடு பலவும்
பொன்னு நன்னெடு மணியுங்கொண்
  டல்லது புனைந்த
சின்ன முள்ளன வில்லன
  மெய்ம்முற்றுந் தெரிந்தால்.

இன்ன தன்மைய யானை, தேர், இவுளி, என்று இவற்றின்
பன்னு பல்லணம், பருமம், மற்று உறுப்பொடு பலவும்,
பொன்னும் நல்நெடு மணியும் கொண்டு அல்லது புனைந்த
சின்னம் உள்ளன இல்லன, மெய்ம் முற்றும் தெரிந்தால்.

பொ:- இத்தகைய இயல்பினவாகிய யானை தேர் குதிரை என்ற இவற்றின் உடல் முழுவதனையும் தெரிந்து நோக்கினல், சிறப்பித் துரைக்கத்தக்க குதிரைச் சலனையும் யானை மேலிடும் தவிசும் ஏனை அங்கங்களுடனே அமைந்த பலவும் பொன்னையும் நல்ல பெரிய மணி களையும் கொண்டன்றிப் (பிறவற்றைக் கொண்டு) புனையப்பட்ட சிறுமையுடையனவாக உள்ளவை இல்லாதனவாயின.

கு:- யானை தேர் இவுளி என்று இவற்றின் மெய்முற்றும் தெரிந்தால், பொன்னும் நல்நெடுமணியும் கொண்டு அல்லது புனைந்த சின்னம் உள்ளன இல்லன என இயையும். இல்லன என்பது ஆக்க வினைக்குறிப்பாதலின் ஆக்கச் சொல் வருவித்துரைக்கப்பட்டது. பல்லணம்—குதிரைக் கலனை. பருமம்—யானை மேலிடுந் தவிசு. சின்னம்-சிறுமை. (14)

## சேனைகள் எழுப்பிய தூளியும் யானையின் மதநீரும்

9450 இப்பெ ரும்படை யெழுந்திரைத்
தேகமே லெழுந்த
துப்பு தீர்த்தன்ன தூளியின்
படலமீத் தூர்ப்பத்
திப்பில் கார்நிறந் தவிர்ந்தது
கரிமதந் தழுவ
உப்பு நீங்கிய தோங்குநீர்
வீங்கலை யுவரி.

இப் பெரும்படை எழுந்து இரைத்துஏக, மேல் எழுந்த
துப்பு உதிர்த்து அன்ன தூளியின் படலம் மீத்தூர்ப்ப,
தப்பு இல்கார் நிறம் தவிர்ந்தது; கரிமதம் தழுவ
உப்பு நீங்கியது ஓங்கு நீர் வீங்கு அலை உவரி.

பொ:- இந்த மூலப் பெருஞ்சேனை எழுந்து ஆரவாரித்துச் செல்ல, மேலே கிளம்பிய பவளத்தைப் பொடி செய்தாலொத்த துகளின் தொகுதி, மேலே வானத்தை நிரப்பியதனால், குற்றமில்லாத மேகம் (தனது) கருமை நிறம் நீங்கியது (செந்நிறமுற்றது); யானையின் மதநீர் பாய்ந்து கலந்ததனால், அலைமிக்கு உயரும் நீரையுங் மிக்க ஒலியையும் உடைய உவர்க்கடல் (தனது) உப்புச் சுவை நீங்கியது.

கு:- படைகள் செல்லும்பொழுது மேலெழுந்த செந்நிறத் துகள்களால் கருமேகம் செம் மேகமாகிய தென்றும், யானையின் மதநீர் கலந்ததால் உவர்க்கடல் உப்பு நீங்கியதென்றும் கூறியது பிறிதின் குணம் பெறலணியின்பாற்படும். (15)

## சேனைகள் புறப்பட்ட இலங்கை நகர வாயில்களின் தோற்றம்

9451 மலையும் வேலையு மற்றுள
பொருள்களும் வானோர்
நிலையு மப்புறத் துலகங்கள்
யாவையு நிரம்ப
உலைவு ருவகை யுண்டுபண்
டுமிழ்ந்தபே ரொருமைத்
தலைவன் வாயொத்த விலங்கையின்
வாயில்க டருவ.

மலையும், வேலையும், மற்று உள பொருள்களும், வானோர்
நிலையும், அப்புறத்து உலகங்கள் யாவையும், நிரம்ப
உலைவு உருவகை உண்டு, பண்டு உமிழ்ந்த பேர் ஒருமைத்
தலைவன் வாய் ஒத்த—இலங்கையின் வாயில்கள் தருவ.

பொ:- (இத்தகைய பெருஞ் சேனையை) வெளிப்படுத்துவன வாகிய இலங்கை நகரத்தின் வாயில்கள், மலைகளும் கடல்களும் மற்றுமுள்ள பொருள்களும் தேவர்களின் இருப்பிடமாகிய வானுலகும் அப்புறத்துள்ள உலகங்கள் யாவும் நிலைகுலைந்தழியாதபடி (தன் வயிற்றினுள்ளே) நிரம்புமாறு (அவற்றையெல்லாம்) முன்னொரு காலத்து உண்டு உமிழ்ந்து வெளிப்படுத்திய பெருமை வாய்ந்த ஒப்பற்ற முதல்வனாகிய திருமாலின் வாயினை ஒத்துத் தோன்றின.

கு:- தருவ, இலங்கையின் வாயில்கள், தலைவன் வாய் ஒத்த என முடியும். 'மலையும் வேலையும் மற்றுள பொருள்களும் வானோர் நிலையும் அப்புறத்து உலகங்கள் யாவையும் உலைவுருவகை பண்டு உண்டு உமிழ்ந்த தலைவன்' என்றது, திருமாலாகிய கடவுளை.

'அறுபொருளிவனென்றே அமரர்கணந் தொழுதேத்த
உறுபொருளொன்றின்றியே உலகடைய உண்டனையே'

எனத் திருமாலைப் போற்றுவதாக அமைந்த ஆய்ச்சியர் குரவைப் பாடல் இங்கு எண்ணத் தகுவதாகும். மூலப் பெரும்படை உள்ளிருந்து வெளிப்படும் நிலையில் அமைந்த இலங்கை நகரத்தின் வாயில்கள் உலகத்தை உண்டுமிழ்ந்த திருமாலின் வாயினை ஒத்துத் தொன்றின என்பதாம். உலைவுறுதல்—நிலைகுலைந்தழிதல். உலைவுருவகை உண்டு உலைவுருவகை உமிழ்ந்த என ஈரிடத்தும் சென்றியைந்தது. (16)

## மூல சேனைகளைக் கண்டு வானரம் இரிந்தோடுதல்

9452 கடம்பொ ருமதக் களிறுதேர்
பரிமிடை காலாள்
படம்பொ ருமையி னனந்தலை
யனந்தனும் பதைத்தான்
விடம்பொ ருதிரி யமரர்போற்
குரங்கின மிதிக்கும்
இடம்பொ ருமையி னிரிந்துபோய்
வடதிசை யிறுத்த!

கடம் பொரு மதக்களிறு, தேர், பரி, மிடை காலாள்
படம் பொருமையின் நனந்தலை அனந்தனும் பதைத்தான்;
விடம் பொருது இரி அமரர் போல் குரங்கு இனம் மிதிக்கும்
இடம் பொருமையின் இரிந்து போய், வடதிசை இறுத்த.

பொ:- கன்னத்தில் தங்காது பெருகி வழியும் மதநீரையுடைய ஆண் யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாள் வீரர்களும் ஆகிய அரக்கர் சேனையைத் தன்னுடைய படத்தினால் தாங்கப் பொறாமல் பரந்த (ஆயிரந்) தலையினையுடைய ஆதிசேடனும் நடுக்குற்று வருந்தினான். ஆலகால நஞ்சின் வேகத்தைத் தாங்கப் பொறாது அஞ்சி யோடிய தேவர்களைப் போன்று அங்குள்ள வானரக் கூட்டம் காலூன்றி நிற்குமிடத்துப் பொறுத்து நிற்றலாற்றாமையால் அஞ்சி யோடிப் போய் (கடலின்) வடகரையில் தங்கின.

கு:- கடம்—யானையின் கன்னம், நனந்தலை அனந்தன்—பரந்த ஆயிரந் தலைகளையுடைய ஆதிசேடன். விடம்—நஞ்சு; என்றது, பாற் கடல் கடையுங்கால் தோன்றிய ஆலகால நஞ்சினை. இரிதல்—நிலை குலைந்து அஞ்சி ஓடுதல். (17)

## கவிக் கூற்று

9453 ஆழி மால்வரை வேலி சுற்
றிடவகுத் தமைத்த
ஏழு வேலையு மிடுவலை
யரக்கரே யினமா

வாழி காலனும் விதியும் வெவ்
 வினையுமே மள்ளர்
தோழ மாமதி லிலங்கைமால்
 வேட்டமேற் றொடர்ந்தான்.

ஆழி மால் வரை வேலி சுற்றிட
 வகுத்து அமைத்த
ஏழு வேலையும், இடு வலை;
 அரக்கரே, இன மா
வாழி காலனும் விதியும் வெவ்
 வினையுமே, மள்ளர்;
தோழம், மாமதில் இலங்கை; மால்
 வேட்டம் மேல் தொடர்ந்தான்.

பொ:- சக்கரவாளமலை வேலியாகச் சுற்றி நிற்க, வகைப்பட அமைந்த ஏழு கடல்களும் (விலங்குகளைப் பிடித்தற் பொருட்டு விரித்து) இடப்பட்ட வலைகள்; (இவ்விடப் பரப்பில் உள்ள) அரக்கர் களே (வேட்டையிற் பிணித்தற்குரிய) கூட்டமாகிய விலங்குகள்; கூற்றுவனும் விதியும் (அரக்கரது) கொடிய வினையுமே (வேட்டைத் தொழிலில் ஈடுபட்ட) ஏவலராகிய வீரர்கள்; (விலங்குகள் செறிந்துள்ள) தொழுவம், பெரிய மதிலாற் சூழப்பட்ட இலங்கை நகரம். வேட் டைத் தொழிலை மேற் கொண்டு தொடர்ந்து நின்ற வேடர் தலைவன் திருமாலின் அமிசமாகிய இராமன்.

கு:- காட்டில் வாழும் விலங்குகளை வேட்டையாடச் செல் வோன் ஏவலர்கள் சூழக் காட்டைக் சுற்றிலும் வலைவிரித்து விலங்கு களை ஓரிடத்தே அடையும்படி செய்து அத் தொழுவத்துட் புகுந்து அவற்றை வேட்டத்தாற் கொல்வது போன்று, இராமனாகிய வேட னும் அரக்கரென்னும் விலங்குகளை எய்து கொல்லுதற்குக் கூற்றுவனை யும் விதியையும் அரக்கரது பாவத்தையும் தனக்குத் துணையாகக் கொண்டு இலங்கையாகிய தொழுவத்தை யடைந்து வேட்டைத் தொழிலில் முற்பட்டு நின்றான் என உருவக அணி அமைய ஆசிரியர் புனைந்து கூறினாரென்க. இச் செய்யுள் முற்றுருவகம். இனமா—கூட்ட மாகிய விலங்குகள். வாழி—அசை. விதி—ஊழ். வெவ்வினை—பாவம். தோழம்—தொழுவம்; விலங்குகள் செறிந்து நிற்கும் இடம். மால் என்றது, இராமனை. (18)

### சேனைகளின் பேராரவாரம்

**9454** ஆர்த்த வோசையோ வலங்குதே
ராழியி னதிர்ப்போ
கார்த்திண் மால்கரி முழக்கமோ
வாசியின் கலிப்போ
போர்த்த பல்லியத் தரவமோ
நெருக்கினுர் புழுங்கி
வேர்த்த வண்டத்தை வெடித்திடப்
பொடிந்தது மேன்மேல்.

**ஆர்த்த ஓசையோ? அலங்கு தேர்**
**ஆழியின் அதிர்ப்போ?**
**கார்த் திண் மால் கரி முழக்கமோ?**
**வாசியின் கலிப்போ?**
**போர்த்த பல் இயத்து அரவமோ?—**
**நெருக்கினுற் புழுங்கி**
**வேர்த்த அண்டத்தை வெடித்திடப்**
**பொடித்தது, மேன்மேல்.**

**பொ:- நெருக்கத்தாற் புழுங்கி வேர்க்கின்ற அண்டத்தை வெடித் திடும்படி மேலும் மேலும் மிக்குத் தோன்றியது, (வீரர்கள்) ஆர வாரித்த ஓசையோ, அசைந்து செல்லும் தேர்ச் சக்கரங்களின் அதிர்ப் பொலியோ, கரிய திண்ணிய யானைகளின் பிளிற்ளுெலியோ, குதிரை களின் கனைப்பொலியோ, பரவிச் செறிந்த பல வாத்தியங்களின் ஒலியோ?**

**கு:- அண்டத்தை வெடித்திட மேன்மேற் பொடித்தது, ஓசையோ, அதிர்ப்போ, முழக்கமோ, கலிப்போ, அரவமோ என இயையும். பொடித்தல்—தோன்றுதல். வாசி—குதிரை. (19)**

### சேனைக் கடலின் தோற்றம்

**9445** வழங்கு பல்படை மீனது
மதகரி மகரம்
முழங்கு கின்றது முரிதிரைப்
பரியது முரசந்

தழங்கு பேரொலி கலிப்பது
தருகண்மா நிருதப்
புழுங்கு வெஞ்சினச் சுறவது
நிறைபடைப் புணரி.

வழங்கு பல்படை மீனது;
மதகரி மகரம்
முழங்குகின்றது; முரி திரைப்
பரியது; முரசம்
தழங்கு பேர் ஒலி கலிப்பது;
தருகண் மா நிருதப்
புழுங்கு வெஞ்சினச் சுறவது—
நிறைபடைப் புணரி.

**பொ:-** நிறைந்த சேனையாகிய கடல், செலுத்துதற்குரிய ஆயுதங்களாகிய மீன்களை யுடையது; மதம் பொருந்திய யானையாகிய மகர மீன் (தன்கண்) முழங்குகின்றது; குதிரைகளாகிய மடங்குகின்ற அலைகளையுடையது; முரசம் முழங்குகின்ற பேரொலியாகிய ஓசையை யுடையது; அஞ்சாமையும் பெருமையும் வாய்ந்த அரக்கர்களாகிய மனங்கனலும் மிக்க வெகுளியை யுடைய சுறுமீன்களையுடையது.

**கு:-** படைப் புணரி—சேனையாகிய கடல்; சேனையைக் கடலாக உருவகித்ததற்கேற்ப வாள் வேல் முதலியவற்றை மீனாகவும், யானையை மகரமாகவும், பரியை அலையாகவும், முரசின் முழக்கத்தைக் கடலோசையாகவும், ஆசிரியர் உருவகித்தார். இயைபுருவகம். முரிதல்—மடங்கிமாறுதல். திரைப்பரியது என்பதனைப் பரித்திரையது என மாற்றுக. (20)

### அரக்கர் சேனை விசும்பினும் பரவுதல்

**9456** தசும்பிற் பொங்கிய திரள்புயத்
தரக்கர்தந் தானை
பசும்புற் றண்டல மிதித்தலிற்
கரிபடு மதத்தின
அசும்பிற் சேறுபட் டளறுபட்
டமிழுமா லடங்க
விசும்பிற் சேறலிற் கிடந்ததவ்
விலங்கன்மே லிலங்கை.

தசும்பின் பொங்கிய திரள் புயத்து
அரக்கர்தம் தானை
பசும் புல் தண்தலம் மிதித்தலின்,
கரிபடு மதத்தின்
அசும்பின் சேறுபட்டு, அளறுபட்டு
அமிழுமால், அடங்க;
விசும்பின் சேறலின் கிடந்தது, அவ்
விலங்கல்மேல் இலங்கை.

பொ:- குடம் போன்று பருத்தெழுந்த திரண்ட தோள்களை யுடைய அரக்கரது சேனை, பசும்புல்லினைக் கொண்ட குளிர்ந்த நிலத்தில் மிதித்தலாலும், யானைகளிடத்தே யுண்டாகும் மத நீர்ப் பெருக்காலும் இலங்கை நகரம் நீர்பொசியும் நிலத்திற் சேறுபோன்று குழைந்த சேறுகி (அதனுள்) ஒருங்கே அழுந்திப்போயிருக்கும். (அச் சேனைகள் தரைவழியாக அன்றி) வான்வழியாகச் சென்றமையால் (சுவேலாசலம் என்னும்) அம்மலையிடத்தே (அந்நகர் அழியாது) கிடந்தது.

கு:- தசும்பு—குடம். பொங்குதல்-கிளர்ந்தெழுதல். தண்தலம்—நீரால் குளிர்ந்த நிலம். மிதித்தலின், மதத்தின் என்புழி இன்னுருபுகள் ஏதுப்பொருளன. அசும்பு—நீர்கசியும் நிலம். அசும்பின் என்புழி இன் ஒப்புப் பொருளில் வந்தது. அளறு படுதல்—குழைந்த சேறுதல். மூலப் பெரும்படை நிலத்தில் அடிவைத்துச் சென்றிருந்தால் இலங்கை நகர் சேறுகிக் குழைந்து அதனுள் அழுந்திப்போயிருக்கும். அப்படைகள் வான் வழியே சென்றமையால் அவ்விலங்கை நகரம் அழிவின்றி மலையில் தங்குவதாயிற்று எனப் புனைந்துரை வகையாற் படையின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. (21)

## அரக்கர் சேனையைப் பார்த்து அஞ்சிய வானவர்கள், சிவபெருமானை இறைஞ்சுதலும் இறைவன் அவர்களது அச்சத்தைப் போக்குதலும்

9457 படியைப் பார்த்தனர் பரவையைப்
பார்த்தனர் படர்வான்
முடியைப் பார்த்தனர் பார்த்தனர்
நெடுந்திசை முழுதும்

விடியப் பார்ப்பதோர் வெள்ளிடை
கண்டிலர் மிடைந்த
கொடியைப் பார்த்தனர் வேர்த்தனர்
வானவர் குலைந்தார்.

படியைப் பார்த்தனர்; பரவையைப்
பார்த்தனர்; படர்வான்
முடியைப் பார்த்தனர்; பார்த்தனர்,
நெடுந்திசை முழுதும்;
விடியப் பார்ப்பது ஓர் வெள்ளிடை
கண்டிலர்; மிடைந்த
கொடியைப் பார்த்தனர்; வேர்த்தனர்,
வானவர் குலைந்தார்.

பொ:- தேவர்கள், பூமியை நோக்கினார்கள்; கடலை நோக்கினார்கள்; படர்ந்து செல்லுதற்குரிய வானத்தின் உச்சியை நோக்கினார்கள்; (அரக்க வீரர்கள் கொண்ட) செறிந்த கொடிகளை (எங்கும்) கண்டார்கள்; இருள் நீங்கிப் புலப்படக் காண்பதோர் வெளியிடத்தைக் கண்டிலர்; (உடல்) வியர்த்தவராய் (உள்ளம்) நடுங்கினார்கள்.

கு:- வானவர், படியைப் பார்த்தனர்; பரவையைப் பார்த்தனர்; வான்முடியைப் பார்த்தனர்; வெள்ளிடை கண்டிலர்; வேர்த்தனர், குலைந்தார் என இயையும். படி—பூமி. பரவை—கடல். வான்முடி—வானத்து உச்சி. விடிதல்—இருள் நீங்கிப் பொருள் புலனாதல். (22)

9458 உலகி னுமலா வுருவெலா
மிராக்கத வுருவா
அலகில் பல்படை பிடித்தமர்க்
கெழுந்தவோ வன்றேல்
விலகி னீர்த்திரை வேலையோ
ரேழும்போய் விதியால்
புலைகொள் வல்லுருப் பொடித்தன
வோவெனப் புகன்றார்.

'உலகில் நாம் அலா உரு எலாம்
இராக்கத உருவா,
அலகு இல் பல்படை பிடித்து அமர்க்கு
எழுந்தவோ? அன்றேல்

விலகுஇல் நீர்த்திரை வேலை ஓர்
ஏழும் போய் விதியால்
புலைகொள் வல்உருப் பொடித்தனவோ?'
எனப் புகன்றார்.

பொ:- உலகத்தில் நாம் அல்லாத ஏனைய உருவங்களெல்லாம் (இப்பொழுது) அரக்கர் உருவங்களாகி அளவில்லாத பல ஆயுதங்களைக் கையிற்கொண்டு போருக்கு எழுந்தனவோ? அங்ஙனம் அன்றாயின் நீங்குதலில்லாத தன்மையவாகிய அலைகளையுடைய கடல்கள் ஏழும் ஊழ் வயத்தால் தம் தன்மை திரிந்து புலைத்தன்மை கொண்ட வலிய அரக்கர் உருவங்களாக முகிழ்த்தனவோ? என ஐயுற்றார்கள் (தேவர்கள்).

கு:- தம்மைத் தவிரத் தம்மாற் காணப்படுவார் அனைவரும் அரக்கர்களேயாகச் செறிந்து தோன்றுதலைக் கண்ட தேவர்கள், நம்மையல்லாத ஏனைய உடம்புடைய உயிர்களெல்லாம் இப்பொழுது அரக்கர் வடிவங்களைப் பெற்றுப் படைக்கல மேந்திப் போருக்கு முற்பட்டனவோ? அன்றி ஏழு கடல்களும் ஊழ்வயத்தால் இங்ஙனம் புலைத் தன்மைகொண்ட வலிய அரக்கர் வடிவங்களாக முகிழ்த்துத் தோன்றினவோ எனத் தம்முள் ஐயுற்று வருந்தினர் என்பதாம். பொடித்தல்—முகிழ்த்தல்; மேற்பட்டுத் தோன்றுதல். (23)

இச்செய்யுளின்பின் 41 என்னும் எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகின்றது:-

9458a மூன்றி னூற்றிரே டாயிர முளவென வெள்ளம்
ஆன்ற தேர்பரி கரியவை யானையு மடங்கி
மூன்று லோகமு முற்றும்போய் முடிவுறு மென்ன
ஏன்று சென்றதவ் விராமன்மே லிராக்கதப் பரவை.

9459 நடுங்கி நஞ்சடை கண்டனை
வானவர் நம்ப
ஒடுங்கி யாங்கரந் துறைவிட
மறிகில முயிரைப்
பிடுங்கி யுண்குவர் யாரிவர்
பெருமைபண் டறிந்தார்
முடிந்த தெம்வலி யென்றன
ரோடுவான் முயல்வார்.

நடுங்கி, நஞ்சு அடை கண்டனை,
வானவர் 'நம்ப!
ஒடுங்கி யாம் கரந்து உறைவிடம்
அறிகிலம்; உயிரைப்
பிடுங்கி உண்குவர்; யார், இவர்
பெருமைபண்டு அறிந்தார்?
முடிந்தது, எம் வலி' என்றனர்,
ஓடுவான் முயல்வார்.

பொ:- போர்க்களத்தை விட்டு ஓடுதற்கு முயன்றவராகிய தேவர்கள், நஞ்சு சேர்ந்த மிடற்றினை யுடையவனாகிய சிவபெருமானை நடுங்கி அடைந்து, 'நம்பனே! யாங்கள் ஒடுங்கி மறைந்து தங்குதற்குரிய (பாதுகாவலான) இடத்தை அறிகின்றிலோம். (இவ்வரக்கர்களோ உடம்போடு) உயிரைப் பறித்து உண்பவர்கள்; இவர்களது பெரு வன்மையினை முன்னமே உணர்ந்தார் யாவர்? எமது வன்மையனைத்தும் (இவர்களைக் கண்ட) இன்றோடு முடிவுற்றது' என்று கூறினர்.

கு:- அரக்கரது படைப்பெருக்கத்தைக் கண்டு நடுங்கி ஓடுதற்கு முயன்ற தேவர்கள், முன்னாளிற் பாற்கடலிற் றோன்றிய ஆலகால நஞ்சினின்றும் தம்மை உய்வித்தருளிய பேரருளுடைய பெரியோனாகிய நஞ்சணி கண்டனை அடைந்து ஆறுதல் பெற எண்ணி இங்ஙனம் வினவினர் என்பது, 'நஞ்சடை கண்டனை' என்னும் தொடரால் உய்த்துணரப்படும். ஓடுவான் முயல்வார் வானவர் நடுங்கி நஞ்சடை கண்டனை (அடைந்து) 'நம்ப...முடிந்தது எம் வலி' என்றனர் என முடிக்க (24)

**9460** ஒருவ ரைக்கொல்ல வாயிர
மிராமர்வந் தொருங்கே
இருப திற்றிரண் டாண்டுநின்
றமர்செய்தா லென்னும்
நிருத ரைக்கொல்வ திடம்பெற்றோ
ரிடையினின் றன்றோ
பொருவ திப்படை கண்டுதம்
முயிர்பொறுத் தன்றோ.

"ஒருவரைக் கொல்ல, ஆயிரம்
இராமர் வந்து, ஒருங்கே
இருபதிற்றிரண்டு ஆண்டு நின்று
அமர்செய்தால், என் ஆம்?

நிருதரைக் கொல்வது, இடம்பெற்று ஓர்
இடையில் நின்று அன்றோ?
பொருவது, இப்படை கண்டு, தம்
உயிர் பொறுத்து அன்றோ ?'

பொ:- (இவ்வரக்கர்களுள்) ஒருவரைக் கொல்வதற்கு ஆயிரம் இராமர்கள் ஒருங்கே கூடி வந்து இருபத்து நான்காண்டுகள் போர் செய்தாலும் என்ன ஆகும்? அரக்கரைக் கொல்வதென்பது, (இப் போர்க் களத்தில் நிற்றற்கு) ஓரிடத்தைப் பெற்று நின்ற பின்பு அல்லவா? போர் செய்வது என்பதும் இவ்விராக்கதப் படையைக் கண்டு தம் உயிரைத் தாங்கி நிற்கும் (மன) வன்மையைப் பெற்ற பின்னர் அன்றோ?

கு:- இரு பதிற்றிரண்டு ஆண்டு—இரண்டு பன்னிரண்டாண்டு; இருபத்து நான்காண்டு; இரண்டு வியாழ வட்டம். மூலப்படையிலுள்ள அரக்கர் ஒருவரைக் கொல்வதென்பது ஆயிரம் இராமர் ஒருங்கு கூடி இருபத்து நான்காண்டுகள் தொடர்ந்து போரிட்டாலும் நடவாத செயல் என்று அவ்வரக்கரது வன்மையினைப் புனைந்துரை வகையால் உயர்த்துக் கூறியவாறு. (25)

**9461** என்றி றைஞ்சலு மிருண்மிடற்
றிறைவனு மினிநீர்
ஒன்று மஞ்சலீர் வஞ்சனை
யரக்கரை யொருங்கே
கொன்று நீக்குமக் கொற்றவ
னிக்குல மெல்லாம்
பொன்று விப்பதோர் விதிதந்த
தாமெனப் புகன்றான்.

என்று இறைஞ்சலும், இருள்மிடற்று இறைவனும் 'இனி, நீர்
ஒன்றும் அஞ்சலீர்; வஞ்சனை அரக்கரை ஒருங்கே
கொன்று நீக்கும், அக்கொற்றவன்; இக்குலம் எல்லாம்
பொன்றுவிப்பது ஓர் விதி தந்ததாம்' எனப் புகன்றான்.

பொ:- என்று கூறி (வானவர்) வணங்கவும் இருண்ட நீல மணி போலும் மிடற்றினை யுடைய சிவபெருமானும் (அத்தேவர்களை நோக்கி,) 'இனி நீவிர் சிறிதும் அஞ்சாதீர்கள். வஞ்சனைக் குண முடைய

அரக்கர்களை அவ் வெற்றி வீரனாகிய இராமன் ஒரு சேரக் கொன்றொழிப்பான். இந்த (அரக்கர்) குலத்தை யெல்லாம் அழியச் செய்வதாகிய ஊழ்வினையே (இவர்களை இங்கே) கொண்டு வந்து தந்த தாகும் என்று கூறினான்.

கு:- ஒன்றும்—சிறிதும். அக்கொற்றவன் என்றது வெற்றி வீரனாகிய இராமனை. இக்குலம்—இந்த அரக்கர் குலம். விதி—ஊழ்வினை.

மூலபலப் படையைக் கண்டு வானரங்கள் அஞ்சி ஓடுதல்

**9462** புற்றி னின்றுவல் லரவினம்
புறப்படப் பொருமி
இற்ற தெம்வலி யெனவிரைந்
திரிதரு மெலிபோல்
மற்ற வானரப் பெருங்கடல்
பயங்கொண்டு மறுகிக்
கொற்ற வீரரைப் பார்த்தில
திரிந்தது குலைவால்.

புற்றின் நின்று வல் அரவுஇனம் புறப்பட, பொருமி,
'இற்றது, எம்வலி' என விரைந்து இரிதரும் எலிபோல்,
மற்று அ(வ்) வானரப் பெருங்கடல் பயங்கொண்டு மறுகி,
கொற்ற வீரரைப் பார்த்திலது; இரிந்தது, குலைவால்.

பொ:- புற்றிலிருந்து வலிமிக்க பாம்புக் கூட்டம் புறப்பட்டு வர, (அது கண்டு) பொருமுதலுற்று, 'எமது வலிமை தீர்ந் தொழிந்தது' என்று விரைந்து நிலை கெட்டோடும் எலிக் கூட்டத்தினைப் போன்று அந்த வானர சேனையாகிய பெருங்கடல் (அரக்கரது மூலப் பெரும் படையினைக் கண்டு) அச்சங் கொண்டு மனமயக்க முற்று, வெற்றி பொருந்திய வீரர்களாகிய இராம இலக்குவரையும் (மனத் தாற் கருதிப்) பாராமல் நடுக்கத்தால் நிலை கெட்டோடியது.

கு:- வல் அரவினம்—வலிய பாம்புக் கூட்டம். பொருமுதல்—விம்முதல். அரக்கர் சேனைக்கு அரவினமும், அது கண்டு அஞ்சியோடும் வானரக் கூட்டத்திற்கு எலிக் கூட்டமும் உவமை. "ஒலித்தக்கா லென்னா முவரி எலிப்பகை, நாக முயிர்ப்பக் கெடும்" (763) என வரும் திருக்குறட் பொருளை ஆசிரியர் இச்செய்யுளில் எடுத்தாண்டுள்ளமையும் இவ்வாறு பகைவர் படையை எலிக் கூட்டமாகவும் ஆற்றல் மிக்க 'எலியெலாம் இப்படை அரவம் யானென ஒலியுலாம் சேனையை யுவந்து கூறினான், (கம்பர்-குகப்படலம்—10) என்புழி ஆசிரியர் முன்

வமே குறித்துள்ளமையும் இங்கு ஒப்பு நோக்கி புணரத்தக்கன வாகும். (27)

9463 அணையின் மேற்சென்ற சிலசில
வாழியை நீந்தப்
புணைக டேடின சிலசில
நீந்தின போன
துணைக ளோடும்புக் கழுந்தின
சிலசில தோன்ருப்
பணைக ளேறின மலைமுழை
புக்கன பலவால்.

அணையின்மேல் சென்ற, சிலசில; ஆழியை நீந்தப்
புணைகள் தேடின, சில; சில நீந்தின போன;
துணைகளோடு புக்கு, அழுந்தின சில; சில தோன்ருப்
பணைகள் ஏறின; மலைமுழை புக்கன, பலவால்.

பொ:- வானரங்களிற் சில அணையின் மீது (ஏறிச்) சென்றன. சில வானரங்கள் கடலைக் கடப்பதற்குத் தெப்பங்களைத் தேடின. சில வானரங்கள் (நீரில்) நீந்திச் சென்றன. சில வானரங்கள் துணைகளோடும் சென்று (நீந்த மாட்டாமல் கடலில்) அழுந்தின. சில வானரங்கள் (யாவர் கண்களுக்கும்) தோன்ருதனவாய் (இலைகளடர்ந்த) மரக்கிளைக் குள் ஏறி ஒளிந்தன. (எஞ்சிய) பலவும் மலை முழைகளிற் புக்கு ஒடுங்கின.

கு:- அணை என்றது, இலங்கையை அடைதற் பொருட்டு முன்னர் அமைத்துக் கொண்ட அணையினை. பணை—கிளை. (28)

ஓடிய வானரங்களின் அச்சச் சொல்

9464 அடைத்த பேரணை யளித்தது
நமக்குயி ரடைய
உடைத்துப் போதுமா லவர்தொட
ராமலென் றுரைத்த
புடைத்துச் செல்குவர் விசும்பினு
மென்றன போதோன்
படைத்த திக்கெலாம் பரந்தன
ரென்றன பயத்தால்.

'அடைத்த பேர் அணைஅளித்தது
நமக்கு உயிர்; அடைய
உடைத்துப் போதுமால், அவர் தொட
ராமல்' என்று, உரைத்த;
'புடைத்துச் செல்குவர் விசும்பினும்'
என்றன; 'போதோன்
படைத்த திக்குளலாம் பரந்தனர்'
என்றன, பயத்தால்.

பொ:- '(கடல் நடுவே மலை முதலியன கொண்டு, நாம் முன்னர்) அடைத்து அமைத்த பெரிய அணையானது (இப்பொழுது) நமக்கு உயிரைத் தந்தது. (பகைவராகிய) அவர்கள் நம்மைத் தொடர்ந்து பற்றுதவாறு (இவ்வணையினை) முழுவதும் உடைத்துவிட்டுச் செல்வோம் என(ச் சில வானரங்கள்) கூறின. (அவ் வரக்கர்கள்) நம்மைத் தாக்கி வான் வழியாகவும் செல்ல வல்லவர்கள்' என்று (சில வானரங்கள்) கூறின. 'தாமரை மலர் ஆதனத்தோனாகிய பிரமன் படைத்த திசைகளிளெல்லாம் (அவ் வரக்கர்கள்) பரவியுள்ளார்கள்' என்று (சில வானரங்கள்) அச்சத்தாற் கூறின.

கு:- அரக்கர் சேனையினைக் கண்டு அஞ்சியோடிய வானரங்கள் தம்முட் கூறியவற்றைக் கொண்டு கூறும் முறையில் அமைந்தது இச் செய்யுள். 'முன்பு நாம் இலங்கையை அடைதற் பொருட்டுக் கடலிடத்தே அமைத்த இவ் வணையானது இப்பொழுது நாம் அரக்கர் கைபட்டு இறவாது தப்பி ஓடிவருதற்கும் துணையாயமைந்தது. நாம் மீளுதற்கு உதவிய இவ்வணை வழியே நம் பகைவர் நம்மைத் தொடராதவாறு இவ் வணையினை உடைத்துப் போக்குவோம்' என்று சில குரங்குகள் கூற, அதனைக் கேட்ட குரங்குகளிற் சில 'அவ் வரக்கர்கள் தரைவழியாக அன்றி வான் வழியாகவும் வந்து நம்மைத் தாக்க வல்லகள்' என்று கூற, அது கேட்டு உடனிருந்த குரங்குகள், 'அவ் வரக்கர்கள் எல்லாத் திசைகளிலும் பரவி வந்துவிட்டார்கள்' என அச்சத்தாற் கூறி வருந்தின என அவ்வானரங்களின் அச்ச நிலையினைப் புலப்படுத்தியவாறு. (29)

சுக்கிரீவன், அனுமன், அங்கதன் ஆகியவர்கள் மட்டும்
தன்னைப் பிரியாதுடனிருக்க, ஏனைய வானர வீரர்கள்
நிலைகெட் டோடினமையை இராமன் நோக்குதல்

9465 அரியின் வேந்தனு மனுமனு
மங்கத னவனும்
பிரிய கிற்றில ரிறைவனை
நின்றனர் பின்ரூர்

இரிய லுற்றனர் மற்றையோர்
யாவரும் எறிநீர்
விரியும் வேலையைக் கடந்தனர்
நோக்கினன் வீரன்.

அரியின் வேந்தனும், அனுமனும், அங்கதன் அவனும்,
பிரியகிற்றிலர் இறைவனை, நின்றனர் பின்றார்;
இரியலுற்றனர் மற்றையோர் யாவரும், எறிநீர்
விரியும் வேலையைக் கடந்தனர்; நோக்கினன், வீரன்.

பொ:- குரங்கின் வேந்தனாகிய சுக்கிரீவனும் அனுமனும் அங்கதனாகிய அவனும் இறைவனாகிய இராமனைப் பிரியமாட்டாதவராய் (உடன்) நின்றார்கள். (அம் மூவரும் அல்லாது) ஏனை வானர வீரர் யாவரும் நிலைகெட்டு ஓடுதலைப் பொருந்தினவர்களாய் அலையெறியும் நீரினையுடையதாய் விரிந்து பரவிய கடலைக் கடந்து அப்பாற் சென்றனர், பெரு வீரனாகிய இராமன் (அதனைக்) கண்ணுற்றான்.

கு:- அரியின் வேந்தன்—சுக்ரீவன். அரி—குரங்கு. இறைவனைப் பிரியகிற்றிலர் பின்றார் நின்றனர் என இயையும். இறைவன் என்றது இராமனை. பின்றுதல்—பின்னிடுதல். மற்றையோர் யாவரும் இரியலுற்றனர் வேலையைக் கடந்தனர் என்க. இரியலுற்றனர், முற்றெச்சம். (30)

‘இப் பெரும்படை எங்கிருந்து வந்துளது? சொல்லுக’ என இராமன் கேட்க, வீடணன் மூலமாத் தானையைப்பற்றி எடுத்துரைத்தல்

9466 இக்கொடும்படை யெங்குள
தியம்புதி யென்றான்
மெய்க்க டுந்திறல் வீடணன்
விளம்புவான் வீர
திக்க னைத்தினு மேழுமாத்
தீவினுந் தீயோர்
புக்க ழைத்திடப் புகுந்துள
திராக்கதப் புணரி.

'இக் கொடும் படை எங்கு உளது? இயம்புதி' என்றான்:
மெய்க் கடுந் திறல் வீடணன் விளம்புவான்: —'வீர!
திக்கு அனைத்தினும், ஏழு மாத்தீவினும், தீயோர்
புக்கு அழைத்திடப் புகுந்துளது, இராக்கதப் புணரி.

பொ:- (அங்ஙனம் நோக்கிய வீரன்) 'இக் கொடிய சேனை எவ்விடத்தே உள்ளது? சொல்வாயாக' என்று (வீடணனை) வினவினான். மெய்ம்மையும் திண்ணியதாகிய வலிமையும் உடைய வீடணன் (அச் சேனையினைக் குறித்துப் பின்வருமாறு) கூறுவானாயினான்: 'வீரனே! எல்லாத் திசைகளிலும் ஏழு பெருந் தீவுகளிலும் கொடிய தூதர்கள் சென்று அழைத்திட அரக்கராகிய சேனைக் கடல் இங்கு வந்துளது.'

கு:- 'என்றான்' என்னும் வினைக்கு மேற் செய்யுளிலுள்ள 'வீரன்' என்பதனை எழுவாயாக வருவித்துரைக்க. ஏழு பெருந்தீவுகளாவன நாவலந் தீவு, இறலித் தீவு, குசைத் தீவு, கிரவுஞ்சத் தீவு, புட்கரத் தீவு, இலாங்கலித் தீவு, பூசத் தீவு என்பன. இராக்கதப் புணரி— அரக்கர்களாகிய கடல்; கடல்போல் எல்லையின்றிப் பரந்துள்ளமை பற்றிக் கடல் என உருவகிக்கப்பட்டது. (31)

**9467** ஏழெ னப்படுங் கீழுள
தலத்தினின் றேறி
ஊழி முற்றிய கடலெனப்
புகுந்தது முளதால்
வாழி மற்றவன் மூலமாத்
தானைமுன் வருவ
ஆழி வேறினி யப்புறத்
தில்லைவா ளரக்கர்.

'ஏழ் எனப்படும் கீழுள தலத்தின் நின்று ஏறி
ஊழி முற்றிய கடல் எனப் புகுந்ததும் உளதால்;
வாழி மற்று அவன் மூல மாத்தானை முன் வருவ;
ஆழி வேறு இனி அப்புறத்து இல்லை, வாள் அரக்கர்.

பொ:- ஏழென்று சொல்லப்படும் கீழுள்ள உலகங்களினின்றும் (இங்கு) ஏறி, ஊழி முடிவில் (உலகினைச்) சூழ்ந்த கடலினைப் போன்று வந்து புகுந்த சேனையும் (இதன்கண்) உள்ளது; முற்பட்டு வருவன வாகிய இச் சேனைகள் அவ் இராவணனது மூலப் பெருஞ் சேனையாகும்.

இச் சேனையின் வேறாக இனி, கடலின் அப்புறத்துக் கொடிய அரக்கர் யாரும் இல்லை.

கு:- இனி, ஆழி அப்புறத்து அரக்கர் வேறு இல்லை என இயையும். இனிமேல், கடலுக்கு அப்புறத்தே அரக்கர் ஒருவரும் இலர் என்னும்படி ஏழு பெருந் தீவுகளிலும் பூமியின் கீழுள்ள ஏழுலகங்களிலும் உள்ள அரக்கர் சேனைகள் முழுவதும் இராவணன் தூதர்களால் அழைக்கப்பட்டு இங்கு வந்துள்ளன என்றவாறு. ஊழி—யுக முடிவு. முற்றுதல்—சூழ்தல். வாழி—அசை. (32)

9468 ஈண்டிவ் வண்டத்து ளிராக்கத
ரெனும்பெய ரெல்லாம்
மூண்டு வந்தது தீவினை
முன்னின்று முடுக
மாண்டு வீழுமின் றென்கின்ற
தென்மதி வலியூழ்
தூண்டு கின்றதென் றடிமலர்
தொழுதவன் சொன்னான்.

'ஈண்டு இவ் அண்டத்துள் இராக்கதர்
எனும் பெயர் எல்லாம்
மூண்டு வந்தது, தீ வினை
முன்னின்று முடுக;
மாண்டு வீழும் இன்று என்கின்றது
என்மதி; வலி ஊழ்
தூண்டுகின்றது' என்று அடிமலர்
தொழுது, அவன் சொன்னான்.

பொ:- 'இவ் வண்டத்தில் இராக்கதர் எனும் பெயர் படைத்த சேனைகள் யாவும், கொடிய பாவமானது முன்னின்று ஈர்த்துச் செல்ல இவ் விடத்தே முற்பட்டு வந்துளது. இச் சேனைகள் யாவும் இறந்தொழியும் என்று எனது அறிவு எனக்கு உணர்த்துகின்றது; வன்மை மிக்க ஊழ்வினை அச் சேனைகளைப் பின்னின்று செலுத்துகின்றது' என்று அவ் விடணன் (இராமனுடைய) திருவடித் தாமரையினை வணங்கிக் கூறினான்.

கு:- தீவினை—பாவம். முன்னின்று முடுகுதல்—முன்னே நின்று விரைந்து இழுத்தல். அரக்கரது பாவம் முன்னே நின்று இழுக்க

அன்னேரது ஊழ்வினை பின்னே நின்று செலுத்த இவ்வண்டத்திலும் மேலேழுலகத்தும் உள்ள அரக்கர் சேனைகள் யாவும் இங்கு முற்பட்டு வந்துள்ளன. இவை யாவும் நினக்கு முன்னே பொருது நிற்றலாற்ருது மாண்டொழியும் என எனது அறிவு எனக்கு அறிவுறுத்துகின்றது என்று வீடணன் இராமனை வணங்கி நின்று மூலப் பெரும் படையின் மிகுதியையும் அவை யாவும் இராமனது அம்பினுல் அழிந்தொழிதல் உறுதி என்பதனையும் எடுத்துரைத்தான் என்பதாம். (33)

அஞ்சியோடிய வானர சேனையை அழைத்து வருமாறு
அங்கதனை இராமன் ஏவுதல்

9469 கேட்ட வண்ணலு முறுவலுஞ்
சீற்றமுங் கிளரக்
காட்டு கின்றனென் காணுதி
யொருகணத் தென்ன
ஓட்டின் மேற்கொண்ட தானையைப்
பயந்துடைத் துரவோய்
மீட்டி கொல்லென வங்கதன்
ஓடினன் விரைந்தான்.

கேட்ட அண்ணலும், முறுவலும்
சீற்றமும் கிளர,
'காட்டுகின்றனென்; காணுதி
ஒரு கணத்து' என்ன,
'ஓட்டின் மேற்கொண்ட தானையைப்
பயம் துடைத்து, உரவோய்!
மீட்டிகொல்?' என, அங்கதன்
ஓடினன் விரைந்தான்.

பொ:- (வீடணன் கூறிய அம்மொழியினைக்) கேட்ட பெருமையிற் சிறந்த இராமனும் (தன் முகத்தே) புன்சிரிப்பும் (மனத்தில்) வெகுளியும் விளங்கித் தோன்ற ('இச் சேனைகளின் அழிவினை) ஒருகணத்திற் காட்டுகின்றேன், காண்பாயாக' என்று (வீடணனுக்குக்) கூறி, (அங்கதனை நோக்கி,) 'வலிமிக்க வீரனே! (இப்பொழுது அஞ்சிப் புறமுதுகிட்டு) ஓடுதலை மெற்கொண்ட (வானர) சேனையை அச்ச

மகற்றி மீட்டுவர வல்லாயோ?' எனக் கூற, (அது கேட்ட) அங்கதன் (அச்சேனையை மீட்டுக் கொணர்தற்பொருட்டு) விரைந்து ஓடு வானாயினன்.

கு:- அண்ணல் என்றது இராமனை, 'ஒரு கணத்துக் காட்டு கின்றனென் காணுதி' என்றது, வீடணனை நோக்கிக் கூறியது. முறுவல்-புன்சிரிப்பு. வீடணனது மெய்ம்மொழியை ஏற்று மகிழும் குறிப்பினது. சீற்றம், மூலப் பெரும்படையை விரைந்து அழிக்கும் குறிப்பினது. ஓட்டின் மேற்கொண்ட தானை—மூலப்பெரும் படையினைக் கண்டு அஞ்சி ஓடுதலை மேற்கொண்ட வானர சேனை. ஓட்டு—ஓடுதல்; முதனிலை திரிந்த தொழிற் பெயர். 'உரவோய்' என்றது அங்கதனை நோக்கிய விளி. மீட்டிகொல்—மீட்கவல்லாயோ? இவ்வினா 'மீட்டுக் கொணர்வாயாக' எனப் பணித்தற் பொருளில் ஆளப்பெற்றது. (34)

அங்கதன் சென்று அழைக்கப் படைத்தலைவர் மட்டும் நின்று தாம் அஞ்சியோடியதற்குரிய காரணங் கூறுதல்

9470 சென்று தானையை யுற்றனன்
சிறைசிறை கெடுவீர்
நின்று கேட்டபி னீங்குமி
னெனச் சொல்லி நேர்வான்
ஒன்றுங் கேட்கில மென்றதக்
குரக்கின முரையால்
வென்றி வெந்திறற் படைப்பெருந்
தலைவர்கள் மீண்டார்.

சென்று தானையை உற்றனன்,
'சிறை சிறை கெடுவீர்!
நின்று கேட்டபின் நீங்குமின்'
எனச் சொல்லி நேர்வான்;
'ஒன்றும் கேட்கிலம்' என்றது அக்
குரக்குஇனம்; உரையால்
வென்றி வெந்திறல் படைப்பெருந்
தலைவர்கள் மீண்டார்.

பொ:- (அங்கதன் ஓடிச்) சென்று வானர சேனையை அடைந்து பல பக்கங்களிலும் சிதறி ஓடுகின்றவர்களே! (சிறிதுநேரம் நின்று

(யான் கூறுவதனைக்) கேட்ட பின்னர் (வேண்டுமானால்) நீங்கிச் செல்லுங்கள்' என்று சொல்லி நெருங்குவானாயினன். (அவன் தம்மைத் தொடர்ந்து வருதலைக் கண்ட) அந்தக் குரங்கினம் ('நீ சொல்லக் கருதியது) யாதொன்றையும் (யாம்) கேட்கமாட்டோம்' என்று கூறியது. (அங்கதன் கூறிய) மொழியினால் வெற்றியையும் கொடிய வன்மையையும் உடைய வானர சேனையின் பெருந்தலைவர்கள் (ஓடுவதனை விட்டுத்) திரும்பினர்.

கு:- சிறை—பக்கம். கெடுதல்—தோற்றோடுதல். 'யான் கூறுவதனைச் சிறிது நேரம் நின்று மனம் பொருந்தக் கேட்பீராயின் இவ்வாறு அஞ்சியோட மாட்டீர்கள்' என்பான், 'நின்று கேட்டபின் நீங்குமின்' என்றான். நேர்தல்—நெருங்குதல். அக் குரக்கினம் ஒன்று கேட்கிலம் என்றது. உரை—அங்கதன் கூறிய மொழி. (35)

**9471** மீண்டு வேலையின் வடகரை
யாண்டொரு வெற்பின்
ஈண்டி னார்களை யென்குறித்
திரிவுற்ற தென்றான்
ஆண்ட நாயக கண்டிலை
போலுநீ யவரை
மாண்டு செய்வதெ னென்றுரை
கூறினர் மறுப்பார்.

மீண்டு, வேலையின் வடகரை,
ஆண்டு ஒரு வெற்பின்
ஈண்டினார்களை, 'என் குறித்து
இரிவுற்றது?' என்றான்;
'ஆண்ட நாயக! கண்டிலை,
போலும், நீ அவரை?
மாண்டு செய்வது என்?' என்று உரை
கூறினர், மறுப்பார்.

பொ:- (ஓடுதலை யொழிந்து) மீண்டு வந்து கடலின் வடகரையில் அங்கு உள்ளதொரு மலையிடத்தே ஒருங்கு கூடியவர்களாகிய அப் படைத்தலைவர்களை (நோக்கி, 'நீங்கள்) எதனை எண்ணி இவ்வாறு அஞ்சி ஓடியது?' என வினவினான் (அங்கதன்). 'எம்மை ஆளாகவுடைய தலைவ! நீ அவ் வரக்கர்களைக் கண்டிலையோ? (யாம்) இறந்தபின் செய்வதற்குரிய செயல் என்ன இருக்கிறது;' என்று சொல்லி (அவ்வரக்கரோடு

பொருதற்கு) உடன்படாதவராய் (ப் பின்வருமாறு) மறுமொழி பகர்ந்தனர்.

கு:- வேலை என்றது இலங்கையின் வடதிசையில் அமைந்த கடற் பகுதியை. அதன் வடகரை என்றது சேதுக்கரைக்கு வடபுறம். ஈண்டுதல்—ஒருங்கு கூடுதல். 'என் குறித்து இரிவுற்றது?' என அங்கதன் படைத்தலைவர்களை நோக்கி வினவ, 'மாண்டு செய்வது என்?' என அவர்கள் விஞவெதிர் வினவினர் என்பதாம். யாம் இவ் வரக்கரொடு பொருதற்கு முற்படின் இறந் தொழிதல் திண்ணம். எல்லாச் செயல்களையும் செய்தற்குரிய எமது உயிரையே யிழந்து பின்னர் இராம இலக்குவர் திறத்துச் செய்தற் குரிய பணி எதுவுமில்லை என்பார் 'மாண்டு செய்வது என்?' என்றனர். 'இல்லை, உயிருடையார் எய்தா வினை' (105) என்னும் பழமொழித் தொடர் இங்கு நினைக்கத்தக்கதாகும். (36)

**9472** ஒருவ னிந்திர சித்தென
வுள்ளவ னுள நாள்
செருவி னுற்றவை கொற்றவ
மறத்தியோ தெரியின்
பொருவின் மற்றவ ரிற்றிலர்
யாரொடும் பொருவார்
இருவர் விற்பிடித் தியாவரைத்
தடுத்துநின் றெய்வார்.

'ஒருவன் இந்திரசித்துஎன உள்ளவன் உள நாள்
செருவின் உற்றவை, கொற்றவ! மறத்தியோ? தெரியின்,
பொருஇல் மற்றவர் இற்றிலர், யாரொடும் பொருவார்;
இருவர் வில்பிடித்து, யாவரைத் தடுத்து நின்று எய்வார் ?

பொ:- இந்திரசித்து எனப் பெயர் படைத் துள்ளவனாகிய ஒருவன் (இறவாது) உள்ள நாளில் போரில் (யாம்) அடைந்த துன்பங்களை அரசே நீ மறந்து விட்டாயோ? ஆராய்ந்து பார்க்குங்கால் ஒப்பில் லாத அவ்வரக்கர்கள் (அவ்விந்திரசித்திற்குச்) சிறிதும் இளைத்தவரல் லர். (ஆற்றல் மிக்கார்) யாவருடனும் பொருதற்கு வல்லவர்கள். (இராம இலக்குவர் என்னும்) இருவர் மட்டும் விற்பிடித்து (இவ்வரக் கருள்) யாவரைத் தடுத்து நின்று எய்யவல்லார் ?

கு:- 'இந்திரசித்து என்னும் அரக்கன் ஒருவனை நின்று பொருத பொழுது யாம் பட்ட துன்பங்களை நீ நேரிற் கண்டுள்ளாய். இப்

பொழுது நம்மை எதிர்த்து வந்துள்ள எண்ணில்லாத அரக்கர்களுள் யாரும் அவ்விந்திரசித்துக்கு வன்மையாற் குறைந்தவரல்லர். அவ்வாறாகவும் இராம இலக்குவர் என்னும் இவ்விருவர் மட்டும் வில் வலியால் இவ்வரக்கர்களைத் தடுத்து நிறுத்தும் வன்மையுடையராதல் எவ்வாறு?' என வானர சேனைத்தலைவர்கள் அங்கதனை நோக்கி வினவினர் என்பதாம். இறுதல்—வன்மையிற் குறைதல். (37)

**9473** புரங்க டந்தவப் புனிதனே
முதலிய புலவோர்
வரங்க டந்துல களிப்பவர்
யாவரு மாட்டார்
கரந்த டங்கின ரினிமற்றவ்
வரக்கரைக் கடப்பார்
குரங்கு கொண்டுவந் தமர்செயு
மானுடர் கொல்லாம்.

'புரம் கடந்த அப் புனிதனே முதலிய புலவோர்
வரங்கள் தந்து உலகு அளிப்பவர் யாவரும், மாட்டார்,
கரந்து அடங்கினர்; இனி, மற்று அவ் அரக்கரைக் கடப்பார்
குரங்கு கொண்டு வந்து, அமர்செயும் மானுடர் கொல்லாம்?'

பொ:- முப்புரங்களை வென்றழித்த தூயோனாகிய அந்தச் சிவபெருமான் முதலிய தேவர்கள் (வேண்டுவோர் வேண்டிய) வரங்களைத் தந்தருளி உலகத்தைக் காக்குங் கடமை பூண்டவர்கள் (இவ்வரக்கர் முன்) நிற்க மாட்டாதவர்களாய் மறைந்து ஒடுங்கினார்கள். இனி அவ்வரக்கர்களை வெல்பவர்கள், குரங்குகளைத் துணையாகக் கொண்டு வந்து போர் புரியும் மனிதர்கள் தாமோ ?

கு:- புனிதன்—தூயோன்; இயல்பாகவே பாசங்களின் நீங்கிய வனாகிய இறைவன். கரத்தல்—மறைதல். குரங்கு கொண்டு வந்து அமர் செயும் மானுடர் என்றது வானர சேனைகளைத் துணையாகக் கொண்டு வந்த இராம இலக்குவர்களை. (38)

**9474** ஊழி யாயிர கோடிநின்
றுருத்திர னேடும்
ஆழி யானுமற் றயனெடு
புரந்தர னவனும்

சூழ வோடின ரொருவரைக்
கொன்றுதந் தோளால்
வீழு மாசெய்ய வல்லரேல்
வென்றியி னன்றே.

'ஊழி ஆயிரகோடி நின்று, உருத்திரனோடும்
ஆழியானும் மற்று அயனொடு புரந்தரன் அவனும்,
சூழ ஓடினர்; ஒருவரைக் கொன்று தம் தோளால்
வீழுமா செய்ய வல்லரேல், வென்றியின் நன்றே!

பொ:- (அழித்தற் கடவுளாகிய) உருத்திரனோடு சக்கரப் படையினை யுடைய திருமாலும் மற்றும் பிரமனோடு இந்திரனும் ஆயிர கோடி ஊழிக்காலம் இவ்வரக்கர்களைச் சூழ்ந்து தொடர்ந்து ஓடிப் பொருது (இவர்களுள்) ஒருவனைத் தம் தோள் வலியாற் கொன்று வீழுமாறு செய்யும் வல்லமை யுடையராயின் (அச்செயல்) வெற்றியினும் பெரிதாக மதிக்கப்படும்.

கு:- உருத்திரன், திருமால், பிரமன், இந்திரன் ஆகிய இப்பெருந் தேவர்கள் ஆயிரகோடி ஊழிக்காலம் இவ்வரக்கர்களைச் சூழத் தொடர்ந்து போர் செய்தாலும் இவர்களுள் ஒருவனைக் கூடத் தம் தோள் வலியாற் கொன்று வீழ்த்தும் வல்லமை யுடையாரல்லர் என்பதாம். (39)

9475 என்னப் பாமற்றிவ் வெழுபது
வெள்ளமு மொருவன்
தின்னப் போதுமோ தேவரின்
வலியமோ சிறியேம்
முன்னிப் பாரெலாம் படைத்தவ
ளுளலா முறைநின்
றுன்னிப் பார்த்துநின் றுறையிடப்
போதுமோ யூகம்.

'என் அப்பா! மற்று இவ் எழுபது
வெள்ளமும், ஒருவன்
தின்னப் போதுமோ? தேவரின்
வலியமோர், சிறியேம்?

முன் இப் பார்எலாம் படைத்தவன்,
நாள்எலாம் முறைநின்று,
உன்னிப் பார்த்து நின்று, உறையிடப்
போதுமோ, யூகம்?

பொ:- என்ன அப்பனே! (நம்முடைய) இந்த எழுபது வெள்ளம் (வானர) சேனைகளும் (இவ்வரக்கருள்) ஒருவன் தின்னுதற்குத் தான் போதுமானவையா? (ஆற்றல் முதலியவற்றுற்) சிறுமை யுடைய (வானரங்களாகிய) நாம் வானவர்களைக் காட்டிலும் வலிமை படைத்துள்ளோமோ? முன்பு இவ்வுலக மெல்லாவற்றையும் படைத்தவனுகிய பிரமன் தன் வாழ் நாள் முழுதும் முறையாக எண்ணுந் தொழிலில் நிலைத்து நின்று (இவ்வரக்கர் சேனைகளைக்) கருதி எண்ணிப் பார்த்து நின்று உறையிடுதற்கும் இக்குரக்குச் சேனை போதுமானதோ?

கு:- போரில் அனுபவமுடைய முதியோர்களாகிய வானர சேனைத் தலைவர்கள் தம் இளவரசனுகிய அங்கதனை நோக்கி 'என்ன அப்பனே' எனத் தம் அன்புரிமை தோன்ற அழைத்தனர். நம்முடைய எழுபது வெள்ளஞ் சேனைகளும் இவ்வரக்கருள் ஒருவனை எதிர்த்து நிற்றற்கும் போதியன அல்ல. இவ்வுலகினைப் படைத்த பிரமன் தன் வாழ் நாளெல்லாம் எண்ணுந் தொழிலை மேற்கொண்டு இவ்வரக்கர் சேனைகளை எண்ணினுலும் நம் வானர சேனைகள் அங்ஙனம் எண்ணுங்கால் உறையாக இடுதற்கும் போதமாட்டா என அரக்கர் சேனையின் மிகுதியும் வலியும் தம் சேனையும் சிறுமையும் வலியின்மையும் உடன் கூறியவாறு. (40)

9476 நாய கன்றலை பத்துள
கையுநா லைந்தென்
ருேயு முள்ளத்தே மொருவன்
மற்றவன் வந்திங் குற்ருர்
ஆயி ரந்தலை யதற்கிரட்
டிக்கைய ரையா
பாயும் வேலையிற் கூலத்து
மணலினும் பலரால்.

'நாயகன் தலை பத்து உள; கையும்
நால்-ஐந்து' என்று
ஓயும் உள்ளத்தேம்; ஒருவன், மற்று
அவன்; வந்து, இங்கு உற்ருர்

ஆயிரம் தலை; அதற்கு இரட்டிக்
கையர்; ஐயா!
பாயும் வேலையின் கூலத்து
மணலினும் பலரால்.

பொ:- ('பகைப்புலத்) தலைவனாகிய இராவணனுக்குத் தலைகள் பத்துள்ளன; கைகளும் இருபது' என்றெண்ணி (முன்னரே) தளர்ந்து வருந்தும் மனத்தினையுடையேம். அவ் இராவணனோ ஒருவன். ஐயனே! (இப்பொழுது) இங்கு வந்துள்ளவர்களாகிய அரக்கர்களோ ஆயிரம் தலைகளும் அவற்றுக்கு இரு மடங்கு (இரண்டாயிரம்) கைகளும் உடைய வர்கள்; (அலைகள் மிக்கெழுந்து) பாயப் பெற்ற கடற் கரையிலுள்ள மணலினும் பலராவர்.

கு:- நாயகன்—தலைவன்; என்றது பகைப் புலத் தலைவனாகிய இராவணனை, ஒய்தல்—தளர்தல். பத்துத் தலைகளையும் இருபது கை களையும் உடைய பகைவன் ஒருவனைக் கண்டே அஞ்சி மனந்தளர்ந்து வருந்தும் யாங்கள், ஆயிரந் தலைகளும் இரண்டாயிரம் கைகளும் உடையராய்க் கடற் கரை மணலிலும் எண்ணில்லாத பலராய் இங்கு வந்துள்ள அரக்கர்களைக் கண்டு அஞ்சியோடியதைப் பற்றிக் காரணம் சொல்ல வேண்டுமோ என்பது குறிப்பு. வேலை—கடல். கூலம்—கரை. (41)

**9477** கும்ப கன்னனென் றுளன் மற்றிங்
கொருவன்கைக் கொண்ட
அம்பு தாங்கவு மிடுக்கில
மவன்செய்த தறிதி
உம்ப ரன்றியே யுணர்வுடை
யார்பிற ருளரோ
நம்பி நீயுமுன் றனிமையை
யறிந்திலை நடந்தாய்.

'கும்பகன்னன் என்று உளன், மற்று இங்கு
ஒருவன், கைக் கொண்ட
அம்பு தாங்கவும் மிடுக்கு இலம்;
அவன் செய்தது அறிதி;
உம்பர் அன்றியே, உணர்வு
உடையார் பிறர் உளரே?
நம்பி! நீயும் உன் தனிமையை
அறிந்திலை; நடந்தாய்.

பொ:- கும்பகர்ணன் என்று இங்குள்ளவனாகிய (அரக்கன்) ஒருவன் கையிற் கொண்ட அம்பினைத் தாங்கி யெடுத்தற்கும் வலிமை யில்லாதேமாயினேம்; அவ் வரக்கன் செய்த போரினை (நீ) அறிவாய். (மேல்விளைவறிந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும்) நல்லுணர் வுடையார் தேவர்களை யன்றிப் பிறர் உள்ளனரோ? இளையோனாகிய நீயும் (நினது) தனிமை நிலையை உணர்ந்திலையாகி (இங்கு) நடந்து வந்தாய்.

கு: கும்பகர்ணனால் போரில் ஆளப் பெற்ற படைக் கலங்கள் அனுமனல்லாத பிறரெவராலும் தாங்குதற்கரிய வண்மையும் திண் மையு முடையன என்பது,

'கும்பகன்னனுண் டிட்டது வயிரவான் குன்றின்
வெம்பு வெஞ்சுடர் விரிப்பது தேவரை மேனாள்
தும்பையின்றலைத் துரந்தது சுடர் மணித் துண்டொன்
றிம்பர் ஞாலத்தை நெளிப்பது மாருதி யெடுத்தான்

(பிரமாத்திரப்—113)

என முன்னர் உணர்த்தப்பட்டது. தண்டு முதலிய படைக் கலங்களெல்லா வற்றினும் நொய்ம்மையுடைய அம்பினைத் தாங்குதற்கும் வலியற்றேம் என்பார் 'அம்பு தாங்கவும் மிடுக் கிலம்' என்றனர். மிடுக்கு—வன்மை. உம்பர்—தேவர். அரக்கரைக் கண்ட அளவில் தம் முயிரைக் காத்து விரைந்தோடி மறைந்தனராத லின் 'உம்பரன்றியே உணர்வுடையார் பிறர் உளரோ' என்றனர். விரும்பத்தக்க ஆடவரிற் சிறந்தோன் என்னும் பொருளுடைய நம்பி என்னும் சொல், பின் விளைவு அறியாத இளையோன் என்ற குறிப்பில் இங்கு ஆளப் பெற்றது. இவ் வரக்கர்களால் நம்மனோர்க்கு நேரவிருக் கும் இடர்களைக் கூர்ந்துணரும் அநுபவமுடைய பெரியோனாயின் நீ இவ்வாறு அச்சமின்றித் தனியனாய் எங்களை அழைக்க வந்திருக்க மாட்டாய் என்பார், 'நம்பி நீயுமுன் தனிமையை யறிந்திலை நடந்தாய்' என்றனர். 'கும்பகன்ன னென்றுளன் மற்றிங் கொருவன்' என்ற தனால், இங்கு வந்துள்ள அரக்கர்கள் அவனை யொத்த பெருவலி படைத்தவராய் எண்ணற்றவர் உளர் எனக் குறித்தவாறு. (42)

**9478** அனும னாற்றலு மரசன
தாற்றலு மிருவர்
தனுவி னாற்றலுந் தம்முயிர்
தாங்கவுஞ் சாலா

கனியுங் காய்களு முணவுள
முழையுள கரக்க
மனித ராளினெ னிராக்கத
ராளினென் வையம்.

‘ அனுமன் ஆற்றலும், அரசனது
ஆற்றலும், இருவர்
தனுவின் ஆற்றலும், தம் உயிர்
தாங்கவும் சாலா;
கனியும் காய்களும் உணவு உள;
முழைஉள, கரக்க;
மனிதர் ஆளின் என், இராக்கதர்
ஆளின் என், வையம்?

பொ:- அனுமனது பெரு வன்மையும்(நம்) வேந்தன் சுக்கிரீவனது பெரு வன்மையும் (இராம இலக்குவராகிய) இருவர் தம் வில்லின் வன்மையும் தம்முடைய உயிரைப் பாதுகாத்தற்கும் போதியன அல்ல. (நாம் உயிருடன் வாழ்தற்குக்) கனியும் காய்களும் ஆகிய உணவுகள் (இவ்வுலகில்) உள்ளன. (பகைவர் தொடராதபடி) மறைந்துறைதற்கு மலை முழைகள் உள்ளன. (ஆகவே) இவ்வுலகினை மனிதர் ஆண்டால் என்ன? இராக்கதர் ஆண்டால் என்ன?

கு:- அரசன் என்றது வானர குல வேந்தனாகிய சுக்கிரீவனை. இருவர் என்றது இராம இலக்குவர்களை. மனிதராகிய அவ்விருவர்க்கும் இராவணன் முதலிய இராக்கதர்க்கும் இடையே நிகழும் இப்போரில் குரக்கினத்தாராகிய நம்மவர்க்கு எத்தகைய தொடர்பு மில்லை. இவ்வுலகினை மனிதர் ஆண்டாலும் இராக்கதர் ஆண்டாலும் கனியையும் காய்களையும் உணவாகக் கொண்டு மலை முழையில் உறையும் வானரராகிய நம்மவர்க்கு ஆக்கமோ இழப்போ எதுவும் இல்லை என்பார், ‘மனிதர் ஆளிலென் இராக்கதர் ஆளிலென் வையம்” என்றனர் வானர சேனைத் தலைவர்கள். இக் கூற்றினை அடியொற்றி யெழுந்ததே ‘இராமன் ஆண்டாலென்ன இராவணன் ஆண்டா லென்ன’ என வழங்கும் பழமொழியாகும். (43)

9479 தாமு ளாரன்றே புகழினைத்
திருவொடுந் தரிப்பார்
யாமு ளேமெனி னெங்கிளை
யுள்ளதெம் பெரும

போமி னீரென்று விடைதரத்
தக்கனை புரப்போய்
சாமி னீரென்ற றருமமன்
றென்றனர் தளர்ந்தார்.

'தாம் உளார் அன்றே, புகழினைத்
திருவொடும் தரிப்பார்?
யாம் உளோம் எனின், எம் கிளை
உள்ளது; எம் பெரும!
"போமின் நீர்" என்று விடை தரத்
தக்கனை, புரப்போய்!
"சாமின் நீர்" என்றல் தருமம் அன்று'
என்றனர், தளர்ந்தார்.

பொ:- தாம் (தமது உயிரைப் பேணி) உள்ளவர்கள் அல்லவா புகழைச் செல்வத்தோடும் தாங்கியிருப்பவர்கள். எம்பெருமானே! யாங்கள் உயிர் தாங்கியிருப்போமானால் எங்கள் சுற்றமும் (நிலை பெற்று) உள்ளதாகும். (எங்களை இடர் நீக்கிப் பாதுகாக்கும் நீ, 'நீவிர் (இப்போர்க் களத்தைவிட்டு உய்ந்து) செல்லுமின்' என்று (எமக்கு) விடைதருதற்கு உரியாய். (அத்தகைய நீ) இறந்துபோமின் என்று கூறுதல் அறமாகாது' என்று (உளந்) தளர்ந்து கூறினார்கள்.

கு:- இடையூறு வருங்கால் தப்பிச் சென்று தமது உயிரைப் பேணியவர்களே உலகத்துப் புகழையும் செல்வத்தையும் ஒருங்கே பெற்று வாழ்தற்குரியவர்கள். நாங்கள் உயிரோடிருந்தால்தான் எங்கள் சுற்றமும் எங்களாற் பாதுகாக்கப்பெற்றுப் பிழைத்திருக்கும். இவ்விடர் நிலையில் எங்களைப் பாதுகாக்கும் கடமையுடைய எம் இளவரசனாகிய நீ 'நீவிர் இவ்விடத்தை விட்டு விரைவில் உய்ந்து போமின்.' என எமக்கு விடை தந்து அனுப்புதற்குரியாய். அவ்வாறாகவும் 'அரக்கரொடு பொருது இறந்தொழிமின்' என்று எங்களை அழைத்தல் எம்பெருமானாகிய நினக்கு அறமாகாது' என வானர சேனைத் தலைவர்கள் அங்கதனை நோக்கி மனந்தளர்ந்து கூறினர் என்பதாம். தாம் உளார்-தமது உயிரை உடம்பொடு பேணி வைத்துள்ளவர்கள். புகழ் என்பது ஒருவர் இவ்வுலகின்கண் உயிரோடுள்ள காலத்து நிகழ்ந்து உயிர் நீங்கிய பின்னரும் நிலைத்து நிற்கும் சீர்த்தி. திரு-செல்வம். (44)

9479 a அனும னாற்றலு மரசன தாற்றலு மிருவர்
தனுவி னாற்றலுந் தங்களைத் தாங்குவர் தாங்கார்
கனியுங் காய்களும் உணவுள மலையுள காக்க
மனித ராளிலென் இராக்கத ராளிலென் வையம்.

b என்று சாம்பவன் முதலிய தலைவர்களியம்ப,
குன்றுலாம்புறத் தங்கதன் குறுநகை புரிந்தே
நன்று நும்முரை நாயகர்ப் பிழைத்து நம்முயிர் கொண்டு,
ஒன்றி வாழ்தலு முரியதோவென வுரைப்பான்.

### அங்கதன் சாம்பனை நோக்கி, 'ஓடுதல் தக்கதன்று' என்று காரணங்காட்டி உரைத்தல்

**9480** சாம்பனை வதன நோக்கி வாலிசே
யறிவு சான்றோய்
பாம்பணை யமலனேமற் றிராமனென்
றெமக்குப் பண்டே
ஏம்பல்வந் தெய்தச் சொல்லித் தேற்றினை
யல்லை யோ நீ
ஆம்பலம் பகைஞன் றன்னோ டயிந்திர
மமைந்தோ னன்னாய்.

சாம்பனை வதனம் நோக்கி, வாலிசேய்,
'அறிவு சான்றோய்!
"பாம்பு அணை அமலனே மற்று இராமன்" என்று,
எமக்குப் பண்டே
ஏம்பல் வந்து எய்தச் சொல்லித் தேற்றினாய்
அல்லையோ, நீ?
ஆம்பல் அம்பகைஞன் தன்னோடு அயிந்திரம்
அமைந்தோன் அன்னாய்!

பொ:- வாலியின் மைந்தனாகிய அங்கதன் சாம்பவானை முகம் நோக்கி, 'அறிவால் நிறைந்தவனே! அல்லிமலர்ப் பகைவனாகிய அழகிய சூரியன்பால் ஐந்திர வியாகரணத்தைக் கற்றுணர்ந்த அனுமனை யொத்த கல்வி நலம் வாய்ந்தவனே! ('ஆதிசேடனாகிய) பாம்பினைப் பாயலாகவுடைய தூயோனான திருமாலே அந்த இராமன்' என்று எங்களுக்கு மகிழ்ச்சி பொருந்தச் சொல்லி நீ முன்னமே தெளிவுறுத்தினாய் அல்லையோ?

கு:- மிக இளைஞனாகிய அங்கதன் வானர சேனைத்தலைவர்களில் மிகவும் முதியவனாகவுள்ள சாம்பவானை நோக்கி, 'போரிற் பின்னிட்

டோடுதல் முறையன்று' எனக் காரணங்காட்டி அறிவுறுத்தும் முறையில் அமைந்தன இச்செய்யுள் முதலாகவுள்ள ஐந்து செய்யுட்கள். சாம்பன்—சாம்பவான். வாலிசேய்—அங்கதன். பாம்பணை அமலன்—திருமால். ஏம்பல்—மகிழ்ச்சி. ஆம்பல்—அல்லி. இரவில் மலர்வது அல்லி; காலையில் அம்மலர் குவிந்து வாட்டமுறும் நிலையில் தோன்றும் கதிரவனை ஆம்பலுக்குப் பகைவன் எனப் புனைந்துரைத்தார் ஆசிரியர். சூரியன்பால் ஐந்திர வியாகாரணத்தைக் கற்றுணர்ந்தோன் அனுமனாதலின், அவனை 'ஆம்பலம் பகைஞன் தன்னோடு அயிந்திரம் அமைந்தோன்' எனக் குறித்தார். அனுமனை யொத்த பேரறிவுடைய சாம்பவானாகிய நீ நின் பெருந்தகைமையை நினையாது இவ்வாறு அஞ்சிப் பின்னிட்டது முறையாகா தென்பான் 'அயிந்திரம் அமைந்தோன் அன்னாய்' என அழைத்தான். அயிந்திரம்—ஐந்திரம்; இந்திரனாற் செய்யப்பட்ட வடமொழி இலக்கண நூல். (45)

9481 தேற்றுவாய் தெரிந்த சொல்லாற் றெருட்டியித்
　　　தெளிவி லோரை
ஆற்றுவா யல்லை நீயு மஞ்சினை
　　　போலு மாவி
போற்றுவா யென்ற போது புகழென்னும்
　　　புலமை யென்னும்
கூற்றின்வா யுற்றால் வீரங் குறைவரே
　　　யிறைமை கொண்டார்.

'தேற்றுவாய், தெரிந்த சொல்லால் தெருட்டி
　　　இத்தெளிவு இல்லோரை
ஆற்றுவாய் அல்லை; நீயும் அஞ்சினை
　　　போலும்! ஆவி
போற்றுவாய் என்றபோது, புகழ் என் ஆம்?
　　　புலமை என் ஆம்?
கூற்றின் வாய் உற்றால், வீரம் குறைவரே!
　　　யிறைமை கொண்டார்?

பொ:- ஆராய்ந்து கூறும் சொற்களால் (யாவரையும், கலக்கம் நீக்கித்) தெளிவிக்கவல்லாயாகிய நீ, தெளிவில்லாத இவ்வானரர்களைத் தெளிவுறுத்தி ஆறுதல் கூறுவாயல்லை. (உரனுடையனாகிய) நீயும் (நின் பெருந்தகைமை யறியாது பகைவர்க்கு) அஞ்சினாய் போலும்? (நீ நின் அறிவாற்றல்களைப் பாதுகாவாது) உயிரை (மட்டும்) பாதுகாப்

பாய் ஆயினுய் என்றபோது (இதுகாறும் நீ பெற்றுள்ள) புகழ்தான் என்ன பயனைத் தரும்? புலமைதான் என்ன பயனைத் தரும்? தலைமைக் குணமுடைய வீரர்கள் (மாற்றுதற்கரிய) காலனது வாயில் அகப்பட்ட காலத்தும் தமது வீரத் தன்மையிற் குறைவரோ?

கு:- தேற்றுதல்—கலக்கம் நீக்கித் தெளிவடையச் செய்தல். தெரிந்த சொல்—கேட்போரது மனநிலையறிந்து கூறும் சொல். நீயும்—உலைவிடத்து ஊறு அஞ்சா உரனுடைய நீயும்; உம்மை உயர்வு சிறப்பு. ஆவிபோற்றுதல்—உயிரையே பெரிதென மதித்துப் புகழையும் புலமையையும் நீங்கி யொழுகுதல். கூற்றின் வாயுற்ருலும் என உம்மை வருவித்துரைக்க. இறைமை கொண்டார்—தலைமைக் குணமுடைய வீரர்கள். குறைவரே—குறைவரோ; குறைய மாட்டார் என வினு ஏகாரம் எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. 'கூற்றின் வாயுற்ருல் வீரம் குறைவரே இறைமை கொண்டார்' என்னும் இவ்வடியில், 'கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர் நிற்கும் ஆற்றலதுவே படை.' (765) எனவரும் திருக்குறட்பொருள் எடுத்தாளப் பெற்றுள்ளமை அறியத்தக்க தாகும். (46)

9482 அஞ்சினும் பழியும் பூண்டா மம்புவி
யாண்டு மாவி
துஞ்சுமா றன்றி வாழ வொண்ணுமோ
நாண்மேற் ரேன்றின்
நஞ்சுவா யிட்டா லன்ன தமுதன்றே
நம்மை யம்மா
தஞ்சமென் றடைந்த வீரர் தனிமையிற்
சாத னன்றே.

'அஞ்சினும்; பழியும் பூண்டாம்; அம்புவி
யாண்டும், ஆவி
துஞ்சுமாறு அன்றி வாழ ஒண்ணுமோ,
நாள் மேல் தோன்றின்,
நஞ்சு வாய் இட்டால் அன்னது அமுது அன்றே?
நம்மை அம்மா,
தஞ்சம் என்று அடைந்த வீரர் தனிமையின்
சாதல் நன்றே!

பொ:- (வானர வீரர்களாகிய நாம் பகைவரோடு பொருதற்கு, அஞ்சினேம்; (அதனுற்) பழியினையும் மேற்கொண்டோம். (அச்ச

முற்றவர்களாகிய யாம்) அழகிய பூமியின்கண் எவ்விடத்தும் (பகைவர்க்கு அஞ்சி) இறந்தொழியுமாறன்றி ஆண்மையுடன் வாழ ஒண்ணுமோ? (நமக்கு) வாழ்தற்குரிய நாள் மேலும் தோன்றுமாயின் (அக்காலத்து நாம் நுகரும்) இனிய அமுதமும் இன்னாத நஞ்சினை வாயில் இட்டால் ஒத்த வெறுப்பினை விளைப்பதாகுமல்லவா? அந்தோ! (வானரர்களாகிய) நம்மைப் பற்றுக் கோடாக எண்ணிச் சார்ந்த வீரர்களாகிய இராம இலக்குவர்களை (விட்டு)ப் பிரிந்து தனிமையுறு வதைவிட (நாம்) இறத்தலே நலமாகும்.

கு:- வானர சேனைத் தலைவர்கள் மூலபலமாகிய அரக்கர் படையினைக் கண்டு வெருவி ஓடினமை பழி விளைக்குஞ் செயலாம் என அறிவுறுத்தும் அங்கதன் அன்னோர் செயலைத் தன் செயலாகக் கொண்டு அவர்களைத் தெருட்டும் முறை மனத்தினை நெகிழ்விப்பதாகும். 'அச்சமுடையார்க் கரணில்லை' (திருக்குறள்534) என்றபடி அரக்கரைக் கண்டு அஞ்சிய நம் முன்னோர்க்கு இவ்வழகிய நிலவுலகில் யாண்டும் பாதுகாப்பானதோர் இடம் கிடைக்க வில்லையாதலால் இனி இறந்தொழிதலையன்றி வேறு வழியில்லை என்பான், 'ஆவி துஞ்சு மாறன்றி அம்புவி யாண்டும் வாழ வொண்ணுமோ?' என்றான். அஞ்சிய நமக்கு உடனே சாதல் நேராது, மேலும் வாழ்நாள் நீட்டிப்பதாயின் அந்நிலையில் நாம் நுகரும் இன்சுவையுடைய அமுதமும் இன்னாச் சுவையின தாகிய நஞ்சினை யொத்து வெறுப்பினை விளைப்பதாகும் என்பான், 'நாள் மேல் தோன்றின், அமுது, நஞ்சு வாய் இட்டால் அன்னது அன்றே?' என்றான். நம்மைச் சார்பாக அடைந்த இராம இலக்குவர்களைக் கைவிட்டு நீங்கித் தனிமை யுறுவதனைக் காட்டிலும் நாம் இறந்தொழிவதே நமது பழியினைப் போக்கி நலஞ்செய்வதாம் என்பான், 'நம்மைத் தஞ்சம் என்று அடைந்த வீரர் தனிமையின் சாதல் நன்றே' என்றான். 'கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை, உள்ளினும் உள்ளஞ் சுடும்' (799) என வரும் திருக்குறள் இங்கு நினைக்கத்தக்க தாகும். (47)

**9483** தானவ ரோடு மற்றைச்
சக்கரத் தலைவனோடும்
வானவர் கடைய மாட்டா
மறிகடல் கடைந்த வாலி
ஆனவ னம்பொன் றாலே
யுலந்தமை யயர்த்த தென்னீ
மீனலர் வேலை பட்ட
துணர்ந்திலை போலு மேலோய்.

'தானவரோடும், மற்றைச்
சக்கரத் தலைவனோடும்,
வானவர் கடைய மாட்டா
மறிகடல் கடைந்த வாலி
ஆனவன் அம்பு ஒன்றாலே
உலர்தமை அயர்த்தது என் நீ
மீன், அலர் வேலை பட்டது
உணர்ந்திலை போலும்? மேலோய்!

பொ:- அசுரர்களோடும் மற்றைச் சக்கரப்படையை யுடைய திருமாலோடும் தேவர்கள் (ஒருங்கு சேர்ந்து) கடைய மாட்டாத (அலைகள்) மடங்குகின்ற (பாற்) கடலைக் கடைந்த வாலியானவன் (இராமபிரானது) அம்பு ஒன்றினாலே உயிர் இழந்தமையை நீ மறந்த தெவ்வாறு? மேலோனே! (அவ்விராமனது அம்பினால்) மீன் விளங்கு கின்ற கடல் உற்ற (துயர) நிலையை உணர்ந்திலை போலும்?

கு:- தானவர்—அசுரர். வானவர்—தேவர். வாலியானவன் என்புழி, ஆனவன் எள்பது எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. உலத்தல்—உயிர் கெடுதல். நம்முடைய சார்பினைப் பெற்ற வீரர் களாகிய அவ்விருவரும் யாவராலும் தஞ்சம் புகத்தக்க பேராற்றல் படைத்தவர்கள் என்பது, வாலியை அம்பு ஒன்றினால் கொன்று வீழ்த்திய நிகழ்ச்சியாலும் கடல்மேல் அம்பெய்து அடக்கிய நிகழ்ச்சி யாலும் நன்கு புலனாமாதலின் இராமனைத் தஞ்சமாகச் சார்ந்துய்தலே வானரர்களாகிய நமது கடமையென அங்கதன் வற்புறுத்தியவாறு. 'மேலோய்' என்றது சாம்பவானை நோக்கிய விளி. (48)

9484 எத்தனை யரக்க ரேனுந்
தருமமாண் டில்லை யன்றே
அத்தனை யறத்தை வெல்லும்
பாவமென் றறிந்த துண்டோ
பித்தரைப் போல நீயு
மிவரொடும் பெயர்ந்த தன்மை
ஒத்தில தென்னச் சொன்னா
னவனிவை யுரைப்ப தானான்.

'எத்தனை அரக்கரேனும், தருமம்
ஆண்டு இல்லை அன்றே?
அத்தனை அறத்தை வெல்லும்
பாவம் என்று அறிந்தது உண்டோ?

பித்தரைப் போல நீயும்
இவரொடும் பெயர்ந்த தன்மை
ஒத்திலது' என்னச் சொன்னான்;
அவன் இவை உரைப்பதானான்:

பொ:- (பகைவரது சேனையில்) எத்தனையோ கோடி அரக்கர் உள்ளனராயினும் அறம் என்பதொரு பொருள் அங்கு இல்லை யல்லவா? (பகைவர் சேனை) அத்துணை யளவினதாயினும் அறத்தைப் பாவம் வெல்லும் என்று (என்றேனும்) கேள்வியுற்ற துண்டோ? (உணர் வுடைய பெரியோனாகிய) நீயும் (அறிவு திரிந்த) பித்தரைப் போன்று (உணர்வற்ற) இவ் வானரர்களோடும் (போர்க்களத்தை விட்டு) ஓடிய தன்மை (நினது தகுதிக்கு) ஒத்ததாக இல்லை' என்று (அங்கதன்) கூறினான். (அதனைக் கேட்டுச் சாம்பவானாகிய) அவன் (பின்வரும்) இம் மொழிகளைக் கூறுவானாயினான்.

கு;- அரக்கர் சேனை பலகோடி அளவினராக மிக்கிருப்பினும் அவ்வரக்கர்பால் அறவுணர்வென்பது சிறிதும் இல்லாமையால் அவரனைவரும் அழிந்தொழிதல் திண்ணம் என்பது புலப்பட, 'எத்தனை அரக்கரேனும் தருமம் ஆண்டு இல்லையன்றோ?' என வினவினான். போரில் உறுதியாக வெற்றி பெறுவதென்பது, நால்வகைச் சேனை களால் மட்டுமன்றி அறத்தைத் துணையாகக் கொண்டொழுகுவ தொன்றினாலேயே இயலும் என்பது,

'கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன் மறவரும் என
நான்குடன் மாண்டதாயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்'

(புறநானூறு-55)

என்பதனால் அறிவுறுத்தப்பட்டது. அறத்தைப் பாவம் வென்றதாக யாண்டும் எக்காலத்தும் யாவரும் சொல்லக் கேட்டறிந்ததில்லை என இன்மைமுகத்தான் ஏதுக்காட்டி வலியுறுத்தும் முறையில், 'அறத்தை வெல்லும் பாவம் என்று அறிந்த துண்டோ?' என்றான். ஓகாரம் எதிர் மறை. 'அல்லல் அருளாள் வார்க்கில்லை வளிவழங்கு, மல்லன்மா ஞாலங் கரி' (திருக்குறள்-245) என்புழி இன்மை ஏதுவாகக் காட்டப் பெற்றுள்ளமை காண்க. சொன்னான், அங்கதன். அவன் என்றது, சாம்பவானை. (49)

## சாம்பன் மறுமொழி பகர்தல்

9485 நாணத்தாற் சிறிது போது
நவில்கில னிருந்து பின்னர்த்
தூணொத்த திரடோள் வீர
தோன்றிய வரக்கர் தோற்றம்
காணத்தா னிற்கத் தானக்
கறைமிடற் றவற்கு மாமே
கோணற்பூ வுண்ணும் வாழ்க்கைக்
குரங்கின்மேற் குற்ற முண்டோ

நாணத்தால் சிறிதுபோது
நவில்கிலன் இருந்து, பின்னர்,
'தூண் ஒத்த திரள்தோள் வீர!
தோன்றிய அரக்கர் தோற்றம்
காணத்தான், நிற்கத்தான், அக்
கறை மிடற்றவற்கும் ஆமே?
கோணற் பூ உண்ணும் வாழ்க்கைக்
குரங்கின்மேல் குற்றம் உண்டோ?

பொ:- (சாம்பவான், தனது செயல்பற்றித் தோன்றிய) நாணங் காரணமாகச் சிறிது நேரம் ஒன்றும் கூறமாட்டாதவனாக இருந்து, பின்பு, (அங்கதனை நோக்கிக் கூறுவான்:) 'தூணையொத்த திரண்ட தோள்களையுடைய வீரனே! இங்குத் தோன்றிய அரக்கர்களின் தோற்றப் பெருமையை (நேர் நின்று) காணுதற்காவது (எதிரில்) நிற்றற்காவது நஞ்சக்கறை பொருந்திய கண்டத்தினை யுடைய அந்த உருத்திர மூர்த்திக்கும் இயல்வதோ? (அவ்வாறாகவும், அவ்வரக்கர் முன்னே நிற்றலாற்றாது ஓடிய) உடம்பிற் கூனினையும் பூக்களையுண்டு உயிர்தாங்கும் (எளிய) வாழ்க்கையினையும் உடைய குரங்கின்மேற் குற்றம் உண்டோ?

கு:- இச் செய்யுளில் உள்ள 'பின்னர்' என்பது, 'என்றெடுத்து எண்கின் தானைக்கு இறையவன் இயம்பலோடும்' என 55-ஆம் செய்யுளோடு இயைந்தது. 'ஆலகால நஞ்சினை யுண்டு மிடற்றிலடக்கிய உருத்திர மூர்த்தியாலும் காணுதற்கும் நேர் நிற்றற்கும் ஒண்ணாத ஆற்றல் மிக்க அரக்கர்களைக் கண்டு அஞ்சியோடிய இச்செய்கை, எமது வலியின்மையை யுணர்த்துவதன்றி எங்களது குற்றமுடைய செய

னாகக் கொள்ளத் தக்கதன்று' என்பான், 'கோணற் பூ உண்ணும் வாழ்க்கைக் குரங்கின்மேற் குற்றம்உண்டோ?' என்றான். கோணல் என்றது, குரங்கினது உடம்பின் கூனினை. (50)

9486 தேவரு மவுணர் தாமுஞ்
செருப்பண்டு செய்த காலை
ஏவரே யென்னுற் காணப்
பட்டில ரிருக்கை யான்ற
மூவகை யுலகி னுள்ளா
ரிவர்துணை யாற்றன் முற்றும்
பாவக ருளரே கூற்று
மிவருடன் பகைக்க வற்றோ.

தேவரும் அவுணர்தாமும்
செருப் பண்டு செய்த காலை,
ஏவரே என்னுல் காணப்
பட்டிலர்? இருக்கை ஆன்ற
மூவகை உலகின் உள்ளார்,
இவர்துணை ஆற்றல் முற்றும்
பாவகர் உளரே? கூற்றும்
இவருடன் பகைக்க வற்றோ?

பொ:- தேவர்களும் அசுரர்களும் பண்டைநாளிற் போர்புரிந்த பொழுது என்னுற் காணப்படாதவர் யார்? இருத்தல் நிறைந்த மூன்று வகை உலகங்களில் உள்ளவர்களில் இவ் அரக்கரளவு ஆற்றல் நிரம்பிய கொடியோர் உளரோ? (உயிரைக் கொள்ளும்) கூற்றும் இவருடன் பகைத்து நிற்கவல்லதோ?

கு:- 'தேவரும் அவுணர்தாமும் பண்டு செருச் செய்த காலை காணப்பட்டிலர் ஏவரே?' என இயைக்க. இவர் துணை—இவர் அளவு. முற்றுதல்—நிரம்புதல். பாவகர்—கொடியோர். பாவகம்—தன்மை; ஈண்டுக் கொடுமை என்ற பொருளில் ஆளப்பெற்றது. முற்காலத்தில் தேவர்க்கும் அசுரர்க்குமிடையே நிகழ்ந்த பெரும் போர்களிலும் இவ் வரக்கர் அளவு வன்மை நிரம்பிய வீரர்களைத் தான் கண்டதில்லை யென்று சாம்பவான் மூலபல அரக்கர்களின் பெருவலியினை அங்க தனுக்கு எடுத்துரைக்கு முறையில் அமைந்தன இதுமுதல் மூன்று செய்யுட்கள். (51)

9487 மாலியைக் கண்டேன் மற்றை
மாலிய வானைக் கண்டேன்
காலநே மியையுங் கண்டே
னிரணியன் றனையுங் கண்டேன்
ஆலமா விடமுங் கண்டேன்
மதுவினை யனுச னோடும்
வேலையைக் கலக்கக் கண்டே
னிவர்க்குள மிடுக்கு முண்டோ.

'மாலியைக் கண்டேன்; மற்றை
மாலியவானைக் கண்டேன்;
காலநேமியையும் கண்டேன்;
இரணியன்தனையும் கண்டேன்;
ஆலமா விடமும் கண்டேன்;
மதுவினை அனுசனோடும்
வேலையைக் கலக்கக் கண்டேன்;
இவர்க்கு உளமிடுக்கும் உண்டோ?

பொ:- (அக்காலத்தில்) மாலி என்பானைக் கண்டுள்ளேன்; மற்றைய மாலியவானைக் கண்டுள்ளேன்; காலநேமி என்பவனையும் கண்டுள்ளேன்; இரணியனையும் கண்டுள்ளேன்; கரிய ஆலகால விடத்தையுங் கண்டுள்ளேன். மது என்பவனை அவன் தம்பி கைடப னுடனே கூடிக் கடலைக் கலக்கும் நிலையிற் கண்டுள்ளேன். (ஆயினும்) இவ்வரக்கர்க்கு அமைந்துள்ள வலிமை (அவர்களுக்கு) உண்டோ?

கு:- மாலி, மாலியவான், காலநேமி என்போர் முற்காலத்தில் ஆற்றல்மிக்கு வாழ்ந்த இராக்கதராவர். மாலியவான் என்பவன் விச்சிரவ முனிவரிடம் கேகசி என்பாளை ஏவி இராவணன் முதலிய அரக்கர்களைத் தோன்றச் செய்தவன். காலநேமி என்பான் இரணிய னுக்கு மகன் என்றும், நூறு தலைகளையும் நூறு கைகளையும் உடையவன் என்றும், தந்தையைக் கொன்ற திருமாலுடன் இவன் பொருது நின்ற பொழுது திருமால் அவனுடைய தலைகளையும் கைகளையும் சக்கரத் தினால் அறுத்து வீழ்த்தக் கவந்தமாய் நின்ற அவனுடம்பினைக் கருடன் மார்பினால் தாக்கி வீழ்த்தினனென்றும் கூறுவர். மது—ஓர் அசுரன். அநுசன்—தம்பி; என்றது, மதுவின் தம்பி கைடபனை. இவ்விருவர் வரலாறும் இவருள் மது என்பவனே கும்பகர்ணனாகவும் கைடபன் அதிகாயனாகவும் பிறந்தனர் என்பதும் அதிகாயன் வதைப்படலத்தில்

67 முதல் 76 வரையுள்ள செய்யுட்களில் விரித்துரைக்கபட்டுள்ளமை காண்க. மாவிடம்-கரிய நஞ்சு. மிடுக்கு—வலிமை. உண்டோ என்புழி ஓகாரம் எதிர்மறை. இல்லையென்றவாறு. (52)

9487 a ஆளிமா முகவர் சீறு மடுபுலி முகவர் மிக்க
யாளிமா முகவர் யானை மற்றெரியும் வெங்கண்
கூளிமா முகவ ராதி யளப்பில கோடி யுள்ளார்
ஊழி சென்றுலு முட்கார் ஒருவரோ ரண்ட முண்பார்.

9488 வலியிதன் மேலே பெற்ற
வரத்தினர் மாயம் வல்லர்
ஒலிகடன் மணலின் மிக்க
கணக்கின ருள்ள நோக்கிற்
கலியினுங் கொடியர் கற்ற
படைக்கலக் கரத்த ரென்றால்
மெலிகுவ தன்றி யுண்டோ
விண்ணவர் வெருவல் கண்டால்.

'வலி இதன்மேலே, பெற்ற
வரத்தினர்; மாயம் வல்லார்;
ஒலி கடல் மணலின் மிக்க
கணக்கினர்; உள்ளம் நோக்கின்,
கலியினும் கொடியர்; கற்ற
படைக்கலக் கரத்தர்; என்றால்,
மெலிகுவது அன்றி உண்டோ,
விண்ணவர் வெருவல் கண்டால்?

பொ:- (இவ் வரக்கர்கள், தமக்கு இயல்பாக வாய்த்த) இவ் வன்மையின் மேலும் (தெய்வங்களாற்) பெற்ற வரத்தினை உடையவர்கள்; வஞ்சனைச் சூழ்ச்சிகளில் வல்லவர்கள்; ஆரவாரத்தையுடைய கடலிடத்தேயுள்ள (நுண்) மணலினும் மிக்க பேரெண்ணினராக உள்ளவர்கள்; (இவர்தம்) மனத்தியல்பினை ஆராய்ந்து நோக்குங்கால் கலிபுருடனைக் காட்டிலும் கொடுமையுடையவர்கள்; நன்கு பயின்ற படைக்கலங்களைக் கொண்ட கையினை யுடையவர்கள்; (இவர்களைக் கண்டு) வானுலகத்தவர் அஞ்சி யோடுதலைக் கண்டால் (வானரர்களாகிய நாம்) மெலிந்து வருந்துவதன்றி (இவர்களை எதிர்த்து) நம்மாற் செய்யத்தக்க செயல்) வேறுளதோ?

கு:- கலி என்றது, அறமல்லாத தீய செயல்களே பெருக நிகழ்தற்கு இடமான துன்பக் கலி காலத்தினை. உள்ளம் நோக்கிற் கலியினும் கொடியர் எனவே அவர்கள் உள்ளத்தில் அறவுணர்வுக்குச் சிறிதும் இடமில்லை யென்பதாம். மெலிதல் – மனந்தளர்ந்து வருந்துதல். (53)

9489 ஆகினு மைய வேண்டி
 னார்க்கென வமரி லஞ்சிச்
சாகிலம் பெயர்ந்த தன்மை
 பழிதரு நரகிற் றள்ளும்
ஏகுது மீள வின்னு
 மியம்புவ துளதா லெய்தி
மேகமே யனையான் கண்மு
 னெங்ஙனம் விழித்து நிற்றும்.

'ஆகினும், ஐய! வேண்டி
 னார்க்குஎன அமரில் அஞ்சி,
சாகிலம் பெயர்ந்த தன்மை,
 பழிதரும்; நரகில் தள்ளும்;
ஏகுதும், மீள; இன்னும்
 இயம்புவது உளதால்; எய்தி,
மேகமே அனையான் கண்முன்
 எங்ஙனம் விழித்து நிற்றும்?

பொ:- (இங்ஙனம் அவ் வரக்கர்கள் பெருவலி படைத்தவர்) ஆனாலும், ஐயனே! (நமது துணையினை) வேண்டியவர்க்காகப் போரில் உயிரைக் கொடாதேமாகி அஞ்சி மீண்டமை (எங்களுக்கு) இம்மையிற் பழியைத் தருவதாகும்; (மறுமையில்) நரகத்தில் தள்ளும். (ஆகவே நாம்) மீண்டு (அவர்பாற்) செல்வோம்; இன்னும் (நின்பாற்) சொல்ல வேண்டிய தொன்றுளது; மழை மேகத்தையே ஒத்த மேனியை யுடையவனாகிய இராமனது கண்முன்னே சென்று (யாம்) எவ்வாறு விழித்து நிற்போம் (என்பதே அது).

கு:- ஐய என்றது, அங்கதனை நோக்கிய விளி. வேண்டினார்— போரில் நமது துணையை வேண்டியவர்கள்; என்றது, இராம இலக்குவர்களை. வேண்டினார்க்கு என—வேண்டினார் பொருட்டு. வேண்டினார்க் கென அமரில் சாகிலம் பெயர்ந்த தன்மை, பழிதரும்; நரகில் தள்ளும் என இயையும். மேகமே யனையான் என்றது மழை முகிலை யொத்த

மேனியையுடைய இராமபிரானை அரக்கர் படையினைக் கண்டு வெருவி எமது கடமையினைத் துறந்து ஓடிய புன்மையுடையோமாகிய யாம், தலைமைக் குணமுடைய இராமபிரானது கண்முன் விழித்துப் பார்த்தற்கும் தகுதியற்றேமாய் நாணுகின்றேம் என்பான், 'மேகமே அனையான் கண்முன் எங்ஙனம் விழித்து நிற்றும்' என்கின்றான். நிற்றும்—நிற்போம். பெரியோர்மாட்டுப் பிழைத்தோர் தம் பிழையினை எண்ணிய நிலையில் அவரைக் காணுதற்கும் நாணி வருந்துவர் என்பது,

'தாணுவே யழிந்தேன் நின்னினைந் துருகுந் தன்மை
என் புன்மைகளாற்
காணுமதொழிந்தேன் நீயினி வரினுங்
காணவும் நாணுவனே' (எண்ணப்பத்து—5)

என வரும் திருவாசகத் தொடரால் அறியப்படும். (54)

### சாம்பனை நோக்கி அங்கதன் தேறுதல்மொழி பகர்தல்

**9490** என்றெடுத் தெண்கின் றானைக்
கிறையவ னியம்ப லோடும்
வன்றிறற் குலிச மோச்சி
வரைச்சிற கரிந்து வெள்ளிக்
குன்றிடை நீலக் கொண்மூ
வமர்ந்தென மதத்தின் குன்றின்
நின்றவ னருளு மைந்தன்
மகனிவை நிகழ்த்த லுற்றான்.

என்று எடுத்து எண்கின் தானைக்கு
இறையவன் இயம்பலோடும்,
வன்திறல் குலிசம் ஓச்சி
வரைச் சிறகு அரிந்து, வெள்ளிக்
குன்றிடை நீலக் கொண்மூ
அமர்ந்தென மதத்தின் குன்றின்
நின்றவன் அருளும் மைந்தன்
மகன், இவை நிகழ்த்தல் உற்றான்:

பொ:- என்று இவ்வாறு கரடிச் சேனைத் தலைவனாகிய சாம்பவான் எடுத்துக் கூறிய அளவில், மிக்க வன்மைவாய்ந்த வச்சிராயுதத்தினை ஓங்கி யெறிந்து மலைகளின் சிறகுகளை அரிந்து வெள்ளிக் குன்றின்மீது நீலமேகம் அமர்ந்தாற் போன்று மதமுடைய மலையாகிய வெள்ளை யானையின்மேல் நிலைபெற்றிருப்பவனாகிய இந்திரன் பெற்ற மைந்தனாகிய வாலியின் மகன் அங்கதன் (பின்வருமாறு) இம் மொழிகளைக் கூறுவானாயினன்.

கு:- அங்கதன் கூறுவன அடுத்துவரும் செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். எண்கின் தானை—கரடிச் சேனை. இறைவன் என்றது, அச் சேனைக்குத் தலைவனாகிய சாம்பவானை. குலிசம்—வச்சிராயுதம். ஒச்சி அறிந்து நின்றவன் எனவும், வெள்ளிக் குன்றிடை நீலக் கொண்மூ அமர்ந்தென மதத்தின் குன்றின் நின்றவன் எனவும் தனித்தனி சென்றியையும். வெள்ளிக்குன்று, மதத்தின் குன்றாகிய வெள்ளை யானைக்கும்; நீலக் கொண்மூ இந்திரனுக்கும் உவமை. கொண்மூ—மேகம். நின்றவன், இந்திரன். அவன் அருளும் மைந்தன், வாலி. அவன் மகன் அங்கதன். (55)

இச் செய்யுள் 9, 21, 25, 26, 31, 62, 63, 66, 74 ஆகிய சுவடிகளில் இல்லை. சுவடி 52-இல் கீழ்க் கண்டவாறு உள்ளது.

9490 a என்றெடுத் தெண்கின் தானைக்
கிறையவன் இயம்ப லோடும்
வன்றிறல் குலிச மோச்சி
வரைச்சிற கரிந்து வெள்ளிக்
குன்றிடை நீலக் கொண்மூ
வமர்ந்தனர் மதத்தின் குன்றில்
நின்றவ னளித்த மைந்தன்
மகனிவை நிகழ்த்த லுற்றான்.

9491 எடுத்தலுஞ் சாய்த்த லானு
மிறத்தலு மெதிர்ந்தோர் தம்மைப்
படுத்தலும் வீர வாழ்க்கை
பற்றினர்க் குற்ற மேனாள்
அடுத்ததே யஃது நிற்க
வன்றியு மொன்று கூறக்
கடுத்தது கேட்டீர் நீருங்
கருத்துளீர் கருதி நோக்கின்.

"எடுத்தலும், சாய்தல்தானும்,
இறத்தலும், எதிர்த்தோர் தம்மைப்
படுத்தலும், வீர வாழ்க்கை
பற்றினர்க்கு உற்ற, மேல்நாள்;
அடுத்ததே அஃது; நிற்க,
அன்றியும் ஒன்று கூறக்
கடுத்தது; கேட்டீர் நீரும்.
கருத்துளீர், கருதி நோக்கின்.

பொ:- பகைவர்மேற் செல்லுதலும், (எதிர்த்து நிற்கும் வலியின்றிப்) பின்வாங்குதலும், (பின்னிடாது பொருது) இறத்தலும், எதிர்நின்று பொருதவர்களை(ப் போரிற்) கொன்று வீழ்த்தலும் ஆகிய இவை வீர வாழ்க்கையைக் கடைப்பிடித்த வீரர்கட்குத் தொன்றுதொட்டுப் பொருந்தி வருவனவே. (அவ்வாறு) ஏற்பட்டதே (பின்னிடுதலாகிய) அது. அது நிற்க, அல்லாமலும் (என் மனம்) ஒன்றைச் சொல்ல விரைகின்றது. (என் சொற்களைக்) கேட்டுத் தங்கியவர்களாகிய நீவிரும் கருதி நோக்குமிடத்து அக் கருத்தினையுடையீராவீர்.

கு:- எடுத்தல்—மேற்சேறல். சாய்தல்—பகைவரை எதிர்த்து நிற்றலாற்றாது பின்வாங்குதல். உற்றன—பொருந்தின. படுத்தல்—கொல்லுதல். அஃது என்றது, பின்னிட்டோடுதலாகிய அதனை. கடுத்தல்—விரைதல். கடுத்தது என்னும் வினைக்குரிய வினைமுதலாக நெஞ்சம் என்பது வருவித்துரைக்கப்பட்டது. அஞ்சுதற்குரியவிடத்து அஞ்சி விலகுதலும், அச்சத்திற்கு இடமின்மையறிந்தபின் ஆண்மையுடன் முன்னேறிச் செல்லுதலும் ஆகிய இவை போர்த் துறையில் ஈடுபட்ட தறுகண் மறவரது இயல்பாதலால், எதனையும் சிந்தித்துணரும் இயல்புடைய சேனைத் தலைவராகிய நீவிர் யான் கூறியதனைக் கேட்க வுடன்பட்டுத் தங்கிய தொன்றே என் கருத்துடன் ஒத்த கருத்துடையீர் நீர் என்பதனை நன்கு புலப்படுத்திற்று என்பான், 'கேட்டீர் நீவிரும் கருதி நோக்கின் கருத்துளீர்' என்றான். (56)

9492 ஒன்றுநீ யஞ்ச லைய
யாமெலா மொருங்கு சென்று
நின்றுமொன் றியற்ற லாற்றே
நேமியான் றனே நேர்ந்து

கொன்று போர் கடக்கு மாயிற்
கொள்ளுதும் வென்றி யன்றேல்
பொன்றுது மவனோ டென்றான்
போதலோ புகழன் றென்றான்.

'ஒன்றும் நீ அஞ்சல், ஐய!
யாம் எலாம் ஒருங்கு சென்று
நின்றும், ஒன்று இயற்றல் ஆற்றேம்;
நேமியான் தானே நேர்ந்து
கொன்று போர் கடக்கும் ஆயிற்
கொள்ளுதும் வென்றி, அன்றேல்
பொன்றுதும் அவனோ டென்றான்
'போதலோ புகழ்அன்று' என்றான்.

பொ:- ஐயனே! நீ சிறிதும் அஞ்சற்க. நாமெல்லாம் ஒருங்கே சென்று நின்றும் போரில் ஒரு செயலும் செய்தற்குரிய வல்லமை யுடையோ மல்லோம். சக்கரப் படையினையுடைய அவ் இராமன் தானே போரில் (பகைவரை) எதிர்த்துக் கொன்று வெல்வானாயின் (நாமும்) வெற்றியைக் கொள்வோம். அல்லா தொழியின் அவனு டனே இறந் தொழிவோம் என்று கூறியவனை (ப் போர்க் களத்தை விட்டு)ப் போதல் புகழுடையதன்று என்று அறிவுறுத்தினான் (அங்கதன்).

கு:- வானர சேனைத் தலைவர்களைப் பொதுவாக நோக்கி அறி வுறுத்திய அங்கதன், சாம்பவானைச் சிறப்பு முறையில் நோக்கி, 'இனிச் செய்யத்தக்கது இது' என முடித்துக் கூறுகின்றானாதலின் 'ஒன்றும் நீ அஞ்சல் ஐய' என்றான். 'நேமியான்தானே கொன்று போர் கடக்கு மாயின் வென்றி கொள்ளுதும், அன்றேல் அவனோடு பொன்றுதும்" என்றானாகி, 'போதலோ புகழ் அன்று' என்றான் என்க. (57)

வானரத் தலைவரெல்லாம் அங்கதனுடன் மீண்டும் வருதலும்
எதிர்த்த அரக்கர் சேனையைக் குறித்து
இராமன் தம்பிக்கு உரைத்தலும்

9493 ஈண்டிய தானை நீங்க
நிற்பதென் யாமே சென்று
பூண்டவெம் பழியி னோடும்
போந்தனம் போது மென்னா

மீண்டனர் தலைவ ரெல்லா
மங்கத னோடும் வீரன்
மூண்டவெம் படையை நோக்கித்
தம்பிக்கு மொழிவ தானான்.

'ஈண்டிய தானை நீங்க,
நிற்பது என்? யாமே சென்று
பூண்ட வெம் பழியினோடும்
போந்தனம்; போதும்' என்னா,
மீண்டனர் தலைவர் எல்லாம்,
அங்கத னோடும்; வீரன்
மூண்ட வெம் படையை நோக்கி,
தம்பிக்கு மொழிவ தானான்.

பொ:- 'நெருங்கி சேனைகள் நீங்க யாம் நீங்கி நிற்பது ஏன்? (போர்க் களத்தைவிட்டுச்) சென்று யாமே மேற்கொண்ட கொடிய பெரும் பழியுடனே போந்தவர்களாகிய நாமெல்லோரும் (இராமன் பால்) திரும்பிப் போவோம்' என்று (சாம்பவன் முதலிய) வானர சேனைத் தலைவர்கள் யாவரும் அங்கதனுடன் திரும்பி வந்தார்கள். பெரு வீரனாகிய இராமன் மிக்கெழுந்த கொடிய (அரக்கர்) படையைப் பார்த்துத் தம்பிக்கு (ப் பின்வருமாறு) கூறுவானாயினான்.

கு:- தலைவரெல்லாம், 'ஈண்டிய தானை நீங்க நிற்பதென்? யாமே சென்று பூண்ட வெம்பழியினோடும் போந்தனம் போதும்' என்னா அங்கதனோடும் மீண்டனர் என்க. தலைவர்—சேனைத் தலைவர்கள். வீரன் என்றது இராமனை. (58)

**9494** அத்தநீ யுணர்தி யன்றே
யரக்கர்தா னவுண ரேதான்
எத்தனை யுளரென் றாலும்
யான்சிலை யெடுத்த போது
தொத்துறு கனலின் வீழ்ந்த
பஞ்செனத் தொலையுந் தன்மை
ஒத்ததோ ரிடையூ றுண்டென்
றுணர்விடை யுதிப்ப துண்டால்.

'அத்த! நீ உணர்தி அன்றே
அரக்கர்தான், அவுணரேதான்,
எத்தனை உளர் என்றாலும்,
யான் சிலை எடுத்தபோது,
தொத்துறு கனலின் வீழ்ந்த
பஞ்சு எனத் தொலையும் தன்மை!
ஒத்தது: ஓர் இடையூறு உண்டு என்று
உணர்விடை உதிப்பது உண்டால்.

பொ:- அத்தனே! அரக்கரே யாகட்டும் அன்றி அரசுரரேயாகட்டும் எத்தனை பேர் (போரில் எதிர்த்து) உள்ளார்கள் என்றாலும், யான் வில்லைக் கையில் எடுத்த பொழுது திரளாகப் பொருந்திய பெருந்தீயில் வீழ்ந்த பஞ்சினைப் போன்று (அவர்கள் எல்லோரும்) அழிந் தொழியுந் தன்மையினை நீ அறிய வில்லையோ? (அத்தகைய வெற்றியே இப் பொழுதும் நமக்கு) ஒத்ததா யுள்ளது. (ஆயினும் பகைவரால்) ஓர் இடையூறு உண்டாகும் என்று என்னறிவின்கண்ணே தோன்றுவது உளது.

கு:- தம்பியாகிய இலக்குவனை நோக்கி, 'அத்த' என்று தன் அன்பின் மிகுதி தோன்ற அழைத்தான் இராமன். பகைவர்கள் எத்தனை பேர் கூடி நின்று எதிர்த்தாலும் யான் வில்லைக் கையில் எடுத்த பொழுது அவர்கள் எல்லோரும் பெருந்தீயிற் பட்ட பஞ்சினை யொத்து இல்லையாய் அழிந் தொழிதலை நீ உடனிருந்து கண்டிருக்கின்றாய் அல்லையோ? அத்தகைய வெற்றியே இப்பொழுதும் நமக்கு ஒத்தது. ஆயினும் வேறொருவாற்றால் நம் சேனைக்கு இடையூறு நேர்தல் கூடும் என என்னறிவிற் புலப்படுகின்றது' என இராமன் இலக்குவனுக்குக் கூறினான் என்பதாம். அவ் விடையூறு இன்னதென்று அடுத்து வரும் செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (59)

வானர சேனை, அரக்கர் சேனையால் நிலைகுலையா வண்ணம்
அனுமனோடும் சுக்கிரீவனோடும் சென்று காக்குமாறு
இராமன் இலக்குவனுக்கு உரைத்தல்

9495 காக்குந ரின்மை கண்ட
கலக்கத்தாற் கவியின் சேனை
போக்கறப் போகித் தத்த
முறைவிடம் புகுத லுண்டால்

தாக்கியிப் படையை முற்றுந்
தலைதுமிப் பளவுந் தாங்கி
நீக்குதி நிருத ராங்கு
நெருங்குவார் நெருங்கா வண்ணம்.

'காக்குநர் இன்மை கண்ட
கலக்கத்தால், கவியின் சேனை
போக்கு அறப் போகித் தம் தம்
உறைவிடம் புகுதல் உண்டால்;
தாக்கி, இப் படையை முற்றுந்
தலை துமிப்பளவும், தாங்கி,
நீக்குதி, நிருதர் ஆங்கு
நெருங்குவார் நெருங்கா வண்ணம்.

பொ:- வானர சேனைகள் (தம்மைத் தளர்வகற்றிக்) காக்குந் தலைவர் இல்லாமையைக் கண்ட கலக்கத்தால் (போரில் முந்துற்றுச்) செல்லுதல் கெட ஓடிப் போய்த் தத்தமக்குரிய உறைவிடங்களிற் சென்று புகும் (துயர்) நிலை ஏற்பட்டுளது. (யான்) இவ் வரக்கர் படையைத் தாக்கி முழுவதும் தலைகளை வெட்டி வீழ்த்துமளவும் நீ இந்த (வானர) சேனையைக் காத்து அங்குப் புகுந்து வருத்துவாராகிய அரக்கர்கள் நெருங்க வொண்ணாதவாறு (அவர்களை) ஒழித்துப் போக்குவாயாக.

கு:- கவியின் சேனை, காக்குநர் இன்மை கண்ட கலக்கத்தாற் போக்கு அறப் போகித் தத்தம் உறைவிடம் புகுதல் உண்டு; இப்படையைத் தாக்கி முற்றும் தலை துமிப்பளவும் நீ ஆங்கு நெருங்குவார் நெருங்கா வண்ணம் நீக்குதி என இயையும். கவியின் சேனை—வானர சேனை. போக்கு—பகைவர்மேல் முந்துற்றுச் செல்லுதல். அற—கெட. போதல்—பின்னிடுதல். துமித்தல்—துண்டித்தல். அளவிற் பெரிய சேனையாயினும் தலைமை தாங்கிச் செலுத்தும் தலைவரில்வழி அது போர் முனையில் எதிர்த்து நிற்கும் வன்மையை யுடையதாகா தென்பது,

'நிலைமக்கள் சால வுடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்' (770)

என வரும் திருக்குறளாற் புலனும். (60)

**9496** இப்புறத் தினைய சேனை
யேவியாண் டிருந்த தீயோன்
அப்புறத் தமைந்த சூழ்ச்சி
யறிந்தவ னயலே வந்து

தப்பறக் கொன்று நீக்கி
லவனையார் தடுக்கத் தக்கார்
வெப்புறு கின்ற துள்ளம்
வீரநீ யன்றி வில்லோர்.

'இப்புறத்து இனைய சேனை
ஏவி, ஆண்டு இருந்த தீயோன்
அப்புறத்து அமைந்த சூழ்ச்சி
அறிந்தவன், அயலே வந்து,
தப்பு அறக் கொன்று நீக்கில்,
அவனை யார் தடுக்கத் தக்கார்,—
வெப்புறுகின்றது உள்ளம்—
வீர! நீஅன்றி, வில்லோர்?

பொ:- இத்தகைய சேனையை இவ்விடத்து ஏவி (இலங்கை நகராகிய) அவ்விடத்திலே யிருந்த கொடியோனும் பொருந்திய வஞ்சனைச் சூழ்ச்சியை நன்குணர்ந்தவனுமாகிய இராவணன்; (நம் சேனையின்) அப்புறத்தே அருகே வந்து தப்பிப் பிழையாதபடி கொன்று நீக்குவானாயின் அவனை (அது செய்ய வொட்டாது) தடுத்து நிறுத்தத் தக்கவராகிய வீரர்கள் வீரனே நின்னையன்றி வேறு யாருளர்? (இது குறித்து) என் மனம் வெதும்புகின்றது.

கு:- இனைய சேனை இப்புறத்து ஏவி ஆண்டு இருந்த தீயோன் அமைந்த சூழ்ச்சி அறிந்தவன், அப்புறத்து அயலே வந்து தப்பு அறக் கொன்று நீக்கில் அவனைத் தடுக்கத் தக்கார் வில்லோர் வீர நீ அன்றி யார்? உள்ளம் வெப்புறுகின்றது என இயையும். இனைய சேனை—இத்தன்மையதாகிய சேனை; என்றது மூல பலச் சேனையை. தீயோன், அமைந்த சூழ்ச்சி அறிந்தவன் என்றது இராவணனை. தப்பு அற—தப்பிப் பிழைத்தல் இல்லாதபடி. வெப்புறுதல் — வெதும்பி வருந்துதல். (61)

9497 மாருதி யோடு நீயும்
வானரக் கோனும் வல்லே
பேருதிர் சேனை காக்க
வென்னுடைத் தனிமை பேணிச்
சோருதி ரென்னின் வெம்போர்
தோற்றுநா மென்னச் சொன்னான்
வீரன்மற் றதனைக் கேட்ட
விளையவன் விளம்ப லுற்றான்.

'மாருதியோடு நீயும்,
வானரக்கோனும், வல்லே,
பேருதிர் சேனை காக்க;
என்னுடைத் தனிமை பேணிச்
சோருதிர் என்னின், வெம்போர்
தோற்றும்,நாம்' என்னச் சொன்னான்,
வீரன்; மற்று அதனைக் கேட்ட
இளையவன் விளம்பலுற்றான்.

பொ:- அனுமனுடன் நீயும் வானர மன்னன் சுக்கிரீவனும் (நமது) சேனையைக் காத்தற் பொருட்டு விரைந்து செல்லுங்கள். எனது தனிமை நிலையை எண்ணி மனந் தளர்வீராயின் நாம் கொடிய (இப்) போரில் தோல்வியுறுவோம் என்று கூறினான். பெரு வீரனாகிய இலக்குவன் (பின் வருமாறு) கூறத் தொடங்கினான்.

கு:- 'சேனை காக்க வல்லே பேருதிர், என்னுடைத் தனிமை பேணிச் சோருதிர் என்னின் நாம் வெம்போர் தோற்றும்' என்ன வீரன் சொன்னான் என்க. வல்லே—விரைவாக. பேருதல்—இடம் பெயர்தல்; செல்லுதல். சோருதல்—மனந்தளர்தல். தோற்றும்—தோல்வியுறுவோம். வீரன் என்றது இராமபிரானை; இளையவன்—தம்பி; என்றது இலக்குவனை. அவன் கூறியதனை அடுத்த செய்யுளிற் காண்க. (62)

இலக்குவன் அதற்கு இசைந்து செல்ல,
அனுமன் இராமனுக்கு அருகே நின்று
அடித்தொண்டு புரிய வேண்டுதல்

9498 அன்னதே கரும மைய
வன்றியு மருகே நின்றால்
என்னுனக் குதவி செய்வ
திதுபடை யென்ற போது
சென்னியிற் சுமந்த கையர்
தேவரே போல யாமும்
பொன்னுடை வரிவி லாற்றல்
புறனின்று காண்டல் போக்கி.

'அன்னதே கருமம்; ஐய! அன்றியும், அருகே நின்றால்,
என் உனக்கு உதவிசெய்வது—இதுபடை என்றபோது
சென்னியில் சுமந்த கையர் தேவரே போல, யாமும்
பொன்னுடை வரிவில் ஆற்றல் புறன்நின்று காண்டல் போக்கி?

பொ:- ஐயனே! (நீ பணித்த) அதுவே (எம்மாற்) செய்யத் தக்க செயலாகும். அல்லாமலும், (பகை வந்து) படையின் தன்மை இது வாயிருக்கும் போது, (உனது) அருகே நின்றால் தலையிற் கூப்பிய கையினை யுடையராகிய தேவர்களைப் போன்று யாமும் (நினது) பொற் கட்டினையுடைய வில்லின் வன்மையைப் புறத்தே நின்று காணுதலை விடுத்து உனக்கு (எம்மாற்) செய்யத் தக்க உதவி என்ன இருக்கிறது?

கு:- ஐய என்றது இராமனை நோக்கிய விளி. கருமம்—செய்தற் குரிய செயல். படை இது என்ற போது சென்னியிற் சுமந்த கையர் தேவரே போல, யாமும் பொன்னுடை வரிவில் ஆற்றல் புறன் நின்று காண்டல் போக்கி உனக்கு உதவி செய்வது என்? என இயையும். கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவனாகிய நினக்கு எமது உதவி சிறிதும் வேண்டற் பால தன்றாதலின் யாம் நின்னருகே நின்றால் நினது வில்லாற்றலை நோக்கி வியந்து தலைமேற் கைகூப்பி நிற்பதன்றி எமக்கு வேறு செயலில்லை என்பான், அருகே நின்றால் தேவரே போல யாமும் நின் வில்லாற்றல் புறன் நின்று காண்டல் போக்கி உனக்கு செய்வது என்? என்றான். (63)

**9499** என்றவ னேக லுற்ற
காலையி னனும னெந்தாய்
புன்றொழிற் குரங்கெ னுதென்
றோளின்மே லேறிப் புக்கால்
நன்றெனக் கருதா நின்றே
னல்லது நாயி னேனுன்
பின்றனி நின்ற போது
மடித்தொழில் பிரியே னென்றான்.

என்று அவன் ஏகலுற்ற
காலையின், அனுமன், 'எந்தாய்!
"புன்தொழில் குரங்கு" எனாது, என்
தோளின்மேல் ஏறிப் புக்கால்,
நன்று எனக் கருதாநின்றேன்;
அல்லது, நாயினேன் உன்
பின் தனிநின்ற போதும்,
அடித்தொழில் பிரியேன்' என்றான்.

பொ:- என்று கூறி இலக்குவனுகிய அவன் (இராமனை விட்டுப் பிரிந்து) செல்லத் தொடங்கிய நிலையில், அனுமன், (இராமனைப் பார்த்து) 'எந்தையே! அற்பமான செயலையுடைய குரங்கு என்று இகழாமல் எனது தோளின் மேல் ஏறியமர்ந்து (நீ) போருக்குச் சென்றால் நல்லது என்று எண்ணுகின்றேன். அதுவன்றி நாய்போற் கடையேனுகிய யான் உனக்குப் பின்னே தனியே நின்றபோதும் நினது அடித்தொண்டிற் பிழைத்தல் இல்லாதவனுவேன் என்று கூறினுன்.

கு:- இராமன் பணித்த வண்ணம் சேனைகளைப் பாதுகாத்தற் பொருட்டு இலக்குவன் இராமனைப் பிரிந்து சென்றுனுக, உடன் நின்ற அனுமன், தன்னைப் போரில் வாகனமாகவோ அன்றி உடனின்று அடித்தொழில் புரியும் ஏவலனுகவோ ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என வேண்டினுன் என்பதாம். (64)

## இலக்குவனுக்கு உற்ற துணை நீ என்று இராமன் கூற, அனுமன், இலக்குவன் பின்னே செல்லுதல்

**9500** ஐயநிற் கியலா துண்டோ
விராவண னயலே வந்துற்
றெய்யும்விற் கரத்து வீர
னிலக்குவன் றன்னே டேற்றுல்
மொய்யமர்க் களத்தி னுன்னைத்
துணைபெரு னென்னின் முன்ப
செய்யுமா வெற்றி யுண்டோ
சேனையுஞ் சிதையு மன்றே.

'ஐய! நிற்கு இயலாது உண்டோ?
இராவணன் அயலே வந்து உற்று,
எய்யும் வில்கரத்து வீரன்
இலக்குவன்தன்னேடு ஏற்றுல்,
மொய் அமர்க்களத்தின் உன்னைத்
துணைபெருன் என்னின், முன்ப!
செய்யும் மா வெற்றி உண்டோ?
சேனையும் சிதையும் அன்றே?

பொ:- (அம் மொழியினைக் கேட்ட இராமன் அனுமனை நோக்கி) 'ஐயனே! உனக்கு முடியாத செயலும் உண்டோ? இராவணன், அருகில் வந்து பொருந்தி எய்கின்ற விற்படையை யேந்திய கையினையுடைய வீரனாகிய இலக்குவனோடு போருக்கு எதிர்ந்தால் (படை வீரர்கள்) நெருங்கியுள்ள போர்க்களத்திலே (இலக்குவன்) உன்னைத் துணையாகப் பெறானாயின், வலிமிக்கவனே (அவ் விடத்துப்) பெறுதற்குரிய பெரு வெற்றியும் உண்டாகுமோ? அதுவன்றி (நமது) சேனையும் கெட்டொழியு மல்லவா ?

கு:- இது முதல் மூன்று செய்யுட்கள் ஒரு தொடர். போர்க்களத்தில் இலக்குவனை இராவணன் படையொடு எதிர்த்தால் இலக்குவனுக்கு நின் துணை இன்றியமையாது வேண்டப் பெறும் என இராமன் அனுமனுக்கு அறிவுறுத்தியவாறு. (65)

**9501** ஏரைக்கொண் டமைந்த குஞ்சி
யிந்திர சித்தென் பான்றன்
போரைக்கொண் டிருந்த முன்னா
ளிளையவன் றன்னைப் போக்கிற்
றாரைக்கொண் டுன்னா லன்றே
வென்றதங் கவனை யின்னும்
வீரர்க்கும் வீர நின்னைப்
பிரிகிலன் வெல்லு மென்பேன்.

'ஏரைக் கொண்டு அமைந்த குஞ்சி
இந்திரசித்து என்பான் தன்
போரைக் கொண்டு இருந்த முன்நாள்
இளையவன் தன்னைப் போக்கிற்று
ஆரைக் கொண்டு? உன்னால் அன்றே,
வென்றது அங்கு அவனை? இன்னும்,
வீரர்க்கும் வீர! நின்னைப்
பிரிகிலன், வெல்லும் என்பேன்.

பொ:- அழகினைக் கொண்டு பொருந்திய மயிர் முடியினையுடைய இந்திரசித்து என்பவனுடைய போரை ஏற்றுக்கொண்டிருந்த முன்னாளில் இளையவனாகிய இலக்குவனை (அவனோடு பொருதற்கு) அனுப்பியது யாருடைய துணையைக் கொண்டு? அவ் இந்திரசித்தினை

வெற்றி கொண்டது உனது துணையினுல் அல்லவா? வீரர்க்கெல்லாம் வீரனே! இன்னமும் (அவ்விலக்குவன்) நின்னைப் பிரியாதனனுயின் வெற்றி பெறுவான் என்னும் கருத்துடையேன்.

கு:- ஏர்—அழகு. குஞ்சி—குடுமி. இளையவன்—தம்பி; என்றது இலக்குவனை. அவனை வென்றது உன்னுல் அன்றே என இயையும். அவன் என்றது இந்திரசித்தினை. முன்னர் இந்திரசித்தொடு இலக்குவன் பொருத நிலையில் நீ இலக்குவனுக்குத் துணையாயினுற்போல, இலக்குவன் இராவணனேடு பொரும் நிலையிலும் நீ இலக்குவனுக்குத் துணையாதல் வேண்டும் என இராமன் அனுமனுக்கு அறிவுறுத்தினுன் என்பதாம். (66)

**9502** சேனையைக் காத்தென் பின்னே
திருநகர் தீர்ந்து போந்த
யானையைக் காத்து மற்றை
யிறைவனைக் காத்தெண் டீர்ந்த
வானையித் தலத்தி னேடு
மறையொடும் வளர்த்தி யென்ருன்
ஏனைமற் றுரைக்க லாதான்
இளவல்பின் எழுந்து சென்ருன்.

'சேனையைக் காத்து, என் பின்னே
திருநகர் தீர்ந்து போந்த
யானையைக் காத்து, மற்றை
இறைவனைக் காத்து, எண் தீர்ந்த
வானை இத்தலத்தினேடும்
மறையோடும் வளர்த்தி' என்ருன்.
ஏனை மற்று உரைக்கலாதான்,
இளவல்பின் எழுந்து சென்ருன்.

பொ:- (வானர) சேனையைக் காத்து, என்பின்னே அழகிய அயோத்தி நகரத்தைத் துறந்து போந்த களிருகிய இலக்குவனைக் காத்து, மற்றும் (வானரகுல) மன்னனுகிய சுக்கிரீவனைக் காத்து, மன வெல்லையைக் கடந்துயர்ந்த வானுலகினை இந்நிலவுலகினேடும் வேதங்களோடும் வளர்ப்பாயாக' என்று (அனுமனை நோக்கிக்) கூறினுன் (இராமன்). அவ்வார்த்தைக்கு மாருக வேருென்றும் சொல்ல மாட்டாத அனுமன், இளையவனுகிய இலக்குவன் பின்னே எழுந்து சென்ருன்.

கு:- சேனை என்றது வானர சேனையினை. காத்தல்—பகைவரால் இடர் நேராதபடி உடனிருந்து பாதுகாத்தல். என் பின்னே திருநகர் தீர்ந்து போந்த யானை என்றது இளங் களிறுபோல்வானாகிய இலக்கு வனை. காதலால் உயர்திணை அஃறிணையாயிற்று. எண் தீர்தல்—மன வெல்லையைக் கடந்து உயர்தல். வான், இத்தலம் என்பன ஆகுபெய ராய் அங்கு வாழ்வாரைக் குறித்தன. 'வானர சேனையையும் இலக்கு வனையும் சுக்கிரீவனையும் நீ உடனிருந்து காக்கும் கடமையை மேற் கொண்டனை யாயின் அச் செயலால் வானுலகத்தையும் மண்ணுலகத் தையும் வேதங்களையும் வளர்த்தவனாவாய்' என இராமன் அனுமனை நோக்கிக் கூறினானாக, அம் மொழிக்கு மாறுரைக்க மாட்டாத அனுமன் இராமன் பணித்தவண்ணம் இலக்குவன் பின்னே சென்றான் என்பதாம். (67)

## இலக்குவனுக்குத் துணையாக வீடணனையும் உடன் அனுப்புதல்

**9503** வீடண நீயு மற்றுன்
றம்பியோ டேகி வெம்மை
கூடினர் செய்யும் மாயந்
தெரிந்தனை கூறிக் கொற்றம்
நீடுறு தானை தன்னைத்
தாங்கினை நில்லா யென்னின்
கேடுள தாகு மென்றா
னவனது கேட்ப தானான்.

'வீடண! நீயும் மற்று உன்
தம்பியோடு ஏகி, வெம்மை
கூடினர் செய்யும் மாயம்
தெரிந்தனை கூறி, கொற்றம்
நீடுறு தானை தன்னைத்
தாங்கினை, நில்லாய் என்னின்,
கேடு உளது ஆகும் என்றான்;
அவன் அது கேட்ப தானான்.

பொ:- 'வீடணனே! நீயும் உன் தம்பி (இலக்குவனோடு சென்று கொடுமையுடன் கூடியவராகிய அரக்கர்கள் செய்கின்ற வஞ்சனைச் சூழ்ச்சியை ஆராய்ந்து (இலக்குவன் முதலியோர்க்கு) எடுத்துரைத்து,

வெற்றி நிலைபெறுவதற்கு ஏதுவாகிய (நமது) சேனையை (ப் பின்னிடாதபடி) தாங்கி நில்லாயாயின் (நமக்குத்) தீமையுண்டாகும்' என்று கூறினன் (இராமன்). அவனும் (இராமன் கூறிய) அம்மொழியினைக் கேட்டு (அதன்படி) நடப்பதாயினன்.

கு:- தன்பால் தீமை புரிந்த இராவணனுடைய தம்பி வீடணனைத் தன் அன்புடைத் தம்பியாக ஏற்றுக்கொண்ட இராமபிரான் தான் கொண்ட அவ்வுறவுமுறை தன்னளவே யன்றித் தன் சுற்றத்தார் முதலிய யாவர்கண்ணும் என்றும் நிலைத்து நிற்பது என்பது தோன்றத் தன் அன்புடைத் தம்பி இலக்குவனை வீடணனுக்குத் தம்பியாக உரிமை செய்துரைத்தமை உளங்கொண்டு போற்றத்தக்கதாகும். தாங்குதல்—இடர் நீக்கிப் பாதுகாத்தல். கேடு—தீமை. அவன் என்றது, வீடணனை. கேட்டல்—கேட்டு அதன்படி நடத்தல்! (68)

சுக்கிரீவன் முதலியோரும் இராமன் சொல்லியதை யேற்று இலக்குவனுடன் சென்று வானர சேனையைக் காத்தல்

9504 சூரியன் சேயுஞ் செல்வன்
சொற்றதே யென்னுஞ் சொல்லன்
ஆரியன் பின்பு போன
னனைவரு மதுவே நல்ல
காரிய மென்னக் கொண்டார்
கடற்படை காத்து நின்றார்
வீரியன் பின்னர்ச் செய்த
செயலெலாம் விரிக்க லுற்றும்.

'சூரியன் சேயும், 'செல்வன்
சொற்றதே' என்னும் சொல்லன்,
ஆரியன் பின்பு போனன்;
அனைவரும், 'அதுவே நல்ல
காரியம்' என்னக் கொண்டார்;
கடற்படை காத்து நின்றார்;
வீரியன் பின்னர்ச் செய்த
செயல் எலாம் விரிக்க லுற்றும்:

பொ:- (அதுகேட்டு அங்கு உடனிருந்த) சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவனும் திருமகள் நாயகனாகிய இராமன் பணித்ததே (நம்பாற்)

செய்தற்குரியது' என்னும் (இசைவு) மொழியினை யுடையவனும், மேலோனாகிய இலக்குவன் பின்னே சென்றான். (அங்குள்ளார்) யாவரும், ('சேனையைக் காத்தலாகிய) அதுவே செய்தற்குரிய நற்செயல்' என்று கொண்டவர்களாய்க் கடல் போலும் வானர சேனையைக் காத்து நின்றார்கள். வீரப் பண்பிற் சிறத்தவனாகிய இராமபிரான் பின்பு செய்த செயல்கள் எல்லாவற்றையும் இனி விரித்துரைக்கத் தொடங்கினோம்.

கு:- இச் செய்யுள் கவிக்கூற்று. சூரியன் சேய்—சூரியன் புதல்வன்; சுக்கிரீவன். செல்வன் என்றது எல்லாச் செல்வங்கட்கும் உரிமையுடைய திருமகள் நாயகனாகிய இராமபிரானை. 'செல்வன் சொற்ற செய்தற்குரியது' என்னும் சொல்லன் என வேண்டுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது. ஆரியன் என்றது, பெருமைக் குணமுடைய மேலோனாகிய இலக்குவனை. நல்ல காரியம்—செய்தற்குரிய நற்செயல். வீரியன்—வீரப்பண்பிற் சிறந்தவன்; என்றது இராமபிரானை. (69)

சுவடி 52-ல் கீழ்க்கண்ட பாடல் காணப்படுகிறது.

9504 a இசைந்தன னமருக் கெல்லா வுலகமு மிமைப்பின் வாரி
பிசைந்துகிற் றுதரத் துண்ணப் பெற்றநாள் பிடித்த மூர்த்தம்
இசைந்தது போலு மென்றுங் கயனி சிவனிருவர் தத்தம்
வசந்திகழ் கருத்தி லூடே மதித்திட வயங்கி நின்றான்.

## இராமன் வில் ஏந்திச் சேனையின் முன்னணியில் வந்து பொருதல்

**9505** வில்லினைத் தொழுது வாங்கி
யேற்றினன் வின்னாண் மேருக்
கல்லெனச் சிறந்த தேனுங்
கருணையங் கடலே யன்ன
எல்லொளி மார்பிற் றீராக்
கவசமிட் டிழையா வேதச்
சொல்லெனத் தொலையா வாளித்
தூணியும் புறத்துத் தூக்கி.

வில்லினைத் தொழுது வாங்கி,
ஏற்றினன் வில்நாண்; மேருக்
கல் எனச் சிறந்ததேனும்,
கருணை அம்கடலே அன்ன

எல் ஒளி மார்பில் தீராக்
கவசம் இட்டு, இழையா வேதச்
சொல் எனத் தொலையா வாளித்
தூணியும் புறத்துத் தூக்கி,

பொ:- (வீரனாகிய இராமன்) மேருமலையை ஒத்துச் சிறந்த திண்மையுடையதெனினும் (தன்பால் அன்புடையார்க்கு) அழகிய அருட் கடலினையே ஒத்த ஒளிமிக்க விளங்கும் மார்பின் கண்ணே அழியாத கவசத்தை அணிந்து (ஒருவராலும்) செய்யப்படாத வேதத்தின் சொற்களைப் போன்ற குறைவுபடாத அம்புகளையுடைய அம்புப் புட்டிலையும் (தன்) முதுகிலே கட்டி, வில்லினை(க் கையால்) தொழுது எடுத்து அவ் வில்லில் நாண் ஏற்றினான்.

கு:- மேற் செய்யுளில் உள்ள வீரியன் என்பது இங்கும் எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. வீரியன், மார்பிற் கவசம் இட்டு, புறத்துத் தூணியும் தூக்கி, வில்லினைத் தொழுது வாங்கி வில்(லில்) நாண் ஏற்றினான் என முடிக்க. மேருக்கல்—மேருமலை. இராமனது மார்பு பகைவரை அழிக்கும் திண்மையால் மேருமலையினை யொத்த வன்மையுடையதாயினும் தன்பால் அன்புடையார்க்கு அருட்கடலே யென ஒளிவிளங்கும் நீர்மையது என்பார், 'மேருக் கல்லெனச் சிறந்ததேனுங் கருணையங் கடலேயன்ன எல்லொளி மார்பு' என்றார். எல்—ஒளி; மீமிசைச் சொல். தீரா—தொலையாத. கவசம் என்பது போர் வீரர்கள் மார்பில் அம்பு முதலியன தைத்து உட்புகாதவாறு அணியப் படுவது. வேதம், ஒருவரால் செய்யப்படாத தொன்மையுடையது என்பது பற்றி 'இழையா வேதச் சொல்' என்றார். இழைத்தல்—இயற்றுதல். அறிஞர்க்கு வேண்டுங் காலந்தோறும் விரைந்தெடுத்தற் குரிய தொலையாத சொற்களைத் தன்பாற் கொண்டுள்ள வேதத்தினை யொத்துப் போரில் வேண்டுங்காலந்தோறும் விரைந்தெடுத்தற்குரிய வண்ணம் குறைவுபடாத அம்புகளைத் தன்பாற் கொண்டது என்பது தோன்ற, 'வேதச் சொல்லெனத் தொலையா வாளித் தூணி' என்றார். புறம்—முதுகு. தூக்குதல்—தொங்குமாறு கட்டுதல். வில் வெற்றி நல்கும் தெய்வத் தன்மை யுடைமை பற்றி அதனைத் தொழுது வாங்கினான் என்க. (70)

9506 ஓசனை நூற்றின் வட்ட
மிடைவிடா துறைந்த சேனைத்
தூசிவந் தண்ண றன்னைப்
போக்கற வளைந்து சுற்றி

வீசின படையு மம்பு
மிடைதலும் விண்ணோர் யாக்கை
கூசின பொடியா லெங்குங்
குமிழ்த்தன வியோம கூடம்.

ஓசனை நூற்றின் வட்டம்
இடைவிடாது உறைந்த சேனைத்
தூசி வந்து அண்ணல்தன்னைப்
போக்கு அற வளைந்து சுற்றி,
வீசின படையும் அம்பும்
மிடைதலும், விண்ணோர் யாக்கை
கூசின; பொடியால் எங்கும்
குமிழ்த்தன, வியோம கூடம்.

பொ:- நூறு யோசனையளவு வட்டமாக இடையீடின்றிப் பொருந்தின (அரக்கர்) சேனையின் முன்னணிப் படை வந்து தலைமையிற் சிறந்தோனாகிய இராமனைப் புறத்தே போதல் இயலாதவாறு வளைந்து சூழ்ந்துகொண்டு வீசிய படைக்கலங்களும் அம்புகளும் நெருங்கிச் செறிந்தனவாக (அதுகண்ட) வானோருடம்புகள் (அச்சத்தால்) கூசி நடுங்கின. (அப்பொழுது எழுந்த) துகள்களால் ஆகாயத்தின் இடமெலாம் (மயிர் சிலிர்த்தாற் போன்று) பொடிப்புற்றன.

கு:- தூசி—முன்னணிப் படை. மிடைதல்—செறிதல். ஆக்கை—உடம்பு. கூசுதல்-அச்சத்தால் நடுக்கமுறுதல். பொடி—புழுதித் துகள். குமிழ்த்தல்—சிலிர்த்தல்; பொடிப்புறுதல். வியோமகூடம்—ஆகாயத்தின் பரப்பு. (71)

தேவர்கள் தம் கருத்து முடிந்திட இராமனை ஏத்திப் பரவுதல்.

**9507** கண்ணனே யெளியே மிட்ட
கவசமே கடலே யன்ன
வண்ணனே யறத்தின் வாழ்வே
மறையவர் வலியே மாறு
தொண்ணுமே நீய லாதோ
ரொருவர்க்கிப் படைமே லூன்ற
எண்ணமே முடித்தி யென்று
வேத்தின ரிமையோ ரெல்லாம்.

'கண்ணனே! எளியேம் இட்ட
கவசமே! கடலே அன்ன
வண்ணனே! அறத்தின் வாழ்வே!
மறையவர் வலியே! மாறுது
ஒண்ணுமே, நீ அலாது, ஓர்
ஒருவர்க்கு இப் படைமேல் ஊன்ற;
எண்ணமே முடித்தி' என்று,
ஏத்தினர், இமையோர் எல்லாம்.

பொ: (அப்பொழுது) தேவர்கள் எல்லோரும் 'கண்ணனே! எளியேங்கள் பாதுகாப்பாகக் கொள்ளுதற்குரிய கவசமே; கடலை ஒத்த (நீல) நிறத் திருமேனியை யுடையவனே! அறத்திற்கு வாழ்வளிப்பவனே! வேதியர்க்கு வன்மை நல்குபவனே! (எம் இறைவனாகிய) நீ அல்லாது வேறு ஒருவர்க்கு இந்த (அரக்கர்) படையினை பின்னிடாது எதிர்த்து நிற்றற்கு இயலுமோ? எம்முடைய மனக் கருத்தினை முடித்தருள்வாயாக' என்று கூறி (இராமனை)த் துதித்தனர்.

கு:- இமையோரெல்லாம், 'கண்ணனே...எண்ணமே முடித்தி' என்று ஏத்தினர் என முடியும். கண்ணன் என்பது திருமால் என்னும் பொருளில் வழங்கப்பெற்றது. 'கருணையங் கோயிலுள் இருந்த கண்ணனை' என முன்னரும் வழங்கியுள்ளமை காண்க. கண்ணன் என்பதற்குக் கண்போன்றவன் எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். உலகத்து அறம் நிலைபெறுதற்குத் துணையாவான் நீயே என்பார் 'அறத்தின் வாழ்வே' என்றும், மறைமுனிவர்க்குக் கொடியோர் செய்யும் இடர்களைப் போக்கி அரண் செய்பவன் நீயே என்பார் 'மறையவர் வலியே' என்றும் கூறினார். நீ அலாது ஓர் ஒருவர்க்கு இப்படைமேல் மாறுது ஊன்ற ஒண்ணுமே என இயையும். படைமேல் ஊன்றல்—தன்மேல் வந்த பகைப் படையினை எதிர்த்து நின்று பொருதல். ஒண்ணுமே—இயலுமோ? இயலாது என்பதாம்.

சுவடி 52-ல் கீழ்க்கண்ட இப்பாடல் காணப்படுகிறது.

9507 a மற்றும் பேரறத்துள் நின்ற
வானவ டணைந்துளோர்
கொற்ற வில்லி வெல்க
வஞ்ச மாயர் வீக குவலயத்
துற்ற தீமை தீர்க வின்றே
டென்று கூறினர் நிலம்
துற்ற வெம்படைக்கை நீசர்
இன்ன இன்ன சொல்லினர்.

## அரக்கர் கூட்டத்தினைக் கண்டு அஞ்சிய, முனிவர்கள் 'இராமன் வெல்க' என வாழ்த்துக் கூறுதல்

**9508** முனிவரே முதல்வ ராய
வறத்துறை முற்றி னோர்கள்
தனிமையு மரக்கர் தானைப்
பெருமையுந் தரிக்க லாதார்
பனிவரு கண்ணர் விம்மிப்
பதைக்கின்ற நெஞ்சர் பாவத்
தனைவருந் தோற்க வண்ணல்
வெல் கவென் றாசி சொன்னார்.

முனிவரே முதல்வர் ஆய
அறத்துறை முற்றினோர்கள்,
தனிமையும், அரக்கர் தானைப்
பெருமையும், தரிக்கலாதார்,
பனிவரு கண்ணர், விம்மிப்
பதைக்கின்ற நெஞ்சர், 'பாவத்து
அனைவரும் தோற்க! அண்ணல்
வெல்க' என்று ஆசி சொன்னார்.

பொ:- முனிவரே முதவ்வராகவுள்ள அறத்துறையில் நிரம்பிய பெரியோர்கள், (இராமபிரானது) தனிமை நிலையினையும் அரக்கர் சேனைகளின் மிகுதியையும் (கண்டு) ஆற்றாதவராய், நீர்மல்கும் கண்களையுடையவராய் விம்முதலுற்று நடுங்கும் நெஞ்சினையுடையவராய், 'தீவினையுடைய (அரக்கர்) அனைவரும் தோல்வியுற்றழிக; அண்ணல் (இராமன்) வெல்க' என்று வாழ்த்துக் கூறினார்கள்.

கு:- பனி—கண்ணீர்த்துளி. அறத்துறை முற்றினோர்கள், தரிக்கலாதார், பனிவருங் கண்ணர், பதைக்கின்ற நெஞ்சர் (ஆகி), 'பாவத்து அனைவரும் தோற்க; அண்ணல் வெல்க' என்று ஆசி சொன்னார் என்க. (73)

## தேவர்கள் முதலியோர் இராமனை வாழ்த்துதல்

**9509** மற்றும்வே றறத்து ணின்ற
வான நாட னைத்துளோர்
கொற்ற வில்லி வெல்க வஞ்ச
மாயர் வீக குவலயத்

துற்ற தீமை தீர்க வின்றே
டென்று கூறி ஞர் நிலந்
துற்ற வெம்ப டைக்கை நீச
ரின்ன வின்ன சொல்லிஞர்.

மற்றும் வேறு அறத்துள் நின்ற
வானநாடு அனைத்து உளோர்,
'கொற்ற வில்லி வெல்க வஞ்ச
மாயர் வீக! குவலயத்து
உற்ற தீமைதீர்க இன்றேடு'
என்று கூறிஞர்; நிலம்
துற்றவெம் படைக் கைநீசர்,
இன்ன இன்ன சொல்லிஞர்.

பொ:- மற்றும் (அம் முனிவர்களின்) வேருக அறத்தில் நிலைபெற்றுள்ள விண்ணுடு அனைத்திலும் உள்ளவர்களாகிய எல்லோரும், 'வெற்றி பொருந்திய வில்வீரன் (இராமன்) வெல்க, வஞ்சனையும் மாயமும் உடைய அரக்கர் இறந்தொழிக. நிலவுலகத்திலுள்ள தீமை அனைத்தும் இன்றேடு கெட்டொழிக' என்று கூறிஞர்கள். பூமியில் வந்து நெருங்கிய கொடிய படைக்கலங்களை யேந்திய கையினையுடைய புலையராகிய அரக்கர்கள் (பின்வருமாறு) இன்ன இன்ன மொழிகளைக் கூறுவாராயினர்.

கு:- கொற்ற வில்லி என்றது, வில்வீரஞகிய இராமனை. வசஞ் மாயர் என்றது வஞ்சனையும் மாயமும் வல்ல அரக்கர்களை. வீதல்—இறத்தல். துற்றல்—நெருங்கிச் செறிதல். அரக்கர் கூறியவை அடுத்து வரும் மூன்று செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (74)

தனிநின்று பொரும் இராமனது ஆற்றல் கண்டு,
அரக்கர் வியத்தல்

**9510** இரிந்த சேனை சிந்தி யாரு
மின்றி யேக நின்று நம்
விரிந்த சேனை கண்டி யாது
மஞ்ச லின்றி வெஞ்சரம்

தெரிந்து சேவ கந்தி றம்ப
லின் றி நின் ற செய்கையான்
புரிந்த தன்மை வென்றி மேலு
நன்று மாலி பொய்க்குமோ.

'இரிந்த சேனை சிந்தி, யாரும்
இன்றி ஏக, நின்று, நம்
விரிந்த சேனை கண்டு, யாதும்
அஞ்சல் இன்றி, வெஞ்சரம்
தெரிந்து, சேவகம் திறம்பல்
இன்றி, நின்ற செய்கையான்,
புரிந்த தன்மை வென்றி மேலும்
நன்று; மாலி பொய்க்குமோ?

பொ:- நிலைகெட்டோடிய சேனை சிதறி யாவரும் இல்லாமற் போயொழியவும், நம்முடைய விரிந்த சேனையைக் கண்டு சிறிதும் அஞ்சுதலின்றி எதிர்த்து நின்று வெம்மையுடைய ஆராய்ந்தெடுத்து வீரர்க்குரிய கடமையிற் பிறழாது நின்ற செய்கையினையுடையானாகிய இவ்வீரன் செய்த தன்மை வெற்றியின் மேலும் சிறப்புடையதே. மாலியவான் பொய் கூறுவானோ?

கு:- இதுமுதல் மூன்று செய்யுட்கள், தனி நின்று எதிர்க்கும் இராமனைக் குறித்து அரக்கர் கூறும் முறையில் அமைந்தன. இரிந்த சேனை என்றது, மூலப்படையினைக் கண்டு அஞ்சியோடிய வானர சேனையை. விரிந்த சேனை என்றது, எவ்விடத்தும் விரிந்து பரவிநின்ற மூலப்படையினை. சேவகம்—வீரர்க்குரிய கட்டுப்பாடு. திறம்பல்—பிறழ்தல்; மாறுபடுதல். செய்கையான் என்றது, இராமனை. வெற்றி மேலும் நன்று—வெற்றி மேலும் பெரிது. மாலி—மாலியவான். பொய்க்குமோ என்புழி ஓகாரம் எதிர்மறை. 'நம்மைக்கண்ட அளவிலேயே வானர சேனை யாவும் நிலைகெட் டோடவும் சிறிதும் அஞ்சாது தனி நின்று எதிர்க்கும் இவ் வீரனது செயல் போரிற் பெறும் வெற்றியினும் மேம்பட்டதே. இவ் வீரனைக் குறித்து முன்பு மாலிய வான் கூறிய சொல் பொய்த்திலது' என அரக்கர்கள் தனியொருவ னாகித் தம்மை எதிர்த்த இராமனை வியந்துரைத்தனர் என்பதாம். (75)

9511 புரங்க ளெய்த புங்க வற்கு
முண்டு தேர்பொ ருந்தினர்
பரந்த தேவர் மாய னம்மை
வேர றுத்த பண்டைநாள்

விரைந்து புள்ளின் மீது விண்ணு
ளோர்க ளோடு மேவினன்
கரந்தி லன்ற னித்தொருத்த
னேரும் வந்து காலினன்.

'புரங்கள் எய்த புங்கவற்கும்
உண்டுதேர்; பொருந்தினர்,
பரந்ததேவர்; மாயன் நம்மை
வேர் அறுத்த பண்டைநாள்,
விரைந்து புள்ளின்மீது
விண்ணுளோர்களோடு மேவினன்;
கரந்திலன், தனித்து ஒருத்தன்
நேரும், வந்து, காலினன்.

பொ:- முப்புரங்களை எய்தழித்த மேலோனாகிய இறைவனுக்கும் (பூமியாகிய)தேர் உண்டு. பரவியுள்ள தேவர்களும் தேரை ஊர்தியாகப் பொருந்தியவர்களே. திருமால் (அரக்கராகிய) நம்மை வேரறக் கொன்ற முன்னை நாளில் (கருடனாகிய) பறவைமீது (அமர்ந்து) விண்ணவர்களோடு விரைந்து வந்து பொருந்தினன். தனித்து ஒருவனாகவுள்ள இவ்வீரனோ மறைந்து ஒளியாதவனாகிக் காலால் (நடந்து) வந்து (நம்மை) நேரே எதிர்ப்பட்டுள்ளான்.

கு:- புங்கவன்—மேலோன். புரங்கள் எய்த புங்கவற்கும் தேர் உண்டு, தேர் பொருந்தினர் பரந்த தேவர் எனத் தேர் என்பது ஈரிடத்தும் சென்றியைந்தது. தனித்து ஒருத்தன் கரந்திலன் காலினன் வந்து நேரும் என இயைக்க. நேர்தல்—எதிர்ப்படுதல். முப்புரத்தவுணர் களை அழித்தற்குச் சென்ற இறைவனுக்கும் தேர் உண்டு; தேவர் கட்கும் தேர் உண்டு; முற்காலத்தில் நம்மை எதிர்த்த திருமாலுக்கும் கருடனாகிய ஊர்தி உண்டு; தனித்து ஒருவனாகி நின்ற வீரனோ தேர் முதலிய ஊர்தி எதுவும் வேண்டாது காலினால் நடந்துவந்து நம்மை எதிர்க்கின்றான் என அரக்கர் வியந்தனர் என்பதாம். இஃது உறுப்புக்குறை விசேடம் என்னும் அணியின் பாற்படும். (76)

சுவடி 52ல் கீழ்க்கண்ட பாடல்கள் காணப்படுகின்றன.

9511 a அரைக்கணத் தரக்கர் வெள்ள மளவில் கோடி யாவிபோய்
தரைப்பட பல் லண்ட சோடி தகரவண்ணல் தன்கை வில்
இரைக்கும் நாணிடிப் பினுக்குடைந்திராம விராம வென்று
உரைக்கும் நாமமே யெழுந்த தும்ப ரோடும் இம்பரே.

b சிரமொடிந்து சிந்தினர்கள் சிலவர் செஞ்சுடர்ப்படைக்
கரமொடிந்து சிந்தினர்கள் சிலவர் கல்லே வெல்லுமா
உரமொடிந்து சிந்தினர்கள் சிலவர் ஊழிகாலம் வாழ்
வர மொடிந்து சிந்தினர்கள் சிலவர் மண்ணின் மீதரோ.

9512 தேரு மாவும் யானை யோடு
சீயம் யாளி யாதியா
மேரு மானு மெய்யர் நின்ற
வேலை யேழின் மேலவாம்
வாரும் வாரு மென்ற ழைக்கு
மானு டற்கிம் மண்ணிடைப்
பேரு மாறு நம்மு ழைப்பி
ழைக்கு மாறு மெங்ஙனே.

'தேரும், மாவும், யானையோடு
சீயம், யாளி ஆதியா
மேரு மானும் மெய்யர்நின்ற
வேலை, ஏழின் மேலவாம்;
"வாரும், வாரும்" என்று அழைக்கும்
மானுடற்கு, இம் மண்ணிடைப்
பேருமாறும், நம்முழைப்
பிழைக்குமாறும் எங்ஙனே?'

பொ:- தேரும் குதிரையும் யானையுடன் சிங்கமும் யாளியும் முதலாக பேரு மலையை ஒத்த உடம்பினையுடைய அரக்கர்கள் நிலை பெற்றுள்ள (சேனைக்) கடல் ஏழு கடல்களினும் மிக்கனவாகும். (அங்ஙனமாகவும்) 'வாருங்கள் வாருங்கள்' என்று(நம்மைப் போருக்கு) அழைக்கின்ற மானுடனுக்கு இப்பூமியிற் பெயர்த்து அடிவைக்கு மாறும் எவ்வாறு?

கு:- மேரு மானும் மெய்யர் நின்ற வேலை என்றது, மேருமலையை ஒத்த பெரு வடிவுடைய அரக்கர்கள் நிலைபெற்ற கடல் போலும் பெருஞ்சேனையை. பேர்தல்—அடி பெயர்த்து வைத்தல். பிழைத்தல்-தப்பி உய்தல். தனியனாய் நின்ற இம்மானிடன் இங்கு அடி பெயர்த்தற்கும் தப்பி உய்தற்கும் இயலாது என அரக்கர்கள் தமக்குள் கூறினர் என்பதாம். (77)

### அரக்கர் வந்து தன்னைச் சூழ்ந்த நிலையில், இராமன் வில்நாணொலியை எழுப்புதல்

**9513** என்று சென்றி ரைத்தெ ழுந்தொர்
சீய வேற டடர்ந்ததைக்
குன்று வந்து சூழ்வளைத்த
போற்றொ டர்ந்து கூடலும்
நன்றி தென்று ஞாலமேழு
நாக மேழு மானுதன்
வென்றி வில்லை வேத நாத
ஞணெ றிந்த வேலைவாய்.

என்று சென்று, இரைத்து எழுந்து, ஓர்
சீய ஏறு அடர்ந்ததைக்
குன்று வந்து சூழ்வளைத்த போல்,
தொடர்ந்து கூடலும்,
'நன்றுஇது' என்று, ஞாலம் ஏழும்
நாகம் ஏழும் மானும்தன்
வென்றி வில்லை வேதநாதன்
நாண் எறிந்த வேலைவாய்,

பொ:- என்று (அரக்கர் தமக்குள்) சொல்லிக் கொண்டு சென்று ஆரவாரித்தெழுந்து, ஓர் ஆண் சிங்கம் பொருதற்கு முற்பட்டதனைக் குன்றுகள் பல வந்து சுற்றி வளைத்துக் கொண்டாற் போன்று தொடர்ந்து கூடிச் சூழ்ந்து கொள்ளுதலும், 'இது நன்று' என்று கூறிக் கீழ் ஏழுலகங்களையும் மேல் ஏழுலகங்களையும் ஒத்தமைந்த (பெருமையுடைய) வெற்றி வில்லினை வேத முதல்வனாகிய இராமன் நாண் எறிந்து ஒலித்த பொழுது,

கு:- இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். இராமனுக்குச் சிங்க ஏறும் அவனைச் சூழ்ந்து கொண்ட அரக்கர்களுக்குக் குன்றுகளும் உவமை. நாண் எறிதல்—வில்லிற் கட்டப் பெற்றுள்ள நாணைத் தெறித்து ஒலியுண்டாக்குதல். மானும்—ஒக்கும். (78)

### அரக்கர் சேனையில் தீய நிமித்தங்கள் தோன்றுதல்

**9514** கதம்பு லர்ந்த சிந்தை வந்த
காவல் யானை மாலொடு
மதம்பு லர்ந்த நின்ற வீரர்
வாய்பு லர்ந்த மாவெலாம்

பதம்பு லர்ந்த வேக மாக
வாள ரக்கர் பண்புசால்
விதம்பு லர்ந்த தென்னின் வென்ற
வென்றி சொல்ல வேண்டுமோ.

கதம் புலர்ந்த, சிந்தைவந்த,
காவல் யானை, மாலொடு
மதம் புலர்ந்த; நின்ற வீரர்
வாய்புலர்ந்த; மா எலாம்
பதம், புலர்ந்த வேகம் ஆக,
வாள் அரக்கர் பண்பு சால்
விதம் புலர்ந்தது என்னின், வென்ற
வென்றி சொல்ல வேண்டுமோ?

பொ:- (இராமன் உண்டாக்கிய வில் நாணின் ஒலியால்) காவலாக நின்ற (திசை) யானைகள் தம் முள்ளத்தெழுந்த வெகுளி நீங்கின வாய் மத மயக்கத்துடன் மதமும் வற்றின. (அங்கு) நின்ற அரக்க வீரர்களின் வாய் நீர் உலர்ந்தன; குதிரைகளெல்லாம் கால்களின் வேகம் குறைந்தனவாக, கொடிய அரக்கர்களது வீரப் பண்புமிக்க வன்மை நிலையும் மாறி வற்றியதென்றால் (இராமபிரான்) வென்ற வெற்றித் திறத்தினை (விரித்துச்) சொல்ல வேண்டுமோ?

கு:- காவல் யானை, சிந்தை வந்த கதம் புலர்ந்தனவாய் மதம் புலர்ந்த எனவும், மா எலாம் பதம் வேகம் புலர்ந்த ஆக எனவும் இயைத்துரைக்க. கதம்—வெகுளி. காவல் யானை—திசைகளிற் காவலாக நின்ற யானைகள். புலர்தல்—உலர்தல், நீங்குதல். (79)

9515 வெறித்தி ரிந்த வாசி யோடு
சீய மாவு மீளியும்
செறித்த மைந்த சில்லியென்று
மாழி கூடு தேரெலாம்
முறித்தெ றிந்து முந்த யானை
வீசு மூசு பாகரைப்
பிறித்தி ரிந்து சிந்த வந்தொ
ராகுலம்பி றந்ததால்.

வெறித்து இரிந்த வாசியோடு,
சீய மாவும் மீளியும்,
செறித்து அமைந்த சில்லி என்னும்
ஆழிசூடு தேர் எலாம்
முறித்து எறிந்து முந்த, யானை
வீசும் மூசு பாகரைப்
பிறித்து இரிந்து சிந்த, வந்து ஓர்
ஆகுலம் பிறந்ததால்.

பொ:- வெருவி நிலை கெட்டோடிய குதிரையோடு சிங்கமும் பேயும் (தாம்) செறியக் கட்டப் பட்டிருந்த சில்லியெனப்படும் சக்கரங் களோடு கூடிய தேர்களை யெல்லாம் முறித்து எறிந்து முற்பட்டுச் செல்லவும், யானைகள் (அங்குசத்தினை) வீசும் நெருங்கிய பாகரை நீக்கி நிலைகெடச் சிதறவும் ஓர் அவலநிலை (அவ்வரக்கர் சேனையினி டத்தே) வந்து தோன்றியது.

கு:- அரக்கர் சேனையிடத்தே தோன்றிய தீநிமித்தங்களை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது இச்செய்யுள். வெறித்தல்—அஞ்சி மருளுதல். வாசி—குதிரை. சீயமா—சிங்கமாகிய விலங்கு. மீளி—பேய். மூசுதல்—மொய்த்தல்; நெருங்குதல். (80)

### துன்னிமித்தந் தோன்றிய அரக்கர் சேனைமீது இராமன் அம்பு ஏவுதல்

**9516** இந்நி மித்த மிப்ப டைக்கி
டந்து டித்த டுத்ததோர்
துன்னி மித்த மென்று கொண்டு
வானு ளோர்க டுள்ளினர்
அந்நி மித்த முற்ற போத
ரக்கர் கண்ண ரங்கமேல்
மின்னி மிர்த்த தன்ன வாளி
வேத நாதன் வீசினன்.

'இந் நிமித்தம் இப்படைக்கு இடம்
துடித்து அடுத்தது ஓர்
துன்னிமித்தம்' என்று கொண்டு
வானுளோர்கள் துள்ளினர்;

அந் நிமித்தம் உற்றபோது, அரக்கர்
கண் அரங்க, மேல்
மின் நிமிர்த்தது அன்ன வாளி
வேதநாதன் விசினான்.

பொ:- இந்த நிமித்தங்கள் இவ் அரக்கர் சேனைக்கு இடப் பக்கம் துடித்தலால் ஏற்பட்ட தீய நிமித்தங்களாம் என மனங்கொண்டு வானுலகிலுள்ள தேவர்கள் துள்ளி யாடினார்கள். அவ்வுற்பாதங்கள் உண்டானபோது அரக்கர்கள் கண் கலங்கி வருந்த, அவர்கள் மேல் மின்னலை நிமிர்த்தாலொத்த அம்புகளை வேத முதல்வனாகிய இராமன் வீசிச் சொரிந்தனன்.

கு:- இந்நிமித்தம் என்பன, தேரிற் கட்டப் பெற்றுள்ள குதிரை சிங்கம் முதலாயின காரணமின்றி வெருவிக் கட்டறுத்துக் கொண்டு தேர்களைச் சிதைத்து ஓடுதலும், யானைகள் வீரர்களை வீசிச் சிதறுதலும் என மேலே கூறப்பட்ட உற்பாதங்கள். அரக்கர்க்கு நேர்ந்த இவற்றைக் கண்ட தேவர்கள் தம் பகைவராகிய அன்னோர் விரைவில் இறந்தொழிவர் என மகிழ்ந்து துள்ளிக் கூத்தாடினர் என்க. கண் அரங்க —கண்கலங்கி வருந்த. வேதநாதன்—வேத முதல்வன்; என்றது இராமனை. (81)

9517 ஆளி மேலு மாளின் மேலு
மானை மேலு மாடன்மா
மீளி மேலும் வீரர் மேலும்
வீரர் தேரின் மேலும்வெவ்
வாளி மேலும் வில்லின் மேலு
மண்ணின் மேல்வ ளர்ந்தமாத்
தூளி மேலு மேற வேற
வீரன் வாளி தூவினான்.

ஆளி மேலும், ஆளின் மேலும்,
ஆனைமேலும், ஆடல்மா
மீளி மேலும், வீரர்மேலும்,
வீரர் தேரின்மேலும், வெவ்
வாளி மேலும்: வில்லின் மேலும்
மண்ணின்மேல் வளர்ந்த மாத்
தூளி மேலும் ஏற ஏற,
வீரன் வாளி தூவினான்.

பொ:- வீரனாகிய இராமன், சிங்கத்தின் மீதும் காலாள் வீரர் மீதும் யானை மீதும் ஆடுந்தன்மையவாகிய குதிரைமீதும் பேய் மீதும் வீரர்கள் மீதும் அவ்வீரர்கள் ஏறிய தேர்களின் மீதும் (அவர்களால் எய்யப்படும்) அம்புகளின் மீதும் (அவற்றை வெளிப்படுத்தும்) விற்களின்மீதும் மண்ணிடத்தே பெருகியெழுந்த மிக்க தூளிகளின் மீதும் சென்று சென்று பொருந்துமாறு அம்புகளைத் தூவினான்.

கு:- இராமன் ஏவிய அம்புகள் அங்கு மண்ணின் மேல் எழுந்தோங்கிய புழுதிகளினும் மிக்கனவாக அத்துகள்களையும் ஊடுருவிச் செல்லும் கூர்மை யுடையனவா யமைந்தது என்பார், 'மண்ணின்மேல் வளர்ந்த மாத்தூளிமேலும் ஏற ஏற வீரன் வாளி தூவினான்' என்றார்.

## இராமன் எய்த அம்புகளால் அரக்கர் சேனை அழிதல்

9518 மலைவி ழுந்த வாவி ழுந்த
மான யானை மள்ளர் செந்
தலைவி ழுந்த வாவி ழுந்த
தாய வாசி தாளறும்
சிலைவி ழுந்த வாவி ழுந்த
திண்ப தாகை திங்களின்
கலைவி ழுந்த வாவி ழுந்த
வெள்ளெ யிற்ற காடெலாம்.

மலை விழுந்தவா விழுந்த,
மான யானை; மள்ளர் செந்
தலை விழுந்தவா விழுந்த,
தாய வாசி; தாள்அறும்
சிலை விழுந்தவா விழுந்த
திண் பதாகை; திங்களின்
கலை விழுந்தவா விழுந்த,
வெள் எயிற்ற காடு எலாம்.

பொ:- (இராமன் எய்த அம்புகளால்) மானமுடைய யானைகள் மலைகள் (சரிந்து) வீழ்ந்தன போன்று (தரையில்) வீழ்ந்தன. அரக்க வீரர்களுடைய செந்நிறத் தலைகள் (துணிக்கப்பட்டு) வீழ்ந்தனவற்றை யொத்துத் தாவிய குதிரைககள் வீழ்ந்தன. அடியற்ற விற்கள் விழுந்த வற்றை யொத்துத் திண்ணிய கொடிகளும் (அற்று) வீழ்ந்தன. (அரக்க

வீரர்களின்) வெள்ளிய கோரைப் பற்களின் தொகுதி யாவும் நிறைமதியின் கலைத் தொகுதிகள் அற்று விழுந்தன போன்று விழுந்தன.

கு:- யானைக்கு மலையும் அரக்கர் பற்களுக்குத் திங்களின் கலைகளும் உவமை. வீரர்களின் தலையறுபட்டு வீழ்ந்தவற்றை யொத்துக் குதிரைகள் துணிக்கப்பட்டு விழுந்தன எனவும் சில தாளற்று விழுந்தவற்றை யொத்துத் திண்பதாகை விழுந்தன எனவும் உவமேயப் பொருள்களுள் ஒன்றையே மற்றொன்றிற்கு உவமையாக்கிக் கூறினர். விழுந்தவாறு எனற்பாலது விழுந்தவா என ஈறு கெட்டது. பதாகை-கொடி. (83)

சுவடி 52ல் கீழ்க்கண்ட பாடல்கள் காணப்படுகின்றன.

9518a அண்ட கோள மெண்டிசா முகங்க ளெங்கு மாகியே
மண்டி மூடி வாழரக்கர் தாமும் வாகை வீரன் மேல்
கொண்ட லேழு மூழி வாயொர் குன்றில் மாரி பொழிவ போல்
கண்ட வேக மேறி வாளி மழை சொரிந்து தாக்கினர்.

b தேரின் மீதனந்த கோடி நிருதர் சீறு செம்முகக்
காரின் மீதனந்த கோடி வஞ்சகர்காலின் வாவு மாதி
தாரின் மீ தனந்த கோடி தறுக்கணீசர் தாழ்விலாப்
பாரின் மீ தனந்த கோடி பதகர் வந்து பற்றினர்.

c துடித வண்டை சங்கு பேரி துந்துமிக் குலங்கள் கைத்
தடிது வண்ட ஞானிரங்கு தக்கை யோடு பம்பைமற்
றிடி பொதிந்த முரசமாதி யெண்ணில் பல்லியக் குழாம்
படி நடுங்கவே பகைக் களத்தினோசை விஞ்சவே.

d இரைத் தடர்ந் தரக்கர் வெள்ள மெண்ணில் கோடியிடைவிடா
துருத்தல்கண் டிராகவன்புன் முறுவல் கொண்டொவ் வொருவருக்
கொருத்தனுய தன்மை தானு முணர்வுறுதபடி யெழ
கரத்தின் மாரி பெய்தரக்கர் தலைதரைக்கண் வீழ்த்தினான்.

e நுனித்திடர்க் கருங் கடுப்பின் நொடி வரைக்கு ளெங்கு மாய்க்
குனித்த விற்கை வாளி மாரி மழை சொரிந்து கோறலால்
மனித்தன் மற்றொருத்த னென்ற வாய்மைநன்று நன்றெனு
வினைத் திறத் தரக்கர் விம்மி விம்மிதத்த ராய் விளம்பு வார்.

f விண்ணின் மீதனந்த கோடி வீர னென்ப ரல்லையும்
மண்ணின் மீ தனந்த கோடி மனித னென்ப ரல்ல வெங்
கண்ணி னூடனந்த கோடி கண்ண னென்ப ரல்லவும்
எண்ண மீ தனந்த கோடி யுண்டிராம னென்பரால்.

g இத்திறத் தரக்கர் வெள்ள மெங்கு மீதியம்ப நின்
றெந்திறத் தினும் விடா திராமனெங்கு மெங்குமாய்
அத்திறத் தரக்க ரோடு மானை தேர்பரிக்குலம்
தத்துறச் சரத்தின மாரியால் தடிந்து வீழ்த்தினன்.

h இடைவிடா தளப்பில் வெள்ள மிற்றிறந்து போகவும்
படைவிடா தரக்கராளிபோல் வளைந்து பற்றவும்
கொடைவிடாதவன் பொருள் குறைந்திடாதும் வீதல் போல்
தொடைவிடா திராமன் வாளி வஞ்சர் மீது தூவினன்.

**9519** வாடை நாலு பாலும் வீச
மாக மேக மாலைவெங்
கோடை மாரி போல வாளி
கூட வோடை யானையும்
ஆடல் மாவும் வீரர் தேரு
மாளு மாள்வ தானவால்
பாடு பேரு மாறு கண்டு
கண்செல் பண்பு மில்லையால்

வாடை நாலுபாலும் வீச,
மாக மேக மாலை வெங்
கோடை மாரி போல வாளி
கூட, ஓடை யானையும்
ஆடல் மாவும் வீரர் தேரும்,
ஆளும், மாள்வது ஆனவால்;
பாடு பேரும் ஆறு கண்டு,
கண் செல் பண்பும் இல்லையால்.

**பொ:-** கடுங்காற்று நாற் புறங்களிலும் சுழன்றடிக்க, வானத்தே மேக வரிசை வெம்மை மிக்க கோடைக்காலத்துப் பெய்யும் பெரு மழையினை யொத்து (இராமன் எய்த) அம்புகள் பாய்தலால் முக படாம் அணிந்த யானைகளும் அடுதலில் வல்ல குதிரைகளும் வீரர் ஏறிய தேர்களும் காலாள் வீரர்களும் (ஒருங்கே) மாளுதலை யுடைய வாயின. (இறந்த உடம்புகளி லிருந்து பெருக்கெடுத்துப்) பக்கத்தே செல்லும் (குருதி) ஆற்றைக் கண்டு கண் செல்கின்ற தன்மையும் இல்லையாயின.

கு:- வடதிசைக் காற்றினைக் குறித்து வழங்கும் வாடை என்னும் பெயர், இன்னாத கடுங்காற்று என்ற பெயரில் இங்கு ஆளப் பெற்றது. நாலு பாலும்—நாற்புறமும். மாகம்—வான். மேகமாலை—மேகங் களின் வரிசை. வெங்கோடை மாரி—கடுங்கோடையிற் பெய்யும் பெரு மழை. அடல் மா என்பது ஆடல்மா என்றாயிற்று. மாள்வது ஆன- மாளுதலை உடையவாயின. திணை விரவிப் பன்மையால் அஃறிணை முடிவுபெற்றது. (84)

**9520** விழித்த கண்கள் கைகள் மெய்கள்
விற்கள் வேல்க ளுட்கிடத்
தெழித்த வாய்கள் செல்ல லுற்ற
தாள்க டோள்கள் செல்லினைப்
பழித்த வாளி சிந்தநின்று
பட்ட தன்றி விட்ட கோல்
கழித்த வாயு தங்க ளொன்று
செய்த தில்லை கண்டதே.

விழித்த கண்கள், கைகள், மெய்கள்,
விற்கள், வேல்கள், உட்கிடத்
தெழித்த வாய்கள், செல்லல் உற்ற
தாள்கள், தோள்கள், செல்லினைப்
பழித்த வாளி சிந்த நின்று
பட்டதுஅன்றி, விட்டகோல்,
கழித்த ஆயுதங்கள், ஒன்று
செய்தது இல்லை கண்டதே.

பொ:- (அரக்கர்கள் இராமனை வெகுண்டு) விழித்துப் பார்த்த கண்களும், (தாக்குதற்கு ஒங்கிய) கைகளும், (மேல்விழுந்து அழுத்த முயன்ற) உடல்களும் (அம்பெய்தற் பொருட்டு வளைத்த) விற்களும் (அவன்மேல் எறிந்த) வேல்களும் (கேட்டோர்) மனந்துணுக்குற உரப்பிய வாய்களும், (பொருதற்கு) முன்செல்லலுற்ற கால்களும், (மோதித் தாக்க முயன்ற) தோள்களும் மேகத்தைப் பழித்த அம்பு களை (இராமன்) நின்று சொரிதலால் அழிந்துபட்டன என்பதன்றி (அவ் அரக்கர்கள்) செலுத்திய அம்புகளும் (உறையினின்றும்) கழித்து வீசிய (வாள் முதலிய) படைக் கலங்களும் (இராமனது திருமேனியை) ஒன்றும் ஊறு செய்ததனை (யாரும்) கண்டதில்லை.

கு:- விழித்த கண்கள், தெழித்த வாய்கள். செல்லலுற்ற தாள்கள் எனக் கண் முதலியவற்றுக்கு விழித்தல் முதலிய வினையினை அடைமொழியாகக் கூறியது கொண்டு, கைகள், மெய்கள் முதலிய, ஏனைய முதலியவற்றுக்கும் ஏற்புடைய வினைகளாகிய அடைமொழிகள் வருவித்துரைக்கப்பட்டன. தனியனாய் நின்ற இராமன் ஒருவன் எய்த அம்புகளால் அரக்கர் பலர் இறந்ததன்றி அவ் வரக்கர் பலரும் ஒருங்கு கூடி இராமன் மேற்செலுத்திய படைகள் யாவும் அவன் மேனியில் எத்தகைய ஊறுபாட்டையும் செய்யமாட்டாதனவாயின என்பதாம். (85)

**9521** தொடுத்த வாளி யோடுவிற்
றுணிந்து வீழு முன்றுணிந்
தெடுத்த வாள்க ளோடு தோள்க
ளிற்று வீழு மற்றுடன்
கடுத்த தாள்கள் கண்ட மாகு
மெங்ஙனே கலந்துநேர்
தடுத்த வீரர் தாமு மொன்று
செய்யு மாச லத்தினல்.

தொடுத்த வாளியோடுவில்
துணிந்து வீழும், முன்; துணிந்து
எடுத்த வாள்களோடு தோள்கள்
இற்று வீழும்; மற்று உடன்
கடுத்த தாள்கள் கண்டம் ஆகும்;
எங்ஙனே, கலந்து நேர்
தடுத்து அ(வ்) வீரர்தாமும் ஒன்று
செய்யுமா சலத்தினல்?

பொ:- (அரக்கர்) தொடுத்து எய்த அம்புகளோடு விற்கள் துண்டிக்கப்பட்டு(க் கீழே) விழும். (அவர்கள்) முன்பு துணிந்து எடுத்த வாள்களோடு (அவருடைய) தோள்கள் (அறுபட்டு) இற்று விழும். ஒருங்கு விரைந்து செல்ல முற்பட்ட (அவர்தம்) கால்கள் துண்டமாகும். (இராமன் ஏவிய அம்பின் ஆற்றல் இவ்வாருயின்) தம்முட் கூடி நேர் நின்று (இராமனைத்) தடுத்து அந்த (அரக்க) வீரர்கள் தாமும் வெகுளியால் (இராமனுக்கு) ஒரழிவினைச் செய்தல் எவ்வாறு?

கு:- அரக்கர்கள் இராமன்மேல் அம்பு முதலியன தொடுக்க முற்பட்ட அப்பொழுதே இராமன் எய்த அம்பினுல் அவர்கள்

கொண்ட படைக் கலங்களும் கை முதலியனவும் சிதைந்தொழிதலால் அவ் வரக்கர்கள் தம் சின மிகுதியால் இராமனுக்கு எத்தகைய ஊறுபாட்டினையும் செய்தற்கு இயலாதவராயினர் என்பதாம். 'அவ் வீரர் தாமும் கலந்து நேர்தடுத்து: சலத்தினால் ஒன்று செய்யுமா(று) எங்ஙனே' என இயையும். சலம்—கோபம். (86)

**9522** குரந்து ணிந்து கண்சி தைந்து
பல்ல ணங்கு லைந்துபே
ருரந்து ணிந்து வீழ்வ தன்றி
யாவி யோட வொண்ணுமே
சரந்து ணிந்த வொன்றை நூறு
சென்று சென்று தள்ளலால்
வரந்து ணிந்த வீரர் போரின்
முந்த வுந்து வாசியே.

குரம் துணிந்து, கண் சிதைந்து,
பல்லணம் குலைந்து, பேர்
உரம் துணிந்து, வீழ்வது அன்றி,
ஆவி ஓட ஒண்ணுமே—
சரம் துணிந்த ஒன்றை நூறு
சென்று சென்று தள்ளலால்,
வரம் துணிந்த வீரர் போரின்
முந்த உந்து வாசியே!

பொ:- (இராமன் ஏவிய) அம்பு (தனக்கு இலக்காகத்) துணிந்து ஒன்றை நூறாகச் சிதையச் சென்று வீழ்த்துவதனால், (தாம் பெற்றுள்ள வரத்தின் வன்மையினால் துணிவுற்று எதிர்ந்த வீரர்கள் போரில் முற்படச் செலுத்துகின்ற குதிரைகள், (காலிற்) குளம்புகள் துணி பட்டும், கண்கள் சிதைந்தும், மேலிடு தவிசுகள் குலைவுற்றும் பெரிய மார்பு சிதைந்தும் வீழ்வதல்லாமல் உயிருடன் தப்பியோட இயலுமோ?

கு:- குரம்—குளம்பு. பல்லணம்—மேலிடு தவிசு. உரம்—மார்பு. ஆவியொடு ஓட என மூன்றாமுருபு விரித்துரைக்க. சரம்—அம்பு; என்றது இங்கு இராமபாணத்தினை. சரம் ஒன்றை நூறு சென்று சென்று தள்ளலால், வீரர் போரின் முந்த உந்து வாசி, குரம் துணிந்து கண் சிதைந்து உரம் துணிந்து வீழ்வதன்றி ஆவி ஓட ஒண்ணுமோ? என்க. (87)

9523 ஊர வுன்னின் முன்பு பட்டு
யர்ந்த வெம்பி ணங்களால்
பேர வொல்வ தன்று பேரி
ஞயி ரம்பெ ருஞ்சரம்
தூர வொன்று நூறு கூறு
பட்டு குந்து யக்கலால்
தேர்க ளென்று வந்த பாவி
யென்ன செய்கை செய்யுமே.

ஊர உன்னின், முன்பு பட்டு
உயர்ந்த வெம் பிணங்களால்
பேர ஒல்வது அன்று; பேரின்
ஆயிரம் பெருஞ் சரம்
தூர, ஒன்று நூறு கூறு
பட்டு உகும்; துயக்கு அலால்
தேர்கள் என்று வந்த பாவி
என்ன செய்கை செய்யுமே?

பொ:- (வீரர்) ஊர்ந்து செலுத்தக் கருதின் முன்பு இறந்து மேடாகக் கிடக்கும் கொடிய பிணங்களால் இடம் பெயர்ந்து செல்லு தல் இயல்வதன்று. அரிதிற் பெயர்ந்து செல்லின் (இராமனுடைய) ஆயிரக் கணக்கான பெரிய அம்புகள் மேன்மேல் நெருங்குதலால்(தேர்) ஒவ்வொன்று நூறு கூறுகச் சிதறியழியும். இச் சோர்வினையன்றித் தேர்கள் என்னும் பெயருடன் (துணை) வந்த பாவிகள் வேறு என்ன உதவிச் செயலைச் செய்யவல்லன?

கு:- அரக்கர் சேனையிலுள்ள தேர்கள் அழிபட்டதனைக் கூறுவது இச் செய்யுள். ஊர்தல்—ஏறிச் செலுத்தல். உன்னின் என்றதனல் உன்னுதற்குரிய வீரர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. பேர்தல்—இடம்பெயர்தல்; செல்லுதல். ஒல்லுதல்—இயலுதல். துயக்கு—மனச் சோர்வு. கொடுமை செய்வாரைப் பாவி என அழைத்தல் உலகியல், தேர்கள் கொடுமையைச் செய்யும் உணர்வில்லாதன வாயினும் அவற்றைத் துணையெனச் சார்ந்து வந்த வீரர்களுக்கு இடர் பயப்பனவாக அமைந்தமையின் 'தேர்கள் என வந்த பாவி' என்றார். 'செய்யுமே' என்புழி ஏகாரம் ஒன்றுஞ் செய்யா என எதிர்மறைப் பொருளுணர்த்தியது. (88)

9524 எட்டு வன்றி சைக்க ணின்ற
யாவும் வல்ல யாவரும்
கிட்டி னுய்ந்து போகி லார்க
ளென்ன நின்ற கேள்வியால்
முட்டும் வெங்கண் மான யானை
யம்புராய முன்னமே
பட்டு லந்த போல்வி ழுந்த
வென்ன தன்மை பண்ணுமே.

எட்டு வன் திசைக்கண் நின்ற
யாவும் வல்ல யாவரும்,
கிட்டின், உய்ந்து போகிலார்கள்
என்ன நின்ற, கேள்வியால்;
முட்டும் வெங்கண் மான யானை,
அம்பு உராய, முன்னமே
பட்டு உலந்த போல் விழுந்த;
என்ன தன்மை பண்ணுமே?

பொ:- எட்டுத் திசைகளில் நின்ற வலிய யானைகள் யாவும் (அவற்றை யொத்த ஆற்றல் மிக்கோர்) யாவரும் (இவற்றோடு பொரு தற்கு) அணுகின் உயிருடன் தப்பிப் போக மாட்டார்கள் என்று (கண்டோர் கூற) நிலை பெற்ற புகழ்த்திறத்தினால் மோதித்தாக்கும் வெகுளி மிக்க கண்களையுடைய மான வுணர்வு மிக்க யானைகள் (இராமனது) அம்பு (தம்மேல்) உரசிய அளவில் முன்னமே உயிர் கெட்டு இறந்தவை போன்று (நிலமிசை) விழுந்தன. (அவை அங்ஙனம் செயலற்று வீழ்வ தன்றி) வேறு என்ன செயலைச் செய்ய வல்லன?

கு:- எட்டுத் திசைக்கண் நின்ற யாவும் என்றது பூமியிற் காவலாக நின்ற திசை யானைகள் எட்டினையும். வலிய திசை யானைகளாலும் ஆற்றல் மிக்கோர் பிறர் யாவராலும் அணுகி எதிர்த்து நிற்க வொண்ணாத பெரு வன்மை படைத்த யானைகள், இராமபாணம் தம் உடம்பின் மீது பட்டு உராய்ந்த அளவில் முன்னமே உயிர் நீங்கிய உடல்கள் வீழ்தலை யொத்துச் செயலற்று வீழ்ந்தன என்பதாம். யாவும் யாவரும் என இருதிணையும் விரவி யெண்ணி, 'உய்ந்து போகிலார்கள்' எனச் சிறப்பினால் உயர்திணை முடிபு கூறினார். கேள்வி-இசை; கேட்கப்படுவது என்னும் பொருளிற் புகழை யுணர்த்தியது. (89)

**9525** வாவி கொண்ட புண்ட ரீக
மன்ன கண்ணன் வாளியொன்
றேவி னுண்டை நூறு கோடி
கொல்லு மென்ன வெண்ணுவான்
பூவி னண்டர் கோனு மெண்ம
யங்கு மன்ன போரின் வந்
தாவி கொண்ட கால னார்க
டுப்பு மன்ன தாகுமே.

வாவி கொண்ட புண்டரீகம்
அன்ன கண்ணன் வாளி ஒன்று
ஏவின், உண்டை நூறு கோடி
கொல்லும் என்ன, எண்ணுவான்
பூவின் அண்டர் கோனும், எண்
மயங்கும்; அன்ன போரின் வந்து
ஆவி கொண்ட காலனார்
கடுப்பும் அன்னது ஆகுமே.

**பொ:-** தடாகத்தில் உள்ள செந்தாமரை மலர் போன்ற கண்களையுடையவனாகிய இராமன் (பகைவர் சேனை மேல்) அம்பு ஒன்றைச் செலுத்தினால் (அவ்வாறு செலுத்தப்பட்ட) வில்லுண்டை நூறு கோடியுயிர்களைக் கொல்லும் என்று உட்கொண்டு (இறந்த உயிர்களை) எண்ணத் தொடங்கியவனாகிய தாமரை மலர்மேல் உள்ள தேவர் தலைவன் பிரமனும் எண்ணுவதில் திகைப்புறுவானாயினன். அத்தகைய போர் நிகழ்ச்சியினிடையே வந்து (வீரர்களின்) உயிரைக் கொண்ட கூற்றுவனாரது விரைவும் அங்ஙனம் மனந் திகைப்புற்று மயங்குதற்குரியதாயிற்று.

**கு:-** இராமன் எய்யும் அம்பினால் இறந்த உயிர்களை எண்ணி அளவிட்டறிதற்கு இயலாத நிலையிற் பிரமனும், போர்க்களத்தில் இறந்த வுயிர்களை விரைந்து பற்றுதற்கியலாத நிலையிற் கூற்றுவனும் திகைப்புற்று வருந்தினர் என இராமனது பேராற்றலை வியந்து கூறியவாறு. கடுப்பு—விரைவு. (90)

**9526** கொடிக்கு லங்க டேரின் மேல
யானை மேல கோடை நாள்
இடிக்கு லங்கள் வீழ வெந்த
காடு போலெ ரிந்தவால்

முடிக்கு லங்கள் கோடி கோடி
சிந்த வேக முற்றுரு
வடிக்கு லங்கள் வாளி யோட
வாயி னூடு தீயினல்.

கொடிக் குலங்கள், தேரின் மேல
யானை மேல, கோடைநாள்
இடிக்குலங்கள் வீழ வெந்த
காடுபோல் எரிந்தவால்—
முடிக் குலங்கள் கோடி கோடி
சிந்த, வேகம் முற்றுரு
வடிக் குலங்கள் வாளி ஓட
வாயினூடு தீயினல்!

பொ:- கூர்மையுடைய அம்பின் தொகுதிகள் (அரக்கருடைய) முடித் தொகுதிகள் கோடி கோடி அளவினவாய்ச் சிதறி விழுவது வேகம் நிரம்பி ஓடினவாக, (அவற்றின்) வாயினின்றும் வெளிப் பட்ட தீயினல், தேரின் மீதுள்ளனவும் யானை மீதுள்ளனவும் ஆகிய கொடிகளின் தொகுதிகள், கோடைக் காலத்து இடித் தொகுதிகள் விழுதலால் வெந்த காடுகளைப் போன்று வெந்து அழிந்தன.

கு:- வடிவாளிக் குலங்கள், முடிக் குலங்கள் கோடி கோடி சிந்த, வேகம் முற்றுரு ஓட வாயினூடு (வெளிப்பட்ட) தீயினல், தேரின் மேல யானை மேல கொடிக் குலங்கள், கோடை நாள் இடிக்குலங்கள் வீழ வெந்த காடு போல் எரிந்த என இயைத்துப் பொருள் கொள்க. குலம்—கூட்டம், தொகுதி. முற்றுரு—நிரம்புதலுற்று. வடி—கூர்மை. (91)

9527 அற்ற வேலும் வாளு மாதி
யாயு தங்கண் மீதெழுந்
துற்ற வேக முந்த வோடி
யோத வேலை யூடுறத்
துற்ற வெம்மை கைம்மி கச்சு
றுக்கொ ளச்சு வைத்ததால்
வற்றி நீர்வ றந்து மீன்ம
றிந்து மண்செ றிந்தவால்.

அற்ற வேலும் வாளும் ஆதி
ஆயுதங்கள்மீது எழுந்து,
உற்ற வேகம் உந்த ஓடி,
ஓத வேலை ஊடுற,
துற்ற வெம்மை கைம் மிகச்
சுறுக்கொளச் சுவைத்ததால்,
வற்றி நீர் வறந்து, மீன் மறிந்து,
மண் சொறிந்தவால்.

பொ:- (இராமன் ஏவிய அம்புகளால் துணிக்கப்பட்டு) முறிந்த வேலும் வாளும் முதலிய (அரக்கருடைய) படைகள், சென்று தாக்கிய (அம்பினது) வேகம் செலுத்த மேலே எழுந்து ஓடி அலைகளையுடைய கடலினுள்ளே பொருந்த, செறிந்த வெம்மை மிக்கெழச் சுறு என்னும் ஓசையுண்டாகக் கடல்நீரைப் பருகியதனுல், (கடலின்) நீர் வற்றி மீன்கள் மறிந்து மண்ணிடத்தே செறிந்தன.

கு:- சுறுக்கொள்ளுதல் என்றது, தீயிற் பட்டுப் பழுக்கக் காய்ந்த படைக்கலங்கள் கடல்நீரில் விழுந்தபொழுது உண்டாகிய சுறு என்னும் ஓசையினை. சுவைத்தல்—பருகுதல். இராம பாணங்களால் தாக்கப்பட்டு முறிந்து வெம்மையுற்ற வேல் வாள் முதலிய அரக்கருடைய படைக்கலங்கள் மேலெழுந்து கடலில் வீழ்ந்து சுறு வென்னும் ஓசையுண்டாகக் கடல்நீரைப் பருகிய அளவில் கடல்நீர் வற்றக் கடலினுள்ள மீன்கள் மறிந்து மண்ணிடத்தே செறிந்தன என்பதாம். (92)

**9528** போர ரிந்த மன்று ரந்த
புங்க வாளி பொங்கினுர்
ஊரெ ரிந்த நாடு ரந்த
தென்ன மின்னி யோடலால்
நீரெ ரிந்த வண்ண மேநெ
ருப்பெ ரிந்த நீணெடுந்
தேரெ ரிந்த வீரர் தஞ்சி
ரம்பொ டிந்து சிந்தவே.

போர் அரிந்தமன் துரந்த
புங்க வாளி, பொங்கினுர்
ஊர் எரிந்தநாள் துரந்தது
என்ன மின்னி ஓடலால்,

நீர் எரிந்த வண்ணமே, நெருப்பு
எரிந்த, நீள்நெடுந்
தேர் எரிந்த, வீரர் தம்
சிரம் பொடிந்து சிந்தவே.

பொ:- போரிற் பகைவரை அடக்க வல்ல இராமன் ஏவிய காம்புடன் கூடிய அம்புகள் சினமிக்கெழுந்த அவுணர்களின் முப் புரங்கள் எரிந்த நாளில் (இறைவன்) செலுத்திய அம்பு என்னும்படி (தீயொடு பொருந்தி) ஒளியுடையனவாய் மின்னி ஓடுதலால் (கடலின்) நீர் எரிந்தது போலவே (அரக்க) வீரர்களின் தலைகள் பொடிபட்டுச் சிதற நீண்ட பெரிய தேர்கள் நெருப்புப் பற்றி எரிந்தன.

கு:- அரிந்தமன்—பகைவரை அடக்குவோன்; என்றது இராமனை. புங்கம்—அம்பின் அடிப்பகுதி. பொங்குதல்—சினம்மிக்கு எழுதல். பொங்கினர் என்றது திரிபுரத்தவுணர்களை. ஊர் என்றது அவர்க்குரிய முப்புரங்களை துரந்தது என்றது செலுத்தப்பட்ட அம்பினை. இறைவன் முப்புரங்களை எரித்த நாளில் அவற்றின்மேல் ஏவுதற்குக் கொண்ட அம்பு நெருப்புடன் கூடிய முனையினதாதல் போன்று, இராமன் எய்த அம்பும் தீயுடன் கூடிய முனையினதாய்ச் சென்றன என்பார், 'அரிந்த மன் துரந்த புங்கவாளி, பொங்கினர் ஊர் எரிந்தநாள் துரந்தது என்ன மின்னி ஓடலால்' என்றார். நீர் எரிதல் என்றது கடல்நீர் வெதும்பி வற்றிச் சுவறுதலை. (93)

**9529** பிடித்த வாள்கள் வேல்க ளோடு
தோள்கள் பேர ராவெனத்
துடித்த யானை மீதி ருந்து
போர்தொ டங்கு சூரர்தம்
மடித்த வாய செந்த லைக்கு
லம்புரண்ட வானின்மின்
இடித்த வாயி னிற்ற மாம
லைக்கு லங்க ளென்னவே.

பிடித்த வாள்கள், வேல்களோடு,
தோள்கள் பேர் அராஎனத்
துடித்த; யானைமீது இருந்து
போர்தொடங்கு சூரர்தம்

மடித்த வாய செந்தலைக் குலம்
புரண்ட, வானின் மின்
இடித்த வாயின் இற்ற மாமலைக்
குலங்கள் என்னவே.

பொ:- யானை மீதமர்ந்து போரைத் தொடங்கிய (அரக்க) வீரர்களின் தோள்கள், பிடித்துள்ள வாள்களோடும் வேல்களோடும் (இற்றுப்) பெரிய பாம்புகளைப் போன்று (தரையில்) துடித்தன; (சின மிகுதியால்) மடித்த வாயினையுடைய (அவர்தம்) செந்நிறத் தலைத் தொகுதிகள், வானிடத்தே மின்னலோடு கூடித் தோன்றிய இடிகள் தாக்கியவிடத்துப் பிளந்து சிதறிய பெரிய மலைச் சிகரத் தொகுதிகளைப் போன்று (நிலத்திற்) புரண்டன.

கு:- யானைமீது இருந்து போர் தொடங்கு சூரர்தம் தோள்கள், பிடித்த வாள்கள் வேல்களோடு (இற்று,) பேர் அரா எனத் துடித்த எனவும், (அவர்தம்) மடித்த வாய செந்தலைக் குலம், வானின் மின் இடித்த வாயின் இற்ற மாமலைக் குலங்கள் என்னப் புரண்ட எனவும் இயைத்துப் பொருள் கொள்க. மடித்த வாய—மடித்த வாயினையுடைய. வாய என்னும் பெயரெச்சம் தலைக்குலம் என்னும் பெயர் கொண்டு முடிந்தது. தலைக்குச் செம்மை செந்நிறக் குஞ்சியால் ஆயது. உவமையிடத்தே வந்த இறுதல் வினை பொருளிடத்தும் வருவித்துரைக்கப்பட்டது. (94)

**9630** கோர வாளி சீயமீளி
கூளியோடு ஞாளியுங்
போர வாளி னேடு தேர்க
ணூறு கோடி பொன்றுமால்
நார வாளி ஞாலவாளி
ஞானவாளி நாந்தகப்
பாரவாளி வீர வாளி
யேக வாளி பாயவே.

கோர ஆளி, சீயம், மீளி,
கூளியோடு, ஞாளியும்,
போர வாளினேடு தேர்கள்
நூறு கோடி பொன்றுமால்—

நார ஆளி, ஞால ஆளி,
ஞான ஆளி, நாந்தகப்
பார வாளி, வீர ஆளி,
ஏக வாளி பாயவே.

பொ:- உயிர்களை ஆள்பவனும் உலகினை ஆள்பவனும் மெய்யுணர்வினை ஆள்பவனும் நாந்தகம் என்னும் பெருமையுடைய வாட்படையினை ஆள்பவனும் வீரத்தினை ஆள்பவனும் ஆகிய இராமனது ஓர் அம்பு சென்று பாய்வதனால், கொடுமையுடைய யாளியும் சிங்கமும் வலிய பேயுடன் நாயும் பொருதலையுடைய ஆள்களோடு தேர்கள் நூறு கோடியும் அழிந்தொழிந்தன.

கு:- கோரம்—கொடுமை. சீயம்—சிங்கம். மீளி—வன்மை. கூளி—பேய். ஞாளி—நாள். ஆளி முதலியன அரக்கர் தேரிற் கட்டப்பட்ட விலங்குகள். போர—பொருதலையுடைய. ஆள்—காலாள். நார ஆளி—உயிர்தோறும் அந்தரியாமியாய் நின்று ஆள்பவன். நாரம்—உயிர். ஞால ஆளி—உலகினை ஆள்பவன். ஞான ஆளி—ஞானமே திருமேனியாகக் கொண்டு ஆள்பவன். நாந்தகப் பாரவாளி—நாந்தகம் என்னும் பெருமை வாய்ந்த வாட்படையை யுடையவன். வீரவாளி—வீரத்தினை ஆள்பவன். இவை இராமன் என்னும் ஒரு பொருள்மேல் அடுக்கிவந்த பல பெயர்கள். 'ஏகவாளி பாய, நூறுகோடி பொன்றும்' என இராம பாணத்தின் பேராற்றலைப் புலப்படுத்தியவாறு காண்க. ஏகவாளி – ஓரம்பு. (95)

9531 ஆழி பெற்ற தேர ழுந்து
மாள ழுந்து மாளொடும்
சூழி பெற்ற மாவ ழுந்தும்
வாசி யுஞ்சு ரிக்குமால்
பூழி பெற்ற வெங்க ளங்கு
ளம்ப டப்பொ ழிந்துபே
ரூழி பெற்ற வாழி யன்ன
சோரி நீரி னுள்ளரோ.

ஆழி பெற்ற தேர் அழுந்தும்;
ஆள் அழுந்தும், ஆளொடும்
சூழி பெற்ற மா அழுந்தும்;
வாசியும் சுரிக்குமால்—

பூழி பெற்ற வெங்களம்
குளம்படப் பொழிந்த பேர்
ஊழி பெற்ற ஆழி அன்ன
சோரி நீரினுள் அரோ.

பொ:- புழுதி பெற்ற வெவ்விய போர்க்களம் குளமாந் தன்மை யடையச் சொரிந்த பேரூழிக் காலத்து உண்டாகிய கடல் போன்ற குருதி வெள்ளத்தினுள்ளே சக்கரங்களை யுடைய தேர்கள் அழுந்தின; காலாட் படை யழுந்தின; ஆட்களுடன் முகபடாத்தை யுடைய யானைகள் அழுந்தின; குதிரைகளும் சுழிப்பட்டு அழுந்தின.

கு:- ஆழி—சக்கரம். ஆள்—காலாட் படை. ஆழி பெற்ற மா என்றது யானையினை. பூதி—புழுதி. அரோ, அசை. (96)

9531 a இன்னவா றிராம னெய்து சேனைவெள்ளம் யாவையும்
சின்ன பின்ன மாக நீறு செய்தல் கண்டு திருகியே
மின்னுவா ளரக்கர் வெள்ளம் எண்ணில்கோடி வெய்தினின்
றுன்னி மூடு மந்தகாரம் என்னவந்து சுற்றினர்.

b வானின்மீ தனந்த கோடி மாய வஞ்சர் மண்டினர்
ஆனை மீதனந்த கோடி யடலரக்க ரண்மினர்
சோனைமேக மொத்தனந்த கோடி தீயர் சுற்றினர்
மீன வேலை யொத்தனந்த கோடி வஞ்சர் மேவினர்.

9532 அற்று மேலெ ழுந்த வன்சி
ரங்க டம்மை யண்மிமேல்
ஒற்று மென்ன வங்கு மிங்கும்
விண்ணுளோ ரொதுங்குவார்
சுற்றும் வீழ்த லைக்கு லங்கள்
சொல்லு கல்லின் மாரிபோல்
எற்று மென்று பாரி னெங்கும்
வாழுவா ரிரங்குவார்.

அற்று மேல் எழுந்த வன்
சிரங்கள் தம்மை அண்மி, மேல்
ஒற்றும் என்ன அங்கும் இங்கும்
விண்ணுளோர் ஒதுங்குவார்;

'சுற்றும் வீழ் தலைக் குலங்கள்
சொல்லு கல்லின் மாரிபோல்
எற்றும்' என்றும், பாரின் எங்கும்
வாழுவார் இரங்குவார்.

பொ:- (இராமனது அம்பினால்) அறுபட்டு மேலே சென்ற (அரக்கருடைய) வலிய தலைகள் தம்மை நெருங்கித் தம் உடம்பின் மேல் தீண்டுவன என்று அஞ்சி வானிடத்தே யுள்ள தேவர்கள் அங்கும் இங்கும் ஒதுங்கிச் செல்வாராயினர். சுற்றிலும் வீழ்கின்ற தலைத் தொகுதிகள் சொல்லப்படும் கல் மழையைப் போன்று (தம்மைத்) தாக்கும் என்று எண்ணி பூமியில் எவ்விடத்தும் வாழ்பவர்கள் வருந்து வாராயினர்.

கு:- இராம பாணத்தால் துண்டிக்கப்பட்டு வானத்திலும் மண்ணிலும் சென்று வீழும் அரக்கர் தலைகளைக் கண்டு வானோரும் மண்ணோரும் அஞ்சி நடுங்கினர் என்பதாம். ஒற்றுதல்—தீண்டுதல். எற்றுதல்—தாக்குதல். (97)

9533 மழைத்த மேகம் வீழ்வ தென்ன
வான மானம் வாடையின்
சுழித்து வந்து வீழ்வ தென்ன
மண்ணின் மீது துன்னுமால்
அழித்தொ டுங்கு கால மாரி
யன்ன வாளி யொளியால்
விழித்தெ ழுந்து வானி னூடு
மொய்த்த பொய்யர் மெய்யெலாம்,

மழைத்த மேகம் வீழ்வது என்ன,
வான மானம் வாடையின்
சுழித்து வந்து வீழ்வது என்ன,
மண்ணின்மீது துன்னுமால்—
அழித்து ஒடுங்கு கால மாரி
அன்ன வாளி ஒளியால்,
விழித்து எழுந்து, வானினூடு
மொய்த்த பொய்யர் மெய் எலாம்.

பொ:- (உயிர்களை யெல்லாம்) அழித்து (உலகம்) ஒடுங்குதற்குக் காரணமா யமைந்த ஊழிக் காலத்துப் பெரு மழையினை ஒத்த (இராம

பிரான் சொரிந்த) அம்புகளின் தொகுதியால் (தாக்கப்பட்டுச்) செய்வ தறியாது விழித்து மேற்சென்று ஆகாயத்தின்கண் நெருங்கிய பொய்ம்மையாளராகிய அரக்கருடைய உடல்கள் யாவும், மழை பொழியுந் தன்மையைக் கொண்ட கருமேகங்கள் வீழ்வன போலவும், வானிடத்தே செல்லும் விமானங்கள் கடுங் காற்றுற் சுழித்தடிக்கப் பட்டு வந்து வீழ்வன போலவும் மண்ணின் மீது நெருங்கி வீழ்ந்தன.

கு:- மழைத்த—மழை பெய்யுந் தன்மையை யுடைய; மழை என்னும் பெயரடியாகப் பிறந்த குறிப்பு வினைப் பெயரெச்சம். வானி டத்தே மொய்த்த பொய்யர் மெய்யெலாம், மழைத்த மேகம் வீழ்வ என்ன வான மானம் வாடையிற் சுழித்து வந்து வீழ்வ என்ன மண் ணின் மீது துன்னும் என முடியும். பொய்யர் என்றது பொய்ம்மை யாளராகிய அரக்கர்களை. மானம்—விமானம்; முதற்குறை. வாடை— கடுங்காற்று. துன்னும்—நெருங்கும். வாளி ஒளி—அம்பின் தொகுதி.

### அரக்கர்கள் கடும் போர் புரிதல்

9534 ★

தெய்வ நெடும் படைக்கலங்கள் விடுவர்சிலர்
சுடுகணைகள் சிலையிற் கோலி
எய்வர்சில ரெறிவர்சில ரெற்றுவர்சுற்
றுவர்மலைகள் பலவு மேந்திப்
பெய்வர்சிலர் பிடித்துமெனக் கடுத்துறுவர்
படைக்கலங்கள் பெருது வாயால்
வைவர்சிலர் தெழிப்பர்சிலர் வருவர்சிலர்
திரிவர்சிலர் வயவர் மன்னே.

*தெய்வ நெடும் படைக் கலங்கள் விடுவர்சிலர்;*
*சுடுகணைகள் சிலையில் கோலி,*
*எய்வர் சிலர்; எறிவர் சிலர்;*
*எற்றுவர், மலைகள் பலவும் ஏந்திப்*
*பெய்வர் சிலர்; 'பிடித்தும்' எனக் கடுத்து உறுவர்;*
*படைக்கலங்கள் பெருது, வாயால்,*
*வைவர் சிலர்; தெழிப்பர் சிலர்;*
*திரிவர் சிலர்—வயவர் மன்னே.*

பொ:- (அரக்க) வீரர்களிற் சிலர், தெய்வத் தன்மை யுடைய நீண்ட ஆயுதங்களை (இராமன் மேற்) செலுத்துவர்; சிலர், சுட்டெரிக்

குந்தன்மைய வாகிய அம்புகளை வில்லிற் பொருத்தி வளைத்து எய்வர்; சிலர், (எறிதற்குரிய படைகளை) வீசி எறிவர்; சிலர் மலைகள் பலவற்றையும் ஏற்றிச் சுற்றித் தாக்கு பவராகிப் பொழிவர்; (இராமனை வளைத்துப்) பிடிப்போம் என்று விரைந்து அணுகுவர்; சிலர் (இராமன் எய்தற்குரிய) ஆயுதங்களைப் பெருது, வாயினுல் (அவனை) வைதுரைப்பர்; சிலர் அதட்டுவர்; சிலர் எதிர்த்து வருவர்; சிலர் (பரபரப்புடையராகி எவ்விடத்தும்) திரிவர்.

கு:- தம் சேனையினை அம்பு எய்து கொல்லும் இராமனை எதிர்த்து அரக்கர்கள் மேற்கொண்ட செயல்களை விரித்துரைக்கும் முறையில் அமைந்தன இதுவும் அடுத்த செய்யுளும். வயவர் சிலர் என இயையும். மன் ஓ என்பன அசை. (99)

**9535** ஆர்ப்பர்பல ரடர்ப்பர்பல ரடுத்தடுத்தே
படைக்கலங்க ளள்ளி யள்ளித்
தூர்ப்பர்பலர் மூவிலைவே றுரப்பர்பலர்
கரப்பர்பலர் சுடுதீத் தோன்றப்
பார்ப்பர்பலர் நெடுவரையைப் பறிப்பர்பலர்
பகலோனைப் பற்றிச் சுற்றுங்
கார்ப்பருவ மேகமென வேகநெடும்
படையரக்கர் கணிப்பி லாதார்.

ஆர்ப்பர் பலர்; அடர்ப்பர் பலர்; அடுத்து அடுத்தே
படைக் கலங்கள் அள்ளி அள்ளித்
தூர்ப்பர் பலர்; மூவிலைவேல் துரப்பர் பலர்;
கரப்பர் பலர்; சுடுதீத் தோன்றப்
பார்ப்பர் பலர்; நெடு வரையைப் பறிப்பர் பலர்;
பகலோனைப் பற்றிச் சுற்றும்
கார்ப் பருவ மேகம் என, வேக நெடும்
படை அரக்கர் கணிப்பு இலாதார்.

பொ:- பகல் செய்வானுகிய சூரியனைத் தொடர்ந்து சூழ்ந்து மறைக்கும் கார்காலத்து மேகங்களைப் போல, விரைந்து தாக்கும் நீண்ட படைக் கலங்களையுடைய எண்ணிலாதவராகிய அரக்கர்களில் பலர், (இராமனை எதிர்த்துப்) போர் ஆரவாரஞ் செய்வர்; பலர் பொருதற்கு நெருங்குவர்; பலர் அடுத்தடுத்து ஆயுதங்களை அள்ளிச் சொரிந்து நிரப்புவர்; பலர், மூவிலைச் சூலத்தைச் செலுத்துவர்; பலர்,

(தம் மீது இராமபாணம் படாதபடி) மறைந்திடுவர்; பலர், (தம் கண்களில்) வெவ்விய நெருப்பு வெளிப்பட (இராமனை வெகுண்டு) நோக்குவர்; பலர், (இராமன் மேல் எறிதற்கு) நெடிய மலைகளைப் பறித் தெடுப்பர்.

கு:- பகலோன்—பகற் பொழுதினைச் செய்வோன்; சூரியன். 'பகல் செய்வான்' (கானல்வரி) என்றார் இளங்கோவடிகளும். தனி யனாய் நின்ற இராமனைச் சூழ்ந்து மறைத்துக்கொண்ட கருமேனியின அராகிய ரக்கர்களுக்கு ஞாயிற்றை மறைத்துச் சூழ்ந்த கார்ப்பருவ மேகம் உவமை. கணிப்பு இலாதார்—எண்ணில்லாதவர்கள். (100)

## இராமன் அரக்கர் படைகளை வென்று மேம்படுதல்

**9536** எறிந்தனவு மெய்தனவு மெடுத்தனவும்
பிடித்தனவும் படைக ளெல்லாம்
முறிந்தனவெங் கணைகள்பட முற்றினசுற்
றினதேரு மூரி மாவும்
நெறிந்தனகுஞ் சிகளோடு நெடுந்தலைக
ளுருண்டனபே ரிருளி னீங்கிப்
பிரிந்தன்னவெய் யவனென்னப் பெயர்ந்தனன்மீ
துயர்ந்ததடம் பெரிய தோளான்.

*எறிந்தனவும், எய்தனவும், எடுத்தனவும்,*
*பிடித்தனவும், படைகள் எல்லாம்*
*முறிந்தன, வெங்கணைகள்பட; முற்றின,*
*சுற்றின தேரும், மூரிமாவும்;*
*நெறிந்தன குஞ்சிகளோடும் நெடுந்தலைகள்*
*உருண்டன; பேர் இருளின் நீங்கி,*
*பிறிந்தனன் வெய்யவன் என்னப் பெயர்ந்தனன்—மீது*
*உயர்ந்த தடம் பெரிய தோளான்.*

பொ:- (அரக்கர்கள்) எறிந்தவைகளும் எய்தவைகளும் (மீளவும் விடுதற்கு) எடுத்தவைகளும் (கையிற்) பிடித்தவைகளும் ஆகிய படைக் கலங்கள் யாவும், (இராமன் ஏவிய) வெம்மைமிக்க அம்புகள் படுத லால் முறிந்தன; (இராமனைச்) சூழ்ந்து வளைத்துக்கொண்ட தேர்களும் வலிய யானைகளும் அழிந்தன; நெறிப்புற்ற மயிர் முடியுடனே (அரக்க ருடைய) நெடிய தலைகள் (அறுபட்டுத் தரையில்) உருண்டன. மேல்

உயர்ந்து வளர்ந்து நீண்ட பெரிய தோள்களையுடையவனாகிய இராமன், வெம்மையுடைய கதிரவன் பேரிருளினின்றும் நீங்கினன் என்னும்படி. (அவ் வரக்கர் கூட்டத்தை நீங்கி) வெளிப்பட்டுத் தோன்றினன்.

கு:- எறிந்தன என்றது, அணுகி நின்று வீசியனவாகிய வேல் சூலம் முதலியவற்றை. எய்தன என்றது வில் நாணில் தொடுத்த எய்யப்பட்டனவாகிய அம்புகளை. மூரிமா என்றது, வலிமிக்க விலங்காகிய யானையினை. வெய்யவன் பேரிருளின் நீங்கிப் பிரிந்தனன் என்ன, மீதுயர்ந்த தடம் பெரிய தோளான் பெயர்ந்தனன் என்க. (101)

சுவடி 52-ல் கீழ்க்கண்ட பாடல் காணப்படுகிறது.

9536 அ அடல் வார்சிலை யமலன் சொரி கனல் வெங்கணை கதுவி
தொடர் போர்வய நிருதக்கடல் கவரும்படி பருக
படுமா றயல் வருதீயவர் பலகோடியர் பலரும்
சுடரேறிய படைமாரிகள் சொரிந்தார்புடை வளைந்தார்.

## இராமபாணத்தின் செயல்

**9537** சொல்லறுக்கும் வலியரக்கர் தொடுகவசந்
துகள்படுக்குந் துணிக்கும் யாக்கை
வில்லறுக்குந் தலையறுக்கு மிடலறுக்கு
மடலறுக்கு மேன்மேல் வீசும்
கல்லறுக்கு மரமறுக்குங் கையறுக்குஞ்
செரியமள்ளர் கமலத் தோடு
நெல்லறுக்குந் திருநாட னெடுஞ்சரமென்
றாலெவர்க்கு நிற்க லாமோ.

சொல் அறுக்கும் வலிஅரக்கர், தொடுகவசம்
துகள்படுக்கும்; துணிக்கும் யாக்கை;
வில் அறுக்கும்; தலை அறுக்கும்; மிடல்அறுக்கும்;
அடல் அறுக்கும்; மேல் மேல் வீசும்
கல் அறுக்கும்: மரம் அறுக்கும்; கை அறுக்கும்;
கமலத்தோடு செய்ய மள்ளர்
நெல் அறுக்கும் திருநாடன் நெடுஞ்சரம் என்றால்,
எவர்க்கும் நிற்கலாமோ?

பொ:- உழவர்கள் வயலிடத்தே யுள்ள தாமரைகளுடன் நெற் கதிர்களை அரியும் செல்வ வளம் பொருந்திய (கோசல்) நாட்டினையுடை யானாகிய இராமன் ஏவிய அம்பு, சொல்லவொண்ணாத வன்மை யுடைய அரக்கர்கள் பூண்ட கவசத்தினைப் பொடியாக்கும்; (அவர்தம்) உடம்பினைத் துண்டிக்கும்; வில்லினைத் துண்டிக்கும்; தலைகளை அறுத் துத் தள்ளும்; வலிமையை ஒழிக்கும்; போர்த் திறமையை அழிக்கும்; (அன்னோர்) மேன்மேல் எடுத்து வீசும் மலைகளைப் பிளக்கும்; மரத் தினைத் துண்டிக்கும்; (அவற்றைத் தாங்கிய) கைகளை யறுக்கும் என்றால், எவர்க்காயினும் (அவ் இராமபாணத்தை) எதிர்த்து நிற்க இயலுமோ?

கு:- சொல் அறுக்கும் வலி—சொல்லால் எடுத்துரைக்க ஒண்ணாத பெருவன்மை; மந்திரமாகிய ஆணைச் சொல்லின் ஆற்றலைத் தடுக்கும் வன்மை எனினும் அமையும். மள்ளர், செய்ய கமலத்தோடு நெல்லறுக்கும் திருநாடன் என்றது, மருத வளமிக்க கோசல நாட் டுக்கு மன்னனாகிய இராமபிரானை. மள்ளர்—உழவர். நெடுஞ்சரம்— நீண்ட அம்பு. நெடுஞ்சரம், கவசம் துகள்படுக்கும் யாக்கை துணிக் கும், வில் அறுக்கும். .கை அறுக்கும் என்றால், எவர்க்கும் நிற்கலாமோ என இயையும். ஓகாரம், எதிர்மறை. இது, சொற்பொருட் பின் வருநிலை என்னும் அணி.

சுவடி 52-ல் கீழ்க்கண்ட பாடல் காணப்படுகின்றது.

9537 a கோல் பொத்திய நெடுநாணினில்
கோமான் தொடை நெகிழ
மேல் பொத்திய நிருதக் குலம்
வேலேடுடன் விளிய
தோல் பொத்திய வுயிர் யாவையும்
தொடக்கத்துடன் மடிய
கால் பொத்திய கையொத்தன
காகுத்தன் வெங்கணை யால்.

## கவிக்கூற்று

9538 காலிழந்தும் வாலிழந்துங் கையிழந்துங்
கருத்திழந்தும் பருமக்கட்டின்
மேலிழந்தும் மருப்பிழந்தும் விழுந்தனவென்
குநரல்லால் வேலை யன்ன

மாலிழந்து மழையனைய மதமிழந்து
வலியிழந்து மலைபோல் வந்த
தோலிழந்த தொழிலொன் றுஞ் சொல்லினு
ரில்லைநெடுஞ் சுரர்க ளெல்லாம்.

'கால் இழந்தும், வாம் இழந்தும், கை இழந்தும்,
கழுத்து இழந்தும், பருமக் கட்டின்
மேல் இழந்தும், மருப்பு இழந்தும் விழுந்தன,
என்குநர் அல்லால், வேலை அன்ன
மால் இழந்து, மழை அனைய மதம் இழந்து,
வலி இழந்து, மலைபோல் வந்த
தோல் இழந்த தொழில் ஒன்றும் சொல்லினர்
இல்லை—நெடுஞ் சுரர்கள் எல்லாம்.

பொ:- பெருமைபெற்ற தேவர்கள் எல்லோரும், 'மலை போல் வந்த யானைகள், (இராமபாணத்தால்) கால்களை இழந்தும் வாலை இழந்தும் கையினை இழந்தும் கழுத்தினை இழந்தும் தம் மீதுள்ள தவிசாகிய அம்பாரியினை இழந்தும் தந்தங்களை இழந்தும் வீழ்ந்தன' என்று கூறுகின்றார்களே யன்றி, 'அவ்யானைகள் (இராமபாணம் பட்ட அளவில்) கடலை யொத்த மதக்களிப்பினை இழந்து, மழையினை யொத்தும் மதநீர் வற்றி (மனத்திலுள்ள) வெகுளியினை நீங்கிச் செயல் இழந்த தன்மையினைச் சிறிதும் அறிந்து கூறினார்களில்லை.

கு:- நெடுஞ்சுரர்கள் எல்லாம், 'மலை போல் வந்த தோல், கால் இழந்தும்...மருப்பு இழந்தும் விழுந்தன' என்குநர் அல்லால், 'வேலை அன்ன மால் இழந்து, மதம் இழந்து, கதம் இழந்து தொழில் இழந்த ஒன்றும் சொல்லினர் இல்லை' என இயைத்துரைக்க. தோல்—யானை. இராமபாணத்தால் யானைகள் துணிபட்டு வீழ்ந்தமை கூறிய தேவர்களும் தமக்குக் கட்புலனாகிய யானையின் உடலழிவின் விரித்துக் கூறியதன்றி, அவ்யானைகளின் மறவுணர்வாகிய வீரம் விரைவில் அழிந்த செய்தியினைச் சிறிதும் உய்த்துணர்ந்து கூறினாரல்லர் என்பதாம். (103)

பலகோடிகளாய் வந்த நால்வகைச் சேனையும்
இராமன் ஒருவனாகவே பொருது வெல்லுதல்

9539 வேல் செல்வன சதகோடிகள்
விண்மேனிமிர் விசிகக்

கோல் செல்வன சதகோடிகள்
கொலை செய்வன மலையத்

தோல் செல்வன சதகோடிக
டுரகந்தொட ரிரதக்
கால் செல்வன சதகோடிக
ளொரு வன்னவை கடிவான்.

வேல் செல்வன சத கோடிகள்;
விண்மேல் நிமிர் விசிகக்
கோல் செல்வன சதகோடிகள்;
கொலை செய்வன மலைய,
தோல் செல்வன சதகோடிகள்;
துரகம் தொடர் இரதக்
கால் செல்வன சதகோடிகள்;
ஒருவன், அவை கடிவான்.

பொ:- (அரக்கர்களால் எய்யப்பட்டு இராமன் மேற்) செல்வன வாகிய வேல்கள் நூறு கோடி அளவின; வானத்தின் மேல் நிமிர்ந்து செல்வனவாகிய விசிகம் என்னும் அம்புகள் நூறுகோடி அளவின; கொல்லுந் தொழிலைச் செய்வனவாய்ப் பொருதற்குச் செல்வனவாகிய யானைகள் நூறுகோடி அளவின; குதிரைகள் பூட்டப் பெற்றுத் தொடரும் தேர்க்கால்கள் செல்வன நூறுகோடி அளவின; (இராமன்) ஒருவனே அவை எல்லாவற்றையும் (தன் அம்பினால்) விலக்கி நீக்கு வானாயினான்.

கு:- சதம்—நூறு. கோல்—அம்பு. மலைதல்—பொருதல். தோல்-யானை. துரகம்—குதிரை. கடிதல்—விலக்குதல். (104)

இச் செய்யுளுக்குப்பின் 41 என்னும் குறியீடுள்ள அச்சுப்புத்தகத்தில் பின்வரும் செய்யுள் மிகைப் பாடலாகக் காட்டப் பெற்றுள்ளது:-

9539 a கோல் பொத்திய நெடுநாணினிற் கோமான் தொடை நெகிழ
மேல் பொத்திய நிருதக் குலம் வேரோடுடன் விளியத்
தோல் பொத்திய வுயிர்யாவையும் தொடக்கற்றுடன் மடியக்
கால் பொத்திய கையொத்தன காகுத்தன் வெங் கணையால்.

9540 ஒருவில்லியை யொருகாலையி
னுலகேழையு முடற்றும்
பெருவில்லிகண் முடிவில்லவர்
சரமாமழை பெய்வார்

பொருவில்லவர் கணைமாரிகள்
பொடி யாம்வகை பொழியத்
திருவில்லிக டலைபோய் நெடு
மலைபோலுடன் சிதைவார்.

ஒரு வில்லியை, ஒரு காலையின், உலகு ஏழையும் உடற்றும்
பெரு வில்லிகள், முடிவு இல்லவர், சரமாமழை பெய்வார்:
பொரு வில்லவர் கணை மாரிகள் பொடியாம் வகை பொழிய,
திருவில்லிகள் தலைபோய் நெடுமலைபோல் உடல் சிதைவார்.

பொ:- ஏழுலகங்களையும் வருத்துகின்ற பெரிய வில் வீரர்களாகிய முடிவில்லாத அரக்கர்கள், (இராமனாகிய) ஒரு வில் வீரனைக் குறித்து ஒரே சமயத்தில் அம்பாகிய பெருமழையைச் சொரிவார்கள்; பொருதற் றொழிலையுடைய வில் வீரர்களாகிய அவர்களுடைய அம்பு மழைகள் பொடிபட்டுச் சிதறும்படி (இராமன் அம்புகளைச்) சொரிதலால், நற்பேறில்லாத அரக்கர்கள் தலையறுபட்டு நெடியமலை போன்று உடல் சிதைந்து விழுவார்கள்.

கு:- ஒரு வில்லி—ஒரு வில் வீரன்; என்றது, வில்லேந்தி ஒருவனாய் நின்ற இராமனை. உலகு ஏழையும் உடற்றும் பெரு வில்லிகள், முடிவில்லவர், பொரு வில்லவர், திருவில்லிகள் என்றது அரக்கர்களை. திருவிலிகள் எனற்பாலது சந்தவின்பங் குறித்துத் திருவில்லிகள் என ஒற்று மிக்கது. திருவிலிகள்—நற்பேறு (பாக்கியம்) இல்லாதவர்கள்.

**9541** நூறுயிர மதயானையின் வலியோரென நுவல்வோர்
மாறுயின ரொருகோல்பட மலைபோலுடன் மறிவார்
ஆறுயிர முளவாகுவ வழிசெம்புன லவைபுக்
கேறுதெறி கடல் பாய்வன சினமால்கரி யினமால்.

'நூறுயிர மதயானையின் வலியோர்' என நுவல்வோர்,
மாறு ஆயினர், ஒரு கோல் பட, மலைபோல உடல் மறிவார்;
ஆறு ஆயிரம் உள ஆகுவ அழி செம்புனல்; அவைபுக்கு
ஏறுது எறிகடல் டாய்வன, சின மால் கரி இனமால்.

பொ:- மதம் பொருந்திய நூறு யானைகளின் வலியினையுடையவர் என்று கூறத்தக்கவராகிய அரக்கர் (இராமனது) ஓரம்பு அளவில்

(தம் வன்மை நிலை) மாறுபட்டவராய் (உயிர் நீங்கி) மலை போல் உடம்பு விழப் பெற்றனர். (அவர்களது உடம்பு) அழிதலால் உண்டாகிய சிவந்த இரத்த ஆறுகள் ஆயிரக்கணக்கினவாகப் பெருகித் தோன்றின. வெகுளியும் மதக்களிப்பு முடைய யானைக் கூட்டங்கள் அவ் ஆறுகளிலே புகுந்து (நீந்திக்) கரையேற மாட்டாது அலைகள் மறியும் கடலிற் பாய்வன வாயின.

கு:- மூலச் சேனையிலுள்ள அரக்கர் ஒவ்வொருவரும் இட்சம் யானைகளின் வலியனைத்தையும் ஒரு சேரப் பெற்றவர்கள் என்பார் 'நூறாயிர மத யானையின் வலியோர்' என்றார். என நுவல்வோர்—என்று கூறத்தக்கவர்; ஒரு கோல்பட மாறாயினர் என்க. ஒருகோல்-ஓரம்பு. மாறுதல்—முன்னைய வன்மை நிலையின் நீங்கி மெலிதல். அழி செம்புனல் ஆறு ஆயிரம் உள வாகுவ; சினமால்கரி அவைபுக்கு ஏறாது எறிகடல் பாய்வன என்க. (106)

**9542** மழுவற்றுகு மலையிற்றுகும்
வளையற்றுகும் வயிரத்
தெழுவற்றுகு மிலையற்றுகு
மயிலற்றுகு மெறிவேல்
பழுவற்றுகு மதவெங்கரி
பரியற்றுகு மிரதக்
குழுவற்றுகு மொருவெங்கணை
தொடைபெற்றதோர் குறியால்.

மழு அற்று உகும்; மலை அற்று உகும்
வளை அற்று உகும், வயிரத்து
எழு அற்று உகும் இலை அற்று உகும்
அயில் அற்று உகும் எறிவேல்
பழு அற்று உகும், மத வெங் கரி;
பரி அற்று உகும்; இரதக்
குழு அற்று உகும்;—ஒரு வெங்கணை
தொடை பெற்றது ஓர் குறியால்.

பொ;- (இராமன் எய்த) ஒப்பற்ற வெம்மை மிக்க அம்பானது (தான்) தொடுக்கப் பெற்றதாகிய ஒரு குறியால், (அரக்கர் வீசிய) மழுப்படை அறுபட்டுச் சிதறும்; மலை பொடிபட்டுச் சிதறும்; வளை அறுபட்டுச் சிதறும்; திண்ணிய எழு என்னும் படை துணிக்கப்பட்டுச்

சிதறும்; மதமுடைய கொடிய யானை விலா வெலும்பு முறிந்து விழும்; தேர்த் தொகுதிகள் துணிபட்டுச் சிதறும்.

கு:- ஒரு வெங்கணை தொடை பெற்றது ஓர் குறியால், மழு அற்று உகும்......இரதக் குழு அற்று உகும் என முடியும். இராமன் தனது வில்லில் ஒரு முறை தொடுத்து ஏவிய ஒரே இலக்கினால் அரக்கர் வீசிய மழு வளை எழு வேல் ஆகிய படைக் கலங்கள் யாவும் துண்டிக்கப் பட்டுச் சிந்தின; யானைகள் விலா வெலும்பு முறிந்து வீழ்ந்தன; குதிரைகள் உடல் துண்டிக்கப்பட்டு இறந்தன; தேர்த் தொகுதிகள் சிதைந்து பொடியாயின என்பதாம். (107)

### அரக்கர் பலரும் போரில் இறத்தல்

**9543** ஒருகாலையி னுலகத்துறு
முயிர்யாவையு முண்ண
வருகாலனு மவன்றூதரு
நமன்றானுமவ் வரைப்பின்
இருகாலுடை யவர்யாவருந்
திரிந்தாரிளைத் திருந்தார்
அருகாயிர முயிர்கொண்டுத
மாறேகல ரயர்ந்தார்.

ஒருகாலையின், உலகத்து உறும்
உயிர் யாவையும் உண்ண
வருகாலனும், அவன் தூதரும்,
நமன்தானும், அவ் வரைப்பின்
இரு கால் உடையவர் யாவரும்
திரிந்தார் இளைத்திருந்தார்;
அருகு ஆயிரம் உயிர் கொண்டு தம்
ஆறு ஏகலர் அயர்ந்தார்.

பொ:- உலகத்திலே பொருந்திய உயிர்கள் எல்லாவற்றையும் ஒரு காலத்திலே உண்ணும் வன்மையுடன் வருகின்ற கூற்றுவனும் அவனுடைய தூதர்களும் (அவர்களை ஏவல் கொள்ளும் தரும ராசனாகிய) இயமனும் ஆகிய யாவரும் அப் போர்க் களத்தின் இரு கால் களையுடையவராய் (எங்கும் ஓடித்) திரிந்தாராகி இளைப்புற்று (த் தம்)

அருகில் (இறந்து வீழ்ந்துள்ள) ஆயிரக் கணக்கினவாகிய உயிர்களைக் கவர்ந்து கொண்டு தம் வழியிற் (திரும்பிச்) செல்ல முடியாதவர்களாகி (மனந்) தளர்வுற்றனர்.

கு:- காலன்—உயிர்களது விதியின் வழி நின்று காலம் பார்த்து வந்து உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் கூற்றுவன். தூதர்-கூற்றுவனுடைய பணியாளர். நான்—கூற்றுவனை ஏவி உயிர் கவரும் கடமை மேற் கொண்ட இயமன். கூற்றுவன் வேறு இயமன் வேறு என்பது,

'சாற்று நாளற்ற தென்று தருமராசற் காய்வந்த
கூற்றினைக் குமைப்பர் போலும்' (4-49-2)

எனவரும் அப்பரடிகள் வாய் மொழியாலும், 'தருமனும் மடங்கலும்' (பரிபாடல் ந. 8) எனவரும் தொடர்க்கு, 'தருமன்—யமன். மடங்கல்-அவன் ஏவல் செய்யும் கூற்றம்' எனப் பரிமேலழகர் எழுதிய உரை விளக்கத்தாலும் இனிது புலனும். அயர்தல்-மனஞ் சோர்ந்து தளர்தல். இராமனது அம்பினுற் போர்க் களத்திற் பட்டு வீழ்ந்த எண்ணில்லாத அரக்கர் உயிர்களைக் கவர்தற்கு வந்த கூற்றுவனும் தூதரும் இயமனும் தம் இரு கால்களால் எங்கும் ஓடித் திரிந்து இளைப்புற்றவராய்த் தம் அருகே பட்டு வீழ்ந்த ஆயிரக்கணக்கினராகிய உயிர்களை மட்டும் கவர்ந்து கொண்டு, தாம் வந்த வழியே திரும்பிச் செல்ல மாட்டாதவர்களாய் இளைப்புற்றிருந்து மனந்தளர் வுற்றனர் என்பதாம். (108)

சுவடி 52ல் கீழ்க்கண்ட பாடல்கள் காணப்படுகின்றன.

9543 a அதுபோ தகல் வானில் மறைந்தருமாயை செய்யரக்கர்,
எதுபோதினு மழிவற்றவர் இருள் வானுற மூடி
சதகோடிகள் கணைமாரிகள் தானெங்கிலும் நிறைத்தார்,
சதுமாமறை யமலனவை கடிந்தான் றழற்படையால்

b அமலன்விடு மனல் வெம்படை யடுவெம் பொறிசிதறி
திமிலங் கொடு ககனம் செறி திறல் வஞ்சகர் புரியும்
பிமரங்கெட வவர்தம் முடல் பிளவுண்டுயி ரழிய,
அமரம்புகு மளவில்லவர் தமைவென்ற தோர் நொடியின்.

போர்க்களத்தில் கவந்தங்கள் எழுந்து ஆடுதல்

9544 அடுக்குற்றன மதயானையு
மழிதேர்களும் பரியும்
தொடுக்குற்றன விசும்பூடுறச்
சுமந்தோங்கின வெனினும்

மிடுக்குற்றன கவந்தக்குல
மெழுந்தாடலி னெல்லாம்
நடுக்குற்றன பிணக்குன்றுக
ளுயிர் நண்ணின வென்ன.

அடுக்குற்றன, மதயானையும்,
அழிதேர்களும், பரியும்
தொடுக்குற்றன விசும்பூடு உறச்
சுமந்து ஓங்கின எனினும்,
மிடுக்குற்றன கவந்தக்குலம்
எழுந்து ஆடலின் எல்லாம்
நடுக்குற்றன, பிணக் குன்றுகள்,
உயிர் நண்ணின என்ன.

பொ:- அடுக்காக வீழ்ந்த மதயானைகளும் அழிந்து சிதைந்த தேர்களும் குதிரைகளும் (ஒன்றன்மேலொன்று) தொடுத்தலைப் பொருந்தியனவாய் வானத்தின்கண் மிகுதியாகச் சுமந்து மோலாங்கினவாயினும், வன்மை மிக்கனவாகிய கவந்தத் தொகுதிகள் எழுந்து ஆடுதலால், பிணக்குவியல்கள் (மீண்டும்) உயிர்பெற் றெழுந்தன என்று எல்லாவுயிர்களும் நடுக்க மடைந்தன.

கு:- கவந்தம்—தலையற்ற உடம்பு. எண்ணில்லாத அரக்கர் இறந்துபட்டமையாற் போர்க்களத்திற் கவந்தங்கள் பல ஆடுதலைக் கண்டு அரக்கர் பிணங்கள் எல்லாம் உயிர்பெற்றெழுந்தனவோ என்று ஏனைய உயிர்கள் யாவும் அஞ்சி நடுங்கின என்பதாம். மிடுக் குற்றன கவந்தக்குலம் எழுந்து ஆடலின், 'பிணக்குன்றுகள் உயிர் நண்ணின' என்ன எல்லாம் நடுக்குற்றன என்க. (109)

பகைவரது உடற்குருதி தன் திருமேனியிற் படியப்
பொருதுநின்ற இராமனது தோற்றம்

9545 பட்டாருடற் படுசெம்புன
றிருமேனியிற் படலால்
கட்டார்சிலைக் கருஞாயிறு
புரைவான்கடை யுகநாள்

சுட்டாசறுத் துலகுண்ணுமச்
சுடரோனெனப் பொலிந்தான்
ஒட்டாருடற் குருதிக்குளித்
தெழுந்தானையு மொத்தான்.

பட்டார் உடல்படு செம்புனல்
திருமேனியில் படலால்,
கட்டு ஆர் சிலைக் கரு ஞாயிறு
புரைவான், கடையுகநாள்,
சுட்டு ஆசு அறுத்து உலகு உண்ணும் அச்
சுடரோன் எனப் பொலிந்தான்;
ஒட்டார் உடல் குருதி குளித்து
எழுந்தானையும் ஒத்தான்.

பொ:- கட்டமைந்த வரிவில்லையேந்திய கருமைநிறம் வாய்ந்த கதிரவனை யொத்த இராமன், இறந்த அரக்கர்களுடைய உடம்பினின்று வெளிப்பட்ட செங்குருதி நீர் (தன் திருமேனியிற் படுதலால் ஊழி முடிவாகிய கடைநாளில் உலகங்கள் எல்லாவற்றையும் சுட்டு நீருக்கிப் பற்றறத் தன்னுட் கொள்ளும் அந்த (ஊழிக்காலத்து)க் கதிரவனைப் போன்று பொலிவுற்று விளங்கினுன்; பகைவருடைய உடம்பினின்று வெளிப்பட்ட குருதி வெள்ளத்தினுள்ளே மூழ்கி யெழுந்தவனையும் ஒத்துத் தோன்றினுன்.

கு:- கட்டு ஆர்சிலைக் கரு ஞாயிறு புரைவான் என்றது கட்டமைந்த வரிவில்லை யேந்திய கரிய ஒளிமிக்க திருமேனியை யுடைய இராமனை. செஞ்ஞாயிறன்றிக் கருஞாயிறு என்பதொன்று எங்கும் இல்லாமையால், கருஞாயிறு புரைவான் என்றது இல்பொருளுவமை. புரைதல்—ஒத்தல். கருஞாயிறு புரைவான், பட்டார் உடற்படு செம் புனல் திருமேனியிற் படலால், யுகக் கடைநாள் சுட்டு ஆசறுத்து உலகு உண்ணும் அச்சுடரோன் எனப் பொலிந்தான்; ஒட்டார் உடற்குருதிக் குளித்து எழுந்தானையும் ஒத்தான் என்க. இஃது ஏதுவுவமை. உலகு உண்ணும் அச்சுடரோன் என்றது, ஊழி முடிவில் உருத்துத் தோன்றி உலகத்தை யெல்லாம் சுட்டு நீருக்கும் ஊழிக்காலத்துச் சூரியனை. (110)

இறவாது எஞ்சிய அரக்கர்கள் இராமனைச் சூழ்ந்துகொள்ளுதல்

9546 தீயொத்தன வுருமொத்தன
சரஞ்சிந்திடச் சிரம்போய்
மாயத்தமர் மடிகின்றன
ரெனவுமறங் குறையார்

காயத்திடை யுயிருண்டிட
வுடன்மொய்த்தெழு களியால்
ஈயொத்தன நிருதக்குல
நறவொத்தன னிறைவன்.

தீ ஒத்தன உரும் ஒத்தன
சரம் சிந்திட, சிரம் போய்
மாயத்தமர் மடிகின்றனர்
எனவும், மறம் குறையார்,
காயத்திடை உயிர் உண்டிட,
உடன்மொய்த்து எழு களியால்
ஈ ஒத்தன நிருதக்குலம்;
நறவு ஒத்தனன் இறைவன்.

பொ:- நெருப்பினை ஒத்தனவும் இடியினை ஒத்தனவும் ஆகிய அம்புகளை (இராமன் சொரிதலால் தலைபோய் வஞ்சனைச் செயலை யுடைய தம்மினத்தவர்கள் இறக்கின்றார்கள் என்பதறிந்தும், வீரத்திற் குன்றாதவர்களாய்த் தம் உடம்பினகத்தே நிலைபெற்றுள்ள உயிரை (இராமபாணம்) கவர்ந்து உண்ண ஒருங்கு திரண்டு (இராமனைச்) சூழ்ந்துகொண்ட களிப்பின் மிகுதியால் அரக்கர் குலம் தேனீக்களை ஒத்தன; (அவற்றால் மொய்க்கப் பெற்ற) தேனீக்களை யொத்துத் தோன்றினான் (இராமனாகிய) தலைவன்.

கு:- தீயும் உருமும் இராமனது அம்பிற்கு உவமை. மாயத் தமர்-வஞ்சனைச் செயலையுடைய தம் இனத்தவர்; என்றது அரக்கர்களை. சரம் சிந்திட, மாயத் தமர் சிரம்போய் மடிகின்றனர் என இயையும். எனவும்—என்று (கண்டோர்) கூறவும். மறம் குறைதல்—வீரத்திற் குறைதல். வீரக்களிப்பால் இராமனைச் சூழ்ந்துகொண்ட நிருதக் குலத்துக்குத் தேனடையில் மொய்த்துள்ள ஈக்களும், அரக்கரால் சூழ்ந்து கொள்ளப்பெற்ற இராமனுக்கு ஈக்கள் மொய்க்கப்பெற்ற தேனடையும் உவமை. இது பண்பும் தொழிலும் பற்றிய ஏதுவுவமை. நறவு—தேன்; ஈண்டுத் தேனடையை யுணர்த்தியது. (111)

இராமன், தன்னைச் சூழ்ந்து மொய்த்தாரை அழித்தல்

9547 மொய்த்தாரையொ ரிமைப்பின்றலை
முடுகத்தொடு சிலையால்
தைத்தானவர் கழற்றிண்பசுங்
காயொத்தனர் சரத்தால்

கைத்தார்நெடுந் தேருங்கடுங்
களிறுங்களத் தழுந்தக்
குத்தானழி குழம்பாம்வகை
வழுவாச் சரக் குழுவால்.

மொய்த்தாரை ஓர் இமைப்பின்தலை,
முடுகத் தொடு சிலையால்
தைத்தான்; அவர், கழல்-திண்
பசுங்காய் ஒத்தனர், சரத்தால்;
கைத்தார் நெடுந்தேரும், கடுங்
களிறும், களத்து அழுந்தக்
குத்தான், அழி குழம்பு ஆம் வகை,
வழுவாச் சரக்குழுவால்.

பொ:- (இராமன், தன்னை) நெருங்கிச் சூழ்ந்துகொண்ட அரக்கர்களை ஓர் இமைப்பொழுதிற்குள் விரையத் தொடுத்த வில்லின் தொடுப்பினால் (அம்புகளைத்) தைத்து ஊன்றச் செய்தான்; அவ்வரக்கர்கள் (தம்மேல் தைத்துள்ள) அம்புகளால் திண்ணிய பசிய கழற்சிக் காய்களை யொத்துக் காணப்பட்டனர். செலுத்திய பகைவர்தம் நெடிய தேர்களும் கொடிய யானைகளும் போர்க்களத்தில் அழுந்தும்படி (குறி) தவறாத அம்புத் தொகுதியினால் சிதைவுற்றுக் குழைந்த சேறுகுமாறு ஊன்றி யழுத்தினான்.

கு:- ஓர் இமைப்பின்தலை—ஓர் இமைப்பொழுதிற்குள். முடுகுதல்—விரைதல். தைத்தல்—ஊன்றி யழுந்தச் செய்தல். அவர் சரத்தால் திண்பசுங்கழற்காய் ஒத்தனர் என்க. மேனி முழுவதும் அம்புகள் தைத்தூன்றப்பெற்ற அரக்கர் உடம்பிற்கு முட்புறத்தினை யுடைய திண்ணிய கழற்சிக்காய் உவமை. கைத்தார்—(தேரைச்) செலுத்திவந்த அரக்கர்கள். கைத்தல்—செலுத்துதல். களிறும் தேரும் களத்து அழுந்த, அழிகுழம்பாம் வகை வழுவாச் சரக்குழுவால் குத்தான் என இயைத்துரைக்க. குத்தல்—ஊன்றி அழுத்துதல். (112)

சுவடி 52ல் கீழ் கண்ட பாடல்கள் காணப்படுகின்றன.

9547a காலா ளொடு நிருதப்படை வெள்ளங்கடை கணித்தற்கு
ஏலாதன பலகோடிகள் இமையோர் கரை காணார்
பாலாழியின் மிசையே துயில் பரமன்சிலை பொழியும்
கோலாலவர் குறைவுற்றனர் குறையாதவர் கொதித்தார்.

b கொதித்தார் எழுகடல்போல் வளைவுற்றூர் கொடு முலம்
குதித்தோடிய சிலைவாளிகள் கூர்வேல்கதை குலிசம்
விதைத்தார் பொரும்மமலன்மிசை வெய்தே பலவுயிரும்
விதித்தானையும் விதித்தான் சிலைவளைத்தே சரம்விதைத்தான்.

9548 பிரிந்தார்பல ரிரிந்தார்பலர்
பிழைத்தார்பல ருழைத்தார்
புரிந்தார்பலர் நெரிந்தார்பலர்
புரண்டார்பல ருருண்டார்
எரிந்தார்பலர் கரிந்தார்பல
ரெழுந்தார்பலர் விழுந்தார்
சொரிந்தார்குட றுமிந்தார்தலை
கிடந்தாரெதிர் தொடர்ந்தார்.

பிரிந்தார் பலர்; இரிந்தார் பலர்;
பிழைத்தார் பலர்; உழைத்தார்;
புரிந்தார் பலர்; நெரிந்தார் பலர்;
புரண்டார் பலர்; உருண்டார்;
எரிந்தார் பலர்; கரிந்தார் பலர்;
எழுந்தார் பலர், விழுந்தார்,
சொரிந்தார் குடல், துமிந்தார் தலை,
கிடந்தார்; எதிர் தொடர்ந்தார்.

பொ:- (இராமபிரான் எய்த அம்புகளால் தாக்கப்பெற்ற) அரக்கரிற் பலர் உயிர் நீங்கினர்; பலர் அஞ்சி ஓடினர்; பலர் (அம்புக்கு இலக்காகாமல்) தப்பிப் பிழைத்தனர்; பலர் வருந்தி முயன்றவர் களாய்ப் போர்புரிந்தனர்; பலர் உடல் நெரிந்தனர்; பலர் (தரையில் விழ்ந்து ஆற்ருது) புரண்டு உருண்டனர்; பலர் தீப்பற்றி எரிந்தனர்; பலர் உடல் கருகினர்; (போருக்கு) எழுந்தவர்களிற் பலர் (தரையில்) விழ்ந்தனர்; (இராமபிரானை) எதிர்சென்று (பொருதற்குத்) தொடர்ந் தவர்கள் குடல் (பிதுங்கிச்) சொரிந்தவர்களாய்த் தலை துண்டிக்கப் பட்டவர்களாய் (மாண்டு) கிடந்தனர்.

கு:- எதிர் தொடர்ந்தார், குடர் சொரிந்தார் தலைதுமிந்தார் கிடந்தார் என முடிக்க. (113)

**9549** மணிகுண்டலம் வலயங்குழை
மகரஞ்சுடர் மகுடம்
அணிகண்டிகை கவசங்கழ
றிலகம்முத லகலந்
துணிவுண்டவ ருடல்சிந்தின
தொடர்கின்றன சுடரும்
திணிகொண்டலி னிடைமின்குல
மிளிர்கின்றன சிவண.

மணி குண்டலம், வலயம், குழை,
மகரம், சுடர் மகுடம்,
அணி கண்டிகை, கவசம், கழல்
திலகம் முதல கலம்,
துணிவுண்டவர் உடல் சிந்தின,
தொடர்கின்றன, சுடரும்;
திணி கொண்டலினிடை மின்குலம்
மிளிர்கின்றன சிவண.

பொ:- (அம்பினால்) துண்டிக்கப்பட்ட அரக்கர்களின் உடம்பி னின்றும் (தரையிலே) சிந்திக் கிடப்பனவாகிய மாணிக்கக் குண்டலம், தோள் வலயம், மகரக்குழை, சுடர் வீசும் மணி முடி, அழகிய கண் டிகை, கவசம், வீரக்கழல், நெற்றிப் பொட்டு முதலாயின அணிகலன் கள், செறிந்த மேகத்தினிடையே மின்னல் தொகுதிகள் ஒளி விட்டு விளங்குவனவற்றை யொப்பத் தொடர்ந்து ஒளி வீசுவனவாய்ச் சுடர் விட்டு விளங்குவன வாயின.

கு:- துணிவுண்டவர் உடல் சிந்தின மணி குண்டலம்...திலகம் முதல கலம், திணி கொண்டலினிடை மின்குலம் மிளிர்கின்றன சிவண, தொடர்கின்றன சுடரும் என முடிக்க. குழை மகரம்—குழை யாகிய மகரம்; என்றது, மகரமீன் வடிவிற் செய்யப்பட்ட குழை என் னும் காதணியை. கலம்—அணிகலம். சிவணுதல்—ஒத்தல். (114)

அரக்கர் அஞ்சி வியக்குமாறு இராமன் சாரிகை திரிதல்

**9550** முன்னேயுளன் பின்னேயுளன்
முகத்தேயுள னகத்தின்
றன்னேயுளன் மருங்கேயுளன்
றலைமேலுளன் மலைமேல்

கொன்னேயுள னிலத்தேயுளன்
விசும்பேயுளன் கொடியோர்
என்னேயொரு கடுப்பென்றிட
விருஞ்சாரிகை திரிந்தான்.

முன்னே உளன்; பின்னே உளன்;
முகத்தே உளன்; அகத்தின்—
தன்னே உளன்; மருங்கே உளன்;
தலைமேல் உளன்; மலைமேல்
கொன்னே உளன்; நிலத்தே உளன்;
விசும்பே உளன்; கொடியோர்,
'என்னே ஒரு கடுப்பு!' என்றிட,
இருஞ் சாரிகை திரிந்தான்.

பொ:- ('இவன் நம் சேனைக்கு) முன்னே உள்ளான்; பின்னே உள்ளான்; (சேனையின் முனை) முகத்தே உள்ளான்; (அதன்) உள்ளிடத்தே யுள்ளான்; பக்கத்தே உள்ளான்; தலைக்கு மேலே உள்ளான்; மண்ணிடத்தே உள்ளான்; விண்ணிடத்தே உள்ளான்; என்னே இவனது விரைவுத் தன்மை' என்று கொடியோர்களாகிய அரக்கர் வியந்துரைக்கும் வண்ணம் (இராமன்) பெருஞ் சாரிகை திரிந்தான்.

கு:- உளன் என்றது, உளனாய் நின்றலை. அகத்தின் தன்னே என்புழித் தன் என்பது இடப் பொருளுணர்த்தி நின்றது. கொன்—அச்சம். கடுப்பு—விரைவு. திருமாலின் அவதாரமாகிய இராமபிரான், உலகுயிர்களின் அகத்தும் புறத்தும் பிரிவின்றி எங்குமாய் விரவி நிற்கும் தனது இறைமைப் பண்பு தோன்றப் போர்க்களத்தின் எல்லாவிடங்களிலும் எல்லார் முன்னிலையிலும் விரைந்து திரிந்து சென்று நின்று போர் புரிந்த திறத்தினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது இச் செய்யுள். இது,

'மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொற்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணுளானே. (6—8—5)

எனவரும் திருத்தாண்டகத்தின் சொற் பொருளமைப்பினை அடியொற்றி யமைந்திருத்தல் ஒப்பு நோக்கி யுணரத்தகுவ தாகும். (115)

9551 என்னேரின னென்னேரின
னென்றியாவரு மெண்ணப்
பொன்னேர்வரு வரிவிற்கரத்
தொருகோளரி பொருவான்
ஒன்ஞர்பெரும் படைப்போர்க்கட
லுண்ணின்றன னெனினும்
அன்னேரவ ருடனேதிரி
நிழலேயென லாஞன்.

'என் நேரினன்; என் நேரினன்'
என்று யாவரும் எண்ண,
பொன் நேர்வரு வரிவில்கரத்து
ஒரு கோளரி பொருவான்,
ஒன்ஞர் பெரும் படைப் போர்க்கடல்
உள் நின்றனன் எனினும்
அல்நேரவர் உடனே திரி
நிழலே எனல் ஆஞன்.

பொ:- பொன்னே ஒத்த ஒளியுடையதாகிய வரிந்து கட்டப்பட்ட வில்லேந்திய கையினே யுடைய ஒப்பற்ற வலிய சிங்கம் போல்வாஞகிய இராமன், (அரக்கர்) யாவரும், 'என் நேரில் உள்ளான்' 'என் நேரில் உள்ளான்' என(த்தனித்தனி) எண்ணப் பல ராமராய் நின்று (அரக்க ரொடு (பொருது நிற்பவன், பகைவரது பெரிய சேனேயாகிய போர்க் கடலினுள்ளே நின்ருன் ஆயினும் இருளே யொத்தவராகிய பகைவரு டனே திரியும் (அவர் தம்) நிழலே யென்று சொல்லத் தக்கவஞனுன்.

கு:- அல் நேரவர்—இருளே யொத்த கருநிற மேனியராகிய அரக் கர்கள். அல்—இருள். உடனே திரி நிழல் என்றது, அவரது உடம்பின் நிழலே. உடம்பினது நிழல் உடம்பினேத் தொடர்ந்து நின்றும் ஓடிப் பற்றப் படாதவாறு போன்று, இராமனும் அரக்கரைத் தொடர்ந்து நெருங்கி நின்ற நிலேயிலும் அவர்களாற பற்றப் படாதவஞய் அவ் வரக்கரொடு பொருது நின்ருன் என்பதாம். (116)

9552 பள்ளம்படு கடலேழினும்
படியேழினும் பகையின்
வெள்ளம்பல ருளவென்னினும்
வினேயம்பல தெரியாக்

கள்ளம்படர் பெருமாயையிற்
கரந்தாருருப் பிறந்தார்
உள்ளன்றியும் புறத்தேயுமுற்
றுளனுமென வுற்றான்.

பள்ளம் படுகடல் ஏழினும்,
படி ஏழினும், பகையின்
வெள்ளம் பலஉள என்னினும்,
வினையம் பல தெரியா,
கள்ளம் படர் பெருமாயையின்
கரந்தார் உருப் பிறந்தார்
உள் அன்றியும் புறத்தேயும் உற்று
உளனும் என உற்றான்.

பொ:- ஆழம் பொருந்திய கடல் ஏழிலும் உலகம் ஏழிலும் பகைமையுடைய பல வெள்ளம் சேனைகள் உள்ளன என்றாலும் (அப்பகைவரது) சூழ்ச்சித் திறங்கள் பலவற்றையும் தெரிந்து, கள்ளம் படர்ந்த பெரிய மாயையினால் (தம் உருவினைக்) கரப்பவராகிப் பிறந்த அரக்கரது உள்ளிடத்தே யன்றிப் புறத்திலும் பொருந்தி யுள்ளான் என்னும் படி. (சாரிகை திரிந்து எங்கும்) பொருந்தி நின்றான் (இராமன்).

கு:- எல்லா வுயிர்களின் அகத்தும் புறத்தும் நீக்கமற நிறைந்திருக்கும் நாராயணனது அமிசமாகிய இராமன், என்று முள்ள தனது இறைமைத் தன்மைக்கு ஏற்ப, அரக்கருடைய சூழ்ச்சித் திறங்கள் பலவற்றையும் தெரிந்து அவர்களது அகத்திலும் புறத்திலும் உளனாயினன் என்பதாம். கள்ள அரக்கர் தன்னைக் கண்டு அஞ்சுதலால் அவர்களது உள்ளத்திலும், அவர்கள் ஒவ்வொருவருடனும் விரைந்தடைந்து பொருது நிற்றலால் அவர்களது புறத்திலும் உளனாயினன் என்க. பள்ளம்—ஆழம். படி—உலகு. வினையம்—சூழ்ச்சித்திறன். (117)

9553 நானாவிதப் பெருஞ்சாரிகை
திரிகின்றது நவிலார்
போனானிடை புகுந்தானெனப்
புலன் கொள்கிலர் மறந்தார்
தானாவது முணர்ந்தானுணர்ந்
துலகெங்கனுந் தானே
ஆனான்வினை துறந்தானென
விமையோர்களு மயிர்த்தார்.

நானுவிதப் பெருஞ் சாரிகை
திரிகின்றது நவிலார்,
போனுன், இடை புகுந்தான்,
எனப் புலன் கொள்கிலர்,
'தானுவதும் உணர்ந்தான், உணர்ந்து
உலகு எங்கணும் தானே
ஆனுன்; வினை துறந்தான்' என,
இமையோர்களும் அயிர்த்தார்.

பொ:- (இராமன்) பல வேறு வகையான பெரிய சாரிகையினை மேற்கொண்டு திரியுஞ் செய்கையினை அறிந்து செல்லாதவராய், (போரினை மேற்கொண்டு) சென்றவன் (அரக்கர் சேனையின்) இடையே புகுந்தனன் என்பதனை உணர்விற் கொள்ள மாட்டாதவராய் மறப்பினை யடைந்தவராய்த் தேவர்களும். 'முற்றும் உணர்ந்து உலகம் எங்கணும் தானேயான பரம்பொருள் (தன்னை எதிர்த்துள்ள பகைவராகிய அரக்கர் முதலிய எல்லா வுயிர்களும்) தானே ஆதலையும் உணர்ந்தவனுய் (அரக்கரைச் சங்கரித்தலாகிய தனது) தொழிலை விட்டு நீங்கினுன் போலும்?' என ஐயுற்றனர்.

கு:- நவிலார், புலன் கொள்கிலர், மறந்தார் (ஆகிய) இமையோர்களும் 'உலகெங்கணுந் தானேயானுன், தான் ஆவதும் உணர்ந்தான் வினை துறந்தான்' என அயிர்த்தார் என இயையும். இராமன் அரக்கர் சேனையினிடையே பல ராமர்களாய்க் கலந்துள்ள தோற்றத்தைக் கண்ட தேவர்கள், 'உலகம் எங்கணும் தானே யாகிப் பரவி நின்ற பரம்பொருளாகிய அவன் அரக்கர் முதலிய பல்லுயிர்களும் தானே யாதலையுணர்ந்து, அரக்கரோடு தான் கொண்ட பகைமை நீங்கி அரக்கரை யழித்தலாகிய தனது தொழிலை விட்டொழித்தனன் போலும்;' என ஐயுற்றனர் என்பதாம். எல்லாம் வல்ல பரம்பொருளுக்கு உயிர்களது இயல்பால் பகையும் நட்பும் உளபோலத் தோன்றுவதல்லது தன்னியல்பால் அவை உள்ளன அல்ல என்னும் உண்மையினை ஈண்டுத் தேவர்கள் வாய் மொழியில் வைத்து ஆசிரியர் விளக்கியுள்ளமை கூர்ந்துணரத்தக்கதாகும்.

'பகைவரிவரிவர் நட்டோ ரென்னும்
வகையு முண்டோ நின் மரபறி வோர்க்கே' (ந-57, 58)

எனவரும் பரிபாடற்றெடர் இங்கு நினைத்தற்குரிய தாகும். (118)

**9554** சண்டக்கடு நெடுங்காற்றிடை
துணிந் தெற்றிடத் தரைமேல்
கண்டப் படு மலைபோல், நெடு
மரமபோல், கடுந் தொழிலோர்
துண்டப்படக் கடுஞ் சாரிகை
திரிந்தான் சரஞ் சொரிந்தான்
அண்டத் தினையளந்தானெனக்
கிளர்ந்தானிமிர்ந் தகன்றான்.

சண்டக் கடு நெடுங் காற்று
இடை துணிந்து எற்றிட, தரைமேல்
கண்டப் படு மலைபோல், நெடு
மரம்போல், கடுந் தொழிலோர்
துண்டப்பட, கடுஞ் சாரிகை
திரிந்தான், சரம் சொரிந்தான்
அண்டத்தினை அளந்தான் எனக்
கிளர்ந்தான், நிமிர்ந்து அகன்றான்.

பொ:- (முன்பு) அண்டத்தினை அளந்த திருமாலைப் போன்று கிளர்ந்து நிமிர்ந்து சென்றவனாகிய இராமன், கடுமை வாய்ந்த சண்ட மாருதம் என்னும் பெருங்காற்று நடுவே பிளந்து தாக்குதலால் தரையின் மேல் தண்டம் படச் சிதறிய மலைபோலவும் நீண்ட மரம் போலவும், கொடு வினையாளராகிய அரக்கர்கள் (உடல்) துண்டிக்கப்பட்டு விழுமாறு விரைந்து சாரிகை திரிந்தவனாய் (அவ்வரக்கர் மேல்) அம்பினைச் சொரிந்தான்.

கு:- கடு நெடுஞ் சண்டக்காற்று என இயையும். எற்றுதல்—தாக்குதல். அண்டத்தினை யளந்தான் என்றது மூவுலகங்களையும் ஈரடியால் அளந்த நெடியோனாகிய திருமாலை. அளந்தான் எனக் கிளர்ந்தான் நிமிர்ந்து அகன்றான் என்றது இராமனை அகன்றான், வினையாலணையும் பெயர் அகன்றான், சாரிகை திரிந்தான்: சரம் சொரிந்தான் என முடிக்க. (119)

**9555** களியானையு நெடுந்தேர்களுங்
கடும்பாய்பரிக் கணனும்
தெளியாளியு முரட்சீயமுஞ்
சின வீரர்தம் திறமும்

வெளிவானக மிலதாம்வகை
விழுந்தோங்கிய பிணப்பேர்
நளிர்மாமலை பலதாவின
னடந்தான்கடற் கிடந்தான்.

களியானையும், நெடுந் தேர்களும், கடும் பாய் பரிக்கணனும்,
தெளி யாளியும், முரண்சியமும், சின வீரர்தம் திறமும்,
வெளி வானகம் இலதாம் வகை விழுந்து ஓங்கிய பிணப்பேர்
நளிர் மாமலைபல தாவினன், நடந்தான்—கடல் கிடந்தான்.

பொ:- கடலிற் பள்ளி கொண்ட திருமாலின் அமிசமாகிய இராமன், மதக் களிப்புடைய யானையும் நெடிய தேர்களும் விரைவுடையனவாய்ப் பாயும் குதிரைத் திரளும் (ஆற்றல் மிக்கதென்று) தெளிந்துகொள்ளப்பெற்ற யாளியும், (மாறுபட்டெதிரும்) வலிமையுடைய சிங்கமும் வெகுளிமிக்க வீரர்களின் தொகுதியும், விசும்பின்கண் வெற்றிடமில்லாதபடி விழுந்து உயர்ந்த பிணங்களாகிய பெயரையுடைய செறிந்த மலை பலவற்றையும் தாவியவனாகி நடந்தான்.

கு:- கடற் கிடந்தான், பிணப்பேர் நளிர் மாமலை பல தாவினன் நடந்தான் என முடிக்க. கிடந்தான் நடந்தான் என்பது முரண்அணி. நால்வகைச் சேனைகளும் அழிந்து அரக்கர் பிணங்கள் மலைபோற் குவிந்து கிடத்ததலால், இராமன் ஒரு மலையினின்றும் மற்றொரு மலைக்குத் தாவிச் செல்வது போன்று அப் பிண மலைகளின்மேல் நடக்க வேண்டியதாயிற்று என்பதாம். திறம்—கூறுபாடு: தொகுதி. (120)

### அரக்கர் சேனைகள் அழிவுற்றுக் கிடக்கும் தோற்றம்

9556 அம்ப ரங்க டொடுங்கொடி யாடையும்
அம்ப ரங்க ளொடுங்களி யானையும்
★ அம்ப ரங்க வழுந்தின சோரியின்
அம்ப ரங்க மருங்கல மாழ்ந்தென.

அம்பரங்கள் கொடும் கொடி ஆடையும்,
அம்பரங்களொடும் களி யானையும்,
அம்பு அரங்க, அழுந்தின, சொரியின்
அம்பரம்கம் அருங்கலம் ஆழ்ந்தென.

பொ:- அம்பாரிகளோடு கூடிய மதக் களிப்புடைய யானைகளும் விசும்பின் இடங்களைத் தொடும் கொடிச் சீலைகளும், (இராமபிரானது) அம்பு தைத்தலால். கடலின் நீரிலே அரிய மரக்கலங்கள் ஆழ்ந்தாற் போன்று, இரத்த வெள்ளத்திலே அழுந்தின.

கு:- இச் செய்யுளின் நான்கடிகளிலும் 'அம்பரங்க' என வந்த எழுத்துக்களே மடக்கி வருதலால் இது மடக்கு என்னும் சொல்லணி யாகும். அம்பரம் என்னும் பல பொருளொரு சொல்லுக்கு முதலடி யில் ஆகாயம் என்ற பொருளையும், இரண்டாமடியில் யானைமேலுள்ள அம்பாரியினையும் நான்காமடியில் கடலையும் உணர்த்தி நின்றது. கம்— நீர். கலம்—நாவாய். மூன்றுமடியினை அம்பு அரங்கச் சோரியின் அழுந்தின எனப் பிரித்துரைக்க. இராமனது அம்பு தைத்தலால் கொடிகளோடும் அம்பாரியோடும் இரத்த வெள்ளத்தில் அழுந்திய யானைக்குக் கூம்புடன் கடல் நீரில் ஆழ்ந்த நாவாயினை உவமையாகக் கூறினார். (121)

**9557** தம்ம னத்திற் சலத்தர் மலைத்தலை
வெம்மை யுற்றெழுந் தேறுவ மீளுவ
தெம்மு னைச்செரு மங்கைதன் செங்கையால்
அம்ம னைக்குல மாடுவ போன்றவே.

தம் மனத்தில் சலத்தர் மலைத்தலை
வெம்மை உற்று எழுந்து ஏறுவ மீளுவ,
தெவ் முனைச் செரு மங்கை தன் செங்கையால்
அம் மனைக்குலம் ஆடுவ போன்றவே.

பொ:- தம்முள்ளத்திலே வஞ்சனையைக் கொண்டுள்ளோராகிய அரக்கர்களின் மலைபோலுந் தலைகள். (இராமனது அம்பினால் துணிக் கப்பட்டு, வெகுளியைப் பொருந்தி (உடலினின்றும்) எழுந்து மேலே செல்வனவும் மீள்வனவுமாக உள்ளவை, பகைமை நிலைபெற்ற போர் முனையின்கண்ணே போர் மகளாகிய வீரத்திரு தன் சிவந்த கைகளால் (வீசி) ஆடுவனவாகிய அம்மனைக் காய்களின் தொகுதியினை ஒத்தன.

கு:- சலத்தர்—வஞ்சனையை யுடையோர்; என்றது, வஞ்ச நெஞ் சினராகிய அரக்கர்களை. சலம்—வஞ்சனை. மலைத்தலை—மலை போலும் பெரிய தலைகள். தெவ்முனை—தெம்முனை என்றாயிற்று. தெவ்—பகை. மலைத்தலை; வெம்மையுற்று எழுந்து ஏறுவ மீளுவ. செரு மங்கை தன் செங்கைகளால் ஆடுவ அம் மனைக்குலம் போன்று

என முடியும். வஞ்சனை அரக்கர்களின் தலைகள் இராமனது அம்பினால் துண்டிக்கப்பட்ட பின்னரும் சீற்றத்தாற் கிளர்ந்தெழுந்து மேலே சென்று கீழே விழுவன, போர்க்குரிய தெய்வமாகிய வீர மகள் தன் சிவந்த கைகளிற் கொண்டு ஆடிய அம்மனைக் காய்களை ஒத்துத் தோன்றின என்பது. இது தற்குறிப்பேற்ற உவமை. (122)

**9558** கேட கங்கண வன்கை யொடுங்கிளர்
கேட கங்க டுணிந்து கிடந்தன
கேட கங்கிளர் கின்ற களத்தநன்
கேட கங்கள் மறிந்து கிடந்தவே.

கேட கங்கண வன்கையொடும் கிளர்
கேடகங்கள் துணிந்து கிடந்தன;
கேடு அகம் கிளர்கின்ற களத்த நன்கு
ஏட கங்கள் மறிந்து கிடந்தவே.

பொ:- அழித்தற் றொழிலை யுடைய கங்கணம் பூண்ட வலிய கையுடனே விளங்குகின்ற கிடுகுப் படைகள் (இராமனது அம்பினால்) துணிபட்டுக் கிடந்தன; துயரம் தன்பால் விளங்கப் பெற்ற போர்க் களத்தின் கண்ணவாய் நல்ல (தும்பை) மலர் மாலையை யுடைய தலைகள் உருண்டு கிடந்தன.

கு:- கேட—கெடுத்தலையுடைய; குறிப்புப் பெயரெச்சம்; கை யென்னும் பெயர் கொண்டு முடிந்தது. கங்கணம்—வீரர் கையில் அணியப் பெற்ற வீர கங்கணம். வன்கை—வலிய கை. கேடகங்கள்—கிடகுப் படைகள் கேடு அகம் கிளர்கின்ற களம்—துயரம் தன்னகத்தே மிக்குத் தோன்றுதற்கு இடமாகிய போர்க்களம். நன்கு—நன்மை. ஏட கம்கள்—இதழ்களை (மலர்களை) யுடைய தலைகள்; என்றது, தும்பை சூடிப் போர் செய்யும் அரக்கர் தலைகளை. கம்—தலை. இராமனது அம்பினால் அரக்கரது கையில் உள்ள கிடுகுப் படைகள் பிளப்புற்றுக் கிடத்தலையும், அவ்வீரர்களின் போர் மாலையை யுடைய தலைகள் போர்க்களத்தில் உருண்டு கிடத்தலையும் விரித்துரைப்பது இச்செய்யுள். இது யமகம் என்னும் சொல்லணி தழுவியது. (123)

**9559** அங்க தங்களத் தற்றழிந்தா ரொடும்
அங்க தங்களத் தற்றழி வுற்றவால்
புங்க வன்கணைப் புட்டில் பொருந்திய
புங்க வன்கணைப் புற்றர வம்பொர.

அங்கதம் களத்து அற்று அழிந்தாரொடும்
அம் கதம் களத்து அற்று அழிவுற்றவால்—
புங்கவன் கணைப் புட்டில் பொருந்திய
புங்க வன்கணைப் புற்று அரவம் பொர.

பொ:- ஆடவரிற் சிறந்தோனாகிய இராமனது அம்புப் புட்டிலிற் பொருந்திய கூரிமை யுடைய வலிய அம்பாகிய புற்றிடத்துப் பாம்பு (தீண்டிப்) பொருதலால், தோள்வளை கழுத்துடன் அறுபட்டு அழிந்த அரக்கர்களோடும் (அவர்க்கு) அழகினைத் தரும் வெகுளி யுணர்வுகளும் போர்க்களத்திலே அற்று நீங்கின.

கு:- அங்கதம்—தோள்வளை; வாகுவலயம். களத்து அற்று—கழுத்தொடும் அறுபட்டு. களம்—கழுத்து. அழிந்தார்—அழிந்து பட்ட அரக்க வீரர்கள். அம் கதம்—(போர் வீரராயினார்க்குப் போரில்) அழகினைத் தரும் வெகுளி. களத்து—போர்க்களத்தில். புங்கவன்—உயர்ந்தோன்; என்றது, ஆடவரிற் சிறந்தோனாகிய இராமனை. வன்கணைப் புட்டில்—வலிய அம்புகளைத் தன்பாற் கொண்ட தூணி. தூணியினின்றும் எடுத்துச் செலுத்தப்படும் அம்புகள், புற்றிடத்தினின்றும் வெளிப்படும் பாம்பினையொத்துத் தோன்றுதலின், வன்கணைப் புற்றரவம் என்றார். வன்கணைப் புற்றரவம் பொர, அங்கதம் களத்தொடும் அற்று அழிந்தா ரொடும் அம் கதம் களத்து அற்று அழிவுற்ற என முடிக்க. ஆல்—அசை. (124)

9550 கயிறு சேர்கழற் கார்நிறக் கண்டகர்
எயிறு வாளிப டத்துணிந் தியானையின்
வயிறு தோறு மறைவன வானிடைப்
புயறொ றும்புகு வெண்பிறை போன்றவே.

கயிறு சேர் கழல் கார்நிறக் கண்டகர்
எயிறு, வாளி படத் துணிந்து, யானையின்
வயிறுதோறும் மறைவன, வானிடைப்
புயல்தொறும் புகு வெண்பிறை போன்றவே.

பொ:- (யானையின் கழுத்தில் இடப்பட்ட) கயிற்றுடன் பொருந்திய கழலணிந்த கால்களை யுடைய கருமேகம் போலும் நிறம் வாய்ந்த கொடியோ ராகிய அரக்கர்களுடைய (கோரைப்) பற்கள், (இராமனது) அம்பு பட்டதனால் துணிப்புண்டு, (அவர் அமர்ந்துள்ள) யானையின் வயிறு தோறும் (அழுந்து) மறைபவை, வானத்தின் கண்ணே

மேகங்கள் தோறும் நுழைந்து செல்லும் வெள்ளிய பிறைச் சந்திரனை ஒத்தன.

கு:- இங்குக் கயிறு என்றது, போர் வீரர்கள் யானைமீ தமர்ந்து தம் கால்களால் உலக்கத்துச் செலுத்துதற் பொருட்டு யானையின் கழுத்திலிடப் பெற்ற 'புரசை' என்னும் கயிற்றினை. கழல், கழலணிந்த கால்களை யுணர்த்தியது; ஆகுபெயர். கண்டகர்—(முள்போலும்) கொடியோர்; என்றது தீமையே புரியு மியல்பின ராகிய அரக்கர்களை. எயிறு என்றது, அரக்கர் வாயின் இரு பக்கத்தும் வளைந்து காணப்படும் கோரைப் பற்களை. கண்டகர் எயிறு, வாளி படத்துணிந்து, யானையின் வயிறு தோறும் மறைவன, வானிடைப் புயல் தொறும் புகும் வெண் பிறை போன்ற என முடியும். யானைக்குப் புயலும் அதன் வயிற்றில் தைத்தூன்றிய அரக்கரது எயிற்றுக்கு வெண் பிறையும் உவமை. (125)

**9561** வென்றி வீர ரெயிறும் விடாமதக்
குன்றின் வெள்ளை மருப்புங் குவிந்தன
வென்று மென்று மெழுந்த விளம்பிறை
ஒன்றி மா நிலத் துக்கவு மொத்தவால்.

வென்றி வீரர் எயிறும், விடா மதக்
குன்றின் வெள்ளை மருப்பும், குவிந்தன—
என்றும் என்றும் எழுந்த இளம்பிறை
ஒன்றி மாநிலத்து உக்கவும் ஒத்தவால்.

பொ:- வெற்றித் திறம் வாய்ந்த (அரக்க) வீரர்களின் (கோரைப்) பற்களும், விட்டு நீங்காத மதத்தினை யுடைய மலை போலும் யானையின் வெள்ளிய தந்தங்களும் (தரையிற்) குவிந்து கிடப்பவை, நாளும் நாளும் (வானத்தில்) தோன்றிய (கலை நிரம்பாத) இளம் பிறைகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து பெரிய நிலத்திலே சிதறிக் கிடப்பனவற்றையும் ஒத்தன.

கு:- மதக்குன்று—மதத்தினை யுடைய மலை; யானை. என்றும் என்றும்—நாளும் நாளும். இளம்பிறை என்றது, கலைகள் நிரம்பாத கீற்றுப் பிறையினை. ஒன்றுதல்—ஒருங்கு சேர்தல். அரக்க வீரர்களுடைய கோரைப் பற்களும் யானைத் தந்தங்களும் தரையிற் சிதறிக் கிடப்பவை, வானத்திலே காலந்தோறும் தோன்றிய கலை நிரம்பாத கீற்றுப் பிறைகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து நிலத்திற் சிதறிக் கிடதி

தலை ஒத்துத் தோன்றின என்பதாம். வண்ணமும் வடிவும் பற்றிப் பிறையை உவமை கூறினர். (126)

## குருதி கடல் போற் பரவியதனல் தீவுகளில் உறைவோர் மலைகளின் மேலேறுதல்

**9562** ஓவி லாருட லுந்துதி ரப்புனல்
பாவி வேலை யுலகு பரத்தலால்
தீவு தோறு மினிதுறை செய்கையார்
ஈவி லாத நெடுமலை யேறினர்.

ஓவிலார் உடல் உந்து உதிரப்புனல்
பாவி வேலை உலகு பரத்தலால்,
தீவுதோறும் இனிது உறை செய்கையார்
ஈவு இலாத நெடுமலை ஏறினர்.

பொ:- (போர்க் களத்தினை விட்டு) ஒழிதல் இல்லாதவராகிய அரக்கரது உடம்பினின்றும் உள்ளிருந்து வெளிப்படும் குருதி நீர் (எங்கும், பரவிக் கடலாற் சூழப்பட்டுள்ள நிலப்பகுதியிற் சென்று பாய்தலால், தீவுகள் தோறும் (அச்சமின்றி) இனிது தங்கி வாழும் செய்கை யுடையோர், (கடற் பெருக்கினல்) அழிதல் இல்லாத நீண்ட மலையின் மீது ஏறினர்கள்.

கு:- ஓவிலார் என்றது, போர்க் களத்தில் பொருதற் றெழிலினின் றும் நீங்காத அரக்க வீரர்களை. ஓவுதல்—ஒழிதல். உந்துதல்—உள்ளி ருந்து வெளிப்படுத்தல். பாயல்—பரவுதல். வேலை உலகு—கடலாற் சூழப்பட்டுள்ள தீவுகளாகிய நிலப்பகுதி. ஈவு—ஒழிதல்; அழிதல். இச் சொல், 'ஈவிலாத தீவினைகள்' (திவ்ய—திருவாய் 4—7—3) என இப் பொருளில் ஆளப் பெற்றுள்ளமை ஒப்பு நோக்கத் தருவதாகும். (127)

9562 a. கொள்ளை வெஞ்சமர் கோலு மிராக்கதர்
வெள்ளமுங்குறை வுற்றது மேடொடு
பள்ள மின்றிப் படுங் குருதிக் கடல்
உள்ளவான் கடற் கோடிய தில்லையால்.

b. தேய மெங்கு மிடஞ் சிறிதின்றியே,
மாய வஞ்சர் மடிய பிணமலே
போய்வளர்ந்து விருப் பொடும் புல்விற்ருல்,
ஆய தன்மையங் கண்ணலு நோக்கியே.

c. கடலொத்து கனற்படைக் கார்முகத் திடை
தொடுத்ததை யேவி யிரும்பிணத்
திட லனைத்தையுந் தீர்க்கெனச் செப்பினன்,
பொடிப டுத்தி யிமைப்பில் புகுந்ததால்.

d. அண்டமுற்றும் அனைத்துயிரும் எடுத்து
துண்டுமிழ்ந்து படைக்கு மொருவனுக்
குண்டெனற்கரி தென்னுளதிச் செயல்
எண் தரும் தவரெண்ணுவ தில்லையால்.

e. இற்றதாக இராக்கத வீரர்கள்
உற்றொராயிர வெள்ள முடன்றெதிர்
சுற்றினர் படைமாரி சொரிந்துளார்
வெற்றி வீரனும் கைவில் வணக்கினன்.

f. தலையறுந் தவரும்தடத்திண் புய
மலையறுந்தவரும் வயக்கையொடு
சிலையறுந் தவரும் திமிரத்தின் மெய்ந்
நிலை யறுந் தவருமன்றி நின்றதார்.

g. தேரளப்பில பட்ட சிறுகண்மாக்
காரளப்பில பட்ட கடும் பரித்
தாரளப்பில பட்ட தடம்புயப்
பேரளப் பிலர் பட்டனர் பீடிலார்.

h. வானகத்தொடு மாநில மெண்டிசை
ஆனதிக்கொரு பத்துமடுத்துறத்
தான் நெருக்கிய வஞ்சகர் தம்தலை
போனதிக்கறியாது டரட்டினன்.

i. சுடரும் வேல் கணை தோமரம் சக்கரம்
அடரும் மூவிலைச் சூலம் மற்றுதியாம்
படையின் மாரி பதகர் சொரிந்திடை
தொடர வீரன் துணித்தனன் வாளியால்

j. ஏனமோடெண்கு சீய மெழு மத
யானை யாளி புலியென் றிவைமுகம்
ஆன தீய அரக்கர் படிந்திட
வான வன் கணை மாரி வழங்கினான்.

k. வடி சுடரிக்கணை மாற்றவங் காயிர
முடியுடைத் தலையோர் தலையும் மூடிந்
திடுவதித் தலத்தே யிடி யேற்றில் வான்
வடவரைச் சிகரங்கள் மறிவ போல்.

l. இரதம் யானை யிவுளியொடெண் ணிலா
நிருதர் வெள்ளம் நெடுநிலத் திற்றிட
சரதமன்னை சொல்தாங்கி தவத்து உறும்
விரத வீரன்தன் வாளியின் வீட்டினான்.

m. கடு வைத்து ஆர் களன் கைப்படு கார்முகம்
ஒடியத் தாக்கும் ஒருவன் சிலையின் வாய்
வடவைச் தீச் சொரி வாளியின் மாமழை
படமற்றுயிர வெள்ளமும் பட்டதால்.

n. பாலொத் தாழியில் பாம்பணை மேல் துயில்
சீலத் தானிமையோர் செய் தவத்தினின்
ஞாலத் தாய இறைவனி ராவணன்
மூலத்தானை முடிய முருக்கினான்.

## இராமனது விற்றொழில் வன்மையால் அரக்கர் விண்ணில் நிரம்ப அவர்தம் உடல்கள் மண்ணில் நிறைதல்

9563 விண்ணி றைந்தன மெய்யுயிர் வேலையும்
புண்ணி றைந்த புனலி னிறைந்தன
மண்ணி றைந்தன பேருடல் வானவர்
கண்ணி றைந்தன விற்றொழிற் கல்வியே.

விண் நிறைந்தன, மெய் உயிர் வேலையும்
புண் நிறைந்த புனலின் நிறைந்தன;
மண் நிறைந்தன, பேர் உடல்; வானவர்
கண் நிறைந்தன, வில் தொழில் கல்வியே.

பொ:- (அரக்கருடைய) உடம்புகளில் உள்ள உயிர்களால் விண்ணிடமெங்கும் நிறைந்தன; (அரக்கருடைய உடம்புகளின்) புண்ணினின்று வெளிப்பட்ட குருதிநீரால் கடல்களும் நிறைவுற்றன. பூமியின் இடங்கள் (அரக்கருடைய) பெரிய உடம்புகளால் நிரம்பின. தேவருடைய கண்கள் (இராமனது) விற்றொழிற் கல்வியால் நிறைவுற்றன.

கு:- 'வேலையும், புண்ணிறைந்த புனலின் நிறைந்தன' ஏதுப் பொருட்டாகிய இன்னுருபினை விரித்துக் கூறிய குறிப்பினால், விண், மெய் உயிரின் நிறைந்தன; மண், பெருடலின் நிறைந்தன; வானவர் கண், விற்றொழிற் கல்வியின் நிறைந்தன என ஏனையிடங்களினும் இன்னுருபு வருவித்துரைக்கப்பட்டது. வேலையும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. இமையாக் கண்ணராகிய தேவர்கள் இராமனது 'விற்றொழிற் திறத்தினைக் கண்களாரக் கண்டு மகிழ்ந்தனர் என்பார், வானவர் கண் நிறைந்தன விற்றொழிற் கல்வியே' என்றார். (128)

குருதி வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்பட்ட
படைக்கலங்கள் கடலிற் புக்கமையால் மீன்கள் முதலியன
அறுபட்டு இறத்தல்

**9564** செறுத்த வீரர் பெரும்படை சிந்தின
பொருத்த சோரி புகக்கடல் புக்கன
இறுத்த நீரிற் செறிந்தன வெங்கணும்
அறுத்து மீன முலந்த வனந்தமே.

செறுத்த வீரர் பெரும்படை சிந்தின,
பொறுத்த சோரி புகக் கடல் புக்கன,
இறுத்த நீரின் செறிந்தன, எங்கணும்
அறுத்து, மீனம் உலந்த அனந்தமே.

பொ:- வெகுண்டு பொருத வீரர்களின் பெரிய படைக்கலங்கள் சிதறினவாகி (த்தம்மை)த் தாங்கிய குருதிநீர் (கடலிற்) புக (த்தாமும்) கடலிற் புகுந்து தங்கிய நீரில் எவ்விடத்தும் செறிந்தனவாகி (எதிர்ப்பட்ட பொருள்களை அறுத்தலால் உயிர் நீங்கிய மீன்கள் பலவாகும்.

கு:- செறுத்தல்—வெகுண்டு போர் செய்தல். பெரும்படை— வாள், வேல் முதலிய உருவிற் பெரிய ஆயுதங்கள். அரக்கவீரர்கள்

போர்க்களத்திலே வீசிய கூரிய படைக்கலங்கள், இரத்த வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டுக் கடல்நீரில் எங்கும் செறிந்தனவாய் எதிர்ப்பட்ட பொருள்களை அறுத்தமையால் கடலில் வாழும் மீன்களிற் பல இறந்து பட்டன என்பதாம். இஃது உயர்வு நவிற்சி என்னும் அணி. (12)

## அரக்கர் படைத்தலைவனாகிய வன்னி என்பவன் இராம னொருவனால் நேர்ந்த அழிவினை எண்ணி வெகுண்டு அரக்கர்களைப் போரில் ஊக்குதல்

9565 ஒல்வ தேயிவ் வொருவனிவ் யூகத்தைக்
கொல்வ தேநின்று குன்றன்ன யாமெலாம்
வெல்வ தேது மிலாமையின் வெண்பலை
மெல்வ தேயென வன்னி விளம்பினான்.

'ஒல்வதே! இவ் ஒருவன், இவ் யூகத்தைக்
கொல்வதே, நின்று! குன்று அன்ன யாம் எலாம்
வெல்வது ஏதும் இலாமையின், வெண் பலை
மெல்வதே!' என வன்னி விளம்பினான்.

பொ:- 'இந்த ஒருவன், இந்த (அரக்கர் பெருஞ்) சேனையைக் கொல்வதோ? (இஃது ஒருவனால்) இயலக்கூடியதோ? மலையினை யொத்த நாம் எல்லோரும் (இவனை எதிர்த்து) வெற்றி பெறுதல் சிறிதும் இல்லாமையினால் வெள்ளிய பற்களை மெல்வதோ' என்று வன்னி என்பவன் (அரக்கரை நோக்கிக்) கூறினான்.

கு:- இவ் ஒருவன் என்றது, தனியனாய் எதிர்த்துப் பொருதுநின்ற இராமனை. ஒல்வதே, வெல்வதே மெல்வதே என்புழி ஏகாரம் வினா. ஒல்லுதல்— இயலுதல். வெண்பல்லை மெல்லுதல் என்றது, உணர்வுக்கும் வழி யின்றிச் செயலற்று வறிதே யிருத்தலைக் குறித்தது. வன்னி என்பவன், புட்கரத் தீவுக்கு மன்னன்; போர்க்களத்தில் மூலச் சேனைகளைத் தலைமை தாங்கி நடத்தியவன். (130)

9566 கோல்வி ழுந்தழுந் தாமுனங் கூடியாம்
மேல்வி ழுந்திடி னும்மிவன் வீயுமால்
கால்வி ழுந்த மழையன்ன காட்சியீர்
மால்வி ழுந்துளிர் போலு மயங்கிநீர்.

'கோல் விழுந்து அழுந்தாமுனம், கூடி யாம்
மேல் விழுந்திடினும், இவன் வீயுமால்;
கால் விழுந்த மழை அன்ன காட்சியீர்!
மால் விழுந்துளிர் போலும், மயங்கி, நீர்!

பொ:- (இராமனாகிய இவன் எய்யும்) அம்பு (நம் மேல்) வீழ்ந்து அழுந்துதற்கு முன்னமே நாம் எல்லோரும் கூடி மேலே விழுந்தாலும் இவன் இறந்துபடுவான். மழை பெய்தற்குக் கருமுகில் காலிறங்கினாற் போலுந் தோற்றத்தையுடையீர், நீவிர் அறிவு மயங்கித் திகைப்பினுள் வீழ்ந்துள்ளீர் போலும்?

கு:- நாம் இவ்விராமனைப் படைக்கலங்களால் தாக்கவேண்டும் என்பதில்லை. இத்தனை பேரும் கூடி இவன்மேல் வீழ்ந்தாலும் இவன் இறந்து படுதல் உறுதி. இவ்வாறாகவும் நீவிர் அறிவு கலங்கித் திகைப்புறுதல் எற்றுக்கு? என ஏனைய சேனைத் தலைவர்களை நோக்கி வன்னி இடித்துக் கூறியவாறு. கோல்—அம்பு. மழைகால் விழுதல்—மழை பெய்தற்குக் கருமுகில் கால் கொண்டு இறங்குதல். காட்சி, கருநிறத் தோற்றம். 'நீர், மயங்கி, மால் விழுந்துளிர் போலும்' என இயையும். மால்—மயக்கத்தின் மிகுதியாகிய திகைப்பு. (131)

9567 ஆயி ரம்பெரு வெள்ள மரைபடத்
தேய நிற்பது பின்பினியென் செயப்
பாயு முற்றுட னேயெனப் பன்னினான்
நாய கற்கொ ருதவியை நல்குவான்.

'ஆயிரம் பெருவெள்ளம் அரைபடத்
தேய நிற்பது; பின்பு, இனி என்செய?
பாயும், உற்று, உடனே' எனப் பன்னினான்,
நாயகற்கு ஓர் உதவியை நல்குவான்.

பொ:- 'ஆயிரம் பெருவெள்ள அளவினவாகிய (அரக்கர்) சேனை (இராமன் ஏவிய அம்புகளால்) அரைக்கப்படுதலால் அழிந்தொழியு நிலையிலுள்ளது. (அழிந்த) பின்பு யாம் என்செய இயலும்? (எனவே நீவிர் எல்லீரும்) பொருந்தி (அவன் மேல்) விரைந்து பாய்வீராக. என்று, தன் தலைவனுக்கு ஓர் உதவியைச் செய்வானாகிக் கூறினான் (வன்னி).

கு:- நாயகற்கு ஓர் உதவியை நல்குவான், 'உற்று உடனே பாயும்' எனப் பன்னினன் என்க. பன்னுதல்—பலபட விரித்துரைத்தல். பன்னியவன் முற்கூறிய வன்னி என்பான். நாயகன் என்றது, அவனுக்குத் தலைவனாகிய இராவணனை. பாயும் என்பது, செய்யும் என்னும் ஏவற் பன்மை வினைமுற்று. (132)

வெண்குண்டெழுந்த அரக்கர்கள் இராமனைச் சூழ்ந்து கொண்டு பல்வகைப் படைக்கலங்களைச் சொரிதல்.

**9568** உற்று ருத்தெழு வெள்ள முடன்றெழாச்
சுற்று முற்றும் வளைந்தன தூவின
ஒற்றை மால்வரை மேலுயர் தாரைகள்
பற்றி மேகம் பொழிந் தெனப் பல்படை.

உற்று, உருத்து எழு வெள்ளம் உடன்று எழா
சுற்று முற்றும் வளைந்தன, தூவின—
ஒற்றை மால் வரைமேல் உயர் தாரைகள்
பற்றி மேகம் பொழிந்தென, பல் படை.

பொ:- பொருந்தி வெகுண்டெழுகின்ற வெள்ள அளவினவாகிய (அரக்கர்) சேனைகள், மாறுபட்டுப் பொருதற்கு எழுந்து (இராமனைச்) சுற்றி முழுதும் சூழ்ந்து கொண்டனவாகி, ஒன்றாய்த் தனித்துள்ள பெரிய மலையின் மேல் மேகங்கள் பொருந்தி நின்று மிக்க மழைத் தாரைகளைப் பொழிந்தாற்போலப் பல படைக்கலங்களைத் தூவின.

கு:- உருத்து எழுதல்—வெகுண்டு எழுதல். வெள்ளம் என்றது, வெள்ள அளவினவாய் மிக்க பெருஞ்சேனையினை. உருத்தெழு வெள்ளம், சுற்று முற்றும் வளைந்தனவாகி, ஒற்றை மால் வரைமேல் மேகம் பற்றி உயர்தாரைகள் பொழிந்தென, பல்படை தூவின என முடிக்க. தனியனாய் நின்ற இராமனுக்கு ஒற்றை மால்வரையும், அவனைச் சுற்றிவளைத்த அரக்கர்களுக்கு மலையிற் சூழ்ந்த மேகமும், அவர்கள் தூவிய படைக் கலங்களின் மிகுதிக்கு மழைத்தாரைகளும் உவமை.

இராமன் அவற்றைச் சிதைத்து அம்பு மழை பொழிதல்

**9569** குறித்தெ றிந்தன வெய்தன கூறுறத்
தறித்துத் தேருங் களிறுந் தரைப்பட
மறித்து வாசி துணித்தவர் மாப்படை
தெறித்துச் சிந்தச் சரமழை சிந்தினன்.

குறித்து எறிந்தன, எய்தன, கூறுறத்
தறித்து, தேரும் களிறும் தரைப்பட,
மறித்து, வாசி துணித்து, அவர் மாப்படை
நெறித்துச் சிந்த, சரமழை சிந்தினன்.

பொ:- (அரக்கர்) குறிபார்த்து எறிந்தனவும், (வில்லில் தொடுத்து) எய்தனவும் ஆகிய படைக்கலங்களைப் பல கூறு படத் துண்டித்து, (அவர்களுடைய) தேரும் யானையும் தரையிற்பட்டு வீழும் படி அழித்து, குதிரைகளைத் துண்டித்து, அவ்வரக்கருடைய பெருஞ் சேனை தாக்கப்பட்டு வெளியே சிதறும்படி அம்பு மழையைத் தூவினன் (இராமன்).

கு:- குறித்து எறிதல்—இலக்குப்பார்த்து எறிதல். கூறு உற-பல கூறுபட. தறித்தல் - துண்டித்தல். மறித்தல்—அழித்தல். நெறித்தல்—தாக்கப்பட்டு வெளிப்படுதல். சிந்தினன் என்னும் பயனிலைக் குரிய இராமன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (134)

தலையறுபட்ட உடல்கள் குருதி பொங்க ஆடுதலின் தோற்றம்

9570 வாய்வி ளித்தெழு பஃறலை வாளியிற்
போய்வி ளித்த குருதிகள் பொங்குடல்
பேய்வி ளிப்ப நடிப்பன பெட்புறும்
தீவி ளிப்புறு தீப நிகர்த்தவால்.

வாய் விளித்து எழு பல் தலை வாளியில்
போய் விளித்த குருதிகள் பொங்கு உடல்,
பேய் விளிப்ப நடிப்பன, பெட்புறும்
தீ விளிப்புறு தீபம் நிகர்த்தவால்.

பொ:- வாயினால் (போருக்கு) அழைத்து எழும் (அரக்கருடைய) பல தலைகள் நீங்கி இறந்த, இரத்தநீர்த் தாரைகள் பொங்கி மீதெழும் குறையுடல்கள், பேய்கள் (தம் இனத்தை அடையாளந் தெரிந்து) அழைக்கும்படி குதித்து ஆடுவன, விரும்பத்தக்க தீச்சுடரால் அழைத் தலையுடைய (கலங்கரை) விளக்கினை ஒத்துத் தோன்றின.

கு:- வாய் விளித்தல்—வாயினாற் போருக்கு அறைகூவியழைத்தல். பல்+தலை=பஃறலை என நிலைமொழியீற்று லகரம் வரு

மொழி முதலிலுள்ள தகரம் நோக்கி ஆய்தமாகத் திரிந்தது. வாளி யின்—அம்பினல்; இன்னுருபு ஏதுப் பொருளது. வாளி என்றது, இராமனது அம்பினை. வாளியின் பல தலை போய் விளித்த உடல், குருதிகள் பொங்கு உடல் எனத் தனித்தனி இயையும். உடல் என் றது, தலை குறைந்த உடலாகிய கவந்தங்களை. விளிதல்—இறத்தல். ‘விளிந்தெழு’ எனற்பாலது எதுகை யின்பம் நோக்கி ‘விளித்தெழு’ எனத் திரிந்தது. இருளைப் போக்கிப் பொருள்களைப் புலப்படுத்தி விரும் பத்தகும் தீச் சுடராகிய கரங்களால் அழைக்கும் விளக்கு என்பார், பெட்புறும் தீ விளிப்புறு தீபம் என அடைகொடுத்தோதினர். தீ விளிப்புறு தீபம் என்றது கடலில் திசை காணது மறுகும் கலங்களைத் தன் சுடர்க் கரங்களால் அழைத்தலை யுடைய கலங்கரை விளக்கினை. வாளியின் பல் தலை போய் விளித்த—குருதிகள் பொங்கு—உடல் நடிப்பன, தீவிளிப்புறு தீபம் நிகர்த்த என முடிக்க. (135)

## குருதியும் நிணமும் படிந்த நிலத்தின் தோற்றம்

**9571** நெய்கொள் சோரி நிறைந்த நெடுங்கடல்
செய்ய வாடைய ளன்னசெஞ் சாந்தினள்
வைய மங்கை பொலிந்தனள் மங்கலச்
செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள்.

நெய்கொள் சோரி நிறைந்த நெடுங்கடல்
செய்ய ஆடையள், அன்ன செஞ்சாந்தினள்,
வைய மங்கை பொலிந்தனள்; மங்கலச்
செய்ய கோலம் புனைந்த அன்ன செய்கையாள்.

பொ:- நெய்ப்புடைய குருதிநீரால் நிறைவுற்ற நீண்ட கட லாகிய செந்நிற ஆடையினை யுடையளாய், அத்தகைய செஞ்சந்தனக் குழம்பினை யணிந்தவளாகிய நிடமடந்தை, மங்கல நாளிற் கொள்ளும் செந்நிறக் கோலம் புனைந்தாலொத்த செய்கையை யுடையளாய்ப் பொலிவுற்றுத் தோன்றினள்.

கு:- நெடுங்கடலினை நிலமடந்தையின் செய்ய ஆடையாக உருவகித்த ஆசிரியர், கருநிறக் கடல் செந்நிறக் கடலாதற்குரிய கார ணத்தினையும் தெரியச் சொல்லு முறையில் ‘நெய்கொள் சோரி நிறைந்த நெடுங்கடல்’ எனத் தெரித்து மொழி கிளவியால் அடை

கொடுத் தோதினர். நெய்கொள் சோரி—நெய்த்தன்மை யுடைய குருதி நீர். கடலாகிய செய்ய ஆடை அன்ன செஞ்சாந்து—அத்தகைய குருதி நீர்க் குழம்பாகிய செஞ்சந்தனம். செய்ய ஆடையள் செஞ்சாந்தினள் (ஆகிய) வையமங்கை, மங்கலச் செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள் (ஆகிப்) பொலிந்தனள் என இயையும். மங்கலச் செய்ய கோலம்—மங்கல நாளிற் கொள்ளும் செந்நிறக் கோலம். (136)

## எங்கும் குருதி பரந்தமையால் 'கடல்கள் ஏழு' என்னும் அம்மொழி தவறுபடுதல்

9572 உப்புத் தேனு நெய் யொண்டயிர் பால்கரும்
பப்புத் தானென் றுரைக்குமவ் வாழிகள்
துப்புப் போற்குரு திப்புனல் சுற்றலால்
தப்பிற் றவ்வுரை யின்றோர் தனுவினல்.

உப்பு, தேனு, நெய், ஒண் தயிர், பால், கரும்பு,
அப்புத்தான், என்று உரைக்கும் அவ் ஆழிகள்
துப்புப்போல் குருதிப் புனல் சுற்றலால்
தப்பிற்று அவ்வுரை, இன்று ஒர் தனுவினல்.

பொ:- உப்பு, தேன், நெய், ஒள்ளிய தயிர், பால், கருப்பஞ்சாறு, நல்ல தூய நீர் என்று (வகைபடப் பிரித்துச்) சொல்லப்படுகின்ற (ஏழு) கடல்களும் பவளம் போற் செந்நிறமுடைய இரத்த நீரால் (எங்கும்) சூழப்பெற்றமையால் (ஒரே கடலாகி) இன்று ஒப்பற்ற (இராமனது) வில்லொன்றினல் (கடல்கள் ஏழு என்னும்) அம்மொழி தவறு பட்டது.

கு:- தேனு—தேன்; உகரம் சாரியை. அப்பு—நீர்; ஈண்டு தூய நீர்க்கடலை உணர்த்தியது. போர்க்களத்து இறந்துபட்ட வீரர்களின் குருதிநீர் வெள்ளம் வேறு வேறு நிறமும் சுவையும் வாய்ந்த கடல்கள் ஏழிலும் சென்று கலந்து யாவும் இரத்தக் கடலே என்னும்படி அவற்றை ஒன்ருக்கினமையால், 'ஏழுவகைக் கடல்கள்' என வழங்கும் அம்மொழி வழக்கு, இராமனது வில்லொன்ருல் தவறுபட்டது எனப் புனைந்துரை வகையால் விற்றொழில் வன்மையினை உயர்த்துக் கூறிய வாறு. இஃது உயர்வுநவிற்சி என்னும் அணி. (137)

## இராமனது வில் வளைந்தேயிருத்தலும் அரக்கர் சேனையின் அளவின்மையும்

**9573** ஒன்று மோதொடை கோலொரு கோடிகள்
சென்று பாய்வன திங்க ளிளம்பிறை
அன்று போலென லாதிய தச்சிலை
என்று மாள்வ ரெதிர்த்த விராக்கதர்.

ஒன்றுமே தொடை; கோல் ஒரு கோடிகள்
சென்று பாய்வன; திங்கள் இளம்பிறை
அன்றுபோல் எனல் ஆகியது அச்சிலை;
என்று மாள்வர் எதிர்த்த இராக்கதர்?

பொ:- (இராமன் தனது வில்லில் அம்பினைத் தொடுத்த) தொடுப்பு ஒன்றே. (அவ் ஒரு தொடுப்பிலேயே) ஒரு கோடி அம்புகள் (வில்லினின்றும் வெளிப்பட்டுச்) சென்று (பகைவர் சேனையிற்) பாய்வன; (இராமன் கையிலுள்ள) அவ் வில்லானது அன்றைக்குத் தோன்றிய இளம்பிறைச் சந்திரனைப் போலும் என்னும்படி (வளைந்த வண்ணமே)யாகித் தோன்றியது. (இவ்வாறாயினும்) எதிர்த்துள்ள அரக்கர்கள் எப்பொழுதுதான் மாண்டொழிவார்களோ?

கு:- இச் செய்யுள் கவிக்கூற்றாக அமைந்தது. ஒரு தொடுப்பில் ஒரு கோடி அம்புகள் வெளிப்பட்டுப் பாயுமாறு இராமன் வில்லில் அம்புகளைத் தொடர்ந்து ஏவுதலால், அவனது கையிலுள்ள வில்லானது, அன்றைக்குத் தோன்றிய பிறைச் சந்திரனைப் போன்று வளைந்தே காணப்பட்டதென்றும், இவ்வாறு இராமன் தொடர்ந்து பல கோடிக்கணக்கினவாகிய அம்புகளால் அரக்கர்களைக் கொன்றழித்தாலும் குறையாத அளவில் அரக்கர் கூட்டம் பெருகிக் காணப்பட்டதென்றும் இராமனது விற்றொழில் வன்மையினையும் அரக்கர் சேனையின் மிகுதியினையும் வியந்துரைத்தவாறு. (138)

## கடும் போர்புரிந்த அரக்கர் இராமன் அம்பினால் இறத்தல்

**9574** எடுத்தவ ரிரைத்தவ ரெரிந்தவர்
செரிந்தவர் மறங்கொ டெதிரே
☆ தடுத்தவர் சலித்தவர் சரிந்தவர்
பிரிந்தவர் தனிக்க ளிறுபோல்

கடுத்தவர் கலித்தவர் கறுத்தவர்
செறுத்தவர் கலந்து சரமேல்
தொடுத்தவர் துணிந்தவர் தொடர்ந்தனர்
கிடந்தனர் துரந்த கணையால்.

எடுத்தவர், இரைத்தவர், எறிந்தவர்,
செறிந்தவர், மறங்கொடு எதிரே
தடுத்தவர், சலித்தவர், சரிந்தவர்,
பிரிந்தவர், தனிக் களிறுபோல்
கடுத்தவர், கலித்தவர், கறுத்தவர்,
செறுத்தவர், கலந்து, சரம் மேல்
தொடுத்தவர், துணிந்தவர், தொடர்ந்தனர்,
கிடந்தனர்—துரந்த கணையால்.

பொ:- (படைக் கலங்களைக் கையில்) எடுத்தவர்களும், அவற்றைக் கையிற் கொண்டு) ஆரவாரித்தவர்களும், (அவற்றை இராமன்) மேல் வீசி) எறிந்தவர்களும், (இராமனைச் சூழ்ந்து) நெருங்கியவர்களும், மறவுணர்வினை மேற்கொண்டு எதிர் சென்று (அவன் ஏவிய அம்புகளைத்) தடுத்து விலக்கியவர்களும், (தடுக்க ஒண்ணுமையால்) மனம் சலிப்புற்றவர்களும் (சேனை அணிகளினின்றும்) சலிப்புற்று ஒதுங்கியவர்களும், (சேனையை விட்டுப்) பிரிந்து சென்றவர்களும், ஒப்பற்ற மதயானை போன்று (இராமன்மேல்) விரைந்து சென்றவர்களும், (அவன்முன்) செருக்குற்று நின்றவர்களும், (அவனை நோக்கிச் சினந்தவர்களும், (நேர்நின்று) அவனைத் தடுத்தவர்களும் (அவன் செய்யும் விற்போரில்) கலந்து (அவன்மேல்) அம்பினைத் தொடுத்து எய்தவர்களும் ஆகிய அரக்கர் பலரும் (அவன்) ஏவிய அம்புகளால் (உடல்) துணிக்கப்பட்டவராய்த் தொடர்ந்து (போர்க்களத்தில் மாண்டு) கிடந்தனர்.

கு:- இராமனை எதிர்த்துப் பெரும் போரிற் பலதிற முயற்சிகளில் ஈடுபட்டுள்ள அரக்கர் பலரும் அவன் செலுத்திய அம்புகளால் உடல் துணிக்கப்பட்டுப் போர்க் களத்தில் வரிசை வரிசையாகத் தொடர்ந்து இறந்து கிடந்தனர் என்றவாறு. (139)

**9575** தொடுப்பது சுடர்ப்பகழி யாயிர
நிரைத்தவை துரந்த துறைபோய்ப்
படுப்பது வயப்படைஞ ராயிரரை
யன்றுபதி னுயிரவரைக்

கடுப்பது கருத்துமது கட்புலன்
மனங்கருதல் கல்வி யிலவேல்
எடுப்பது படப்பொருவ தன்றியவர்
செய்வதொரு நன்றி யுளதோ.

தொடுப்பது சுடர்ப் பகழி ஆயிரம்
நிரைத்தவை துரந்த துறைபோய்ப்
படுப்பது, வயப்படைஞர் ஆயிரரை
அன்று, பதினுயிரவரை;
கடுப்பு அது; கருத்தும் அது; கட்புலன்
மனம் கருதல் கல்வி இல; வேல்
எடுப்பது படப் பொருவது அன்றி,
இவர் செய்வது ஒரு நன்றி உளதோ?

பொ:- (இராமன்) தொடுப்பது சுடரையுடைய அம்புகள் ஆயிரமாகும். அந்த அம்புகள் நிரல்பட அமைந்து செலுத்திய துறைகளிற் போய்க் கொல்வது, வலிமிக்க படை வீரர்கள் ஆயிரம் பேர்களை மட்டுமன்று, பதினுயிரவரை ஆகும். (அந்த அம்புகளின்) விரைவு அத்தன்மையது; (அவற்றை ஏவியவனது) மனக் கருத்தும் அத் தன்மையதே; கண்ணுகிய புலனும் மனமும் (அவற்றைக் காணுதற்கும்) கருதுதற்கும் பயிற்சி யுடையன அல்ல. (அங்ஙனமாகவும்) அரக்கராகிய அவர்கள் வேலை (க் கையில்) எடுப்பதும் (தாம்) சாதல் வேண்டிப் பொருதலுமே யன்றி, (அவராற்) செய்யத்தக்கதொரு நன்றிச் செயலும் உளதோ?

கு:- ஒரு தொடுப்பிலேயே ஆயிரமாக வெளிப்பட்டுச் செல்ல இராமன் ஏவிய கணைகள் ஓரம்புக்கு ஒருவர் என்னும் கணக்கிலன்றி ஓரம்புக்குப் பதின்மர் என்ற அளவில் பதினுயிரம் அரக்கர்களைக் கொல்லும் செயலைப் புரிந்தன எனவும், அவற்றின் விரைவும் தொழிலும் கண்ணுற் காணுதற்கும் மனத்தாற் கருதுதற்கும் ஒண்ணு நிலையில் மேற்பட்டன எனவும், முதல் மூன்றடிகளில் உணர்த்திய ஆசிரியர், இராமபாணத்தின் ஆற்றலை யறிந்த பின்னரும் அரக்கர்கள் தம் கையில் வேற்படையை எடுப்பதும், தம் உயிரைத் துறத்தற் பொருட்டுப் பொருவதுமே யன்றித், தம்மைப் புரந்த தலைவன்பால் தாம் கொண்ட நன்றியுணர்வினைப் புலப்படுத்தும் முறையிற் செய்யத் தக்கதொரு செயல் பிறிதில்லை என்பார், 'வேல் எடுப்பது, படப்பொருவது அன்றி, அவர் செய்வது ஒரு நன்றியுளதோ?' என அவ்வரக்க வீரர்களின் நன்றியுணர்வினை இனிது புலப்படுத்தினர். வேல் எடுப்பதும்,

படப்பொருவதும் அன்றி அவர் செய்வது ஒரு நன்றியுளதோ? என உம்மை விரித்துரைக்க. நன்றி என்றது, நன்றியுணர்வினைப் புலப்படுத்தும் செயலினை. (140)

**9576** தூசியொடு நெற்றியிரு கையிளெடு
பேரணி கடைக்கு ழைதொகுத்
தூசிநுழை யாவகை சரத்தணி
வகுக்குமவை யுண்ணு முயிரை
ஆசைகளை யுற்றுருவு மப்புறமு
மோடுமத னிப்புற முளார்
ஈசனெதி ருற்றுகுவ தல்லதிகன்
முற்றுவதொர் கொற்ற மெவனோ.

தூசியொடு நெற்றி இரு கையிளெடு
பேரணி கடைக்குழை தொகுத்து
ஊசி நுழையா வகை சரத்து அணி
வகுக்கும்; அவை உண்ணும் உயிரை;
ஆசைகளை உற்று உருவும்; அப்புறமும்
ஓடும்; அதன் இப்புறமும் உளார்,
ஈசன் எதிர் உற்று, உகுவது அல்லது,
இகல் முற்றுவது ஓர் கொற்றம் எவனோ?

பொ:- (அரக்கருடைய) முன்னணிப் படையும் நெற்றிப்படையும் இரு பக்கத்துப் படைகளொடு பேரணிப் படையும் பின்னணிப் படையும் ஆகிய சேனைகளை ஒருங்கு அகப்படுத்தி, ஊசியும் (இடையில்) நுழையாதவாறு (இராமன்) அம்பு வரிசைகளை வகைபெறச் செலுத்துவான்; (அவனால் எய்யப்பட்ட அம்புகளாகிய) அவை (அரக்கர்) உயிரை உண்ணுவன; திசைகளைப் பொருந்தி ஊடுருவுவன; (திசைகளின்) அப்புறத்தும் ஓடுவன; அந்த அம்புத் தொகுதியின் இப்புறத்துள்ள அரக்கர்கள் இறைவனாகிய இராமனுக்கு எதிரே பொருந்தி (உயிர்) சிந்துவதல்லது, மாறுபடப் பொருது முடிப்பதொரு வெற்றி யென்பது ஏது?

கு:- தூசி— முன்னணிப்படை; இது 'தார்' எனவும் வழங்கும். நெற்றி—முனைமுகத்து முந்துற்றுப் பொரும் தலைமைச் சேனை. இருகை—இரண்டு பக்கங்களிலும் சென்று பகைவர் சேனையை வளைத்துக் கொள்ளும் கைகோட்படை. கை—பக்கம். பேரணி-போர்க்களத்து நடுவே நிரல்பட வகுத்து நிறுத்தப்படும் பெருஞ்சேனை. கடைக்

கூழை—பகைவரை எதிர்த்து முன்னே நின்று பொரும் சேனைகள் பின்னிடாதவாறு தாங்கி நிற்கும் பின்னணிப் படை. கூழை என்பது சந்தம் நோக்கிக் குழையெனக் குறுகி நின்றது. இவற்றின் வகையினை, 'தூசியும் இரண்டு கையும் நெற்றியும்' (யுத்த) என முன்னரும் ஆசிரியர் குறித்துள்ளமை காணலாம். இச்சேனைகளின் இயல்பினை,

> 'தொண்டர்காள் தூசி செல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
> ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
> திண்டிறற் சித்தர்களே கடைக் கூழை சென்மின்கள்
> அண்டர் நாடாள்வோம் நாம் அல்லற்படை வாராமே'
> (திருப்படையெழுச்சி—2)

என வரும் திருவாசகத்தால் நன்குணரலாம். (141)

**9577** ஊனகு வடிக்கணைக ளுழியன
லொத்தன வுலர்ந்த வுலவைக்
கானக நிகர்த்தன ரரக்கர்மலை
யொத்தன களித்த மதமா
மானவன் வயப்பகழி வீசுவலை
யொத்தன வலைக்குள் வழுவா
மீனகுல மொத்தன கடற்படை
யினத்தொடும் விளிந்த விதலால்.

ஊன் நகுவடிக் கணைகள் ஊழி அனல்
ஒத்தன; உலர்ந்த உலவைக்
கானகம் நிகர்த்தனர் அரக்கர்; மலை
ஒத்தன களித்த மதமா;
மானவன் வயப் பகழி வீசுவலை
ஒத்தன; வலைக்குள் வழுவா
மீனகுலம் ஒத்தன, கடற்படை
இனத்தொடும் விளிந்து அவிதலால்.

பொ:- ஊன் விளங்குகின்ற கூரிய அம்புகள், ஊழிக் காலத்துத் தீயினை ஒத்தன; (அவற்றால் தாக்கப்பட்ட) அரக்கர்கள் (அத்தீயினால் தீர்ந்து கரிந்த) மரங்களுடைய கானகத்தை ஒத்தார்கள்; செருக்குடைய மத யானைகள் (தீயினாற் பிளப்புற்ற) மலையை ஒத்தன; மனுகுலத் தோன்றலாகிய இராமன் ஏவிய வலிய அம்புகள் (கடலில்) வீசப்பட்ட வலையினை ஒத்தன; கடல் போலும் அரக்கர் சேனைகள் இனத்தொடும் இறந்தழிந்

தமையால், அவ்வலைக்குள் தப்பாது அகப்பட்ட மீனின் கூட்டத்தை ஒத்தன.

கு:- நகுதல்—விளங்குதல். வடி—கூர்மை. ஊழி அனல்—யுக முடிவில் தோன்றும் பெருந்தீ. மானவன்—மனுகுலத் தோன்றல்; என்றது இராமனை. (142)

**9578** ஊழியிறு திக்கடுகு மாருதமு
மொத்தன னிராம னுடனே
பூழியென வுக்குதிரு மால்வரைக
ளொத்தன ரரக்கர் பொருவார்
ஏழுலகு முற்றுயிர்கள் யாவையு
முருக்கியிறு திக்கணி லெழும்
ஆழியையு மொத்தனனம் மன்னுயிரு
மொத்தன ரலைக்கு நிருதர்.

ஊழி இறுதிக் கடுகும் மாருதமும்
ஒத்தனன், இராமன்; உடனே
பூழி என உக்கு உதிரும் மால் வரைகள்
ஒத்தனர், அரக்கர், பொருவார்;
ஏழ் உலகும் உற்று உயிர்கள் யாவையும்
முருக்கி, இறுதிக் கணில் எழும்
ஆழியையும் ஒத்தனன்; அம்மன்னுயிரும்
ஒத்தனர், அலைக்கும் நிருதர்.

பொ:- இராமன் ஊழி முடிவில் விரைந்து வீசும் கடுங்காற்றினை, யும் ஒத்தான்; (அங்ஙனம் வீசுதலால்) உடனே புழுதியாய்ச் சிதறி உதிர்கின்ற பெரிய மலைகளை ஒத்தனர், (அந்த இராமனுடன்) பொருப வராகிய அரக்கர்கள்; (அன்றியும் அவ் இராமன்) ஏழுலகங்களையும் பொருந்தி உயிர்கள் எல்லாவற்றையும் அழித்து ஊழி முடிவிற் பொங்கிவருகின்ற கடலையும் ஒத்தனன்; (அவ் இராமனால்) அலைக்கப் படுகின்ற அரக்கர், அந்த (யுக முடிவில் பொங்கும் கடலால் அழிக்கப் படும்) நிலைபெற்ற அந்த உயிர்களையும் ஒத்தனர்.

கு:- இராமன், ஊழி இறுதிக் கடுகும் மாருதமும் ஒத்தனன்; உடனே பொருவார் அரக்கர், பூழி என உக்கு உதிரும் மால் வரைகள் ஒத்தனர்; (இராமன்) ஏழுலகும் உற்று உயிர்கள் யாவையும் முருக்கி

இறுதிக்கணின் வரும் ஆழியையும் ஒத்தனன்; அலைக்கும் நிருதர் அம் மன்னுயிரும் ஒத்தனர் என இயையும். (143)

**9579** மூலமுத லாயிடையு மாயிறுதி
யாயெவையு முற்று முயலுங்
காலமென லாயினனி ராமனவ்
வரக்கர்கடை நாளில் விளியும்
கூலமில் சராசர மனைத்தினையு
மொத்தனர் குரைகடலெழும்
ஆலமென லாயினனி ராமனவர்
மீனமென லாயினர்களால்.

மூல முதல் ஆய், இடையும் ஆய், இறுதி ஆய்,
எவையும் முற்றும் முயலும்
காலம் எனல் ஆயினன் இராமன்; அவ்
அரக்கர் கடை நாளில் விளியும்
கூலம் இல் சர அசரம் அனைத்தினையும்
ஒத்தனர்: குரைகடல் எழும்
ஆலம் எனல் ஆயினன் இராமன்;
அவர் மீனம் எனல் ஆயினர்களால்.

பொ:- (எப்பொருட்கும்) முதற்காரணமாகி, நடுவாகி, முடிவாகி, எல்லாப் பொருளும் முற்றுவதற்கு இடமாகி முயல்கின்ற ஊழிக்காலம் இதுவென்று சொல்லும்படி தோன்றினான் இராமன்; (அவனோடு பொருத) அவ் அரக்கர்கள் யுகமுடிவில் அழிந்தொழியும் அளவில்லாத இயங்குவ நிற்பன வாகிய எல்லாவற்றையும் ஒத்தனர்; ஒலிக்கின்ற கடலினின்றும் எழுந்த ஆலகால நஞ்சு (இவன்) என்னும்படி தோன்றினான் இராமன்; (அந்நஞ்சினால் மாண்ட) மீன்களை ஒத்து அழிந்தனர் அரக்கர்கள்.

கு:- இராமனுக்கு ஊழிக் காலத்தினையும் ஆலகால நஞ்சினையும் உவமை கூறியது, தன்னெதிர்ப்பட்ட அரக்கர் குலமனைத்திற்கும் ஒருங்கே இறுதி விளைத்தல் பற்றியென்க. கடைநாள்—ஊழிமுடிவாகிய இறுதிநாள். கூலம்—அளவு; எல்லை. சர அசரம்—இயங்குவ நிற்பன வாகிய உயிர்த் தொகுதிகள். (144)

**9580** வஞ்சவினை செய்துநெடு மன்றில்வள
னுண்டுகரி பொய்க்கு மறமார்
நெஞ்சமுடை யோர்கள்குல மொத்தன
ரரக்கரற மொக்கு நெடியோன்
நஞ்சநெடு நீரினையு மொத்தன
னடுத்ததனை நக்கு நரையும்
பஞ்சமுறு நாளில்வறி யோர்களையு
மொத்தன ரரக்கர் படுவார்.

வஞ்ச வினைசெய்து, நெடுமன்றில் வளன்
உண்டு, கரி பொய்க்கும் மறம் ஆர்
நெஞ்சம் உடையோர்கள் குலம் ஒத்தனர்
அரக்கர்; அறம் ஒக்கும் நெடியோன்;
நஞ்ச நெடுநீரினையும் ஒத்தனன்;
அடுத்து அதனை நக்குநரையும்,
பஞ்சம் உறுநாளில் வறியோர்களையும்
ஒத்தனர், அரக்கர், படுவார்.

பொ:- வஞ்சகத் தொழிலைச் செய்து பெருமைவாய்ந்த நீதி மன்றத்திலே (கைக்கூலியாகிய) பொருளைப் பெற்று உண்டு பொய்ச் சான்று கூறும் தீவினை பொருந்திய (வலிய) நெஞ்சமுடைய தீயோர் கூட்டத்தை யொத்து அழிவுற்றனர் (இராமனொடு பொருத) அரக்கர்கள்; நெடியோனாகிய இராமன் (அன்பில்லாத கொடியோர் களைக் காய்ந்து ஒறுக்கும்) அறக்கடவுளை ஒத்துத் தோன்றினான். (அதுவேயுமன்றி) நச்சு நீர்க்கடலையும் ஒத்துத் தோன்றினான் (அவ் விராமன்). இறந்து படுவாராகிய அரக்கர்கள் அந் நச்சுநீரைப் பொருந்தி நக்கிப் பருகினவர்களையும், பஞ்சம் வந்த காலத்து (உணவின்றி நலிந்த) வறியோர்களையும் ஒத்து நலிவுற்றழிந்தனர்.

கு:- வஞ்சவினை—வஞ்சனையுடன் கூடிய செயல். மன்று—நீதி மன்றம். வளன் உண்ணுதல் என்றது கைக்கூலியாகிய பொருளைப் பெற்று உயிரோம்புதலை. கரிபொய்த்தல்—பொய்ச் சான்று பகர்தல். 'கரி பொய்த்தான் கீழிருந்த மரமே போற் கவின் வாடி' (குறிஞ்சிக்கலி) என வரும் தொடர் இங்கு நினைத்தற்குரியதாகும். நீதிமன்றிற் பொய்ச் சான்று கூறியவர் அறக் கடவுளால் ஒறுக்கப்பட்டழியுமாறு போன்று தீவினையாளராகிய அரக்கர்களும் அறவுருவினனாகிய இராமனால் ஒறுக்கப்பட் பட்டழிந்தனர் என்பது இச் செய்யுளின் முதலிரண்டடி களின் கருத்து. நஞ்ச நெடுநீர்— நச்சு நீர்க்கடல். நெடுநீர்—கடல்.

நச்சுநீரை நக்கிப் பருகினோர் உணர்விழந்து இறத்தல் போலவும் நுகர்தற்குரிய உணவின்றி வருந்திய வறியோர் வாட்டமுற்று உயிர் துறத்தல் போலவும் இராமனொடு பொருத அரக்கர் பலரும் நலிவுற்று உயிர் துறந்தனர் என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. (145)

### அரக்கர் இறந்துபடப் பெருகிய குருதி வெள்ளம் இலங்கை நகரத்தினுள்ளும் சென்று புக்கமை கண்டு அரக்கியர் அலறி ஓடுதல்

**9581** வெள்ளமொரு நூறுபடும் வேலையிலவ்
வேலையு மிலங்கை நகரும்
பள்ளமொடு மேடுதெரி யாதவகை
சோர்குருதி பம்பி யெழலும்
உள்ளுமதி லும்புறமு மொன்றுமறி
யாதலறி யோடி னர்களால்
கள்ளநெடு மான்விழி யரக்கியர்
கலக்கமொடு கால்கள் குலைவார்.

வெள்ளம் ஒருநூறுபடும் வேலையில்,
அவ் வேலையும் இலங்கை நகரும்,
பள்ளமொடு மேடு தெரியாத வகை
சோர் குருதி பம்பி எழலும்,
உள்ளும் மதிலும் புறமும் ஒன்றும்
அறியாது அலறி ஓடினர்களால்,
கள்ள நெடு மான்விழி அரக்கியர்
கலக்கமொடு கால்கள் குலைவார்.

பொ:- ஒரு நூறு வெள்ளம் சேனை இறக்கும்பொழுது அக் கடலும் இலங்கை நகரமும் பள்ளமும் மேடும் (இன்னதென்று) தெரியாதவாறு பெருகிவரும் குருதிநீர் நிரம்பி மேலே எழுந்த அளவில் கள்ளத்தன்மை பயின்ற நெடிய மான் நோக்கம் போலும் மருட்சி வாய்ந்த அரக்க மாதர்கள், இலங்கை நகரின் உட்பகுதியும் காவல் மதிலும் (மதிலின்) வெளிப்புறமும் ஆகிய ஒன்றும் தெரியாமல் மனக் கலக்கத்துடன் கால்கள் வலி தளர்வுற்றவராய் அலறிக்கொண்டு ஓடினார்கள்.

கு:- வேலை—பொழுது. வேலை—கடல். கள்ளநெடுமான் விழி அரக்கியர் என அம் மகளிரது இளமைச் செவ்வியும், உள்ளு மதிலும் புறமும் ஒன்றும் அறியாது கலக்கமொடு கால்கள் குலைவார் அலறி ஓடினர்கள் என அவர்களது அவலநிலையும் ஒருங்குணர்த்தியவாறு. (146)

நூறுசதகோடி யளவினராகிய படைத் தலைவர்கள் தமது சேனை பின்னிடாதவாறு தாங்கி நின்று இராமனொடு பொருதல்

**9582** நீங்கினர் நெருங்கினர் முருங்கின
ருலைந்துலகி னீளு மலைபோல்
வீங்கின பெரும்பிணம் விசும்புற
வசும்புபடு சோரி விரிவுற்
றோங்கின நெடும்பரவை யொத்துயர
வெத்திசையு முற்றெதிருறத்
தாங்கினர் படைத்தலைவர் நூறுசத
கோடியர் தடுத்த லரியார்.

நீங்கினர், நெருங்கினர் முருங்கினர்,
உலைந்து; உலகின் நீளும் மலைபோல்
வீங்கின, பெரும்பிணம் விசும்புஉற;
அசும்புபடுசோரி விரிவுற்று,
ஓங்கின, நெடும்பரவை, ஒத்து உயர
எத்திசையும் உற்று எதிர் உற;
தாங்கினர், படைத்தலைவர், நூறுசத
கோடியர் தடுத்தல் அரியார்.

பொ:- (முன்னர்) நீங்கிய சேனைத் தலைவர்களாகிய அரக்கர்கள் (மீண்டும்) (இராமனை) நெருங்கியவராய்ச் சிதைந்து அழிந்தனர்; (அவர்களுடைய உடலாகிய) பெரும் பிணம் உலகத்து நீண்டுயர்ந்த மலைகளைப் போன்று வானமுகட்டளவும் பொருந்த மிக்குத் தோன்றின; (அப்பிணங்களினின்றும்) ஊற்றெடுத்துப் பெருகிய குருதிநீர், நீண்ட கடலையொத்து (அலைகள்) மிக்கு உயர எல்லாத் திசைகளிலும் விரிந்து பரவி மேலோங்கின; பகைவரால் தடுத்து நிறுத்தவொண்ணாத ஆற்றல்மிக்க படைத்தலைவர்கள் நூறு நூறு கோடி என்னும் அளவினராய் (இராமனை) எதிர்நின்று தடுத்துப் பொருதார்கள்.

கு:- எதிருறத் தாங்குதல்—எதிர் சென்று தடுத்து நிறுத்தல். நூறு சதகோடி—நூறு நூறு கோடி; பதினாயிரங் கோடி. (147)

9583 தேருமத மாவும் வரை யாளியொடு
வாசிமிகு சீய முதலா
ஊருமவை யாவையு நடாயினர்
கடாயினர்க ளுந்தி னர்களால்
காருமுரு மேறுமெரி யேறுநிகர்
வெம்படையொ டம்பு கடிதின்
தூரும்வகை தூவினர் துரந்தனர்க
ளெய்தனர் தொடர்ந்தனர்களால்.

தேரும், மத மாவும், வரை ஆளியொடு
வாசி, மிகு சீயம், முதலா
ஊரும் அவை யாவையும் நடாயினர்,
கடாயினர்கள், உந்தினர்களால்;
காரும் உரும் ஏறும் எரி ஏறும் நிகர்
வெம்படையொடு அம்பு கடிதின்
தூரும் வகை தூவினர்; துரந்தனர்கள்,
எய்தனர், தொடர்ந்தனர்களால்.

பொ:- (அரக்கர் படைத் தலைவர் யாவரும்) தேரும் மதம் பொருந்திய யானையும், மலையிடத்தே வாழும் யாளிகளோடு குதிரை சிங்கம் முதலாக ஊர்தியாக வுள்ளவற்றையும் நடத்தினார்கள்; செலுத்தினார்கள், உந்தினார்கள்; மேகமும் பேரிடியும் பெருந்தீயும் ஒத்த கொடிய படைக் கலங்களுடனே அம்புகளையும் விரைவின் (போர்க் களம் முழுதும்) தூர்ந்து மேடாகும்படி (பலவாகச்) சொரிந்தார்கள், விரைந்து செலுத்திய வண்ணம் (இராமனை) நெருங்கத் தொடர்ந் தார்கள்.

கு:- ஊரும் அவை—ஊர்தியாகக் கொண்டு செலுத்தத் தக்க அவை. நடாவுதல், கடாவுதல், உந்துதல் என்பன அவ் வூர்திகளைச் செலுத்தும் தொழில் வகையைச் சுட்டி நின்றன. (148)

9584 வம்மினட வம்மினெதிர் வந்துநும
தாருயிர் வரங்கள் பிறவும்
தம்மினென வின்னன மொழிந் தெதிர்
பொழிந்தன தடுப்பரிய வாம
வெம்மினென வெம்பகழி வேலையென
வேயினனவ் வெய்ய வினையோர்
தம்மின மனைத்தையு முனைந்தெதிர்
தடுத்தனன் தனித்தனியரோ.

'வம்மின், அட, வம்மின்! எதிர் வந்து, நுமது
ஆர் உயிர் வரங்கள் பிறவும்,
தம்மின்' என இன்னன மொழிந்து, எதிர்
பொழிந்தன, தடுப்ப அரியவாம்
வெம்மின் என, வெம்பழி வேலை என
ஏயினன்; வெய்ய வினையோர்
தம் இனம் அனைத்தையும் முனைந்து எதிர்
தடுத்தனன், தனித்தனி அரோ.

பொ (இராமன், தன்னை எதிர்த்த அரக்க வீரர்களை நோக்கி) 'வாருங்கள், (யான், நும்மைக்) கொல்லுதற்கு வாருங்கள்; என் எதிரே வந்து நுமது அரிய உயிரையும் (நீவிர் பெற்றுள்ள) வரங்களையும் பிற வற்றையும் தந்து ஒழிமின்' என்று இம் மொழிகளைச் சொல்லிக் கொண்டு, (அவ் வரக்கர்கள்) எதிர் முகமாகப் பொழிந்தனவும் (பிறரால்) தடுத்தற்கு இயலாதனவவும் ஆகிய படைக்கலங்கள் வெவ்விய மின்னல் களை யொத்துத் தோன்ற, (அவற்றின் மேல்) கொடிய அம்புகளைக் கடல் என ஏவியவனுகிய, அக் கொடுந் தொழிலாளராகிய அரக்கர் கூட்டம் அத்தனையும் தனித்தனி எதிர் நின்று தடுத்து நிறுத்தினுன் (இராமன்).

கு:- அட—கொல்லுதற்கு; செய வென் வினைச்சம் 'வம்மின்' எனப் பிற கருத்தாவின் தொழில் கொண்டு முடிந்தது. 'வம்மின், அட வம்மின், வந்து நுமது ஆருயிர் வரங்கள் பிறவும் தம்மின்' என்றது, இராமன் அரக்கர் படைத் தலைவர்களை நோக்கிக் கூறிய அறைகூவல். எதிர் பொழிந்தன என்றது, அரக்கர்கள் இராமனெதிர் நின்று சொரிந்த படைக் கலங்களை யொத்துத் தோன்ற, அவற்றின் மேல் இராமன், கடல் என அம்புகளை நிறையச் செலுத்தினுன் என்பதாம். (149)

அரக்கரது கடும் போர் கண்டு அஞ்சிய தேவர்கள்
சிவபெருமானை யடைந்து வணங்கி நின்று,
'இப் போரின் நிலை யாதாகும்?' என வினவுதல்

9585 அக்கணையை யக்கண மறுத்தனர்
செறுத்திக லரக்க ரடையப்
புக்கணைய லுற்றனர் மறைத்தனர்
புயற்கதிகம் வாளி பொழிவார்
திக்கணை வகுத்தன ரெனச் செல
நெருக்கினர் செருக்கின் மிகையால்
முக்கணனை யுற்றடி வணங்கியிமை
யோரிவை மொழிந்த னர்களால்.

அக்கணையை அக்கணம் அறுத்தனர்
செறுத்து, இகல் அரக்கர் அடைய,
புக்கு அணைய லுற்றனர், மறைத்தனர்
புயற்கு அதிகம் வாளி பொழிவார்,
திக்கு அணை வகுத்தனர் எனச் செல
நெருங்கினர்; செருக்கின் மிகையால்;
முக்கணனை உற்று அடி வணங்கி
இமையோர் இவை மொழிந்தனர்களால்.

பொ:- (இராமனால் ஏவப்பட்ட) அந்த அம்புகளைத் துண்டித்துப் போக்கியவர்களாய், வலிமிக்க அரக்கர்கள் வெகுண்டு ஒரு சேரப் புகுந்து (இராமனை) நெருங்கத் தொடங்கினார்கள்; மழைத் துளி யினும் மிகுதியான அம்புகளைச் சொரிபவர்களாய் (அவனை) மறைத் தார்கள்; செருக்கின் மிகுதியால் திசைக்கு அணை வகுத்தனர் என்று சொல்லும்படி (அவனை) மிகவும் நெருங்கி நின்றார்கள்: (அது கண்டு கலக்க முற்ற) தேவர்கள் முக்கட் பெருமானாகிய இறைவனை அடைந்து திருவடிகளை வணங்கி (ப் பின்வரும்) இம் மொழிகளைக் கூறினார்கள்.

கு:- அக்கணை என்றது, வேலையென இராமனால் ஏவப்பட்ட அம்புகளை. இகல் அரக்கர் அக்கணையை அறுத்தனர், செறுத்து அடையப் புக்கு (இராமனை) அணையலுற்றனர்; புயற்கு அதிகம் வாளி பொழி வார், மறைத்தனர்; செருக்கின் மிகையால் திக்கு அணை வகுத்தனர் என, செல நெருக்கினர் எனவும், இமையோர், முக்கணனை உற்று அடி வணங்கி இவை மொழிந்தனர்கள் எனவும் இரு தொடர்களாக முடிக்க. (150)

**9586** படைத்தலைவ ருற்றொருவர் மும்மடி
யிராவண னெனும் படிமையோர்
கிடைத்தன ரவர்க்கொரு கணக்கில
வளைத்தனர் கிளர்ந்து லகெலாம்
அடைத்தனர் தெழித்தன ரழித்தனர்
தனித்துள னிராம னவரோ
துடைத்தனரெம் வெற்றியென வுற்றன
ரினிச்செயல் பணித்தி சுடரோய்.

'படைத்தலைவர் உற்று ஒருவர் மும்மடி
இராவணன் எனும் படிமையோர்;
இடைத்தனர் அவர்க்கு ஒரு கணக்கு இலை;
வளைத்தனர் கிளர்ந்து உலகுஎலாம்

அடைத்தனர், தெழித்தனர், அழித்தனர்,
தனித்து உளன் இராமன், அவரோ
துடைத்தனர் எம் வெற்றி என உற்றனர்;
இனிச் செயல் பணித்தி சுடரோய்!

பொ:-(இப்) படைத்தலைவர்களில் ஒவ்வொருவரும் இராவணனின் மும்மடங்கு எனச் சொல்லத்தக்க வீரத்தன்மை யுடையவர்களாய்ப் பொருந்தி நேர்ந்தனர்; அவர்களுக்கு ஓர் அளவில்லை; (அவர்கள்) கிளர்ந்தெழுந்து வளைத்தனராகி உலகின் எல்லாப் பக்கத்தையும் அடைத்துக் கொண்டு உரப்பியவர்களாய் அழிக்க லுற்றுர்கள்; இராமன் தனித்துள்ளான்; அவ்வரக்கர்களோ எமது வெற்றியைத் துடைத்துப் போக்கினர்; சுடர் வண்ணனாகிய பெருமானே! இனி நிகழும் செயல் யாதுளது ? (அதனைப்) பணித்தருள்வாயாக.

கு:- இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். மும்மடி—மூன்று மடங்கு. படைத் தலைவர்களில் ஒவ்வொருவரும் இராவணன் வலிமையைப் போன்று மூன்று மடங்கு வலிமை நிரம்பியவர் என்பார். 'ஒருவர், மும்மடி இராவணன் எனும் படிமையோர்' என்றார். படிமை, என்றது ஈண்டு வீரத் திறத்தினை. உற்றுக் கிடைத்தனர் என இயையும். கிடைத்தல்—நேர் படுதல். துடைத்தல்—அழித்து இல்லை யாக்குதல். (151)

இதன்பின் 45, 52-ல் பின்வரும் மிகைப்பாடல் உளது:-

9586 a ஈதவர் சொலக்கயிலை யீசனும் நகைத்
திமையவர்க்கு மொளிவான்
ஓதலி லரும்பிரமதத்துவ முதற்
கடவுள் யாமுமுணராப்
பேதமுறு மாயைபல பேணி விளையாடுதல்
செய்யாது பெருமான்
நீதவுருவங்கொளு மிராமன் எனவே சுருதி
நின்ற மொழி பொன்றி விடுமோ.

**9587** எய்தகணை யெய்துவதன் முன்பிடை
யறுத்திவர்க ளேழு லகமும்
பெய்தகணை மாமுகி லெனப்புடை
வளைத்தனர் பிடித்தனர்கள் போய்
வைதகலி னல்லது மறப்படை
கொடிப்படை கடக்கும் வலிதான்
செய்யதிரு மாலினெ டுனக்குமரி
தென்றனர் திகைத்து விழுவார்.

'எய்த கணை எய்துவதன் முன்பு, இடை
அறுத்து, இவர்கள் ஏழ்உலகமும்
பெய்த கணை மாமுகில் எனப்புடை
வளைத்தனர், பிடித்தனர்கள் போய்;
வைது அகலின் அல்லது மறப்படை,
கொடிப்படை, கடக்கும் வலிதான்
செய்ய திருமாலினொடு உனக்கும் அரிது'
என்றனர், திகைத்து விழுவார்.

பொ:- (இராமன்) எய்த அம்புகள் (தம்மை) வந்தடைவதற்கு முன்பு இடை வழியிலேயே (அக்கணைகளை) அறுத்து நீக்கி, இவ் அரக்கர்கள் ஏழுலகங்களிலும் மொய்த்து நெருங்குதலைக்கொண்ட கரு மேகங்கள் போன்று பக்கத்தே சூழ்ந்து கொண்டவர்களாய் வெகுண்டுள்ளார்கள். (இவர்களைச்) சபித்துக் கொன்றால் கொல்லலாமே தவிர, வீரத்தை விளக்கும் படைக் கலங்களைக் கொண்டு இந்தச் சேனையை வெற்றி கொள்ளுதலென்பது செந்நிறமுடைய திருமகளின் நாயகனாகிய திருமாலோடு (அழித்தற் கடவுளாகிய) உனக்கும் அரியதாகும்' என்று கூறியவர்களாய்த் திகைத்து வீழ்ந்தார்கள். (தேவர்கள்).

கு:- இவ்வரக்கர்களை ஆற்றல் மிக்க தெறு மொழிகளாகிய சாபத்தாலன்றி, அளவுட் பட்ட ஆற்றலையுடைய படைக்கலங்களாற் கொன்று ஒழிப்பதென்பது, யாவரையும் வாழ்விக்கவும் அழித்துப் போக்கவும் வல்ல திருமால் சிவன் ஆகிய இருபெருந் தெய்வங்களாலும் இயலாத செயலாம் என்பார், 'வைது கொ(ல்)லினன்றி, மறப்படை கொடு இப்படை கடக்கும் வலிதான் செய்ய திரு மாலினொடு உனக்கும் அரிது' என்றனர். செய்ய என்பது திருவுக்கு அடைமொழி. திருமால் என்பது திருவை (மார்பகத்தே) உடைய மால் என விரியும். காத்தற் கடவுளாகிய திருமாலுக்கேயன்றி எல்லாவற்றையும் முற்ற அழித்தல் வல்ல சிவபெருமானாகிய உனக்கும் அரிது என்பதுபட 'உனக்கும்' என உம்மை கொடுத்துக் கூறினர். (152)

சிவபெருமான் தேவர்களது அச்சத்தைப் போக்கி, அரக்கரை அழித்து இராமனே வெற்றி பெறுவான் எனத் தெளிவித்தல்

9588 அஞ்சியய ரன்மினவ ரெத்தனைய
ராயிடினு மத்த னைவரும்
பஞ்சியெரி யுற்றதென வெந்தழிவ
ரிந்தவுரை பண்டு முளதால்

நஞ்சமமு தத்தைநனி வென்றிடினு
நல்லற நடக்கு மதனை
வஞ்சவினை பொய்க்கருமம் வெல்லினு
மிராமனையவ் வஞ்சர் கடவார்.

"அஞ்சி அயரன்மின்! அவர் எத்தனையர்
ஆயிடினும், அந்தனைவரும்,
பஞ்சி எரிஉற்றதென, வெந்து அழிவர்:
இந்த உரை பண்டும் உளதால்;
நஞ்சம் அமுதத்தை நனிவென்றிடினும்,
நல் அறம் நடக்கும் அதனை
வஞ்ச வினை பொய்க்கருமம் வெல்லினும்,
இராமனை அவ்வஞ்சகர் கடவார்.

பொ:- (தேவர்களாகிய நீங்கள்) அஞ்சி வாட்ட முறுதீர்கள். அரக்கர்கள் எத்துணை பேர் இருந்தாலும் அத்துணை பேரும் பஞ்சில் நெருப்புப் பற்றினாற் போன்று வெந்து ஒழிவர். இந்தப் பேச்சு நெடுங் காலத்து முன்னரும் (பேசப்பட்டு) உள்ளதாகும். நஞ்சமானது அமிழ்தத்தை மிகவும் வெற்றி கொண்டாலும், (உலகில்) நடைபெறும் நல்லறத்தினை வஞ்சமும் பொய்ம்மையும் மலிந்த தீவினையாகிய பாவம் வென்றாலும், மாயச் செயலையுடைய அவ்வரக்கர்கள் இராமனை வெல்ல மாட்டார்கள்.

கு:- இது முதல் மூன்று செய்யுட்கள் ஒரு தொடராய் அமைந்தன. வென்றிடினும், வெல்லிலும் என்புழி உம்மை எதிர்மறை; வெல்லாது என்பதாம். வெல்லுதல்—பகையானவற்றைக் கீழ்ப்படுத்துத் தான் மேற்பட்டு விளங்குதல். 'பஞ்சி எரியுற்றது என' என்பதனை எரியுற்ற பஞ்சியென என்று மாற்றி, 'நெருப்பினாற் பற்றப்பட்ட பஞ்சு போன்று' எனப்பொருள் உரைக்க. பஞ்சி—பஞ்சு. (153)

9589 அரக்கருள ரார்சிலரவ் வீடணன
லாதுலகி னுவி யுடையார்
இரக்கமுள தாகியது நல்லறமெ
ழுந்துவளர் கின்ற தினிநீர்
கரக்கமுழை தேடியுழல் கின்றிலிர்க
ளின்றொரு கடும்ப கலிலே
குரக்கின்முத லுயகனை யாளுடைய
கோளுழுவை கொல்லு மிவரை.

'அரக்கர் உளர் ஆர்சிலர், அவ் வீடணன்
அலாது, உலகின் ஆவி உடையார்?
இரக்கம் உளது ஆகியது; நல்அறம்
எழுந்து வளர்கின்றது; இனிநீர்
கரக்க, முழைதேடி உழல்கின்றிலிர்கள்;
இன்று ஒரு கடும்பகலிலே
குரக்கின் முதல் நாயகனை ஆளுடைய
கோள் உழுவை கொல்லும், இவரை.

பொ:- அரக்கர் இனத்தவராக உள்ளார் சிலரில் அந்த வீடணனை யன்றி உலகில் உயிருடையாராக வேறு யார்தாம் உள்ளவர்கள்? (அவ் அரக்கர்கள் இலராகவே) இரக்கம் என்பதொரு குணம் (உயிர் கள் பால்) நிலை பெற்றுள்ளதாகியது; (அக்குணத்தின் துணை பெற்று) நல்லறம் மேம்பட்டு வளர்கின்றது. இனி (தேவர்களாகிய) நீங்கள் (அரக்கர்க்கு அஞ்சி) மறைந்துறைய மறைவிடம் தேடித் திரிவீரல்லீர். குரங்கின் மன்னனாகிய சுக்கிரீவனை ஆளாகவுடைய வலிமிக்க புலி யனைய இராமன் இன்று நண்பகலிலேயே இவ்வரக்கர்களைக் கொன்று தீர்ப்பான்.

கு:- அரக்கர் உளாரி சிலருள் அவ்வீடணன் அல்லாது உலகில் ஆவியுடையார் ஆர்? என இயையும். இரக்கம்—பிற உயிர்கள் படுந் துயர் கண்டு ஆற்றாது அத்துயரினைத் துடைக்க முந்துறும் பண்பு. இரக்கத்திற்குப் பகையாகிய அரக்கர் தொலையவே அப்பண்பு உயிர் கள் பால் நிலைபெற, அதன் துணைபெற்று நல்லறம் இவ்வுலகில் மேம் பட்டு வளர்கின்றது என்பதாம். குரக்கின் முதல் நாயகன்—சுக்கிரீ வன். கோள் உழுவை—வலியுடைய புலி; என்றது, உவம ஆகுபெய ராய் இராமனை உணர்த்தியது. இவர் என்றது, அரக்கர் படைத்தலை வர்களை. குரக்கின் முதல் நாயகனை ஆளுடைய கோள் உழுவை, இவரைக் கொல்லும் என இயைக்க. (154)

## அம்மொழி கேட்டு அயல் நின்ற பிரமனும் அதுவே நிகழும் என உடன் பட்டுரைக்க அப்பொழுது இராமன் அம்புமழையினால் அரக்கர் தலைகளை மலை போற் குவித்தல்

9590 என்றுபர மன்பகர நான்முகனு
மன்னபொரு ளேயி சைதலும்
நின்றுநிலை யாறினர்கள் வானவர்கள்
மாளவனு நேமி யெனலாம்

வென்றி நெடு வாளிமழை மாரியினு
மேலன துரந்து விரைவில்
கொன்று, குல மால்வரைகள் மானுதலை
மாமலை குவித்த னனரோ.

என்று பரமன் பகர, நான்முகனும்
அன்ன பொருளே இசைதலும்,
நின்று நிலை ஆறினர்கள் வானவர்கள்;
மானவனும் நேமி எனலாம்
வென்றி நெடு வாளி மழை, மாரியினும்
மேலன துரந்து, விரைவில்
கொன்று, குல மால் வரைகள் மானு தலை
மாமலை குவித்தனன் அரோ.

**பொ:-** என்று, பரம்பொருளாகிய சிவபெருமான் சொல்லியருள, நான்முகனாகிய பிரமனும் அம் மொழிப் பொருளையே உடன்பட்டு ஏற்ற அளவில், தேவர்களும் (திகைப்பு ஒழித்து) நின்று ஆற்றாநிலையின தாகிய துயரந்தணிந்தனர். மனுகுலத்தில் தோன்றியவனாகிய இராமனும், ஆழிப்பெரும்படை யெனத்தகும் வெற்றியைத் தரும் நீண்ட அம்புகளை மேகத்தினும் மிக்கனவாகச் செலுத்தி விரைவிலே (அவ்வரக்கர்களைக்) கொன்று, குலமலைகளைப் போலும் தலைகளைப் பெரிய மலையாகக் குவித்தனன்.

**கு:-** பரமன் என்றது, சிவபெருமானை, மானவன்—மனுகுலத் தோன்றல்; என்றது, இராமனை. நேமி—சக்கரம். இராமன் ஏவிய அம்புகள் தப்பாமல் பகைவர் தலைகளை அறுத்தலால், 'நேமி எனலாம் வென்றி நெடு வாளி' எனச் சிறப்பித்தார். இராமன் ஏவிய அம்புகளால் அறுப்பட்ட அரக்கர் தலைகள் பெரிய மலைகளை ஒத்துக் குவிந்தன என்பதாம். (155)

அரக்கர் உயிர் துறக்கம் புக அவர்களுடைய உடல்கள் பூமியிற் சிதைவுற்றுக் கிடக்க, எங்கும் வழியில்லை யாதல்

9591 மகர மறிகடலின் வளையும் வயநிருதர்
சிகர மனையவுடல் சிதறி யிறுவருயிர்
பகர வரியபதம் விரவ வமரர் பழ
நகர மிடமருக நவையர் நலிவுபட.

மகர மறி கடலின் வளையும் வய நிருதர்
சிகரம் அனைய உடல் சிதறி, இறுவர் உயிர்—
பகர அரிய பதம் விரவ, அமரர் பழ
நகரம் இடம் அருக, நவையர் நலிவுபட.

பொ:- மகரமீன்கள் உலவும் கடலைப் போன்று (இராமனைச்) சூழ்ந்து கொண்ட வலிமைமிக்க அரக்கராகிய தீவினையாளர்கள், (தமது) உயிர் செல்லுதற்கு அரிய துறக்க பதவியை அடையவும், தேவர்களுடைய தொன்மை வாய்ந்த நகரமாகிய விண்ணுலகம் இடம் சுருங்கவும், மலைச்சிகரத்தை ஒத்த உடல் சிதறுண்டு வருத்தமுற முறி வுற்று முடிவர்.

கு:- மகரம் மறிகடல்—மகர மீன்கள் உலாவும் பெருங்கடல். கடலின்—கடல் போன்று. இன் உவமவுருபு. வளைதல்—சூழ்தல். அருகுதல்—சுருங்குதல். இறுதல்—முறிதல்; அழிதல். கடலின் வளை யும் வய நிருதராகிய நவையர், (தம்) உயிர், பகர அரிய பதம் விரவ அமரர் பழநகரம் இடம் அருக, சிகரம் அனைய உடல் சிதறி, நலிவுபட இறுவர் என இயையும் பகர அரியபதம் என்றது, இன்ன தன்மைத் தென உணர்ந்து உரைத்தற்கரிய பெருஞ் சிறப்பினதாகிய துறக்கவுல கினை. வய—வலி. நவை—குற்றம். வயநிருதர் நவையர் ஆயினும் வீரத்தில் வழுவாது நின்று போரில் உயிர் கொடுத்தமையால் தேவரு லகம் இடம் சுருங்க அவர்களுடைய இனிய உயிர்கள் துறக்க வுலகினை அடைந்தன என்பதாம். (156)

இதன் பின் 45, 52-ல் பின்வரும் மிகைப்பாடல் உளது:-

பாறு தொடர் பசழி மாரி நிரைகள் பட
நீறு படுமிரத நிரையி னுடல் தவிர
வேறு படரவடர் விரவுசுடர் வலையம்
மாறு படவுலகின் மலைகளவிறு பட.

**592** உகளு மிவுளிதலை துமிய வுறுகழல்கள்
தகளி யுறவலிய தலைக ளறுதலைவர்
துகளி னுடல்கள்விழ வுயிர்கள் சுரருலகின்
மகளிர் வனமுலைக டழுவி யகமகிழ.

உகளும், இவுளிதலை துமிய—உறுகழல்கள்
தகளியுற வலிய தலைகள் அறு தலைவர்
துகளின் உடல்கள் விழ, உயிர்கள் சுரர் உலகின்
மகளிர் வன முலைகள் தழுவி அகம் மகிழ.

பொ:- பொருந்திய வீரக் கழலினையுடைய கால்கள் (துணிக்கப் பட்டுத்) தகழியினை ஒத்துத் தோன்ற, வலிய தலைகள் கீழே விழுந்து அறுபட்ட அரக்கர்படைத்தலைவர்களின் புழுதியினை யுடைய உடல்கள் கீழே விழ, அவர்கள் உயிர்கள் தேவருலகிலுள்ள அரமங்கையர்களின் அழகிய தனங்களைத் தழுவி மனம் மகிழ (அவர்கள் ஏறி நடத்திய) குதிரைகள் தலை துணிக்கப்பட (ப்போர்க்களத்திலே) தாவுவன.

கு:- அரக்கர் செலுத்திய குதிரைகளின் வீரவுணர்வினைப் புலப் படுத்தும் முறையில் அமைந்தது இச் செய்யுள். உறுகழல்கள் தகளி உற, வலிய தலைகள் அறுதலைவர் துகளின் உடல்கள் விழ, உயிர்கள், சுரர் உலகின் மகளிர் வனமுலைகள் தழுவி அகம்மகிழ, இவுளி தலை துமிய உகளும் என இயையும். இவுளி—குதிரை. உகளுதல்—தாவிக் குதித்தல். தகளி—அகல் விளக்கு. உறுதல்—ஒத்தல். (157)

**9593** மலையு மறிகடலும் வனமும் வறுநிலமும்
உலைவி லமரருறை யுலகு முயிர்களொடு
தலையு முடலுமிடை தழுவு தவழ்குருதி
அலையு மரியதொரு திசையு மிலதணுக.

மலையும், மறி கடலும், வனமும், வறு நிலமும்,
உலைவு இல் அமரர் உறை உலகும், உயிர்களொடு
தலையும் உடலும் இடை தழுவு தவழ்குருதி
அலையும்; மரியது ஒருதிசையும் இலது, அணுக.

பொ:- மலைகளும் (அலைகள்) மடங்கும் கடலும் காடும் (நீரற்ற) வறுநிலமும் அழிதல் இல்லாத தேவர்கள் தங்கி வாழும் வானுலகமும் ஆகிய எல்லா விடங்களிலும் (அரக்கரின்) உயிர்களோடு (அவர்தம்) தலைகளும் உடல்களும் இடையிடையே அகப்பட்டுக் கொண்டு தவழும் குருதி வெள்ளம் அலைவனவாயின. (அவ் வெள்ளத்தினின்றும் தப்பி) அணுகுதற்குப் பொருந்தியதொரு திசையும் இடம் இலதாயிற்று.

கு:- மண்ணுலகில் நானிலப் பரப்புக்களிலும் வானுலகிலும், இறந்துபட்ட அரக்கர்களின் குருதி வெள்ளம் சென்றலைத்தலால் அவ் வெள்ளத்தினின்றும் தப்பி அணுகுதற்குப் பொருந்திய ஒரு திசையும் இடம் இல்லாததாயிற்று. மரீஇயது எனற்பாலது. மரியது எனக் குறுகியது; 'மரியவன்' (சீவக. 1211) என வருதல் இங்கு ஒப்புநோக்கத் தகும். (158)

## அரக்கர் தலைவர்கள் பலரும் இறந்துபட, அமரர் சொரிந்த மலர்கள் மழைபோல எங்கும் பரவிக் கிடத்தல்

9594 இனைய செருநிகழு மளவி னெதிர்பொருத
வினைய முடைமுதல்வ ரெவரு முடன்விளிய
அனைய படைநெளிய வயவ ரழிகுருதி
நனைய விசையினெழு துவலை மழைநலிய.

இனைய செருநிகழும் அளவின், எதிர்பொருத
வினையமுடைய முதல்வர் எவரும் உடன் விளிய.
அனைய படை நெளிய, வயவர் அழி குருதி
நனைய விசையின் எழுதுவலை மழை நலிய.

பொ:- இத்தகைய போர் நிகழும்பொழுது எதிர்நின்று பொருத வஞ்சனைச் சூழ்ச்சியினையுடைய சேனைத் தலைவராகிய அரக்கர் யாவரும் ஒருங்கே இறந்துபட, அத்தகைய (தலைவரை யிழந்த) சேனை தளர்ந்து வருந்த, வீரர்கள் அழிந்துபட்டமையா லுண்டாகிய குருதி நீரால் (உடல்) நனையும்படி விசையோடு (பீரிட்டு) மேலெழுந்த துளிகள் பெருமழைபோல் வருத்த.

கு:- இது முதல் மூன்று செய்யுட்கள் ஒரு தொடர். விளிய, நெளிய, நலிய என்னும் செயவென் எச்சங்கள், அடுத்த செய்யுளில் வரும் 'இரியலுறுபடையை' என்ற தொடரில் உள்ள 'இரிதல்' என்னும் வினைகொண்டு முடிந்தன. (159)

## அரக்கர் படைத்தலைவர்கள் பின்னிடும் சேனையைத் தடுத்து இராமன்மீது செலுத்திக் கடும் போர் விளைத்தல்

9595 இரிய லுறுபடையை நிருத ரிடை விலகி
எரிகள் சொரியுநெடு விழிய ரிழுதையர்கள்
திரிக திரிகவென வுரறு தெழிகுரலர்
கரிக ளரிகள்பரி கடிதி னெதிர்கடவ.

இரியல் உறுபடையை, நிருதர், இடை விலகி,
எரிகள் சொரியும் நெடு விழியர், 'இழுதையர்கள்!
திரிக, திரிக!' என உரறு தெழிகுரலர்,
கரிகள், அரிகள், பரி, கடிதின் எதிர் கடவ.

பொ:- (இவ்வாறு) நிலைகெட்டு ஓடும் சேனையினை அரக்கர்கள் நடு நின்று தடுத்து, தீயினைச் சொரியும் நெடிய கண்களை யுடையவராய் 'அறிவில்லாதவர்களே! திரும்புக, திரும்புக' என முழங்கி அதட்டிக் கூறும் குரலினை யுடையராய் யானைகளையும் சிங்கங்களையும் குதிரைகளையும் (இராமனுக்கு) எதிரே விரைந்து செலுத்த.

கு:- நிருதர், இரியலுறுபடையை இடை விலகி, எரிகள் சொரியும் நெடு விழியராய், 'இழுதையர்கள்! திரிக திரிக' என உரறு தெழு குரலராய், கரிகள், அரிகள், பரி கடிதின் எதிர் கடவ என இயையும். இழுதை—அறிவின்மை. உரறுதல்-முழங்குதல். (160)

**9596** உலகு செவிடுபட மழைக ளுதிரவுயர்
அலகின் மலைகுலைய வமரர் தலையதிர
இலகு தொடுபடைக ளிடியொ டுருமனைய
விலகி யதுதிமிரம் வளையும் வகைவிளைய.

உலகு செவிடுபட, மழைகள் உதிர, உயர்
அலகு இல் மலை குலைய, அமரர் தலை அதிர,
இலகு தொடு படைகள் இடியொடு உரும் அனைய,
விலகியது, திமிரம் வளையும்வகை வளைய.

பொ:- உலகு செவிடுபடவும் (விண்ணினின்று) மேகங்கள் கீழே சிதறவும், உயர்ந்த அளவில்லாத மலைகள் நிலைகுலையவும் தேவர்கள் (அஞ்சித்) தலை நடுங்கவும், ஒளி விளங்குகின்ற எறியும் படைக் கலங்கள் பேரொலியுடன் கூடிய மின்னலை யொத்துத் தோன்ற, வளைத்துக் கொள்ளும் நிலையில் இருள் தோன்ற (அரக்கர் சேனை, இராமனைத்) தடுத்து நின்றது.

கு:- நிருதர், இரியலுறு படையை இடை விலகி, எதிர்கடவ, (அப் படை) வளையும் வகை திமிரம் விளைய விலகியது என மேற் செய்யுளோடு கூட்டி முடிக்க. விலகுதல்—தடுத்தல். (161)

### தன்னை எதிர்த்துப் பொரும் அரக்கர் சேனையை இராமன் உவகையுடன் ஏற்றுக் கடும் போர் புரிதல்

**9597** அழகி தழகிதென வழக னுவகையொடு
பழகு மதிதியரை யெதிர்கொள் பரிசுபட
விழைவி னெதிரவதி ரெதிர்கொள் விரிபகழி
மழைகள் முறைசொரிய வமர் மரலர்சொரிய.

'அழகிது, அழகிது' என அழகன் உவகையோடு
பழகும் அதிதியரை எதிர்கொள் பரிசுபட
விழைவின் எதிர அதிர் எரிகொள் விரி பகழி
மழைகள் முறை சொரிய, அமரர் மலர் சொரிய.

பொ:- அழகனாகிய இராமன் (தன் முன் வந்த படைவீரர்களாகிய அரக்கர்களை நோக்கி,) 'நுமது வருகை அழகியது அழகியது' என்று சொல்லி, மகிழ்ச்சியோடு பழகுதற்குரிய விருந்தினர்களை எதிர்கொள் கின்ற தன்மை பொருந்த, விருப்புடனே எதிர் கொள்ளும்படி முழங்கு கின்ற தீச் சுடர்களைக் கொண்ட விரிந்த அம்பு மழைகளை முறையே சொரியவும் (அது கண்டு) தேவர்கள் பூமழை பொழியவும்,

கு:- 'அழகிது அழகிது' என்பது, 'நுமது வருகை நன்று நன்று' என எதிர்கொண்டு வரவேற்கும் குறிப்பினது. அதிதியர்—விருந்தினர் கள். (162)

**9598** தினக ரனையணவு கொடிக டிசையடைவ
சினவு பொருபரிகள் செரிவ வணுகவுயர்
அனக னெடுமமரின் முடுகி யெதிரவெழு
கனக வரைபொருவ கதிர்கொண் மணியிரதம்.

தினகரனை அணவு கொடிகள் திசை அடைவ,
சினவு பொரு பரிகள் செறிவ அணுக, உயர்
அனகனொடும் அமரின் முடுகி எதிர, எழு
கனக வரை பொருவ; கதிர்கொள் மணி இரதம்.

பொ:- ஒளியினைக் கொண்ட மணிகள் பதிக்கப் பெற்ற தேர்கள், கதிரவனைத் தொடுகின்ற கொடிகள் திசையளவும் சென்று படிவன வாய், வெகுளுந் தன்மையினவாகிய போர்க் குதிரைகள் செறியப் பெற்றனவாய் அணுகிவர, உயர்ந்த தூயோனாகிய இராமனோடும் போரில் விரைந்து எதிர்த்துப் பொருதற்கு எழுகின்ற பொன்மலையை ஒத்துத் தோன்றின.

கு:- கதிர் கொள்மணி இரதம், கொடிகள் திசை அடைவ, பொருபரிகள் செறிவ, அணுக, உயர் அனகனொடும் அமரின் முடுகி எதிர எழு கனகவரை பொருவ என முடிக்க. அனகன்—குற்றமற்றவன் என்றது, தூயோனாகிய இராமனை, தினகரன்—சூரியன். அணவுதல்—தீண்டுதல். (163)

**9599** பாறு படுசிறகு கழுகு பகழிபட
நீறு படுமிரத நிரையி னுடறழுவி
வேறு படர்படர விரவி சுடர்வலைய
மாறு படவுலகின் மலைக ளளறுபட.

பாறு, படு சிறகு கழுகு, பகழி பட,
நீறுபடும் இரத நிரையின் உடல் தழுவி,
வேறு படர் படர, இரவி சுடர் வலையம்
மாறுபட, உலகின் மலைகள் அளறு பட.

பொ:- அம்புகள் படுவதனால் (வெந்து) நீறாகும் தேர் வரிசைகளில் உள்ள (அரக்கருடைய) உடல்களைப் பருந்துகளும் பொருந்திய சிறகுகளையுடைய கழுகளும் தழுவி வேறு வேறு வழியாகச் செல்லுதலைப் பொருந்தவும், சூரியனது ஒளிவட்டம் நிலை மாறுபடவும், உலகிலுள்ள மலைகள் (பிணச்) சேற்றில் அழுந்தவும்,

கு:- பகழிபட நீறுபடும் இரத நிரையின் உடலைப் பாறு, கழுகு தழுவி வேறு படர் படர, என இயையும். பாறு— பருந்து. படர்—வழி. படர்தல்—செல்லுதல். இரவி—சூரியன். சுடர்வலையம்—ஒளிவட்டம். படர, அளறுபட என்னும் 'இருகை யொருகளிறு திரிய' என்புழித் திரிதலாகிய வினை கொண்டு முடிந்தன. (164)

**9600** அருகு கடறிரிய வலகின் மலைகுலைய
உருகு சுடர்களிடை திரிய வுரனுடைய
இருகை யொருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது முறைதிரிய.

அருகு கடல் திரிய, அலகு இல் மலை குலைய,
உருகு சுடர்கள் இடை திரிய,—உரனுடைய
இருகை ஒரு களிறு திரிய, விடு குயவர்
திரிகை என உலகு முழுதும் முறை திரிய.

பொ:- அருகிலுள்ள கடல் இடம் பெயரவும், மலைகள் நிலை குலையவும், உருகுதற்கு ஏதுவாகிய (சூரிய சந்திரர்களாகிய) இரு சுடர்களும் வானத்திடையே (தமது) இயக்கம் மாறுபடவும், திண்மைமிக்க இரண்டு கைகளையுடைய ஒப்பற்ற யானை போல்வானாகிய இராமன் சாரிகை திரிதலால், குயவர் சுழற்றிவிடும் சக்கரத்தை யொத்து உலகம் முறையே சுழலவும்.

கு:- உரன்—திண்மை. இருகை ஒரு களிறு—இரண்டு கைகளை யுடைய ஒப்பற்ற யானை; என்றது, இருகை வேழத் திராகவனாகிய இராமனை. 'இருகை யானை' (திருச்சதகம்) எனவரும் திருவாசகத் தொடர் இங்கு நினைத்தற்குரியது. விடுதல் சுழற்றி விடுதல். குயவர் திரிகை என்றது, வேட்கோவர் பாண்டம் வனைதற்குக் கருவியாகக் கொண்ட சக்கரத்தினை. பாறு, கழுகு, உடல் தழுவிப் படர, சுடர் வலயம் மாறுபட, மலைகள் அளறுபட, கடல் திரிய, மலை குலைய, சுடர்கள் இடை திரிய என வரும் செயவென் எச்சங்கள் 'இருகை யொரு களிறு திரிய' என்புழித் திரிதலாகிய வினைகொண்டு முடிந்தன.

9-ம் எண்ணுள்ள சுவடியில் இச் செய்யுளுக்குப் பிரதியாக

9600 a ''திரிய வகிலமலை திரிய விருசுடர்கள்
திரிய வொருவிலுடை யிருகை யொருகளிறு
திரிய விடுகுயவர் திரிகை யெனவுலகு
திரிய (வெழுக)டலு முழுது முறை திரிய

என வரும் செய்யுளும், 41, 45, 52-ஆம் எண்ணுள்ள அச்சுப் புத்தகங் களில் மிகைப் பாடலாக,

"திரிய வலகில்மலை திரிய விருசுடர்கள்
திரிய வொருவனெதிர் சினவி லொடு மடர
வரிகை ஒருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது மிடை திரிய''

என வரும் செய்யுளும் காணப்படுகின்றன. (165)

9601 சிவனு மயனுமெழு திகிரி யமரர்பதி
அவனு மமரர்குல மெவரு முனிவரோடு
கவன முறுகரண மிடுவர் கழுதினமும்
நமனும் வரிசிலையு மறனு நடனவில.

சிவனும், அயனும், எழுதிகரி அமரர்பதி
அவனும், அமரர்குலம் எவரும், முனிவரொடு
கவனம் உறு கரணம் இடுவர்—கழுது இனமும்,
நமனும், வரிசிலையும், அறனும், நடன் நவில.

பொ:- (இராமனது சாரிகையினால் அரக்கர் அழிந்து படுதலைக் கண்டு) பேய்க்கூடமும் இட்யமனும் (இராமன் கையிலுள்ள) வரிந்து

கட்டப்பட்ட வில்லும் அறக்கடவுளும் கூத்தாட, சிவபெருமானும் நான்முகனும் (போர்முகத்து) எழுகின்ற சக்கரப்படையினை யேந்திய தேவர் தலைவனாகிய அத் திருமாலும் தேவரினத்தார் யாவரும் முனிவர்களோடு (மகிழ்ச்சி மிகுதியால்) விரைவு பொருந்திய ஆடல் வகையாகிய கரணத்தினைச் செய்வாராயினர்.

கு:- கழுது இனமும் நமனும் வரிசிலையும் அறனும் நடம் நவில சிவனும் அயனும் அமரர்பதியாகிய திகிரி அவனும் அமரர் குலம் எவரும் முனிவரொடு கவனம் உறுகரணம் இடுவர் என இயைத்துப் பொருள் கொள்க. கவனம்—விரைவு. கரணம்—கூத்து விகற்பம். “சடைகள் தாழக் கரணம் இட்டு” (7-6-3) என்பது தேவாரம். கழுது—பேய். அறன் என்றது, அறக்கடவுளை. (166)

இதன்பின், 41, 45, 52, 60, 61, 70, 71, 74 ஆகிய பிரதிகளிற் பின் வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது.

9601a கரிய திலதமலை திரிய வவிர்சுடர்கள்
இரிய வொருவிலுடை யிருகை யொருகளிறு
திரிய விடுகுயவர் திரிகை யெனவுலகு
தெரிய வெழுகடலு முலகுமுறை திரிய.

9602 தேவர் திரிபுவன நிலையர் செருவிதனை
ஏவ ரறிவுறுவ ரிறுதி முதலறிவின்
மூவா தலைகள்பொதி ரெறிவ ரறமுதல்வ
பூவை நிறவவென வேத முறைபுகழ.

‘தேவர், திரிபுவன நிலையர், செரு இதனை
ஏவர் அறிவுறுவர் இறுதி? முதல் அறிவின்
மூவர் தலைகள் பொதிர் எறிவர், ‘அற முதல்வ!
பூவை நிறவ!’ என வேதம் முறை புகழ.

பொ:- “அறத்திற்கு முதல்வனே! காயாம் பூப்போலும் நிற முடையவனே! (நீ செய்யும்) போர்ச் செயலாகிய இதனைத் தேவர் களும் மூன்றுலகங்களில் நிலைத்து வாழ்வாரும் ஆகியவர்களுள் யார் தாம் இறுதிவரை அறிதலுறுவார்கள்? ஞானத்தின் முதல்வராகிய மும்மூர்த்திகளும் (இப் போரினைக் கண்டு) தலை நடுக்கமுறுவர்” என்று வேதங்கள் (இராமனை நோக்கி) முறைமுறையே புகழ்ந்து துதிக்க.

கு:- 'அறமுதல்வ! பூவை நிறவ! செரு இதனைத் தேவர் திரிபுவன நிலையர் ஏவர் இறுதி அறிவுறுவர்? அறிவின்முதல் மூவர், தலைபொதிர் எறிவர்' என வேதம் முறை புகழ என இயையும். செரு—போர். ஏவர்—யாவர். இறுதி—முடிவு. தலைபொதிர் எறிதல்—அச்சத்தால் தலை நடுக்கமுறுதல். பூவை—காயாம்பூ. (167)

**9603** எய்யு மொருபகழி யேழு கடலுமிடு
வெய்ய களிறுபரி யாளொ டிரதம்விழ
ஒய்யெ னொருகதியி னோட வுணரமரர்
கைக ளெனவவுணர் கால்கள் கதிகுலைவ.

எய்யும் ஒரு பகழி, ஏழு கடலும், இடு
வெய்ய களிறு பரி ஆளொடு இரதம் விழ,
ஒய்யென் ஒருகதியின் ஓட உணர் அமரர்
கைகள் என, அவுணர் கால்கள் கதிகுலைய.

பொ:- (இராமபிரானால்) எய்யப்பெற்ற ஓரம்பானது, ஏழுகடல்களிலும் செலுத்தப்படும் வெகுளி மிக்க யானை, குதிரை, காலாள்களோடு தேர்களும் விழும்படி ஒய்யென விரையும் ஒப்பற்ற வேகத்துடன் ஓட, அதனையுணர்ந்த தேவர்களின் கைகளைப் போன்று அவுணர்களின் கால்கள் கதி குலைவனவாயின.

கு:- இராமனது அம்பு அரக்கருடைய நால்வகைச் சேனைகளையும் எழுகடல்களிலும் விழும்படி விரைந்து ஓடுதலைக் கண்ட தேவர்கள் மகிழ்ந்து கைகொட்டியார்க்கும் நிலையில் அவர்களுடைய கைகள் குலையுமாறு போன்று தேவர்க்குப் பகைவராய அவுணர்களின கால்கள் கதிகுலைவ' என்றார். ஒய்யென என்பது விரைவுக் குறிப்பு. (168)

**6904** அண்ணல் விடுபகழி யானை யிரதமயல்
பண்ணு புரவிபடை வீரர் தொகுபகுதி
புண்ணி னிடுகுறிகள் புள்ளி யெனவிரவி
எண்ணு வனவனைய வெல்லை யில நுழைவ.

அண்ணல் விடு பகழி, யானை, இரதம், அயல்
பண்ணு புரவி, படை வீரர் தொகு பகுதி
புண்ணின் இடுகுறிகள் புள்ளி என, விரவி
எண்ணுவன அனைய எல்லை இல நுழைவ.

பொ:- பெருமையிற் சிறந்தோனாகிய இராமன் ஏவிய அம்புகள், அருகேயுள்ள யானை, தேர், பண்ணுதலமைந்த குதிரை, படைவீரர் கூடிய சேனைப் பகுதிகளிலே புண்ணின் இட்ட அடையாளங்கள் புள்ளிகள் போலத் தோன்ற எல்லையில்லாதனவாய் நுழைவன (அவற்றை) அணுகி எண்ணுவனவற்றை ஒத்தன.

கு:- அண்ணல் விடு பகழி, எல்லையில நுழைவ, விரவி எண்ணுவன அனைய என முடிக்க. விரவுதல்—அணுகிச் சேர்தல். அண்ணல் என்றது இராமனை. இராமன் செலுத்திய அம்புகள் நால்வகைச் சேனைப் பகுதி களிலே விரவிச் சென்று புண்ணிலிடப்பெற்ற அடையாளங்கள் எண்ணி யளவிடுங்கால் இடப்படும் புள்ளிகளை யொத்துத் தோன்ற அளவற்றனவாய் நுழைவன, அச் சேனைகளில் ஒவ்வொன்றையும் தொட்டு அடையாளமிட்டு எண்ணுவனவற்றை ஒத்தன என்பதாம். இது தற்குறிப்பேற்றம் என்ற அணி தழுவியதாகும். (169)

அரக்கர் தப்பிச் செல்லாதவாறு இராமன் சரமதில் அமைத்தல்

9605 சுருக்கமுற் றதுபடை சுருக்கத் தாலினிக்
 கரக்கமற் றொருபுறத் தென்னுங் கண்ணினால்
அரக்கருக் கன்றுசெவ் வரிய தாம்வகை
சரக்கொடு நெடுமதில் சமைத்திட் டானரோ.

'சுருக்கம் உற்றது படை, சுருக்கத்தால் இனிக்
கரக்க, மற்று ஒருபுறத்து' என்னும் கண்ணினால்
அரக்கருக்கு அன்று செலவு அரியதாம் வகை
சரக் கொடு நெடு மதில் சமைத்திட்டான் அரோ.

பொ:- (அந்நிலையில், 'நமது) சேனை அளவிற் சுருங்கிக் குறைந்தது. (இங்ஙனம்) குறைந்ததனால், இனி ஒருபுறத்துப் பொருந்தி ஒளித்துக் கொள்வோம் என்னும் கருத்தினால், அரக்கர்க்கு எங்கும் (தப்பிச்) செல்லுதல் இயலாதவாறு (அவ்வரக்கர் சேனையைச் சூழ) அம்புகளால் கொடிய நெடிய மதிலை அமைத்தனன் (இராமன்).

கு:- கண்ணினால்—கருத்தினால். கண்ணுதல்—கருதுதல். செலவு-செல்லுதல். சரம்—அம்பு. சமைத்தல்—அமைத்தல். (170)

இதன் பின் 45, 57ல் பின்வரும் மிகைப் பாடல் உளது:-

9605a ஆயவல் லரக்கர்மற் றளவில் லாதவர்
தீயெழும் விழியினர் சினங்கொள் சிந்தையர்
காயும் வெம் படையினர் கடலிற் பொங்கியே
மேயினர் தத்தமி லிவை விளம்புவார்.

அரக்கர் சரமதிலைக் கடக்க மாட்டாமை

**9606** மாலியை மாலிய வானை மால்வரை
போலுயர் கயிடனை மதுவைந் போன்றுளார்
சாலிகை யாக்கையர் தணிப்பில் வெஞ்சர
வேலியைக் கடந்தில ருலகை வென்றுளார்.

மாலியை, மாலியவானை, மால் வரை
போல் உயிர் கயிடனை, மதுவை, போன்று உளார்,
சாலிகை யாக்கையர், தணிப்புஇல் வெஞ்சர
வேலியைக் கடந்திலர், உலகை வென்றுளார்.

பொ:- மாலியையும் மாலியவானையும் பெரிய மலைபோலும் உயர்ந்த தோற்றத்தினை யுடைய கைடபனையும் மது வென்பானையும் ஒத்து (பெருவன்மை படைத்து) உள்ளவர்களும், கவசம் அணிந்த உடம்பினையுடையவர்களும் உலகினை வெற்றி கொண்டுள்ளவர்களும் ஆகிய அரக்கர்கள், (இராமன் அமைத்த) தணிதல் இல்லாத வெம்மை மிக்க அம்பு மதிலைக் கடக்க மாட்டாதவராயினர்.

கு:- மாலி, மாலியவான், கைடபன், மது என்போர் அளவிலாற் றல் படைத்த பெரு வீரர்களாய் இராவணன் காலத்துக்கு முற்பட்டு வாழ்ந்த அரக்கர் குலத் தலைவர்கள். சாலிகை—கவசம். சரவேலி—அம்பினால் அமைக்கப்பட்ட மதில். (171)

இதன்பின் 45, 52-ல் பின்வரும் மிகைப்பாடல் உளது:-

9606 a அன்றியு மொருவனிங் கமரில் நம் படை
யென்றுள கரிபரி யிரதம் ஈறில் போர்
வென்றிடும் பதாதியர் அனந்த வெள்ளமும்
கொன்றனன் கொழித்தொரு கடிகை யேழினே.

## அரக்கரிற் பெரும்பாலார் இறந்துபட அவர்தம் சேனை அளவிற் சுருங்குதல்

**9607** மாண்டவர் மாண்டற மற்று ளோரெலாம்
மீண்டன ரொருதிசை யேழு வேலையும்
மூண்டுற முருங்கிய வூழிக் காலத்தில்
தூண்டுறு சுடர்சுடச் சுருங்கித் தொக்கபோல்

*மாண்டவர் மாண்டு அற, மற்றுளோர் எலாம்*
*மீண்டனர், ஒரு திசை—ஏழு வேலையும்*
*மூண்டு உற முருங்கிய ஊழிக் காலத்தில்*
*தூண்டுறு சுடர் சுட, சுருங்கித் தொக்கபோல்.*

பொ:- (இராமனது அம்பினால்) இறந்தவர் இறந்தொழிய எஞ்சியுள்ளோர் யாவரும், ஏழு கடல்களும் பொங்கி மேலே எழுந்துவர (உலகம்) அழிவுற்ற ஊழிக் காலத்திலே (வடவைத் தீயின்) தூண்டுதல் பொருந்து அனற்கொழுந்துகள் சுட்டெரித்தலால் (அக்கடல்கள் வற்றிச்) சுருங்கி ஒருங்கு திரண்டாற் போன்று ஒரு திசையில் மீண்டனர்.

கு:- ஊழிக் காலத்தில் சுடர் சுட, ஏழு வேலையும் சுருங்கித் தொக்கபோல் மற்றுளோரெலாம் ஒரு திசை மீண்டனர் என்க. வேலை—கடல். முருங்குதல்—அழிதல். (172)

## இராமனது அம்பின் கொடுமை கண்டு திகைப்புற்ற அரக்கர்கள் தம்மவர்களை நோக்கிக் கூறுதல்.

**9608** புரஞ்சுடு கடவுளும் புள்ளின் பாகனும்
அரஞ்சுடு குலிசவே லமரர் வேந்தனும்
உரஞ்சுடு கிற்கில ரொருவ னாமுடை
வரஞ்சுடும் வலிசுடும் வாழு நாள்சுடும்.

*'புரம் சுடு கடவுளும், புள்ளின் பாகனும்,*
*அரம் சுடு குலிசவேல் அமரர் வேந்தனும்,*
*உரம் சுடுகிற்கிலர்; ஒருவன் நாமுடை*
*வரம் சுடும்; வலி சுடும்; வாழும் நாள் சுடும்.*

பொ:- முப்புரங்களைச் சுட்டு நீருக்கிய சிவபெருமானும்,(கருடப்) பறவையினை ஊர்தியாக வுடைய திருமாலும், அரத்தினுல் அராவிக் கூர்மை செய்யப் பெற்ற வச்சிரப் படையாகிய வேலினையுடைய வானவர் மன்னனுகிய இந்திரனும் (நமது) வன்மையினை வெகுண்டு அழிக்க மாட்டாதவராயினர். ஒருவனுகிய இவ்விராமனே நாம் பெற்றுடைய வரத்தினை அழிக்கின்றுன்; வன்மையை அழிக்கின்றுன்; வாழ்நாளை அழிக்கின்றுன்.

கு:- புள்—பறவை; என்றது கருடனை. புள்ளின் பாகன்—கருடனை ஏறிச் செலுத்துவோனுகிய திருமால். உரம்—வலிமை. சுடுதல் என்பது நீருக்குதல், வெம்மையுடையதாக்குதல், அழித்தல் என்ற பொருள் களில் ஆளப்பட்டது. (173)

9609 ஆயிர வெள்ளமுண் டொருவ ராழிசூழ்
மாயிரு ஞாலத்தை மறிக்கும் வன்மையோர்
மேயின பெரும்படை யிதனை யோர்விலால்
ஏயெனு மாத்திரத் தெய்து கொன்றனன்.

'ஆயிர வெள்ளம் உண்டு; ஒருவர், ஆழி சூழ்
மா இரு ஞாலத்தை மறிக்கும் வன்மையோர்;
மேயின பெரும்படை இதனை, ஓர் விலால்
"ஏ" எனும் மாத்திரத்து எய்து கொன்றனன்.

பொ:- ஒருவராகவே (நின்று) கடலாற் சூழப்பட்ட மிகப் பெரிய பூமியைத் தடுத்து நிறுத்தும் வன்மையுடையோர் (நம் அரக்கர் சேனையில்) ஆயிர வெள்ளம்பேர் உள்ளார்கள். (அத்தகையோர்) பொருந்திய பெருஞ்சேனையாகிய இதனை (இவ் இராமன் தனது) ஒரே வில்லினுல் அம்பினைச் செலுத்தி ஏயென்னும் அளவிற்குள் கொன்றெழித்தான்.

கு:- மறித்தல்—தடுத்தல். ஏயெனல், விரைவுக் குறிப்பு.'ஏயெனு மாத்திரத்து' (கம்பர் பள்ளி-72) என்று முன்னரும் ஆளப்பெற்றுள்ளமை காண்க. (174)

9610 இடைபடும் படாதன விமைப்பி லோர்படை
புடைபட வலங்கொடு விலங்கிப் போகுமால்
படைபடுங் கோடியோர் பகழி யாற்பழிக்
கடைபடு மரக்கர்தம் பிறவி கட்டமால்.

'இடை படும்; படாதன, இமைப்பிலோர் படை,
புடைபட வலம்கொடு விலங்கிப் போகுமால்;
படை படும் கோடி; ஓர் பகழியால்; பழிக்
கடை படும் அரக்கர்தம் பிறவி கட்டமால்.

பொ:- தேவருடைய சேனைகள், (எமது சேனையை, எதிர்ப்படின்) அஞ்சி, வழியிடையிலேயே இறந்து படுவன; அவ்வாறு இறவாதன எமது சேனையை அணுக வலங்கொண்டு ஒதுங்கிப் போவன. (அத்தகைய எமது) சேனை (இராமனது) ஓரம்பினால் கோடிக்கணக்கானவை இறந்தொழிவன. பழியின் கண்ணே பொருந்திய இவ்வரக்கரது பிறப்பு துன்பத்திற்கே ஏதுவாயிற்று.

கு:- இமைப்பிலோர் படை, இடை படும்; படாதன, புடைபட வலங்கொடு விலங்கிப்போகும்; படை, ஓர் பகழிபால் கோடி படும்; பழிக்கடை படும் அரக்கர் தம் பிறவி கட்டம் எனமுடிக்க. இமைப்பு இலோர்—கண் இமைத்தல் இல்லாதவராகிய தேவர்கள். படை—சேனை. இடை—நடுவழி. படுதல்—இறத்தல். புடைபட வலங்கொடு—அணுக வந்து வலஞ்செய்து. விலங்கிப்போதல்—ஒதுங்கிச் செல்லுதல். பழிக்கடை படுதல்—பழியின் கண்ணே பொருந்துதல். கட்டம்—துன்பம். ஆல்—அசை. தேவருடைய சேனைகளை யெல்லாம் வெற்றி கொண்ட இவ்வரக்கர் பெரும்படை மனிதன் ஒருவனது அம்பினால் எளிதின் அழிந்தது என்ற பழியிற் பட்ட அரக்கரது பிறவி துன்பத்திற்கே ஏதுவாயிற்று என அரக்கர் படைத்தலைவர் தமது எளிமை நினைந்து இரங்கியவாறு. (175)

**9611** பண்டுல களித்தவ னோடும் பண்ணமை
குண்டையின் பாகனும் பிறருங் கூடினர்
அண்டர்கள் விசும்பினின் றார்க்கின் றாருழைக்
கண்டில மிவனெடு மாயக் கள்வனால்.

'பண்டு உலகு அளித்தவனோடும், பண் அமை
குண்டையின் பாகனும், பிறரும் கூடினர்,
அண்டர்கள் விசும்பின் நின்று ஆர்க்கின்றார் உழைக்
கண்டிலம்; இவன் நெடு மாயக் கள்வனால்.

பொ:- முன்பு உலகத்தைப் படைத்தவனாகிய பிரமதேவனோடு தவிசமைந்த விடையினை யூர்ந்தருள்வோனாகிய சிவபெருமானும் (இந்திரன் முதலிய தேவர்கள்) பிறரும் ஒருங்கு கூடியுள்ளார்கள்;

வானத்தில் நின்று (நமது அழிவு கண்டு மகிழ்ச்சி மிகுதியால்) ஆரவாரிக்கின்றவர்களாகிய தேவர்களிடையிலே (திருமாலைக்) காணப் பெற்றிலோம்; (ஆகவே, நம்மோடு பொருது நிற்கும்) இவ்விராமன் நெடிய மாயத்தையும் கள்ளத்தையும் உடைய திருமாலே யாவன்.

கு:- உய்த்தல்—செலுத்துதல்; வெளிப்படுத்தல், உண்டாக்குதல் என்ற கருத்தில் ஆளப் பெற்றது. பண்ணமைதல்—அமர்தற்குரிய தவிசுடன் பொருந்துதல். குண்டை—எருது; இடபம். விசும்பின் நின்று ஆர்க்கின்றார் அண்டர்கள் உழை (திருமாலைக்) கண்டிலம், (ஆகவே) இவன் நெடுமாயக் கள்வன் என இயைத்துரைக்க. உழை—இடம். (176)

இவ்விராமன் திருமாலே என்று துணிந்து ஆற்றல் குன்றிய அரக்கர்களை நோக்கி, வன்னி என்பவன் 'நாம் பகைவனொடு பொருது உயிர் துறத்தலே இனிச் செய்யத் தகுவது' என அறிவுறுத்தல்.

**9612** கொன்றன னினியொரு கோடி கோடிமேற்
றன்றெனிற் பதுமமன் ருயின் வெள்ளமா
நின்றது நின்றினி நினைவ தென்பிற
ஒன்றென நினைகென வன்னி யோதினன்.

'கொன்றனன், இனி ஒரு கோடி கொடி மேற்று;
அன்று எனின், பதுமம்; அன்றாயின், வெள்ளமா
நின்றது; நின்று இனி நினைவது என் பிற?
ஒன்று என நினைக'என, வன்னி ஓதினன்.

பொ:- ('இவ்விராமன் அரக்கராகிய நம்மவரைக்) கொன்றொழித்தனன். (இவனால் கொல்லப்பட்டு இறந்தோர் தொகை) ஒரு கோடி கோடிக்கு மேற்பட்டது; (அஃது) அன்றாயின் பதுமம் (என்னும் அளவினது). (அதுவும்) அன்றாயின் வெள்ளம் என்னும் அளவினதாக நின்றது. இப்பொழுது (செயலற்று) நின்று (நமக்கு ஒவ்வாத) பிறவற்றை நினைப்பதனால் யாது பயன்? (இனிச் செய்யத்தக்கது) ஒன்றே என (ஒரு முடிபாக) எண்ணுக' என (எஞ்சிய அரக்கர்கள்) கூற, (அது கேட்டு) வன்னி என்ற படைத் தலைவன் (பின் வருமாறு) கூறினன்.

கு:- கோடிகோடி, பதுமம், வெள்ளம் என்பன ஒன்றினொன்று மேற்பட்ட பேரெண்கள். 'நின்றது' என்னும் பயனிலைக்கு ஏற்ப 'இறந்தோர் தொகை' என்னும் எழுவாய் வருவித்துரைக்கப் பட்டது. இனி நின்று பிற நினைவது என்? ஒன்று என நினைக என இயையும். ஒன்று என நினைதலாவது, இனிச் செய்யத்தகுவது இஃது ஒன்றே என்று ஒரே முடிபாக எண்ணுதல். 'ஒரு தலையாச் சொல்லலும் வல் லது அமைச்சு' (திருக்குறள்-634) என்பது இங்கு நினைக்கத் தருவ தாகும். வன்னி என்பவன், அரக்கர் படைத் தலைவர்க்கெல்லாம் முதல்வனாக வந்தவன். அவன் கூறியன அடுத்துவரும் இரண்டு செய் யுட்களில் விரித்துரைக்கப்படும். (177)

இதன் பின் சுவடி 45ல் கீழ்க்கண்டவாறு காணப்படுகிறது.

7612 a கொன்றனன் சேனைகள் குறைந்ததியா மேற்றுள
ளன்றியு நிற்பது மழிவதாகு மால்
நின்ற தெம்போரின் நினைவ தென்னென்று
கொன்றிது கொண்மென வன்னி யோதுவான்.

9613 விழித்துமோ விராவணன் முகத்து மீண்டியாம்
பழித்துமோ நம்மைநாம் படுவ தஞ்சினல்
அழித்துமோர் பிறப்புரு நெறிசென் றண்மயாம்
கழித்துமிவ் யாக்கையைப் புகழைக் கண்ணுற.

'விழித்துமோ, இராவணன் முகத்து மீண்டு, யாம்
பழித்துமோ, நம்மை,—நாம் படுவது அஞ்சினல்?
அழித்தும் ஓர் பிறப்புஉரு நெறிசென்று அண்ம, யாம்
கழித்தும் இவ் ஆக்கையை, புகழைக் கண்ணுற.

பொ:- (நாம் இப்போரில்) இறத்தற்கு அஞ்சினல், நாம் மீண்டு சென்று இராவணன் முகத்தில் விழிப்போமா? (நமது தோல்வியை எண்ணி) நம்மை நாமே பழித்துரைப்போமா? மீண்டு ஒரு பிறப்பினை அடைதலில்லாத பெரு நெறியாகிய துறக்கத்தினை அடையவும் (இவ் வுலகில்) புகழைக் காணவும் யாம் இவ் வுடம்பினைக் கழிக்கக் கட வோம்.

கு:- படுவது அஞ்சினல், நாம் மீண்டும் இராவணன் முகத்து விழித்துமோ? நம்மை நாம் பழித்துமோ? அழித்தும் ஓர் பிறப்பு உரு நெறி சென்று அண்ம, புகழைக் கண்ணுற யாம் இவ் ஆக்கையைக் கழித்தும் என இயைத்துரைக்க. ஓகாரங்கள் இரண்டும் எதிர்மறை.

அழிந்தும்—மீண்டும். ஓர் பிறப்புறு நெறி என்றது, பிறவா நெறியாகிய வீடு பேற்றுக்கு ஒத்ததாகிய துறக்க நெறியினை. அண்முதல்—அணுகுதல். விழித்தும், பழித்தும், கழித்தும் என்புழித் தன்மைப் பன்மை விகுதியாகியதும் விகுதி எதிர்கால முணர்த்தி நின்றது.

45ஆம் பிரதியிற் பின்வரும் மிகைப்பாடல் உளது:—

விடுத்துமோ விராவணன் முகத்து வேமெனின்
அடுத்த கூர் வாளிய னரண நீங்கலோம்
எடுத்தொரு முகத்தினு லெய்தியா மினிக்
கொடுத்துநம் முயிரையென் றுருமை கூறினுன்.

**9514** இடுக்கினிப் பெயர்ந்துறை யெண்ணு வேமெனின்
அடுத்தகூர் வாளியி னரண நீங்கலோம்
எடுத்தொரு முகத்தினு லெய்தி யாமினிக்
கொடுத்துநம் முயிரென வொருமை கூறினுன்.

'இடுக்கினில், பெயர்ந்து உறை எண்ணுவேம் எனின்,
அடுத்த கூர் வாளியின் அரணம் நீங்கலோம்;
எடுத்து ஒரு முகத்தினுல் எய்தி, யாம் இனிக்
கொடுத்தும் நம் உயிர்' என, ஒருமை கூறினுன்.

பொ:- சங்கடமான இந்நிலையில் (இப் போர்க்களத்தைவிட்டு) ஓடி (மறைந்து) உறைதலை எண்ணுவேமென்றுல் (நம்மைச்) சூழவுள்ள கூரிய அம்பினுலமைந்த அரணை விட்டு நீங்க இயலாதுள்ளோம். நாம் ஒருமுகமாகப் பொருந்தி மேற்சென்று (இராமனை) அடைந்து (பொருது) நமது உயிரைக் கொடுப்போம்' என்று ஒருதலையாகத் துணிந்து கூறினுன் (வன்னி).

கு:- இடுக்கு—சங்கடமான துயர்நிலை. 'இராமனது அம்பு மதிலை விட்டு அப்பாற் செல்ல முடியாது. அதனுள் அகப்பட்டு வருந்தும் இந் நிலையில், நாம் எல்லோரும் ஒரேமுகமாக இராமனை எதிர்த்து நின்று பொருது நமது உயிரைக் கொடுத்தலொன்றே இப்போழுது நம்மாற் செய்தற்குரிய நன்றிக் கடனும்' என்று ஒருதலையாகத் துணிந்து கூறினுன் என்பார், "இனி, கொடுத்தும் நம் உயிர்' என ஒருமை கூறினுன்" என்றுர். ஒருமை—ஒருதலையான முடிவு. எடுத்தல்—மேற் செல்லுதல்.

இதன்பின் 52-ல் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது:—

இவ்வுரை வன்னியங் கியம்ப ஈதுபோல்
செவ்வுரை வேறிலை என்று தீயவர்
அவ்வுரைக் கனைவரும் அமைந்தங் கண்ணலோ
டெவ்வுரையும் விடுத் தமரின் ஏற்றுளார்.

45-ல் பின்வரும் மிகைப்பாடல் உளது:—

இடுக்கறப் பெயர்ந்து போயெய்து வோமெனின்
தடுத்திடுஞ் சரமதில் கடக்கத் தக்கதென்
றெடுத்தொரு மூகத்தின லெய்தி நாமினிக்
கொடுத்து நம்முயிரெனவுருமை கூறினன்.

## அரக்கர் அனைவரும் இராமனைச் சூழ்ந்து பொருது அடர்த்தல்

**9615** இளக்கரு நெடுவரை யீர்க்கு மாறெலாம்
அளக்கரிற் பாய்ந்தெனப் பதங்க மாரழல்
விளக்கினில் வீழ்ந்தென விடுகொ டுந்தலால்
வளைத்திரைத் தடர்த்தனர் மலையின் மேனியார்.

இளக்க அரு நெடு வரை ஈர்க்கும் ஆறுஎலாம்
அளக்கரின் பாய்ந்தென, பதங்கம் ஆர்அழல்
விளக்கினில் வீழ்ந்தென, விதிகொடு உந்தலால்,
வளைத்து இரைத்து அடர்த்தனர், மலையின் மேனியார்.

பொ:- அசைத்தற்கரிய நெடிய மலையையும் (பறித்து) இழுத்துச் செல்லவல்ல ஆறுகள் யாவும் கடலின்கண்ணே பாய்ந்தாற் போலவும், விட்டிற் பூச்சியானது நிறைந்த தீச்சுடரை யுடைய விளக்கினில் வீழ்ந்தாற் போலவும், ஊழ்வினை (பிடர் பிடித்துத்) தள்ளுதலால் மலை போலும் உடம்பினையுடைய அரக்கர்கள் (இராமனை) வளைத்து ஆரவாரித்து எதிர்த்தனர்.

கு:- மலையின் மேனியார், ஆறெலாம் அளக்கரிற் பாய்ந்தென, பதங்கம் விளக்கினில் வீழ்ந்தென (இராமனை) வளைத்து இரைத்து அடர்த்தனர் என இயையும். (இளக்குதல்—அசைத்தல்; 'வெளில் இளக்கும் களிறுபோல' (பட்டினப்பாலை—172) என்புழி இச் சொல்

இப் பொருளில் வழங்குதல் காணலாம். அளக்கர்—கடல். பதங்கம்—விட்டில். உந்துதல்—தள்ளுதல். (180)

### அரக்கர் பல்வகைப் படைகளை இராமன்மேற் சொரிதல்

**9616** மழுவெழுத் தண்டுகோல் வலைய நாஞ்சில்வாள்
எழு வயிற் குந்தம்வே லீட்டி தோமரம்
கழுவிகற் கப்பண முதல கைப்படை
தொழுவினிற் புலியனு னுடலிற் றூவினர்.

மழு, எழு, தண்டு, கோல், வளையம், நாஞ்சில், வாள்,
எழு, அயில், குந்தம். வேல், ஈட்டி, தோமரம்,
கழு, இகல் கப்பணம், முதல கைப்படை,
தொழுவினில் புலிஅனான் உடலில் தூவினர்.

பொ:- மழு, எழுவாகிய தண்டு, அம்பு, வலயம், நாஞ்சில். வாள், (எறியப்பட்டு) மேல் எழுகின்ற குந்தம், வேல், ஈட்டி, தோமரம், கழு, வன்மையுடைய கப்பணம் முதலாகவுள்ள கையாற் செலுத்துதற்குரிய படைக்கலங்களைத் தொழுவத்திலே புக்க புலி போன்றவனாகிய இராமனது உடம்பினில் (அரக்கர்கள்) சொரிந்தார்கள்.

கு:- தொழு—மாட்டுத் தொழுவம். மாட்டுத் தொழுவத்திற் புக்க புலியினை இராமனுக்கு உவமை கூறவே, அவனைச் சூழ்ந்துள்ள அரக்கர்கள் புலியினை எதிர்ப்பட்ட எருதுகளை ஒத்தனர் என்பதும் உடன் கூறியவாறு. (181)

### இராமன் காந்தருப்பம் என்னும் தெய்வப் படையை அரக்கர்மேற் செலுத்தல்

**9517** காந்தருப் பம்மெனுங் கடவுள் மாப்படை
வேந்தருக் கரசனும் வில்லி னூக்கினான்
பாந்தளுக் கரசெனப் பறவைக் கேறெனப்
போந்துருத் ததுநெருப் பனைய போர்க்கணை.

காந்தருப்பம் எனும் கடவுள் மாப் படை,
வேந்தருக்கு அரசனும் வில்லின் ஊக்கினன்.
பாந்தளுக்கு அரசு என, பறவைக்கு ஏறுஎன,
போந்து உருத்தது, நெருப்பு அனைய போர்ப் படை.

பொ:- காந்தருப்பம் என்னும் தெய்வத்தன்மை வாய்ந்த பெரிய படைக் கலத்தினை மன்னர் மன்னனாகிய இராமனும் (தனது) வில்லில் தொடுத்து எய்தனன். நெருப்பினை யொத்த பொருதற்றொழிலை யுடைய (அந்த) அம்பு, பாம்புகட்கு அரசனாகிய ஆதிசேடனைப் போல வும், பறவைகட்குத் தலைவனாகிய கருடனைப் போலவும் புறப்பட்டுச் சென்று வெகுண்டது.

கு:- வேந்தருக்கரசன் என்றது இராமனை. நெருப்பனைய போர்க் கணை, பாந்தளுக்கு அரசு என, பறவைக்கு ஏறு எனப் போந்து உருத் தது என்க. பாந்தள்—பாம்பு. பாந்தளுக்கு அரசு, ஆதிசேடன். பறவைக்கு ஏறு, கருடன். உருத்தல்—வெகுளுதல். (182)

காந்தருப்பம் என்னும் அப் படையின் தோற்றமும் திறலும்

9618 மூன்றுகண் ணமைந்தன வைம்மு கத்தன
ஆன்றமெய் தழலன புனலு மாடின
வான்றொட நிமிர்வன வாளி மாமழை
தோன்றின புரஞ்சுடு மொருவன் றோற்றத்த.

மூன்று கண் அமைந்தன, ஐம் முகத்தன
ஆன்ற மெய் தழலன, புனலும் ஆடின,
வான்தொட நிமிர்வன வாளி மா மழை
தோன்றின, புரம் சுடும் ஒருவன் தோற்றத்த.

பொ:- (காந்தர்ப்பம் என்னும் அதனின்று வெளிப்பட்டு) வானத் தைத் தொட நிமிர்ந்து செல்வன வாகிய மிக்க அம்பின் தொகுதிகள், மூன்று கண்கள் அமைந்தனவாய், ஐந்து முகங்களை யுடையனவாய் நிறைந்த மேனி நெருப்பினை ஒத்தனவாய் (ஆகாய கங்கை) நீரிலும் தோய்வன வாகி முப்புரங்களை யெரித்த ஒப்பற்ற சிவபெருமானது தோற்றத்தை யுடையனவாகத் தோன்றின.

கு:- காந்தப் படையினின்றும் வெளிப்பட்டு விரிந்த எண்ணற்ற அம்புகள் மூன்று கண்களும் ஐந்து முகங்களும் நெருப்பனைய மேனியும்

கொண்டனவாகிக் கங்கை நீரிலும் தோய்வனவாய் முப்புரங்களை யெரித்த சிவபெருமானது தோற்ற முடையவாய்க் காணப்பட்டன என்பதாம். (183)

### பத்துக் கோடி யளவினராகிய அரக்க வேந்தர்கள் பொருந்திய இராவணனது மூலச் சேனை முழுதும் அழிதல்

**9619** ஐயிரு கோடிய ரரக்கர் வேந்தர்கள்
மொய்வலி வீரர்க ளொழிய முற்றுற
எய்யெனு மாத்திரத் தவிந்த தென்பரால்
செய்தவத் திராவணன் மூலச் சேனையே.

ஐ-இரு கோடியர் அரக்கர் வேந்தர்கள்
மொய் வலி வீரர்கள் ஒழிய முற்றுற,
'எய்' எனும் மாத்திரத்து அவிந்தது என்பரால்
செய் தவத்து இராவணன் மூலச் சேனையே.

பொ: பத்துக் கோடிக் கணக்கினராயுள்ள அரக்கர் மன்னவராகிய நெருங்கிய (உடல்) வலியுள்ள வீரர்கள் முழுதும் இறந்தொழிய, செய்த தவத்தினை யுடைய இராவணனது மூலப் பெரும் படை ஏயெனும் அளவில் அழிந்தது என்று கூறுவர் (பெரியோர்).

கு:- முற்றுற ஒழிய என இயைத் துரைக்க. ஏயெனும் மாத்திரத்து எனற் பாலது, எதுகை நோக்கி, எய்யெனு மாத்திரத்து எனத் திரிந்து நின்றது. ஏயெனல், விரைவுக் குறிப்பு. (184)

### அந் நிலையில் பெரிய தீவுகளிலிருந்தும் பல திசைகளிலிருந்தும் பாதாள வுலகத்தினிலிருந்தும் இராவணனது ஆணையாற் காவல் புரியும் படை வீரர்கள் ஒருங்கு குழுமி இராமனொடு பொருதற்கு நண்ணுதல்

**9620** மாப்பெருந் தீவுக ளேழு மாதிரம்
பாப்பரும் பாதலத் துள்ளும் பல்வகைக்
காப்பரு மலைகளும் பிறவுங் காப்பவர்
யாப்புறு காதல ரிராவ ணற்கவர்.

மாப் பெருந் தீவுகள் ஏழும், மாதிரம்
பாப்பு அரும் பாதலத்துள்ளும், பல் வகைக்
காப்பு அரு மலைகளும் பிறவும் காப்பவர்,
யாப்புறு காதலர் இராவணற்கு அவர்.

பொ:- மிகப் பெரிய ஏழு தீவுகளிலும் (எண்) திசைகளிலும் பாம்புகள் நிறைந்த (கிட்டுதற்கு) அரிய பாதாள உலகத்தினுள்ளும் பலவகைப்பட்ட காத்தற்கரிய மலைகளையும் பிறவிடங்களையும் காவல் புரிவோர் அவ் வீரர்கள், இராவணனிடத்து (எழுமையும்) தொடர்ந்து பிணித்துள்ள பேரன்பினை யுடையவர்கள்.

கு:- மூலப்படை அழிவுற்ற நிலையில் பல திசைகளிலிருந்தும் பாதாளத்திலிருந்தும் இராவணனுக்கு உதவியாய் வந்த சேனைகள் இராமனை வளைந்து போர் செய்து அழிவுற்ற செய்தி, இச் செய்யுள் முதலாகப் பின்வரும் செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். இச்சேனை களும் மூலச்சேனையுடன் தொடர்புடையனவாய் அதனைத் தொடர்ந்து வந்து இராமனை எதிர்த்துப் பொருது அழிந்தன ஆதலால் இவற்றின் அழிவினையும் ஆசிரியர் மூலபல வதையுடன் இணைத்துக் கூறினர் எனக் கருத வேண்டியுளது. பாம்பு அரும் பாதலம் என்புழிப் பாம்பு என்னும் மென்றொடர்க் குற்றுகரம் பாப்பு என வன்றொடராய்த் திரிந் தது. காப்பரும் மலைகளும் பிறவும் காப்பவர். அவர், இராவணற்கு யாப்புறு காதலர் நண்ணினர் என அடுத்த செய்யுளொடு முடியும். யாப்புறு காதல்—எழுமையும் தொடர்ந்து செறிந்த பேரன்பு. (185)

**9621** மாத்தட மேருவை வளைந்த வான்சுடர்
கோத்தகன் மார்பிடை யணியுங் கொள்கையார்
பூத்தவி சுகந்தவன் புகன்ற பொய்யறு
நாத்தழும் பேறிய வரத்தர் நண்ணினர்.

மாத்தட மேருவை வளைந்த வான் சுடர்
கோத்து அகல் மார்பிடை அணியும் கொள்கையார்,
பூத்தவிசு உகந்தவன் புகன்ற பொய் அறு
நாத் தழும்பு ஏறிய வரத்தார், நண்ணினர்.

பொ:- மிகப் பெரிய மேருமலையைச் சூழ்ந்து செல்லும் சிறந்த சுடர்களாகிய சூரிய சந்திரர்களை (மாலையாக)க் கோத்து அகன்ற மார்பின் கண்ணே அணியும் தன்மை வாய்ந்தவர்கள்; தாமரைப் பூவா கிய தவிசில் விரும்பி யுறைபவனாகிய பிரமன் கூறிய, பொய்மையற்ற

நாத்தழும் பேறுதற்குக் காரணமாகிய (பல) வரங்களை உடையவர் கள் (அங்கு) வந்து சேர்ந்தார்கள்.

கு:- கொள்கை—தன்மை; இயல்பு. பூத்தவிசு உகந்தவன் புகன்ற வரம், நாத் தழும் பேறிய வரம் எனத் தனித்தனி இயையும். பொய்யறு நா என்றது, மெய்மையல்லது கூறாத பிரமனது நாவினை. பொய்யறு வரம் எனக் காட்டி தப்பாது பயனளிக்கும் வரம் என வரத்திற்கு அடையாக்கினும் அமையும். கொள்கையார், வரத்தர், நண்ணினர் என முடிக்க. (186)

இதன் பின் 52, 45-ல் பின்வரும் மிகைப் பாடல் உளது:-

9621 a இன்னவர் ஐயிருகோடி யென்றுள
மன்னவர் சதமுக முடையர் மற்றவர்
துன்னினர் மனத்தனல் சுறுக்கொண்டேறிட
உன்னினர் ஒருவருக் கொருவர் ஓதுவார்.

வந்த அரக்கர்கள் இராமனொடு ஒருவர் ஒருவராகப் பொருவதா அன்றி ஒன்று சேர்ந்து பொருவதா எனத் தமக்குள் வினவுதல்.

9622 நம்முளீண் டொருவனை வெல்லு நன்கெனின்
வெம்முனை யிராவணன் றனையும் வெல்லுமால்
இம்மென வுடனெடுத் தெழுந்து சேறுமோ
செம்மையிற் றனித்தனிச் செய்து மோசெரு.

'நம்முள் ஈண்டு ஒருவனை வெல்லும் நன்கு எனின்
வெம்முனை, இராவணன் தனையும் வெல்லுமால்;
இம்மென உடன் எடுத்து எழுந்து சேருமோ?
செம்மையின் தனித்தனிச் செய்துமோ செரு?

பொ:- (இந்த இராமன்) நமக்குள் இங்கு ஒருவனை நன்கு வெற்றி கொள்வான் என்றால் வெம்மை மிக்க போர் முனையில் இராவணனையும் வெற்றி கொள்ள வல்லனாவன். (இவனோடு) இம்மென்னும் அளவில் (நாம் எல்லோரும்) உடன் சென்று போர் புரிவோமா? அன்றி ஒவ் வொருவரும்) நேர்மையிற் பொருந்தித் தனித்து (இவனுடன்) போர் செய்வோமா?

கு:- அங்கு வந்து சேர்ந்த அரக்கர்கள் இவ்வாறு தமக்குள் வினவி நின்றனர் என்பதாம். செம்மை என்பது ஒருவனை ஒருவன் தனிநின்று பொருதலே முறையென்னும் போர் அறம். தனித்தனிச் செருச் செய்யுமோ என மாற்றுக. செய்தும்—செய்வோம். (187)

## எல்லோரும் ஒருங்கு சேர்ந்து பொருதலே நன்று என்ற வன்னியின் சொல்லுக்கு எல்லோரும் இசைதல்

**9623** எல்லோ மெல்லோ மொன்றி
வளைந்திந் நெடியோனை
★ வல்லே வல்ல போர்வலி
கொண்டு மலையோமேல்
வெல்லோம் வெல்லோ
மென்றனன் வன்னி மிடலோரும்
தொல்லோன் சொல்லே நன்றென
வஃதே துணிவுற்ருர்.

'எல்லோம் எல்லோம் ஒன்றி வளைந்து இந் நெடியோனை
வல்லே வல்ல போர்வலி கொண்டு மலை யோமேல்
வெல்லோம் வெல்லோம்' என்றனன், வன்னி; மிடலோரும்,
'தொல்லோன் சொல்லே நன்று' என, அஃதே துணிவுற்ருர்.

பொ:- (அரக்கராகிய யாம்) எல்லோமும் எல்லோமும் ஒன்று கூடி இந்த நெடியவனுகிய இராமனை வளைத்துக் கொண்டு கற்று வல்ல போர்த்துறைகளின் வன்மையைத் துணையாகக் கொண்டு விரைந்து போர் செய்யாமல் காலந் தாழ்ப்போமாயின் (நாம் இவனை) வெல்ல மாட்டோம் வெல்ல மாட்டோம் என்று (மறுமொழி) கூறினன் வன்னி; ஆற்றல் மிக்க அவ் வீரர்களும் பழைமையுடைய சேனபதி யாகிய வன்னியின் சொல்லே நன்று என ஏற்று அதனையே செய்யத் துணிந்தார்கள்.

கு:- வல்ல போர்வலி கொண்டு வல்லே மலையோமேல் என இயையும். மலைதல்—பொருதல். வெல்லோம் வெல்லோம் என்ற அடுக்கு துணிவு பற்றியது. தொல்லோன் என்றது போர்த்தொழிலில் நெடுங் காலம் பழகிய தொன்மை வாய்ந்த சேனபதியாகிய வன்னியை. (188)

## அரக்கர்களின் போர் ஆரவாரம்

9624 அன்னுர் தாமு மார்கலி
யேழு மென வார்த்தார்
மின்னுர் வான மிற்றுறு
மென்றே விளி சங்கம்
கொன்னே யூதித் தோள்புடை
கொட்டிக் கொடு சார்ந்தார்
என்னும் வைய மென்படும்
வானந் திசையேதாம்.

அன்னர் தாமும், ஆர்கலி
ஏழும் என ஆர்த்தார்;
'மின் ஆர் வானம் இற்று
உறும்' என்றே, விளிசங்கம்
கொன்னே ஊதி, தோள் புடை
கொட்டிக் கொடு சார்ந்தார்,
என் ஆம், வையம்? என்படும்;
வானம்? திசை ஏதாம்?

பொ:- அத்தகைய அரக்கர்களும் ஏழுகடல்களும் (ஒருங்கே ஒலித்தாற்) போன்று ஆரவாரித்தனர். மின்னலொடு பொருந்திய வானம் இடிந்து வீழும் என்னும்படி (போருக்கு) அழைக்கின்ற சங்கினை (க்கேட்டோர்க்கு) அச்ச முண்டாக தோள்களிடத்தே (கைகளாற்) புடைத்துத் தட்டிக்கொண்டு(இராமனுக்கு) எதிரே சார்ந் தார்கள். இந்நிலையில் இவ்வுலகம் என்ன ஆகுமோ? வானுலகு என்ன பாடு பாடும்? இத்திசையும் எத்தன்மையதாகும்?

கு-: ஆர்கலி—கடல். விளித்தல்—அழைத்தல். கொன்—அச்சம். 'வையம் என்னும்? வானம் என்படும்? இத்திசை ஏதாம்' என்பது கண்டோர் கூற்று. (189)

## இராமன் தன் வில்நாணைத் தெறித்து ஒலியெழுப்புதல்

9625 ஆர்த்தா ரன்னு ரன்ன
களத்தே யவராற்றல்
தீர்த்தா னுந்தன் வெஞ்சிலை
நாணைத் தெறிப்புற்ருன்

பேர்த்தான் பொற்ரேள் முற்று
மளந்தான் பிறழ்சங்கம்
ஆர்த்தா லொத்த தவ்வொலி
யெல்லா வுலகுக்கும்.

*ஆர்த்தார் அன்னர்; அன்ன*
*களத்தே அவர் ஆற்றல்*
*தீர்த்தானும், தன் வெஞ்சிலே*
*நாணைத் தெறிப்புற்ருன்;*
*பேர்த்தான் பொற்ரேள் முற்றும்*
*அளந்தான் பிறழ்சங்கம்*
*ஆர்த்தால் ஒத்தது அவ்ஒலி*
*எல்லா உலகுக்கும்.*

பொ:- *அத்தன்மையராகிய அரக்கர்கள் போர் ஆரவாரஞ் செய்தனர். அந்தப் போர்க்களத்திலே அவர்களது ஆற்றலே அறவே தீர்த்தவஞகிய இராமனும் தனது வெம்மை மிக்க வில்லின் நாணினைத் தெறித்தான்.* அவ் (வில் நாணின்) ஒலியானது, (தன்) அழகிய தோள்களைப் புடை பெயர்த்தவஞகிய உலகம் முழுவதனையும் அளந்தவஞகிய திருமாலது (வெற்றித்திறத்துடன்) விளங்குகின்ற சங்கம் எல்லா வுலகங்களிலும் ஆரவாரித்ததனை ஒத்து ஒலித்தது.

கு:- தெறித்தல்—விரலால் தெறித்து ஒலியெழுப்புதல். பேர்த்தல்—புடை பெயர்த்தல். வையம் அளந்தான் என்றது, தன் பாதங்களால் உலகினை அளந்தவஞகிய திருமாலை. (190)

அரக்கர் பல்லாயிர கோடியராய் இராமனை வளைத்துப் பொருதல்

9626 பல்லாயிர கோடியர் பல்படை நூல்
வல்லாரவர் மெய்ம்மை வழங்கவலார்
★ எல்லாவுல கங்களு மேறிய போர்
வில்லாள ரரக்கரின் மேதகையோர்.

*பல் ஆயிர கோடியர்; பல் படை நூல்*
*வல்லார்; அவர் மெய்ம்மை வழங்க வலார்;*
*எல்லா உலகங்களும் ஏறிய போர்*
*வில்லாளர்—அரக்கரின் மேதகையோர்.*

பொ:- அரக்கரினத்தில் மேலாகிய தகுதி படைத்த அவ் வீரர்கள், பல ஆயிர கோடிக்கணக்கானவர்கள்; அவர்கள் மெய்ம்மை நெறியில் வழுவாது நின்று படைக்கலங்களைச் செலுத்தவல்லவர்கள்; எல்லா வுலகங்களிலும் புகழ் சென்று பொருந்திய வில்லினை ஆளும் வீரர்கள்.

கு:- அரக்கரின் மேதகையார்...வில்லாளர் எதிர் சென்று செறிந்தனர் என அடுத்த செய்யுளோடு முடிக்க. (191)

**9627** வென்றாருல கங்களை விண்ணவரோ
டொன்றாவுயர் தானவர் யூகமெலாம்
கொன்றார் நிமிர் கூற்றென வெவ்வுயிரும்
தின்றாரெதிர் சென்று செறிந்தனரால்.

வென்றார், உலகங்களை விண்ணவரோடு;
ஒன்றா உயர் தானவர் யூகம் எலாம்
கொன்றார் நிமிர் கூற்று என, எவ் உயிரும்
தின்றார்; எதிர் சென்று செறிந்தனரால்.

பொ: உலகங்களை யெல்லாம் வென்றவர்கள்; விண்ணுலகில் வாழ்வாராகிய தேவர்களோடு ஒன்றாக வுயர்ந்த அசுரர்களின் சேனை அணிகளையெல்லாம் (ஒருங்கே) கொன்றவர்கள்; (தடையின்றி) நிமிர்ந்து மேற்செல்லும் கூற்றுவனை யொப்ப எல்லா வுயிர்களையும் தின்றவர்கள்; (அத்தகையோர் இராமனுக்கு) எதிரே சென்று நெருங்கினார்கள்.

கு:- ஒன்றாக வுயர்தல்—ஒப்ப உயர்தல். தானவர்—அசுரர்; தேவர்கட்குப் பங்காளிகள். யூகம்—சேனைகளின் அணி. (192)

**9628** வளைத்தார்மத யானையை வன்றொழுவில்
தளைத்தாரென வந்து தனித்தனியே
உளைத்தாருரு மேறென வொன்றலபோர்
விளைத்தாரிமை யோர்கள் வெதும்பினரால்.

வளைத்தார் மதயானையை, வன்தொழுவில்
தளைத்தார் என, வந்து தனித்தனியே
உளைத்தார் உரும்ஏறு என, ஒன்று அலபோர்
விளைத்தார்; இமையோர்கள் வெதும்பினரால்.

பொ:- (அவ் அரக்கர்கள்) மதச் செருக்குடைய யானையை வலிய தொழுவத்திலே தளையிட்டவரைப் போன்று வந்து (இராமனை) வளைத்துக்கொண்டு பேரிடியினை யொத்துப் பெருமுழக்கஞ் செய்து ஒரு திறத்ததல்லாத பலவகைப் போர்களைச் செய்தார்கள். (அது கண்டு) தேவர்கள் (மனம்) வெதும்பினார்கள்.

கு:- எதிர் சென்று செறிந்தவராகிய அவ்வரக்கர்கள் மத யானையை வன்தொழுவில் தளைத்தார் என வந்து (இராமனை) வளைத்தார், உரும் ஏறு என உளைத்தார், ஒன்று அல (பல) போர் விளைத்தார் என இயைத்துரைக்க. (193)

**9629** விட்டீய வழங்கிய வெம்படையிற்
சுட்டீய நிமிர்ந்த சுடர்ச் சுடரும்
கட்டீயு மொருங்கு கலந்தெழலால்
உட்டீயுற வெந்தன வேழுலகும்

விண்தீய வழங்கிய வெம் படையில்
சுட்டீய நிமிர்ந்த சுடர்ச் சுடரும்,
கண்தீயும் ஒருங்கு கலந்து எழலால்,
உள் தீ உற வெந்தன, ஏழ் உலகும்.

பொ:- விண்ணிடம் தீய்ந்து வெதும்பும்படி (அரக்கர்) செலுத்திய கொடிய படைக்கலங்களினின்று சுடுதலைச் செய்ய மேல் நிமிர்ந்த சுடரையுடைய தீயும் (வெகுளிமிக்க அரக்க வீரர்களது) கண்ணி லிருந்து புறப்பட்ட தீயும் ஒருசேரக் கலந்து மேலெழுதலால் ஏழுலகங் களும் உள்ளே தீப்பற்ற வெம்மையுற்று வெதும்பின.

கு:- எண்+கடிது=எட்கடிது என்றாற்போல விண்+தீய= விட்டீய என நிலைமொழியீற்று ணகரம் டகரமாகத் திரிந்தது. சுட்டு ஈய—சுடுதலைச் செய்ய; ஈய என்பது துணை வினை. (194)

## அரகக்ர் சேனைகளில் தோன்றிய பலவகை ஒலிகள்

**9630** தேரார்ப்பொலி வீரர் தெழிப்பொலியும்
தாரார்ப்பொலி யுங்கழ லுக்கொலியும்
போராற்சிலை நாணி புடைப்பொலியும்
காராற்பொலி யுங்களி றார்ப்பொலியும்.

தேர் ஆர்ப்பு ஒலி, வீரர் தெழிப்பு ஒலியும்,
தார் ஆர்ப்பு ஒலியும், கழல் தாக்கு ஒலியும்,
போரால் சிலை நாணி புடைப்பு ஒலியும்,
காரால் பொலியும் களிறு ஆர்ப்பு ஒலியும்.

பொ:- தேர்களின் ஆரவாரமாகிய ஒலியும், வீரர்களின் உரப்பொலியும் கிண்கிணி மாலைகள் ஆரவாரிக்கும் ஒலியும், (வீரர்களின்) வீரக்கழல்கள் (ஒன்றோடொன்று) தாக்குதலாலுளதாகிய ஒலியும், போரின் கண்ணே வில்லின் நாணைத் தெறித்தலால் உளதாகிய ஒலியும், கருநிறத்தோடு பொலிவுற்று விளங்குகின்ற களிறுகள் பிளிறும் ஒலியும் (சேனையில் மிக்குத் தோன்றின)

கு:- தார்—கிண்கிணி மாலை. தெழித்தல்—உரப்புதல்; அதட்டுதல். போரால் -போரின் கண்ணே; உருபு மயக்கம். கார்—கருநிறம். ஒலியிம் ஒலியும் 'மிக்கன' என வினைச் சொல்லாகிய பயனிலை வருவித்துரைக்க. (195)

## இராவணனை யொத்த ஆற்றலுடைய பல்வாயிரகோடி வீரர்களை இராமன் ஒருவனுகவே வெகுண்டு சென்று எதிர்த்தல்

**9631** எல்லாரு மிராவணனே யனையார்
வெல்லாவுல கில்லவர் மெய்வலியார்
தொல்லார்படை வந்து தொடர்ந்ததெனு
நல்லானு முருத்தெதிர் நண்ணினனுல்.

'எல்லாம் இராவணனே அனையார்;
வெல்லா உலகு இல்லவர்; மெய் வலியார்;
'தொல்லார் படை வந்து தொடர்ந்தது' எனு,
நல்லானும் உருத்து, எதிர் நண்ணினனுல்.

பொ:- (அரக்கர் படையிலுள்ளார்) எல்லாரும், (ஆற்றல் மிகுதியால்) இராவணனையே ஒத்தவர்கள்; (தாம்) வெல்லாத உலகங்கள் இல்லாதவர்கள் (எல்லாவுலகங்களையும் ஒருங்கே வென்றவர்கள்); உடல் வன்மை படைத்தவர்கள்; (இத்தகைய) பழையோரது பெருஞ்சேனை வந்து (தன்னைத்) தொடர்ந்தது என்று நற்குணமுடையோனுகிய இராமனும் வெகுண்டு (அவரொடு பொருதற்கு) எதிர் சென்றுன்.

கு:- தொல்லார்—பழையோர்; என்றது, பாவந்தோன்றிய நாள் முதல் தோன்றிய பழைமையுடையோராகிய அரக்கர்களை. நல்லான் என்றது, நல்லறத்தின் உருவாகிய இராமனை. உருத்தல்—வெகுளுதல். (196)

## இராமன் அம்புமழை பொழிதல்

**9632** ஊழிக்கனல் போல்பவ ருந்தினபோர்
ஆழிப்படை யம்பொடு மற்றகலப்
பாழிக்கடை நாள்விடு பன்மழைபோல்
வாழிச்சுடர் வாளி வழங்கினனால்.

*ஊழிக் கனல் போல்பவர் உந்தினபோர்*
*ஆழிப் படை அம்பொடும் அற்று அகல*
*பாழிக் கடை நாள் விடு பல் மழைபோல்*
*வாழிச் சுடர் வாளி வழங்கினனால்.*

பொ:- ஊழி முடிவிற் றோன்றும் தீயினை யொத்தவர்களாகிய அவ்வரக்கர்கள் வீசிய கடல்போற் பரந்த (பல்வகைப்) படைக் கலங்கள் (அன்னோர் எய்த) அம்புகளுடனே துணிக்கப்பட்டு ஒழிய, யுகமுடிவாகிய இறுதிநாளிலே பெய்கின்ற வலிய பெருமழையினைப் போன்று வாழ்தற்குரிய ஒளியினையுடைய அம்புகளை (இராமன்) மிகுதியாகப் பொழிந்தனன்.

கு:- பாழி—வன்மை. வாளி—அம்பு. (197)

## இராமன் ஏவிய அம்புகளாற் சிதைந்தழிந்த அரக்கர் சேனையின் தோற்றம்

**9633** சூரோடு தொடர்ந்த சுடர்க்கணைதான்
தாரோ டகலங்க டடிந்திடலும்
தேரோடு மடிந்தனர் செங்கதிரோன்
ஊரோடு மறிந்தன னொத்துரவோர்.

*சூரோடு தொடர்ந்த சுடர்க் கணை தான்*
*தாரோடு அகலங்கள் தடிந்திடலும்,*
*தேரோடு மடிந்தனர், செங்கதிரோன்*
*ஊரோடு மறிந்தனன் ஒத்து, உரவோர்.*

பொ:- கொடுந்தன்மையுடன் இயைந்த சுடரினையுடைய (இராம னது) அம்பு (அரக்கர் அணிந்த) மாலையோடு மார்பினைப் பிளந்து ஊடுருவவே மனத்திண்மையுடைய அவ் வரக்கர்கள், சிவந்த கதிர்களை யுடைய சூரியன் ஊர்கோளுடன் பொருந்தியதனை ஒத்துத் தேருடன் இறந்தனர்.

கு:- சூர்—கொடுமை. அரக்கரது மார்பினைப் பிளந்து ஊடுரு விய சுடர்க்கணைக்குச் செங்கதிரோனும், அவ் விராமபாணத்தைச் சூழ்ந்து விளங்கும் மார்பின் மாலைக்குச் சூரியனைச் சுற்றியமைந்த ஒளி வட்டமாகிய ஊர்கோளும் உவமை. இனி. தேருக்கு. ஊர் கோளும். விரர்க்குச் சூரியனும் உவமை எனக் கூறலும் உண்டு. (198)

**9634** கொல்லோடு சுடர்க்கணை கூற்றினிணைப்
பல்லோடு தொடர்ந்தன பாய்தலினுல்
சொல்லோடெழு மாமுகில் சிந்தினபோல்
வில்லோடும் விழுந்த மிடற்கரமே.

கொல்லோடு சுடர்க் கணை கூற்றின் நிணப்
பல்லோடு தொடர்ந்தன பாய்தலினுல்,
சொல்லோடு ஏழு மாமுகில் சிந்தினபோல்,
வில்லோடும் விழுந்த; மிடல் கரமே.

பொ:- கொல்லுதற் றெழிலில் மிக்குள்ள சுடரையுடைய அம்பு கள், கூற்றுவனுடைய நிணம்படிந்த பற்களால் தொடரப்பெற்றன வாய்ப் பாய்தலினுல், (அவ் வரக்கருடைய) வலிமைமிக்க கைகள், மின்னலுடனே எழுகின்ற கரிய மேகங்கள் நிலத்திற் சிந்தினபோன்று, பிடித்த விற்படையுடனே விழுந்தன.

கு:- கொல்—கொல்லுதல்; முதனிலைத் தொழிற் பெயர். இராம பாணமும் உயிர் கவரும் கூற்றுவனுடைய பற்களும் அரக்கருடலில் ஒரு சேரப் பாய்ந்தன என்பார், 'சுடர்க்கணை வல்லோடு தொடர்ந்தன பாய்தலினுல்' என்ருர். செல்—இடி; இங்கு இடியோடு தொடர்ந்த மின்னலை யுணர்த்தியது. மிடற்கரம், செல்லோடு முகில் சிந்தினபோல் வில்லோடும் விழுந்தன என்க. அரக்கருடைய கரிய கைகளுக்குக் கருமுகிலும், கைகளிற் பற்றிய வில்லுக்கு மின்னலும் உவமை. (199)

9635 செம்போ டுதிரத்திரை யாழியின்வாய்
வெம்போ டரவக்குல மேனிமிரும்
கொம்போடும் விழுந்தன வொத்தகுறைந்
தம்போடு விழுந்த வடற்கரமே.

செம்போடு உதிரத்திரை ஆழியின் வாய்
வெம்பு ஒடு அரவக்குலம் மேல் நிமிரும்
கொம்போடும் விழுந்தன ஒத்த—குறைந்து,
அம்போடும் விழுந்த அடல் கரமே.

பொ:- செந்நிறத்தொடு கூடிய இரத்தமாகிய அலைகளையுடைய கடலிலே, (இராமபாணத்தால்) அறுபட்டு அம்புடனே விழுந்த வலி மிக்க (அரக்கர்) கைகள், சிறியோடும் பாம்பினங்கள் மேலோங்கிய மரக் கிளைகளோடும் விழுந்தவற்றை ஒத்துத் தோன்றின.

கு:- செம்பு என்றது, அதன்கண் அமைந்த நிறமாகிய செம்மையினைக் குறித்து நின்றது. குறைந்து—அறுபட்டு. அரக்கர் கைகட்கு மரக்கொம்பும் அக் கைகளிலுள்ள அம்புக்கு அரவக் குலமும் உவமை. (200)

9636 முன்னோ டுதிரப் புனன் மூதுலகைப்
பின்னோடி வளைந்த பெருங்கடல்வாய்
மின்னோடும் விழுந்தன மேகமெனப்
பொன்னோடை நெடுங்கரி புக்கனவால்.

முன் ஓடு உதிரப் புனல், மூதுலகைப்
பின் ஓடி வளைந்த பெருங்கடல் வாய்,
மின்னோடும் விழுந்தன மேகம் என,
பொன் ஓடை நெடுங் கரி புக்கனவால்.

பொ:- முற்பட்டு ஓடிய உதிர வெள்ளம் (மேலும் செல்லுதற்கு இடம் பெறாது) பின்னே ஓடிப் பெரிய உலகத்தை வளைத்துச் சூழ்ந்த (குருதிப்) பெருங்கடலிலே, மின்னலோடும் மேகங்கள் வீழ்ந்து படிந் தாற் போன்று பொன்னாலியன்ற நெற்றிப் பட்டத்தினையுடைய நெடிய யானைகள் புக்கு வீழ்ந்தன.

கு:- பின்ஓடுதல்—முன்னே செல்லுதற்கு இடமின்றிப் பின் வாங்குதல். ஓடை—நெற்றிப் பட்டம். யானைக்கு மேகமும் ஓடைக்கு மின்னலும் உவமை. (201)

9637 மறவெற்றி யரக்கர் வலக்கையொடும்
நறவக்குரு திக்கடல் வீழ நகைவாள்
சுறவொத்தன மீது துடித்தெழலால்
இறவொத்தன வாவு மினப்பரியே.

மற வெற்றி அரக்கர் வலக் கையொடும்
நறவக் குருதிக் கடல் வீழ் நகைவாள்
சுறவு ஒத்தன; மீது துடித்து எழலால்,
இறவு ஒத்தன, வாவும் இனப் பரியே.

பொ:- தேனையொத்த நிறமுடைய உதிரக் கடலிலே, வீரமும் வெற்றியும் வாய்ந்த அரக்கருடைய வலக்கையுடனே வீழ்ந்த ஒளிமிக்க வாள்கள், துடித்து மேல் எழுதலால் (துள்ளியெழும்) சுறு மீன்களை ஒத்தன. தாவுகின்ற தொகுதியாகிய குதிரைகள் இறு மீன்களை ஒத்தன.

கு:- மறமும் வெற்றியும் என எண்ணும்மை விரித்துரைக்க. நறவம்—தேன். நகைவாள்—ஒளிவிட்டு விளங்கும் வாள். நகுதல்—ஒளிவிட்டு விளங்குதல். வாள், சுறவு ஒத்தன; பரி, இறவு ஒத்தன என முடிக்க. வாள் சுறு மீனை ஒத்துத் தோன்றுதல், 'சுறவினத்தன்ன வாளோர் மொய்ப்ப' (புறநானூறு—13) எனவரும் தொடரால் இனிது புலனும். இரவு—இறு என்னும் ஒருவகை மீன். வாவுதல்—தாவுதல்.

9638 தாமச்சுடர் வாளி தடிந்தகலப்
பாமக் குருதிப்படி கின்றபடைச்
சேமப்படர் கேடக மால்கடல்சேர்
ஆமைக்குல மொத்தன வத்தனையால்.

தாமச் சுடர் வாளி தடிந்து அகலப்
பாமக் குருதிப் படிகின்ற படைச்
சேமப் படர் கேடகம், மால்கடல் சேர்
ஆமைக் குலம் ஒத்தன அத்தனையால்.

பொ:- ஒளி வரிசையினை யுடைய அம்புகளால் தடியப் பட்டு நீங்கப் பரவிய குருதி நீரிற் படிகின்றனவாகிய, படைகளைத் தடுத்துக் காக்கும் வீரர்களின் வரிசைகள் அத்தனையும், பெரிய கடலைச் சேர்ந்த ஆமைக் கூட்டத்தை ஒத்தன.

கு:- தாமச்சுடர் என்பதனைச் சுடர்த்தாமம் என மாற்றுக. சுடர்த்தாமம்—ஒளி வரிசை. வாளி என்றது இராமபாணத்தினை. யாவும் என்னும் செய்யுமென்னும் பெயரெச்சத்து உயிர் மெய்கெடப் பாம் என்றாயிற்று. படைச் சேமக் கேடகம், படர் கேடகம் எனத் தனித்தனி இயையும். படர்—வீரர். கேடகம் அத்தனை(யும்) சுடர் வாளி தடிந்து அகலக் குருதிப் படிகின்றவை, கடல் சேர் ஆமைக்குலம் ஒத்தன என இயையும். (203)

**9639** காம்போடு பதாகைகள் காருதிரப்
பாம்போடு கடற்படி வுற்றனவால்
வாம்போர்நெடு வாடை மலைந்தகலங்
கூம்போடுயர் பாய்கள் குறைந்தனபோல்.

காம்போடு பதாகைகள் கார், உதிரப்
பாம்போடு கடல் படிவுற்றனவால்—
வாம் போர் நெடு வாடை மலைந்து, கலம்
கூம்போடு உயர் பாய்கள் குறைந்தன போல்.

பொ:- தாவும் போரினையுடைய நெடிய வாடைக் காற்றினால் தாக்கப்பட்ட மரக்கலம் கூம்புடனே உயர்ந்த பாய்கள் சிதைவுற்றன போன்று, காம்போடு கூடிய கொடிகளை யுடைய கருமுகில் போலும் யானைகள், பரவியோடுதலையுடைய உதிரக் கடலிலே படிந்தன.

கு:- நெடுவாடை மலைந்த கலம், கூம்போடு உயிர் பாய்கள் குறைந்தன போல், காம்போடு பதாகைகள் கார், பாம்போடு உதிரக் கடல் படிவுற்றன என முடிக்க. கலம்—மரக்கலம். கூம்பு என்பது, மரக்கலத்திற் பாயினைக் கட்டுதற்குரிய மரம்; காம்பு—கொடியின் தண்டு. பதாகை—கொடிச்சீலை. கார்—கருமுகில்; இங்கு உவம ஆகுபெயராய், முகில் போலும் நிறமுடைய யானையை யுணர்த்தியது. யானைக்கு மரக்கலமும், கொடித் தண்டுக்குப் பாய் மரமும், கொடிச் சீலைக்குப் பாயும் உவமை. மரக் கலத்தினை யானைக்கு உவமையாகக் கூறும் மரபுண்மை,

'களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்'

எனவரும் பழம் பாடலால் அறியப்படும். (204)

**9640** மண்டப்படு சோரியின் வாரியின்வீழ்
கண்டத்த சரத்தொகை கவ்வியதாள்
முண்டக்கிளர் தண்டன முட்டொகுவன்
றுண்டச்சுற வொத்த துடித்தனவால்.

மண்டப் படு சோரியின் வாரியின்வீழ்
கண்டத்த சரத்தொகை கவ்வியதாள்,
முண்டக் கிளர் தண்டின முள்தொகுவன்
துண்டச் சுறவு ஒத்த, துடித்தனவால்.

பொ:- மிகுதியாகப் பெருகிய குருதிக் கடலில் வீழ்ந்த துண்டிக்கப் பட்ட அம்புத் தொகுதியாற் பற்றப்பட்ட (வீரர்களின்) கால்கள், தாமரையின் கிளர்ந்த தண்டின் கண்ணவாகிய முட்கள் செறிந்த வலிய துண்டமாகிய சுறு மீன்களை யொத்தனவாய்த் துடித்தன.

கு:- மண்டுதல்—நிறைதல். சரத்தொகை கவ்விய துண்டப்படு தாள், முண்டக்கிளர் தண்டின முள்தொகுவன் துண்டச் சுறவு ஒத்த துடித்தன என இயைத்துரைக்க. 'முண்டக்கிளர் தண்டின்' என்புழி முண்டகம் என்ற சொல்லின் ககரம், செய்யுள் விகாரத்தால் தொக் கது. கண்டத்த தாள், சரத்தொகை கவ்வியதாள் எனத் தனித்தனி இயையும். அம்புகள் செறிந்து தைக்கப் பெற்றுத் துண்டிக்கப்பட்டுக் குருதி நீரில் விழ்ந்த கால்கள், தாமரைத் தண்டின் முட்கள் செறிந்து தைக்கப்பட்ட வலிய துண்டமாகிய சுறு மீன்களை ஒத்துத் துடித்தன என்பதாம். (205)

**9641** தெளிவுற்ற பளிங்குறு சில்லிகொடேர்
விளிவுற்றுக வேறுற வீழ்வனதாம்
அளிமுற்றிய சோரியி னுழியினுழ்
ஒளிமுற்றிய திங்களை யொத்துளவால்.

தெளிவுற்ற பளிங்குஉறு சில்லிகொள்தேர்
விளிவுற்று உக, வேறுஉற வீழ்வனதாம்,
அளிமுற்றிய சோரியின் ஆழியின் ஆழ்
ஒளிமுற்றிய திங்களை ஒத்துள வால்.

பொ:- (தன்னைச் சார்ந்துள்ள பொருள்கள்) தெளிய விளங்குந் தன்மையினதாகிய பளிங்கினால் இயன்ற சக்கரங்களைக் கொண்ட

தேர்கள் அழிதலை யுற்றுச் சிதைய, (அத்தேர்களினின்றும் பிரிந்து) வேறாக வீழ்வனவாகிய சக்கரங்கள், மதுவினைப் போலும் குருதிக்கடலிற் படியும் ஒளிநிரம்பிய நிறைமதியினை ஒத்துள்ளன.

கு:- சில்லி—சக்கரம். அளி—மது; தேன். முற்றுதல்—போலுதல். 'எழு முற்றுந் தோளார்' (சீவக. 1870) என்புழி இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். ஒளி முற்றிய திங்கள்—கலைகள் நிறையப் பெற்ற முழுமதி. தேர்களிலுள்ள பளிங்குச் சக்கரங்கள் வேறாகிக் குருதி நீரில் வீழ்வன, மதுப்போலும் குருதிக் கடலில் மறையும் பூரணச் சந்திரனை ஒத்துத் தோன்றின என்பதாம். (206)

**9642** நிலைகோடலில் வென்றி யரக்கரைநேர்
கொலைகோடன மன்குறி கோளுறுமே
சிலைகோடிய தோறு சிரத்திரள்வன்
மலைகோடியின் மேலு மறிந்திடுமால்.

நிலைகோடல் இல் வென்றி அரக்கரை நேர்
கொலைகோடல் நமன் குறி கோளுறுமே?
சிலைகோடிய தோறும் சிரத்திரள் வன்
மலை கோடியின்மேலும் மறிந்திடுமால்.

பொ:- (தத்தம் அளவில்) நிலை கொள்ளுதல் இல்லாத வெற்றித் திறமுடைய அரக்கர்களை நேர் (நின்று) கொலைத் தொழிலாற் கொல்லுதலை இயமன் தனது இலக்காகக் கொள்ளுதற்கு வல்லனோ? (இராமனது) வில் வளைந்தபோதெல்லாம் (அரக்கருடைய) தலையின் தொகுதியாகிய வலிய மலைகள் கோடியின் மேலும் (துணிக்கப்பட்டு) வீழ்வனவாயின.

கு:- தாம் தாம் நுகர் பொருளையீட்டி வாழும் தத்தம் அளவில் நில்லாது தம் வன்மையாள் பிறரது வாழ்விற் குறுக்கிட்டுத் துயர் விளைத்தலையே தமது வெற்றித் திறமாகக் கொண்டவர்கள் அவ்வரக்கர்கள் என்பார், 'நிலைகோடல் இல் வென்றி அரக்கர்' என்றார். அரக்கராகிய அவர்களை வாழ்நாளிறுதியில் உயிர்கவரும் கடப்பாடுடைய கூற்றுவனும் நேர் நின்று கொலைத் தொழிலாற் கொள்ளுதற்குரிய வன்மையுடைய னல்லன் என்பார், 'நேர் கொலை கோடல் நமன் குறி கோளுறுமே?' என வினவினார். குறிகோள்—இலக்காகக் கொள்ளுதல். உறுமே என்புழி ஏகாரம் உறுன் என எதிர்மறைப் பொருளுணர்த்தியது. சிலை என்றது ஈண்டு இராமனது வில்லினை. கோடியதோறும்—வளையுந்தோறும். கோடுதல்—வளைதல். மறிதல்—விழுதல். கூற்று

வனும் எதிர் நிற்க ஒண்ணாத ஆற்றல்மிக்க அரக்கர் படையில் இராம னது வில் வளையும் தோறும் தலை மலைகள் கோடியின் மேலாக விழுந்து குவிந்தன இராமனது விற்போர் வன்மையை வியந்து கூறியவாறு.

**9643** திண்மார்பின் மிசைச் செறி சாலிகையின்
கண்வாளி கடைச்சிறை கான நுழைந்
தென்வாயுற மொய்த்தன வின்னறையுற்
றுண்வாய்வரி வண்டின மொத்தனவால்.

திண் மார்பின்மிசைச் செறி சாலிகையின்—
கண் வாளி கடைச் சிறை, கானம் நுழைந்து
எண் வாய் அற மொய்த்தன, இன் நறை உற்று
உண் வாய் வரி வண்டு இனம் ஒத்தனவால்.

பொ:- திண்ணிய மார்பின்மீது செறிந்துள்ள கவசத்தின் கண்ணே அம்புகளின் கடைப் பகுதியாகிய சிறகுகளின் தொகுதி நுழைந்து எண்ணுகின்ற இடம் அற(எங்கும்) நெருங்கித் தைத்துள்ளவை, இனிய தேனைப் பொருந்தி உண்ணும் வாயினையுடைய வரியமைந்த வண்டின் தொகுதியை ஒத்தன.

கு:- சாலிகை—கவசம். வாளி—அம்பு. கடைச்சிறை—அம்பின் கண்ணே சிறகு போன்றமைந்த காம்பின் கடைப் பகுதி. எண்வாய் அற—எண்ணுதற்குரிய இடம் இல்லையாக; எனவே உடல் முழுவதும் என்றபடி. இன் நறை—இனியதேன்.

இதன்பின் 52-ல் பின் வரும் மிகைப்பாடல் உளது:-
அடல் ஐயிரு கோடியரக்கரெனும்
மிடல் மன்னவர் வீரனொடும் பொருவார்
கடை கண்டிலர் காய்கரி தேர்பரிமாப்
படை கண்டிலர் கண்டிலர் பட்டதிறம்.

### அரக்கர் சேனைகளைக் கொன்று குவித்து இராமர் பலர் என அரக்கர் திகைப்புற இராமன் சாரிதிரிதல்

**9644** பாருடு களத்தொரு வன்பகலின்
கூருகிய நாலிலொர் கூறிடையே
நூருயிர யோசனை நூழில்களான்
மாருதுழல் சாரிகை வந்தனனால்.

பாறு ஆடு களத்து, ஒருவன், பகலின்
கூறு ஆகிய நாலில் ஓர் கூறிடையே
நூறாயிர யோசனை, நூழில்களால்
மாறாது உழல் சாரிகை வந்தனனால்.

பொ:- பருந்துகள் உலவுகின்ற போர்க் களத்திலே, ஒருவனாக வுள்ள இராமன், பகற்பொழுதின் நாலிலொரு பகுதியாகிய பொழுதுக் குள் நூறாயிரம் யோசனையளவு (அரக்கரைக்) கொன்று குவித்தற்றொழி லால் மாறாது சுற்றுதலாகிய சாரிகை திரிந்தனன்.

கு:- பாறு—பருந்து. ஒருவன் என்றது, தனித்து ஒருவனாக அரக் கரை எதிர்த்து நின்ற இராமனை. பகலின் கூறு முப்பது நாழிகை. அதன் நாலின் கூறு ஏழரை நாழிகை. இராமன் போர்க்களமெங்கும் சாரிகை திரிந்து ஏழரை நாழிகைப் பொழுதிற்குள் அரக்கர் பலரைக் கொன்று குவித்தனன் என்பதாம். (209)

**6645** நின்றாருட னின்று நிமிர்ந்தயலே
சென்றாரெதிர் சென்று சிதைத்திடலால்
தன்றாதையை யோர்வுறு தன்மகனேர்
கொன்றானவ னேயிவ னென்று கொள்வார்.

நின்றாருடன் நின்று, நிமிர்ந்து அயலே
சென்றார் எதிர் சென்று, சிதைத்திடலால்,
'தன் தாதையை ஓர்வுறு தன்மகன்நேர்
கொன்றான் அவனே இவன்' என்று கொள்வார்.

பொ:- (இவ்விராமன் தன் எதிர் நின்றாருடன்) எதிர்ந்து நின்றும், அயலே புடைபெயர்ந்து சென்றார்க்கு எதிரே சென்றும் (அவ்வரக்கர் களைக்) கொன்றொழித்தலால், தன்னை ஓர்ந்துணருந் தன்மையனாய மகனுக்கு முன்னே அவனுடைய தந்தையைக் கொன்றானாகிய அவ் விறைவனே இவன் என்று உள்ளத்திற் கொள்வர் (அவ் அரக்கர்கள்).

கு:- தன் தாதை என்றது, பிரகலாதனுக்குத் தந்தையாகிய இரணியனை, மகன் என்றது, இரணியனுக்கு மகனாகிய பிரகலாதனை. தன் ஓர்வுறு மகன் என இயைத்துரைக்க. ஓர்வுறுதல்—மெய்ப் பொருளை இடைவிடாது சிந்தித்து உணர்தல். கொன்றான் அவன் என்றது, இரணியனைக் கொன்ற நரசிங்கமூர்த்தியாகிய அத்திருமாலை. தம்மினத்தாரிற் பெரும்பாலோரை ஒருங்கு கொன்றழித்த இராமனைக்

கண்ட அரக்கர்கள் முற்காலத்தில் இரணியனைக் கொன்றொழித்த நரசிங்கமூர்த்தியாகிய திருமாலே இவ்விராமன் என உள்ளத்துட் கருதினர் என்பதாம். (210)

9646 இங்கேயுள னிங்குள னிங்குளனென்
றங்கேயுணர் கின்ற வலந்தலையால்
வெங்கோப நெடும்படை வெஞ்சரம்விட்
டெங்கேனும் வழங்குவ ரேகுவரால்.

'இங்கே உளன்; இங்கு உளன்; இங்கு உளன்' என்று
அங்கே உணர்கின்ற அலந்தலையால்
வெங்கோப நெடும்படை வெஞ்சரம் விட்டு
எங்கேனும் வழங்குவர்; ஏகுவரால்.

பொ:- (இராமன்) 'இங்கே உள்ளான் இங்கு உள்ளான்' என்று இவ்வாறு அப்போர்க் களத்தில் அறிகின்ற கலக்க நிலையால் (அவ் அரக்கர்கள்) கொடுங்கோபத்துடனே நெடிய படைக்கலங்களையும் கொடிய அம்புகளையும் விட்டு (இராமனில்லாத இடமாகிய) வேறு எங்கேனும் செலுத்துவோராய் (த் தாம் உயிர் துறந்து) ஒழிவார்கள்.

கு:- இராமன் சாரிகை திரியும் விரைவினால் எங்கு நோக்கினும் இராமனாகத் தோன்றக் கண்ட அரக்கர்கள் 'இராமன் இங்கே உள்ளான் இங்குள்ளான் இங்குள்ளான்' என்று சொல்லிக்கொண்டு தம் கையிலுள்ள படைக் கலங்களை அவனில்லாத இடங்களில் வீணாகச் செலுத்தி அப்படைக்கலங்களால் தம் உயிர் நீங்கி யுலந்தனர் என்பதாம். (211)

9647 ஒருவன்னென வுன்னு முணர்ச்சியிலீர்
இரவன்றிது வோர்பக லென்பர்களால்
கரவன்றி ராமர் கணக்கிலரால்
பரவைம்மண லிற்பல ரென்பர்களால்.

'ஒருவன் என உன்னும் உணர்ச்சி இலீர்!
இரவு அன்று, இதுவோ பகல்' என்பார்களால்;
'கரவு அன்று, இது இராமர் கணக்கு இலரால்;
பரவை மணலின் பலர்' என்பர்களால்.

பொ:- (நம்மை எதிர்க்கும் பகைவனாகிய இராமன்) ஒருவனே என எண்ணித் துணியும் உணர்வில்லாதவர்களே! (இவ்வாறு நீர் உருவறியாது தடுமாறுதற்கு) இதுவோ இரவுப் பொழுதன்று, பகற் பொழுது' என்று (கடிந்து) கூறுவர் (அரக்கரிற் சிலர்) 'இது மாயம் அன்று. (நம்முன் தோன்றும்) இராமர் எண்ணில்லாதவர்கள்; கடலின் மணலைப் போன்று மிகப் பலராகியுள்ளார்கள்' என்று கூறுவர் (அரக்கரில் வேறு சிலர்).

கு:- இராமன் சாரிகை திரிதலால், பலராமர்களாகத் தோன்றிய உண்மை நிலையுணராது இராமர் எண்ணிறந்தார் எதிர்த்து வந்துள்ளனர் எனத் தவறாக எண்ணி யஞ்சிய அரக்கர்களை நோக்கி, 'ஒருவன் என உன்னும் உணர்ச்சியிலீர்! இதுவோ இரவு அன்று பகல்' எனத் தெருட்டினர் உண்மை நிலையுணர்ந்த அரக்கர்கள். அவர்கள் அவ்வாறு தெளிவிக்கவும் தெளியாதவராகிய அரக்கர்கள், 'இது கரவு அன்று; இராமர் கணக்கு இலர், பரவை மணலின் பலர்' எனத் தம் கருத்தையே மீண்டும் வற்புறுத்தினார்கள் என்பதாம். கரவு—மாயம். பரவை—கடல்.

இராமபிரானாகிய திருமால் ஒருவர் என்னும்படியாகவும் இருவர் என்னும்படியாகவும் ஒருமூவர் என்னும்படியாகவும் சாரிகை வந்த வேகத்தாலே கண்கள் காணமுடியாதவாறு போர் செய்து நின்று அன்று திகைப்புற்ற அரக்கரை உருவழியக் கொன்ற வெற்றித் திறத்தினை,

> 'ஒருவர் இருவர் ஓர்மூவர் என நின்று
> உருவுகரந்து உள்ளுந் தோறுந் தித்திப்பான்'
>
> (திருவாய் மொழி 8—6—2)

எனவரும் அருளிச் செயலில் நம்மாழ்வார் குறித்துப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும். (212)

## இராமன் விரைந்து சாரிகை திரியும் நிலையில் அவன்மீது அரக்கர் வீசிய படைக்கலம் தம்மினத்தவர்மீது பட அரக்கர் தம்மைத் தாமே அடித்துக்கொண்டு மாய்தல்

**9648** ஒருவன்னொரு வன்மலை போலுயர்வோன்
ஒருவன்படை வெள்ளமொ ராயிரமே
ஒருவன்னொரு வன்னுயி ருண்டதலால்
ஒருவன்னுயி ருண்டது முள்ளதுவோ.

ஒருவன் ஒருவன் மலைபோல் உயர்வோன்;
ஒருவன் படை வெள்ளம் ஓர் ஆயிரமே;
ஒருவன் ஒருவன் உயிர் உண்டது அலால்,
ஒருவன் உயிர் உண்டதும் உள்ளதுவோ?

பொ:- (அரக்கர் சேனைப் படைத்தலைவர்களுள்) ஒவ்வொருவனும் மலைபோலும் உயர்ச்சியை யுடையவன். ஒவ்வொருவனும் பெற்றுள்ள சேனைகளோ ஆயிரம் வெள்ளம் ஆகும். (அத்தகைய அரக்கருள்) ஒருவன் மற்றொருவன் உயிரையுண்டதன்றி தனியொருவனாகிய இராமன் (அவ்வரக்கர்களின்) உயிரை உண்டதும் உள்ளதோ?

கு:- இராமனாற் கொன்றழிக்கப்பட்டவர்களைக் காட்டிலும் உருவறியாது தம்மைத் தாமே அடித்துக்கொண்டு இறந்த அரக்கரே பலர் என்றவாறு. இச் செய்யுள் சொற்பொருட் பின்வருநிலை யென்னும் அணியாகும். (213)

## அரக்கர் பலர் முன்னும் விரைந்து தோன்றிப் பொரும் நிலையில் இராமர் பலராகத் தோன்றுதல்

9649 தேர்மேலுளர் மாவொடு செந்தறுகட்
கார்மேலுளர் மாகடன் மேலுளரிப்
பார்மேலுள ரும்பர் பரந்துளரால்
போர்மேல ரிராமர் புகுந்தடர்வார்.

தேர்மேல் உளர்; மாவொடு செந்தறுகண்
கார்மேல் உளர்; மாகடல்மேல் உளர்; இப்
பார்மேல் உளர்; உம்பர் பரந்து உளரால்—
போர்மேலர் இராமர் புகுந்து அடர்வார்.

பொ:- போர்த் தொழிலை மேற்கொண்டவராய் (அரக்கரது சேனையுட்) புகுந்து அழிப்பவராகிய இராமர்கள் தேர்மீது உள்ளார்; குதிரையுடனே செந்நிறக் கண்களையுடைய மேகம்போலும் யானைமீது உள்ளார்; கரிய கடல்மீது உள்ளார்; இப் பூமியின் கண்ணே உள்ளார்; வானிற் பரவியுள்ளார்கள்;

கு:- இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். மா-குதிரை செந்தறுகண்கார் என்றது யானையை. கரியகடல் என்றது கருநிற அரக்கராகிய காலாட் படையினை. (214)

இதன்பின் 52,-ல் பின்வரும் மிகைப்பாடல் உளது:-

அங்கங்கவர் தம் மொடும் ஐயனுயிர்க்
கங்கங்குள னென்பது தானறியாற்
கெங் கெங்குமி ராம னிராம னென
எங் கெங்கு மியம்ப வுற்றுளனல்.

9650 என்னும்படி யெங்கணு மெங்கணுமாய்த்
துன்னுஞ்சுழ லுந்திரி யுஞ்சுடரும்
பின்னும்மரு கும்மெதி ரும்பிரியான்
மன்னன்மகன் வீரர் மயங்கினரால்.

என்னும்படி, எங்கணும் எங்கணுமாய்த்
துன்னும்; சுழலும்; திரியும்; சுடரும்;
பின்னும், அருகும், எதிரும், பிரியான்—
மன்னன்மகன்! வீரர் மயங்கினரால்.

பொ:- என்று திகைக்கும்படி சக்கரவர்த்தி திருமகனாகிய இராமன், எல்லாவிடத்தும் ஆகிப் பின்புறத்திலும் பக்கங்களிலும் எதிரிலும் பிரியாதவனாகி (அவ்வரக்கர்களை) நெருங்குவான்; சுழல்வான்; திரிவான்; ஒளியுடன் திகழ்வான்; (அதுகண்டு) அரக்கவீரர்கள் (மனம்) மயங்கினர்.

கு:- பின்னும் அருகும் எதிரும் பிரியான், துன்னும் சுழலும் திரியும் சுடரும் என முடிக்க. துன்னுதல்—நெருங்குதல். சுழலுதல்—சுற்றுதல். சுடர்தல்—ஒளியுடன் திகழ்தல்.

மன்னன் என்றது, தசரத சக்கரவர்த்தியினை. மகன் என்றது இராமனை வீரர் என்றது அரக்க வீரர்களை. (215)

இதன்பின் 52-ல் பின்வரும் மிகைப்பாடல் உளது:

ஏயுமையிரண்டு கோடியிறைவரொவ் வொருவர் சேனை
ஆயிர வெள்ளந் தானு மத்துணை வெள்ளமாகித்
தூயவ னவர் தஞ் சேனை தொலைத்தபின் இறைவர் ஆவி
போயறப் பகழிமாரி பொழிந்தனன் பொன்றி வீழ்ந்தான்.

9651 படுமத கரிபரி சிந்தின
★ பனிவரை யிரத மவிந்தன
விடுதிசை செவிடு பிளந்தன
விரிகட லளற தெழுந்தன

அடுபுலி யவுணர் த மங்கையை
ரலர்விழி யருவிகள் சிந்தின
கடுமணி நெடியவன் வெஞ்சிலை
கணகண கணக ணெனுந்தொறும்,

படு மத கரி, பரி, சிந்தின;
பனி வரை இரதம் அவிந்தன;
விடுதிசை செவிடு பிளந்தன;
விரிகடல் அளறது எழுந்தன;
அடு புலி அவுணர்தம் மங்கையர்
அலர்விழி அருவிகள் சிந்தின
கடு மணி நெடியவன் வெஞ்சிலை,
'கண கண, கண கண' எனும் தொறும்.'

பொ:- நெடியோனாகிய இராமனது கொடுமையுடைய வில்லின் கண் உள்ள கடிய மணி கண கண கண கண என்று ஒலிக்குந்தோறும், மதம் பொருந்திய யானை குதிரைகள் சிதறி வீழ்ந்தன; இமயமலை போலும் தேர்கள் அழிந்தன. பரவிய திசைகள் (அவ்வொலியால்) செவிடுபடப் பிளந்தன; பரந்த கடல்கள் சேறுபட்டெழுந்தன; கொல்லுந் தன்மையதாய புலிபோலும் அரக்கருடைய மகளிரின் பரந்த விழிகள் அழுகைக் கண்ணீர் சொரிந்தன.

கு:- மதம் படுகரி என மாற்றுக. பனிவரை—இமயமலை. நெடியவன் வெஞ்சிலை கடுமணி, கண கண கண கண எனும் தொறும், கரிபரி சிந்தின; இரதம் அவிந்தன; மங்கையர் அலர்விழி அருவிகள் சிந்தின என முடிக்க. நெடியவன் என்றது, உலகளந்த நெடியோனின் அவதாரமாகிய இராமனை. அவுணர் என்றது அரக்கர்களை. (216)

9652 ★
ஊனேறு படைக்கை வீர
ரெதிரெதி ருருந் தோறும்
கூனேறு சிலையுந் தானுங்
குதிக்கின்ற கடுப்பின் கொட்பால்
வானேறி னர்க டேரு
மலைகின்ற வயவர் தேரும்
தானேறி வந்த தேரே
யாக்கினன் றனியே றன்னான்.

ஊன் ஏறு படைக்கை வீரர்
எதிர் எதிர் ஊரும் தோறும்
கூன்ஏறு சிலையும் தானும்
குதிக்கின்ற கடுப்பின் கொட்பால்,
வான் ஏறினர்கள் தேரும்,
மலைகின்ற வயவர் தேரும்,
தான் ஏறிவந்த தேரே
ஆக்கினன்—தனி ஏறு அன்னான்.

பொ-ள் ஒப்பற்ற ஆண் சிங்கம் போல்வானாகிய இராமன், ஊன் படிந்த படைக்கலம் ஏந்திய கையையுடைய அரக்க வீரர்கள் தன் எதிரே எதிரே (தேர்களை) ஊர்ந்து செலுத்துந்தோறும் வளைதல் மிகுந்த வில்லில் தானுமாகக் குதித்துப் பாயும் வேகத்தின் சுழற்சியால் (போரில் மடிந்து) விண்ணுலகினை யடைந்தவர்களாகிய அரக்கர்களின் தேரும் (தன்னொடு) பொருகின்ற அரக்கர்களின் தேரும் (போர்க்களத் திற்குத்) தான் ஏறி வந்த (தன்னுடைய) தேர் போலத் தோன்றும்படி (தனக்கே யுரியதாக) ஆக்கிக் கொண்டான்.

கு:- தனியேறு அன்னான், ஆக்கினன் என முடியும். இராமன், இறந்து வீழ்ந்த அரக்கர் தேரிலும், பொருது நிற்கும் அரக்கர் தேரிலும் வில்லுடன் விரைந்து குதித்துத் தோன்றுதலால் அத் தேர்கள் யாவும் தன்னுடைய தேர்களே என்னும்படி செய்தனன் என்பதாம். கூன்—வளைவு. கொட்பு—சுழற்சி. வானேறினர்கள் என்றது இறந்து வீழ்ந்த அரக்கர்களை. வயவர்—பொருகின்ற (அரக்க) வீரர்கள்.

**9653** காயிருஞ் சிலையொன் றேனுங்
கணைப்புட்டி லொன்ற தேனும்
தூயெழும் பகழி மாரி
மழைத்துளித் தொகையின் மேல
ஆயிரங் கைகள் செய்த
செய்தன வமலன் செங்கை
ஆயிரங் கையுங் கூடி
யிரண்டுகை யாய வன்றே.

காய் இருஞ் சிலை ஒன்றேனும்,
கணைப் புட்டில் ஒன்றதேனும்,
தூய்எழும் பகழி மாரி
மழைத் துளித் தொகையின் மேல;

ஆயிரம் கைகள் செய்தன
செய்தன, அமலன் செங்கை;
ஆயிரம் கையும் கூடி,
இரண்டு கை ஆய அன்றே.

பொ:- (பகைவரை) வெகுண்டு அழிக்கவல்ல பெரிய வில் ஒன்றே ஆயினும், அம்புப் புட்டில் ஒன்றே ஆயினும், (இராமபிரானால்) தூவப்பட்டு எழுகின்ற அம்புமழை மழைத்துளிகளின் தொகையைக் காட்டிலும் மிக்கன; தூயோனாகிய இராமனுடைய சிவந்த கைகள் ஆயிரம் கைகள் செய்த (அரும்பெருஞ்) செயல்களைச் செய்தன; ஆயிரம் கைகள் கூடி இரண்டு கைகளான தன்மை வியக்கத்தக்க தாகும்.

கு:- இராமன்பால் உள்ள வில் ஒன்றே; அம்புப் புட்டிலும் ஒன்று தான். ஆனால் அவன் வில்லினின்று தூவப்பட்ட அம்புகள் மழைத் துளிகளிலும் மிக்குக் காணப்பட்டன. அவனுடைய கைகள் இரண்டே ஆயினும், ஆயிரம் கைகள் கூடிச் செய்த அரும்பெருஞ் செயல்களை அவை விரைந்து செய்தன என அப்போரைக் கண்டோர் வியந்து கூறியதாக அமைந்தது இச் செய்யுள். (128)

9654 பொய்யொரு முகத்த னாகி
மனிதனும் புணர்ப்பிதென்றல்
மெய்யுற வுணர்ந்தோம் வெள்ள
மாயிர மிடைந்த சேனை
செய்யுறு வினைய மெல்லா
மொருமுகந் தெரிவ துண்டே
ஐயிரு நூறு மல்ல
வனந்தமா முகங்க ளம்மா.

பொய், ஒருமுகத்தன் ஆகி
மனிதன் ஆம்புணர்ப்பு இது என்றல்;
மெய்யுற உணர்ந்தோம்; வெள்ளம்
ஆயிரம் மிடைந்த சேனை
செய்யுறு வினையம் எல்லாம்
ஒருமுகம் தெரிவது உண்டே?
ஐ-இரு நூறும் அல்ல;
அனந்தம் ஆம் முகங்கள் அம்மா!

பொ:- ஒரு முகத்தை யுடையனுகி மனிதனுகிய தோற்றம் (இராமனது வடிவாகிய) இதுவெனக் கூறுதல் (உண்மைக்கு மாருன) பொய்யே யாகும். ஆயிரம் வெள்ளம் அளவினவாகச் செறிந்த (அரக்கருடைய) சேனைகள் செய்யும் (போர்த் தந்திரங்களாகிய) செயல்களை யெல்லாம் ஒருமுகம் கண்டறிவதென்பது உண்டோ? (இராமனுகிய இவனுடைய) முகங்கள் ஆயிரமும் அல்ல; அவற்றினும் மிக்க பல வாகும். (இத்தன்மையை) மெய்யாகக் கண்டுணர்ந்தேம்.

கு:- ஒரு முகத்தன் ஆகி மனிதன் ஆம்புணர்ப்பு இது என்றல் பொய் என இயையும். உண்டே என்புழி வினு ஏகாரம் இல்லை என எதிர்மறைப் பொருளுணர்த்தி நின்றது. முகங்கள், ஐ-இருநூறும் அல்ல, அனந்தம், ஆம் என்க. ஐ-இருநூறு—ஆயிரம். அனந்தம்—பல.

**9655** கண்ணுதற் பரமன் ருனு
நான்முகக் கடவு டானு
எண்ணுதுந் தொடர வெய்த
கோலென வெண்ண லுற்ருர்
பண்ணையாய்ப் பகுக்க மாட்டார்
தனித்தனிப் பார்க்க லாற்ருர்
ஒண்ணுமோ கணிக்க வென்ரு
ருவகையி னுயர்ந்த தோளார்.

கண்ணுதல் - பரமன்தானும்,
நான்முகக் கடவுள்தானும்
'எண்ணுதும் தொடர எய்த
கோல்' என எண்ணலுற்ருர்,
பண்ணையாய்ப் பருக்க மாட்டார்,
தனித்தனிப் பார்க்கலாற்ருர்,
'ஒண்ணுமோ, கணிக்க?' என்ருர்,
உவகையின் உயர்ந்த தோளார்.

பொ:- நெற்றியிற் கண்ணுடையனுகிய சிவபெருமானும் நான்கு முகங்களை யுடைய கடவுளாகிய பிரமனும், (இராமன்) தொடர்ச்சியாக (அரக்கர் மேல்) எய்த அம்புகளை எண்ணுவோம் என்று சொல்லி எண்ணத் தொடங்கியவர்கள், (அவற்றைத்) தொகுதி தொகுதி யாகப் பகுத்துணர மாட்டாதவராய்த் தனித்தனியாகப் பிரித்துக் காண மாட்டாதவராய், மகிழ்ச்சியாற் பூரித்தெழுந்த தோள்களை

யுடையராகி, '(இந்த அம்புகளை நம்மால்) எண்ணுதற்கு இயலுமோ' எனக்கூறி அமைந்தனர்.

கு:- கண்ணுதற் பரமன்தானும், நான்முகக் கடவுள் தானும், 'தொடர எய்தகோல் எண்ணும்' என எண்ணலுற்றார், பண்ணையால் பகுக்க மாட்டார், தனித்தனிப் பார்க்கல் ஆற்றார், உவகையின் உயர்ந்த தோளர், 'கணிக்க ஒண்ணுமோ' என்றார் என இயைத்துப் பொருள் கொள்க. கோல்—அம்பு. பண்ணை—தொகுதி. கணித்தல்—எண்ணுதல்.

**9656** வெள்ளமீ ரைந்து நூறே
விடுகணை யவற்றின் மெய்யே
உள்ளவா றுளவா மென்றோ
ருரைகணக் குரைத்து மேனும்
கொள்ளையோ ருருவை நூறு
கொண்டன பலவாற் கொற்ற
வள்ளலே வழங்கி னானே
வென்றனர் மற்றை வானோர்.

'வெள்ளம் ஈர்-ஐந்து நூறே;
விடுகணை அவற்றின் மெய்யே
உள்ளவாறு உளவாம்' என்று ஓர்
உரைகணக்கு உரைத்துமேனும்,
'கொள்ளை ஓர் உருவை நூறு
கொண்டன பலவால்; கொற்ற
வள்ளலே வழங்கினானே'
என்றனர், மற்றை வானோர்.

பொ:- (இராமனை எதிர்த்துப் பொருத அரக்கர்களின் சேனையோ) ஆயிரம் வெள்ளமாகும்; (அச்சேனைகளின் மீது இராமன்) விட்ட அம்பு கள் அச்சேனைகளின் உடம்புகள் உள்ள அளவாக உள்ளன என்று சொல்லளவில் கணக்குச் சொல்லலாம் ஆயினும், கூட்டமாக நின்ற அச்சேனையுள் ஒருடம்பினை நூறு கூறாகச் சிதைத்து உயிரைக் கவர்ந்து கொண்டனவாகிய அம்புகள் (அச்சேனைத் தொகுதிகளினும்) மிக்க பலவாகும். (இங்ஙனம் எண்ணிறந்த அம்புகளை யெல்லாம்) வெற்றி மிக்க (அருள்) வள்ளலாகிய இராமன் ஒருவனே தான் செலுத்தினானே?' என்று ஏனைய தேவர்கள் தம்முள் (வியந்து) கூறினார்கள்.

கு:- சிவபெருமானும் பிரமனும் இராமனது வில்வன்மையினை வியந்து கூறினமையை மேற்செய்யுளில் விரித்துக் கூறிய ஆசிரியர், அவ்விருவரும் நீங்க இந்திரன் முதலிய ஏனைய தேவர்கள் வியந்து கூறுதலை இச் செய்யுளில் எடுத்துரைக்கின்றார். மெய் —உடம்பு. கொள்ளை-கூட்டம். ஒருரு—ஒருடம்பு. (221)

இதன்பின் 52ல் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன:—

9656 a இட்டதோர் பேயரின் ஈரையாயிரம்
பட்ட போதாடுமோர் படுகுறைத்தலை
கட்ட நூறுயிரங் கவந்த மாடிடத்
தொட்டனன் சிலையணி மணி துணுக்கென.

9656 b மாத்திரைப் போதினின் மணி தொனித்திட
போர்த்தொழில் அரக்கர் மேற்பொருதபூசலில்
ஏத்திடை யிடைவிடா தேழு நாழிகை
கீர்த்தியன் சிலமணி கிணிகிணென்றதே.

9657 குடைக்கெலாங் கொடிகட் கெல்லாங்
கொண்டன குவிந்த கொற்றப்
படைக்கெலாம் பகழிக் கெல்லாம்
யானைதேர் பரிமா வாதி
கடைக்கெலாந் துரந்த வாளி
கணித்ததற் களவை காட்டி
அடைக்கலா மறிஞர் யாரே
யென்றனர் முனிவ ரப்பால்.

"குடைக்கு எலாம், கொடிகட்கு எலாம்,
கொண்டன குவிந்த கொற்றப்
படைக்கு எலாம், பகழிக்கு எலாம்,
யானை, தேர், பரிமா, ஆதி
கடைக்கு எலாம், துரந்த வாளி
கணித்ததற்கு அளவை காட்டி
அடைக்கலாம் அறிஞர் யாரே?'
என்றனர் முனிவர் அப்பால்.

பொ:- (தேவர்கட்கும் வேருக) அப்பால் நின்ற முனிவர்கள், (அரக்கர் சேனையிலுள்ள) குடைகள் எல்லாவற்றிற்கும் கொடிகள்

எல்லாவற்றிற்கும் (அரக்கர் கையிற்) கொண்டனவாகிய ஒருங்கு திரண்ட வெற்றித் திறன் வாய்ந்த படைக்கலங்கள் எல்லாவற்றிற்கும், யானை, தேர், குதிரை முதலாகிய (சேனைகளின்) எல்லை எல்லாவற்றிற்கும் ஆக (இராமன்) செலுத்திய அம்புகளை எண்ணி அதற்கு ஓர் அளவை காட்டி எண்ணுட் படுத்து முடித்தற்குரிய அறிஞர் யார்?' என வியந்துரைத்தனர்.

கு:- முனிவர், 'குடைக்கெலாம்......அளவை காட்டி அடைக்கல் ஆம் அறிஞர் யாரே?' என்றனர் என முடியும். கடை—எல்லை. அடைக்கல்—எண்ணுட் படுத்து முடித்தல்.

இதன் பின் 52-ல் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன.

9657 a மொய்த்தனர் நூறு வெள்ள
முரண்படைத் தலைவர் கூட்டம்
பத்துநா றுய வெள்ளப்
படையொடு மாயை பற்றி
ஒத்தயோ சனை நூறென்ன
ஓதிய வரைப்பின் ஓங்கிப்
பத்தெனும் திசையும் மூடி
சொரிந்தனர் படையின் மாரி.

b யோசனை நூற்றின் வட்டம்
இடையறு துற்ற சேனைத்
தூசிவந் தண்ணல் தன்னைப்
போக்கற வளைத்துச் சுற்றி
வீசின படையும் அம்பும்
மிடைதலின் விண்ணோர் யாக்கை
கூசினர் பொடியர் என்றும்
குமிழ்த்தனர் ஓமக் கூடம்.

c முன்னவ னதனை நோக்கி
முறுவலித் தவர்கள் ஏவும்
பன்னெடும் பருவ மாரிப்
படையெலாம் பொடிபட்டோடத்
தன்னெடுஞ் சிலையின் மாரி
தனக்கெழு முகிலுமஞ்சத்
துன்னுவித் தரக்கர் வெள்ளச்
சேனையைத் தொலைத்தல் செய்தான்.

d கால வெங்கனலின் மாயக்
கடும்படை சிலையில் பூட்டி
மேலவன் விடுதலோடும்
வெம்படை அரக்கர் வெள்ளம்
நாலு மூவிரண்டும் ஆன
நூறொரு கணத்தில் நண்ணித்
தாலமேல் படுத்து மீண்ட
தவன் சரம் தலைவரித் தள்ளி.

e முடிந்தது மூலத் தானை
மூவுல கிருண்ட தீமை
விடிந்தது மேலை வானோர்
வெந்துயர் அவரினோடும்
பொடிந்தது புனிதன் வாளி
போக்குறப் பொய்யர் ஆவி
படிந்தது ககனம் எங்கும்
பலித்தது தருமம் அன்றே.

f ஈதொரு விளையாட்டன்பின்
இத்துணை தாழ்த்தான் ஐயன்
ஏதவன் துணியின் இப்பால்
நீசர் ஓர் பொருளோ இன்னும்
போதுமோ புவன கோடி
போதினும் கணத்தில் பொன்றிப்
போதுமென் றயனே டீசன்
அமரர்க்குப் புகன்று நின்றான்.

g சேனையந் தலைவர் சேனை
முழுவதும் அழிந்து சிந்தத்
தானெரி கனலின் பொங்கித்
தரிப்பிலர் கடலின் சூழ்ந்தே
வானகம் மறையத் தந்தம்
படைக்கல மாரி பொய்த்தார்
ஆனவை முழுதும் சிந்த
அறுத்தனன் அமலன் அம்பால்.

9758 கண்டத்துங் கீழு மேலுங்
கபாலத்துங் கடக்க லுற்ற
சண்டப்போ ரரக்கர் தம்மைத்
தொடர்ந்துகோல் புணருந் தன்மை

பிண்டத்திற் கருவாந் தன்பே
ருருக்களைப் பிரமன் றந்த
அண்டத்தை நிறையப் பெய்து
குலுக்கிய தனைய தம்மா.

கண்டத்தும், கிழும், மேலும்,
கபாலத்தும், கடக்கல் உற்ற
சண்டப் போர் அரக்கர் தம்மைத்
தொடர்ந்து கோல் புணருந் தன்மை-
பிண்டத்தில் கருஆம் தன் பேர்
உருக்களைப் பிரமன் தந்த
அண்டத்தை நிறையப் பெய்து
குலுக்கியது அனையது அம்மா!

பொ:- (போர்க் களத்தை விட்டுக்) கடந்து அப்பாற் செல்லு தற்கு முற்பட்ட கொடிய போர்த் தொழிலையுடைய அரக்கர்களை (இராமன் ஏவிய) அம்புகள் தொடர்ந்து சென்று (அவர் தம்) கண்டத்திலும் அதன் கீழும் மேலும் தலையிலும் போய்ப் பொருந்திய தன்மை யானது, பிரமனானவன், (தான் வதக்கும்) பிண்டத்திற் கருவாயுள்ள மிக்க உருவங்களைத் தான் படைத்த பெரிய அண்டத்தை நிறைக்கும் படி இட்டுக் குலுக்கிய தன்மையினை ஒத்தது.

கு:- கடக்கலுற்ற கண்டப் போர் அரக்கர் தம்மைக் கோல், தொடர்ந்து, கண்டத்தும் கிழும் மேலும் கபாலத்தும் புணரும் தன்மை பரமன், பிண்டத்தில் கரு ஆம் தன் பேர் உருக்களை, தந்த அண்டத்தை நிறையப் பெய்து குலுக்கியது அனையது என இயையும். இராம பாணங்களால் தொடரப்பட்ட அரக்கர்கள், அண்டங் குலுங்க எல்லாப் பொருள்களும் கீழும் மேலுமாக உருளுமாறு போன்று எங்கும் சுழன்று அல்லலுற்றழிந்தனர் என்பதாம். (223)

9659 கோடியை யிரண்டு தொக்க
படைக்கல மள்ளர் கூவி
ஓடியோர் பக்க மாக
வுயிரிழந் துலத்த லோடும்

வீடிநின் றழிவ தென்னே
விண்ணவர் படைகள் வீசி
மூடுது மிவனை யென்று
யாவரும் மூண்டு மொய்த்தார்.

கோடி ஐ-இரண்டு தொக்க
படைக்கல மள்ளர் கூவி,
ஓடி ஓர் பக்கம் ஆக,
உயிர் இழந்து, உலத்தலோடும்,
'வீடிநின்று இழிவது என்னே!
விண்ணவர் படைகள் வீசி,
மூடுதும் இவனை' என்று,
யாவரும் மூண்டு மொய்த்தார்.

பொ:- பத்துக் கோடி யளவாகத் திரண்ட படைக்கலந் தாங்கிய (அரக்க) வீரர்கள் கதறிக் கொண்டு ஒரு பக்கமாக ஓடி உயிரிழந்து அழிந்த அளவிலே (எஞ்சியுள்ள அரக்கர்) யாவரும், 'நாம் ஆற்றல் கெட்டு நின்று வருந்துவது எதற்கு? தேவர்கள் (பாற் பெற்ற) படைக் கலங்களை வீசி இவனுடலை மூடி அழிப்போம்' என்று முற்பட்டெழுந்து (இராமனை) நெருங்கிச் சூழ்ந்தனர்.

கு:- கோடி-ஐ இரண்டு—பத்துக் கோடி. மள்ளர்—வீரர். கூவுதல்—கதறி அழைத்தல். வீடுதல்—கெடுதல்; ஆற்றல் குன்றுதல். மூடுதல்—மறைத்தல். (224)

9660 விண்டுவின் படையே யாதி
வெய்யவன் படையீ ருகக்
கொண்டொருங் குடனே விட்டார்
குலுங்கிய தமரர் கூட்டம்
அண்டமுங் கீழ்மே லாக
வாகிய ததனை யண்ணல்
கண்டொரு முறுவல் காட்டி
யவற்றினை யவற்ருற் காத்தான்.

விண்டுவின் படையே யாதி
வெய்யவன் படை ஈருக
கொண்டு ஒருங்கு உடனே விட்டார்;
குலுங்கியது அமரர் கூட்டம்;

அண்டமும் கீழ்மேலாக ஆகியது;
அதனை அண்ணல்
கண்டு ஒரு முறுவல் காட்டி,
அவற்றினை அவற்றால் காத்தான்.

பொ:- திருமாலின் படைக்கல முதலாக வெம்மையுடைய அக்கினியின் படை யிறுதியாக (அரக்கர்கள் கைக்) கொண்டு ஒருசேர விரைந்து (இராமன் மேற்) செலுத்தினார்கள். (அது கண்டு) தேவர்கள் கூட்டம் உடல் குலுங்க நடுக்க முற்றது. (அப் படைக் கலங்களால் அண்டப் பகுதியும் கீழ்மேலாக நிலை குலைந்தது. அத் தன்மையைப் பெரியோனான இராமன் கண்டு ஒரு புன்சிரிப்பினைத் தோற்றுவித்து (அரக்கர்களால் ஏவப்பட்ட) அத் தெய்வப் படைக் கலங்களை அந்த அந்தப் படைக் கலங்களைக் கொண்டே தடுத்துக் காத்தனன்.

கு:- விண்டு, விஷ்ணு என்னும் வட சொல்லின் திரிபு. வெய்யவன்—அக்கினி. (225)

9661 தானவை தொடுத்த போது
தடுப்பரி துலகந் தானே
பூநனி வடவைத் தீயின்
புக்கெனப் பொரிந்து போமென்
றானது தெரிந்த வள்ள
லளப்பருங் கோடி யம்பால்
ஏனையர் தலைக ளெல்லா
மிடியுண்ட மலையி னிட்டான்.

'தான் அவை தொடுத்தபோது,
தடுப்ப அரிது; உலகம் தானே
பூநனி வடவைத் தீயின்
புக்கெனப் பொரிந்துபோம்' என்று,
ஆனது தெரிந்த வள்ளல்
அளப்ப அருங் கோடி அம்பால்
ஏனையர் தலைகள் எல்லாம்
இடியுண்ட மலையின் இட்டான்.

பொ:- தான் அத்தகைய தெய்வப் படைக்கலங்களை அரக்கர்க்கு எதிராகத் தொடுத்த பொழுது (பிறர் அவற்றைத்) தடுத்தல் அரிய

தாகும். உலகமானது மிக்க வெம்மையுடைய வடவைத் தீயில் மலர் வீழ்ந்தாற் போன்று தானே பொரிந்து போய்விடும் என்று அவ் வுண்மையைத் தெரிந்துணர்ந்த அருள் வள்ளலாகிய இராமன், (அத்தகைய தெய்வப் படைகளைச் செலுத்தாமல்) அளவற்ற கோடிக் கணக்கான அம்புகளால், எஞ்சியுள்ள ஏனைய அரக்கர்களின் தலைகளை யெல்லாம் இடி வீழ்ந்த மலைபோலச் சிதர்ந்து) வீழும்படி வீழ்த்தினன்.

கு:- இராமன் தன்மேல் அரக்கர் ஏவிய தெய்வப் படைக்கலங்களை அவ்வப் படைக்கலங்களால் தடுத்து நிறுத்தியதுடன், அவர்மேல் தானும் தெய்வப் படைகளை ஏவின் உலகம் அழிந்துவிடும் என்று தெரிந்து, அவற்றை ஏவாமல் எண்ணற்ற அம்புகளால் அரக்கர் தலைகளை அறுத்து வீழ்த்தினன் என்பதாம். மலையின் என்புழி இன்னுருபு உவமைப் பொருளில் வந்தது. (226)

இதன்பின் 52-ல் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

9661 a பகிரண்டப் பரப்பில் நின்ற
பல பல கோடி வெள்ளத்
தொகை மண்டும் அரக்கர் யாரும்
துஞ்சினர் கருவுந் துஞ்சச்
செகமுண்ட ஒருவன் செங்கைச்
சிலையுறு மணியி னோசை
புக வண்டம் முழுதும் பாலின்
பிரையெனப் பொலிந்த தன்றே.

b நணியனுத் தமியன் தோன்றும்
நம்பியை வளைந்த வஞ்சர்
அணி உரு தகன்ற வெள்ளம்
அவை மடிந் திறந்த காலக்
கணித மேழரையே கொண்ட
கடிகை யக்கடிகை வாய்வில்
மணியொலி யெழும்ப வானோர்
வழுத்திட வள்ளல் நின்றான்.

9662 ஆயிர வெள்ளத் தோரு
மடுகளத் தவிந்து வீழ்ந்தார்
மாயிரு ஞாலத் தாடன்
வன்பொறைப் பார நீங்கி

மீயுயர்ந் தெழுந்தா ளன்றே
வீங்கொலி வேலே நின்றும்
போயொருங் கண்டத்தோடுங்
கோடியோ சனைகள் பொங்கி.

ஆயிர வெள்ளத் தோரும்
அடுகளத்து அவிந்து வீழ்ந்தார்;
மா இரு ஞாலத்தாள் தன்
வன்பொறைப் பாரம் நீங்கி,
மீஉயர்ந்து எழுந்தாள் அன்றே,
வீங்கு ஒலி வேலை நின்றும்
போய் ஒருங்கு அண்டத்தோடும்
கோடி யோசனைகள் பொங்கி!

பொ:- ஆயிரவெள்ளம் தொகையினராகிய அரக்கர் எல்லோரும் (இராமன் ஏவிய அம்புகளால்) போர்க்களத்து இறந்து வீழ்ந்தார்கள். மிகப் பெரிய நிலமாகிய பெண், தனது வலிய பொறுத்தற்றொழிலாகிய சுமை நீங்கியதனால், பேரொலியை யுடைய கடலினின்றும் ஒருங்கே வெளிப்பட்டுத் தனது அண்டப் பரப்பில் கோடி யோசனை அளவும் கிளர்ந்து போய் மேலெழுந்து உயர்ந்து தோன்றினாள்.

கு:- ஆயிர வெள்ளத்தோர் என்றது, அத் தொகையினராகிய அரக்கர்களை. சுடுகளம்—பகைவரைச் சுடுதற்கு இடமாகிய போர்க் களம். அவிந்து வீழ்தல்—இறந்து வீழ்தல். மாயிரு ஞாலத்தாள் என்றது, பூமிதேவியை. மாயிரு ஞாலத்தாள் தன் வன்பொறைப் பாரம் நீங்கி, வீங்கொலி வேலை நின்றும் ஒருங்குபோய் அண்டத் தோடும் கோடி யோசனைகள் பொங்கி மீயுயர்ந்து எழுந்தாள் என இயையும். அன்று, ஏ என்பன அசை.

9663 ஆனை யாயிரந் தேர்பதி னாயிர
மடற்பரி யொருகோடி
சேனை காவல ராயிரம் பேர்படிற்
கவந்தமொன் றெழுந்தாடும்
கான மாயிரங் கவந்தநின் றாடிடிற்
கவின்மணி கணிலென்னும்
ஏனை யம்மணி யேழரை நாழிகை
யாடிய தினிதன்றே.

ஆனை ஆயிரம், தேர் பதினாயிரம்,
அடல் பரி ஒரு கோடி,
சேனை காவலர் ஆயிரம் பேர்படின்,
கவந்தம் ஒன்று எழுந்து ஆடும்;
கானம் ஆயிரம் கவந்தம் நின்று ஆடிடின்,
கவின்மணி கணில் என்னும்;
ஏனை அம் மணி ஏழரை நாழிகை
ஆடியது இனிது அன்றே.

பொ:- யானைகள் ஆயிரமும் தேர்கள் பதினாயிரமும் வன்மை யுடைய குதிரைகள் ஒரு கோடியும் படைத் தலைவர்கள் ஆயிரம் பேரும் ஒருங்கு இறந்தால், கவந்தம் ஒன்று (போர்க்களத்திலே)எழுந்து ஆடும்; காடுபோற் செறிந்த ஆயிரங் கவந்தங்கள் எழுந்து நின்று ஆடுமானால் (இராமனது வில்லிற் கட்டியுள்ள) அழகிய மணியானது (ஒருமுறை) கணீர் என்று ஒலிக்கும்; மேற்குறித்த அந்த மணியானது ஏழரை நாழிகையளவு இனிதாக அசைந்து ஒலித்தது.

கு:- போர்க்களத்தில் ஆயிரம் யானைகளும் பதினாயிரந் தேர் களும் ஒரு கோடி குதிரைகளும் படைத் தலைவர் ஆயிரவரும் இறந்து பட்டால் தலையறுபட்ட உடற்குறையாகிய ஒரு கவந்தம் ஆடும் என்பர். ஆயிரம் கவந்தங்கள் எழுந்து ஆடினால் இராமனது வில்லின் மணி ஒருமுறை கணீர் என்று ஒலிக்கும். அத்தகைய மணியொலி ஏழரை நாழிகை யளவு தொடர்ந்து ஒலித்தது என்றால், அக் களத் தில் இறந்துபட்ட நால்வகைச் சேனைகளும் இத்துணைய என எண்ணி அளவிட்டுரைத்தல் இயவாது என்பதாம். இச் செய்யுட் பொருளை அடியொற்றியமைந்தது,

9663 a 'பேரொத்த வாயிரம்பேர் மடிந்தாற்
பிறங்குங் கவந்தம்
நேரொத்த ஆடும தாயிரமாடி
னெடுஞ்சிலையின்
ஏரொத்த கிண்கிணி சற்றோலிடும
தோர்யாம நின்று
காரொத்த மேனியரங்கர்தம்
போரிற் கறங்கியதே.'

எனப் பிள்ளைப்பெருமாளையங்கார் பாடிய செய்யுளாகும்.

9663 b ‘அனேக மாயிரம்பேர்படக்
கவந்தமொன்றுடுமக் கவந்தங்கள்
அனேக மாயிரமாட வெஞ்சிலை
மணியசைந்தொரு குரலார்க்கும்
அனேக நாழிகை யருச்சுனன்
சிலைமணியார்த்த தக்களம்பட்ட
அனேகமாயிரம் விருதரை யளவறிந்தார்
கொலோ வுரைக்கிற்பார்’

எனவரும் வில்லி பாரதச் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத் தகுவ தாகும்.

## தேவர் முதலியோர் துயர் தீர்ந்து இராமனை வாழ்த்துதல்

9664 நினைந்தன முடித்தே மென்று
வானவர் துயர நீத்தார்
புனைந்தனென் வாகை யென்று
விந்திர னுவகை பூத்தான்
வனைந்தன வல்லா வேதம்
வாழ்வு பெற்றுயர்ந்த மாதோ
அனந்தனுந் தலைக ளேந்தி
யயாவுயிர்த் தவலந் தீர்ந்தான்.

‘நினைந்தன முடித்தேம்’ என்று,
வானவர் துயரம் நீத்தார்;
‘புனைந்தனென். வாகை’ என்று,
இந்திரன் உவகை பூத்தான்;
வனைந்தன அல்லாவேதம்
வாழ்வு பெற்று உயர்ந்த மாதோ;
அனந்தனும் தலைகள் ஏந்தி,
அயாவுயிர்த்து, அவலம் தீர்ந்தான்.

பொ:- (இராமபிரானது வில்வன்மையினால் இராவணனது மூலப் படைகள் முழுவதும் அழிந்தமை கண்டு) நினைந்தவை முடியப் பெற்றோம் என்று தேவர்கள் துன்பம் நீங்கினார்கள்; ‘வெற்றிமாலை சூடினேன்’ என்று தேவேந்திரன் மகிழ்ச்சி தோன்றப் பெற்றான்; (ஒருவரா

லும்) செய்யப்படாத (அனாதியான) வேதங்கள் (தளர்ச்சியின்றி) வாழ் தலைப்பெற்று ஓங்கின; (பூமியைத் தாங்கியுள்ள) ஆதிசேடனும் (அரக் கராகிய சுமை நீங்கினமையால்) தலைகளை உயர்த்தி நெட்டுயிர்த்து வருத்தம் நீங்கினான்.

கு:- வேதம் ஒருவராற் செய்யப்படாத தொன்மையுடையன என்னும் கருத்தினைக் கொண்டு 'வனைந்தன அல்லா வேதம்' எனச் சிறப்பித்துரைத்தார். வேதம் வாழ்வு பெற்றுயர்தலாவது, வேத நெறிக்கு இடையூறு செய்யும் அரக்கர் ஒழியவே, அந்நெறியைப் போற்றி வளர்க்கும் நல்லோர்களால் ஓதப்பெற்று நிலைபெறுதல். அனந்தன்—ஆதிசேடன். அயாவுயிர்த்தல்—நெட்டுயிர்த்தல். (229)

**9665** தாய்படைத் துடைய செல்வ
மீகெனத் தம்பிக் கீந்து
வேய்படைத் துடைய கானம்
விண்ணவர் தவத்தின் மேவித்
தோய்படைத் தொழிலால் யார்க்குந்
துயர்துடைத் தானை நோக்கி
வாய்படைத் துடையா ரெல்லாம்
வாழ்த்தினர் வணக்கஞ் செய்தார்.

தாய், 'படைத்துடைய செல்வம்
ஈக' என, தம்பிக்கு ஈந்து,
வேய் படைத்துடைய கானம்
விண்ணவர் தவத்தின் மேவி,
தோய் படைத்தொழிலால் யார்க்கும்
துயர் துடைத்தானை நோக்கி,
வாய் படைத்துடையார் எல்லாம்
வாழ்த்தினர், வணக்கம் செய்தார்.

பொ:- (வளர்த்த)தாயாகிய கைகேயி, 'நீ பெற்றுடைய செல்வமாகிய அரசினை ஈவாயாக' என்று சொல்ல, (அவ்வாறே அவ்வரசினைத்) தம்பியாகிய பரதனுக்குக் கொடுத்துவிட்டு, மூங்கில் நிரம்பியுள்ள காட்டிலே தேவர்களது தவத்தின் பயனாகச் சென்று பொருந்தி, (உலகங் களத்தில்) தோய்த்து வடிக்கப்பெற்ற படைக்கலங்களை (அரக்கர்மேல்) ஏவுதலாகிய போர்த் தொழிலால் யாவர்க்கும் துன்பத்தைப் போக்கி

(யின்பம் நல்கி)யவனுன இராமனை (வாழ்த்துதற்குரிய தகுதியமைந்த) வாயினைப்பெற்றுடைய முனிவர் முதலிய யாவரும் (வாயார) வாழ்த்தினுர்கள்; (தலை தாழ்த்து) வணக்கஞ் செய்தார்கள்.

கு:- தாய் என்றது, இராமனை வளர்த்த சிற்றன்னையாகிய கைகேயியை, தம்பி என்றது, பரதனை. 'வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்த' தலைவனுகிய இறைவனே இங்ஙனம் இராமனுக அவதரித்து வலியோரை அழித்து எளியோர் படுந் துயரத்தைப் போக்கியருள் புரிந்தான் என்னும் மனவுணர்வுடன் அவ்வுணர்வினை உரையினுல் புலப்படுத்துதற்குக் கருவியாகிய வாயினையுடையோர் எல்லோரும் இராமனை வாயார வாழ்த்தித் தலை தாழ்த்தி வணங்கினுர்கள் என்பதாம். (230)

**9666** தீமொய்த்த வனைய செங்க
ணரக்கரை முழுதுஞ் சிந்திப்
பூமொய்த்த கரத்த ராகி
விண்ணவர் போற்ற நின்றுன்
பேய் மொய்த்து நரிக ளீண்டிப்
பெரும்பிணம் பிறங்கித் தோன்றும்
ஈமத்துட் டமிய னின்ற
கறைமிடற் றிறைவ னொத்தான்.

தீ மொய்த்த அனைய செங்கண்
அரக்கரை முழுதும் சிந்தி,
பூமொய்த்த கரத்தர் ஆகி
விண்ணவர் போற்ற, நின்றுன்—
பேய் மொய்த்து, நரிகள் ஈண்டி,
பெரும் பிணம் பிறங்கித் தோன்றும்
ஈமத்துள் தமியன் நின்ற
கறைமிடற்று இறைவன் ஒத்தான்.

பொ:- தீ (சுடர் விட்டு) நெருங்கினுற்போன்று வெகுளியாற் சிவந்த கண்களையுடையராகிய அரக்கர் எல்லோரையும் (கொன்று) வீழ்த்தி, மலர்கள் நிறைந்த கைகளையுடையராகித் தேவர்கள் துதிக்க நின்றவனுகியஇராமன், பேய்கள்செறிந்து, நரிகள் நெருங்கி மிக்கபிணங்கள் விளங்கித் தோன்றுமியல்பினதாகிய மயானத்தின் கண்ணே, ஒரு

வஞ்சகத் தனித்து நின்ற நஞ்சக் கறை பொருந்திய (நீல) கண்டத்தை யுடைய சிவபெருமானை ஒத்தான்.

கு:- போர்க்களத்திலே தன்னை எதிர்த்த அரக்கர் அனைவரையும் கொன்று வீழ்த்தித் தேவர் மலர் தூவித் துதிக்கத் தனியனாய் நின்ற இராமனுக்கு, எல்லாம் அழிந்து ஒடுங்கிய சுடுகாட்டகத்தே தமியனாக நின்று ஆடல் புரியும் சிவபெருமானை உவமை கூறினார் ஆசிரியர். (231)

**9667** அண்டமாக் களமும் வீந்த
வரக்கரே யுயிரு மாகக்
கொண்டதோ ருருவந் தன்னா
லிறுதிநாள் வந்து கூட
மண்டுநாண் மறித்துங் காட்ட
மன்னுயி ரனைத்தும் வாரி
உண்டவன் றானே யான
தன்னொரு மூர்த்தி யொத்தான்.

அண்டம் மாக்களமும், வீந்த
அரக்கரே உயிரும் ஆக,
கொண்டது ஓர் உருவம் தன்னால்,
இறுதிநாள் வந்துகூட,
மண்டு நாள், மறித்தும் காட்ட,
மன்னுயிர் அனைத்தும் வாரி
உண்டவன் தானே ஆன
தன் ஒருமூர்த்தி ஒத்தான்.

பொ:- பெரிய போர்க்களமே அண்டமாக, (அக்களத்தில்) அழி வுற்ற அரக்கர்களே (அண்டத்தின்) உயிர்களாக, (அங்கு இராமன் அரக்கரையழித்தற் பொருட்டுக்) கொண்டுள்ளதாகிய ஒப்பற்ற உருவத்தினால், ஊழி முடிவாகிய இறுதிநாள் வந்துகூட, (எல்லாப் பொருள்களும் படைக்கப்பட்டு) நிறையும் படைப்புக் காலத்தில் மீளவும் (அவற்றைப் படைத்துக்) காட்டுதற் பொருட்டு நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றையும் ஒருங்கே வாரியுண்டு (வயிற்றினுள்) அடக்கியவன் தானேயாகிய தனது ஒப்பற்ற திருமால் உருவினை ஒத்துத் தோன்றினான்.

கு:- அரக்கர் எல்லாரும் இறந்துபட்ட போர்க்களம் அண்டமாகவும், அக்களத்திற் பட்ட அரக்கர்கள் அண்டத்திலுள்ள மன்னுயிர்களாகவும், அவர்களை ஒடுக்கி நின்ற இராமன் மன்னுயிர்களை வாரியுண்டு தன் வயிற்றிலடக்கிய திருமாலாகவும் உருவகஞ் செய்யும் முறையில் அமைந்தது, இச் செய்யுள்.

இதன்பின் 63, 71, 74-ம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உளது:-

9667a இனையன நிகழுங்காலை
இகலில் வந்தெழுந்த யாணர்
மனவலி யரக்கர் யாரும்
மாண்டனர் மாண்ட போரின்
கனைகழ லிராமன் பெற்ற
கடுஞ்சிலை மணியி னோசை
தெனதெனதென வென்றாடும்
சிறப்பொடு மெழுந்த தன்றே.

## இலக்குவன் இராவணனுடன் பொருது நிற்கும் இடத்திற்கு இராமன் செல்லுதல்

9668 ஆகுலந் துறந்த தேவ
ரள்ளினர் சொரிந்த வெள்ளச்
சேகறு மலருஞ் சாந்துஞ்
செருத்தொழில் வருத்தந் தீர்க்க
மாகொலை செய்த வள்ளல்
வாளமர்க் களத்தைக் கைவிட்
டேகின னிளவ லோடு
மிராவண னேற்ற கைம்மேல்.

ஆகுலம் துறந்த தேவர்
அள்ளினர் சொரிந்த வெள்ளச்
சேகு அறு மலரும் சாந்தும்
செருத் தொழில் வருத்தம் தீர்க்க,

மாகொலை செய்த வள்ளல்
வாள் அமர்க் களத்தைக் கைவிட்டு
ஏகினன், இளவலோடும்
இராவணன் ஏற்ற கைம்மேல்.

பொ:- துன்பம் நீங்கிய தேவர்கள் அள்ளிச் சொரிந்த வெள்ளக் கணக்கினவாகிய குற்றமற்ற (நறு) மலர்களும் சந்தனமும் (தன் திருமேனியிற் பொருந்தி) போர்த் தொழிலால் விளைந்த அயர்ச்சியைப் போக்க, பெருமை வாய்ந்த அழித்தற் றொழிலைச் செய்த கருணை வள்ளலாகிய இராமன், கொடிய போர்க்களத்தைவிட்டு நீங்கி, தம்பி இலக்குவனோடும் இராவணன் எதிர்த்துப் பொரும் போர்க்களத்துச் சேனைகளை நோக்கி மேற் சென்றான்.

கு:- ஆகுலம்—துன்பம். அள்ளினர், முற்றெச்சம். சேகு—குற்றம். தீயோரைக் கொல்லுதல், பயிரிற்களை களைந்தாற்போன்று உலகத்தார்க்கு நன்மை விளைக்கும் பெருமை வாய்ந்ததாகலின் 'மாகொலை' எனச் சிறப்பிக்கப்பட்டது. இளவல் என்றது, இலக்குவனை. ஏற்றல்—எதிர்த்துப் பொருதல். கை—சேனை வரிசை; பக்கம் எனினும் பொருந்தும். (233)

9689 இவ்வழி யியன்ற வெல்லா
மியம்பினு மிரிந்துபோன
தெவ்வழி யாற்றல் வெற்றிச்
சேனையின் செலவுஞ் சென்ற
வெவ்வழி யரக்கர் கோமான்
செய்கையு மிளைய வீரன்
எவ்வமி லாற்றற் போரு
முற்றுநா மியம்ப லுற்றும்.

இவ்வழி இயன்ற எல்லாம்
இயம்பினும்; இரிந்து போன
தெவ் அழி ஆற்றல் வெற்றிச்
சேனையின் செலவும், சென்ற
வெவ்வழி அரக்கர் கோமான்
செய்கையும், இளைய வீரன்
எவ்வம் இல் ஆற்றல் போரும்,
முற்றும். நாம் இயம்பலுற்றும்.

பொ:- (இராமன் மூலபலப் படையுடன் பொருதுநின்ற) இவ் விடத்திலே நிகழ்ந்தன எல்லாம் கூறினோம்: (இனி) நிலைகெட்டு ஓடிய பகைவரை அழிக்கவல்ல ஆற்றல் பொருந்திய வெற்றியுடைய (வானர) சேனையின் போர்ச் செயலும் (அதனை எதிர்த்துச்) சென்ற கொடிய முறைமையினை யுடைய அரக்கர் தலைவனான இராவணனது செய்கையும் இளைய வீரனாகிய இலக்குவனது குற்றமில்லாத ஆற்றலால் விளைந்த போர்த்தொழிலும் நாம் முழுவதும் விரித்துக் கூறத் தொடங்கு கின்றோம்.

கு:- இவ்வழி—என்றது இராமன் மூலப்பலப் படைகளைப் பொருதழித்த போர்க்களமாகிய இடத்தினை. தெவ்—பகை. அரக்கர் கோமான், இராவணன். இளைய வீரன், இலக்குவன். இச் செய்யுள் கவிக்கூற்று. (234)

அஞ்சி நிலைகெட்டோடிய வானர சேனை மீளுதல்

9670 பெரும்படைத் தலைவர் யாரும்
பெயர்ந்திலர் பெயர்ந்து போய்நாம்
விரும்பினம் வாழ்க்கை யென்றால்
யாரிடை விலக்கற் பாலார்
வரும்பழி துடைத்தும் வானின்
வைகுதும் யாமு மென்னா
இருங்கடல் பெயர்ந்த தென்னத்
தானையு மீண்ட திப்பால்.

'பெரும் படைத் தலைவர் யாரும்
பெயர்ந்திலர், பெயர்ந்துபோய், நாம்
விரும்பினம் வாழ்க்கை என்றால்,
யார் இடை விலக்கற்பாலார்?
வரும்பழி துடைத்தும், வானின்
வைகுதும் யாமும்' என்னா,
இரும்கடல் பெயர்ந்தது என்ன,
தானையும் மீண்டது, இப்பால்.

பொ:- 'பெருமையுடைய சேனைத் தலைவர் எல்லோரும் (போர்க் களத்தினின்றும்) இடம் பெயர்ந்து நீங்கினாரல்லர். (படைவீரராகிய)

நாம் மட்டும் (போர்க்களத்தை) விட்டு நீங்கி உயிர் வாழ்தலை விரும்பினேம் என்றால், இடையே நின்று நம்மைத் தடுத்தற்குரியார் யார்? (அங்ஙனம் பெயர்ந்து செல்லுதலால் நமக்கு) வரும் பழியினைத் துடைப்போம்; (போர்க்களத்திற் பகைவரோடு பொருது இறத்தலால்) நாமும் துறக்கவுலகிற் சென்று வாழ்வோம்' என்று உறுதி கொண்டு, பெரிய கடல் நிலைபெயர்ந்து வந்தாற்போன்று (வானர) சேனையும் (போர்க்களம் நோக்கி) இப் பக்கம் மீண்டு வந்தது.

கு:- 'பெரும்படைத் தலைவர் யாரும்...வரும் பழி துடைத்தும், யாமும் வானின் வைகுதும்' என்னா, தானையும் இப்பால் மீண்டது என முடிக்க. இருங்கடல் பெயர்ந்த தென்ன மீண்டது என்க. தானை என்றது, குரக்குச் சேனையினை. (235)

# 31. வேலேற்ற படலம்

## முன்னுரை

வீடணன் மீது இராவணன் எறிந்த வேலினை இலக்குவன் தன் மார்பில் ஏற்றுக் கொண்டதைக் கூறும் பகுதி யாகலின் இது வேலேற்ற படலம் எனப் பெயர் பெறுகின்றது, இப் படலப் பெயர் சிற்சில ஏடுகளில் 'வேலேற்று படலம்' எனவும், 'வேலேற்றுப் படலம்' எனவும், 'வேலேற்றப் படலம்' எனவும் வேறுபட்டுக் காணப்படு கின்றது.

இராவணன், ஆயிரம் சக்கரங்களை யுடையதாய், ஆயிரம் குதிரை கள் பூட்டப் பெற்ற, பெரிய தேரில் ஏறிக் கொண்டு நால்வகைப் படையும் தன்னைச் சூழ்ந்து வர, முரசமும் சங்கமும் முழங்கப் போர்க் கோலம் பூண்டு தம்மை நோக்கி வருவதை வானரர் பார்க்கின்றனர். 'இந்தப் படை வலிமிக்க இராவணனை வெல்லுதல் அரிதே எனினும் இவனோடு போர் செய்து மடிவதே நல்லது' என்ற துணிவோடு இடி யேறு போன்ற கற்களைக் கையில் கொண்டு அணிவகுத்து நின்று தோள்களைத் தட்டிக் கொண்டு ஆரவாரிக்கின்றனர். அரக்கனது சேனையும் குரக்குச் சேனையும் எதிர்த்துப் பொருகின்றன. வானர வீரர்களின் ஆற்றலுக்கு ஆற்றாது தன் சேனை வலி குன்றுவது கண்ட இராவணன் பனம் கொதித்து வானரர் மேல் கடுமையான கணைகளை விடுகின்றான். வானர சேனை நிலை குலைகின்றது. அது கண்ட இலக்கு வன் 'அஞ்சற்க' என்று வானர சேனைக்குக் கூறி நிலை நிறுத்தி விட்டு இராவணனை நெருங்கிக் கடுமையாகப் போர் செய்கின்றான். இலக்குவனது பேராற்றலைக் கண்ட இராவணன், 'இவனை அம்பினால் வெல்லுதல் அரிது' என்று சிந்தித்து, வடிவில்லாத மோகனத்தை மந்திரித்து அவன் மேல் ஏவுகின்றான். அதை அறிந்த வீடணன், அதனை விலக்க, நாரணன் கணையை விடுமாறு இலக்குவனுக்குக் கூறு கின்றான். அவ்வாறே இலக்குவன் நாரணன் கணையை விடுத்து மோகனத்தை விலக்கி விடுகின்றான். அது கண்ட இராவணன் தன் வெற்றிக்குத் தடையாக வீடணன் உளவு சொன்னதை நினைந்து வெகுண்டு மயன் தந்த வேலினை அவ் வீடணன் மேல் எறிகின்றான். அவ்வேல் தன்னுயிரை மாய்க்கும் என்று வீடணன் அவ்வேலின் பெருமையைக் கூறவே இலக்குவன், அவ் வேலினைத் துணிக்கப் பல அம்புகளை ஏவுகின்றான்; அவை பயனற்றுழ்ந்தமை கண்டு அவ்வே

லினைத் தன் மார்பில் ஏற்க முற்படுகின்றான். வீடணன் அவனை முந்த அவ்விருவரையும் விலக்கி, அனுமனும் சுக்கிரீவனும் அங்கதனும் முந்து கின்றனர். அடைக்கலம் அடைந்தவனைக் காக்க வேண்டும் என்ற உறுதியுடனே இலக்குவன் எல்லோர்க்கும் முந்திச் சென்று அவ்வே லினைத் தன் மார்பில் ஏற்றுத் தரையில் வீழ்கின்றான்.

தன்னைக் காக்க இலக்குவன் வேலை ஏற்று வீழ்ந்தது கண்ட வீடணன் கடுங் கோபங் கொண்டு இராவணது தேர்க் குதிரைகளையும் பாகனையும் தண்டால் தாக்கி வீழ்த்துகின்றான், தன் தேர் அழிந்தது கண்ட இராவணன் விண்ணில் எழுந்து நின்று வீடணன் மீதும் அனு மன் மீதும் அம்புகளைச் சொரிந்து விட்டு இலங்கைக்குள் நுழையத் தொடங்குகின்றான். அது கண்ட வீடணன் 'எங்கடா போகின்றாய்? இலக்குவனை உயிர் வாடச் செய்த உன்னைக் கொன்று விட்டு யானும் மாள்வேன்' என்று கூறிக் கொண்டு இராவணனைத் தொடர்கின்றான், இராவணனோ அவனைப் பொருட்படுத்தாமல் 'வெற்றி எனக்குக் கிட்டி யது; இந்த வீடணப் பசுவைக் கொன்று பயன் என்ன' என்று தனக் குள் சொல்லிக் கொண்டு இலங்கை புகுகின்றான்.

பின்பு, வீடணன், இரக்கமே உருவாய்ப் புலம்பிக் கொண்டு இலக்குவனது அடித்தலத்தில் வீழ்ந்து அரற்றுகின்றான். வானரரும் துயரக் கடலில் ஆழ்கின்றனர். இலக்குவன் இறந்த பின் இராமன் உயிர் வாழான்; யான் இருந்து என்ன பயன் என்று வீடணன் இறக்கத் துணிகின்றான். அப்பொழுது சாம்பவன் அங்கு வந்து, 'அனுமன் இருக்க நாம் கவல்வது எதற்கு? அவன் மருந்து மலையைக் கொணர, இலக்குவன் எழுவான்' என்று ஆறுதல் கூறிவிட்டு, அனுமனை அணுகி, அவன் மார்பில் அழுந்தி யிருந்த அம்புகளை யெல்லாம் மெல்ல வாங்கித் துன்பம் நீக்கிச் செய்தியைச் சொன்னவுடன், அனுமன் கிளர்ந்து பேருருவம் தாங்கி வட திசை மேற் சென்று மருத்து மலையைக் கொணர்கின்றான். அம் மருந்தின் வாசனை பட்டவுடனே இலக்குவன் எழுந்து அனுமனை அணைத்துப் பாராட்டி விட்டு, 'வீடணன் வீழ்ந் திலனே?' என்று வினவுகின்றான். அது கேட்டு வீடணனே நேரில் வந்து விம்மிக் கொண்டு தன்னைத் தொழுவது கண்டு இலக்குவன் துணுக்கமும் துயரும் நீங்குகின்றான்.

பிறகு சாம்பவன் முதலியோர் இராமனைக் கண்டு நிகழ்ந்தது கூறிச் செல்கின்றனர். மூலபல வதை செய்து விட்டு இலக்குவனுக்குத் துணை செய்ய வந்து கொண்டிருக்கும் இராமனைக் கண்டு மகிழ்ச்சிக் குறிப்போடு வணங்கி நிற்க, 'என்ன நிகழ்ந்தது?' என்று இராமன் வினவுகின்றான். சாம்பவன் நடந்ததை ஒன்று விடாமல் சொல்

கின்றான். அது கேட்ட இராமன் மகிழ்ந்து அனுமனைப் பாராட்டு கின்றான். அப்போது இலக்குவனும் அங்கு வந்து தன் உயிர் போன்ற இராமனைக் காண்கின்றான். இராமனும் முன் இறந்து துறக்கம் புக்க தயரதன் மீண்டு வரக் கண்டாற் போன்ற மகிழ்ச்சியோடு இலக்கு வனைக் கண்டு தழுவி, அடைக்கலம் அடைந்த வீடணனைக் காக்கத் தன்னுயிர் விடுக்கத் துணிந்த பண்பினைப் பாராட்டி விட்டு உயர்ந்த மலையில் இலக்குவனை இளைப்பாறச் செய்து தானும் இளைப்பாறு கின்றான் என்பது இப்படலத்துக் கூறப்படும் பொருளாகும்.

### கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

வான்மீகத்தில் இராமனும் இராவணனும் போர் செய்து கொண் டிருக்கையில் இலக்குவன், இராவணனது மனிதத் தலையுடைய கொடியை ஓரம்பினால் அறுத்துத் தள்ளி விட்டுத் தேர்ப்பாகனது தலை யையும் கொய்து இராவணனது வில்லையும் துண்டிக்கின்றான். அப் போது வீடணன் இராவணனது தேர்க் குதிரைகளைத் தன் தண்டு கொண்டு தாக்கி வீழ்த்துகின்றான். வீடணனது அச்செயலைக் கண்ட இராவணன் தேரில் நின்று குதித்து ஒரு வேலினை அவ்வீடணன் மேல் வெகுண்டு எறிகின்றான். அவ்வேலினை இலக்குவன் மூன்று அம்பு களால் துண்டித்து விடுகின்றான். அதன் பின் இராவணன் சினந்து மயன் நிருமித்துக் கொடுத்த வேலினைச் சுழற்றுவது கண்ட வீடணன் 'இது என்னுயிரை மாய்க்கும்' என்று அஞ்சுகின்றது கண்டு இலக்குவன் அவ்வீடணனைக் காக்கும் பொருட்டுத் தானே முன்னின்று இராவணன் மேல் அம்புகளைச் சொரிய, இராவணன் வீடணன் மேல் தன் வேலினை எறியும் எண்ணம் மாறி, இலக்குவன் மேல் எறிகின்றான். இராமன், அது கண்டு அவ்வேல் வலிமை குறையவும் இலக்குவனுக்கு மங்கல முண்டாகவும் வேண்டிக் கொள்கின்றான். ஆனால், அந்த வேல் இலக் குவன் மார்பினைப் பிளக்கின்றது; இலக்குவன் வீழ்கின்றான். இலக்கு வன் மார்பில் ஆழப்பதிந்த வேலினை இராமன் முழு வலி கொண்டு பற்றியிழுத்து எடுத்து முறித்துவிட்டு இராவணன் மேல் கடுமையாகப் போர் செய்து அவன் வலி தொலைத்து விட்டுப் பின் சுடேணனை நோக்கி இலக்குவன் நிலையைக் கூறித் துன்புற, அவன் இலக்குவன் இறந்திலன் என்பதை நிறுவித் தேற்றிவிட்டு, அனுமனை மருந்து கொணரச் செய்து, இலக்குவன் தெளிந்து எழக் கண்டு எல்லோரும் மகிழ மகிழ்கின்றான். உய்ந்தெழுந்த இலக்குவனைக் கண்ட இராமன், சுடேணனைப் பாராட்டி விட்டு, இலக்குவனை நோக்கி, 'நீ இறந்திருப் பாயாயின் எனக்கு என் உயிரால் பயனில்லை; சீதையாலும் பயனில்லை; போரி தான் எற்றுக்கு?' என்று வருந்த, இலக்குவன் இராமனை நோக்கி, "நீ இப்படி வலியற்றவன் போல் பேசுவது தகாது; இன்று

சூரியன் மறைதற்குள், இராவணனைக் கொல்வதைப் பார்க்க விரும்புகின்றேன். போரில் இராவணன் இறந்துபட வேண்டும் என்று விரும்பினால், சீதையிடம் விருப்பம் இருப்பது உண்மையானால், விரைவில் என் சொல்லின்படி இராவணனைக் கொல்க'' என்று கூறுகின்றான்.

கம்பர் :— இந்தக் கதை அமைப்பைப் பெரும்பாலும் மாற்றி விடுகின்றார். வேலேற்ற படலத்தில் இராவணனுக்கும் இலக்குவனுக்கும் போர் நடப்பதாகவும் இராமன் இப்போரில் கலந்து கொள்ளாமல் மூலபல வதையில் ஈடுபட்டிருந்ததாகவும், அவ்வதை முடிந்தபின் இலக்குவனுக்குத் துணை செய்ய வரத்தொடங்கும் போது இலக்குவன் இராவணனது வேலினால் வீழ்ந்த செய்தியும் அனுமன் கொணர்ந்த மருத்து மலையினால் உய்ந்த செய்தியும் சாம்பன் கூற அறிந்து கொண்டதாகவும் கம்பர் அமைத்துள்ளார்.

இராவணன் வீடணன்மேல் வேலை எறிவதற்குக் காரணமான நிகழ்ச்சியாக அவன் தேர்க் குதிரைகளைத் தண்டு கொண்டு வீடணன் தாக்கிக் கொன்றதையே வான்மீகி கூறியிருப்பவும், கம்பர் அந்நிகழ்ச்சியை இலக்குவன் இராவணனது வேலினால் வீழ்ந்தபின் நிகழ்ந்ததாக மாற்றியுள்ளார். வீடணன் மேல் இராவணனுக்கு வெகுளி பொங்குதற்குக் காரணமான நிகழ்ச்சியாகப் புதிய தொன்றைப் படைத்துக் கொண்டுள்ளார். இலக்குவனை அம்பினால் வெல்ல வியலாது என்பதை அறிந்த இராவணன், வடிவமில்லாத மோகனத்தால் அவனை வெல்ல எண்ணி மந்திரித்து அனுப்பிய போது, வீடணன் அதை நாரணன் கணையால் அழிக்குமாறு செய்ததால் இராவணன் வெகுண்டு அவன் மேல் வேலினை எறிந்ததாகக் கம்பர் அமைத்துள்ளார்.

இராவணன் வீடணன் மேல் முன்பு ஒரு வேலை எறிய அதை இலக்குவன் மூன்று அம்புகளால் துண்டித்த செய்தியைக் கம்பர் கூற வில்லை. இராவணன் வீடணன்மேல் எறிவதற்கு மயன் கொடுத்த பெரிய வேலைச் சுழற்றும் போது அவ்வேலின் ஆற்றலை நினைந்து வீடணன் அஞ்சியது கண்டு, இலக்குவன் அவ்விராவணன் மேல் அம்புகளைச் சொரிய, வீடணன்மேல் எறியும் எண்ணத்தை மாற்றி இலக்குவன்மேல் இராவணன் எறிந்தான் என்ற செய்தியையும் மாற்றியுள்ளார். வீடணன்மேல் எறிந்த வேலினையே இலக்குவன் தன் மார்பில் ஏற்று அடைக்கலம் அடைந்த வீடணனைக் காக்கக் கருதி முற்பட்டான் என்றும், அவனுக்கு முன் வீடணன் முற்பட்டான் என்றும் அவ்விருவர்க்கும் முன் அனுமனும் சுக்கிரீவனும் அங்கதனும் தம்முள் முந்தினர் என்றும் அவர்கள் எல்லோரையும் விலக்கிவிட்டு இலக்குவன் முந்திச் சென்று தன் மார்பில் அவ்வேலை யேற்றுத் தரையில் வீழ்ந்தான் என்றும் கூறியுள்ளார்.

இங்கு, வான்மீகி கூறியுள்ளபடி இலக்குவன்மேல் நேரே இராவணன் வேலை எறிந்து வீழ்த்தினுன் என்பதே பொருத்தமாகத் தோன்றுகின்றது. ஒருவர் மேல் விடுத்த வேலை அருகிருந்த மற்றொருவர் ஏற்பது ஒருகால் எளிதாக நிகழலாம். ஆனல், ஐவர் ஒருவர் முன் ஒருவராக முந்திப் போட்டியிட்டுக் கொண்டு சென்று அவருள் ஒருவர் ஏற்கும் வகையில் வேல் காலம் தாழ்த்திருந்து வந்தது என்பது பொருத்தமாக இல்லை; எனினும், அடைக்கலமாக அடைந்த வீடணன் பொருட்டுத் தன்னுயிரையும் பொருட்படுத்தாது முந்திச் சென்று இலக்குவன் வேலை ஏற்ருன் என்ற உயர்ந்த அறச்சிந்தனையைப் புலப்படுத்தற்காகவே கம்பர் இம்மாற்றத்தைச் செய்தனராதல் வேண்டும், என்று அமைதி கூறலாம்.

இலக்குவனுக்கும் இராவணனுக்கும் நிகழும் இப்போரில் இராமன் கலந்து கொண்டதாகவே கம்பர் அமைக்காமையால், 'இலக்குவன் மார்பில் அழுந்திய இராவணனது வேலினை இராமன் பிடுங்கி முறித்தான்' என்று வான்மீகி கூறியுள்ள செய்தியைச் சொல்வதற்கே அவர்க்கு இடம் இல்லாது போயது.

வேல் பட்டு வீழ்ந்த இலக்குவனை உயிர்ப்பிக்கச் சுடேணன் அனுமனை அனுப்பி மருத்துமலை கொணரச் செய்ததாக வான்மீகி கூறியதை மாற்றிச் சாம்பவனே அதைச் செய்தான் எனக் கம்பர் அமைத்துள்ளார். அயன் கணையால் வீழ்ந்தபோது மருத்துமலையைக் கொணருமாறு சொன்ன சாம்பனே இந்நிகழ்ச்சியிலும் சொன்னுன் என்பதே பொருத்தமுடையது எனக் கம்பர் மாற்றினராதல் வேண்டும்.

இலக்குவன் வீழ்ந்தது கண்டு இராமன் துன்புறுவதை வான்மீகி கூறியிருப்பவும் கம்பர், வீடணனே அவ்வாறு துன்புறுவதாகவும், தன்னையே மாய்த்துக் கொள்ள அவன் எண்ணியதாகவும் மாற்றியமைத்துள்ளார்.

மருத்துமலையால் உயிர் பெற்றெழுந்த இலக்குவனை நோக்கி இராமன், "நீ இறந்திருப்பாயாயின் எனக்கு என் உயிராலும் பயன் இல்லை; சீதையாலும் பயனில்லை; இப்போர் தான் எற்றுக்கு" என்று கூறியதாகவும் அதுகேட்ட இலக்குவன் இராமனை நோக்கி 'நீ இப்படி வலியற்றவன் போல் பேசுவது தகாது; இன்றைப் பொழுது முடிவதற்குள் நீ இராவணனைக் கொல்வதைப் பார்க்க விரும்புகிறேன். விரைவில் என் சொல்லின்படி செய்க' என்று கூறியதாக வான்மீகி கூறியுள்ளார்.

இராமனுக்கு அடியவனாக ஏவல் பூண்டோழுகும் இலக்குவன் இவ்வாறு கூறினான் என்பது அவன் அடிமை நிலைக்கு ஏலாது என்று கருதிக் கம்பர், அதை இங்குக் கூறாமல் விடுத்தார் போலும்.

வேல்பட்டு வீழ்ந்த இலக்குவன் மருத்துமலையினால் உய்ந்தெழுந்தவுடன் காணும் வாய்ப்பைக் கம்பர் மாற்றி விட்டாராதலின், இலக்குவனை நோக்கி இராமன் கூறும் பிரிவாற்றாத துன்பச் சொற்களை வான்மீகி கூறியது போலக் கூறும் வாய்ப்பை இழந்து விடுகின்றார். ஆயினும் அத்தகைய துன்பச் சொற்களை, மகுட பங்கப் படலத்தில் இராவணனது முடிமணிகளைப் பறித்து வந்த சுக்கிரீவனை நோக்கிக் கூறியதாக முன்னமே அமைத்துக் காட்டியுள்ளார். “இந்நிலை விரைவி னெய்தாதித்துணை தாழ்த்தியாயின் நன்னுதற் சீதையாலென் ஞாலத்தால் பயனென் நம்பி—உன்னையான் தொடர்வ லென்னைத் தொடருமிவ் வுலகம்” (மகுடபங்கப்—38) என்று கூறியுள்ளது காணலாம். இச்சொற்கள் வான்மீகத்தில் இலக்குவனை நோக்கி இராமன் கூறியுள்ள சொற்களோடு ஒப்புமையுடையனவாதல் காணலாம். சுக்கிரீவனும் தம்பியே யாதலின் அவன் இராவணனால் கொல்லப் படாமல் வந்த நிலையில் இராமன் இப்படிக் கூறியதாக அமைந்தது சாலப்பொருத்தமுடையதாதல் காணலாம்.

இப்படலத்தில் சிறப்பாகக் கூறத்தக்க நிகழ்ச்சி, அடைக்கலமாக ஏற்றுக்கொண்ட வீடணனது உயிரைக் காக்க இலக்குவன், அவ்வீடணனைக் கொல்ல வந்த இராவணனது வேலினைத் தன் மார்பிடையேற்று வீழ்ந்த பெருமை மிக்க நிகழ்ச்சியே யாகும். இராவணனது வேலினால் வீழ்ந்த இலக்குவன், அனுமன் கொணர்ந்த மருத்து மலையால் எழுந்ததும் அனுமனைப் பார்த்து வினவுகின்ற வினாவை நோக்கினால் அடைக்கலம் அடைந்த வீடணனது உயிரைக் காப்பதில் இலக்குவன் எவ்வளவு கருத்துடையவனாக இருந்தான் என்பது நன்கு புலனாகும்.

> “எழுந்துநின் றனுமன் தன்னை இருகையால் தழுவி எந்தாய் !
> விழுந்தில னன்றே மற்று அவ் வீடணன்”

என்பது இலக்குவன் வினா. வீரருள் வீரனாகிய இலக்குவன் இராவணனது வேலினால் வீழ்ந்து மருத்துமலையால் உயிர் பெற்று எழுந்தவுடன் என்ன வினவி யிருக்கவேண்டும்? “வேலினை எறிந்த இராவணன் எங்குச் சென்றான்? அவனை இப்போதே அழித்தல் வேண்டும்.” என்றன்றோ வினவி யிருத்தல் வேண்டும்! அவ்வாறு வினவாது, ‘அவ்வீடணன் விழுந்தில னன்றே?’ என்று வினவியதால் இலக்குவன், தன் கொழுந்

தியைக் கவர்ந்து, தன்னுயிரையும் கவர முயன்ற இராவணனைக் கொல்வதினும் சரணடைந்த வீடணனைக் காப்பதில் கருத்துமிக்கவனாக இருந்தான் என்பது தெளிவாகின்றதன்றோ?

உறங்குவதற்கு முன் ஒருவன் நினைந்த எண்ணங்கள் அவன் உறங்கி எழுந்ததும் மனத்தில் தோன்றுவதுபோல, இறக்கும் நிலையில் இலக்குவன் மனத்தில் பதிந்திருந்த எண்ணங்கள், அவன் உயிர்த்தெழுந்ததும் அவன் உள்ளத்தில் தோன்றின ஆகலின், மேற்கண்டவாறு வினவலானான். இராவணன் வீடணன்மேல் எறிந்த வேலினை ஏற்கத் துணிந்தபோது இலக்குவன் என்ன எண்ணினான் என்பதை:

'தோற்ப னென்னினும் புகழ்நிற்கும் தருமமும் தொடரும்
ஆர்ப்பர் நல்லவர் அடைக்கலம் புகுந்தவன் அழியப்
பார்ப்பது என்? நெடும்பழி வந்து தொடர்வதன் முன்னம்
ஏற்பன், என்தனி மார்பின்' என்று இலக்குவன் எதிர்ந்தான்

என்ற செய்யுளால் கம்பர் கூறியுள்ளார். 'அடைக்கலம் புகுந்தவன் அழியப் பார்ப்பது என்? நெடும்பழிவந்து தொடர்வதன் முன்னம் ஏற்பது என்றனி மார்பின்' என்பதுதான் வேலினையேற்குமுன் இலக்குவன் எண்ணிய இறுதியான எண்ணம். தன் உயிரைக் கொடுத்தேனும் அடைக்கலம் புக்கவன் உயிரைக் காக்க வேண்டும் என்பதே இலக்குவனது இறுதியான ஆசை. வேலினை ஏற்றால் வரும் புகழ்ச்சியினும் ஏலாது வீடணன் அறியப் பார்த்திருந்தால் வரும் பழி பெரிது என்பது புலப்படுத்த 'புகழ்நிற்கும்' என அடை மொழியின்றிக் கூறியவன் 'நெடும்பழி தொடர்வதன் முன்னம்' என அடை கொடுத்துக் கூறிய சிறப்பினைக் காணலாம். சரணடைந்தவனைக் காவாத பழி இப்பிறப்போடு ஒழியாது, ஏழெழு பிறவியினும் தொடர்ந்து வரத்தக்கது என்பதும் புலப்படுத்தியவாறுதல் காணலாம். இதனால், இவ்வறத்தைச் செய்தவழிப்பெறும் பயனினும் செய்யா வழிப்படும் குற்றம் பெரிது என்பது விளக்கியவாறு.

இந்த இறுதியான ஆசையே வீடணனை விலக்கியதோடமையாது, வேலையேற்கப் போட்டியிட்ட அங்கதனையும் சுக்கிரீவனையும் அனுமனையும் விலக்கி முற்படச் செய்தது. வேலையேற்றுத் தான் வீழ்ந்தபின் இராவணன் வேறொரு வேலால் வீடணனை வீழ்த்தியிருப்பனோ என்ற ஐயம் இலக்குவன் உள்ளத்தில் எழுவது இயல்பேயாகலின்,

'விழுந்தில னன்றோ மற்றவ் வீடணன்' என உயிர்த்து எழுந்ததும் அனுமனை வினவலானான். இவ்வினா இலக்குவனது உள்ளப் பெரு

மையை எவ்வளவு சிறப்பாக நமக்கு விளக்குகின்றது காண்மின்! இவ்வாறு இலக்குவன் வினவும்போதே வீடணன் தன்பொருட்டு உயிர் கொடுத்து, உயிர்த்து எழும்போதும் தன்னையே நினைத்து, வினவும் இலக்குவனது உள்ளப் பெருமையை நினைத்து நினைத்து விம்மிக் கொண்டு வந்து தொழுகின்றான். தொழுகின்ற வீடணனைக் கண்ட இலக்குவன், தன் உள்ளத்திலிருந்த துணுக்கமும் துயரும் நீங்கி மகிழ் கின்றான்.

இந்த சிறப்பான நிகழ்ச்சியை, நாடக அரங்கில் நாடகம் வல்லார் நடித்துக் காட்டக் காண்பதுபோன்ற உணர்ச்சியைப் படிப்பவர் பெறு மாறு கம்பர் அமைத்துக் காட்டும் திறம் வியத்தற் குரியதாகும். மருத்து மலையால் எழுந்த இலக்குவன் எழுந்தவுடன் அம்மலையைக் கொணர்ந்த அனுமனைக் காணுதலும், கண்டவுடன் இவ்வனுமனு லன்றோ உய்ந்தோம் என்ற நன்றியுணர்ச்சியால் அவனை 'எந்தாய்' என முறைப்பெயரால் பாராட்டி விளித்தலும் விளித்து வீடணனைப் பற்றி வினவுதலும், அவ்வினவிற்கு விடையை அனுமன் கூறவேண் டாது, வீடணனே வந்து வணங்கித் தான் வீழவில்லை என்பதைச் சொல்லாமல் சொல்லுதலும், அவனைக் கண்டவுடன் இலக்குவன் தன் உள்ளத்திருந்த நடுக்கமும் துயரமும் தீர்ந்து மகிழ்தலும் நாடக அரங்கில் மெய்ப்பாட்டுடன் காணும் காட்சிகளாகவே நமக்குதோன்று தல் காணலாம். இலக்குவன், இராவணனது வேலை ஏற்கும்போது வீடணன் மீண்டும் இராவணனால் வீழ்ந்திடுவானோ' என்ற துணுக்க மும் கொழுந்தி மீண்டிலளே என்ற துன்பமும் அவன் உள்ளத்தில் இருந்தமையால் வீடணனைக் கண்டவுடன் துணுக்கம் நீங்கியது; இனி இராவணன் மாள்வதும் கொழுந்தி மீள்வதும் உறுதி என்ற துணிவால் துன்பமும் நீங்கியது என்பதை எவ்வளவு நுட்பமாக—அழகாக— விளக்கியுள்ளார் கம்பர், காண்மின்!

இலக்குவனுக்கு நேர்ந்ததை முன்பே சாம்பவனால் அறிந்து துன்ப மும் மகிழ்ச்சியும் முறையே அடைந்திருந்த இராமனை இலக்குவன் காண்கின்ற காட்சியையும் உயிர் மீண்ட இலக்குவனை இராமன் காணும் காட்சியையும் கம்பர் விளக்கும் திறம் மிகச் சிறப்பாக அமைந் துளது. தன் உயிரனைய இராமனைப் பிரிந்து சென்று இராவணனோடு போர்செய்து அவன் வேலினால் வீழும்போது இனி, இராமனைக் காணப் போகின்றேமா? என்று எண்ணிய இலக்குவன் மருந்து மலையால் உயிர் மீளப் பெற்று மீண்டும் இராமனைக் காணுங்கால், இராமனைக் காண லாகாத நிலையில் தனக்கு நேர்ந்த துன்ப நினைவுகளாலும், மீண்டும் காணக் கிடைத்த மகிழ்ச்சியாலும் அழுகைக் கலுழ்ச்சியும் உவகைச்

கலுழ்ச்சியும் சேர்ந்து அவன் கண்களில் கண்ணீர் அருவியெனப்பெருகு கின்றது. மகிழ்ச்சி பொங்குகின்றது. அவன் தோற்றத்தைப் பார்க் கும்போது உயிர் புறத்தே நீங்கப்பெற்ற உடலைப் போன்று வாடித் தோன்றுகின்றது. உயிர் நீங்கிய உடல் மீண்டும் அவ்வுயிரை அடைந் தது போன்ற மகிழ்ச்சியோடு வந்து தன்னுயிராகிய இராமனைத்தொழு கின்றான். இந்த நிகழ்ச்சியைக் கம்பர் ஒப்பற்ற ஓவியமாக நம் கண் முன் நிறுத்துகின்றார்.

"புயல்பொழி அருவிக்கண்ணன் பொருமலன் பொங்குகின்றான்
உயிர்புறத் தொழியநின்ற வுடலன்ன வுருத்தம்பி
தம்முனைத் தொழுது சார்வான்"

என்பது அவ்வுயிரோவியம். இலக்குவன் உயிர் மீண்டுவரக் கண்ட இராமனது மனநிலையை ஒருவமையால் விளக்குகின்றார். மீளாத் துயரைத் தமக்குக் கொடுத்துவிட்டு இறந்து மீளாவுலகம் புக்க தயர தனை மீண்டுவரக்கண்டாற் போன்ற மகிழ்ச்சியை இராமன் இலக்கு வனைக் கண்டபோது பெற்றிருந்தானாம்.

"துயர்தமக் குதவி மீளாத் துறக்கம் பெற்றுயர்ந்த தொல்லைத்
தயரதற் கண்டால் ஒத்த தம்முனை"

என்ற உவமையால் இராமன் மனநிலையை நமக்குப் படம்பிடித்துக் காட்டுகின்றார் கம்பர். இராவணனது வேலினால் வீழ்ந்து மருந்து மலை யால் உயிர் மீளப்பெற்ற இலக்குவனைக் கண்டு இராமன் கொண்ட மகிழ்ச்சியின் அளவை இவ்வுவமை எவ்வளவு நன்றாக விளக்குகின்றது காண்மின்! இந்த உவமை இங்கு இல்பொருளுவமையாகவே ஆளப் பெறுகின்றது; ஆயினும் பின்னால் இத்தகைய நிகழ்ச்சி நிகழாமல் இல்லை. மீட்சிப் படலத்தில் நிகழ்கின்றது.

இலக்குவனைக் கண்டு இத்துணை மகிழ்ச்சியடைந்த இராமன், வீட ணனுக்காகத் தன்னுயிரையே கொடுக்கத் துணிந்த இலக்குவன் செயலை வியந்து புகழ்வான் என்றுதான் யாரும் எதிர்பார்ப்பர். ஆனால், இராமன் தன்குலப் பெருமையையும் இலக்குவன் செயலையும் சீர் தூக்கிப் பார்த்துச் சொல்லும் சொற்கள் நினைத்து நினைத்து மகிழத் தக்க சிறப்புடையனவாக விளங்குகின்றன.

இளவலைத் தழுவி,' 'ஐய! இரவிதன் குலத்துக் கேற்ற
அளவு, தம் அடைந்தோர்க் காகி, மன் உயிர் அளிக்கும் தன்மை;
துளவியல் தொங்கலாய்! நீ அன்னது துணிந்தாய் என்றால்,
அளவியல் அன்று. செய்தற்கு அரியதே ஆகும் அன்றே!'

என்றது காண்க. சூரிய குலத்தில் பிறந்த இலக்குவன் அக்குலத்தின் தன்மைக்கு ஏற்ற செயலையே செய்துள்ளான்; அவன் தகுதிக்கு மேற்பட்ட செயலைச் செய்துவிடவில்லை என்பது இராமன் கருத்து. இலக்குவன் செயலைப் புகழ்வது தற்புகழ்ச்சியாகும் என்ற கருத்தால் சூரிய குலத்தைப் புகழ்ந்து அக்குலத்தில் பிறந்த இலக்குவன் தன் குலத்திற்கு அடுத்த செயலைச் செய்தது இயல்பே என அமைதியாகப் பாராட்டியுள்ள நுட்பம் மாறோக்கத்து நப்பசலையார் புறத்தில் கூறியுள்ள,

"கோனிறை துலாம் புக்கோன் மருக!
ஈதனின் புகழு மன்றே; சார்தல்
ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறல்
தூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பின்
அடுதல் நின்புகழும் அன்றே" (புறநா—39)

என்ற கருத்தை நினைப்பிக்கின்றது காணலாம்.

# 31. வேலேற்ற படலம்

## இராவணன் தேரேறிப் போர்க்களம் புகுதல்

**9671** சில்லி யாயிரஞ் சில்லுளைப்
பரியொடுஞ் சேர்ந்த
எல்ல வன்கதிர் மண்டல
மாறுகொண் டிமைக்கும்
செல்லுந் தேர்மிசைச் சென்றனன்
றேவரைத் தொலைத்த
வில்லும் வெங்கணைப் புட்டிலுங்
கொற்றமும் விளங்க.

சில்லி ஆயிரம், சில் உளைப்
பரியொடும் சேர்ந்த,
எல்லவன் கதிர் மண்டலம்
மாறு கொண்டு இமைக்கும்,
செல்லும் தேர்மிசைச் சென்றனன்—
தேவரைத் தொலைத்த
வில்லும் வெங்கணைப் புட்டிலும்,
கொற்றமும் விளங்க.

பொ:- ஆயிரம் சக்கரங்களோடும் சிலவாகிய பிடரிமயிரையுடைய ஆயிரம் குதிரைகளோடும் சேர்ந்ததும், சூரியனுடைய செங்கதிர் மண்டலத்தோடு ஒப்புமை கொண்டு ஒளிவீசுகின்றதும் விரைந்து செல்லும் தன்மையுடையதும் ஆகிய தேரின்மேல் ஏறி, தேவர்களை அழித்த வில்லும், கொடிய அம்புகள் நிறைந்த அம்புப் புட்டிலும் வீரமும், விளங்குமாறு (இராவணன் போர்க்களத்திற்குச்) சென்றான்.

கு:- சில்லி—தேர்ச் சக்கரம். கத்தரித்த பிடரியாதலின் 'சில் உளை' எனப்பட்டது; நீளமில்லாத பிடரியர் என்க. சேர்ந்த தேர், இமைக்கும் தேர், செல்லும் தேர் எனத் தனித் தனி இயையும். விளங்கப் போர்க்களத்திற்கு இராவணன் சென்றனன் என வருவித்து மாறி முடிக்க. எல்லவன்—சூரியன். மாறு—ஒப்புமை. இராவணன் ஏறிய பொன்தேர் ஒளிமிக்கதாகலின் சூரிய மண்டலத்தோடு ஒப்புமை.

யுடைத்தாயிற்று. இனிச் சூரிய மண்டலத்தோடு மாறுபாடு கொண்டு அம் மண்டலத்தினும் மிக்கு ஒளிவீசும் தேர் எனப் பொருள் கூறலும் ஆம். இராவணன் தேர் ஏறிச் செல்லும் தோற்றமே அவன் கொற்றத்தைப் புலப்படுத்திற்று என்க. தேவரைத் தொலைத்த கொற்றமும் என இயைத்தலும் ஆம்

9671 a அரக்கர் சேனையோ ராயிர
வெள்ளத்தை யமரில்
துறக்க மானுடர் தம்மை
யென்றொருபுடை துரந்து
வெருக்கொள் வானரச்
சேனைமேற் றுன் செல்வான் விரும்பி
இருக்குந் தேரொடும் போயவ
னிராவண னெதிர்ந்தான்.

இச் செய்யுள் பல ஏடுகளில் இல்லாமையாலும் பொருட் தொடர்பு கொள்ளாமையாலும் மிகைப் பாடலாகக் கருதப்படு கின்றது.

## இராவணனுடன் சென்ற சேனைகள்

**9672** நூறு கோடிதேர் நொறிற்பரி நூறிரு கோடி
யாறு போன்மத மாகளி றையிரு கோடி
ஏறு கோளுறு பதாதியு மிவற்றிவற் றிரட்டி
சீறு கோளரி யேறனு னுடனன்று சென்ற.

நூறு கோடி தேர், நொறில்பரி நூறு இரு கோடி,
ஆறுபோல் மத மா கரி ஐ—இரு கோடி,
ஏறுகோள் உறு பதாதியும் இவற்று இவற்று இரட்டி.
சீறு கோள் அரி ஏறு அனுனுடன் அன்று சென்ற.

பொ:- சீறுகின்ற வலிய ஆண்சிங்கம் போன்றவனாகிய இராவண னுடன் அப்போது,—நூறுகோடி தேர்களும், இருநூறு கோடி விரைந்து செல்லும் குதிரைகளும், பத்துக் கோடி, ஆறுபோன்று ஒழுகு கின்ற மதத்தினையுடைய பெரிய, யானைகளும்; இருபத்தாறு கோடி, சிங்க ஏற்றின் வலிமை கொண்ட, காலாட் படையும், சென்றன.

கு:- நொறில்—விரைவு. தேரும் குதிரையும் யானையும் பதின் மூன்று கோடி எனக் கணக்கிட்டுக் கூறிக் காலாட் படை அவற்று அவற்று இரட்டி என்றமையால் காலாட் படையின் அளவு இருபத்தாறு கோடியாதல் பெறப்படும். எனவே நாற்பத்தொன்பது கோடி அளவுடைய நாற்படை இராவணனோடு அன்று சென்றன என்க. (2)

### முரசம் முதலியன முழங்குதல்

**9673** மூன்று வைப்பினு மப்புறத்
துலகினு முனையின்
ஏன்று கோளுறும் வீரர்கள்
வம்மினென் றிசைக்கும்
ஆன்ற பேரியு மதிர்குரற்
சங்கமு மசனி
ஈன்ற காளமு மேழொடே
ழுலகமு மிசைப்ப.

'மூன்று வைப்பினும், அப்புறத்து,
உலகினும், முனையின்
ஏன்று கோ ளுறும். வீரர்கள்
வம்மின்!' என்று இசைக்கும்
ஆன்ற பேரியும், அதிர்குரல்
சங்கமும், அசனி
ஈன்ற காளமும், ஏழொடு
ஏழ் உலகினும் இசைப்ப.

பொ:- 'விண்ணுலகும் மண்ணுலகும் பாதலமும் என்கின்ற மூன்று உலகத்திலும் அவற்றிற்கு அப்பாற்பட்ட உலகத்திலும் உள்ளவர்களாய்ப், போர் முனையில் எதிர்த்துப் போர்புரியத் தக்க அரக்க வீரர்கள் எல்லாம் வாருங்கள்' என்று அழைப்பது போன்று ஒலிக்கின்ற பெரிய முரசங்களும், கேட்டாரை அதிரச் செய்கின்ற குரலையுடைய சங்கங்களும், இடியொலியை யுண்டாக்குகின்ற எக்காளமும், ஆகிய வாத்தியங்களின் ஒலி பதினான்கு உலகங்களிலும் சென்று இசைப்பன வாயின.

கு:- மூன்று வைப்பு என்றது மூவுலகத்தினை. அப்புறத்துலகு என்றது, விண்ணுலகத்திற்கு அப்பாலுள்ள பிரமனுலகம் முதலிய

வற்றை. முனை என்றது போர் முனையை. ஏன்று கோளுறுதல் என்றது எதிர்த்து நின்று போர் செய்தலே. முரசத்தின் முழங்கொலி 'வீரர்கள் எல்லாம் வம்மின்' என்று அழைப்பது போன்று உளது என்பார், தற்குறிப்பேற்ற அணி தழுவி, 'வம்மின் என்றிசைக்கும்' என்று கூறினர்.

"ஊடி னீரெல்லாம் உருவிலாளன் றன்ஞாணை
கூடுமி னென்று குயில் சாற்ற"

(சிலப்-வேனிற்காதை வெண்பா)

என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இசைக்கும் பேரி என்க. பேரி—முரசு. இசைப்ப என்பது அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்று. ஆக்கச் சொல் வருவிக்கப் பட்டது. (3)

## இராவணன் சேனையோடு வருவதை வானரர் காணுதல்

9674 அனைய ளுகிய வரக்கர்க்கு
மரக்கனை யவுணர்
வினையை வானவர் வெவ்வினைப்
பயத்தினை வீரர்
நினையு நெஞ்சையும் சுடுவதோர்
நெருப்பினை நிமிர்ந்து
கனையும் விண்ணையுங் கடப்பதோர்
கடலினைக் கண்டார்.

அனையன் ஆகிய அரக்கர்க்கும்
அரக்கனை அவுணர்
வினையை வானவர் வெவ்வினைப்
பயத்தினை, வீரர்
நினையும் நெஞ்சையும் சுடுவதோர்
நெருப்பினை, நிமிர்ந்து
கனையும் விண்ணையும் கடப்பதோர்
கடலினை, கண்டார்.

பொ:- பெரிய (சேனையோடும் போர் ஆரவாரத்தோடும் வருகின்ற) அத்தன்மையனுகிய அரக்கர்களுக்கும் அரக்கனுக இருப்பவனை

அவுணர்கள் தம் தீவினை போன்றவனை, தேவர்களுடைய கொடிய தீவினைப் பயனாகத் துன்பம் செய்கின்றவனை, தன்னை நினைக்கின்ற வீரர்களின் நெஞ்சையும் சுடுகின்ற நெருப்புப் போன்றவனை, மேலே நிமிர்ந்து சென்று, ஒலித்தற்கு இடமான விண்ணில் உள்ள தேவருலகத்தையும் வெல்லுகின்ற ஒரு கடல்போன்ற நிறத்தவனாகிய இராவணனை வானரர்கள் கண்டார்கள்.

கு:- இராவணனுக்கு இனியவர் யாரும் இலர் என்றவாறு. அரக்கர் தன் இனம் என்ற காரணத்தினால் அவரை வருத்தாது இரான் என்பார் 'அரக்கரிக்கும் அரக்கனை' என்றார். அரக்கரையும் இரக்கமின்றித் துன்புறுத்தும் இயல்பினன் இராவணன் என்றவாறு. அவுணர் என்பார் தன்னைப்போலத் தேவர்க்குப் பகைவரே எனினும் அவ்வவுணரையும் வருத்தாதிரான் என்பார், 'அவுணர் வினையை' என்றார். அவுணரினும் தேவரே அவனால் அதிகம் துன்புறுகின்றவர் என்பது புலப்பட 'வானவர் வெவ்வினைப் பயத்தினை' என்றார். வீரர்களாக உள்ளவர்கள் நினைத்த அளவில் அஞ்சி வெதும்பத்தக்க பெருவீரன் இராவணன் என்பார் 'வீரர் நினையும் நெஞ்சையும் சுடுவதோர் நெருப்பினை' என்றார். "எரிசுடர்க் கடவுளும் கருதின் வேமுள்ளமும் காணின் வேம் நயனமும் (பால- தாடகை வதைப்-5) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். விண் என்றது ஆகு பெயராய் விண்ணில் உள்ள பொன்னுலகத்தை உணர்த்தியது. கனைதல்— ஒலித்தல்—ஒலியின் பிறப்பிடம். விண்ணுதல் நினைந்து 'கனையும் விண்' என்றார். கடல் தரையில் உள்ள கரையைக் கடத்தல் இயல்பு; ஆனால், இராவணனாகிய கடல் நிமிர்ந்து சென்று விண்ணையும் கடக்கும் இயல்பினதுஎன வேற்றுமை காட்டியவாறு இராவணனது. கருமைக்கும் பருமைக்கும் கடலே ஏற்ற உவமையாதல் பற்றி இங்கு இராவணனைக் கடலாகவே உருவகம் செய்தவாறு. (4)

## இராவணனைக் கண்ட வானரர்களின் போர் ஆரவாரம்

**9675** கண்டு கைகளோ டணிவகுத் துருமுறழ் கற்கள்
கொண்டு கூற்றமு நடுக்குறத் தோள்புடை கொட்டி
அண்ட கோடிக ளடுக்கழிந் துலைவுற வார்த்தார்
மண்டு போரிடை மடிவதே நலனென மதித்தார்.

கண்டு, கைகளோடு அணிவகுத்து, உரும் உறழ் கற்கள்
கொண்டு, கூற்றமும் நடுக்குறத் தோள்புடை கொட்டி,
அண்ட கோடிகள் அடுக்கு அழிந்து உலைவுற, ஆர்த்தார்,—
'மண்டு போரிடை மடிவதே நலம்' என மதித்தார்.

பொ:- (அத்தகைய இராவணனைக்) கண்டு வானரர்கள் இந்த இராவணனோடு நெருங்கிச் செய்யும் போரில் இறந்து போவதே நல்லது என மதித்தவராய், அணிவகுத்துக் கொண்டு இடிபோன்று பகைவர்க்குத் துன்பம் செய்யும் கற்களைக் கைகளோடு கொண்டு நின்று; எமனும் நடுங்குமாறு தோளில் தட்டிக்கொண்டு, அண்ட கோடிகளின் அடுக்கு முறை குலைந்து வருந்துமாறு ஆரவாரித்தார்கள்.

கு:- கற்கள் கைகளோடு கொண்டு என இயையும். கண்டு மதித்தாராய் அணிவகுத்துக் கற்கள் கைகளோடு கொண்டு, தோள் புடை கொட்டி, ஆர்த்தார் என இயையும். வானரங்களுக்கு நகக் கூர்மை கொண்ட கைகளே ஆயுதம் ஆதலின், அக் கைகளோடு கற்களை யும் ஆயுதமாகக் கொண்டு நின்று ஆரவாரித்தார் என்றவாறு. வானரங்களின் தோள் தட்டலால் கூற்றமும் நடுங்கியது; அவர் ஆரவாரத்தால் அண்ட கோடிகள் அடுக்கழிந்து உலைந்தன. மதித்தா ராய் என முற்றெச்சமாக்குக. இராவணனது பேராற்றலை நோக்கிய வானரர்கள் அவனை வெல்லும் வலிமை தமக்கு இன்மை நினைந்து அவனோடு போர் செய்து மடிவதே நலன்; பின்னிடல் நன்றன்று என மதித்தனர். (5)

## இருபடையும் கைகலத்தல்

**9676** அரக்கர் சேனையு மாருயிர்
வழங்குவா னமைந்த
குரக்கு வேலையு மொன்றொடொன்
றெதிரெதிர் கோத்து
நெருக்கி நேர்ந்தன நெருப்பிடை
பொடித்தன நெருப்பின்
உருக்கு செம்பென வம்பரத்
தோடின துதிரம்.

அரக்கர் சேனையும், ஆருயிர்
வழங்குவான் அமைந்த
குரக்கு வேலையும், ஒன்றொடு ஒன்று,
எதிர்எதிர் கோத்து,
நெருக்கு நேர்ந்தன; நெருப்பு இடை
பொடித்தன; நெருப்பின்
உருக்கு செம்பு என, அம்பரத்து,
ஓடினது, உதிரம்.

பொ:- அரக்கர்களின் சேனையும் தம் அரிய உயிரைப் போரில் வழங்குதற்கும் ஆயத்தமாயிருந்த குரக்குச் சேனையும் ஒன்றோடு ஒன்று எதிர் எதிரே கைகலந்து நெருக்குப் போர் செய்தன; தாக்குதலின் மிகுதியால் அவ்விருதிறத்தார்க்கும் இடையில் நெருப்புத் தோன்றின; (இருதிறத்தாரின் உடம்பினின்றும் வெளிப்பட்ட) இரத்தம், நெருப்பில் உருக்கிய செம்புபோலப் பெருகிக் கடலை நோக்கி ஓடியது.

கு:- இருதிறப்படையும் நெருக்கித் தாக்கியபோது இடையே நெருப்புத் தோன்றியது என்பது அத்தாக்குதலின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. வீரர்களின் கண்களினின்று தோன்றும் சினநெருப்பும் ஆயுதங்களும் கற்களும் தாக்குதலால் தோன்றும் நெருப்பும், தோன்றியதையே 'நெருப்பு இடை பொடித்தன' என்றார். பொடித்தல்— தோன்றுதல். உதிரம் உருக்கு செம்பு என அம்பரத்து ஓடினது என இயையும். அம்பரம் – கடல். வெப்பமும் வண்ணமும் பற்றி உதிரத்திற்கு உருக்கு செம்பு உவமையாயது. (6)

### இறந்துபட்ட சேனையின் வருணனை 9677-9679

**9677** அற்ற வன்றலை யறுகுறை
யெழுந்தெழுந் தண்டத்
தொற்ற வானக முதயமண்
டலமென வொளிரச்
சுற்று மேகத்தைத் தொத்திய
குருதிநீர் துளிப்ப
முற்றும் வையகம் போர்க்கள
மாமென முரஞ்ச

அற்றவன் தலை அறுகுறை எழுந்து
எழுந்து அண்டத்து
ஒற்ற, வானகம் உதய
மண்டலம் என ஒளிர,
சுற்றும் மேகத்தைத் தொத்திய
குருதிநீர் துளிப்ப
முற்றும் வையகம் போர்க்களம்
ஆம் என முரஞ்ச.

பொ:- அறுபட்ட வலிய தலை, அற்ற உடற்குறையினின்று எழுந்து எழுந்து விண்ணில் பொருந்துவதால் வானகத்து உதயசூரிய மண்டலம்போல விளங்கா நிற்க, (அத்தலையினின்றும் வெளிப்பட்டு) வானத்தில் சுற்றிக்கொண்டுள்ள மேகத்தில் தொத்திக்கொண்டுள்ள இரத்தநீர் மழையாகத் துளித்தலால், 'மண்ணுலகம் முழுவதும் போர்க்களம் ஆம்' என்று கருதுமாறு அந்த இரத்தம் நிரம்பாநிற்க.

கு:- இரத்தம் பீறிட்டுக்கொண்டு விண்ணில் எழுந்து செல்லும் அறுபட்ட தலையின் தோற்றம், செந்நிறக் கிரணங்களோடுங் கூடிய உதயசூரிய மண்டலத்தைப் போன்று காணப்பட்டது. தொத்துதல்—பற்றிக் கொள்ளுதல். அற்றதலை மேகமண்டலத்தையும் கடந்து விண்ணில் சென்றதனல் அத்தலை சொரிந்த இரத்தம். மேகத்தில் பதிந்து பின்பு அம்மேகம் மழையாக அந்த இரத்தத்தையே பொழியத் தரையெங்கும் நிரம்பி உலகமுற்றும் போர்க்களம் போலும் என்னுமாறு ஆயது என்க. உலகத்தில் ஒரு சிறிய இடத்தில் நடக்கும் போரினல் உலக முழுதுமே போர்க்களம் போன்று தோன்றியது என வியந்தவாறு. முரஞ்சுதல்—நிரம்புதல். (7)

### யானைகள்

**9678** தூவி யம்பெடை யரியின மறிதரச் சூழி
தூவி யம்பெடை சோர்ந்தன சொரியுடல் சுரிப்ப
மேவி யம்படை படப்படர் குருதியின் வீழ்ந்த
மேவி யம்படைக் கடலிடைக் குடரொடு மிதப்ப.

தூவி அம்பெடை அரிஇனம் மறிதர, சூழி
தூவி, அம்பு எடை சோர்ந்தன, சொரி உடல் சுரிப்ப,
மே வியம் படை படப்படர் குருதியின் வீழ்ந்த,
மேவி அம் படைக் கடலிடை, குடரொடு மிதந்த.

பொ:- (யானைகள்) அழகிய சேனைக் கடலின் நடுவே சேர்ந்து இலக்குவன் அம்புகளைத் தொடுக்க எடுத்தலால், (மதத்தை நுகர வரும்) சிறகினை யுடைய அழகிய பெண் வண்டோடு கூடிய ஆண் வண்டின் கூட்டம் மீண்டு போகுமாறு முகபடாத்தை வீசியெறிந்து சோர் வடைந்தனவாய்ப் பெருமை பொருந்திய அந்த அம்புகள் பட்டதனல், இரத்தத்தைச் சொரிகின்ற தம் உடலில் பரவி ஒடுகின்ற இரத்த வெள்ளத்தில் சுழன்று அமிழும்படி வீழ்ந்தனவாய் (தம் வயிற்றினின்றும் வெளிப்பட்ட) குடரோடு மிதப்பன வாயின.

கு:- சூழி தூவி என்ற குறிப்பினுல் யானையின் செயலாதல் பெறப்பட்டது. (யானைகள்) அம்படைக் கடலிடை மேவி, அம்பு எடை, தூவி அம் பெடை அரி இனம் மறிதல், சூழி தூவி, சோர்ந்தன வாய், வியம்மே படை. படப் படர் குருதியின் சொரியுடல் சுரிப்ப வீழ்ந்தனவாய், குடரோடு மிதப்ப என இயையும். இச்செய்யுளில் யமகம் என்னும் சொல்லணி, முன்னிரண்டடிகளில் ஒருவகையாகவும் பின்னிரண்டடியில் வேறு வகையாகவும் அமைந்துள்ளது காணலாம். தூவி—சிறகு. அரி—வண்டு. யானையின் முகத்தில் ஒழுகும் மதநீரை அருந்த வரும் வண்டினங்கள் அது, முகபடாத்தை வீசியதனுல் திரும் பிச் சென்றன. சூழி—முகபடாம். எடை—எடுத்தல். எடுத்தலால் என மூன்றனுருபு விரிக்க. எடுத்தலாகிய வினைக்கு ஏற்ப இலக்குவன் என்னும் எழுவாய் வருவிக்கப் பட்டது. மேவியம் என்பதை 'வியம் மே' என மாற்றுக. மேவு படை என்பது தொடுத்தல் விகாரமாய் மேபடை என ஆயது. சோர்ந்தன, வீழ்ந்த என்பன முற்றெச்சம்; யானை, படைக் கடலிடை மேவி, சூழி தூவிச் சோர்ந்தனவாய் வீழ்ந் தனவாய் மிதப்பவாயின என முடியும். (8)

## வீரர் மனைவியர் உயிர் கணவர் உயிரோடு கலத்தல்

**9679** கண்டி றந்தன கணவர்தம் முகத்தவர் முறுவல்
கண்டி றந்தன மடந்தைய ருயிரொடுங் கலந்தார்
பண்டி றந்தன பழம்புணர் வகம்புகப் பன்னிப்
பண்டி றந்தன புலம்பொலி சிலம்பொலி பணிப்ப.

கண் திறந்தன கணவர்தம் முகத்து அவர் முறுவல்
கண்டு இறந்து அன மடந்தையர், உயிரொடும் கலந்தார்—
பண்டு இறந்தன பழம் புணர்வு அகம் புகப் பன்னி,
பண் திறந்தன புலம்பு ஒலி, சிலம்பு ஒலி பணிப்ப.

பொ:- (தம் கணவர் இறந்ததை யறிந்து) முன்னுட்களில் துய்த் துக் கழிந்தனவாகிய பழைய புணர்ச்சி நிகழ்ச்சிகள் தம் நினைவில் வர அந் நினைவுகளைப் பலவாறு சொல்லிக் கொண்டு (ஏழு நரம்புடைய) பண்களை வாய் விட்டுப் பாடினுற் போன்று புலம்புகின்ற ஒலியும் (காலில் சிலம்புகின்ற) சிலம்பின் ஒலியும் கலந்து ஒலிக்க (விரைந்து ஓடி) தம் கணவர் தம் கண் விழித்துள்ளனவாகிய முகங்களில், அவர் களுடைய புன்சிரிப்பைப் பார்த்து மகிழ்ந்து தம்முடலை விட்டு இறந்து அக்கற்புடைப் பெண்டிர் தம் இறந்த கணவர்தம் உயிரோடு கலந் தார்கள்.

கு:- போர்க் களத்தில் இறந்து பட்ட வீரர்களின் மனைவியர் அவ்வீரர்களின் நகை முகத்தினைக் கண்டு மகிழ்ந்து தம்முடம்பை விட்டு அவர் உயிரோடு கலந்தமை இதனால் கூறப்பட்டது. நிகழ்ந்தது நினைத்தல் உயிர்களின் இயல்பாதலின், தம் கணவரோடு அன்பினால் கலந்து பழகிய நிகழ்ச்சிகள், அவர் இறந்தமை கேட்டவுடன் மகளிரின் உள்ளத்தே தோன்றுதலின், அவற்றைச் சொல்லிப் புலம்பிக் கொண்டு ஓடிச் சென்று போர்க்களம் புகுந்து தம் கணவர் முகத்தைக் காண்கின்றனர். அவ்வீரர்கள் இலக்குவனது அம்பு தம் உரத்தை உருவிச் செல்லும்போது, 'வேல் கொண்டு எறிய விழித்த கண் இமைத்தலும் வீரர்க்கு ஓட்டாகும்' என்ற கருத்தால் விழித்து நின்று, இலக்குவன் வீரத்தை வியந்து சிரித்துக் கொண்டே இறந்தார்கள். ஆதலின், அவர் திறந்த கண்ணோடும் சிரித்த வாயோடும் வீழ்ந்து கிடக்கின்றனர். அவர் தம் வீரச் சிறப்பைக் கண்ட அவர் மனைவியர் மகிழ்ந்து அவருடம்பைத் தழுவிக்கொண்டு உடம்பை நீத்து அவ்வுலகத்தில் அவருயிரோடு கலந்தனர் என்றவாறு. இவ்வாறு கற்புடை மகளிர் இறத்தலைப் புறத்திணையில் 'தலையொடு முடிதல்' என்று கூறுவர். அம்மகளிர் புலம்பும் ஒலி பண் பாடுவது போன்றிருந்தது என்க. பண் என்பது எழு நரம்பினை யுடையது. பண், திறம், தன புலம்பு ஒலி சிலம்பு ஒலி பணிப்ப என்று பிரித்துப் புலம்பொலிக்குப் பண்ணினையும் சிலம்பொலிக்குக் குறை நரம்புடைய திறத்தினையும் உவமையாக்குவது முண்டு. மடந்தையர் என்ற பன்மையோடு தன புலம்பொலி என்ற ஒருமை யியையாமையால் அது வழுவாம். (9)

### தன் தானை தருக்கழியும் என இராவணன் கூறுதல்

**9680** ஏழு மேழுமென் றுரைக்கின்ற வுலகங்கள் யாவும்
ஊழி பேர்வதே யொப்பதோ ருலைவுற வுடற்றும்
நூழில் வெஞ்சம நோக்கிய விராவண னுவன்றான்
தாழி லென்படை தருக்கறு மென்பதோர் தன்மை.

ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற உலகங்கள் யாவும்
ஊழி பேர்வதே ஒப்பதுஓர் உலைவு உற, உடற்றும்
நூழில் வெஞ்சமம் நோக்கி, அவ் இராவணன் நுவன்றான்-
'தாழ் இல் என்படை தருக்கு அறும்' என்பது ஓர் தன்மை.

பொ:- கீழ் ஏழுலகம் மேலேழ் உலகம் என்று சொல்லுகின்ற உலகங்கள் பதினான்கும் ஊழியிறுதியில் நிலை பெயர்வது போன்ற

தொரு அழிவு உண்டாகப் பொருகின்ற, (பகைவரைக்) கொன்று குவிக்கின்றதாகிய கொடிய போர்க்கள நிகழ்ச்சிகளைப் பார்த்து, அந்த இராவணன், 'தாழ்வு இல்லாத எனது சேனை இனிச் செருக்கு அழியும்' என்றதொரு தன்மையைக் கூறினான்.

கு:- உலைவு—அழிவு. உடற்றுதல்—போர் செய்தல். நூழில்—கொன்று குவித்தல். "பல்படை யொருவற் குடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசிய நூழிலும்" (தொல்-புறத்-72) என்பர் தொல்காப்பியனார். இதுகாறும் யார்க்கும் தாழாது போர்வென்றி கொண்ட படையாதலின் 'தாழில் என் படை' என முன்னை நிலை உன்னிக் கூறினான். தருக்கு—செருக்கு. அவ் இராவணன் நோக்கி, தருக்கறும் என்பதோர் தன்மை நுவன்றான் என இயையும். (10)

## இராவணன் தன் சேனை சிதைந்தது கண்டு கலங்கிக் கூறுதல் 9681-9684

**9681** மரமுங் கல்லுமே வில்லொடு
வாண்மழுச் சூலம்
அரமுங் கல்லும்வேன் முதலிய
வயிற்படை யடக்கிச்
சிரமுங் கல்லெனச் சிந்தலிற்
சிதைந்ததென் சேனை
உரமுங் கல்வியு முடையவன்
செருநின்ற தொருபால்.

'மரமும் கல்லுமே வில்லொடு வாள், மழு, சூலம்,
அரமும், கல்லும் வேல் முதலிய அயில்படை அடக்கி.
சிரமும் கல் எனச் சிந்தலின், சிதைந்தது என் சேனை.
உரமும் கல்வியும் உடையவன் செரு நின்றது ஒருபால்.

பொ:- 'வலிமையும் கல்வியறிவும் உடையவனாகிய அனுமன் போர் செய்ய நின்றதாகிய ஒரு பக்கத்தில் (வானரங்கள் வீசும்) மரங்களும் கற்களுமே, (அரக்கர் வீசுகின்ற) வாள், மழு, சூலம், அரத்தையும் சிதைக்கத் தக்க உறுதிவாய்ந்த வேல் முதலிய கூரிய படைகளை அடக்கிவிட்டு, அவர்கள்தம் தலைகளையும் கற்கள்போல உருளுமாறு சிந்துதலால் என் சேனை சிதைந்தது.

கு:- உரமும் கல்வியும் உடையவன் என்றது அனுமனை. மரமும் கல்லுமே அயிற்படை அடக்கிச் சிந்தலின் என்பது வில் வீரனாகிய இலக்குவனுக்கு ஏலாமை காணலாம். மேல், 'தாழில் என்படை தருக்கு அறும்' என்று நுவன்ற இராவணன் இங்குத் தருக்கற்றுச் சிதைந்தது கண்டு இங்ஙனம் கூறுவானானான். அரமும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. தன்னை அராவுகின்ற அரத்தையும் மழுங்கச் செய்யும் உறுதியுடைய வேல் என்க. இதனால் வேலின் உறுதிப்பாட்டினைப் புலப்படுத்தியவாறு. போர்க் கருவி அல்லாத மரமும் கல்லுமே, போர்க் கருவிகளாய வில் முதலியவற்றை அடக்கியதோடு, அவ்வாயு தங்களைத் தாங்கி நின்ற அரக்கர்களின் தலைகளையும் கல்போல் உருளு மாறு சிந்தினமை வியப்பிற் குரியதாகலின் இங்ஙனம் வியந்து கூறி இரங்குவானானான் இராவணன். (11)

**9682** அழலுங் கட்களி றணியொடுந்
துணிபடு மாவி
சுழலும் பல்படைத் தொகுதியு
மன்னதே சுடர்த்தேர்
கழலுஞ் சோரிநீ ராற்றொடுங்
கடலிடைக் கலக்கும்
குழலு நூலும் போன்மனுமனுந்
தானுமக் குமரன்.

அழலும் கண்களிறு அணியொடும் துணிபடும்; ஆவி
சுழலும் பல்படைத் தொகுதியும்; அன்னதே சுடர்த்தேர்;
கழலும் சோரிநீர் ஆற்றொடும் கடலிடைக் கலக்கும்;
குழலும் நூலும் போன்ம், அனுமனும் தானும் அக்குமரன்.

பொ:- ஒருவர்பின் ஒருவராகத் தொடர்ந்து அனுமனும் அவ் விலக்குவன் தானும் போர் செய்யும் காட்சி நெய்கின்ற குழலும் அதனைத் தொடர்ந்து செல்லும் நூலும் போலும்; (அவர் போர் செய்வதால்) சினம் கனலுகின்ற கண்ணையுடைய யானைகள் அணிந்த அணிகளோடு துணிபடா நிற்கும்! பலவகையான காலாட் படைக் கூட்டமும் அடிபட்டு ஆவி சுழலா நிற்கும்; ஒளிவாய்ந்த தேரும் படையும் அவ்வாறே அடிபட்டுச் சுழலா நிற்கும்; இறந்துபட்ட உடம்பிலிருந்து வெளிப்படும் இரத்த நீர் ஆற்று நீரோடு சேர்ந்து கடலிடையே கலக்கா நிற்கும்.

கு:- இச் செய்யுளும் இராவணன் கூறுவதேயாம். அனுமன் முன்னும் இலக்குவன் பின்னுமாக அரக்கர் படையில் நுழைந்து போர் செய்யும் காட்சி, பாவிடை யாடுகின்ற நெய்குழலும் அதைத் தொடர்ந்து பின்செல்லும் நூலும் போலும் என்றவாறு. போலும் என்ற செய்யும் என் முற்றில் உகர உயிர் கெட்டுப் போன்ம் என நின்றது; மகரக் குறுக்கம். அனுமனும் குமரன்தானும் ஒருவர்பின் ஒருவர் தொடர்ந்து போர் செய்யும் காட்சி குழலும் நூலும் போலும் என வேண்டும் சொல் வருவித்து முடிக்க. களிறு துணிபடும்; படைத் தொகுதி ஆவி சுழலும்; சோரிநீர் கடலிடைக் கலக்கும்; எனச் செய்யும் என் முற்ருகவே காணலாம். சுடர்த்தேர் அன்னதே என்புழி ஆவி சுழலுதல் தேரில் உள்ள வீரர்க்குக் கொள்க. கழலுதல்—வெளிப் படுதல். (12)

**9683** வில்லுங் கூற்றுவற் குண்டெனத்
திரிகின்ற வீரன்
கொல்லுங் கூற்றறக் குறைக்குமிந்
நிறைப்பெருங் குழுவை
ஒல்லுங் கோளரி யுருமன்ன
குரங்கின துகிரும்
பல்லுங் கூர்க்கின்ற கூர்க்குல
வரக்கர்தம் படைகள்.

'வில்லும் கூற்றுவற்கு உண்டு' என,
திரிகின்ற வீரன்
கொல்லும் கூற்று அறக் குறைக்கும்,
இந் நிறைப் பெருங் குழுவை,
ஒல்லும் கோள் அரி, உரும்அன்ன
குரங்கினது உகிரும்
பல்லும் கூர்க்கின்ற; கூர்க்கில
அரக்கர்தம் படைகள்.

பொ:- 'கூற்றுவனுக்குத் தண்டே அன்றி வில்லும் உண்டு' எனக் கண்டோர் துணிந்து சொல்லுமாறு திரிகின்ற இலக்குவன், கொல்லும் தொழிலையே தன் தொழிலாகக் கொண்ட கூற்றுவனும் சோர்ந்து வலிமை யறுமாறு இந்த நிறைந்த பெரிய அரக்கர் திரளைக் குறைக்கின்ருன்; வெல்லுதற் கேற்ற வலிமையுடைய சிங்கமும் இடியும் போன்ற அனுமனுகிய குரங்கினது நகமும் பல்லும், அரக்கர்தம்

படையை அழிக்கக் கூர்மைமிக்கனவாகின்றன; அரக்கர்தம் படைகள் வானரங்களை அழிக்கக் கூர்மைபெறவில்லை; (என்னே வியப்பு!)

கு:- இலக்குவன் கொலைத் தொழிலில் கூற்றுவனைப் போன்ற வனுய்க் கூற்றுவனுக்குரித்தல்லாத வில்லேந்தியவனுக இருக்கக் கண்டவர்கள், இவன் கூற்றுவன் அல்லன்; வில்லேந்தியிருத்தலால், என்று துணியவேண்டியிருக்க 'வில்லும் கூற்றுவற் குண்டு' எனத் துணிந்து கூறுமாறு கூற்றுவனேடு மிக்க ஒப்புமையுடையவனுக இலக்குவன் திரிகின்றுன் என்றவாறு. "பொருப்புறழ் கோள்புணர் புண்ணியத்தது கருப்பு வில் லன்றவன் காமனல்லனே" (பால-மாலைக்-54) எனத் துணிந்தவாறு இங்கு நினையததகும். திரியும்போது கூற்றுவனுக இருந்தவன் பொரும்போது அக் கூற்றுவனைக் காட்டிலும் கொல்லுந் தொழில் வல்லவனுக ஆயினுன் என்றவாறு. இலக்குவன், கொல்லும் அரக்கர்களின் உயிர்களை விரைந்து கவர்தற்குக் கூற்றுவன் வலிமை யற்றவனுய்ச் சோர்ந்தான் என்றவாறு. குறைத்தலாவது சிறிதொழியச் சிதைத்தல். இராவணன் சேனையில் பெரும்பகுதியை இலக்குவன் கொன்று குவித்துவிட்டான் என்பது கருத்து. கூர்மையுற்ற அரக்கர்களின் படைக் கலங்கள் வானரங்களைக் கொல்ல இயலாமையையும் குரங்கின் உகிரும் பல்லும் அரக்கர்களைக் கொல்லுதற்குப் பயன் படுதலையும் கண்டு இராவணன் இவ்வாறு கூறலாஞன். (13)

### இராவணன் கொதிப்பு

**9684** கண்டு நின்றிறைப் பொழுதினிக்
காலத்தைக் கழிப்பின்
உண்டு கைவிடுங் கூற்றுவ
னிருதர்பே ருயிரை
மண்டு வெஞ்செரு நானெரு
கணத்திடை மடிந்தே
கொண்டு மீள்குவென் கொற்றமென்
றிராவணன் கொதித்தான்.

'கண்டு நின்று, இறைப் பொழுது, இனிக்
காலத்தைக் கழிப்பின்,
உண்டு கைவிடும் கூற்றுவன்,
நிருதர் பேர் உயிரை;

மண்டு வெஞ் செரு நான் ஒரு
கணத்திடை மடிந்தே
கொண்டு மீள்குவென், கொற்றம்' என்று
இராவணன் கொதித்தான்.

பொ:- இனிச் சிறிது போழ்து இவ்வாறு இலக்குவனும் அனுமானும் போர் செய்வதையே கண்டு நின்று கொண்டு காலத்தைக் கழிப்பேனாயின், கூற்றுவன் அரக்கரின் பெருமை மிக்க உயிர்களை உண்டு, போர்க் களத்தைவிட்டுச் சென்று விடுவான்; நெருங்கிச் செய்யும் கொடிய போரில் நான் ஒருகணப் பொழுதில் (பகைவரை) மடித்து வெற்றிக் கொண்டு மீள்வேன்' என்று சொல்லிக் கொண்டு இராவணன் வெதும்பினான்.

கு:- இனி இன்றைப் பொழுது கண்டு நின்று காலத்தைக் கழிப்பின், கூற்றுவன் நிருதர் பேருயிரை உண்டு கைவிடும் என இயையும். பகைவரை மடித்து என ஒரு சொல் வருவித்து, கொற்றம் கொண்டு மீள்குவென் என மாற்றி முடிக்க. நிருதரைப் பெருமையுடையவராக இராவணன் கருதியதால் அவர் பெருமையை அவருயிர்மேல் ஏற்றி 'நிருதர் பேருயிர்' என்றான். கொதித்தல் இங்கு வெகுண்ட நிலையை யுணர்த்தியது. இது காறும் இலக்குவனாலும் அனுமனாலும் அரக்கர் படை அழுவதைக் கண்டு வியந்து கொண்டு இருந்தான் இராவணன் ஆதலின் இவ்வாறு கூறினான். (14)

## இராவணன் சுடுகணை விடுதல்

9685 ஊதை போல்வன வுருமுறழ்
திறலன வுருவிப்
பூத லங்களைப் பிளப்பன
வண்டத்தைப் பொதுப்ப
மாதி ரங்களை யளப்பன
மாற்றருங் கூற்றின்
தூது போல்வன சுடுகணை
முறை முறை துரந்தான்.

ஊதை போல்வன, உரும் உறழ்
திறலன, உருவிப்
பூதலங்களைப் பிளப்பன,
அண்டத்தைப் பொதுப்ப,

மாதிரங்களை அளப்பன,
மாற்றருங் கூற்றின்
தூது போல்வன, சுடுகணை
முறைமுறை துரந்தான்.

பொ:- (கொதித் தெழுந்த இராவணன்) காற்றைப் போல் விரைந்து செல்வனவும் இடியைப் போன்று அழிக்கும் வலிமை பெற்றனவும், மலைகளை ஊடுருவிப் பிளப்பனவும், அண்டத்தைத் துளைப்பனவும் திசைகளை அளப்பனவும் மாற்றுதற்கு இயலாத கூற்றுவனின் தூது போல்வனவும் ஆன சுடுகின்ற அம்புகளை முறை முறை (பகைவர் மேல்) செலுத்தினன்.

கு:- ஊதை—காற்று. பூதரம்—மலை. பொருத்தல்—துளைத்தல். திசையுள்ள அளவும் செல்ல வல்லன என்பார் 'மாதிரங்களை அளப்பன' என்றார். கூற்றுவன் உயிர் கொல்ல வருவதை யாராலும் தடுக்க இயலாது என்பார் 'மாற்றருங் கூற்றம்' என்றார். 'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல்—பொருள்—புறத்—79) என்றார் தொல் காப்பியனாரும். இராவணன் விடும் சுடுகணை ஒவ்வொன்றும் பகைவரைக் கொல்லுதல் தப்பாது என்ற கருத்தால் 'கூற்றின் தூது போல்வன சுடுகணை' என்றார். (15)

## வானர சேனை இரிந்தோடுதல்

9686 ஆளி போன்றுள னெதிர்ந்த போ
தமர்க்களத் தடைந்த
ஞாளி போன்றுள தென்பதென்
னள்ளிரு ளடைந்த
காளி போன்றன னிராவணன்
வெள்ளிடைக் கலந்த
பூளை போன்றதப் பொருசினத்
தரிகடம் புணரி.

ஆளி போன்றுளன், எதிர்த்த போது,
அமர்க்களத்து அடைந்த
ஞாளி போன்று உளது என்பது என்?
நள் இருள் அடைந்த

காளி போன்றனன் இராவணன்
வெள்ளிடைக் கலந்த
பூளை போன்றது, அப்பொரு சினத்து
அரிகள்தம் புணரி.

பொ:- (இராவணன்) எதிர்த்த போது சிங்கம் போன்று விளங்கினன்; போர்க் களத்தில் எதிரே வந்தடைந்த (வானரப் படையாகிய கடல்) நாயைப் போன்றிருந்தது, என்று கூறுவதில் என்ன பயன்? செறிந்த இருட்டில் தோன்றிய காற்றுப் போன்றனன் இராவணன்; அந்தப் போர் செய்தற்குரிய கோபத்தையுடைய வானரர்களின் சேனைக் கடல், வெற்றிடத்தில் பொருந்தி பூளைப் பூப் போன்றது (என்று கூறுவதே பொருத்தமாகும்).

கு:- ஆளி—சிங்கம். ஞாளி— நாய். காளி— காற்று. களம் உடையது காளி. காளம்—கருமை. கருமை நிறமுடைய காற்றும் காளியென்ற பெயர்க்கு உரியதாயிற்று. ஐம்பூதங்களின் நிறங்களைச் சொல்ல வந்த திருவதிகை—மனவாசகங் கடந்தார் 'வன்கால் கருமை' (உண்மை விளக்கம்—5) என்று கூறியுள்ளது காணலாம். ஆளிக்கு முன் ஞாளி வலிகெடுதல் போலப் பூளைப்பூ வலிமையின்றி அலைவதற்குக் காரணமாயிருப்பது காற்றே யாதல் தெளிவு. இராவணன் முன் வலிகெட்டு ஓடும் வானரர்களுக்குக் காற்றின் முன் வலிமையிழந்து ஓடும் பூளைப் பூவினை உவமை கூறினர். 'ஆனையா வுனக்கமைந்தன மாருத மறைந்த பூளையாயின கண்டனே' (முதற் போர்—256) என முன்னும் இத்தகைய உவமையைக் கையாண்டிருத்தல் காணலாம். 'காற்றிடைப் பூளை கரந்தென வரந்தையுறக் கடலரக்கர் தஞ்சேனை' (பெரிய திருமொழி—4-10-6) என்பதும் இங்கு நினையலாம். காளி என்பதற்குத் துர்க்கை யென்று பொருள் கொள்ளின் பூளைப்பூவைத் தாழ்த்தும் உயர்வு துர்க்கையின்பால் இருத்தல் வேண்டும். அத்தன்மை காற்றிற்கே பொருந்தியிருத்தலின் மேலதே பொருளாதல் தெளிவு. காற்று வலிமை பெறுதற்குரிய காலம் நள்ளிரவே யாகலின் 'நள்ளிருளடைந்த காளி' எனச் சிறப்பித்தார். பூளைப்பூ மிக எளிமைப் பட்டு ஓடுதற்குரிய இடம், தடையொன்றும் இடையில் இல்லாத வெற்றிடமே யாதலின் 'வெள்ளிடை கலந்த பூளை' எனச் சிறப்பித்தார். இதனால் இராவணனைக் கண்டவுடன் வானரர் தோற்றோடிய தன்மை புலப்படுத்தியவாறு. கருநிறமுடைமை பற்றியே துர்க்கையும் காளி எனப்பட்டாள் என்பதும் நினைக. காலி என்னும் தெலுங்குச் சொல்' காற்றைக் குறிக்கும்; அச் சொல்லே திசைச் சொல்லாய் இங்கு விகாரப் பட்டு வந்தது எனலும் ஆம். (16)

## இலக்குவன் இராவணனை எதிர்த்தல்

**9687** இரியல் போகின்ற சேனையை
யிலக்குவன் விலக்கி
அரிக ளஞ்சன்மின் னஞ்சன்மி
னென்றருள் வழங்கித்
திரியு மாருதி தோளெனுந்
தேர்மிசைச் சென்ருன்
எரியும் வெஞ்சினத் திராவண
னெதிர்புகுந் தேற்ருன்.

இரியல் போகின்ற சேனையை இலக்குவன் விலக்கி
'அரிகள்! அஞ்சன்மின், அஞ்சன்மின்' என்று அருள் வழங்கி,
திரியும் மாருதி தோள் எனும் தேர்மிசைச் சென்ருன்;
எரியும் வெஞ்சினத்து இராவணன் எதிர்புகுந்து ஏற்ருன்.

பொ:- தோற்று ஓடுகின்ற வானர சேனையை இலக்குவன் தடுத்து, 'வானரர்களே! அஞ்சாதீர்கள், அஞ்சாதீர்கள்' என்று அருள் மொழி வழங்கிக் கொண்டு, திரிகின்ற அனுமானின் தோள் என்கின்ற தேர்மேல் ஏறிச் சென்று, எரிகின்ற கடுங்கோபத்தினையுடைய இராவ ணன் எதிரில் புகுந்து எதிர்த்தான்.

கு:- இரியல் போதல்—தோற்று ஓடுதல். அருள் என்றது அரு ளால் கூறும் சொல்லினை; ஆகுபெயர். ஏற்ருன்—எதிர்த்தான். இலக்கு வனே இராவணன் எதிர்புகுந்து எதிர்த்தான் என்க. வானரர்கள்அஞ்சி ஓடுமாறு பொருதான் இராவணன் ஆகலின், அவனை இலக்குவன் எதிர் சென்று எதிர்க்க வேண்டியவனுனன். (17)

## இராவணன் விட்ட அம்புகளை இலக்குவன் விலக்குதல்

**9688** ஏற்றுக் கோடலு மிராவண
னெரிமுகப் பகழி
நூற்றுக் கோடியின் மேற்செலச்
சிலைகொடு நூக்கக்

காற்றுக் கோடிய பஞ்செனத்
திசைதொறுங் கரக்க
வேற்றுக் கோல்கொடு விலக்கின
னிலக்குவன் விசையால்.

ஏற்றுக் கோடலும், இராவணன் எரிமுகப் பகழி
நூற்றுக் கோடியின்மேல் செலச் சிலைகொடு நூக்க,
காற்றுக்கு ஓடிய பஞ்சு எனத் திசைதொறும் கரக்க,
வேற்றுக் கோல்கொடு விலக்கினன், இலக்குவன் விசையால்.

பொ:- (அவ்வாறு இலக்குவன் எதிர்புகுந்து) எதிர்த்த அளவில், இராவணன் நெருப்பை முகத்திலே கொண்ட அம்புகளை நூறு கோடிக்கு மேலாக அவ்விலக்குவன்மேல் செல்லுமாறு வில்லைக் கொண்டு எய்ய, அவ்வம்புகள் யாவும் காற்றுக்கு ஆற்றாது ஓடிய பஞ்சு போலத் திசைகள் தோறும் சென்று மறையுமாறு, இலக்குவன், அவற்றிற்கு மாறான அம்புகளைக் கொண்டு விசையோடு விலக்கினான்.

கு:- நெருப்பைக் கக்கும் அம்புகள் என்பார், 'எரிமுகப்பகழி' என்றார். நூற்றுக்கோடியின் மேல் என்றது இராவணன் விட்ட அம்புகளின் மிகுதியுணர்த்தி நின்றது. நூக்குதல்—தள்ளுதல். 'எய்ய' என்னாது 'நூக்க' என்றமையால் இராவணன் அம்புகளை விட்ட விரைவு புலப்படுத்தியவாறு. இலக்குவன் விட்ட அம்புகள் காற்றுப் போன்றன; இராவணன் எய்த அம்புகள் பஞ்சு போன்று பறந்து கரந்தன என்க. வேற்றுக்கோல் என்றது, இராவணன் எய்த அம்புகளுக்கு மாறான அம்புகளை.

## இருவரும் மாறி மாறி அம்பு எய்தல்

9689 விலக்கி னான்றடந் தோளினு
மார்பினும் விசிகம்
உலக்க வுய்த்தன னிராவண
னேந்தொடைந் துருவக்
கலக்க முற்றில னிளவலு
முள்ளத்திற் கனன்றான்
அலக்க ணெய்துவித் தானட
லரக்கனை யம்பால்.

விலக்கினுன் தடந்தோளினும் மார்பினும், விசிகம்,
உலக்க உய்த்தனன், இராவணன், ஐந்தொடு ஐந்து; உருவக்
கலக்கம் உற்றிலன் இளவலும், உள்ளத்தில் கனன்ருன்,
அலக்கண் எய்து வித்தான், அடல் அரக்கனே, அம்பால்.

பொ:- அவ்வாறு விலக்கினவனுகிய இலக்குவனது பெரிய தோளிலும் மார்பிலும் இராவணன் பத்து அம்புகளை அவன் வலிமை குறையுமாறு விடுத்தான்; அவ்வாறு தன்னுடம்பில் அவ்வம்புகள் ஊடுருவிச் செல்லவும் கலக்கம் அடையாத இலக்குவனும் வெகுண்டு, வலிமை மிக்க இராவணனைத் தன் அம்பினுல் துன்பம் அடையச் செய்தான்.

கு:- ஐந்தொடைந்து விசிகம் உய்த்தனன் என இயையும். விலக்கினுன் என்றது, வினையாலணையும் பெயர். உலத்தல்—வலிமை குறைதல். தன் தோளிலும் மார்பிலும் இராவணன் விட்ட பத்து அம்புகள் உருவிச் சென்றபோதும் அதுபற்றி இலக்குவன் கலக்க முற்றிலனுய்த் தன் அம்பால் அவ்விராவணனை அலக்கண் செய்தான் என இலக்குவனது நோன்மை புலப்படுத்தியவாறு. கனன்ருனுய் அரக்கனை அலக்கண் எய்துவித்தான் எனமுற்றெச்சமாக்கி முடிக்க. கலக்கம் உற்றிலன் இளவலும் என்புழி 'உற்றிலன்' என்ற குறிப்பு முற்றுப் பெயரெச்சம் ஆயது. உற்றிலனுகிய இளவல் என்க. (19)

## இலக்குவனை அம்பினுல் வெல்ல இயலாது என இராவணன் எண்ணுதல்

9690 காக்க லாகலாக் கடுப்பினிற்
றெடுப்பன கணைகள்
நூக்கி னுன்கணை நுறுக்கினு
னரக்கனு நூழில்
ஆக்கும் வெஞ்சமத் தரிதிவன்
றனைவெல்வ தம்பால்
நீக்கி யென்னினிச் செய்வதென்
றிராவண னினைந்தான்.

காக்கல் ஆகலாக் கடுப்பினில்
தொடுப்பன கணைகள்
நூக்கினுன்; கணை நுறுக்கினுன்,
அரக்கனும், 'நூழில்

ஆக்கும் வெஞ்சமத்து அரிது இவன்தனை
வெல்வது; அம்பால்
நீக்கி, என் இனிச் செய்வது?' என்று
இராவணன் நினைந்தான்.

பொ:- தடுத்தற்கு இயலாத விரைவொடு தொடுத்தற்குரிய அம்புகளை (இலக்குவன்) செலுத்தினன்; அந்த அம்புகளை நுறுங்கச் செய்தவனாகிய இராவணனும், "பகைவரைக் கொன்று குவித்தற்குரிய போர்க்களத்தில் அம்பினால் இவனை வெல்வது அரிது; அம்பினால் பொருவதை விடுத்து இனி என் செய்வது?" என்று இராவணன் சிந்திக்கலானான்.

கு:- நுறுக்கினனாகிய அரக்கனும் என இருபெயரொட்டு ஆக்குக. நுறுக்குதல்—பொடியாக்குதல். நூழில்—கொன்று குவித்தல். வெஞ் சமத்து இவன்றனை அம்பால் வெல்வது அரிது என இயையும். 'அம்பால் பொருவது நீக்கி என் இனிச் செய்வது?' என இடைநிலை விளக்காய் நின்ற 'அம்பால்' என்பதைப் பின்னும் இயைத்துப் பொருவது என்ற ஒரு சொல்லைச் சொல்லெச்சமாக வருவித்து முடிக்க. இராவணன் இவ்வாறு சிந்தித்துப் பின் மோகப்படையை விட முடிவு செய்தல் காணலாம். (20)

## இராவணன் சிந்தனை

9691 கடவுண் மாப்படை தொடுக்கின்மற்
றவைமுற்றுங் கடக்க
விடவு மாற்றவும் வல்லனெல்
லாரையும் வெல்லும்'
தடவு மாற்றலைக் கூற்றையுந்
தமையனைப் போலச்
சுடவு மாற்றுமெவ் வுலகையு
மெவனுக்குந் தோலான்.

'கடவுள் மாப்படை தொடுக்கின் மற்று
அவை முற்றும் கடக்க
விடவும் ஆற்றவும் வல்லன்
எல்லாரையும் வெல்லும்,

தடவும் ஆற்றலைக் கூற்றையும்;
தமையனைப் போலச்
சுடவும் ஆற்றும் எவ்வுலகையும்;
எவனுக்கும் தோலான்.

பொ:- பெரிய தெய்வக் கணைகளைத் தொடுத்தால் அவை முழுவதையும் வெல்லுமாறு அவற்றிற்கு மாறான அம்புகளை விடவும், (அவை தாக்கியபோது) தாங்கிக்கொள்ளவும் இவன் வல்லவன்; எல்லாரையும் வெல்கின்ற கூற்றுவனையும் வலிமையை ஆராய்வான்; தன் அண்ணனைப் போல எல்லா வுலகங்களையும் சுடுதலும் செய்வான்; யாரிக்கும் தோற்கமாட்டான்.

கு:- கடவுள் மாப்படை என்றது அயன்கணை, நாரணன்கணை என்றாற்போல்வனவற்றை. அவைமுற்றும் கடக்க மாறான கணைவிடவும் என வேண்டுஞ் சொல் வருவிக்க. எல்லாரையும் வெல்லும் கூற்றையும் ஆற்றலைத் தடவும் என மாறிக் கூட்டுக. தடவுதல் இங்கு, சோதித்தலை உணர்த்தியது. கூற்றுவன் ஆற்றல் எத்தகையது என அவனோடு பொருது காண்பதற்கு உரியவன் என்றவாறு. கூற்றின் வலிமை புலப்பட 'எல்லாரையும் வெல்லும் கூற்று' எனச் சிறப்பித்தான். (21)

### மோகப்படை தொடுக்க முடிவு செய்தல்

**9692** மோக மொன்றுண்டு முதலவன்
வகுத்தது முன்னாள்
ஆக மற்றது கொற்றமிங்
கிவன்றனை யழிப்ப
தேக முற்றிய விஞ்சையை
யிவன்வயின் ஏவிக்
காக முற்றுழல் களத்தினிற்
கிடத்துவென் கடிதின்.

மோகம் ஒன்று உண்டு; முதலவன்
வகுத்தது, முன்னாள்;
ஆகம் அற்றது; கொற்றம் இங்கு
இவன் தனை அழிப்பது;

ஏகம் முற்றிய விஞ்சையை
இவன்வயின் ஏவிக்
காகம் உற்று உழல் களத்தினில்
கிடத்துவென் கடிதின்.

பொ:- மோகம் என்பது ஒன்று உண்டு. அது முன்னாளில் முதற் கடவுள் இயற்றியது; (அது கண்ணால் காணக்கூடிய) வடிவம் அற்றது; இங்குள்ள இவ் விலக்குவனைக் கொற்றம் அழிக்கவல்லது; தனித்தன்மை நிரம்பிய அந்த விஞ்சையை இவனிடத்தில் செலுத்திக் காகங்கள் பிணம் தின்ன வந்து திரிகின்ற களத்தில், விரைவில் வீழ்ந்து கிடக்கச் செய்வேன்.

கு:- மோகம், என்பது வடிவ மின்றிச் செல்லும் மந்திரசத்தி. இதை விளக்கவே 'ஏகம் முற்றிய விஞ்சையை' என்கின்றான். மோகத்திற்கு ஒப்பானது பிறிதொன்று இல்லாமையால் 'ஏகம் முற்றிய விஞ்சை' எனப்பட்டது. கண்ணுக்குத் தெரியும் எத்தகைய தெய்வ வெம்படைகட்கும் மாறான கணைகளைத் தெரிந்து விடும் ஆற்றலுடைய இலக்குவன் கண்ணுக்குத் தெரியாத இம்மோகத்திற்கு மாறான கணை தொடுக்கவியலாது களத்தில் வீழ்வது உறுதி என்ற கருத்தால், 'விஞ்சையை இவன்வயின் ஏவிக் களத்தினிற் கிடத்துவன் கடிதின்' என்றான். இச் செய்யுள் இராவணன் தன் நெஞ்சிற்குள் சொல்லிக் கொண்டது. 'அரிதிவன் தனை வெல்வது அம்பால்' என முன்கூறிய இராவணன், இங்கு வடிவமற்ற மந்திர ஆற்றலை ஏவுவதே வெல்வதற்கு ஏற்ற வழி என முடிவுசெய்தான் என்க. அதன் தெய்வ ஆற்றல் புலப்பட 'முதலவன் வகுத்தது' எனவும், அதன் அருவநிலை புலப்பட, 'ஆகமற்றது' எனவும், அதன் ஆற்றல் புலப்பட, 'கொற்றமிங் கிவன்தனை யழிப்பது' எனவும் கூறினான். (22)

மோகன விஞ்சையை இராவணன் அனுப்ப இலக்குவன் நாரணன் படையால் அதனை அழித்தல்

9693 என்ப துன்னியவ் விஞ்சையை
மனத்திடை யெண்ணி
முன்பன் மேல்வரத் துரந்தன
னதுகண்டு முடுகி

அன்பின் வீடண ஞழியான்
படையினி னறுத்தி
என்ப தோதின னிலக்குவ
னதுதொடுத் தெய்தான்.

என்பது உன்னி, அவ் விஞ்சையை
மனத்திடை எண்ணி,
முன்பன் மேல் வரத் துரந்தனன்,
அதுகண்டு முடுகி,
அன்பின் வீடணன், 'ஆழியான்
படையினின் அறுத்தி!
என்பது ஓதினன்; இலக்குவன்
அது தொடுத்து எய்தான்.

பொ:- என்பது நினைந்து, இராவணன் அந்த மோகன விஞ்சையை மனத்தில் எண்ணி, வலியவனுகிய இலக்குவன்மேற் செல்லவிடுத்தான்; அன்பினையுடைய வீடணன் அதையுணர்ந்து விரைந்து சென்று, 'சக்கரப் படையையுடைய நாரணனது கணையால் இதனை அறுப்பாயாக' என்பதைச் சொன்னுன்; இலக்குவன் அந்த நாரணன் கணையைத் தொடுத்து விடுத்தான்.

கு:- 'அவ் விஞ்சையை மனத்திடை எண்ணித் துரந்தனன்' என்றதால் அம்மோகன மந்திரத்தை மனத்தில் நினைத்து அவன் மேல் சென்று அழிக்குமாறு நினைப்பாற்றலினுல் செலுத்தினுன் என்பதும் வில்லில் தொடுத்து விடவில்லை என்பதும் புலனுகும். முன்பன்—வலியவன். துரத்தல்—செலுத்துதல். முடுகி ஓதினன் என இயையும். இராவணன் மனத்தால் விடுத்தது மோகனத்தையே என்பதை இலக்குவன் அறியான் ஆகலின், பழகியறிந்த வீடணன் இலக்குவன்பால் விரைந்துசென்று இதைச் சொல்லலானுன். (23)

### வீடணன் சொற்படி இலக்குவன் மோகத்தை நீக்கியது கண்டு இராவணன் வீடணன் மேல் சினங் கொள்ளுதல்

9694 வீடணன் சொல விண்டுவின்
படைக்கலம் விட்டான்
மூடு வெஞ்சின மோகத்தை
நீக்கலு முனிந்தான்

மாடு நின்றவ னுபாயங்கண்
மதித்திட வந்த
கேடு நந்தமக் கென்பது
மனங்கொண்டு கிளர்ந்தான்.

வீடணன் சொல, விண்டுவின்
படைக் கலம் விட்டான்,
மூடு வெஞ்சின மோகத்தை
நீக்கலும், முனிந்தான்,
'மாடு நின்றவன் உபாயங்கள்
மதித்திட, வந்த
கேடு நம் தமக்கு' என்பது
மனம் கொண்டு கிளர்ந்தான்.

பொ:- வீடணன் சொல்ல, அவன் சொல்லின்படி நாரணனது கணையை விட்டு, தன்னை மூடிக் கொண்டு மயக்க வந்த கொடிய சினத்தையுடைய மோகத்தை இலக்குவன் நீக்குதலும், இராவணன் வெகுண்டு, 'பக்கத்தில் நின்ற வீடணன் (நாம் விடும் படைகளைத் தடுக்கும்) உபாயங்களைக் கருதிச் சொல்வதாலேயே நமக்குக் கேடுகள் பல வந்தன' என்று உளங்கொண்டு கிளர்ச்சி கொண்டான்.

கு:- விட்டானாய் நீக்கலும் எனவும், முனிந்தானாய்க் கிளர்ந்தான் எனவும் முற்றெச்சமாக்கி முடிக்க. மூடுமோகம், வெஞ்சின மோகம் எனத் தனித்தனி இயையும். மோகனம் என்பது ஒருவகை விஞ்சையாகலின் அதனை நெஞ்சில் நினைத்து அனுப்பிய அளவில் எதிர்த்தவர் அறிவு மயங்கி விழுந்து விடுவர். இராவணன் அனுப்பிய மோகன விஞ்சை தன்னை மூடிக் கொண்டு மயக்கத் தொடங்கும் போதே நாரணனது கணையால் இலக்குவன் நீக்கி விட்டான் என்பதும் அந்த மோகனம் ஒன்றினால் அல்லது இலக்குவனை வெல்ல வியலாது, என்று நினைந்து விட்ட இராவணன், அதைத் தடுக்க உபாயம் சொல்லிய வீடணன் மேல் வெகுண்டு கிளர்ந்தான் என்பதும் கூறிய வாறு. (24)

வீடணனை வேலால் கொல்லக் கருதுதல்

9695 மயன் கொடுத்தது மகளொடு
வயங்கனல் வேள்வி
அயன் படைத்துள தாழியுங்
குலிசமு மனைய

துயர்ந்த கொற்றமு மூழியுங்
கடந்துள துருவிச்
சயந்த னைப்பொருந் தம்பியை
யுயிர்கொளச் சமைந்தான்.

மயன் கொடுத்தது, மகளொடு,
வயங்கு அனல் வேள்வி;
அயன் படைத்துளது; ஆழியும்
குலிசமும் அனையது;
உயர்ந்த கொற்றமும் ஊழியும்
கடந்துளது உருவிச்
சயம்தனைப் பொரும் தம்பியை,
உயிர் கொளச் சமைந்தான்.

பொ:- விளங்குகின்ற அனல் மூட்டிச் செய்கின்ற வேள்வித் தீ முன்னர், மயன், தன் மகள் மண்டோதரியோடு கொடுத்ததும், பிரமனால் படைக்கப் பட்டதும், சக்கரப் படையையும் வச்சிரப் படையையும் ஒத்ததும், உயர்ந்த வெற்றி கொடுப்பதிலும் ஊழிக் காலத்தையும் கடந்துளதும் ஆகிய வேலினை உருவி, வெற்றியைப் பொருந்திய தம்பி வீடணனை உயிர் கொள்வதற்கு ஒருப்பட்டான்.

கு:- மண்டோதரியை இராவணனுக்கு வேள்வித் தீ முன் மயன் கொடுத்தபோது இந்த வேலினை மணப் பரிசாகக் கொடுத்தான் என்க. மயனால் மணப்பரிசாகக் கொடுக்கப்பட்டதும் அயனால் படைக்கப் பட்டதும், திருமாலின் சக்கரப் படையையும் இந்திரன் குலிச வேலையும் ஒத்து விளங்குவதும் ஊழி காலமாகக் கொற்றம் கொடுத்து வருவதும் கூறியது, வேலின் பெருமை புலப்பட வேண்டி. உருவுதல் என்றது, வேலினை உறையினின்றும் உருவுதலை யுணர்த்தியது. தம்பியின் உயிர் கொளத் துணிவதில் உள்ள கலக்கத்தைப் புலப்படுத்த, 'உயிர் கொளச் சமைந்தான்' என்றார். சமைதல்—ஒருப்படுதல்; துணிதல். (25)

## இராவணன் வீடணன் மேல் வேலை வீசுதல்

9696 விட்ட போதினி லொருவனை
வீட்டியே மீளும்
பட்ட போதவ னான்முக
னாயினும் படுக்கும்

வட்ட வேலது வலங்கொண்டு
வணங்கினன் வாங்கி
எட்ட நிற்கிலாத் தம்பிமேல்
வல்விசைத் தெறிந்தான்.

விட்ட போதினில் ஒருவனை
வீட்டியே மீளும்,
பட்ட போது அவன் நான்முகன்
ஆயினும் படுக்கும்,
வட்ட வேல் அது வலம் கொடு
வணங்கினன் வாங்கி,
எட்ட நிற்கிலாத் தம்பிமேல்
வல்விசைத்து எறிந்தான்.

பொ:- விட்ட போது ஒருவனை வீழ்த்தி விட்டே மீளும் தன்மையதும், மேல் பட்ட போது அவன் பிரமனே ஆயினும் கொல்லும் தன்மையதும் ஆகிய திருத்தமான வேலினை வலங் கொண்டு வணங்கி வாங்கித் தொலைவில் நிற்காத (இலக்குவனுக்கு அண்மையில் நிற்கின்ற, தம்பி வீடணன் மேல் மிக்க வேகத்துடன் எறிந்தான்.

கு:- விட்டபின் விடப்பட்டவனைக் கொன்றன்றி மீளாத வேல் என்றது குறிதப்பாதது என்னும் கருத்தினது. பிரமாத்திரமும்இத்தகையதே என்பதை "உந்தின பின் கொலை ஒழிவில் உண்மையும் தந்தனை" (பிரமாத்திரப்—108) என அவ்வயன் கணையே கூறுவதால் அறியலாம். எதிர்த்தவரின் சிறுமை பெருமை கருதாது பிரமனேயாயினும் கொல்லும் தன்மையுடைய வேல் என்றது அவ் வேலின் ஆற்றல் மிகுதி புலப்படுத்தியவாறு. வேலின் தெய்வத்தன்மை நினைந்து அதனை வலங்கொண்டு வணங்கி வாங்கினன் இராவணன் என்க. இலக்குவனோடு போர் செய்து கொண்டிருந்த இராவணன், தன்மேல் வேலினை எறிதற்கு ஏற்ற நிலையில் இலக்குவனுக்கு அருகில் நிற்கின்ற தம்பி என்பார், 'எட்ட நிற்கிலாத் தம்பி' என்றார். வட்டம்—திருத்தம். இனிக் கேடகத்தோடு தாங்குதற்குரிய வேல் என்பார், 'வட்ட வேல்' என்றார்; எனலும் ஆம். 'ஐயிருவட்டமொடு எஃகு வலந்திரிப்ப' (திருமுருகாற்றுப்—111) என்புழி நச்சினார்க்கினியர், ஐ இரு வட்டம்—வெளுப்பையும் கருமையையும் உடைய பரிசை எனப் பொருள் வரைந்திருத்தல் நினையலாம். (26)

## வேல் வருவது கண்டு அஞ்சிய வீடணனை அஞ்சல் என்றுகூறி இலக்குவன் அவ்விடத்து வந்து நிற்றல்

**9697** எறிந்த காலையில் வீடண
னதனிலை யெல்லாம்
அறிந்த சிந்தை யனையவீ
தென்னுயு ரழிக்கும்
பிறிந்து செய்யலாம் பொருளிலை
யென்றலும் பெரியோன்
அறிந்து போக்குவ லஞ்சனீ
யென்றிடை யணைந்தான்.

எறிந்த காலையில், வீடணன்
அதன் நிலை எல்லாம்
அறிந்த சிந்தையன், 'ஐய! ஈது
என் உயிர் அழிக்கும்:
பிறிந்து செய்யல் ஆம் பொருள்இலை'
என்றதும், பெரியோன்;
'அறிந்து போக்குவல்; அஞ்சல்நீ!'
என்று இடை அணைந்தான்.

பொ:- இராவணன் வேலினை எறிந்தபோது, அவ் வேலின் தன்மை முழுவதையும் அறிந்த சிந்தையனாகிய வீடணன், 'ஐயனே! இந்த வேல் என் உயிரை வாங்கும்; செய்தற்குரிய உபாயம் வேறு இல்லை;' என்று கூறினவுடன், பெருமையுடைய இலக்குவன், 'இதைப் போக்கும் திறம் அறிந்து யான் போக்குகின்றேன்; நீ அஞ்சாதே' என்று கூறி அவ் வீடணன் நின்றவிடத்தில் வந்து நின்றான்.

கு:- பிறிது என்பது, எதுகை நோக்கிப் 'பிறிந்து' என விரித்தல் விகாரம் பெற்று நின்றது. இனி, 'பிறிந்து' என்னும் செய்து என எச்சத்தைச் செயவென்னெச்சமாக்கி இவ் வேலினால் வரும் தீங்கி னின்றும் பிரிய—தப்ப எனப் பொருள் கூறலும் ஆம். பொருள் என்றது, இங்கு உபாயத்தை. பெரியோன் என்றது, பெருமையுடைய இலக்குவனை. இடை அணைந்தான் என்றது வீடணனிருந்த இடத்திற் கும் வேல்வரும் வழிக்கும் இடையில் நின்றான் என்றவாறு. அஞ்சிய வீடணனை அஞ்சல் எனக் கூறிய இலக்குவன் செய்யத்தக்கதும் அதுவே யாதல் நினையலாம். (27)

## இலக்குவன் விட்ட அம்புகளால் அவ்வேல் சிதையாது வருதல்

**9698** எய்த வாளியு மேவின
படைக்கலம் யாவும்
செய்த மாதவத் தொருவனைச்
சிறுதொழிற் றீயோன்
வய்த வையினி லொழிந்தன
வீடணன் மாண்டான்
உய்த லில்லையென் றும்பருந்
தம்மன முலைந்தார்.

எய்த வாளியும் ஏவின
படைக்கலம் யாவும்,
செய்த மாதவத்து ஒருவனைச்
சிறுதொழில் தீயோன்
வய்த வையினில் ஒழிந்தன;
'வீடணன் மாண்டான்;
உய்தல் இல்லை' என்று உம்பரும்
தம் மனம் உலைந்தார்.

பொ:- (இலக்குவன் அவ் வேலினை முறிக்க) எய்த அம்புகளும் ஏவிய படைக் கலங்களும் எல்லாம், செய்த பெருந்தவம் உடைய ஒருவனைச் சிறு தொழில் செய்யும் தீயோன் ஒருவன் சபித்த சாபம் பலிக்காததுபோலப் பயன் அளிக்காது போயின; தேவர்களும் வீடணன் மாண்டான்; இனி உய்வு இல்லை'' என்று தம்மனம் அழிந்தார்கள்.

கு:- மயனால் கொடுக்கப் பட்டதும் அயனால் படைக்கப்பட்டதும் ஆகிய இராவணன் வேலினை ஒன்றும் செய்ய இயலாதுபோன இலக்குவன் படைக் கலங்களின் இயல்பை விளக்க "செய்த மாதவத்து ஒருவனைச் சிறுதொழில் தீயோன் வய்த வையினில் ஒழிந்தன'' என உவமை கூறினார்.

முனிவர் அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அச்சொல் அவ்வப் பயன்களைத் தருதல் போலச் சிறுதொழில் தீயோன் சொல் பயன் தாராது: அதற்கு மேலும், மாதவத் தொருவனைச் சிறுதொழில் தீயோன் வெகுண்டு கூறிய வசைச் சொல் அப் பெருந்தவத்தொரு

வற்கு எந்தத் தீங்கும் விளைக்காது; அதுபோல இராவணன் விட்ட தெய்வத் தன்மை வாய்ந்த வேலினை, இலக்குவன் விட்ட படைக்கலங் கள் ஏதும் செய்ய இயலாமல் போயின என்றவாறு. மாதவத் தொருவன் போன்றது இராவணனது வேல்; சிறுதொழில் தீயோன் வைத வைவு போன்றவை இலக்குவன் விட்ட படைக் கலங்கள். உலத்தல்—அழிதல். "வீடணன் மாண்டான்" என்றது துணிவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாயது.

'வய்த வைவின் மராமரம் ஏழ்துளை யெய்த எய்த வற்கெய்திய மாக்கதை' (தற்சிறப்புப் பாயிரம்-5) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். உம்பர் மனம் அழிதற்குக் காரணம் அறத்திற்குத் துணையா யிருந்த வீடணன்மேல் வைத்த அன்பேயாம். (28)

## இலக்குவன் அவ் வேலினைத் தம் மார்பில் ஏற்க எதிர்தல்

**9699** தோற்பெ னென்னினும் புகழ்நிற்குந்
தருமமுந் தொடரும்
ஆர்ப்பர் நல்லவ ரடைக்கலம்
புகுந்தவ னழியப்
பார்ப்ப தென்னெடும் பழிவந்து
தொடர்வதன் முன்னம்
ஏற்பெ னென்றனி மார்பினென்
றிலக்குவ னெதிர்ந்தான்.

'தோற்பென் என்னினும், புகழ் நிற்கும்;
தருமமும் தொடரும்;
ஆர்ப்பர் நல்லவர்; அடைக்கலம்
புகுந்தவன் அழியப்
பார்ப்பது என்? நெடும்பழி வந்து
தொடர்வதன் முன்னம்,
ஏற்பென், என் தனி மார்பின்' என்று,
இலக்குவன் எதிர்ந்தான்.

பொ:- "வீடணனைக் காப்பதற்காக இவ் வேலை ஏற்று) என் உயிர் தோற்பேனே ஆயினும், (அடைக்கலம் காத்த) புகழ் நிற்கும்: தரும மும் என்னுயிரைத் தொடர்ந்து வரும்; நல்லவர்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரம் செய்வார்கள்; அடைக்கலம் புகுந்த வீடணன் இறக்கப்

பார்த்துக் கொண்டிருப்பது எதற்கு? (சிபியின் மரபில் வந்த இலக்குவன் அடைக்கலமாக வந்த வீடணனைக் காவாது விட்டான் என்ற) நெடிய பழிவந்து தொடர்வதற்கு முன்னே, என் ஒப்பற்ற மார்பில் (இவ் வேலை) ஏற்பேன்'! என்று இலக்குவன் (தன் மார்பைக் காட்டிக் கொண்டு) எதிர் நின்றான்.

கு:- அடைக்கலம் அடைந்த வீடணன் உயிரைக் காத்தற்காக இலக்குவன் தன்னுயிரை விடுவானாயின் அச் செயல் பெரும் புகழ்க்குக் காரணமாதலோடு அறப் பயனையும் தரும்; நல்லோர் அவ்வறச் செயலைப் பாராட்டுவர் என்பது இலக்குவன் எண்ணம். அவன் உயிர் காக்கத் தன்னுயிர் விடுவதால் வரும் புகழைவிட, அது செய்யாது இலக்குவன் தன்னுயிர் காத்து வாளா இருப்பின், வரும் பழி பெரிது, என்ற கருத்தால் 'நெடும்பழி வந்து தொடர்வதன் முன்னம்' என்றான். இங்கு 'ஆர்ப்பர் நல்லவர்' என்று இலக்குவன் நினைந்ததற்கேற்ப, இலக்குவன் வேலேற்று மாண்டு மருத்துமலையால் உயிர்பெற்ற பின் இராமன், 'புறவொன்றின் பொருட்டா யாக்கை புண்ணுற வரித்த புத்தேள் அறவனும் ஐய நின்னை நிகர்க்கிலன்'' (49) என்று பாராட்டுதல் காணலாம். (29)

வேலை ஏற்க வீடணன், அங்கதன், சுக்கிரீவன், அனுமன் முந்துதல்

9700 இலக்கு வற்குமுன் வீடணன்
புகுமிரு வரையும்
விலக்கி யங்கதன் மேற்செலு
மவனையும் விலக்கிக்
கலக்கும் வானரக் காவல
னனுமன்முன் கடுகும்
அலக்க ணன்னதை யின்னதென்
றுரைசெய லாமோ.

இலக்குவற்கு முன் வீடணன்
புகும்; இருவரையும்
விலக்கி, அங்கதன் மேற்செலும்;
அவனையும் விலக்கி,

கலக்கும் வானரக் காவலன்;
அனுமன்முன் கடுகும்;
அலக்கண் அன்னதை இன்னது என்று
உரைசெயல் ஆமோ?

பொ:- (அவ் வேலினை ஏற்க) இலக்குவனுக்கு முன் வீடணன் புகுவான்; அவ் விருவரையும் விலக்கிவிட்டு அங்கதன் முன் புகுவான்; அவ் வங்கதனையும் விலக்கிவிட்டு வானரர்க்கு மன்னனாகிய சுக்கிரீவன் முந்துவான்; அவனுக்கும் முன்பு அனுமன் விரைந்து செல்வான்; அந்தத் துன்பத்தை இன்னது என்று சொல்லுதல் கூடுமோ?

கு:- வானரக் காவலன் கலக்கும் என்க. கடுகுதல்—விரைதல் அலக்கண்—துன்பம். வேலினை ஏற்றுக்கொள்ள ஒருவர்க்கொருவர் முந்தும் துன்பக் காட்சி சொல்லுந் தரத்தது அன்று என்பார், 'அலக்கண் அன்னதை இன்னது என்று உரை செயலாமோ?' என்று கூறினர். (30)

9701 முன்னின் றாரெலாம் பின்னுறக்
காலினு முடுகி
நின்மின் யானிது விலக்குவெ
னென்றுரை நேரா
மின்னும் வேலினை விண்ணவர்
கண்புடைத் திரங்கப்
பொன்னின் மார்பிடை யேற்றனன்
முதுகிடைப் போக.

முன்நின்றார் எலாம் பின்உற,
காலினும் முடுகி,
'நின்மின்; யான் இது விலக்குவென்'
என்று உரை நேரா,
மின்னும் வேலினை, விண்ணவர்
கண்புடைத்து இரங்க,
பொன்னின் மார்பிடை ஏற்றனன்,
முதுகிடைப் போக.

பொ:- முன்னே நின்றவர்கள் எல்லாம் பின்னே நிற்கக் காற்றினும் விரைந்து சென்று, (நீங்கள் எல்லாம்) நில்லுங்கள்! இதனை

யானே விலக்குவேன்' என்று சொல்லிக்கொண்டே மின்னுகின்ற வேலினைத் தேவர்கள் எல்லாம் கண்மேல் மோதிக்கொண்டு இரங்கா நிற்கப், பொன்னின் நிறமுடைய மார்பில் பட்டு, முதுகிடையே ஊடுருவிப் போகுமாறு ஏற்றான் இலக்குவன்.

கு:- கால்—காற்று. காற்றின் வேகத்தினும் மிக்க வேகமுடையனாய் இலக்குவன் வீடணன் முதலியோர்க்கு முன் சென்று நின்று அவ்வேலினை முதுகிடைப் போகுமாறு மார்பிடை ஏற்றனன் என இயையும். இராவணன் வேலினால் இலக்குவன் இறக்கும் துன்பக் காட்சியைக் காண நேர்ந்ததே என்று விண்ணவர் கண்கள் மேல் மோதிக்கொண்டு அழுதார்கள் என்க. (31)

### வீடணன் சினந்தெழுந்து இராவணனது தேர்க் குதிரைகளையும் பாகனையும் தாக்குதல்

**9702** எங்கு நீங்குதி நீயென
வீடண னெழுந்தான்
சிங்க வேறன்ன சீற்றத்தா
னிராவணன் றேரில்
பொங்கு பாய்பரி சாரதி
யொடும்படப் புடைத்தான்
சங்க வானவர் தலையெடுத்
திடநெடுந் தண்டால்.

'எங்கு நீங்குதி நீ?' என
வீடணன் எழுந்தான்,
சிங்க ஏறு அன்ன சீற்றத்தன்
இராவணன் தேரில்
பொங்கு பாய்பரி சாரதி
யொடும் படப் புடைத்தான்
சங்க வானவர் தலை
எடுத்திட, நெடுந் தண்டால்.

பொ:- வீடணன் சிங்க ஏறுபோன்ற சீற்றத்தையுடையவனாய் எழுந்து, 'நீ எங்குப் போகின்றாய்?' என்று வினவிக்கொண்டே, இராவணனது தேரில் பூட்டியுள்ள, கிளர்ந்து பாய்ந்து செல்கின்ற,

குதிரைகளோடு, சாரதியும் இறந்து படுமாறு, கூட்டமான தேவர்கள் முன் துன்பத்தால் குனிந்த தலைகளைத் தூக்குமாறு, நெடிய தண்டினால் அடித்தான்.

கு:- வீடணன் சீற்றத்தனாய் எழுந்து பாய்பரி சாரதியொடும்பட நெடுந்தண்டால் புடைத்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. சங்க வானவர்—கூட்டமான தேவர்கள். முன் இலக்குவன் மார்பில் வேல் பட்டபோது துன்பத்தால் குனிந்த தலைகளைத் தூக்கித் தேவர்கள் சிறிது மகிழுமாறு வீடணன் இராவணன் குதிரைகளையும் சாரதியை யும் தண்டு கொண்டு அடித்தான் என்க. இலக்குவனை வேலால் வீழ்த்தி விட்டு விரைந்துபோகத் தேரைச் செலுத்தினன் இராவணன் ஆகலின், 'எங்கு நீங்குதி' என வீடணன் வினவலானான். (32)

### இராவணன் விசும்பில் எழுந்து இலங்கைக்குப் போதல்

**9703** சேய்வி சும்பினி னிமிர்ந்துநின்
றிராவணன் சீறிப்
பாய்க டுங்கணை பத்தவ
னுடல்புகப் பாய்ச்சி
ஆயி ரஞ்சர மனுமன்ற
னுடலிடை யழுத்திப்
போயி னன்செரு முடிந்ததென்
றிலங்கையூர் புகுவான்.

சேய்விசும்பினில் நிமிர்ந்துநின்று,
இராவணன் சீறி,
பாய் கடுங்கணை பத்து அவன்
உடல்புகப் பாய்ச்சி,
ஆயிரம் சரம் அனுமன்தன்
உடலினில் அழுத்தி,
போயினன், 'செருமுடிந்தது'
என்று இலங்கை ஊர் புகுவான்.

பொ:- (தேரை விடுத்து) இராவணன் சேய்மையில் உள்ள விண்ணில் நிமிர்ந்து சென்று நின்று கோபித்து அவ்வீடணன் உடம்பில் பாய்தற்குரிய பத்துக் கடுமையான அம்புகளை அழுத்திவிட்டு அனும

னுடைய உடம்பில் ஆயிரம் அம்புகளைப் பாய்ச்சிவிட்டு, 'போர் முடிந்தது' என்று, இலங்கையில் புகுவதற்குப் போனான்.

கு:- குதிரைகளையும் தேர்ப்பாகனையும் வீடணன் தன் தண்டால் தாக்கி யழித்துவிட்டானாகலின் தேரில் நின்ற இராவணன் விண்ணில் நிமிர்ந்து சென்று நின்று அவ் வீடணன் மேலும் அனுமன் மேலும் அம்புகளை எய்துவிட்டு இலங்கைக்குத் திரும்பினான் என்க. இலக்குவன் இறந்துவிட்டமையால் இனிப் போர் செய்ய யாரும் துணியார் என்ற துணிவால் இங்ஙனம் இராவணன் எண்ணலானான். (33)

### வீடணன் இராவணனைத் தொடர்ந்து விண்ணில் எழுதல்

**9704** தேடிச் சேர்ந்தவென் பொருட்டினு
லுலகுடைச் செல்வன்
வாடிப் போயின னீயினி
வஞ்சனை மதியால்
ஓடிப் போகுவ தெங்கடா
வுன்னொடு முடனே
வீடிப் போவெனென் றரக்கன்மேல்
வீடணன் வெகுண்டான்.

'தேடிச் சேர்ந்த என் பொருட்டினால்,
உலகுடைச் செல்வன்
வாடிப் போயினன்; நீ இனி
வஞ்சனை மதியால்
ஓடிப் போகுவது எங்கு? அடா!
உன்னொடும் உடனே
வீடிப் போவென்' என்று
அரக்கன்மேல் வெகுண்டான்.

பொ:- 'அடைக்கலமாகத் தேடி வந்தடைந்த என்னைக் காப்பாற்றும் பொருட்டால் உலக முழுதுடைய செல்வன் இலக்குவன் நின் வேலையேற்று வாடிப் போயினான். நீ இனி வஞ்சனை உள்ளத்தால் ஓடிப் போவது எங்கே அடா! உன்னோடும் போர்செய்து உன்னைக் கொன்று யானும் இறந்துபடுவேன்' என்று இராவணன் மேற்செல விண்ணில் எழுந்தான் வீடணன்.

கு:- உலகுடைச் செல்வன் என்றது உலக முழுதாளும் தகுதியும் பிறப்புரிமையும் உடைய இலக்குவனை. தன்னுயிரைக் காக்கும் பொருட்டாகவே இலக்குவன் தன் இன்னுயிரை யீந்தான் என்பதை வீடணன் அறிந்து, அந்த அன்பு நிலை தோன்ற இலக்குவனைக் கொன்ற இராவணனைக் கொன்று, தானும் இறந்துபட எண்ணியே இங்ஙனம் கூறினான். 'உன்னோடு முடனே வீடிப் போவென்' என்றமையால் இராவணனுக்கு வீடணன் வலிமையில் குறைந்தவனல்லன் என்பது புலப்படுத்தியவாறாயிற்று. இலக்குவன் இராவணன் வேலால் இறந்து போனதாகவே எண்ணினானாயினும் அச் சொல்லால் கூற மாட்டா தவனாய் 'வாடிப்போயினன்' என்ற சொல்லால் அதனைக் கூறினான். போர்முடிந்தது என்ற கருத்தால் இராவணன் போனான் ஆயினும் அது, வீடணனுக்கு அஞ்சி ஓடிப்போவதாகவே பட்டது ஆகலின் அவ்வாறே கூறலானான். (34)

வீடணனைக் கொன்று என்ன பயன் என்று
இராவணன் திரும்பிப் பாராது இலங்கை புகுதல்

9705 வென்றி யென்வய மானது
வீடணப் பசுவைக்
கொன்றி னிப்பய னில்லையென்
றிராவணன் கொண்டான்
நின்றி லன்னென்று நோக்கிலன்
முனிவெலா நீத்தான்
பொன்றி ணிந்தன மதிலுடை
யிலங்கையூர் புகுந்தான்.

' வென்றி என்வயம் ஆனது;
வீடணப் பசுவைக்
கொன்று, இனிப் பயன் இல்லை' என்று
இராவணன் கொண்டான்;
நின்றிலன், ஒன்றும் நோக்கிலன்,
முனிவு எலாம் நீத்தான்;
பொன் திணிந்தன மதிலுடை
இலங்கை ஊர் புகுந்தான்.

பொ:- (இலக்குவனைக் கொன்றதால்) வெற்றி என் வடம் ஆயது; இனி பசுப் போன்ற வீடணனைக் கொன்று அடையப் போகும் பயன்

ஏதும் இல்லை; என்று இராவணன் மனத்திற் கருதிக் கொண்டு அங்கு நிற்கவும் இல்லை; அவனைச் சிறிது திரும்பிப் பார்க்கவும் இல்லை; அவன் மேல் முன் கொண்ட கோபம் முழுவதையும் விட்டவனாய்ப் பொன்னால் திண்ணிதாகச் செய்யப் பட்டாற் போன்ற அழகிய மதிலையுடைய இலங்கை நகரில் புகுந்தான்.

கு:- விரும்பிய வெற்றி பெற்று விட்ட பின்பு தனக்கு நிகரில்லாத எளிய வீடணனைக் கொல்வது பயனுடைய செயலன்று என்ற கருத்தால் அவனைத் திரும்பிப் பாராது இராவணன் விரைந்து இலங்கை நகர்க்குள் போயினான் என்றவாறு. வீடணப் பசு என்றது வீடணனது வீரமின்மையைப் புலப்படுத்தக் கூறிய உருவகம். பசு கொல்லத் தகாதவாறு போல, வீடணனும் கொல்லத் தக்கவனல்லன் என்றவாறு. முன் வீடணன் மேல் சினந்து விட்ட வேல் இலக்குவனைக் கொன்றதால் மிக்க மன நிறைவுடையவனாய்ச் சினம் ஆறினான் என்றவாறு. (35)

## வீடணன் அரற்றி அழுதல்

**9706** அரக்க னேகினன் வீடணன்
வாய்திறந் தரற்றி
இரக்கந் தானென விலக்குவ
னிணையடித் தலத்தில்
கரக்க லாகலாக் காதலின்
வீழ்ந்தனன் கலுழ்ந்தான்
குரக்கு வெள்ளமுந் தலைவருந்
துயரிடைக் குளித்தார்.

அரக்கன் ஏகினான்; வீடணன்
வாய்திறந்து அரற்றி
இரக்கம் தான் என இலக்குவன்
இணைஅடித் தலத்தில்,
கரக்கல் ஆகலாக் காதலின்
வீழ்ந்தனன் கலுழ்ந்தான்;
குரக்கு வெள்ளமும் தலைவரும்
துயரிடைக் குளித்தார்.

பொ:- இராவணன் இவ்வாறு சென்று விட்டான் ஆக, வீடணன், 'இரக்கம் என்னும் பண்பின் உருவம் இவன்தான்' எனக் கண்டோர்

கருதுமாறு, வாய் திறந்து பல சொல்லி அரற்றி, இலக்குவனது இரு திருவடிகளில் வீழ்ந்து, அடக்க முடியாத அன்பினுல் கண்ணீர் பெருக்கி அழுதான்; குரங்குச் சேனையும் அதன் தலைவர்களும் துயரத்தில் ஆழ்ந் தார்கள்.

கு:- ஏகினன் ஆக என ஒரு சொல் வருவிக்க. தன் பொருட்டு உயிர் கொடுத்த இலக்குவனை நினைந்து வீடணன் அரற்றிய இரங்கலைக் கண்டவர்கள் இரக்கத்தின் உருவமே வீடணன்தான் என்று கூறுவார் கள் என்றவாறு. மன உறுதி யுடையோர் தமக்கு உண்டாகும் அழு கையையும் கண்ணீரையும் அடக்குதலும் உண்டு; வீடணன் அவ்வாறு அடக்க இயலாமல் கண்ணீர் விட்டு அழுதான் என்றவாறு. "அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ் ஆர்வலர் புன்கணீர் புசல் தரும்" (திருக் குறள்—71) என்பது இங்கு நினைக்கத் தகும். முன்பு (மருத்துமலைப்-4) இளங்கிளை சாய்ந்த இராமனை எய்திக் கண்ட வீடணன், கண்ணீர் விட்டுக் கலங்கிய நிலையைக் கண்டு அமரரும் அன்பென்பது ஒன்றின் தன்மையை அன்றுதான் முழுவதும் அறிந்ததாகக் கூறியுள்ளதும் இங்கு ஒப்பு நோக்கத் தகும். (36)

### வீடணன் இறக்கத் துணியச்
### சாம்பன் நிறுத்தி ஒன்று கூறுதல்

**9707** பொன்ன ரும்புறு தார்ப்புயப்
பொருப்பினுன் பொன்ற
என்னி ருந்துநா னிறப்பெனிக்
கணத்தெனை யாளும்
மன்னி ருந்தினி வாழ்கில
னென்றனன் மறுக
நின்னி லென்றனன் சாம்பவ
னுரையொன்று நிகழ்த்தும்.

'பொன், அரும்புறு தார்ப்புயப்
பொருப்பினுன் பொன்ற
என் இருந்து நான்? இறப்பென்,
இக்கணத்து; எனை ஆளும்
மன் இருந்து இனி வாழ்கிலன்'
என்றனன் மறுக,
'நில். நில்' என்றனன், சாம்பவன்
உரை ஒன்று நிகழ்த்தும்.

பொ:- 'அழகு பொருந்திய அரும்பு கொண்டு தொடுக்கப் பெற்ற மாலையை யணிந்த தோளாகிய மலையினை யுடைய இலக்குவன் இறக்க, நான் உயிரோடு இருந்து என்ன பயன்? இக் கணத்தில் இறப்பேன்; எனை அடைக்கலமாக ஆண்டு கொண்டருளும் இராமன் (இலக்குவனைப் பிரிந்து) இனி வாழ மாட்டான்' என்று கூறி மனம் கலங்கா நிற்க, சாம்பவன் 'நில், நில்' என்று கூறிக் கொண்டே வந்து சொல் ஒன்று சொல்வான் ஆனான்.

கு:- 'மன் இருந்தினி வாழ்கிலன்' என்றது, இராமனது அன்பினை யறிந்து கூறியது. 'வள்ளலோ தம்பி மாய வாழ்கிலன்' (மருத்து மலைப்—7) என்று இவனே முன்பு கூறியுள்ளதும் நினையலாம். (37)

அனுமன் மருத்துமலை கொணர
இலக்குவன் எழுவான் எனல்

**9708** அனும னிற்கநா மாருயிர்க்
கிரங்குத லறிவோ
நினையு மத்துணை மாத்திரத்
துலகெலா நிமிர்வான்
வினையி னன்மருந் தளிக்கின்ரு
னுயிர்க்கின்ருன் வீரன்
தினையு மல்லலுற் றழுங்கன்மி
னென்றிடர் தீர்த்தான்.

'அனுமன் நிற்க, நாம் ஆர் உயிர்க்கு
இரங்குதல் அறிவோ?
நினையும் அத்துணை மாத்திரத்து,
உலகு எலாம் நிமிர்வான்,
வினையின் நல்மருந்து அளிக்கின்ருன்;
உயிர்க்கின்ருன், வீரன்;
தினையும் அல்லல் உற்று அழுங்கன்மின்'
என்று இடர் தீர்த்தான்.

பொ:- ("நம் துயர் துடைக்க) அனுமன் நம் பக்கலில் நிற்கும் போது, நாம் அரிய உயிர் நீங்கியதற்கு வருந்துதல் அறிவுடைமை ஆகுமோ? அனுமன் நினைக்கும் அளவில் உலகெலாம் நிமிர்கின்ற பேருருவுடையனாய் நாம் செய்த புண்ணியம் போன்ற நல்ல மருந்

தினைக் கொணர்ந்து அளிக்கின்றான்; அளித்த அளவில் இலக்குவன் உயிர் பெற்றெழுகின்றான்; தினையளவும் துன்புற்று வருந்தாதீர்கள்'' என்று கூறிச் சாம்பவன் வீடணன் முதலியோரின் துன்பத்தைத் தீர்த்தான்.

கு:- ஆருயிர்க்கு இரங்குதல் என்றது, பிணிக்கு மருந்து என்பது போல வந்தது. இலக்குவன் ஆருயிர் நீங்கியதற்கு இரங்குதல் அறிவுடைமையாகாது என்றவாறு. பிரமாத்திரத்தில் முன்பு இலக்குவன் முதலியோர் இறந்த போது அனுமன் மருந்து மலை கொணர்ந்து உயிர்ப்பித்ததை அறிந்திருந்தும், அவனைக் கொண்டு மீண்டும் அவ்வாறு கொணரச் செய்து உய்வித்தலை விடுத்து, இரங்குதல் கூடாது என்றவாறு. காலச் சிறுமை கூறுவான் 'நினையும் அத்துணை மாத்திரத்து' என்றான். விரைந்து செல்லுதற் கேற்ற பேருருக் கொண்டு சென்று அனுமன் மருந்தைக் கொணர்ந்து அளித்த அளவில் இலக்குவன் உயிர் பெற்று எழுவான் என்பான், 'உலகெலா நிமிர்வான் நன் மருந்து அளிக்கின்றான், உயிர்க்கின்றான் வீரன்' என்றான். அனுமன் மருந்து கொணர்ந் தளித்தலும் இலக்குவன் உயிர்த்தலும் கடிதினும் எளிதினும் நிகழக் கூடியவை என்றவாறு. வினை யென்றது நல்வினையை. நாம் செய்த நல்வினை போன்ற நன்மருந்து என்க. தினை என்பது சிறுமைக்குக் கூறும் ஓரளவு; ஒருவகைக் கூலம். அளிக்கின்றான் உயிர்க்கின்றான் என்பன தெளிவு பற்றி எதிர் காலம் நிகழ்கால மாயின; வழுவமைதி. (38)

### சாம்பன் அனுமனுக்கு உணர்த்த அனுமன் விரைதல்

**9709** மருத்தின் காதலன் மார்பிடை
யம்பெலாம் வாங்கி
இருத்தி யோகடி தேகலை
யிளவலை யிங்ஙன்
வருத்தங் காணுமோ மன்னவ
னென்றனன் சாம்பன்
கருத்தை யுன்னியம் மாருதி
யுலகெலாங் கடந்தான்.

மருத்தின் காதலன் மார்பிடை
அம்பு எலாம் வாங்கி,
'இருத்தியோ, கடிது ஏகலை?
இளவலை இங்ஙன்

வருத்தம் காணுமோ மன்னவன்?'
என்றனன் சாம்பன்;
கருத்தை உன்னி, அம்மாருதி
உலகு எலாம் கடந்தான்

பொ:- காற்றின் புதல்வனாகிய அனுமனுடைய மார்பில் தைத்திருந்த அம்புகள் எல்லாவற்றையும் வாங்கிவிட்டு, இளவலாகிய இலக்குவனை இவ்வாறான வருத்த நிலையில் இராமன் காணத்தக்கவனோ? நீ (மருந்து கொணர) விரைந்து செல்லாமல் (நின் துயர் நோக்கி) இருப்பாயோ? என்று சாம்பன் கூறினான்; அவன் கருத்தை அறிந்து அனுமான் (பெரிய உருவம் தாங்கி) உலகெலாம் கடந்து நின்றான்.

கு:-- முன்பு இராவணன் விட்ட ஆயிரங் கணைகளும் அனுமன் மார்பில் தைக்கச் சாய்ந்து கிடந்தான் ஆகலின், சாம்பன் அவ்வம்பு கணையெல்லாம் வாங்கி அவன் சோர்வு தீர்ந்துப் பின் தன் கருத்தைத் தெரிவித்தான் என்க. ஓகாரங்கள் இரண்டும் எதிர் மறைப் பொருளில் வந்த வினா ஓகாரங்கள். இலக்குவன் நிலை கண்டும் மருந்துக்கு ஏகாது இருக்கமாட்டாய், எனவும், மன்னன் இளவலை இங்ஙன் வருத்தங் காணான்; உயிர்விடத்தக்கவன் எனவும் கூறியவாறு. சாம்பன் என்பதை இடைநிலை விளக்காய்; பின்னும் இயைத்துச் சாம்பன் கருத்தையுன்னி என்க. தன் பேருருவால் அனுமன் உலகெலாம் கடந்து நின்றான் என்க.

### மாருதி மருந்து மலை கொணர்ந்தான்

9710 ★

உத்தர திசைமே லோடி
யுலகெலாம் கடக்கப் பாய்ந்து
மெய்த்தகு மருந்து தன்னை
வெற்பொடுங் கொணர்ந்தான்
மொய்த்தலில் குறிகெ டாமே
பொதுவற நோக்கிப் பொன்போல்
வைத்தது வாங்கிக் கொண்டு
வருதலில் வருத்த முண்டோ.

உத்தர திசைமேல் ஓடி
உலகுஎலாம் கடக்கப் பாய்ந்து,
மெய்த்தகு மருந்து தன்னை,
வெற்பொடும் கொணர்ந்தான், வீரன்;

பொய்த்தல் இல் குறிகெடாமே
பொதுஅற நோக்கி, பொன்போல்
வைத்தது வாங்கிக் கொண்டு
வருதலில் வருத்தம் உண்டோ?

பொ:- வடதிசைமேல் ஓடிச் சென்று உலகின் பல பகுதிகளையும் கடக்குமாறு தாவிச்சென்று, மெய்ம்மையும் தகுதியும் பொருந்திய மருந்தினை மலையோடும் கொணர்ந்தான் அனுமன்; பொய்த்தல் இல்லாத அடையாளங்கள் கெடாமல் சிறப்பாகப் பார்த்துப் பொன்போல் முன் வைத்ததை எடுத்துக் கொண்டு வருவதில் வருத்தத்திற்கு இடமுண்டோ? (இல்லையன்றே?)

கு:- பிரமாத்திரத்தால் யாவரும் இறந்த போது, சாம்பன் சொல்வழிச் சென்று அனுமன் இம்மருந்துமலையைக் கொணர்ந்து எல்லோரும் உயிர்பெற்ற பின் மீண்டும் கொண்டுபோய் அடையாளம் கெடாமல் வைத்தான்; முன்பு தான் பொன்போல் வைத்துவிட்டு வந்த அம்மலையை மறுபடியும் கொண்டு வருவதில் வருத்தம் இல்லையன்றே என்பது வேற்றுப் பொருள் வைப்பணியாகக் கூறியது. பொது அறநோக்குதல் என்றது. சிறப்பு முறையால் நோக்குதலை. சிறிதும் சிதையாமல் அருமை யறிந்து வைத்தமை புலப்படுத்த 'பொன்போல் வைத்தது' என்றார். வருத்தம்—முயற்சி. முயலாது கொணர்ந்தான் ஆகவின், விரைந்து வரல் எளிதாயிற்று என்றவாறு. (40)

## இலக்குவன் எழுதல்

**9711** தந்தநன் மருந்து தன்னைத்
தாக்குதன் முன்னம் வேகம்
வந்தது மாண்டார்க் கெல்லா
முயிர் தரும் வலத்த தென்றால்
நொந்தவர் நோவு தீர்க்கச்
சிறிதன்றே நொடியின் முன்னே
இந்திர னுலக மார்க்க
வெழுந்தன னிளைய வீரன்.

தந்தான், மருந்து தன்னை;
தாக்குதல் முன்னம் வேகம்
வந்தது, மாண்டாரீக்கு எல்லாம்
உயிர் தரும் வலத்தது என்றால்.

நொந்தவர் நோவு தீர்க்கச்
சிறிதுஅன்றோ? நொடியின் முன்னே,
இந்திரன் உலகம் ஆர்க்க,
எழுந்தனன் இளைய வீரன்.

பொ:- அனுமன் தந்த நல்ல மருந்து தன்னுடம்பைத் தொடு தற்கு முன்னே அம்மருந்தின் வாசனை வந்தது; நொடிப் பொழுதிற்கு முன்னே இளைய வீரனாகியஇலக்குவன், இந்திரன் உலகத்தவர் எல்லாம் ஆரவாரிக்க, உயிர்பெற்று எழுந்தான்; இறந்தவர்கட்கெல்லாம் உயிரைத்தரும் ஆற்றலையுடையது அம்மருந்து என்றால், அது வேல் தாக்குதலால் நொந்தவரின் நோயைத் தீர்ப்பது சிறிய செயல் அன்றோ?

கு:- தாக்குதல்—உடம்பில் படுதல். அனுமன் கொணர்ந்த மருந்து உடம்பில் படுதற்கு முன்னமே அம்மருந்தின் வாசனை பட்டவுடனேயே இலக்குவன் உயிர் பெற்று எழுந்தான் என்றவாறு. வேகம்—வாசனை. வேகம் வந்தது; எழுந்தனன் இளைய வீரன் என இயையும். இந்திரசித்தினை வென்று இந்திரனுக்கு வாழ்வளித்த இலக்குவன் எழுந்தமை கண்டு மகிழ்ச்சியினால் இந்திரன் உலகத்தார் ஆரவாரித்தனர் என்க. மாண்டார்க் கெல்லாம் உயிர் தரும் வலத்தது என்றால், நொந்தவர் நோவு தீர்க்கச் சிறிதன்றோ? என்பது வேற்றுப் பொருள் வைப்பணி. இதனால், இலக்குவன் இராவணனது வேல் பட்டு மாண்டுபோய் விடவில்லை; அது பட்ட நோயினால் நொந்து உயிர்ப் பற்றிருந்தான் என்பதும், அம்மருந்தின் வாசனை பட்டவுடன் அந்நோவு தீர்ந்து எழுந்தான் என்பதும் புலப்படுத்தியவாறு. மாண்டவர்க்கு உயிர் தரும் மருந்து, நொந்தவர்க்கு நோய் தீர்ப்பது பெரிய செயலோ? சிறிய செயலே என்றவாறு. சில சுவடிகளில் இச் செய்யுளோடு இப்படலம் முடிகின்றது. (41)

## எழுந்த இலக்குவன் அனுமனைத் தழுவி வீடணன் நலம் அறிந்து மகிழ்தல்

9712 எழுந்துநின் றனுமன் றன்னை
யிருகையாற் றழுவி யெந்தாய்
விழுந்தில னன்றோ மற்றவ்
வீடண னென்ன விம்மித்

தொழுந் துணை யவனை நோக்கித்.
துணுக்கமுந் துயரு நீங்கிக்
கொழுந்தியு மீண்டாள் பட்டா
னரக்கனென் றுவகை கொண்டான்.

எழுந்து நின்று அனுமன் தன்னை
இருகையால் தழுவி, எந்தாய்!
விழுந்திலன் அன்றோ மற்று அவ்
வீடணன்!' என்ன, விம்மித்
தொழுந் துணையவனை நோக்கி,
துணுக்கமும், துயரும் நீங்கி,
'கொழுந்தியும் மீண்டாள்; பட்டான்
அரக்கன்' என்று உவகை கொண்டான்.

பொ:- இலக்குவன் எழுந்து நின்று, (மருந்து கொணர்ந்தளித்த) அனுமனை இரு கைகளாலும் தழுவிக்கொண்டு, எந்தையே! அந்த வீடணன் இறந்து பட வில்லை அன்றோ? என்று வினவ (அது கேட்டு) தேம்பிக் கொண்டு தன்னைத் தொழுகின்ற வீடணனாகிய துணைவனைப் பார்த்து, மனத்திலிருந்த நடுக்கமும் துன்பமும் தீர்ந்து, 'இனி, அரக்கனாகிய இராவணன் மாண்டான்; கொழுந்தியாகிய சீதையும் மீண்டாள்' என்று மகிழ்ச்சி கொண்டான்.

கு:- இராவணனது வேலால் இறந்த தனக்கு மருந்துமலையில் உயிரளித்தவன் அனுமன் என்ற எண்ணத்தால் இலக்குவன் அனுமனை 'எந்தாய்' என்று விளித்தான். "மன்னிற் றேன்றிலோ முன்ன மாண்டுளோம், நின்னிற் றேன்றிலோ நெறியிற் றேன்றினாய்" (மருத்து மலைப்—111) என முன் இராமனே அனுமனைப் புகழ்ந்திருத்தலும் நினையலாம். இலக்குவன் அனுமனை நோக்கி வினவிய வினாவிற்கு அனுமன் விடைகூற வேண்டாவாறு, வீடணனே நேரில் வந்து தொழுது, 'தான் வீழவில்லை' என்பதைக் காட்டினான்; அவனை நோக்கினவுடன் இலக்குவன், முன்னை நடுக்கமும் துயரமும் நீங்கி மகிழ்ச்சியுற்றான் என்க. அடைக்கலம் புகுந்தவனைக் காப்பாற்றி விட்டோம் என்பதை அறிந்தவுடன் முன்னைய துணுக்கமும் துயரமும் தீர்ந்தன. வீடணனும் வீழ்ந்திலன், தானும் உய்ந்து விட்டான் ஆதலின் இனி இராவணன் மாளுதலும் சீதை சிறையினின்று மீளுதலும் உறுதி என்ற துணிவு பற்றி 'கொழுந்தியும் மீண்டாள்; பட்டான் அரக்கன்' என இறந்த காலத்தாற் கூறினான். இத்துணிவினால் உவகை மேலிட்டது இலக்குவனுக்கு. கொழுந்தி என்பது உடன் பிறந்தான் மனைவியைக்

குறிக்கும் முறைப்பெயர். அரக்கன் பட்ட பின்னரே கொழுந்தி மீள வேண்டியிருப்பினும் கொழுந்தி மீள்வதில் உள்ள பற்றினால் அதனை முற்கூறினான். (42)

## வானரத் தலைவர்கள் அனுமனைப் புகழ்ந்துவிட்டு இராமனைச் சார்தல்

9713 தருமமென் றறிஞர் சொல்லுந்
தனிப்பொரு டன்னை யின்னே
கருமமென் றனும னாகக்
காட்டிய தன்மை கண்டால்
அருமையென் னெமருக் கம்மா
வறம்வெல்லும் பாவம் தோற்கும்
இருமையு நோக்கி னென்னா
விராமன்பா லெழுந்து சென்றார்.

'தருமம் என்று அறிஞர் சொல்லும்
தனிப்பொருள் தன்னை இன்னே
கருமம் என்று அனுமன் ஆகக்
காட்டிய தன்மை கண்டால்,
அருமை என் எமருக்கு? அம்மா!
அறம் வெல்லும், பாவம் தோற்கும்,
இருமையும் நோக்கின்' என்னா,
இராமன்பால் எழுந்து சென்றார்.

பொ:- தருமம் என்று அறிஞர்கள் புகழ்ந்து சொல்லும் ஒப்பற்ற பொருளானது, இது இப்பொழுதே செய்யத் தக்க கருமம் என்று தன்னையே அனுமனாகக் காட்டியுள்ள தன்மையைப் பார்த்தால் எம்மவராகிய இராம இலக்குவர்க்குச் செய்ய இயலாத அருஞ்செயல் என்ன இருக்கின்றது?(அனுமன்) மருந்து கொணர்ந்து உய்வித்த இரு பயனைத் தன்மையும் நோக்கினால் 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' (என்பது தெளிவாகின்றது) என்று கூறிக் கொண்டு எல்லோரும் எழுந்து இராமன்பால் சென்றார்கள்.

கு:- அனுமன் மருத்துமலை கொணர்ந்து இலக்குவனை எழுப்பியது கண்ட வானரர் வியந்து கூறுவது. அறத்தெய்வம் வேறு, அனு

மன் வேறு, அல்ல; தருமம் என்கின்ற ஒப்பற்ற பொருளே தன்னை அனுமனாகக் காட்டி, இந்த அருஞ் செயலைச் செய்துளது—தரும தேவதையே அனுமனாக வேடம் பூண்டு இவ்வருஞ் செயலைச் செய்துளது—என்பது வானரத் தலைவர்களின் புகழ் மொழி. தரும தேவதையல்லது செய்யவியலாத செயல் இது என்றவாறு, அனுமனுடைய இத்தெய்வத்தன்மையைக் காணும் போது, எம்மவராகிய இராம இலக்குவர்க்குச் செயற்கரிய செயல் என்ன இருக்கின்றது? என்று வியக்கின்றனர். 'அனுமன் இருமுறை செய்த உதவியையும் நோக்கினால் 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்பது புலனாகின்றது என்று கூறிக் கொண்டே எல்லோரும் எழுந்து இராமன் பால் சென்றனர் என்க. இருமை என்பது இங்கு இரண்டு என்னும் பொருளது. 'இருமை வகை தெரிந்து' (குறள்—23) என்புழிப் போல. இரு பயணத்தை இருமை என்றார். இறந்தவரை எழுப்பிய அனுமனின் இரு பயணத்தையும் பார்த்தால் 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்ற நியதி தெளிவாகின்றது; என வேண்டுஞ் சொற்களை இசையெச்சமாக வருவித்துக் கொள்க. அனுமனின் இரு பயணத்தாலும் அறச்சார்புள்ள இராமன் சேனை வெற்றியையும் பாவச் சார்புள்ள இராவணன் சேனை தோல்வியையும் பெறுகின்றமை கண்கூடு. இராமன், இலக்குவனும் இராவணனும் பொரும் இடத்திற்கு வரத் தொடங்கும் போது வானரத் தலைவர் அவன் பால் சென்றனர் என்க. (43)

தன்னை வானரத் தலைவர் வணங்கக் கண்ட இராமன்,
'விளைந்தது என்' எனல்

**9714** ஒன்றல பலவென் றோங்கு
முயர்பிணைத் தும்ப ரொன்றும்
குன்றுகள் பலவுஞ் சோரிக்
குரைகட லனைத்துந் தாவிச்
சென்றடைந் திராமன் றன்னைத்
திருவடி வணக்கஞ் செய்தார்
வென்றியின் றலைவர்க் கண்ட
விராமனென் விளைந்த தென்றான்.

ஒன்றுஅல பல என்று ஓங்கும்
உயர்பிணைத்து உம்பர் ஒன்றும்
குன்றுகள் பலவும் கோரிக்
குரைகடல் அனைத்தும், தாவிச்

சென்று அடைந்து, இராமன் தன்னைத்
திருவடி வணக்கம் செய்தார்;
வென்றியின் தலைவர்க் கண்ட
இராமன் 'என் விளைந்தது?' என்றான்.

பொ:- ஒன்று அல்லாதன வாகிய பல என்னுமாறு ஓங்கி உயர்ந்த பிணங்களாலியன்றதும், வானத்தைத் தொடுவது மாகிய குன்றுகள் பலவற்றையும், ஒலிக்கின்ற இரத்தக் கடல்கள் அனைத்தையும், கடந்து சென்று இராமனை அடைந்து, அவன் திருவடிகட்கு வணக்கம் செய்தார்கள்; (தன்னை வணங்கிய) வெற்றியினையுடைய தலைவர்களைக் கண்ட இராமன் 'என்ன நடந்தது?' என்று வினவினான்.

கு:- பிணத்துக் குன்றுகள்; உம்பர் என்றும் குன்றுகள் எனத் தனித்தனி இயையும். அரக்கர் பிணம் ஒன்றே யன்றி, குதிரைப் பிணமும் யானைப் பிணமும் விரவிக் கிடத்தலின் 'ஒன்றல பல வென்றோங்குமுயர் பிணத்து' என்றார். ஒரு பிணக்குன்றிலுள்ள பல வகைப் பிணங்களையும் புலப்படுத்தப் பல என்று ஓங்கும் உயர் பிணத்து என்றும் அப்பிணக்குன்றின் பன்மை யுணர்த்தக் குன்றுகள் பலவும் என்றும் கூறினர். பல பிண மலைகளையும் பல குருதிக் கடல்களையும் தாண்டி இராமனை அடைந்து வானரர் வணங்கினர் என்க. வெற்றி மகிழ்ச்சி தோன்ற தன்னை வணங்கிய வானரர்களின் முகக் குறிப் புணர்ந்த இராமன் என்பார், 'வென்றியின் தலைவர்க் கண்ட இராமன்' என்றார். வானரத் தலைவரின் முகக் குறிப்பே 'ஏதோ சொல்ல வந்துளர்' என்பதை யுணர்த்தலின், 'என் விளைந்தது' என்று வினவினான் இராமன். (44)

சாம்பனால் நிகழ்ந்ததறிந்து இராமன் அனுமனை வாழ்த்துதல்.

9715 உற்றது முழுது நோக்கி
யொழிவற வுணர்வி னூன்றச்
சொற்றனன் சாம்பன் வீர
னனுமனைத் தொடரப் புல்லிப்
பெற்றனெ னுன்னை யென்னை
பெருதன பெரியோ யென்று
மற்றிடை யீறு செல்லா
வாயுளை யாக வென்றான்.

உற்றது முழுது நோக்கி
ஒழிவு அற, உணர்வின் ஊன்றச்
சொற்றனன் சாம்பன்; வீரன்
அனுமனைத் தொடரப் புல்லி,
'பெற்றனென் உன்னை; என்னை
பெறுதன? பெரியோய்! என்றும்
அற்று இடை ஈறு செல்லா
ஆயுளை ஆக' என்றான்.

பொ:- (அதுகேட்ட) சாம்பன், நிகழ்ந்ததை முழுவதும் சிந்தித்து, ஒன்று விடாமல் இராமனது உணர்வில் பதியும் வண்ணம் சொன்னான்; அதுகேட்ட இராமன், அனுமனை நெருங்கத் தழுவி, 'பெரியோனே! உன்னைப் பெற்றுவிட்டேன்; இனிப் பெறுத பேறு என்ன உளது? எக்காலத்தும் இடையறவுபட்டு முடிவடையாத நீண்ட ஆயுளையுடையை யாகுக' என்று வாழ்த்தினான்.

கு:- நோக்குதல், இங்கு மனத்தால் நோக்குதல்;—சிந்தித்தல். ஒழிவறச் சொற்றனன் என இயையும். உயிர் தந்த பேருதவி நினைந்து அனுமனைப் 'பெரியோய்!' என்று விளித்தான். எல்லா உதவியையும் செய்ய வல்ல அனுமனைப் பெற்றுவிட்டமையால் பெற இயலாத பேறுகளே இல்லை; என்பான், 'என்னைப் பெறுதன' என்றான். இடையற்று என மாறுக. இலக்குவனுக்கு இடையற்று ஈறு சென்ற ஆயுளை மருந்து மலையால் இடையறவு படாது நெடிதுய்த்தவன் அனுமன் ஆதலின், அவனை இவ்வாறு வாழ்த்தினான் இராமன்; அவன் கையால்செய்த உதவியை இவன் வாயினால் செய்தான் என்க. (45)

## இலக்குவன் இராமனைச் சார்தல்

9716 புயல்பொழி யருவிக் கண்ணன்
பொருமலன் பொங்கு கின்றான்.
உயிர்புறத் தொழிய நின்ற
வுடலன்ன வுருவத் தம்பி
துயர்தமக் குதவி மீளாத்
துறக்கம்பெற் றுயர்ந்த தொல்லைத்
தயரதற் கண்டா லொத்த
தம்முனைத் தொழுது சார்ந்தான்.

புயல்பொழி அருவிக் கண்ணன்,
பொருமலன் பொங்குகின்றான்,
உயிர்புறத்து ஒழிய நின்ற
உடல் அன்ன உருவத் தம்பி
துயர்தமக்கு உதவி, மீளாத்
துறக்கம் பெற்று உயர்ந்த தொல்லைத்
தயரதற் கண்டால் ஒத்த
தம்முனைத் தொழுது சார்ந்தான்.

பொ:- மேகம்போல் பொழிகின்ற அழுகைநீர் அருவியை யுடைய கண்களை யுடையவனும், (இதுகாறும் பிரிந்திருந்தமைக்காக) அழுது விம்முபவனும், (இப்போது காணப்பெற்றமையால்) மகிழ்ச்சி பொங்குகின்ற மனமுடையவனும், உயிர் பிரிந்து புறத்தே தவிர்ந்து நிற்க, அதைப் பிரிந்துநின்ற உடம்பு போன்று வாடிய உருவத்தையுடையவனும்ஆகிய தம்பிஇலக்குவன்,—தமக்குப் பிரிவாற்றாத் துயர் கொடுத்து விட்டு, இறந்து மீண்டு வாராத துறக்க உலகத்தைப் பெற்றுயர்வடைந்த பழைய தயரதனை வரக்கண்டாற் போன்று (தன்னைக் கண்டு மகிழ்கின்ற) அண்ணன் இராமனைத் தொழுது வந்து அடைந்தான்.

கு:- சாம்பன் முதலியோர் முன்னே வந்து நிகழ்ந்தது கூறிய பின், இலக்குவன இராமனை அடைந்தான் என்றவாறு. தம்பி தம் முனைத் தொழுது சார்ந்தான் என இயையும். இச்செய்யுளில் முன்னிரண்டடிகளில் இலக்குவன் நிலையும் பின்னிரண்டடிகளில் இராமன் நிலையும் பேசப்படுகின்றன. இலக்குவன் இராமனைப் பிரிந்து இராவணனோடு போர் செய்யச் சென்றபின் தனக்கு நேர்ந்த துன்ப நிலையை நினைந்து, அருவிபாய்க் கண்களோடு அழுது விம்முகின்றவனாகவும், மீண்டும் அண்ணனைக் காணும்பேறு அனுமனால் கிடைத்தது நினைந்து மகிழ்ச்சி பொங்குகின்ற மனமுடையவனாகவும் வந்தான் என்க. உயிர் போன்ற இராமனைப் பிரிந்திருந்த துன்பத்தால் வாடிய இலக்குவனுக்கு உயிர் புறத் தொழிய நின்ற உடலை உவமையாக்கியுள்ளார். இவ்வுவமையால் இலக்குவன் உயிர் பிரிந்த உடம்புபோலப் பொலிவில்லாத உருவத்தவனாக இருந்தான் என்பது புலனாம். இலக்குவன் மீண்டுவரக் கண்ட இராமன் கொண்ட மகிழ்ச்சிக்கு உவமையாக, மீளாவுலகம் புக்க தயரதனை மீண்டு வரக்கண்டால் பெறும் மகிழ்ச்சியைக் கூறியுள்ளார், இங்கு இல்பொருளுவமையாகக் கூறிய நிகழ்ச்சி மீட்சிப் படலத்தில் உள்பொருளாகவே நிகழ்கின்றது. துயர் என்றது, பிரிவாற்றாத துயரை. தமக்கு என்றது, இராமனுக்கும் தாயர் முதலிய சிலைஞர்க்கும் என்றவாறு. இராவணனது வேலினால் உயிர் பிரிந்து

அனுமன் கொணர்ந்த மருந்து மலையால் உயிர் மீளப்பெற்று வருகின்ற இலக்குவனைக் கண்ட இராமனது மகிழ்ச்சிக்கு இது பொருத்தமான உவமையாதல் காணலாம். இராமன் துறக்கம் புக்க தந்தையை மீண்டு வரக் கண்டாற் போன்ற மகிழ்ச்சியை இலக்குவன் உயிரோடு மீண்டு வரக் கண்டபோது கொண்டான் என்பது எவ்வளவு பொருத்தமாக உள்ளது காண்மின்!

இந்த உவமையை இலக்குவன் மகிழ்ச்சிக்கு ஏற்றிக் கூறுவாறு முளர். இலக்குவன், துறக்கம் புக்க தயரதனை மீள வரக்கண்டு மகிழ்வது போல இராமனைக் கண்டு மகிழ்ந்தான் என்பர். "என் கட்புல முன்னுனக் கீந்து வைத்து இல்லை என்ற வன் கட்புலம் தாங்கிய மன்னவன்" என்று தயரதனை இகழ்ந்து கூறியவனும், இராமனை நோக்கி "நற்றாதையு நீ தனிநாயகனீ வயிற்றிற் பெற்றாயும் நீயே பிறரில்லை" எனத் தயரதனைத் தந்தையாக ஏற்றுக் கொள்ளாது மறுத்துக் கூறியவனும், தயரதன் துறக்கம் புக்கதைப் பரதன் வாயிலாகக் கேட்டு இராமனும் சீதையும் அழுது புலம்பவும் சிறிதும் மனங்கலங்காது இருந்தவனும் ஆகிய இலக்குவன், துறக்கம் புக்க தயரதன் மீண்டுவரக் கண்டால் மகிழ்ச்சியுறுவானா? என்பது நினைக்கத்தகும். மேலும், இருந்த இடத்தில் இருக்கின்ற இராமனைக்கண்டு இலக்குவன் கொண்ட மகிழ்ச்சிக்குத் துறக்கம் புக்கு மீண்ட தயரதனைக் கண்ட மகிழ்ச்சியை உவமை கூற வேண்டுமா? என்பதும் நினைக்கின்-மேலதே உரை என்பது புலனாகும். உடம்பை விட்டுப் பிரிந்து மீண்டுவரும் பொதுத்தன்மை, தயரதன், இலக்குவன் என்ற இருவர்க்குமே பொருந்தியிருத்தலும் நினைக. (46)

## இராமன் இலக்குவனைத் தழுவிப் பாராட்டுதல் 9717, 9718

**9717** இளவலைத் தழுவி யைய
 விரவிதன் குலத்துக் கேற்ற
வளவுத மடைந்தோர்க் காகி
 மன்னுயி ரளிக்குந் தன்மை
துளவிய ரெங்க லாய்நீ
 யன்னது துணிந்தா யென்றால்
அளவிய லன்று செய்தற்
 கடுப்பதே யாகு மன்றே.

இளவலைத் தழுவி, 'ஐய!
இரவிதன் குலத்துக்கு ஏற்ற
அளவு, தம் அடைந்தோர்க்கு ஆகி,
மன் உயிர் அளிக்கும் தன்மை;
துளவு இயல் தொங்கலாய்! நீ
அன்னது துணிந்தாய் என்றால்,
அளவியல் அன்று; செய்தற்கு
அடுப்பதே ஆகும் அன்றே.

பொ:- (இராமன் தன்னைத் தொழுது சார்ந்த) தம்பியைத் தழுவி, ஐயனே! துளவத்தினாலியன்ற மாலையையுடையவனே! தம்மை அடைக்கலமாக அடைந்தவரைக் காப்பாற்றுவதற்காகத் தமது நிலை பெற்ற உயிரைக் கொடுக்கும் தன்மை, சூரிய குலத்திற்கேற்ற தன்மையாகும்; நீ அச் செயலைச் செய்யத் துணிந்தாய் என்றால், அது நின் தகுதிக்கு மிக்க அளவினையுடைய பெரிய செயல் அன்று; நீ செய்தற்கு ஏற்ற செயலே யாகும்.

கு:- இரவிதன் குலத்துக்கு ஏற்ற அளவு என்புழி 'அளவு' தன்மை என்னும் பொருளது. தம் அடைந்தோர் என்றது தம்மை அடைக்கலம் புக்கோரை. அன்னது என்றது, சூரிய குலத்திற்கேற்ற தன்மையினதாகிய தம்மடைந்தோர்க்காகத் தம் உயிரைக் கொடுக்குஞ் செயலை. துணிதல் இங்குத் துணிந்து செய்தலை உணர்த்தியது. செய்தற்கு அடுப்பதே என்றது, சூரிய குலத்தில் பிறந்த நீ செய்தற்கு ஏற்ற செயலே என்றவாறு. அளவு என்றது இங்கு மிக்க அளவினை. அளவியல் அன்று என்றது, நின் தகுதிக்கு மிக்க பெருஞ்செயல் அன்று என்றவாறு. இலக்குவன் இயல்பாகச் செய்ய வேண்டிய செயலே; புகழ்தற்குரிய பெரிய செயலன்று என்பது கருத்து. "புறவினல்லல் சொல்லிய கறையடி. யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக், கோனிறை துலாசுப் புக்கோன் மருக! ஈதல் நின் புகழும் அன்றே சார்தல், ஒன்னா ருட்கும் துன்னருங் கடுந்திறல், தூங்கெயில் எறிந்த நின் னூங்கணோர் நினைப்பின், அடுதல் நின் புகழுமன்றே" (புறநா-39) என்பது இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும். இலக்குவன் இது செய்யாதிருந்தால் பிழை; செய்தது இயல்பே, என்று குலத்தின் பெருமை விளக்கியவாறு. (47)

9718 புறவொன்றின் பொருட்டால் யாக்கை
புண்ணுற வரிந்த புத்தேள்
அறவனு மைய நின்னை
நிகர்க்கில னப்பா னின்ற

பிறவினி யுரைப்ப தென்னே
பேரரு ளாள ரென்பார்
கறவையுங் கன்று மொப்பார்
தமர்க்கிடர் காணி லென்றான்.

"புறவுஅதன் பொருட்டால் யாக்கை
புண்உற அரிந்த புத்தேள்
அறவனும், ஐய! நின்னை நிகர்க்கிலன்;
அப்பால் நின்ற
பிறஇனி உரைப்பது என்னே?
பேர் அருளாளர் என்பார்
கறவையும் கன்றும் ஒப்பார்,
தமர்க்கு இடர் காணில்' என்றான்.

பொ:- (ஐயனே! தன்பால் அடைக்கலம் புகுந்த) புறவின் பொருட்டுத் தன் உடம்பு புண் ஆகுமாறு அரிந்து கொடுத்த தெய்வத் தன்மை பொருந்திய தருமவானாகிய சிபியும் நினக்கு ஒப்பாகமாட்டான்; அதற்குப் பிறகு ஒழிந்த பிறவற்றைச் சொல்லி என் பயன்? பெரிய அருளாளர் என்று சொல்லப்படுபவர்கள் தம்மைச் சார்ந்தவர்க்குத் துன்பம் வரக் கண்டால் பசுவையும் கன்றையும்போல் விரைந்து சென்று காப்பாற்றுவர்; (தனக்கு வரும் இடரைப் பொருட்படுத்த மாட்டார்கள்)

கு:- புத்தேள் அறவன் என்றது தெய்வத்தன்மை வாய்ந்த தருமவானாகிய சிபியை. 'தெய்வ நிலை யடைந்த அறவன்' எனினும் ஆம். சிபி உடம்பை அரிந்து கொடுத்தான், இலக்குவனோ உயிரையே கொடுத்தான்; புறவு தன்னைப் பகைவன் கையினின்று காப்பாற்ற வேண்டிய பின் தன்னுடம்பை அரிந்து கொடுத்தான் சிபி; தன்னை இராவணன் வேலுக்கு இரையாகாமல் காக்க வேண்டும் என்று வீடணன் வேண்டிக்கொள்ளாத நிலையில்,—தானே வேலை யேற்கச் சென்ற நிலையில்—அவ்வே விலக்கி அவனைக் காப்பாற்ற வேண்டித் தன்னுயிரைக் கொடுத்தான் இலக்குவன்; எனவே வேண்டிய பின் உடம்பை அரிந்து கொடுத்த சிபியினும், வேண்டாதிருக்கவும் உயிரைக் கொடுத்த இலக்குவன் கொடை சிறந்து காட்டுதலின் 'அறவனும் நின்னை நிகர்க்கிலன்' என்று இராமன் புகழ்வானானான். கன்றுக்குத் துன்பம் வந்தால் தன் துயர் நோக்காது பசு தானே சென்று

அத் துன்பத்தை நீக்குவதல்லது அக் கன்று வேண்டியபின் சென்று நீக்குவதில்லை. அதுபோலவே, அருளாளர் என்போர் பசுப்போன்றவராய்த் தம்மைச் சார்ந்த கன்று போன்றவரின் துன்பத்தைத் தாமே விரைந்து களைவர் என்றவாறு. கறவை—பால் கறக்கும் பசு. (48)

## இராமன் இலக்குவனது போர்க்கோலம் நீக்கி இளைப்பாறுதல்

**9719** சாலிகை முதல வான
போர்ப்பரந் தாங்கிற் றெல்லாம்
நீனிற ஞாயி றன்ன
நெடியவன் முறையி னீக்கிக்
கோல் சொரி தனுவுங் கொற்ற
வனுமன்கைக் கொடுத்துக் கொண்டல்
மேனிறை குன்றி னின்று
மெய்ம்மெலி வாற்ற லுற்றான்.

சாலிகை முதல ஆன போர்ப்பரம்
தாங்கிற்று எல்லாம்
நீல் நிற ஞாயிறுஅன்ன
நெடியவன் முறையின் நீக்கி,
கோல் சொரி தனுவும் கொற்ற
அனுமன் கைக் கொடுத்து, கொண்டல்
மேல்நிறை குன்றில் நின்று
மெய்ம்மெலிவு ஆற்றல் உற்றான்.

பொ:- கவசம் முதலாகிய போர்க்காகத் தாங்கிய பாரத்தையெல்லாம், நீல நிறமுடைய சூரியனைப் போன்ற இராமன், இலக்குவனுடம்பில் நின்று முறைமையாக நீக்கி, அம்புகளைச் சொரிகின்ற வில்லையும் வெற்றிக் குரிய அனுமனது கையில் கொடுத்துவிட்டு, மேகங்கள் தன்மேல் நிறையப் பெற்ற குன்றில் நின்று இலக்குவனது உடம்பு மெலிவை ஆற்றச் செய்தான்.

கு:- இலக்குவனே செய்யக்கூடிய செயலை அன்பு மேலீட்டால் இராமன் செய்தான் என்க. சாலிகை—கவசம். 'சாலிகை யுடம்பினரி

தருசஞளரே' (சீவகசிந்—2217) என்றது காண்க. இராமனது நிறம் ஒளிமிக்க நீல நிறம் ஆதலின், 'நீனிற ஞாயிறன்ன நெடியவன்' என்றனர். இராமனை நெடியவன் என்றது முன் மூவுலகமும் ஈரடியால் அளந்த நிலையை நினைந்து. கோல்—அம்பு. கொண்டல்—மேகம். குன்றிற்கு அடை. மேகம் மேல் நிறையப் பெற்றுள்ள குன்று என அதன் உயர்வும் பெருமையும் புலப்படுத்தியவாறு. இராமனே தன் மெய்ம்மெலிவு ஆற்றினன் என்றலும் பொருந்தும்; என்னை? மூலபல வதை செய்துவிட்டு இராமன் இலக்குவனுக்குத் துணையாக வரத் தொடங்கும்போதே சாம்பவன் முதலியோர் இராமனை அடைந்தார்கள். ஆதலின், இராமனும் மூலபல வதை செய்த இளைப்பை ஆற்றுதல் இயல்பாகலின் என்க. (43)

# 32. வானரர் களங்காண் படலம்

## முன்னுரை

இராமன் கொன்று குவித்த மூலப்படையின் வீழ்ச்சிக் காட்சியை வானரங்கள் போர்க்களத்தில் கண்டதைக் கூறும் பகுதியாகலின் இது வானரர் களங்காண் படலம் எனப் பெயர் பெறுகின்றது. இப்படலம் சிற்சில சுவடிகளில் வானரச் சேனை களங்காண் படலம்', 'வானரத் தலைவர்கள் களங்காட்சிப் படலம்', 'வானரர் களங்காட்சிப் படலம்' 'வானர வீரர்கள் களங்காண் படலம்' என்ற பெயர்களோடும் காணப்படுகின்றது. வேறு சில சுவடிகளில் இப்படலமும் இராவணன் களங்காண் படலமும் ஒன்றாகச் சேர்க்கப்பெற்று 'களங்காண் படலம்' என்ற ஒரு பெயரோடு காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

மூலபலப் படையின் அழிவு நிகழ்ந்தபின் சுக்கிரீவன் தன் சேனையுடன் இராமனை அணுகி வணங்கி, மூவுலகத்தினும் அடங்காத அரக்கர் பெருஞ் சேனையை வென்றது எவ்வாறு? என்று வினவ இராமன் வீடணனோடு களத்திற் சென்று கண்டால் விளங்கும் என்று மறுமொழி கூற, வானரத் தலைவர்கள் வீடணனோடு களத்திற் சென்று அங்கு இறந்து வீழ்ந்து கிடக்கும் சேனைகளின் பெருக்கைக் கண்டு அஞ்சி நடுங்குகின்றனர். பின்பு மெல்லத் தேறி, 'ஆயிரம் பருவம் கண்டாலும் இக்களக் காட்சிக்கு ஓரெல்லை காண்டல் அரிது. சிறந்த சிலவற்றை நீ வகைப்படுத்திக் காட்டுவாயாக என்று' வீடணனை நோக்கிக் கூறுகின்றனர். வீடணனும் அவர் விரும்பியாங்கே ஒவ்வொன்றையும் வகைப்படுத்திச் சிறப்பித்துக் காட்டிக் கொண்டிருக்கின்றான். வானரர்கள் கண்டு கண்டு சலிப்படைந்தவராய், 'இக் காட்சியைக் காண்பதில் காலங் கடத்துவதை விடுத்துச் செயற்கரும் வீரச் செயலைச் செய்து முடித்த இராமனை வணங்குவோம்' என்று கூறி வீடணனோடு அவ்விராமனிடம் சென்று வணங்கி அவன் போர்த் திறனை நினைந்து வியந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு தங்கியிருந்தனர் என்பது இப் படலத்தில் கூறப்படுகின்றது.

வான்மீகத்தில் வானரர் களங்கண்ட இந் நிகழ்ச்சி கூறப்படவில்லை. கம்பர், தாம் இயற்றும் இப் பெருங் காப்பியத்தில் பரணி

நூலில் கூறப்படும் களம்பாடியது போன்ற ஒரு பகுதி இருப்பது சுவை பயப்பதாகும் என்ற கருத்தால் இப்படலத்தைக் கற்பனை செய்து அமைத்திருத்தல் வேண்டும்.

## படலப் பொருட் சிறப்பு

போர்க்களக் காட்சியைக் காட்டுவதில் கம்பர் பெருவிருப்புடையவர் என்பதை இப்படலமே நமக்குப் புலப்படுத்துகின்றது. தாமரை மலர்கள் நீர்நிலையுள்ள இடங்களில் காணப்படுதல் இயல்பு. போர்க் களத்தில் காணக் கிடைக்காதவை. ஆனால், கம்பர் போர்க்களத்தில் நீரையும் வருவித்து அந்நீர் நிலையில் தாமரை மலர்களையும் மலரச் செய்து நமக்குக் காட்டுகின்றார். இக்காட்சி அற்புதக் காட்சியாக உள்ளது.

இறந்தவர்கள் முகம் பார்க்கத் தகாததாய்ப் பொலிவிழந்து காணப்படும் என்பதே எல்லோரும் காணும் உண்மை நிகழ்ச்சி. ஆனால் அருள் பொங்கும் அழகிய கண்களையுடைய இராமன் எய்த கூரிய அம்புகளால் இறக்கும் வாய்ப்பு நமக்குக் கிடைத்ததே என்ற வீரக் களிப்போடு இறந்துபட்ட அரக்க வீரர்களின் முகங்கள் அவ்வாறு பொலிவு அற்றனவாக இல்லையாம். ஒளிமிக்கனவாய் - மலர்ச்சி மிக்கனவாய்ச் செந்தாமரை மலர்களைப்போல் பொலிவுடன் காணப்படுகின்றனவாம். போர்க்களத்தில் மாண்ட வீரர்களின் உடம்பிலிருந்து பெருகிய இரத்த வெள்ளம் கடல் நீரைப் போலப் பரவிக் கிடக்கின்றது. இறந்த அரக்கரின் கரிய பெரிய பிணக்குவியல்கள் அக்கடலிலுள்ள மணல் திட்டுகளைப்போலக் காட்சியளிக்கின்றன. அப்பிணக் குவியல்களின் இடையிடையே காணப்படும் அரக்க வீரர்களின் பொலிவுமிக்க முகங்களின் தோற்றம் அந்த மணல் திட்டுகளில் மலர்ந்த செந்தாமரை மலர்களைப்போலக் காட்சி யளிக்கின்றனவாம்.

அளியிற் பொங்கு மங்கண னேவு மயில்வாளிக்
களியிற் பட்டார் வாண்முக மின்னுங் கரையில்ல
புளினத் திட்டின் கண்ணகன் வாரிக் கடல் பூத்த
நளினக் காடே யொப்பன காண்மின் நமரங்காள்

என்று வீடணன் வானர வீரர்களுக்குப் போர்க்களத்தின் ஒரு காட்சியைக் காட்டுகின்றான். அழகில்லாத அரக்கர் முகங்கள் இறந்த பின் அழகுடன் விளங்குகின்றன என்ற கம்பர் கருத்தால் அரக்கர்க்குச் சிறப்பு உண்டாகின்றதா? அல்லது அழகற்றவர்களையும் அழகுடன் கழுமாறு செய்த கருணையங் கடலாகிய இராமனுக்குச் சிறப்பு

உண்டாகின்றதா? இராமனது வீரச் சிறப்பையும் அருள்பெருகும் அவன் கண்களையும் கண்ட அரக்க வீரர்கள் இவன் எய்யும் அம்பால் இறக்கும் பேறு பெற்ருேமே' என்ற மகிழ்ச்சியோடு இறந்தமையாலன்ருே அவர்கள் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்த முகமாகக் காட்சியளிக்கின்றது? அழகற்ற அரக்கர் முகங்களையும் அழகுமிக்க செந்தாமரை மலர்போலத் தோன்றச் செய்தது இராமனே ஆதலின் இக் காட்சி இராமனுக்கே சிறப்பை யுண்டாக்குகின்றது என்பது தெளிவு. 'நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்' (கும்பகருணப்-31) என இராவணனே இராமன் அம்பால் இறக்க நேர்ந்தமைக்கு மகிழ்ச்சி கொள்ளவில்லையா? அவன் போர்வீரர் மகிழ்ச்சியில் மலர்ந்த முகத்தினராய் இறத்தல் சொல்ல வேண்டுமோ? வீரப் போர் செய்திறக்கும் வீரர் முகம் இவ்வாறு மலர்ந்திருத்தல் இயல்பு என்பதை 'பருந்தினமும் கழுகினமுந் தாமே யுண்ணப் பதும முகம் மலர்ந்தாரைப் பாரமின் பார்மின்' (கலிங்கத்துப் பரணி-477) என்பதாலும் அறியலாம்.

இத்தகைய பல அரிய காட்சிகளை இப்படலத்தில் கம்பர் நமக்குக் காட்டுகின்ருர்.

## 32. வானரர் களங் காண் படலம்

சுக்கிரீவன் வானர சேனையோடு இராமனை வணங்கி இறந்த அரக்கரின் பெருக்கை நோக்கித் திகைத்தல்.

9720 ஆயபின் கவியின் வேந்து
மளப்பருந் தானை யோடு
மேயின னிராமன் பாதம்
விதிமுறை வணங்கி வீந்த
தீயவர் பெருமை நோக்கி
நடுக்கமுந் திகைப்பு முற்றான்
ஓய்வுறு மனத்தா னொன்று
முரைத்திலன் நாண முற்றான்.

*ஆயபின், கவியின் வேந்தும்,*
*அளப்பருந் தானை யோடும்*
*மேயினன், இராமன் பாதம்*
*விதிமுறை வணங்கி, வீந்த*
*தீயவர் பெருமை நோக்கி,*
*நடுக்கமும், திகைப்பும் உற்றான்,*
*ஒய்வுறு மனத்தான் ஒன்றும்*
*உரைத்திலன், நாணம் உற்றான்.*

பொ:- (இராமன் மெய்மெலிவு ஆற்றி) ஆன பின்பு சுக்கிரீவனும் அளத்தற்கு அரிய வானர சேனையோடு வந்தடைந்து இராமனுடைய அம்பினால் இறந்துபட்ட அரக்கர்களின் பெருக்கை நோக்கி, நடுக்கமும் திகைப்பும் உற்றானாய் நாணிச் செயலற்று ஓய்ந்த மனத்தனாய் ஒன்றும் பேசாதவனானான்.

கு:- ஆயபின் என்றது, முன்னைப் படலத்துக் கூறியவாறு இளைப்பாறிய பின்பு என்றவாறு. வேந்தும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளது; என்னை? முன் இலக்குவன் வந்தமை புலப்படுத்தலின் என்க. அரக்கர் பெருக்கை நினைக்கையில் நடுக்கமும்

அவ்வரக்கரை யெல்லாம் இராமன், ஒருவனே எங்ஙனம் கொன்றான்? என்று நினைக்கையில் திகைப்பும் கொள்ளலானான் சுக்கிரீவன் என்க. கூட்டொருவரையும் வேண்டாத இத்தகைய இராமனுக்கு நாம், நம் படையோடு உதவி செய்வதாக இதுகாறும் எண்ணி யிருந்தோமே எனச் சுக்கிரீவன் நாணினமையால் அவன் மனம் செயலற்று ஒய்ந்து விட்டது; அதனால், ஒன்றும் பேசலானாபினான் என்க. கவியின் வேந்தும் வணங்கி, நோக்கி, நடுக்கமும் திகைப்பு முற்றானாய், நாண முற்றானாய், ஒய்வுறு மனத்தனாய் ஒன்றும் உரைத்திலன் என முற்றெச்சமாக்கி முடிக்க. நாணமிக்க போது மனம் செயலற்று விடும் என்பதை இதனா லறியலாம். (1)

### இராமன் சுக்கிரீவனை வீடணனோடு சென்று களத்தைக் காண் எனல்

**9721** மூண்டெழு சேனை வெள்ள
முலகொரு மூன்றின் மேலு
நீண்டுள வதனை யைய
வெங்ஙனம் நிமிர்ந்த தென்னத்
தூண்டிரண் டனைய திண்டோட்
சூரியன் சிறுவன் கொல்லக்
காண்டி நீ யரக்கர் வேந்தன்
றன்னெடுங் களத்தை யென்றான்.

'மூண்டு எழு சேனை வெள்ளம்
உலகு ஒரு மூன்றின் மேலும்
நீண்டு உளது அதனை, ஐய!
எங்ஙனம் நிமிர்ந்தது?' என்ன
தூண் திரண்டனைய திண்தோள்
சூரியன் சிறுவன் சொல்லக்
'காண்டிநீ, அரக்கர் வேந்தன்
தன்னெடும் களத்தை' என்றான்.

பொ:- 'ஐயனே! போரில் மூண்டு எழுந்த அரக்கர் சேனையின் பெருக்கம் மூவுலகத்தின் மேலும் நீண்டுளதாக இருந்ததை நீ தனியாக எங்ஙனம் வென்றது' என்று தூண் திரண்டாற் போலத் திரண்டுள்ள திண்ணிய தோள்களையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன்

வினவ, (இராமன்) 'நீ அரக்கர் வேந்தனுகிய வீடணனேடு களத்தைக் காண்பாயாக' என்று கூறினன்.

கு:- மூல பலப்படையின் பெருக்கை யுணர்த்த உலகொடு மூன்றின் மேலும் நீண்டுளது என்றான். நிமிர்தல் இங்குக் கடந்து வெல்லுதலை உணர்த்தியது. சிறுவன் என்றது புதல்வன் என்னும் பொருளது. சுக்கிரீவன் வலிமை புலப்படுத்த 'தூண்டிரண் டனைய திண்டோள் சிறுவன்' என்று கூறி, அத்தகைய் வலியோனும் இங்ஙனம் வினவுமாறு இராமன் மூலபலப் படையை வதைத்தான் என்று இராமன் வலிமையை உய்த்துணர வைத்தவாறு. சுக்கிரீவன் வினவிய வினவிற்குநேர் விடை கூறல் தற்புகழ்ச்சியாகு மாதலின், அவன் கருத்தை வேறு வழியில் திருப்பக் 'காண்டி நீ களத்தை' என்று கூறினன். களத்தைக் கண்டுழி இந்த ஐயம் மேலும்வலிவு பெறுவதன்றிக் குறைய வழியின்மையறிக. சில ஏடுகளில் இச்செய்யுள் வரையில் வேறேற்ற படலமாக எழுதப்பட்டுளது. (2)

**9722** தொழுதனர் தலைவ ரெல்லாந்
தோன்றிய காத றூண்ட
எழுகென விரைவிற் சென்று
ரிராவணற் கிளவ லோடும்
கழுகொடு பருந்தும் பாறும்
பேய்களுங் கணங்கள் மற்றும்
குழுவிய களத்தைக் கண்ணி
னேக்கினர் துணுக்கங் கொண்டார்.

தொழுதனர் தலைவர் எல்லாம்,
தோன்றிய காதல் தூண்ட
'எழுக' என விரைவில் சென்றார்,
இராவணற்கு இளவலோடும்
கழுகொடு பருந்தும் பாறும்
பேய்களும் கணங்கள் மற்றும்
குழுவிய களத்தைக் கண்ணின்
நோக்கினர் துணுக்கம் கொண்டார்.

பொ:- வானரத் தலைவர்கள் எல்லாம் (இராமனைத்) தொழுது, (போர்க்களக் காட்சி காணத் தம் உள்ளத்துத்) தோன்றிய ஆசை தூண்டுவதால் 'எழுக' என்று கூறிக் கொண்டு வீடணனேடு விரைவிற்

சென்று, கழுகும், பருந்தும், பாறும், பேய்களும் மற்றுமுள்ள காகங்களின் கூட்டம் குழுமியுள்ள போர்க் களத்தைக் கண்ணில் நோக்கி, உளம் நடுக்கம் கொண்டார்கள்.

கு:- இராவணற் 'கிளவல்' என்றது வீடணனை. பாறு என்றது பருந்தின் ஒருவகையாகக் கொள்க. கணங்கள் என்றது இங்கு நாய்க் கணங்களை. இவையெல்லாம் பிணங்களைத் தின்னும் வேட்கையால் களத்தில் குழுமியிருந்தன என்க. தொழுதனர், சென்றார், நோக்கினர் என்பன முற்றெச்சங்கள். நுணுக்கம், அச்சத்தால் உளதாம் நடுக்கம். பிணங்களும் பிணந் தின்ன வந்த உயிர்களுமே நிறைந்திருந்த களத்தைப் பார்ப்பது வீரர்க்கும் அச்சத்தை யுண்டாக்கியது. (3)

## போர்க்களக் காட்சியைக் கண்ட வானரர்களின் நிலை

9723 ஏங்கினர் நடுக்க முற்று
ரிரைத்திரைத் துள்ள மேற
வீங்கினர் வெருவ லுற்றார்
விம்மின ருள்ளம் வெம்ப
ஓங்கினர் மெள்ள மெள்ள
வுயிர் நிலைத் துவகை யூற
ஆங்கவ ருற்ற தன்மை
யாரறிந் தறைய கிற்பார்.

ஏங்கினர்; நடுக்கம் உற்றார்;
இரைத்து இரைத்து. உள்ளம் ஏற,
வீங்கினர்; வெருவலுற்றார்;
விம்மினர்; உள்ளம் வெம்ப,
ஓங்கினர்; மெள்ள மெள்ள
உயிர் நிலைத்து, உவகை ஊற
ஆங்கு அவர் உற்ற தன்மை
யார் அறிந்து அறைய கிற்பார்?

பொ:- (போர்க் களத்தின் அழிவுக் காட்சியைக் கண்ட வானரத் தலைவர்கள்) அழுதார்கள்; நடுக்கம் அடைந்தார்கள்; பெருமூச்சு வாங்கி வாங்கி, உயிர்ப்புக் காற்றுத் தலைமேல் ஏற உடம்பு வீங்கினார்கள்; அஞ்சினார்கள்; மனம் வெதும்பத் தேம்பினார்கள்; மெள்ள

மெள்ளத் தம் உயிர்ப்பு நிலை பெற்று பகிழ் சுரக்க அம் மகிழ்ச்சியில் உயர்ந்தார்கள்; அப்போது அவ்விடத்து அவர்கள் அடைந்த மெய்ப் பாட்டுத் தன்மைகளை அறிந்து சொல்ல வல்லவர்கள் யார்?

கு:- போர்க்களத்தில் அவலக் காட்சியைக் கண்ட வானரர்களின் துன்பக் கூறுகளை வகைப்படுத்திக் கூறியவாறு. ஏங்குதல்—அழுதல். இரைத்தல்—மூச்சு வாங்குதல். முதலடியில் உள்ளம் என்றது உள்ளிருந் தெழும் உயிர்ப்புக் காற்றினைத். துன்பத்தால் வரும் பெரு மூச்சு இழுக்கும் போது உடம்பு வீங்கும் தன்மையைப் புலப்படுத்த "இரைந் திரைந்து உள்ளம் ஏற வீங்கினர்" என்றார். வெருவல்—அஞ்சு தல். விம்முதல்—தேம்புதல். உள்ளம் வெம்ப விம்மினர் என்றும், உவகையூற ஓங்கினர் என்றும் மாறுக. களத்தில் வீழ்ந்து கிடக்கும் பிணங்கள் அரக்கர் பிணங்களே என்பதை அறிந்த பின் வானரர் களுக்கு மெள்ள மெள்ள பெரும் மூச்சு வாங்குதல் நின்று இயல்பாக உயிர்க்கலானார் என்பார், 'மெள்ள மெள்ள உயிர் நிலைத்து' என்றார். உயிர் என்றது இங்கு உயிர்ப்பினை. ஊறுதல்—சிறிது சிறிதாகச் சுரத் தல். 'ஆங்கு' என்பது இடம் காலம் என்ற இரு பொருளுக்கும் பொருந்துமாறு இங்கு அமைந்துளது. அங்கு அன்று வானரர்கள் அடைந்த துன்ப நிலையை யாரும் உள்ளவாறு கூற இயலாது என்றவாறு. (4)

களக் காட்சியைக் காட்டுமாறு
வீடணனை வானரர் வேண்டுதல்

**9724** ஆயிரம் பருவங் கண்டாற்
காட்சிக்கோர் கரையிற் றன்றால்
மேயின துறைக டோறும்
விம்மினர் நிற்ப தல்லால்
பாய்திரைப் பரவை யேழுங்
காண்குறும் பதக ரென்ன
நீ யிருந் துணர்த்தி யென்றார்
வீடண னெறியிற் சொல்வான்.

ஆயிரம் பருவம் கண்டால்
காட்சிக்கு ஓர் கரையிற்று அன்றால்
மேயின துறைகள் தோறும்
விம்மினர் நிற்பது அல்லால்

பாய்திரைப் பரவை ஏழும்
காண்குறும் பதகர் என்ன
நீ இருந்து உரைத்தி என்றார்;
வீடணன் நெறியில் சொல்வான்.

பொ:- ஒன்றன்பின் ஒன்றாகப் பாய்ந்து வருகின்ற அலைகளை யுடைய கடல்கள் ஏழினையும் காண விரும்பிய பாவிகளைப் போல, விரும்பின துறைகள் தோறும் (அவர் அவர்கள் கண்டவற்றையே பார்த்துக் கொண்டு) மகிழ்ந்து நிற்பதன்றி, ஆயிரம் ஆண்டுகள் கண்டாலும் (இப் போர்க் களக்) காட்சிக்கு ஒரு கரை கண்டு விடுதல் இயலாது; எனவே, நீ அமைதியாக இருந்து (சிறந்தவற்றை மட்டும் சுருக்கமாகக் காட்டிச்) சொல்லுக என்று வானரத் தலைவர் கூறினாராக, வீடணன் முறையாகச் சொல்வானானான்.

கு:- கண்டாலும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது. மேயின துறைகள் தோறும் விம்மினர் நின்று காட்சிக்கு ஒரு கரை காணாது நிற்றல், கடலேழும் காண விழைந்தோர்க்கும், களங் காண விரைந்தோர்க்கும் பொதுத் தன்மை. முடிவுறக் காண முடியாத ஏழு கடலின் காட்சியை முழுவதும் கண்டே தீர்வது எனக் காணத் தொடங்குதல் எவ்வளவு பேதைமையோ அவ்வளவு பேதைமை இப் போர்க் களக் காட்சியையும் முழுவதும் பார்த்து விடுவோம் என்று எண்ணுவது என விளக்கியவாறு. இப்பேதைமை நினைந்தே பாவையே முங் காண்குறு பதகர் என்ன, என்று அன்பு காரணமாகப் 'பதகர்' என அவர்களைக் குறிப்பிட்டார். 'என் செயப் பாவிகாள் இங்கிருப்ப தாங் கிருப்ப முன்னே வன் சிறைக் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப் போன" (கலிங்கத்துப் பரணி-304) என அன்பு காரணமாகப் 'பாவிகள்' என விளித்திருத்தலை இங்கு நினையலாம். கடலை முழுவதும் காண்டல் இயலாது என்பதை: "மண்ணிடை மாக்கள் கடல்கண்டே மென்பார் யாவரே முடிவுறக் கண்டார்" (கிட்கிந்தா—தானைகாண்—35) என இராமனே வானர சேனையின் பெருக்கை முழுவதும் காணமுடியாமையை விளக்கக் கூறியிருத்தல் காணலாம். இக் களத்தின் காட்சியைக் காணும் நாங்கள் மேவின துறைகள் தோறும் விம்மி நிற்பதன்றி ஆயிரம் ஆண்டு சென்றாலும் இக் காட்சிக்கு முடிவு காண முடியாது ஆகையால் 'நீ உரைத்தி' என வானர வீரர்கள் வேண்டிக் கொள்ள வீடணன் சொல்வானானான் என்றவாறு. பதகரென்ன நிற்பதல்லால் கரையிற்றன்று; ஆதலால், நீ யிருந்துணர்த்தி என இயையும். (5)

## இறந்தும் நிற்கும் யானைகளின் காட்சியைக் காட்டுதல்

**9725** ★
காகப் பந்தர்ச் செங்கள
மெங்குஞ் செறிகால
வோகத் தம்பிற் பொன்றின
வேனு முடலொன்றி
மேகச் சங்கந் தொக்கென
வீழும் வெளியின்றி
நாகக் குன்றம் நின்றமை
காணீர் நமரங்காள்.

காகப் பந்தர்ச் செங்களம் எங்கும், செறிகால
ஓகத்து அம்பின் பொன்றின வேனும், உடல் ஒன்றி,
மேகச் சங்கம் தொக்கென வீழும் வெளி இன்றி,
நாகக் குன்றம் நின்றமை-காணீர் நமரங்காள்!

பொ:- நம்மவர்களே! (இராமன் விடுத்த) கூட்டமான அம்பினால் சிறந்தன வேனும், தரையில் வீழ்தற்கு வெளியிடம் இல்லாமையால் காகப்பந்தரினை யுடைய சிவந்த போர்க்களம் எங்கும் (இரத்தச் சேற்றில்) செறிந்த கால்களையுடையவாய், உடல்கள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொண்டு, மேகக்கூட்டம் ஓரிடத்துக் கூடியிருப்பது போல யானைகளாகிய மலைகள் நின்றுள்ள தன்மையைக் காண்பீர்களாக!

கு-: ஓகம்—பெருங்கூட்டம். இராமன் அம்பினால் இறந்த யானைப் படைகளின் காட்சியை வீடணன் முதலில் வானரர்கட்குக் காட்டிக் கூறியது. செங்களம் என்றது, இரத்தத்தால் சிவந்து காட்டும் போர்க் களத்தை. தசையுண்ணும் நசையால் காகங்கள் பந்தரிட்டாற்போலப் பறந்துகொண்டிருக்கும் போர்க்களம் என்பார் 'காகப்பந்தர்ச் செங் களம்' என்றார். யானைகள் அம்புகளால் இறந்தன என்றால், தரையில் வீழ்தலே இயல்பாகவும், இப் போர்க்களத்தில் இறந்த யானைகள், அங்ஙனம் தரையில் வீழாமல், கால்கள் இரத்தச் சேற்றில் அழுந்திக் கொண்டமையாலும், வீழ்தற்குரிய வெளியிடம் சிறிதும் இல்லாத நெருக்கத்தாலும் உடலோடு உடல்கள் ஒட்டிக்கொண்டு நின்று கொண்டேயிருக்கும் அதிசயக் காட்சியைக் காட்டியவாறு. யானைகள் இறந்தும் அசையாமல் நிற்கும் காட்சி மேகக்கூட்டம் ஓரிடத்தில் கூடியிருப்பதுபோலக் காணப்படுகின்றது என்பார், மேகச்சங்கம் தொக்கென நாகக் குன்றம் நின்றமை என்றார். நாகம்—யானை.

ஒவ்வோர் யானையும் ஒவ்வொரு குன்றுப்போல் இருத்தலின் 'நாகக் குன்றம்' என உருவகம் செய்தார். நமரங்காள்—நம்மவர்களே. சங்கம்—கூட்டம். மேகங்கள் தனித்தனியே காட்சியளித்தலும் பின்னர் ஒன்றாகச் சேர்ந்து காட்சியளித்தலும் இயல்பு. இங்கு மேகம் போன்று கரிய நிறத்தனவாகிய யானைகள் ஒன்றி நின்று—ஒன்றோடொன்று ஒட்டி நின்று காட்சியளித்தன என்க. (6)

## யானைகளின்மேல் வீரர்கள் இறந்து கிடக்கும் காட்சி

**9726** வென்றிச் செங்கண் வெம்மை
யரக்கர் மிசையூர்வ
ஒன்றிற் கொன்றுற் றம்புத
லைப்பட் டுயிர் நுங்கப்
பொன்றிச் சிங்க நாக
வடுக்கற் பொலிகின்ற
குன்றிற் றுஞ்சுந் தன்மை
நிகர்க்குங் குறி காணீர்

'வென்றிச் செங்கண் வெம்மை அரக்கர் மிசை ஊர்வ
ஒன்றிற்கு ஒன்று உற்று அம்பு தலைப்பட்டு உயிர் நுங்கப்,
பொன்றிச் சிங்கம், நாக அடுக்கல், பொலிகின்ற
குன்றில் துஞ்சும் தன்மை நிகர்க்கும் குறிகாணீர்.

பொ:- வெற்றியை விளக்கும் சிவந்த கண்களையும் கொடுமையையும் உடைய அரக்கர்கள், (இராமன் விட்ட) அம்புகள் ஒன்றிற்கு ஒன்று முற்பட்டு வந்து பாய்ந்து தம் உயிரைப் பருகியதால் இறந்து யானைகளாகிய குன்றங்கள்மேல் ஊர்ந்த நிலையில் கிடக்கும் காட்சி, சிங்கங்கள் பொலிகின்ற குன்றங்களில் உறங்கும் தன்மையை ஒத்து விளங்கும் குறிப்பைக் காண்பீர்களாக.

கு:- முன்னைச் செய்யுளில் யானைகளைக் குன்றங்களாக உருவகம் செய்து காட்டியவர், இங்கு அந்த யானைக் குன்றங்களின்மேல் இறந்து வீழ்ந்து கிடக்கும் அரக்க வீரர்களின் தோற்றத்தை உவமை முகத்தால் விளக்கிடவாறு. ஒவ்வொரு வீரரும் சிங்கம் போன்ற தோற்றத்தை யுடையவர் என்பதும், அவர் இறந்துபட்டு இறவாமல் தூங்குபவர் போன்று பொலிவுடன் காணப்படுகின்றார் என்பதும் புலப்

படுத்தியவாறு. இதனுல் அரக்கர்களின் வீரத் தோற்றத்தைச் சிறப் பித்தவாறு. நாக அடுக்கல் என்றது, யானையாகிய குன்றம் என்றவாறு. மேல் 'நாகக் குன்றம்' என்றதும் இங்கு நினைக. அரக்கர், பொன்றி, நாக வடுக்கல் மிசை யூர்வ, சிங்கம் குன்றில் துஞ்சும் தன்மை நிகர்க்கும் என இயையும். கொண்டு கூட்டுப் பொருள்கோள். (7)

## மாண்ட வீரரின் முகமலர்ச்சி

**9727** அளியிற் பொங்கு மங்கண
னேவு மயில் வாளிக்
களியிற் பட்டார் வாண்முக
மின்னுங் கரையில்ல
புளினத் திட்டிற் கண்ணகன்
வாரிக் கடல் பூத்த
நளினக் காடே யொப்பன
காண்மி னமரங்காள்.

'அளியின் பொங்கும் அங்கணன்
ஏவும் அயில் வாளிக்
களியில் பட்டார், வாள்முகம்,
மின்னும் கரையில்ல,
புளினத் திட்டின் கண் அகன்
வாரிக் கடல் பூத்த
நளினக் காடே ஒப்பன
காண்மின்—நமரங்காள்.

பொ:- அருள் ததும்புகின்ற அழகிய கண்களை யுடைய இராமன் ஏவுகின்ற கூரிய அம்புகளால் (இறக்க வாய்த்துளது என்ற வீரக்) களிப்போடு இறந்த அரக்கர்தம் மின்னுகின்ற அளவில்லனவாய ஒளி முகங்கள்,—மணல் மேடுகளாகிய திட்டுகளைக் கொண்ட இடம் அகன்ற, நீரினையுடைய கடலில் பூத்த தாமரைக் காடே போல்வன வற்றை, நம்மவர்களே! காணுங்கள்.

கு:- அளியின் பொங்கும் என்புழி 'இன்' தவிர்வழிச் சாரியை. அளிபொங்கும் அங்கணன் என்க. அளி—அருள். இறக்க நேர்ந்த போது இராமன் அம்பினல் இறக்கும் வாய்ப்புக் கிடைத்தமைக்கு

மகிழ்கின்ற மகிழ்ச்சியோடு இறந்து கிடக்கும் அரக்கர்களின் பொலிவு மிக்க ஒளிமுகங்களின் தோற்றம் தாமரை மலர்க்காடு போன்று காணப்படுகின்றன என்றவாறு. உவமையில் கடலுக்கு அடையாக வந்த புளினத் திட்டிற்கேற்பப் பிணமலைகளும் வாரிக் கடல், என்றதற் கேற்பக் குருதிநீரும் பொருளிலும் வருவித்துக் கொள்க. பிணமலைகளும் குருதிநீர் வெள்ளமும் நிறைந்த போர்க்களத்தில் இராமன் அம்பு களால் மகிழ்ச்சியோடு இறந்து கிடக்கும் அரக்க வீரர்களின் அளவில்லாத ஒளிமுகங்களின் தோற்றம், மணற் குன்றுகளையும் நீரினையும் உடைய இடமகன்ற கடலில் பூத்த தாமரை மலர்களின் காடு போன்றன என்க. வீரர் முகம் இறந்த பின்னும் மலர்ந்தே யிருக்கும் என்பதை: 'பருந்தினமுங் கழுகினமுந் தாமே யுண்ணப் பதுமமுகம் மலர்ந்தாரைப்பாரீமின்'' (கலிங்கத்துப்பரணி—477 என்றதால் அறியலாம். (8)

## குதிரைகள் இல்லாத் தேர்கள் இரத்த வெள்ளத்தில் நாவாய் போலத் தோன்றுதல்

**9728** பூவாய் வாளிச் செல்லெறி
காலைப் பரிபொன்றக்
கோவாய் விண்சேர் வெண்கொடி
திண்கா லொடுகூட
மாவாய் திண்டேர் மண்டுத
லானீர் மறிவேலை
நாவாய் மானச் செல்வன
காண்மி னமரங்காள்.

'பூவாய் வாளிச் செல் எறி காலைப் பரிபொன்ற,
கோவாய் விண்சேர் வெண்கொடி திண்காலொடு கூட,
மாவாய் திண்தேர் மண்டுதலால் நீர், மறிவேலை
நாவாய் மானச் செல்வன காண்மின்—நமரங்காள்;

பொ:- கூர்மை பொருந்திய அம்பாகிய இடி தாக்கியபோது, தன்னிடத்துப் பூட்டப்பட்டிருந்த குதிரைகள் இறந்துபட்டமை யாலும், சூரிய கிரணம் வாய்க்கப் பெற்றுள்ள ஆகாயத்தில் சேர்ந்து பறக்குமாறு தன்பால் கட்டப்பட்ட கொடி திண்ணிய காற்றோடு சேர்ந்து பறப்பதாலும், அழகு பொருந்திய திண்ணிய தேர், இரத்தநீர்

செலுத்துதலால், அலைகள் மறித்து வீசுகின்ற கடலில் ஓடுகின்ற பாய் மரக் கப்பலைப் போலச் செல்வனவற்றை நம்மவர்களே! காணுங்கள்.

கு:- பூ—கூர்மை. செல்—இடி. இராமனுடைய அம்புகளால் குதிரைகள் இறந்துபட்டமையால், தன் கொடிகள் காற்றில் பறக்க, இரத்த வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்படும் தேர்கள், பாய் மரத்தோடு கடலில் செல்கின்ற கப்பல்களை ஒத்துத் தோன்றுகின்றன என்றவாறு. வெண்கொடிகள் காற்றில் பறக்கும் தோற்றம் பாய்மரம் போலும்; இரத்த வெள்ளம் கடல் போலும்; தேர்கள் அக் கடலில் ஓடும் நாவாய் போலும் என உவமையை விரித்துக் கொள்க. தேர்ப்பரி பொன்றியது, தேர் நாவாய் போலுதற்கு ஏதுவாயது. கோ—சூரிய கிரணம். மா—அழகு. மண்டுதல்—செலுத்துதல். நீர் என்றது குருதி நீரை. வாளிச் செல் என்றது உருவகம். அம்பாகிய இடி என்றவாறு.

யானைகள் உயிரோடும் இரத்த வெள்ளத்தோடு கடலையடைதல்

9729 ஒழுகிப் பாயு மும்மத
வேழ முயிரோடும்
எழுகிற் கில்லாச் செம்புனல்
வெள்ளத்திடை யீர்ப்பப்
பழகிற் றில்லாப் பஃறிரை
தூங்கும் படர்வேலை
முழுகித் தோன்று மீனர
சொக்கும் முறை காணீர்.

"ஒழுகிப் பாயும் மும்மத வேழம் உயிரோடும்
எழுகிற்கில்லாச் செம்புனல் வெள்ளத்திடை யீர்ப்ப,
பழகிற்றுஇல்லாப் பல்திரை தூங்கும் படர்வேலை
முழுகித் தோன்றும் மீன் அரசு ஒக்கும் முறை காணீர்.

பொ:- கன்னம், கபோலம், பீசம் என்ற உறுப்புகளினின்று ஒழுகித் தரையில் பாய்கின்ற மூன்று மதங்களையுடைய யானைகள் உயிரோடிருந்தும் எழுதற்கு இயலாத இரத்த வெள்ளத்தில் அகப்பட்டு அவ்வெள்ளம் இழுத்துச் சென்றமையால் முன் பழகுதல் இல்

லாத பல அலைகள் மடங்கி வீசுகின்ற பரவிய கடலில் (முழுகித் தோன்றுதல்) (அக் கடலில்) முழுகித் தோன்றும் மகர மீனை ஒத்துத் தோன்றும் முறையினைக் காண்பீர்களாக.

கு:- இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து எழுதற்கில்லாது கடலில் சென்று சேர்ந்து முழுகித் தோன்றும் உயிருள்ள யானைகளின் தோற்றம், கடலில் முழுகித் தோன்றும் மகர மீன்களை ஒத்து விளங்குகின்றது என்றவாறு. இதனால் அப் போரில் தோன்றிய இரத்த வெள்ளம் யானைகளையும் இழுத்துக் கொண்டு கடலிடைக் கலக்கும் பெருமையதாக இருந்தது என்பது புலப்படுத்தியவாறு. மீன் அரசு என்றது இங்கு மகர மீனினை. என்னை? யானையோடு ஒப்புமையுடையது அம் மீனே ஆதலின் என்க. "புழையுடைத் தடக்கை யொன்றோ டொன்றிடைப் பொருந்தச் சுற்றிக் கழையுடையக் குன்றின் முன்றில் உருமொடு கலந்த கால, மழையெனப் பொருத வேலை மகரமும் மத்த மாவும்'' (சேதுபந்தனப்—21) என்புழி, வேலை மகரமும் மத்த மாவும் தம்முள் ஒப்புமையுடைமையால் பொருதமை கூறப்பட்டிருத்தல் காணலாம். இதனால் மகரமீன் யானைபோலத் துதிக்கையுடையது என்பது புலனாகும். மலையிடைப் பிறந்த யானைகள் தாம் பழகாத கடலிடைச் சென்று உயிரோடு மூழ்கி மேலெழும் தோற்றம், அக் கடலில் வாழும் மகர மீன்கள் போலத் தோன்றுதல் இயல்பேயாதல் காண்க. (10)

## கவந்தமாடுதல்

9730 கடக்கா ரென்னப் பொங்கு
கவந்தத் தொடுகைகள்
தொடக்கா நிற்கும் பேயில
யத்தின் றொழில் பூண்ட
மடக்கோ வில்லா வார்படி
மக்கூத் தமைவிப்பான்
நடக்கால் காட்டுங் கண்ணுள
ரொக்குந் நமரங்காள்.

'கடக்கார் என்னப் பொங்கு
கவந்தத்தொடு கைகள்
தொடக்கா நிற்கும் பேய்,
இலயத்தின் தொழில் பூண்ட

மடக்கு ஒவில்லா வார் படிமக்
கூத்து அமைவிப்பான்,
நடக்கால் காட்டும் கண்ணுளர்
ஒக்கும்—நமரங்காள்!

பொ:- நம்மவர்களே! மதம் பொழியும் யானை என்னும்படி கிளர்ந்தாடுகின்ற கறுத்துப் பருத்த அரக்கரின் தலையற்ற உடம்புகளின் ஆடலுக்கு ஏற்பத் தன் கைகளைச் சேர்த்துத் தாளம்போடும் பேய்; தாளமிடும் தொழிலைச் செய்துகொண்டு உடம்பின் உறுப்புகள் மடங்குதல் ஒழியாத (மிகுதியாக மடங்கச் செய்கின்ற) நீண்ட அபிநயக்கூத்தினை மாணாக்கர்க்கு அமையக் கற்பிக்கும் பொருட்டு நடனம் செய்யும் காலின் முறையைக் காட்டுகின்ற கூத்தரை ஒக்கும்.

கு:- கரிய நிறத்தாலும் பரிய உடம்பாலும் அரக்கர் உடம்பிற்கு யானை உவமையாயது. இலயம்—தாள ஒற்று. அபிநயம் செய்யுங்கால் உடம்பின் உறுப்புக்கள் பலவும் மடங்கியும் நீண்டும் தொழில்பட வேண்டியிருத்தலின் 'மடக்கோவில்லா வார்படிமக் கூத்து' என்றார். கூத்து அமைவிப்பான் என்றது கூத்தாசிரியனை. "கவந்தமாட முன்பு தங்களிப்பொ டாடு பேயினம் நிவந்த வாட லாட்டுவிக்கு நித்த கார ரொக்குமே" (கலிங்கத்துப்-432) என்ற செயங்கொண்டார் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். பேய், கூத்தாசிரியன் போன்றது; கவந்தம் கூத்துப் பயில்வோன் போன்றது. (11)

### நரம்புத் தொடக்கிலகப்பட்ட பேய் நழுவிப் போதல்

9731 மழுவிற் கூர்வாள் வன்ப
லிடுக்கின் வயவீரர்
குழுவிற் கொண்டந் நாடி
தொடக்காப் பொறிகூட்டித்
தழுவிக் கொள்ளக் கள்ள
மனப்பே யவைதள்ளி
நழுவிச் செல்லு மியல்பின
காண்மி னமரங்காள்.

"மழுவின் கூர் வாய் வன் பல் இடுக்கின் வயவீரர்
குழுவின் கொண்டந் நாடி தொடக்காப் பொறி கூட்டித்
தழுவிக் கொள்ள, கள்ள மனப் பேய் அவை தள்ளி
நழுவிச் செல்லும் இயல்பின காண்மின்—நமரங்காள்.

பொ:- (அற்று வீழ்ந்த தலையில் உள்ள) மழுவாயுதம் போன்ற கூரிய முனையையுடைய வலிய பற்களின் இடுக்கில் (இறந்துபட்ட) வெற்றி வீரர்களின் (உடம்பிலிருந்து வெளிப்பட்ட) கூட்டமான நரம்புகள் துடிதுடித்து மாட்டிக்கொண்டு (விலங்குகளைப் பிடிக்கும்) எந்திரம் போலத் தன்னைச் சேர்த்துத் தழுவிக் கொள்ள அதை யறிந்த கள்ள மனத்தையுடைய பேய் ஒன்று, அந்த நரம்புகளின் தொடர்பை மெல்லத் தள்ளி, அவற்றினின்றும் நழுவிச் செல்லுகின்ற இயல்பின வாதலை, நம்மவர்களே! காணுங்கள்!

கு:- இறந்துபட்ட வீரர்களின் உடம்பில் அறுபட்ட நரம்புகள் துடித்துக்கொண்டு அங்கு வீழ்ந்து கிடக்கும் தலையில் உள்ள கூரிய பற்களின் இடுக்கில் மாட்டிக் கொள்கின்றது; அவ்வழியில் தசை யுண்ண வந்த பேயின் கால்களில் அந் நரம்புகள் சூழ்ந்துகொண்டு எந்திரம்போல அப் பேயின் தலையருகே இழுக்கின்றது. அதையறிந்து கொண்ட அந்தப் பேய் அத் தலையருகே செல்லின் அப் பல்லிடுக்கில் தானும் அகப்பட வேண்டிவரும் என்று அறிந்து அந் நரம்புத் தொடக்குகளைத் தள்ளிவிட்டு மெல்லென நழுவிச் செல்கின்றது. அக் காட்சியை வீடணன் வானரர்க்குக் காட்டுகின்றான். அற்று வீழ்ந்த பின்னும் வீரர்களின் நரம்புகள் துடிப்பு அருமையின் இங்ஙனம் பேயினைத் தழுவிக் கொள்ளலாயது என்க. கொண்டந் நாடி என்புழி நகரம் விரித்தல் விகாரம். (12)

இறந்து மாறி வீழ்ந்து கிடக்கும் இரு யானைகள் இருதலை பெற்ற ஒரு விலங்குபோலக் காணப்படுதல்

**9732** பொன்னி னோடை மின்பிறழ்
 நெற்றிப் புகர்வேழம்
பின்னு முன்னும் மாறின
 வீழ்விற் பிணைவுற்ற
தன்னி னேரா மெய்யிரு
 பாலுந் தலைபெற்ற
என்னுந் தன்மைக் கேய்வன
 பல்வே றிவை காணீர்.

பொன்னின் ஓடை மின்பிறழ் நெற்றிப் புகர்வேழம்,
பின்னும் முன்னும் மாறின வீழ்வின் பிணைவுற்ற,
தன்னின் நேராம் மெய் இருபாலும் தலைபெற்ற
என்னும் தன்மைக்கு ஏய்வன பல்வேறு இவை காணீர்.

பொ: பொன்னொலியன்ற நெற்றிப் பட்டத்தின் ஒளிவிளங்கு கின்ற நெற்றியில் புள்ளிகளை யுடைய யானைகள் (இராமன் அம்பினால்) வீழுங்காலத்துப் பின்னும் முன்னும் மாறினவாய்ச் சேர்ந்து கிடப் பவை,—உடம்பின் இருபக்கத்தும் தனக்குத்தான் ஒப்பாகிய இருதலை களைப் பெற்ற விலங்குகள் இவை என்று சொல்லும் தன்மைக்குப் பொருத்தமாயுள்ள பல்வேறுபட்ட இக் காட்சிகளைக் காண்பீர் களாக.

கு:- இராமன் அம்பினால் இறந்து வீழும் யானைகள், ஓரிடத்தில் முன்னும் பின்னுமாக மாறி வீழ்ந்து கிடக்கின்றன. ஒரு யானையின் தலையுள்ள இடத்தில் மற்றொரு யானையின் பின்புறம் இருக்குமாறு மாறி வீழ்ந்தமையால் இரண்டு உடலும் ஒன்று சேர்ந்து ஒருடல்போல் தோன்ற இருபக்கத்தும் தலையுள்ள ஓர் அதிசய விலங்கு போலக் காணப்படுகின்ற காட்சியைப் பார்க்குமாறு வீடணன் வானரத் தலைவர்கட்குக் காட்டுகின்றான். பிணைவுறல், இரண்டுடலும் ஒன்று போல் சேர்ந்து கிடத்தல். வேழம் பிணைவுற்றவை இருபாலும் தலைபெற்றன என்னும் தன்மைக்கு ஏய்வன இவை காணீர் என இயையும். (13)

## கோபக் கனல் எரிகின்ற அரக்கரின் வாய்கள் ஓம குண்டம் போலுதல்

**9733** நாமத் திண்போர் முற்றிய
கோபந் நகை நாறும்
பாமத் தொன்னீ ரன்ன
நிறத்தோர் பகுவாய்கள்
தூமத் தோடும் வெங்கன
லின்னுஞ் சுடர்கின்ற
ஓமக் குண்ட மொப்பன
பல்வே றிவை காணீர்.

'நாமத் திண் போர் முற்றிய கோப நகை நாறும் பாமத் தொல்நீர் அன்ன நிறத்தோர் பகுவாய்கள், தூமத் தோடும் வெங்கனல் இன்னும் சுடர்கின்ற ஓமக் குண்டம் ஒப்பன பல்வேறு இவை காணீர்.

பொ:- பரவிய பழமையான கடல் நீர் போன்ற கரிய நிறத்தினை யுடைய அரக்கர்தம் அச்சம் விளைக்கின்ற திண்ணிய போரில் முதிர்ந்த கோபச் சிரிப்புத் தோன்றுகின்ற, பிளந்தாற் போன்ற, வாய்கள், (அவர்கள் இறந்து வீழ்ந்து கிடக்கும்) இப்பொழுதும், புகையோடு வெப்ப மிக்க கனல் எரிகின்றவை, ஓமகுண்டத்தை ஒப்பனவாகிய பல் வேறு பட்ட இக் காட்சிகளைக் காண்பீர்களாக.

கு:- சுடர்கின்ற என்பது அகர வீற்று வினைப்பெயர். பகுவாய் களாகிய சுடர்கின்றவை என இருபெயரொட்டு ஆக்குக. இனி, கோப நகை நாறுகின்றதும், சுடர்கின்றதும், ஆகிய பகுவாய்கள், ஓமக் குண்டம் ஒப்பன; இவை காணீர் என மாறிக் கூட்டலும் ஆம். நாமம்—அச்சம். பாமம்—பரவுதல். நிறத்தோர் என்றது கருநிற அரக்கரை. உயிரோடு உள்ள போது வாயில் தோன்றிய புகையும் கனலும் இறந்து வீழ்ந்த பின்னும் இருக்கின்றதை யுணர்த்த 'இன்னும் சுடர்கின்ற' என்றார். இயக்கமின்றிக் கிடக்கும் அரக்கர்களின் பகுவாய் களின் தூமமும் கனலும் விளங்குகின்ற தோற்றம் இடையறாது புகை யும் கனலும் தோன்றிக் கொண்டிருக்கும் ஓம குண்டத்தை ஒத்தது என்றவாறு. (14)

### இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து கிடக்கும் யானைகளின் கொம்புகள்

**9734** மின்னும் மோடை யாடல்
வயப்போர் மிடல்வேழக்
கன்னம் மூலத் துற்றன
வெண்சா மரை காணீர்
மன்னும் மாநீர்த் தாமரை
மீதின் மகிழ்வெய்தி
அன்னம் மெல்லத் துஞ்சுவ
வொக்கின் றனவம்மா.

மின்னும் ஓடை ஆடல் வயப் போர் மிடல் வேழக்
கன்னம் மூலத்து உற்றன வெண்சாமரை காணீர்;
மன்னும் மாநீர்த் தாமரை மீதின் மகிழ்வு எய்தி
அன்னம் மெல்லத் துஞ்சுவ ஒக்கின்றன வம்மா!

பொ:- மின்னுகின்ற நெற்றிப் பட்டத்தையும் ஆடலையு முடைய வாய் வெற்றி காணத்தக்க போரில் வலிமை காட்டி வீழ்ந்த யானை களின் செவிகள் மேல் பொருந்தி யுள்ளனவாகிய வெண்மையான சாமரையைக் காணுங்கள்; நிலைபெற்ற மிக்க நீரில் பொருந்திய தாமரைமலர்மீதில் மகிழ்ச்சியுற்று அன்னப் பறவைகள் மெல்லத் தூங்குவன போன்றுள்ளன; என்னே வியப்பு!

கு:- இரத்த வெள்ளத்தில் இறந்து வீழ்ந்து கிடக்கும் யானை களின் காதுகள் மேல் வெண் சாமரைகள் வீழ்ந்து கிடக்கும் தோற்றம் தாமரை மலர்கள் மேல் அன்னங்கள் தூங்குவது போலக் காணப்படு கின்றது என்றவாறு. குருதி நீர் நிறைந்த போர்க்களம் நீர் நிறைந்த குளம் போன்றது; இரத்தம் தோய்ந்த யானைக் காதுகள் செந்தாமரை மலர் போன்றன; அக் காதுகளின் மேல் உள்ள வெண்சாமரைகள் அன்னப் பறவைகள் போல் உள்ளன என உவமையை விரித்துக் கொள்க. யானை எப்போதும் அசைந்தாடிக் கொண்டே இருக்கும் இயல்பினது ஆதலின், 'ஆடல். .வேழம்' என்றார். கன்னம்—காது. யானைக் காதுகளில் அழகுக்காக வெண் சாமரங்களைக் கட்டியிருந்தார் கள் என்க. கன்ன மூலத்துற்றன வெண் சாமரை தாமரை மீதில் அன்னம் துஞ்சுவ ஒக்கின்றன காணீர் என இயைப்பினும் ஆம். (15)

**9735** ஒளிம் முற்று துற்றுயர்
வேழத் தொளிர் வெண்கோ
டாளின் முற்றுச் செம்புனல்
வெள்ளத் தவை காணீர்
கோளின் முற்றுச் செக்கருண்
மேகக் குழுவின்கண்
நாளின் முற்று வெண்பிறை
போலுந் நமரங்காள்.

'ஒளிம் முற்றுது உற்ற உயர் வேழத்து ஒளிர் வெண் கோடு
ஆளின் முற்றுச் செம்புனல் வெள்ளத்தவை காணீர்;
கோளின் முற்றுச் செக்கருள் மேகக் குழுவின்கண்
நாளின் முற்று வெண்பிறை போலும்—நமரங்காள்!

பொ:- நம்மவர்களே! வீரர்களால் நிரம்பப் பெறாத இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து கிடக்கும் யானைக் கூட்டத்து நிரம்பியிராமல் போர்க் களத்தை அடைந்த உயர்ந்த, யானைகளின் விளங்குகின்ற

வெண்மையான கொம்புகளைக் காண்பீர்களாக! ஒளியில் நிரம்பாத செக்கர் வானத்துள் இருக்கும் மேகக் கூட்டத்தின் கண் நாள் நிரம்பாத வெண்பிறையைப் போலும்.

கு:- வெண் கோடு அவை என இயையும், உற்ற உயர் என்புழி அகரம் தொகுத்தல். ஒளி—யானைக் கூட்டம். வீரர்களின் பிணங்கள் இல்லாமல் யானைப்பிணங்களே நிரம்பியிருக்கும் இரத்த வெள்ளத்தைக் குறிப்பிட வேண்டி 'ஆளின் முற்றுச் செம்புனல் வெள்ளத்து' என்றார். கோள்—ஒளி. செக்கர் வானத்தின் இயல்பு புலப்படுத்த 'கோளின் முற்றுச் செக்கர்' என்றார். செக்கர் வானம் போன்றது இரத்த வெள்ளம்; மேகக் குழுப் போன்றது யானைகளின் கூட்டம்: வெண்பிறை போன்றது யானை வெண் கோடு என உவமையை விரித்துக் கொள்க. செவ்வானம் பரந்த விண்ணிடத்தில் கரிய மேகங்கள் இருத்தல் போல இரத்த வெள்ளத்தில் யானைகள் காணப்படுகின்றன என்றவாறு. யானைக் கோடும் பிறையும் வடிவாலும் நிறத்தாலும் ஒப்புமையுடையன ஆதலின் இங்ஙனம் உவமை கூறினர். (16)

### வீரர்களின் கண்ணெரியால் வெந்த தசையைப் பேய்கள் உண்டு மகிழ்தல்

**9736** கொடியும் வில்லுங் கோலொடு
தண்டுங் குவிதேரும்
துடியின் பாதக் குன்றின்
மிசைத்தோல் விசியுஞ்சுட்
டொடிவில் வெய்யோர் கண்ணெரி
செல்ல வுடன் வெந்த
தடியுண் டாடிக் கூளி
தடிக்கின்றன காணீர்.

'கொடியும் வில்லும், கோலொடு தண்டும், குவிதேரும்,
துடியின் பாதக் குன்றின்மிசைத் தோல் விசியும் சுட்டு
ஒடிவில் வெய்யோர் கண் எரி செல்ல, உடன் வெந்த
தடி உண்டு ஆடிக் கூளி தடிக்கின்றன காணீர்.

பொ:- பின் வாங்காத கொடிய வீரர்களின் கண்களில் தோன்றிய சினத்தீ, கொடிகளையும் விற்களையும் அம்புகளையும் தண்டுகளையும்

குவிந்த தேர்களையும், துடிபோன்ற அடியினையுடைய மலைபோன்ற யானைகளின்மேல் வாரினால் விசித்துக் கட்டிய அம்பாரிகளையும் சுட்டுச் செல்லா நிற்க, அவற்றுடன் வெந்த தசையை உண்டு ஆடிக் கொண்டு பேய்கள் பருக்கின்றன; பாருங்கள்.

கு:- தடி—தசை. வேகாத பச்சைத் தசையை உண்டு பழகிய பேய்கள், வெந்த தசையை உண்ட மகிழ்ச்சியினால் ஆடின; சுவை கருதி அதை மேலும் மேலும் உண்டமையால் தடித்தன என்க. ஒடிவு—பின் வாங்குதல். வெய்யோர் என்றது கொடுமை மிக்க வீரரை. அவர் கண்களில் தோன்றிய கோபத்தீயின் மிகுதி புலப்படுத்தியவாறு. கொடியும் வில்லும் அம்பும் தண்டும் தேரும் அம்பாரியும் எரி விரைந்து பற்றுதற்குரிய பொருள்களாதலின் அவற்றையே வீரர்களின் கண்ணெரி சுட்டுச் சென்றதாகக் கூறினார். கொடி முதலியன வீரர் கண்ணெரியால் எரிந்த போது அங்குள்ள பிணங்களின் தசையும் உடன் வெந்து பேய்கள் மிகுதியாக உண்டு பருத்தற்கேற்ற பக்குவமும் சுவையும் உடையவாயின என்க. துடியின் பாதக் குன்று என்றது யானையை. அதன்மேல் வார் கொண்டு கட்டிய அம்பாரியைத் 'தோல் விசி' என்றார். (17)

மகர மீன்கள் குருதி வெள்ளத்தைக் கடலென மருண்டுவந்து தம்மைக் கண்டு யானைகள் ஓடுவதால் உண்மையுணர்ந்து மீளல்.

9737 சகரம் முந்நீர் செம்புனல்
வெள்ளந் தடுமாற
மகர்ந் தம்மின் வந்தன
காணு மன்முட்கிச்
சிகர மன்ன யானைக
ளோடிச் செல நாணின்
நகரந் நோக்கிச் செல்வன
காண்மி னமரங்காள்.

'சகர முந்நீர் செம்புனல் வெள்ளம் தடுமாற,
மகரம் தம்மின் வந்தன காணா, மனம் உட்கிச்
சிகரம் அன்ன யானைகள் ஓடிச் செல, நாணின்
நகரம் நோக்கிச் செல்வன காண்மின்—நமரங்காள்.

பொ:- நம்மவர்களே! சகரரால் தோண்டப்பட்ட கடல் நீரும், (போர்க்களத்தில் உண்டான) இரத்த வெள்ளமும் தம்முள் கலந்து

விட்டமையால், (கடலில் வாழும்) மகரமீன்கள், (இரத்தவெள்ளத்தை கடலென மயங்கித்) தம்மோடு வந்து நிற்பனவற்றைக் கண்டு மலை போன்ற யானைகள் (தம்மை விழுங்கி விடுமோ என) மனம் அஞ்சி ஓடிச் செல்ல, (அவ் யானைகளின் செயலைக் கண்டு மகர மீன்கள்) நாணத் தோடு தம்மிருப்பிடமாகிய கடலை நோக்கிச் செல்வனவற்றைக் காணுங்கள்.

கு:- மகர மீன்கள் யானைபோன்று துதிக்கை யுடையன, கடலிலிருந்து இரத்த வெள்ளத்தின் வழியே போர்க்களத்திற்கு மருண்டு வந்த மகர மீன்கள், போர்க்களத்திலிருந்த யானைகளைத் தம்மினம் எனக் கருதி அவ்வியானைகளோடு சேர்ந்தன. வந்தடைந்த மகர மீன்களைக் கண்ட யானைகள் தம்மை விழுங்கி விடுமோ? என்று அவற்றைக் கண்டு அஞ்சி ஓடுகின்றன; அவை ஓடுவதைக் கண்ட மகர மீன்கள் தம் மயக்கவுணர்வு நீங்கி, இது போர்க்களத்து இரத்த வெள்ளமே; கடல் அன்று; இவை நம்மினமல்ல; என்று தெளிந்து நாணத்தோடு தம்மிருப்பிடமாகிய கடலை நோக்கிச் செல்கின்றன; அக்காட்சியை வீடணன் வானரர்க்குக் காட்டுகின்றான். யானைகளும் மகர மீன்களும் வடிவத்தால் ஒப்புமையுடையன என்பதை; "புழையுடைத் தடக்கை யொன்றோ டொன்றிடை பொருந்தச் சுற்றிக் கழையுடைக் குன்றின் மூன்றிலுருமொடு கலந்த கால, மழையெனப் பொருத வேலை மகரமும் மத்த மாவும்" (சேது பந்தனப்—21) என முன்னர்க் கூறியுள்ளதால் அறியலாம். நகரம்—இருப்பிடம். இங்கு மகர மீன்களுக்கு இருப்பிடமாகிய கடலைக் குறித்தது. (18)

விண்ணில் இறந்த அரக்கர் உடம்பு தம்மேல் வீழ்ந்தமையால்
மண்ணில் செல்வார் மடங்கு வீழ்ந்து மீளமுடியாது
வருந்தும் நிலை

9738 விண்ணிற் பட்டார் வெற்புறழ்
காயம் பலமென்மேல்
மண்ணிற் செல்வார் மேனியின்
வீழ மறைவுற்றார்
எண்ணிற் றீரா வன்னவை
நீக்கு மிடலில்லார்
கண்ணிற் றேன்றார் விம்மி
யுழக்கும் படிகாணீர்.

'விண்ணில் பட்டார் வெற்பு உறழ் காயம் பல, மென்மேல்
மண்ணில் செல்வார் மேனியின் வீழ, மறைவுற்ருர்,
எண்ணில் தீரா அன்னவை நீக்கும் மிடல் இல்லார்
கண்ணில் தோன்ருர் விம்மி உழக்கும் படிகாணீர்.

பொ:- விண்ணில் (செல்லும்போது இராமனது அம்பு பட்டு) இறந்தவர்களுடைய மலைபோன்ற உடம்புகள் பல, மண்ணில் நடந்து செல்வார்தம் மேனியின்மேல் மேலும் மேலும் வீழ்தலால் மறைவுற்ற வர்கள், அளவிடற்கரிய அப்பிணங்களை நீக்கிக்கொண்டு எழும் வலிமை இல்லாராய் நம் கண்ணுக்குத் தோன்ருராய்த் தேம்பித்தேம்பி வருந் தும் தன்மையைக் காண்பீர்களாக.

கு:- அரக்கர் விண்ணிலும் நின்று போர் செய்யும் இயல்பினராத லின் அங்கு நின்று இறந்து வீழ்ந்தார்கள் எனவும், வழியில் செல்வோர் மேல் அவர் உடம்புகள் மேலும் மேலும் வீழ்ந்தமையால் அவர்கள் அப்பிணங்களுக்கிடையில் அகப்பட்டு மறைந்து, அவற்றைத் தள்ளிக் கொண்டு வெளிவரும் ஆற்றல் இல்லாமையால் அப்பிணங்களுக்குக் கீழ் இருந்து கொண்டே தேம்பித் தேம்பி வருந்துகின்ருர்கள் என்றும் கொள்க. தேம்பி அழும் ஒலி கேட்கின்றதேயன்றி, அவர்கள் கண்ணுக் குத் தோன்றவில்லை என்பதைப் புலப்படுத்த 'கண்ணில் தோன்ருர் விம்மி உழக்கும் படி காணீர்' என்ருர். இங்குக் காண்டலாவது மனத் தால் நோக்குதல். இல்லார், தோன்ருர் என்பன முற்றெச்சங்கள். உழத்தல்—வருந்துதல். (19)

அரக்கர்களின் இரத்ததாரை பட்ட உச்சிச் சூரியன்
உதய சூரியனுகத் தோன்றுகை

**9739** அச்சிற் றிண்டே ரானையின்
மாமேற் காலாளின்
மொய்ச்சுச் சென்ருர் மொய்குரு
தித்தா ரைகண்முட்ட
உச்சிச் சென்ரு னுயினும்
வெய்யோ னுதயத்தின்
குச்சிச் சென்ரு னொத்துள
னுகுங் குறிகாணீர்.

'அச்சின் திண்தேர் ஆனையின்
மாமேல் காலாளின்
மொய்ச்சுச் சென்றார் மொய் குருதித்
தாரைகள் முட்ட,
உச்சிச் சென்றான் ஆயினும்
வெய்யோன், உதயத்தின்
குச்சிச் சென்றான் ஒத்துளன்
ஆகும் குறிகாணீர்.

பொ:- அச்சினையுடைய திண்ணிய தேரின் மேலும் யானையின் மேலும் குதிரையின் மேலும் காலாட் படையோடு நெருங்கிப் போர்க்குச் சென்ற அரக்கர்களின் (உடம்பிலிருந்து வெளிவரும்) நெருங்கிய இரத்தத் தாரைகள் (தன்மேல்) பாய்ந்தமையால் சூரியன், உச்சியில் சென்றவனாயினும், உதயமலையின் சிகரத்தில் தோன்று கின்றவனை (உதய சூரியனை) ஒத்து இருக்கும் குறிப்பைக் காண்பீர் களாக.

கு:- உச்சிப் போதில் வெளுத்துத் தோன்றவேண்டிய சூரியன் அரக்கர்களின் இரத்த தாரைகள் பாய்ந்தமையால், செந்நிறமடைந்து, உதய சூரியனாகவே காணப்படுகின்றான் என்றவாறு. மாமேல் என்பதி லுள்ள 'மேல்' இறுதிவிளக்காய் நின்று தேர்மேல், ஆனையின்மேல், என முன்னும் சென்றியைந்தது. காலாளினோடு மொய்ச்சுச் சென்றார் என, 'ஒடு' விரிக்க. சென்றார் என்பது வினையாலணையும் பெயராய் அரக்கரை உணர்த்தியது. முட்டுதல்—பாய்தல். மொய்ச்சு—மொய்த்து; நெருங்கி. போலி- உதயத்தின் குச்சி என்றது உதய மலையின் முகட்டினை. குச்சி—முகடு. நால்வகைப் படையாகச் சென்ற அரக்கர்கள் என்பார், 'திண்டேர் மேல் ஆனையின்மேல், மாமேல், காலாளினோடு மொய்ச்சுச் சென்றார்.' என்றார். அரக்கர்களின் உடம்பில் அம்புப்பட்ட விடங்களி லிருந்து பீறிட்ட இரத்த தாரைகள் சூரியனிடத்துச் சென்று பாய் கின்ற வேகமுடையன வாயின என்க. (20)

அரக்கரின் இரத்தம்பட்ட சந்திரன் சூரியனைப் போலுதல்

9740 காரேய் மேனிக் கண்டகர்
கண்டப் படுகொலை
ஆரே வென்ன விண்படர்
செஞ்சோ ரியதாகி

வேருய் நின்ற வெண்மதி
செங்கேழ் நிறம் விம்மி
மாரோர் வெய்யோன் மண்டல
மொக்கின் றதுகாணீர்.

கால் தோய் மேனிக் கண்டகர்
கண்டப் படுகாலை,
"ஆறோ!" என்ன, விண்படர்
செஞ்சோரியது ஆகி,
வேறாய் நின்ற வெண்மதி
செங்கேழ் நிறம் விம்மி,
மாறு ஓர் வெய்யோன் மண்டலம்
ஒக்கின்றது காணீர்.

பொ:- கருநிறம் தோய்ந்த மேனியினையுடைய கொடிய அரக்கர் துண்டப்படும்போது இதுவோர் ஆறு தானோ! என்று கண்டோர் கருதுமாறு அவருடம்பிலிருந்து விண்ணில் பரவிச் செல்கின்ற சிவந்த, இரத்தத்தின் தன்மையனாகி, வேறாக நின்ற வெண்மையான சந்திரன், செந்நிறம் மிக்கு, முன்னைச் சூரியனுக்கு மாறான ஒரு சூரியமண்டலம் போன்றுள்ளதைக் காண்பீர்களாக.

கு:- கால்—கருநிறம். கண்டகர்—முள்ளைப்போன்று துன்புறுத்துகின்ற அரக்கர். அரக்கர் உடம்பிலிருந்து மேலெழுகின்ற இரத்தப் பெருக்கினைக் காண்பவர்கள்; இதுவும் ஓராறோ! என ஐயுறுவர் என அந்த இரத்தத்தின் மிகுதி புலப்படுத்தியவாறு. சந்திரன் வேறு செஞ்சோரி வேறு எனப் பிரிக்கவியலாதபடி இரத்த வெள்ளம் தோயப் பெற்றான் சந்திரன் என்பார், 'செஞ்சோரியதாகி' என்றார். கேழ்நிறம் என்பன மீமிசைச் சொல். விம்முதல்—மிகுதல். வெண்டிங்கள் செஞ்சோரி பட்டமையால் செஞ்ஞாயிறுபோலத் தோன்றினான் என்றவாறு. முன்னரே சூரியன் விண்ணில் இருப்பதைக் காட்டினான் ஆகலின், அவனுக்கு மாறாக வேறோர் சூரியன் தோன்றியதுபோலச் சந்திரன் செந்நிறத்தனாகக் காணப்படுகின்றான் என்றவாறு. இனி, 'மாறோர் வெய்யோன்' என்பதற்குத் தனக்கு மாறுபட்ட தன்மையனாகிய சூரியன் எனவும் பொருள் கொள்ளலாம். மாறுபட்ட தன்மை யாவது, தண்மையும் வெண்மையும் உடையனாகச் சந்திரன் இருக்கச் சூரியன் வெம்மையும் செம்மையுமுடையனாக இருத்தலும் இரவில் வாராது பகலில் வருதலும் போல்வது. (21)

## குருதிக்கடல் படிந்த பறவைகளின் சிறகுகள் துளித்த குருதித் துளிகளைத் தாங்கிக் கானிலும் காவிலும் உள்ள மலர்களும் வண்டுகளும் செந்நிறம் பெறுதல்

9741 வானனைய மண்ணனைய வளர்ந்தெழுந்த
கொழுங்குருதி மகர வேலை
தானனைவுற் றெழும்பறவைச் சிறைதெளிந்த
புதுமழையின் றுள்ளி தாங்கி
மீனனைய நறும் போதும் விரையருந்துஞ்
சிறைவண்டு நிறம்வே றெய்திக்
கானகமுங் கடிபொழிலு முறியீன்ற
போன்றொளிர்வ காண்மின் காண்மின்.



வான் நனைய, மண் நனைய, வளர்ந்து எழுந்த
கொழுங்குருதி மகர வேலை
தான் நனைவுற்று எழும் பறவைச்சிறை தெளித்த
புதுமழையின் துள்ளிதாங்கி,
மீன் அனைய நறும் போதும் விரை அருந்தும்
சிறை வண்டும், நிறம்வேறு எய்தி,
கானகமும் கடிபொழிலும் முறி ஈன்ற போன்று ஒளிர்வ
காண்மின்! காண்மின்!

பொ:- வான் நனையவும் மண் நனையவும் (போர்க்களத்தில்) மிக்கு எழுந்த செழுமையான இரத்த வெள்ளம் கலந்த, மகர மீன்களை யுடைய, கடலில் உடல் நனைந்து எழுகின்ற பறவைகளின் சிறகுகள் தெளித்த புதிய மழையின் துளிகளைத் தாங்கி யிருக்கின்றமையால் விண்மீன் போன்ற வெண்மையான நறுமண மலர்களும் அம்மலரில் தேனை அருந்துகின்ற கருமையான சிறகுகளை யுடைய வண்டுகளும் வேற்று நிறம்பெற்றுக் கானகமும், மணமிக்க பொழிலும், செந்தளிர் களை யீன்றனபோல விளங்குகின்றனவற்றைக் காணுங்கள்! காணுங்கள்!

கு:- அரக்கரின் குருதிவெள்ளம் கலந்த கடலில் மூழ்கி உடல் நனையப்பெற்ற பறவைகள். சிறகடித்துக்கொண்டு காட்டிலும் பொழிலிலும் பறக்குங்கால் அச்சிறகுகள் தெளித்த புதுமையான இரத்த மழையின் துளிகளைத் தாங்கினமையால் அங்குள்ள வெண்

மலர்களும் கருவண்டுகளும் நிறம் வேறுபட்டுச் செந்நிறம் பெற்று விளங்கும் காட்சி, அக்காடும் சோலையும் செந்தளிர்களை யீன்றன போலக் காணப்படுகின்றது என்றவாறு. தளிர்கள் செந்நிற முடையவையாதலின், இரத்தத் துளிகளை யேற்றுக்கொண்டுள்ள மலர் களும் அம்மலரில் உள்ள வண்டுகளும் செந்நிறம் பெற்ற தோற்றத் திற்கு உவமையாயின. போர் நடக்கின்ற இடமட்டுமன்றிப் போர் நிகழாத கானகமும் கடிபொழிலும்கூட இரத்தத் துளிகளைத் தாங்கி யுள்ளமை காட்டியவாறு. மேகம் பொழியாமல் பறவைகளின் சிறகுகள் துளித்த மழையாதலின் புதுமழை எனப்பட்டது. துள்ளி- விரித்தல் விகாரம். மீன் என்றது விண்மீனை; வெண்மலர்கள் என்பதை உவமையால் விளக்கியவாறு. விரை என்றது இங்கு மணமுள்ள தேனை. நிறம்வேறெய்தி என்றது செந்நிறத்தைப் பெற்று என்றவாறு. குருதி கலந்த மகர வேலையைக் குருதி மகரவேலை என்றார். மகரமீனை யுடைய கடல் என்க. முறி—தளிர். (21)

## இரத்த ஆறு பேராறு போன்றமை

**9742** வரைபொருத மதயானைத் துணைமருப்புங்
கிளர்முத்து மணியும் வாரித்
திரைபொருது புறங்குவிப்பத் திறங்கொள்பணை
மரமுருட்டிச் சிறைப்புள் ளார்ப்ப
நுரைகொடியும் வெண்குடையும் சாமரையு
மெனச்சுமந்து பிணத்தி னோன்மைக்
கரைபொருது கடன்மடுக்குங் கடுங்குருதிப்
பேர்யாறு காண்மின் காண்மின்.

'வரை பொருத மத யானைத் துணைமருப்பும்
கிளர்முத்தும், மணியும், வாரி,
திரை பொருது புறம் குவிப்பத் திறங்கொள்பணை
மரம் உருட்டி, சிறைப்புள் ஆர்ப்ப,
நுரை, கொடியும், வெண்குடையும் சாமரையும்
எனச்சுமந்து, பிணத்தின் நோன்மைக்
கரை பொருது கடல் மடுக்கும் கடுங்குருதிப்
பேர்யாறு காண்மின்! காண்மின்!

பொ:- மலையொடு பொருத மதமிக்க யானையின் இரட்டையான தந்தங்களையும், அத்தந்தங்களில் தோன்றிய விளக்கமுள்ள முத்துகளை

யும் மணிகளையும் வாரிக் கொண்டு அலைகள் மோதி இரு புறங்களிலும் குவிக்க, கிளைகளைக் கொண்ட பருத்த மரங்களை உருட்டிக் கொண்டு, சிறகுகளோடு கூடிய பறவைகள் ஆரவாரிக்க, கொடியும் வெண்குடையும் சாமரையும் ஆகியவற்றை நுரையென்னுமாறு சுமந்து கொண்டு, பிணங்களாலாய வலிய கரையை மோதி உடைத்து விட்டுக் கடலில் சென்று கலக்கின்ற வேகத்தையுடைய இரத்தப் பேராற்றினைக் காணுங்கள்! காணுங்கள்!

வி:- போர்க் களத்திலிருந்து புறப்பட்ட இரத்த ஆறு, மலையிடைத் தோன்றிக் கடலொடு கலக்கும் பேர்யாறு போன்று, கடலில் கலக்கும் காட்சியைக் காட்டியவாறு. மலையில் தோன்றும் பேர்யாறு, யானை மருப்புகளையும் முத்துக்களையும் மணிகளையும் இரு புறங்களிலும் ஒதுக்கி விட்டுப் பெரிய மரங்களை உருட்டிக் கொண்டு நுரை மிக்கதாய் அணைக் கரையை யுடைத்துக் கொண்டு கடலிடைக் கலப்பது போல, இந்தப் போர்க் களத்துத் தோன்றிய இரத்த ஆறும், போரில் இறந்து பட்ட யானைகளின் கொம்புகளையும் அக்கொம்பிலிருந்து உதிர்ந்த முத்துகளையும் மணிகளையும் அலைகள் வாரி இரு புறங்களிலும் குவிக்க யானைப் பிணங்களாகிய பெரிய கிளைகளையுடைய மரங்களை உருட்டிக் கொண்டு கொடியும் குடையும் சாமரையுமாகிய நுரையைச் சுமந்து கொண்டு பிணங்களாலாய வலிய அணைக் கரையை இடித்து விட்டுக் கடலில் கலக்கின்றது என்றவாறு. மலையையும் தன்னைப்போன்ற யானையெனக் கருதிப் பொருத மதயானை மருப்பு எனவும், மலையிடைப் பொருத யானையின் உதிர்ந்த மருப்பு எனவும் இருபொருள் கொள்க. பணைமர முருட்டி என்றது குறிப்பு வேகம்; யானைப் பிணங்களாகிய மர முருட்டி என்றவாறு. கொடி, குடை, சாமரை என்பவற்றை நுரையெனச் சுமந்து என்றமை கொண்டு யானைப் பிணங்களை மரமென உருட்டி என்பதே கவியின் கருத்து என்பது புலப்படும். (23)

இதன்பின் மிகைப்பாடல்.

9742 a பரியினங்கள் கால்நீக்கி யொழுகுமவை
யிறவுநிகர் பருகக் காண்மின்
விரிபுனலின் யாமைகள்போல் வீரர்பட
விழும்பரிசை மிதப்பக் காண்மின்
அரியபெருங் குருதியினில் அங்குலியே
தோன்றிடநின் றரற்று மியானை
கரியவனை வரவழைக்கும் கயக்கயத்தை
யொக்கின்ற காண்மின் காண்மின்.

9743 கய்க்குன்றப் பெருங்கரைய நிருதர்புயக்
கற்செறிந்த கதலிக் கான
மொய்க்கின்ற பரித்திரைய முரட்கரிக்கைக்
கோண்மாவ முளரிக் கானின்
நெய்க்கின்ற வாண்முகத்த விழுங்குடரின்
பாசடைய நிணமென் சேற்ற
உய்க்கின்ற வுதிரநீ ரகன் குளங்க
ளுலப்பிறந்த வுவையுங் காண்மின்.

'கய்க்குன்றப் பெருங்கரைய, நிருதர்புயக்
கல்செறிந்த, கதலிக் கான,
மொய்கின்ற பரித்திரைய, முரண்கரிக்கைக்
கோள் மாவ, முளரிக்கானின்
நெய்க்கின்ற வான்முகத்த, விழும் குடரின்
பாசடைய, நிணம்என் சேற்ற,
உய்க்கின்ற உதிரநீர் அகன்குளங்கள்
உலப்பு இறந்த உவையும் காண்மின்.

பொ:- துதிக்கையை யுடைய மலைபோன்ற யானைப் பிணங்கள் ஆகிய கரையை யுடையனவும், அரக்கர் தம் தோள்களாகிய படிக்கற்கள் நெருங்கியுள்ளனவும், கொடிகளின் திரளாகிய வாழைக் கானத்தை யுடையனவும், நெருங்கியுள்ள குதிரைகளாகிய அலைகளை யுடையனவும், வலிய யானைகளின் துதிக்கையாகிய முதலைகளை யுடையனவும், தாமரைக் காடு போன்று பளபளக்கின்ற ஒலியையுடைய முகங்களை யுடையனவும், கொழுப்பு ஆகிய சேற்றினை யுடையனவும், (இராமன் அம்பு பட்ட அரக்கர் தம் உடம்புகள்) சொரிகின்ற இரத்தமாகிய நீரையுடையனவும் ஆகிய அகலமான குளங்கள் எண்ணத் தொலையாதனவாயுள்ள இவற்றையும் காண்பீர்களாக.

கு:- கரையும், படிக்கற் செறிப்பும், வாழைக் கானமும், அலைகளும், முதலைகளும், தாமரைக் கானமும், பாசிலையும், சேறும் நீரும் உள்ள குளங்கள் போலக் களத்தில் பல பள்ளங்கள் தோன்றுவது கண்டு அவற்றை உருவகம் செய்து காட்டியவாறு. கய்க்குன்றம் என்றது யானையை. யானைப் பிணங்களாகிய கரை என்றவாறு. கதலி என்பது வாழைக்கும் துகிற்கொடிக்கும் பொதுவான சொல்லாதலின் உருவக வாய்பாட்டால் விரிக்காது 'கதலிக் கான' என்றார். கொடிக்

கானமாகிய வாளைக் கானத்தையுடைய குளங்கள் என்று விரித்துக் கொள்க. குதிரைகளை அலைகளாகக் கூறுவது மரபு. "மறி திரை யொடு திரை மலைத்தபோல் வருபரி யொடுபரி மலைக்கவே" (கலிங்கத் துப் பரணி—406) என்றது காண்க. யானையின் துதிக்கை முதலை போன்ற தோற்ற முடையது ஆதலின், 'கரிக்கைக் கோண்மா' என உருவகஞ் செய்தார். வாண் முகமாகிய முளரிக் கானத்தையுடைய குளங்கள் என மாற்றி உருவகத்திற்கேற்ப அமைக்க. வீரர்கள் இறந்து பட்டபோதும் அவர்கள் முகம் தாமரை மலர் போல மலர்ந்திருக்கும் ஆதலின், 'முகமாகிய முளரிக் கானம்' என்றார். நெய்த்தல்—பளபளத் தல். "மிடையுற்ற தேர்மொட்டு மொட்டொக்க, வெஞ்சோரி நீரொக்க, வீழ் தொங்கல் பாசடை யொக்க அடு செங்களம் பங்கயப் பொய்கை ஆமாறு காண்மின்களே" (கலிங்கத்துப்—487) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும், உலவை, சுட்டு. கரைய, செறிந்த, கான, மாவ, முகமுளரிக் கான, பாசடைய, சேற்ற, குளங்கள் எனக் குறிப்புப் பெயரெச்சங்களாக்கி முடிக்க. (24)

### போர்க்களம் மருத நிலம் போல்கின்றது

**9744** நெடும்படைவா ணாஞ்சிலுழு நிணச்சேற்றி
னுதிரநீர் நிறைந்த காப்பின்
கடும்பகடு படிகிடந்த கரும்பரம்பி
னினமள்ளர் பரந்த கையிற்
படுங்கமல மலர்நாறு முடிகிடந்த
பெருங்கிடக்கை பரந்த பண்ணைத்
தடம்பணையி னறும்பழனந் தழுவியதே
யெனப்பொலியும் தகையுங் காண்மின்.

'நெடும்படைவாள் நாஞ்சில் உழு நிணச் சேற்றின்
உதிரநீர் நிறைந்த காப்பின்,
கடும்பகடு படிகிடந்த கரும்பரம்பின்,
இனமள்ளர் பரந்த கையின்,
படுங்கமல மலர்நாறு முடிகிடந்த
பெருங்கிடக்கை, பரந்த பண்ணைத்
தடம்பணையின், நறும்பழனம் தழுவியதே
எனப் பொலியும் தகையும் காண்மின்.

பொ:- நீண்ட வாட்படையாகிய கலப்பையால் உழுத நிண மாகிய சேற்றினை யுடைமையாலும், இரத்தமாகிய நீர் நிறைந்த தேக்கங்களை யுடைமையாலும், (விரைந்து செல்லும் எருமைகளோடு தரையில் கிடந்த கரிய பரம்பு அடிக்கும் பலகையைக் கொண்டுள்ளது போல) விரைந்து செல்லும் யானைப் பகடு படிந்து கிடந்த கரிய பரப் பினை யுடைமையாலும், (இனமொத்த உழும் மள்ளர் பரவியுள்ள பக்கங்களைக் கொண்டுள்ளது போல) இனமொத்த போர் மள்ளர்கள் பரவியுள்ள பக்கங்களை யுடைமையாலும், (களையாகப் பொருந்திய கமல மலரோடு நாற்று முடிகள் கிடந்த பெரிய இடக்கைகளைக் கொண்டுள்ளது போல,) கண்ணியாகப் பொருந்திய கமல மலர்நாறும் முடி மகுடங்கள் கிடந்த பெரிய கிடக்கைகளைக் கொண்டுள்ளமையா லும், (பரந்த வயல்களோடு பெரிய மருத நிலப் பாறைகளைக் கொண் டுள்ளது போல) பரவிய கூட்டமான பெரிய முரசங்களைக் கொண் டுள்ளமையாலும், (போர்க்களம்) நறுமணம் வீசும் மருத நிலம் வந்து சேர்ந்துள்ளதே போல விளங்கும் தன்மையையும் காண்பீர்களாக.

கு:- போர்க்களம் மருத நிலம்போலக் காணப்படுகின்றது என் பதை உருவக அணியாலும் சிலேடையணியாலும், ஏதுக்களைக் கற்பித் துக்கூறி நிறுவியுள்ளமையால் இது, உருவகத்தையும் சிலேடை யையும் உறுப்பாகக் கொண்டு வந்த ஏதுத் தற்குறிப்பேற்ற அணியாகும். வாளாகிய நாஞ்சில், நிணமாகிய சேறு, உதிரமாகிய நீர் என்பன உரு வகங்கள். பகடு என்பது யானையையும் எருமையையும் குறிக்கும் பொதுச்சொல். மள்ளர் என்பது அவ்வாறே உழவரையும் வீரரையும் குறிக்கும் பொதுச்சொல். பரம்பு என்பது, வயலில் பரம்படிக்கும் பலகை, பரவியுள்ள இடம் என்ற இருபொருளது. நாறு முடி என்பது நாற்று முடியையும் மணநாறும் மகுடத்தையும், பண்ணை என்பது வயல்களையும் கூட்டத்தையும் குறித்தன. பணை என்பது மருதப் பறையையும் முரசத்தையும் குறித்தது. இப்பொதுச் சொற்களால் இரு பொருள் தோன்றக் கூறியுள்ள திறம் நினைத்தற்குரியது. சேற் றின், காப்பின், பரம்பின், கையின், பெருங்கிடக்கையின், தடம்பணை யின் பழனந் தழுவியதே எனப் பொலியும் என்க. கிடக்கையின் என் புழி இன் தொக்குகின்றது. மருத நிலத்தில் எருமைப் பகடுகளோடு பூமியில் கிடந்த கரிய பரம்பு அடிக்கும் பலகை யிருப்பது போலப் போர்க்களத்தில் விரைந்து செல்லும் யானைப் பகடுகள் படிந்து கிடந்த கரிய நிலப்பரப்பு இருக்கின்றது எனவும், மருதத்தில் இனமான உழு மள்ளர் பக்கங்களில் இருப்பது போலப் போக்களத்தில் இனமொத்த போர் மள்ளர் இருக்கின்றனர் எனவும், மருத நிலத்துக் களை யாகப் பொருந்திய கமல மலர்களோடு நாற்று முடிகள் கிடந்த பெரிய கிடக்கைகள் இருப்பது போலப் போர்க்களத்தில் கண்ணியாகப் பொருந்திய கமல மலர் நாறும் மகுடங்கள் வீழ்ந்து கிடந்த பெரிய

கிடக்கைகள் இருக்கின்றன எனவும், மருத நிலத்தில் பரவிய வயலி களோடு பெரிய மருத நிலப்பறைகள் இருப்பது போலப் போர்க்களத் தில் பரவிய கூட்டமான பெரிய முரசங்கள் இருக்கின்றன எனவும் கூறியவாறு. இக்காரணங்களால் புலால் நாறும் போர்க்களம் பூநாறும் மருத நிலம் போலக் காணப்படுகின்றது என்றவாறு. பரம்புப் பலகை சேற்றில் கிடந்து பழகியமையால் கரும் பரம்பு ஆயிற்று. வாட்படை என மாறுக. நீர் நிறைந்த காப்பு என்பது நீர்த்தேக்கங்களை. இரா வணன் பிரமன் வழித் தோன்றலாகலின் அவன் முடியில் கமல மலர்க் கண்ணி சூடுதல் மரபு. அவ்விராவணன் வழி வந்த அரக்கர் முடிகளி லும் அக் கமல மலர்க் கண்ணி சூடப் பெற்றிருந்தன. இராமன் கணை களால் அவர் முடிகள் படியில் உருளும் போது கமல மலர் நாறும் முடி களாக அவை விளங்கின என்க. (25)

இரத்தப் பரப்பில் சுழிகள் தோன்றுவதைக் காட்டுதல்.

**9745** வெளிநீர்த்த வரைபுரையு மடலரக்க
ருடல்விழவும் வீரன் வில்லின்
ஒளிநீர்த்த முழுநெடுநா ணுருமேறு
பலபடவு முலகங்கீண்டு
நளிநீர்த்த நாகபுரம் புக்கிழிந்த
பகழிவழி நதியி னோடிக்
களிநீர்த்துப் புகமண்டுங் கருங்குருதித்
தடஞ்சுழிகள் காண்மின் காண்மின்.

வெளில்தீர்த்த வரைபுரையும் அடல் அரக்கர்
உடல்விழவும், வீரன் வில்லின்
ஒளிறுஊர்த்த முழுநெடுநாண் உரும்ஏறு
பலபடவும், உலகம்கீண்டு
நளில்தீர்த்த நாகபுரம் புக்கு இழிந்த
பகழிவழி, நதியின் ஓடி
களிறுஊர்த்துப் புகமண்டும் கடுங்குருதிக்
தடஞ்சுழிகள் காண்மின்! காண்மின்!

பொ:- வெற்றிடம் இல்லாத (செறிந்த) மலையினை ஒத்த வலிய அரக்கர்களின் உடல்கள் தரையில் வீழவும், இராமனது வில்லின் ஒளிரு கின்றதாய்க் காதளவு இழுக்கப் பெற்ற முழுமையுடைய நீண்ட நாண் ஒலியால் இடியேறுகள் பல வலியிழந்து வீழவும், (அந்த நாளிலிருந்து

புறப்பட்டு) உலகத்தைக் கிழித்துக்கொண்டு செறிவு இல்லாத (உட்குடைவுள்ள) தூய நாகர் உலகில் புகுந்து இறங்கிய அம்பு சென்ற வழியே ஆறுபோல் ஓடி யானைகளை இழுத்துக் கொண்டு நாகர் உலகம் புகுதற்கு நெருங்குகின்ற வேகத்தினை யுடைய இரத்த வெள்ளத்தில் பெரிய சுழிகளைப் பாருங்கள்! பாருங்கள்!.

கு:- இராமனது அம்பு உலகத்தைக் கிழித்துக்கொண்டு பாதாளத்தில் புகுந்து இழிகின்றது; அந்த அம்பு சென்ற வழியில், இரத்த வெள்ளம் ஆறுபோல் விரைந்து ஓடிப் புகுகின்றது; அவ்வாறு புகுவதால் இரத்த வெள்ளத்தில் பெரிய சுழிகள் தோன்றுகின்றன; அச்சுழிகளையே வீடணன் வானர வீரர்க்குக் காட்டுகிறான். வெள்ளில் வெளில் எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. வெள்ளில்—வெற்றிடம். உட்புரையில்லாது செறிந்துள்ள மலை என்பார் 'வெளில் தீர்த்த வரை' என்றார். வீரன் என்றது இராமனை. விலலின் நாண் என்க. நாண் என்றது ஆகு பெயராய் நாணின் ஒலியை உணர்த்தியது. நாணின் ஒலி கேட்ட அச்சத்தால் அடலரக்கர் உடல்கள் விழுந்தன; உருமேறுகள் பல வலியிழந்து விழுந்தன. இராமன் வில் நாணொலி செய்து விட்ட அம்பு, உலகத்தைக் கிழித்துக் கொண்டு நாகர் உலகத்தில் புகுந்தது என்றது, இராமனது வில்லாற்றலைப் புலப்படுத்தியது. அந்த அம்பு புகுந்த வழியே இரத்த வெள்ளம் யானைகளை இழுத்துக் கொண்டு பாதலம் புகுவதால் இரத்தப் பரப்பில் பெருஞ்சுழிகள் தோன்றுகின்றன என்றது, அரக்கர்களின் பேரழிவை அறிவித்தது. ஒளிறு நாண்; ஈர்த்த நாண்; என இயையும். நள்—செறிவு. நளில் என்பது செறிவு இல்லாமல் உட்குறைவுடைய நாகர் உலகத்துக்கு அடை. தீர்த்தம்—தூய்மை.

இராமன் அம்பு அரக்கருடலில் தங்காமல் சென்றமை.

9746 கைத்தலமுங் காத்திரமும் கருங்கழுத்து
நெடும்புயமு முரமுங் கண்டித்
தெய்த்திலபோய்த் திசைகடொறு மிருநிலத்தைக்
கிழித்திழிந்த வென்னி னல்லால்
மத்தகரி வயமாவின் வாணிருதர்
பெருங்கடலின் மற்றிவ் வாளி
தைத்துளதாய் நின்றதென வொன்றேயுங்
காண்டரிய தகையுங் காண்மின்.

"கைத்தலமும், காத்திரமும், கருங்கழுத்தும்
நெடும்புயமும், உரமும், கண்டித்து
எய்த்திலபோய், திசைகள்தொறும் இருநிலத்தைக்
கிழித்து இழிந்து என்னின் அல்லால்,
மத்தகரி வயமாவின் வாள்நிருதர்
பெருங்கடலின் மற்று இவ்வாளி
தைத்துளதாய் நின்றதுஎன ஒன்றேயும்
காண்பரிய தகையும் காண்மின்.

பொ:- யானைகளின் துதிக்கைகளையும் முன்னங்கால்களையும் பெரிய கழுத்தினையும் நெடிய புயத்தினையும் மார்பையும் துண்டித்து விட்டு இளைக்காமல் சென்று திசைகள் தோறும் பெரிய நிலத்தைக் கிழித்துக் கொண்டு பாதலத்தில் இறங்கின என்று சொல்லுதலைத் தவிர்த்து மதத்தையுடைய வலிய யானையின் கண்ணும் வாளையேந்திய அரக்கர்தம் பெரிய கடலின் கண்ணும் இந்த இராமன் அம்பு தைத்துக் கிடப்பதாய் நின்றது என்று சொல்லுமாறு ஒன்றேயும் காணுதற்கு அரிய தன்மையும் பாருங்கள்.

கு:- காத்திரம்—யானையின் முன் கால், "காத்திரங்களால் தலத் தொடுற் தேய்த்ததோர் களிறு" (பால—வரைக்—6) என முன்னும் சொன்னது காண்க. கைத்தலம் என்றது. யானையின் துதிக்கை நுனியை. கருங்கழுத்து என்புழிக் கருமை பெருமை யுணர்த்தியது. துதிக்கைக்கேற்ப அக்கையின் மேற் பாகத்தைப் புயம் என்று குறித்த வாறு. இனி இங்குக் கூறியன எல்லாம் யானையின் உறுப்பாகக் கொள் ளாமல் அரக்கர்களின் உறுப்பாகக் கொள்ளலும் ஆம். அவ்வாறு கொள் ளுங்கால் காத்திரம் என்பது உடம்பை உணர்த்தியதாகக் கொளல் வேண்டும், எய்த்தல்—இளைத்தல். கரியாகிய வலிய விலங்கு என்க. வயமாவின் கண்ணே, நிருதர் பெருங்கடலின் கண்ணே, இவ்வாளி தைத்து நின்றதென ஒன்றேயும் காண்டல் அரிது என்க. இதனல், இராமனது தூய அம்பு தீய அரக்கர் உடலில் தங்காது அப்புறம் போய்ப் பாதலத்தில் இறங்கியது என்பது புலப்படுத்தியவாறு. (27)

மடிந்து கிடந்த மத்த யானைகள்.

9747 குமுத நாறு மதத்தன கூற்றன
சமுத ரோடு மடிந்தன சார்தரும்
திமிர மாவன்ன செய்கைய வித்திறம்
அமுதின் வந்தன வையிரு கோடியால்.

'குமுதம் நாறும் மதத்தன, கூற்றன,
சமுத ரோடு மடிந்தன, சார்தரும்
திமிர மாவன்ன செய்கைய இத்திறம்
அமுதின் வந்தன ஐஇரு கோடியால்.

பொ:- குமுத மலரின் மண நாறுகின்ற மதத்தினையுடையனவும் எமன்போன்ற கொலைச் செயலை யுடையனவும், தம்மேல் வந்த பாக ரோடும் மடிந்து கிடப்பனவும், (முன்) சார்கின்ற கரும் பன்றி போன்ற செய்கை யுடையனவும், ஆகிய இத்தகைய யானைகள், முன்பு பாற் கடலில் அமுதத்தோடு பிறந்தன; பத்துக்கோடி என்னும் அளவினை யுடையன.

கு:- சமுதர் என்றது தம்மோடு ஒத்துப் பழகும் பாகர்களை. திமிரமா என்றது இருள் நிறமுடைய பூவராகத்தை. பூமியைப் பிரளய வெள்ளத்திலிருந்து தூக்கிய பூவராகம் போன்று வலிய செயலைச் செய்யும் தன்மையுள்ள பத்துக் கோடி யானைகள் இப்போது இராமன் அம்பினால் பாகரோடு மடிந்து கிடக்கின்றன என்று காட்டிக் கூறிய வாறு. பாற்கடலில் தோன்றியதால் இத்தகைய பெருமை யுடையன ஆயின என்க. (28)

அயன் வேள்வியில் தோன்றிய யானைகள்

9748 ஏறு நான்முகன் வேள்வி யெழுந்தன
ஊறு மாரியு மோங்கலை யோதமும்
மாறு மாயினு மாமத வாய்வரும்
ஆறு மாறில வாறிரு கோடியால்.

'ஏறு நான்முகன் வேள்வி எழுந்தன,
ஊறும் மாரியும், ஓங்கு அலை ஓதமும்,
மாறும் ஆயினும், மாமதமாய் வரும்
ஆறு மாறில, ஆறு – இரு கோடி யால்.

பொ:- பெய்கின்ற மழையும், உயர்ந்த அலைகளையுடைய கடலும் நீர் வறந்து மாறுபட்டாலும். கரிய மதநீராய் வருகின்ற ஆறு மாறப் பெறாதனவான இந்தப் பன்னிரண்டு கோடி யானைகள்—பெருமை யுடைய பிரமனது வேள்வியில் தோன்றினவாகும்.

கு:- ஊறுதல்—சுரத்தல். இங்குப் பெய்தலை உணர்த்தியது. ஓதம் அலை; ஆகுபெயரால் கடலை உணர்த்தியது. மாரியும் கடலும் வறளுதல் இல்லை ஆதலின், அவற்றைக் கூறி யானைகள் மதம் ஊறுதல் மாறுமை வலியுறுத்தியவாறு. "பால் புளிப்பினும் பகல் இருளினும்" என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (29)

## ஐராவதத்தின் மரபில் வந்த யானைகள்

**9749** உயிர்வ றந்து முதிரம் வறந்துதம்
மயர்வ றந்து மதமற வாதன
புயல வன்றிசைப் போர்மத யானையின்
இயல்ப ரம்பரை யேழிரு கோடியால்.

'உயிர் வறந்தும், உதிரம் வறந்து தம்
மயர் வறந்தும், மதம் மறவாதன,
புயலவன் திசைப் போர்மத யானையின்
இயல் பரம்பரை ஏழ்—இரு கோடியால்.

பொ:- உயிர் நீங்கியும், உடம்பிலுள்ள உதிரம் வறந்தும், தம் மதமயக்கம் மாறியும் மதம்மட்டும் நீங்காதனவாகிய இவ் யானைகள்— மேக வாகனனாகிய இந்திரன் தன் திசையிலுள்ள போர்த் திறமிக்க மதம் வாய்ந்த ஐராவதத்தின் பொருத்தமான மரபில் தோன்றியன; பதினான்கு கோடி என்னும் அளவின.

கு:- இறந்து கிடக்கும் பதினான்கு கோடி யானைகளைக் காட்டி அவற்றின் மரபும் எண்ணிக்கையும் கூறி விளக்கியவாறு. இவ் யானைகள் உயிர் நீங்கிய பின்னும் மதம் சொரிந்து கொண்டேயிருந்தன என அவற்றின் மதச் சிறப்புப் புலப்படுத்தியவாறு. (30)

## வடதிசை யானையின் வழிவந்த யானைகள்

**9750** கொடாது நிற்றலிற் கொற்ற நெடுந்திசை
எடாது நிற்பன நாட்ட மிமைப்பில
வடாது திக்கின் மதவரை யின்வழிக்
கடாமு கத்த முளரிக் கணக்க வால்.

'கொடாது நிற்றலின், கொற்ற நெடுந்திசை
எடாது நிற்பன, நாட்டம் இமைப்பு இல,
வடாது திக்கின் மதவரையின் வழிக்
கடாம் முகத்த, முளரிக் கணக்கவால்.

பொ:- வடதிசைக்குரிய (சாருவ பௌமம் என்னும் பேரை யுடைய) யானையின் மரபில் தோன்றி மதநீர் பெருகிடும் முகத்தை யுடைய இவ் யானைகள், (பிரமன், 'நீவீர இப்பூமியைத் தாங்குங்கள்' என்று) கொடாது இருத்தலால், வெற்றி பொருந்திய நெடிய திசையைத் தாங்காமல் நிற்பன; தேவர்களைப் போலக் கண் இமையாதன; பதுமம் என்னும் பெருந்தொகை யளவின ஆகும்.

கு:- திசைகளில் நின்று பூமியைத் தாங்கும் ஆற்றலிருந்தும் பிரமன் அப்பணியைத் தமக்குக் கொடாமையால் அதைத் தாங்காமல் இருக்கின்றன என அவ் யானைகளின் ஆற்றலைப் புலப்படுத்தியவாறு. தம் மரபிற்கு முதலாகவுள்ள வடதிசை யானையைப் போன்று ஆற்றல் மிக்கனவே என்றவாறு. அவற்றின் தெய்வத்தன்மை புலப் படுத்த நாட்டம் இமைப்பில என்றான். முளரிக்கணக்க என்றது பதுமம் என்னும் பேரளவின என்றவாறு. பதுமம் என்பது கோடி கோடி என்பர். மதவரை என்றது மதம் பெருக்கும் மலைபோன்ற யானை என்றவாறு. (31)

**9751** வான வர்க்கிறை வன்றிறை தந்தன
ஆன வர்க்கமோ ராயிர கோடியால்.
தான வர்க்கிறை வன்றிறை தந்தன
ஏனை வர்க்கங் கணக்கில விவ்வெலாம்.

வானவர்க்கு இறைவன் திறை தந்தன
ஆனவர்க்கம் ஓர் ஆயிர கோடியால்;
தானவர்க்கு இறைவன் திறை தந்தன
ஏனைவர்க்கம் கணக்கு இல, இவ்எலாம்.

பொ:- இவை எல்லாம், தேவர்கட்குத் தலைவனான இந்திரன் (இராவணனுக்குத் திறையாகத் தந்தனவானவாகிய யானை இனங்கள். (இவையெல்லாம்) தானவர்க்குத் தலைவன் திறையாகத் தந்தனவாகிய மற்றோர் இனமாகும்; இவற்றிற்குக் கணக்கு இல்லை.

கு:- தனித்தனியே மாண்டு கிடக்கும் யானைப் பிணங்களைக் காட்டி, இவ்வெலாம் இந்திரன் திறை தந்தவை; இவையெலாம்

தானவர் தலைவன் திறை தந்தவை எனப் பாகுபடுத்திக் காட்டிய வாறு. திறை—கப்பம். வர்க்கம்—இனம்; வகை. (32)

## குதிரைகளின் வகைகள்

9752 பாற்க டல்பண் டமிழ்தம் பயந்தநாள்
ஆர்த்தெ ழுந்தன வாயிர மாயிரம்
மாற்க ணப்பரி யீங்கிவை மாறுவை
மேற்கின் வேலை வருணனை வென்றவால்.

பாற்கடல் பண்டு அமிழ்தம் பயந்த நாள்,
ஆர்த்து எழுந்தன, ஆயிரம் ஆயிரம்
மால் கணப்பரி ஈங்கு இவை; மாறு உவை,
மேற்கின் வேலை வருணனை வென்றவால்.

பொ:- இங்கே காணப்படுகின்ற இவை, முற்காலத்துத் திருப் பாற் கடல் அமிழ்தத்தைப் பயந்தபோது ஆரவாரித்து எழுந்தன வாகிய ஆயிரம் ஆயிரங் கணக்கினவான பெரிய கூட்டமான குதிரைக ளாகும்; அவற்றிற்கு மாருகத் தோன்றும் இவை, மேலைக் கடலில் வருணனை வென்று பெற்ற குதிரைகளாகும்.

கு:- ஆயிரமாயிரம் என்றது பத்து லட்சம் எனலும் ஆம். மால்-பெருமை. கணம்-கூட்டம். உவை—பலவின்பால் சுட்டு. வருணனை வென்ற என்றது, வென்று பெற்றவை என்னும் கருத்தினது. (33)

## குபேரன், விஞ்சையர் வேந்தன் என்பவரை வென்று பெற்றகுதிரைகள்

9753 இருநி திக்கிழ வன்னிழந் தேகின
அரிய வப்பரி யாயிர மாயிரம்
விரிசி னத்திகல் விஞ்சையர் வேந்தனைப்
பொருது பற்றிய தாமரை போலுமால்.

'இருநிதிக் கிழவன் இழந்து ஏகின
அரிய அப்பரி ஆயிரம் ஆயிரம்;
விரிசினத்து இகல் விஞ்சையர் வேந்தனைப்
பொருது பற்றிய, தாமரை போலுமால்'.

பொ:- அரியவான அக் குதிரைகள் போரில் குபேரன் விட்டு ஓடியன வான ஆயிரம் ஆயிரம் என்னும் அளவின; (இவை) விரிந்த கோபத்தையுடைய வலிய வித்தியாதரர் தம் அரசனைப் போர் செய்து வென்று பற்றியவை; தாமரை என்னும் பேரளவின யுடையன போலும்.

கு:- இருநிதிக் கிழவன் என்றது குபேரனை. குபேரன் இராவண னுக்குத் தோற்று ஓடும் போது விட்டுச் சென்ற அரிய பரிகளையும் விஞ்சையர் வேந்தனைப் பொருது கைப்பற்றிய குதிரைகளையும் பிணங் களாகக் கண்டு காட்டியவாறு. (34)

## வானரத் தலைவர்கள் களக் காட்சியை விடுத்து இராமனை அடைதல்

**9754** என்று காணினுங் காட்டினு மீதிறைக்
குன்று காணினுங் கோளில தாதலான்
நின்று காணுது நேமியி னுளுழைச்
சென்று காண்குமென் றேகினர் செவ்வியோர்.

என்று காணினும் காட்டினும் ஈது இறைக்
குன்று காணினும் கோளிலது ஆதலான்,
நின்று காணுதும் நேமியினன் உழைச்
சென்று காண்கும் என்று ஏகினர் செவ்வியோர்.

பொ:- (இவ்வாறு வீடணன் காட்டக் கண்ட) நற்குணமுடைய வானரத் தலைவர்கள், (வீடணனை நெருங்கி) இந்தக் களக்காட்சி, என்றும் நாங்கள் கண்டு கொண்டே யிருந்தாலும், நீ காட்டிக் கொண்டே யிருந்தாலும், இமயமலையைக் காணினும் காணமுடியும் கொள்கை யுடையதன்று; ஆதலால், சிறிது பொறுத்திருந்து பார்க்க லாம்; (இப்போது) இராமனிடத்துச் சென்று காணலாம், என்று கூறிச் சென்றனர்.

கு:- போர்க்களக் காட்சியின் விரிவைக் கண்டு அதை விடுத்து வானரத் தலைவர் இராமனிடம் செல்லுதலை யுணர்த்தியவாறு. என்றுங் காணினும் ஈது கோளிலது; இறைக்குன்று காணினும் ஈது கோளிலது; எனத் தனித்தனி இயையும். களக்காட்சி முழுவதையும் காணக் காலம் போதாது என்ற கருத்தால் என்றும் காணினும் கோளிலது என்றார். இறைக் குன்று என்றது அரச மலையாகிய இமயத்தை. அதன் பரப்பை முழுதும் கண்டு தெளிதல் அரிது என்பது உலகறிந்தது ஆகலின், அதைக் கண்டாலும், இப் போர்க்களக் காட்சி

யைக் கண்டு முடித்தல் அரிது என்று அதன் விரிவைப் புலப்படுத்திய வாறு. நேமியினுன் என்றது இராமனை. முன்னைய தெய்வ நிலையை நினைந்து அப் பெயரால் கூறினர். அவர் செவ்வியோர் ஆதலின் புலால் வீசும் போர்க்களக் காட்சியை நெடிது காண விழைந்திலர் என்ற குறிப்புத் தோன்ற அவர்களைச் செவ்வியோர் என்ற பெயரால் கூறினுர். (35)

## அனைவரும் இராமனருகில் வியப்புடன் இருத்தல்

**9755** ஆரி யற்றொழு தாங்கவன் பாங்கரின்
போரி யற்கை நினைந்தெழும் பொம்மலார்
பேரு யிர்ப்பொ டிருந்தனர் பின்புறும்
காரி யத்தி னிலைமை கழறுவாம்.

ஆரியற் றொழுது ஆங்கு அவன் பாங்கரின்
போர் இயற்கை நினைந்து எழும் பொம்மலார்,
பேர் உயிர்ப்பொடு இருந்தனர்; பின்பு உறும்
காரியத்தின் நிலைமை கழறுவாம்.

பொ:- (சென்றவர்கள்) இராமனைத் தொழுது அங்கு அவன் பக்கத்தில், (மூலப்படையினைக் கொன்ற) போரின் இயல்பை நினைந்து எழுகின்ற மகிழ்ச்சியை யுடையவராய்ப் பெரு மூச்சோடு இருந்தார்கள். இனிப் பின்பு நிகழும் காரியத்தின் நிலைமையை நாம் சொல்லு வோவாக.

கு:- இது கவிக் கூற்று. ஆரியன் என்றது யாரினும் சிறந்தோ ஞகிய இராமனை. பாங்கரின் இருந்தனர் என இயையும். பொம்மல்— மகிழ்ச்சி. பொம்மலராய் இருந்தனர் என முற்றெச்ச மாக்கி முடிக்க. கழறுதல்—சொல்லுதல். வியப்பினுல் பேருயிர்ப்பு உண்டாயது என்க. (36)

# 33. இராவணன் களங்காண் படலம்

## முன்னுரை

மூலபலப்படை அழிந்தது உண்மைதானு என்று தெளியும் பொருட்டு இராவணன், கோபுரத்தின் மீதேறி அப்படைஞர் போர்க் களத்தில் மடிந்து கிடக்கும் அவல நிலையைக் காண்பதைத் தெரிவிக்கும் பகுதியாதலின் இது இராவணன் களங்காண் படலம் எனப் பெயர் பெறுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

வானர சேனையை ஓட்டி இலக்குவனை வேலால் வீட்டி இலங்கையில் பெருமகிழ்ச்சியோடு வீற்றிருந்த இராவணன் போர்க்களத்தில் தனக்கு உதவியாக இருந்த வீரர்க்கு விருந்தளிக்கும் விருப்பம் மிக்கவனுய் வான நாட்டவரை அழைக்கின்ருன். அவர்கள் உடனே வந்து பணி என்னை என வினவுகின்றனர். இவ் வரக்கவீரர்கள் விண்ணுலக இன்பத்தை இம் மண்ணுலகில் நண்ணுமாறு விருந்தமைக்க வேண்டும் என்று ஏவுகின்ருன். அவ்விராவணன் கட்டளையின்படி வான நாட்டியர் விண்ணுலக உணவு முதலியவற்றை அரக்கர்க்கு நுகர்வித்துக் கொண்டிருக்கின்றனர். அப்போது தூதுவர் ஓடி வருகின்றனர். போர்க்களத்தில் மூலபலப்படை முழுவதும் அழிந்த செய்தியை இராவணன் காதில் மெல்ல ஓதுகின்றனர். தூதுவர் சொல்லைக் கேட்ட இராவணன் அச்சமும் துன்பமும் உடையனுய்த் திகைத்துச் செயலற்று நிற்கின்ருன். பின்பு தேறி, என்னினும் வலியராய்க் கடல் மணலிலும் பலராய அரக்கர்கள் எஞ்சாமல் இறந்தார்கள் என்பது பொய்யாகும் என்கின்ருன். அப்போது அருகில் நின்ற மாலியவான் தூதுவர் கூறியது மெய்யேயாகும் என்பதைக் காரணங்காட்டி நிறுவுகின்ருன். மேலும், 'உன்பொருட்டால் உன் கிளைஞர் யாவரும் உயிரிழந்தனர். இனியேனும் நல்லோர் செய்கையைக் கைக்கொள்வாயாக' என்று அறிவுரை கூறுகின்ருன். அதுகேட்ட இராவணன் சீறி, 'நான் இலக்குவனைக் கொன்றேன் ஆதலால், இனி வானரர் எல்லாம் அழுங்க இராமனும் தன்னுயிர்ப் பொறையைத் தாங்கமாட்டாது இறந்துபடுவான். எனவே, வெற்றி என் வயத்ததேயாகும் என்று கூறுகின்ருன். அது கேட்ட தூதுவர், 'இலக்குவன் அனுமன் கொணர்ந்த மருத்துமலையால் உயிர் பெற்றெழுந்தான்.

எல்லோரும் மகிழ்ச்சி ஆரவாரத்தோடு இருக்கின்றனர்; நீயே சென்று காணலாம்' என்கின்றனர். தூதுவர் சொல்லை உண்மையெனத் தெளியாத இராவணன் கோபுரத்தின் மேல் ஏறிப் போர்க்களத்தைப் பார்க்கின்றான். கொழுநரை யிழந்த அரக்கியரின் அழுகையொலி செவியில்படப் போர்க்களத்தின் அலங்கோல நிலையைக் கண்களால் கண்டு நெஞ்சம் கலங்கிக் கீழிறங்குகின்றான் என்பது இப்படலத்துக் கூறப்படுகின்றது.

வான்மீகத்தில், இராவணன் தன் வீரர்க்கு விருந்தமைக்க விண்ணூட்டவரை விளித்ததும் விருந்தமைத்ததும் தூதுவர் மூலபலப் படையழிவைச் செவிமடுத்ததும், இராவணன் ஐயுற்றுக் கோபுரத்தின் மீதேறிப் பார்த்து மனங் கடுத்ததுமாகிய நிகழ்ச்சிகள் கூறப்படவில்லை. கம்பர் தாமே இப் பகுதியைப் படைத்து மொழிகின்றார். இதனால், இராவணன் பின் வருவதையறியாது விரைந்து மகிழ்ந்து கெடுகின்றவன் என்ற உண்மையை உணர்த்துவது இப்படைப்பின் நோக்கமாக இருக்கலாம் போலும். முன்பு இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் இலக்குவன் முதலியோர் இறந்ததாகக் கருதி இராவணன் களியாட்டு நடத்தியதுபோல இங்கும் இலக்குவனை வேலால் கொன்ற மகிழ்ச்சியால் விருந்து அமைத்ததாகக் கம்பர் படைத்துக் கூறினார் எனலாம்.

### படைப் பொருட் சிறப்பு

கம்பர், கவிச்சக்கரவர்த்தி என்ற பெரும் பெயர்க்கு ஏற்பத் தாம் எடுத்துக்கொண்ட எப்பொருளையும் அழகும் சுவையும் விஞ்சக் கூறிப் படிப்பவர் மனத்தைக் களிப்புறச் செய்யும் இயல்பினர் ஆவர். இராவணன் தன் பெரும்படை அழிந்துகிடக்கும் போர்க்களத்தைப் பார்க்கின்றான். எத்தனையோ துன்பக் காட்சிகள் அங்குக் காணப்படுகின்றன. அரக்க வீரரின் குலமகளிர், தம் கொழுநர் இறந்துபட்டமை கேட்டுக் களத்திற்கு விரைந்துவந்து தத்தம் கொழுநர் தலைகளை அடையாளங் கண்டு கையில் எடுத்துக்கொண்டு புலம்புகின்றார்கள். கணவரை இழந்த கற்புடைப் பெண்டிரின் துன்பத்தினும் மிக்க பெருந்துன்பம் இல்லையன்றோ! அத்தகைய பெருந்துன்ப நிலையையும் கம்பர் கூறியாக வேண்டியுளது. 'ஒருவர்க் குரியளாகிய கற்புடைப் பெண் ஒருத்தியை விரும்பி எத்தனைக் கற்புடைப் பெண்டிரைப் பெருந்துயர்க்கு ஆளாக்கினேம்' என்று இராவணன் உணரச் செய்யும் முகத்தால் உலகிற்கும் உணர்த்தும் கடப்பாடு கம்பர்க்கு உண்டு.

கொழுநர் தலையைக் கண்டு அத் தலையைத் தழுவி உயிர்விடும் பெண்டிரின் புலம்பொலியைக் கூறும்போதும் அப் பகுதியைப் படிப்பவர் அத் துன்பத்தை மறந்து கவியின் சொல்லழகில் ஈடுபட்டு இன்புறுமாறு செய்யும் கம்பரின் கவித்திறம் வியந்து பாராட்டும்

விழுப்பமிக்கதாக வுள்ளது. அந்த அரக்கப் பெண்டிரின் கருங்கண்கள் கணவரை யிழந்த துன்பத்தால் கலங்கிச் சிவந்து காணப்படுகின்றன என்ற கருத்துப் படிப்பவர்க்கும் துன்பத்தைத் தூண்ட வல்லதாக இருக்கின்றது. அத்துன்ப உணர்வைப் படிப்போர் மறந்து வேறு வகையில் ஈடுபடச் செய்யவேண்டும்; தாம் கருதியதையும் கூறிவிட வேண்டும். இது பெரிய சிக்கலான நிகழ்ச்சி. இதை மிக எளிதாகச் செய்து முடித்திருக்கின்ருர் கம்பர்.

கொய்தலைப் பூசற்பட்டோர் குலத்தியர் குவளை தோற்று
நெய்தலை வென்ற வாட்கண் குமுதத்தின் நீர்மை காட்டக்
கைதலை வைத்த பூசல் கடலொடு நிமிருங் காலைச்
செய்தலை யுற்ற வோசைச் செயலது செவியிற் கேட்டான். (21)

என்பது காணலாம். தலைவர்களின் கொய்யப்பட்ட தலைகளோடு முடிய முடிவு செய்து புலம்புகின்ற தலைவியரின் கண்கள் முன்பு எப்படி யிருந்தவை என்பதை விளக்க, 'குவளை தோற்று நெய்தலை வென்ற வாட்கண்' என்று கூறிப் படிப்பவரை அக் கண்ணழகில் ஈடுபடுத்தி விடுகின்ருர். அரக்கியரின் கருங்கண்களைப் பார்த்துக் கருங்குவளை மலர்கள் 'இக் கண்களுக்கு நாம் ஒப்பாக மாட்டோம்' என்று தாமே தோற்றுவிட்டனவாம். நெய்தல் மலரோ 'இக் கண்கட்கு யாம் ஒப்பாவோம்' என்று செருக்கியிருந்தனவாம். அத்தகைய நெய்தல் மலர்களை அவர் கண்கள் தாமே சென்று தம் அழகினைக் காட்டி வென்று மேம்பட்டனவாம். கறுத்துச் செவ்வரி படர்ந்து மதர்த்துப் பிறழும் அக் கண்களுக்கு நீலநிறமுடையதாய் நீரில் நிற்கின்ற நெய்தல் மலர் நேரொப்பது யாங்ஙனம்? எனவே, 'நெய்தலை வென்ற கண்' என்கின்ருர். மேலும், 'வாட்கண்' என்று அடைகொடுத்துச் சிறப்பிக்கின்ருர். வாளைப் போன்ற கண், அல்லது, ஒளிமிக்க கண் என்று கொள்ளலாம். அத்தகைய கரிய ஒள்ளிய கண்கள் இப்போது கணவனை இழந்த துன்பத்தால் சிவந்தன என்ற கருத்தையே 'குமுதத்தின் நீர்மை காட்ட' என்ற சொற்களால் புலப்படுத்திவிட்டார், குமுதம் செந்நிற மலர்; கண். அச் செந்நிற மலரின் தன்மையினைக் காட்ட என்றமையால், கண்கள் சிவந்தன என்பதைச் சொல்லாமல் சொல்லிவிடுகின்ருர். இதுதான் கவிஞரின் திறமிக்க புலமை. குவளை மலர், நெய்தல் மலர் இவைகளை வென்று மேம்பட்ட கருங்கண்கள் இப்போது அவ்வழகு மிக்க கருமையை இழந்துவிட்டன. தாம் விரும்பாத செந்நிறம் கண்களுக்குத் தானே வந்து சேர்ந்துவிட்டது. 'கருங்குவளை மலரையும் நெய்தல் மலரையும் வென்ருேம்' என்று களித்துக் கறுத்துச் செருக்கியிருந்த கண்கள், இப்போது தாம் விரும்பாத செந்நிறத்தைப் பெற்று வருந்துகின்றன. 'வானவரையும் தானவரையும்

வென்றோம்' என்று களித்திருந்த இராவணன் இப்போது சிறிய மானிடனால் சிறுமையுற்று இறுதியுறப் போவதையும் இக் கண்களே காட்டுகின்றன என்ற குறிப்பும் இங்கே தோன்ற வைத்த நயம் காண்க.

இவ்வாறு குவளைக் கண்ணியர் குமுதக் கண்ணியராய்க் கையின் கண் தம் கணவர்களின் தலைகளை வைத்துக்கொண்டு புலம்பும் அழுகை ஒலி ஊழிக் காலத்தில் உலகு அழியும்போது தோன்றும் பேரொலி போன்று இருந்ததாம். இத்தகைய புலம்பலொலியை இராவணன் தன் இருபது செவிகளிலும் கேட்டானாம். கேட்டான் என்றாலே போதுமே. 'செவியில்' கேட்டான் என்று சொல்ல வேண்டுமோ? என்னின், அவ்விராவணன் காதுகள் இதுகாறும் இத்தகைய அழுகை ஒலியைக் கேட்டுப் பழகிய காதுகள் அல்ல; புலம்பல் ஓசையைக் கேட்டறியாத காதுகளில் கணவரை இழந்த மகளிர் பலரின் புலம்பலொலியைக் கேட்டான் என்ற கருத்துப் புலப்படவே 'செவியில்' என்ற வேண்டாத சொல்லைப் பெய்துரைத்தார் என்க. இத்தகைய மகளிரின் புலம்பலைக் கேட்டும் சீதையை விடாமல் தன் ஆவியைவிடத் துணிந்த இராவணனது காம மிகுதியைக் குறிப்பால் இங்கு உணர்த்தியுள்ளமை நினைத்தற்கு உரியதாதல் காணலாம். கருங்குவளை மலர் செங்குமுத மலரின் தன்மையாக மாறியது என மலர்களையே கூறிக் கவிஞர் மயக்கினாலும் ஆழ்ந்து நோக்குவோர்க்கு அப் பெண்டிரின் கருங்கண்கள் துன்பத்தால்தான் சிவந்தன என்பது தோன்றாமற் போகாது. துன்பவுணர்வைக் குறைப்பதாகிய கவிஞரின் நோக்கம் சிறிதும் ஈடேறாமல் போனதாகக் கூறவியலாதன்றோ?

இத்தகைய போர்க்களக் காட்சியைக் கண்டு புண்பட்ட நெஞ்சினனாகிய இராவணன் நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதுபோலக் கம்பர் எளிய சொற்களால் இனிதின் விளக்குகின்றார்.

> நகை பிறக்கின்ற வாயன்
> நாக்கொடு கடைவாய் நக்கப்
> புகை பிறக்கின்ற மூக்கன்
> பொறி பிறக்கின்ற கண்ணன்
> மிகை பிறக்கின்ற நெஞ்சன்
> வெஞ்சினத் தீமேல் வீங்கிச்
> சிகை பிறக்கின்ற சொல்லன்
> அரசியல் இருக்கை சேர்ந்தான்.

என்று இராவணனது வெகுளி மெய்ப்பாட்டினைக் கம்பர் எடுத்து விளக்கும் திறம் படித்துப் படித்து இன்புறத் தக்கதாக அமைந்திருத்தல் காண்க.

# 33. இராவணன் களங்காண் படலம்

### இலங்கை எய்திய இராவணன்
### வெற்றி பெற்றதனுல் மகிழ்ந்திருத்தல்

**9756** அலக்க ணெய்தி யமர ரழிந்திட
உலக்க வானர வீரரை யோட்டியவ்
விலக்கு வன்றனே வீட்டி யிராவணன்
துலக்க மெய்தினன் ரேமில் களிப்பினே.

அலக்கண் எய்தி அமரர் அழிந்திட
உலக்க வானர வீரரை ஓட்டி அவ்
இலக்குவன்தனே வீட்டி, இராவணன்
துலக்கம் எய்தினன் தோம் இல் களிப்பினே.

பொ:- தேவர்கள் துன்பம் எய்தி அழியுமாறு, வானர வீரரை வலியழியும்படி ஓட்டியதாலும், அந்த இலக்குவனே வீட்டியதாலும், இராவணன் குற்றமற்ற களிப்பினுல் விளக்கம் உற்றிருந்தான்.

கு:- வேலேற்ற படலத்தில் இராவணன் இலங்கைக்குச் சென்றமையை 36 ஆங் கவியில் கூறிய கவி, இச் செய்யுளில் அவன் அங்கு மகிழ்ச்சியோடு இருந்தமையைக் காரணத்தோடு கூறியவாறு. இராவணனது மகிழ்ச்சிக்குக் காரணம் வானர வீரரை ஓட்டினமையும் இலக்குவனே வீட்டினமையுமே ஆம். இராவணன், ஓட்டி, வீட்டி களிப்பில் துலக்கம் எய்தினன் என இயையும். ஓட்டி, வீட்டி என்ற வினையெச்சங்கள் காரணப் பொருளன. துலக்கம்—விளக்கம். தோம்—குற்றம். வென்று விட்டோம் என்ற களிப்பில் இராவணனுக்கு ஐயம் சிறிதும் இன்மை புலப்படுத்த 'தோமில் களிப்பினே துலக்கம் எய்தினன்' என்ருர். (1)

### போரில் வருந்தினர்க்கு விருந்து அமைக்க
### இராவணன் விரும்புதல்

**9757** பொருந்து பொற்பெருங் கோயிலுட் போர்த்தொழில்
வருந்தி னர்க்குத்தம் மன்பினின் வந்தவர்க்
கருந்து தற்கமை வாயின வாக்குவான்
விருந்த மைக்க மிகுகின்ற வேட்கையான்.

பொருந்து பொன்பெருங் கோயிலுள் போர்த்தொழில்
வருந்தினர்க்கு, தம் அன்பினின் வந்தவர்க்கு,
அருந்துதற்கு அமைவாயின ஆக்குவான்
விருந்து அமைக்க மிகுகின்ற வேட்கையான்.

பொ:- (இராவணன், தான் பொருந்தியுள்ள பொன்னால் இயன்ற பெரிய அரண்மனையில், போர்த்தொழிலில் தன் பொருட்டு வருந்தினர்க்கும் அவ்வீரர் தம்மேல் வைத்த அன்பினால் வந்தவர்க்கும் அருந்துதற்கும் பொருத்தமானவைகளை ஆக்குவானாய் விருந்து செய்ய மிகுகின்ற வேட்கை யுடையவனானான்.

கு:- வென்ற வீரர்க்கு விருந்தளித்தல் வேந்தர் தம் கடனாகலின் இராவணன் விருந்தமைக்க வேட்டான் என்றவாறு. போரில் தன் பொருட்டு வருந்திப் போர் செய்தவர்களுக்கும், போர் செய்து இறந்தவர் தம் மேல் வைத்த அன்பினால் வந்தவர்க்கும் விருந்தளித்து மகிழ்விக்க விரும்பினான் இராவணன் என்க, தான் இலக்குவனை வீழ்த்திய வெற்றிக்கு அறிகுறியாக இந்த விருந்தினைச் செய்ய விரும்பினான் இராவணன். (2)

9758 வான நாட்டை வருகென வல்விரைந்
தேனை நாட்டவ ரோடும்வந் தெய்தினர்
ஆன நாட்டரும் போக மமைத்திர்மற்
றூன நாட்டி னிழத்தி ருயிரென்றான்.

வான நாட்டை வருகென, வல்விரைந்து,
ஏனை நாட்டவரோடும் வந்து எய்தினர்;
'ஆன நாட்டு அரும் போகம் அமைத்திர்; மற்று
ஊனம் நாட்டின், இழத்திர் உயிர்' என்றான்.

பொ:- (இராவணன்) வானநாட்டவரை 'வருக' என்று கூறுதலும் அவர்கள் மிக விரைந்து மற்றைத் தானவர் நாட்டவரோடும் வந்து சேர்ந்தனர்; (அவர்களை நோக்கி இராவணன்) 'அந்த நாட்டில் உள்ள அரிய போகத்தை இங்கு அமைப்பீர்களாக! அவ்வாறு அமைக்காது குறைவு ஏதேனும் செய்தால் உம் உயிரை இழப்பீர்கள்' என்று கூறினான்.

கு:- இராவணன் அழைத்தது வான நாட்டவரையே என்றாலும் அச்சத்தால் அவ்வானவர் ஏனை நாட்டவரையும் உடனழைத்து வந்து

சேர்ந்தனர். 'ஆனநாட்டு அரும் போகம்' என்றது, அந்த வான நாட்டில் துய்க்கும் அருமையான இந்திர போகத்தை. இந்திர போகத்தைத் தன் வீரர்கள் இவ் வுலகத்திலேயே துய்க்கச் செய்ய வேண்டும் என்னும் அவாவினால் இங்ஙனம் கூறலானான். ஊனம்—குறைவு. அன்பில் பணி கொள்ளாது, அச்சுறுத்திப் பணி கொள்ளும் முறையை இறுதி யடி விளக்குகின்றது. (3)

## போகப் பொருள்கள் வந்து சேர்தல்

**9759** நறவு மூனு நவையற நல்லன
பிறவு மாடையுஞ் சாந்தமும் பெய்ம்மலர்த்
திறமு நானப் புனலொடு சேக்கையும்
புறமு முள்ளு நிறையப் புகுந்தவால்.

நறவும் ஊனும், நவை அற நல்லன
பிறவும், ஆடையும், சாந்தமும், பெய்ம் மலர்த்
திறமும், நானப் புனலொடு சேக்கையும்,
புறமும் உள்ளும் நிறையப் புகுந்தவால்.

பொ:- குற்றமற நல்லனவான கள்ளும், ஊனும், பிற உணவுப் பொருள்களும், உடுக்கும் ஆடை வகைகளும், பூசுதற்குரிய சந்தனமும் சூடுதற்குரிய மலர்வகைகளும், குளித்தற்குரிய வாசனை நீரும், படுத்தற்குரிய படுக்கை வகைகளும் ஆய பொருள்கள் அரண்மனைக்கு உள்ளும் புறமும் நிறைய வந்து சேர்ந்தன.

கு:- பிறவும் என்றதால் நறவும் ஊனும் அல்லாத மற்றை உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன ஆகிய நால்வகை உணவு வகைகளை யெல்லாம் கொள்க. நானப்புனல் என்றது மூழ்குதற்குரிய தூயநீர். இனி, நானம்—கத்தூரி எனக் கொண்டு கத்தூரி கலந்த நீர் எனலும் ஆம். (4)

## போகப் பொருள்களை அமைக்க வான் அரமகளிர் வருதல்

**9760** நான நெய்ந்நன் குரைத்து நறும்புன
லான கோதற வாட்டி யமுதொடு
பான மூட்டிச் சயனம் பரப்புவான்
வான நாட்டியர் யாவரும் வந்தனர்.

நான் நெய் நன்கு உரைத்து, நறும்புனல்
ஆன கோது அற ஆட்டி, அமுதொடு
பானம் ஊட்டி, சயனம் பரப்புவான்,
வான நாட்டியர் யாவரும் வந்தனர்.

பொ:- புழுகு நெய்யை நன்கு உடம்பில் தேய்த்து, நறுமண முடைய பலவகை நீர்கொண்டு அழுக்குப் போக நீர் ஆட்டி அமுதாகிய உணவோடு பருகும் நீரையும் உண்பித்துப் படுக்கைகளைப் பரப்புதற்காக வானநாட்டுப் பெண்டிர் அனைவரும் வந்துசேர்ந்தார்கள்.

கு:- நான நெய் என்றது, புழுகு நெய்யை. உரைத்தல்—தேய்த்தல். நறுமண நீரில் பலவகை யிருத்தலின் நறும்புனலான எனப் டன்மையாற் கூறிலர். கோது—அழுக்கு. அமுது என்றது அமுதமாகிய உணவினை. இனி அமுதம் போன்ற உணவு எனலும் ஆம். பானம் என்றது உணவிற்குத் துணைப்பொருளாய்ப் பருகுதற்குரிய நீரை. சயனம் என்றது ஐந்து மூன்றடுக்கிய அமளியை. அது இடக்கரடக்கலாய் உடனுறைவை யுணர்த்தியது. அரக்கர்க்கு இவையெல்லாம் அமைப்பதற்கு அமர மாதர் பணிப்பெண்டிராய் வந்தனர் என்க. "பூட்டுவார் முலைபொருத பொய்யிடை நையப் பூநீர், ஆட்டுவார் அமரர் மாதர் ஆடுவார் அரக்கர் மாதர்" (சுந்தர- ஊர்தேடு-104) என்பது இங்கு நினைக்கத்தகும். (5)

## அரக்கரின் நுகர்ச்சி 9761-9762

**9761** பாடு வார்கள் பயினடம் பாவகத்
தாடு வார்க ளமளியி னன்புறக்
கூடு வார்முதல் யாருங் குறைவறத்
தேடி னாரெனப் பண்ணையிற் சேர்ந்தனர்.

பாடுவார்கள்; பயில்நடம் பாவகத்து
ஆடுவார்கள்; அமளியில் இன்புறக்
கூடுவார்முதல் யாரும் குறைவு அறத்
தேடினார் என, பண்ணையில் சேர்ந்தனர்.

பொ:- இனிய பாடலைப் பாடுகின்றவர்களும், நன்கு பயின்ற நடனத்தைப் பாவனையோடு ஆடுபவர்களும், அமளிமேல் அன்புமிகக் கூடுபவர் முதலாக உள்ள யாவரையும் குறைவறத் தம் முயற்சியால்

தேடிக்கொண்டவர்போல (முயற்சியேதும் இன்றி இராவணனது ஏவலின்படி) மகளிர் கூட்டத்தில் சேர்ந்தனர்.

கு:- பாவகம்—பாவனை. தாம் மேற்கொண்ட பாத்திரமாகவே தம்மைப் பாவித்து நடித்தல். கதை தழுவிய கூத்திற்குச் சிறப்புத் தருவதாகும். பாடுவாரையும் ஆடுவாரையும் கூடுவாரையும் தம் முயற்சியால் தேடிக்கொண்ட பெருந் தலைவர்களைப்போல அரக்க வீரர் இராவணனுடைய ஆணையால் முயற்சியேதும் இன்றி இன்பம் நுகர மகளிர் கூட்டத்தில் சேர்ந்தனர் என்க. குறைவறத் தேடினரென என்றது: தற்குறிப்பேற்ற வணி. தேடிப் பெறவேண்டிய இன்பத்தை அரக்க வீரர் தேடி வருந்தாமலே எளிதிற் பெற்றனர் என்றவாறு. பண்ணை—மகளிர் கூட்டம். (6)

**9762** அரைச ராதி யடியவ ரந்தமா
வரைசெய் மேனி யிராக்கதர் வந்துளார்
விரைவி னிந்திர போகம் விளைதரக்
கரையிலாத பெருவளம் கண்ணினார்.

அரைசர் ஆதி, அடியவர் அந்தமா,
வரைசெய் மேனி இராக்கதர் வந்துளார்,
விரைவின் இந்திர போகம் விளைதரக்
கரையிலாத பெருவளம் கண்ணினார்.

பொ:- அரசர் முதல் அடியவர் ஈறாக வந்து உள்ளாராகிய மலை போன்ற உடம்பையுடை அரக்க வீரர்கள், இந்திரபோகம் விரைவாகத் துடுமென விளைதலால் அளவில்லாத இன்பப் பெருவளத்தைக் கருத்தோடு அனுபவித்தனர்.

கு:- எதுகை நோக்கி அரைசர் என அகரத்திற்கு ஐகாரம் போலியாய் வந்தது. போகம் நுகர்வார், அரசர் முதல் அடியவர் ஈறாகப் பலதிறத்தராக இருப்பினும் அவர் யாவர்க்கும் போகத்தில் வேறுபாடின்றி ஒத்தநிலையில் இருந்தமை புலப்படுத்தியவாறு. வரை செய்மேனி என்புழிச் 'செய்' உவமஉருபு. அரசராதி அடியவ ரந்தமா வந்துளாராகிய இராக்கதர் என இயையும். வரை செய்மேனி இராக்கதர் என்க. அரக்கர் எதிர்பாராத நிலையில் இராவணன் விருப்பத்திற் கிணங்க இந்திரபோகம் விளைந்தமை புலப்படுத்த 'விரைவின் இந்திரபோகம் விளைதர' என்றார். கரை—அளவு

என்றது, இன்பப் பெருவளத்தை கண்ணினர் என்றது, கருத்து முற்றத் தோய்ந்தார் என்றவாறு. கண்ணுதல்—கருதுதல்.

இச்செய்யுளோடு பாலகண்டத்து வந்துள்ள,

இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
கடம்படு களிற்றரச ராதி யிடை கண்டோர்
தடம்படு புயத்த சிறு கம்மியர்கள் காறும்
உடம்பொடு துறக்க நகருற்றவரை யொத்தார்.

(கடிமணப்-1)

என்ற செய்யுள் ஒப்பு நோக்குதற் குரியது. (7)

## தூதுவர் வந்து வணங்குதல்

**9763** இன்ன தன்மை யமைந்த விராக்கதர்
மன்னன் மாடுவந் தெய்தி வணங்கினர்
அன்ன சேனை களப்பட்ட வாறெலாம்
துன்னு தூதர் செவியிடைச் சொல்லுவார்.

இன்ன தன்மை அமைந்த இராக்கதர்
மன்னன் மாடு வந்து எய்தி வணங்கினர்—
அன்ன சேனை களப்பட்ட ஆறு எலாம்
துன்னு தூதர் செவியிடைச் சொல்லுவார்.

பொ:- இன்ன தன்மையான இந்திர போகத்தை அமைத்துக் கொடுத்த அரக்கர் மன்னனாகிய இராவணனிடத்து வந்து அடைந்து நெருங்கிய தூதர்கள் வணங்கினராய், அத்தன்மையான மூலப் படை முழுவதும் களத்தில் இறந்து பட்ட தன்மை எல்லாவற்றையும் அவன் செவியில் சொல்லுவராயினர்.

கு:- இராக்கதர் மன்னன் என்றது இராவணனை. தன் போர்வீரர்க்கு இத்தன்மையான விருந்தமைத்து மகிழ்ந்திருந்த இராவணனிடம் அம்மகிழ்ச்சிக்கு மாறான நிகழ்ச்சியைச் சொல்ல வேண்டி யிருத்தலின் வந்து வணங்கிய தூதர் சேனை களப்பட்ட தன்மையை அவன் செவி யில், பிறரறியாது, சொல்லலாயினர் என்க. மாடுவந் தெய்தித் துன்னு தூதர் வணங்கினரைச் செவியினிடைச் சொல்லுவார் என மாற்றி முற்றெச்சமாக்கி முடிக்க. வணங்கினர் முற்றெச்சம். 'அன்ன

'சேனே' என்புழிச் சுட்டுச் சேனையின் பெருமையை விளக்கி உலகறி சுட்டாய் நின்றது. (8)

## தூதுவரின் அச்ச நிலை

9764 நடுங்கு கின்ற வுடலினர் நாவுலர்ந்
தொடுங்கு கின்ற வுயிர்ப்பின ருள்ளழிந்
திடுங்கு கின்ற விழியின ரேங்கிமேல்
பிடுங்கு கின்ற மொழியினர் பேசுவார்.

நடுங்குகின்ற உடலினர், நா உலர்ந்து
ஒடுங்குகின்ற உயிர்ப்பினர், உள் அழிந்து
இடுங்குகின்ற விழியினர், ஏங்கினர்,
பிடுங்குகின்ற மொழியினர் பேசுவார்.

பொ:- (செவியிற் சொல்லத் தொடங்கிய தூதுவர்) நடுங்குகின்ற உடம்பினையுடையவராய், நா வறந்து, சோர்கின்ற உயிர்ப்பினையுடைய வராய், உள்ளே அழிந்து இடுங்குகின்ற விழியினை யுடையவராய் ஏங்கி நின்று, (வெளிவர மறுக்கின்றமையால்) வலிதின்மேல் பிடுங்கு கின்ற மொழியினராய்ப் பேசுவாராயினர்.

கு:- மகிழ்ச்சியிலிருக்கும் இராவணனிடத்தில் பெருவலி படைத்த மூலபலப்படை யழிந்தமையைத் தெரிவிக்கத் தூதுவர் அஞ்சு நிலையினை இப்பாடல் திறம்பட விளக்குகின்றது. நடுங்குகின்ற உடம்பும், நீரின்றி வறள்கின்ற நாவும். சோர்கின்ற உயிர்ப்பும், உள்ளே இடுங்கு கின்ற விழியும் அச்சத்தாலும் பெருந் துன்பத்தாலும் நிகழ்வன. சொல்ல நினைத்த சொற்கள் வெளிவரமாட்டாது நாக்குக் குழறுகின்ற நிலையையும், சொல்லுவோர்தம் முயற்சியினால் ஒவ்வொரு சொல்லாகக் காலம் தாழ்ந்து வெளிவரும் நிலையையும் புலப்படுத்த 'மேல் பிடுங்கு கின்ற மொழியினர்' என்றார். சொல்ல நினைத்ததைச் சொல்ல முடி யாமல் தூதுவர் வருந்தி வாளா நிற்கும் நிலையினை 'ஏங்கி' என்ற சொல் லால் விளக்கி பின்பு மெல்ல மெல்ல 'ஒவ்வொரு சொல்லாய்ச் சொல்லத் தொடங்கிய நிலையினை 'பிடுங்குகின்ற மொழியினர் பேசுவார்' என்ற சொற்றொடரால் விளக்கி யுள்ளமை நினைதொறும் இன்பம் பெருக்கு தல் காணலாம். கண்ணினும் செவியினும் நுண்ணுணர்வினர் புலங் கொளத்தக்க மெய்ப்பாட்டினைப் படித்தே யுணரச் செய்யும் கவியின் மாண்பு காண்க. (9)

## தூதர் சொன்னது 9765-9766

9765 ★

இன்றியார் விருந்திங் குண்பா
　　ரிகன்முகத் திமையோர் தந்த
வென்றியா யேவச் சென்ற
　　வாயிர வெள்ளச் சேனை
நின்றது புறத்த தாக
　　விராமன்கை நிமிர்ந்த சாபம்
ஒன்றினு லிரண்டு மூன்று
　　கடிகையி னுலந்த தென்ருர்.

'இன்று யார் விருந்து இங்கு உண்பார்?—
　　இகல் முகத்து இமையோர் தந்த
வென்றியாய்!— ஏவச் சென்ற
　　ஆயிர வெள்ளச்சேனை
நின்றது புறத்தது ஆக,
　　இராமன்கை நிமிர்ந்த சாபம்
ஒன்றினுல் இரண்டு, மூன்று
　　கடிகையில் உலர்ந்தது' என்ருர்.

பொ:- 'போர் முகத்தில் தேவர்கள் தந்த வெற்றியை யுடைய அரசே! நீ ஏவச் சென்ற ஆயிரம் வெள்ளம் சேனையும், போர்க்களத்தின் ஒரு புறத்ததாய் நின்றதாக, இராமனது கையில் உயர்ந்து தோன்றும் வில் ஒன்றினுல், ஆறு நாழிகைப் பொழுதில் அச் சேனை முழுவதும் அழிந்தது, (இத்தகைய துன்பம் நேர்ந்துள்ள) இன்று இங்கு விருந்து உண்பார் எத்தகையோர்? என்று வினவினர்.

கு:- பெருந்துன்பம் நேர்ந்துள்ள போது விருந்துண்ணுதல் மர பன்று ஆகலின், 'இன்றியார் விருந்திங் குண்பார்' எனத் தூதுவர் வெறுப்போடு வினவினர் என்க. இமையோர் தம் மாட்டாமையால் தோற்ரேடப் பெற்ற வெற்றியை யுடையனுகலின் இராவணன் அத் தேவரைப் பெருவிருந்தமைக்கச் செய்துளான் என்பது புலப்பட 'இமையோர் தந்த வெற்றியாய்!' என விளித்தனர். சேனை புறத்ததாய் நின்றதாக என மாறுக. ஆயிரம் வெள்ளம் சேனையும் இராமன் கை வில் ஒன்றினுல் ஆறு நாழிகையில் உலந்தது என்பதில் சாதிக்குறை விசேட அணி, உறுப்புக் குறை விசேட அணி, காலக் குறை விசேட அணி என்பன அமைந்திருத்தல் காணலாம். இராமன் என்றது ஒரு

மனிதன் என்னும் கருத்தினது ஆதலின், அது சாதிக்குறையையும், சாபம் ஒன்றினுல் என்றது உறுப்புக் குறையையும், இரண்டு மூன்று கடிகையில் என்பது காலக் குறையினையும் உணர்த்தினமையும், ஆயிரம் வெள்ளச் சேனை உலந்தது என்புழி அக்குறைகள் எல்லாம் விசேடமாயினவாறும் காணலாம். "கரன் முதற் காளை வீரர்............ இராமனென்றிசைத்த ஏந்தல் வில்லொன்றிற் கடிகை மூன்றி லேறினர் விண்ணிலென்ருள்" (மாரீசன் வதைப்—64) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (10)

**9766** வலிக்கடன் வானு ளோரைக்
கொண்டுநீ வகுத்த போகம்
கலிக்கட னளிப்ப லென்று
நிருதர்க்குக் கருதி ஞயேல்
பலிக்கட னளிக்கற் பாலை
யல்லதுன் குலத்தின் பாலோர்
ஒலிக்கட லுலகத் தில்லை
யூருளா ருளரே யுள்ளார்.

'வலிக்கடன் வான் உளோரைக்
கொண்டு, நீவகுத்த போகம்,
"கலிக்கடன் அளிப்பல்" என்று
நிருதர்க்குக் கருதிஞயேல்,
பலிக்கடன் அளிக்கற்பாலை
அல்லது, உன்குலத்தின் பாலோர்
ஒலிக்கடல் உலகத்து இல்லை;
ஊர் உளார் உளமே உள்ளார்.

பொ:- 'நீ, வானுலகத்துள்ள தேவரைக் கொண்டு உண்டாக்கிய போகத்தை "அரக்க வீரரின் வலிமைக் குரிய கடனுக நின் மகிழ்ச்சியின் முறைமையால் அளிப்பேன்" என்று நினைத்தாயானுல் இறந்த இராக்கத வீரர்க்குப் பலிக் கடனை அளிக்கத் தக்காய் அல்லது, உயிரோடுள்ள வீரர்க்குக் கொடுக்க இயலாது. ஏனெனில்? ஒலியை யுடைய கடல் சூழ்ந்த உலகத்தில் உன் குலத்தோர் யாரும் இல்லை; ஊரில் உள்ளவர் தாம் உயிருள்ளவராக இருக்கின்றனர். (என்று அத் தூதுவர் கூறிஞர்).

கு:- ஊரில் உள்ளவர்களே உயிரோடு இருக்கின்றனர்; போர்க்களம் சென்ருேரெல்லாம் இறந்து பட்டனர் ஆதலின் வீரர்கடனுக

நீ மகிழ்ந்து 'பலிக் கடன் அளிக்கற்பாலை' என்றார். பலிக்கடன் என்பது இறந்தவர்க்கு உத்தரி கிரியையில் அளிக்கும் பிண்டத்தை. வலிக்கடன் என்றது வீரர் காட்டிய வலிமைக்காகக் கொடுக்கும் கைம்மாறாகிய விருந்தினை. கலி—மகிழ்ச்சி. கலிக்கடன்—மகிழ்ச்சியின் முறைமை. ஊருளார் என்றது, பெண்டிரும் பிணியுடையோரும் புதல்வற் பெறாதோருமாகிய போர் செய்தற் குரியரல்லராய் ஊரில் தங்கியிருப் போரை. (11)

## இராவணன் திகைத்தல்

9767 ஈட்டரு முவகை யீட்டி
யிருந்தவ னிசைத்த மாற்றம்
கேட்டலும் வெகுளி யோடு
துணுக்கமு மிழிவுங் கிட்ட
ஊட்டரக் கனைய செங்க
ணெருப்புக வுயிர்ப்பு வீங்கத்
தீட்டிய படிவ மென்னத்
தோன்றினன் றிகைத்த நெஞ்சன்.

ஈட்டரும் உவகை ஈட்டி
இருந்தவன், இசைத்த மாற்றம்
கேட்டலும், வெகுளியோடு
துணுக்கமும் இழிவும் கிட்டி
ஊட்டு அரக்கு அனைய செங்கண்
நெருப்புஉக, உயிர்ப்பு வீங்க
தீட்டிய படிவம் என்னத்
தோன்றினன், திகைத்த நெஞ்சன்.

பொ:- (வானரரை ஓட்டி இலக்குவனை வீட்டி விட்டோம் என்பதால்) பிறரால் பெறுதற்கு அரிய மகிழ்ச்சியைப் பெற்று இருந்த இராவணன், (தூதுவர்) சொன்ன சொல்லைக் கேட்டவுடன் கோபத்தோடு நடுக்கமும் இழிவும் சேர்தலால் செவ்வரக்கை யூட்டினாற் போன்ற தன் சிவந்த கண்களில் நெருப்புப் பொறிகள் சிந்த, பெருமூச்சு உண்டாக, திகைப்படைந்த நெஞ்சத்தவனாய் எழுதிய சித்திரப் பாவை போல அசைவின்றிக் காணப்பட்டான்.

கு:- இராவணன் தன் பெரு மகிழ்ச்சி, தூதுவர் சொல்லால் அடியோடு மாறத் திகைத்து அசைவற்றவனானன் என்றவாறு. இராவணனது உவகைச் சுவை மாறிய போது, வெகுளியும் அச்சமும் இளிவும் ஆகிய மூவகைச் சுவைகள் இராவணன் பால் தோன்றின எனக. தன்னைச் சார்ந்தவரை இராமன் கொன்றான் என்றமையால் வெகுளியும், இவ்வளவு பெரிய மூலப்படையைக் குறுகிய காலத்தில் கொன்றவன் நம்மை என்ன செய்வானோ? என்ற எண்ணத்தால் அச்சம் பற்றிய துணுக்கமும், மகிழ்ச்சி தரும் விருந்தளிக்க எண்ணிய எண்ணம் ஈடேறாமையால் இழிவும் இராவணனுக்கு ஒரு காலத்தே தோன்றின எனக. முன்னமே, அரக்கு ஊட்டினாற் போன்று வீரத்தால், சிவந்திருந்த இராவணன் கண்கள், தூதுவர் சொன்ன துன்பச் செய்தி கேட்டவுடன் உண்டான வெகுளியால் நெருப்புப் பொறிகளைச் சிந்தலாயின எனக. திகைப்பின் இயல்பைப் புலப்படுத்த 'தீட்டிய படிவமென்னத் தோன்றினன்' என்றார். (12)

### இராவணன் தூதுவர் சொல்லை ஐயுறுதல்

**9768** என்னினும் வலிய ரான
விராக்கதர் யாண்டும் வீயார்
உன்னினு முலப்பி லாதா
ருவரியின் மணலின் மிக்கார்
பின்னொரு பெயரு மின்றி
மாண்டன ரென்று பேசும்
இன்னிலை பொய்ம்மை மெய்ம்மை
விளம்புவீர் விரைவி னென்றான்.

என்னினும் வலியர் ஆன
இராக்கதர் யாண்டும் வீயார்
உன்னினும் உலப்பு இலாதார்;
உவரியின் மணலின் மிக்கார்;
"பின் ஒரு பெயரும் இன்றி
மாண்டனர்" என்று பேசும்
இந்நிலை பொய்ம்மை; மெய்ம்மை
விளம்புவீர் விரைவின் என்றான்!

பொ:- 'என்னைக் காட்டிலும் வலிவுடையரான இராக்கதர்கள், எக்காலத்தும் எவ்விடத்தும் அழியாதவர்கள்; நினைப்பினால் கொல்வ

தாஞலும் (இவ்வளவு விரைவில்) ஒழிதற்குரியரல்லர்; கடலுள்ள மணலிலும் எண்ணிக்கை மிக்கவர்கள்; அவர்களில் பின்பு காண்டற்கு ஒருவரும் இல்லாமல் மாண்டு விட்டனர் என்று நீர் சொல்லும் இந்த நிலை பொய்யாகும்; விரைவில் உண்மையைச் சொல்லுவீர்களாக' என்று (தூதுவரை நோக்கி இராவணன்) கூறினன்.

கு:- மூலபலப் படையினர் வலிமையும் பெருமையும் அழிவின்மையும் நினைந்து இராவணன் தூதுவர்கள் சொல்லியது பொய்யாக இருக்கலாம் என ஐயுற்றவாறு நினைப்பினுல் கொல்ல வல்லவர் நினைதாலும் நினைப்பிற் கொல்லத் தக்க சிறு தொகையினர் அல்லர் என்பான் 'உன்னினும் உலப்பிலாதார்' என்ருன். உவரி—கடல். அவர் எண்ணிடல் அரியர் என்பான் 'உவரியின் மணலின் மிக்கார்' என்ருன். இந்நிலை என்பது எதுகை நோக்கி 'இன்னிலை' ஆயது. மாண்டார் என்பது தூதுவர் விளையாட்டாகச் சொன்ன பொய்மையே என்ற துணிவால் 'மெய்ம்மை விளம்புவீர் விரைவின்' என்று கூறலானுன். (13)

மாலியவான், தூதர் பொய்யுரையார் எனல்

9769 கேட்டய லிருந்த மாலி
யீதொரு கிழமைத் தாமோ
ஓட்டுறு தூதர் பொய்யே
யுரைப்பரோ வுலகம் யாவும்
வீட்டுவ திமைப்பி னன்றே
வீங்கெரி விரிந்த வெல்லாம்
மாட்டுவ ஞெருவ னன்னே
யிறுதியின் மனத்தா லென்ருன்.

கேட்டு அயல் இருந்த மாலி,
ஈது ஒரு கிழமைத்து ஆமோ?
ஓட்டு உறு தூதர் பொய்யே
உரைப்பரோ? உலகம் யாவும்
வீட்டுவது இமைப்பின் அன்றே,
வீங்கு எரி? விரித்த எல்லாம்
மாட்டுவன் ஒருவன் அன்றே,
இறுதியில் மனத்தால்?' என்ருன்.

பொ:- (இராவணன் அவ்வாறு ஐயுற்றுத் தூதுவரிடம் வினவி யதைக்) கேட்டுக்கொண்டு பக்கத்திலிருந்த மாலியவான், (இராவ ணனை நோக்கி) 'இவ்வாறு வினவுவது ஒரு முறைமை ஆமோ? நாம் அனுப்பிய தூதர் பொய் சொல்லுவார்களோ! உலகம் முழுவதையும் ஊழி யிறுதியில் ஊழிப் பெருந்தீ அழிப்பது இமைப் பொழுதில் அன்றோ? விரிந்து கிடந்த எல்லா வுலகங்களையும் பேரூழியின் இறுதியில் மனத்தின் நினைப்பளவில் அழிக்கின்றவன் உருத்திரன் ஒருவனே அன்றோ?' என்று கூறினான்.

கு:- ஆயிரம் வெள்ளம் அரக்கர் சேனையை இராமன் ஒருவனே இந்தக் குறுகிய காலத்தில் அழித்திருக்க இயலாது என்று இராவணன் ஐயுற்றுத் தூதுவரை வினவியதால், அவன் ஐயத்தை மாலியவான் இரண்டு எடுத்துக்காட்டுகளால் விளங்க வைத்தவாறு. மூலபலப் படை முழுமையும் இராமன் ஒருவனால் ஆறு நாழிகைப் போழ்தில் அழிந்தது உண்மையே என்பதும் தூதுவர் சொன்னது பொய் யன்று என்பதும் மாலியவான் கருத்து. நாம் அனுப்பிய தூதுவர் சொல்லை ஐயுற்று வினவுவது தலைவராக உள்ள வர்க்கு முறைமை யன்று என்பான், 'ஈதொரு கிழைமைத்தாமோ?' என்றும், நம் தூதுவர் நமக்கு உண்மையல்லாததை உரையார் என் பான், 'ஒட்டுறு தூதர் பொய்யே யுரைப்பரோ' என்றும் வினவித் தன் கருத்தைப் புலப்படுத்தினான். ஒட்டுறு தூதர் என்றது இராவணனால் சென்று கண்டு வருமாறு விரைந்து அனுப்பப் பெற்ற தூதர் என்ற வாறு. ஏகாரம் அசைநிலை. வினா ஓகாரம் இரண்டும் எதிர்மறைப் பொருளன. சங்காரம் மகாசங்காரம் என இருவகைப் படுதலின் இருவகையாகக் கூறலானான். சங்காரம் என்பது ஊழியிறுதியில் ஐம்பூதங்களுள் ஒன்றினால் உலகம் அழிவதையும் மகாசங்காரம் என்பது, உருத்திர மூர்த்தியின் சங்கற்ப மாத்திரத்தால் எல்லா உலகங் களும் சேர அழிவதையும் உணர்த்தும். இவ்விரண்டினையும் மாலிய வான் கூறியது காலச் சிறுமை பற்றியும் இராமனது தனிமை பற்றி யும் இராவணனுக்கு எழுந்த ஐயத்தை அகற்ற வேண்டியேயாம். 'வீங்கெரி, உலகம் யாவும் வீட்டுவது இமைப்பின் அன்றே' என்ற எடுத் துக் காட்டால், ஆறு நாழிகைப் போழ்தில் ஆயிரம் வெள்ளம் அரக்கர் இருந்திருப்பரோ என்ற இராவணன் ஐயத்தை அகற்றியவாறு. உலகம் முழுவதுமே இமைப்பில் எரியால் அழியும்போது, அவ்வுலகத் தில் ஒரு பகுதியில் உள்ள ஆயிரம் வெள்ளம் அரக்கர் ஆறு நாழிகைப் போழ்தில் அழிவது சொல்ல வேண்டுமோ? என்றவாறு. விரிந்த எல்லாம் என்றது விரிந்து கிடக்கும் அண்ட கோடிகள் எல்லாம் என்ற வாறு. அண்ட கோடிகளை யெல்லாம் மாறச் செய்பவன் உருத்திர மூர்த்தி ஒருவனே என்றால் இராமன் ஒருவனே ஓரண்டத்தில் ஓரிடத் தில் உள்ள ஆயிரம் வெள்ளம் அரக்கரையும் அழித்தான் என்பதில்

வியப்பென்னே? என்றவாறு, மாட்டுதல்—மாளச் செய்தல். ஒருவன் என்றது உருத்திரமூர்த்தியை. (14)

## மாலியவான் மேலும் கூறுதல் 9770—9772

**9770** அளப்பரு முலகம் யாவு
மமைத்துக்காத் தழிக்கின் றுன்றன்
உளப்பெருந் தன்மை தன்னு
லொருவனென் றுண்மை வேதம்
கிளப்பது கேட்டு மன்றே
யரவின்மேற் கிடந்து மேனுள்
முளைத்தபோ ரிராம னென்ற
வீடணன் மொழிபொய்த் தாமோ.

"அளப்பரும் உலகம் யாவும்
அமைத்துக் காத்து அழிக்கின்றுன்தன்
உளப்பெருந்தன்மை தன்னுல்
ஒருவன்" என்று உண்மை வேதம்
கிளப்பது கேட்டும் அன்றே?
அரவின்மேல் கிடந்து, மேல்நாள்,
முளைத்த போர் இராமன்" என்று
வீடணன் மொழி பொய்த்து ஆமோ?

பொ:- "தன் உள்ளத்தின் பெருமையால் (சங்கற்பத்தால்) பரம்பொருள் ஒருவனே அளந்து சொல்லுதற் கியலாத உலகங்கள் பலவற்றையும் படைத்து, காத்து, அழிக்கின்றுன்" என்று உண்மையையே சொல்லும் வேதம் சொல்லுவதைக் கேட்டிருக்கின்றேம் அன்றே? (அவ்வொரு பரம்பொருளே முன்பு பாற்கடலில் ஆதிசேடன் என்னும் பாம்பணையில் கிடந்து, பின்பு அயோத்தியில் தோன்றிய, பேராற்றல் மிக்க இராமனுவன்" என்று கூறிய வீடணனது சொல் பொய்மையுடையது ஆகுமோ? (ஆகாதன்றே?)

கு:- அமைத்தல்—படைத்தல். இராவணன் பிரமன் மரபில் தோன்றி வேதங்களை யெல்லாம் நன்கு அறிந்திருந்தான். ஆதலின், 'உண்மை வேதம் கிளப்பது கேட்டும் அன்றே' என்று தன்னையும் உளப்படுத்திக் கூறினுன் மாலியவான். "நீயயன் முதற்குல மிதற்கொருவ

னின்ருய், ஆயிர மறைப் பொருள் உணர்ந்தறி வமைந்தாய்'' (இராவணன் மந்திரப்-48) எனக் கும்பகருணன் கூறியுள்ளமையால் இராவணன் வேதங்களை உணர்ந்தவன் என்பது பெறப்படும். கிளத்தல்—சொல்லுதல். கேட்டும்—கேட்டிருக்கின்ருேம்; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. அப் பரம் பொருளாகிய ஒருவனே அரவின் மேல் கிடந்து, மூளைத்த இராமன் ஆவன், என்று வருவித்து முடிக்க. பொய்த்து—பொய்மையுடையது. வீடணன் அவ்வாறு கூறியதை இராவணன் மந்திரப் படலத்தில், "இருவரும், ஒருவரும் எதிரிலாதார்; மூனிவரும் அமரரும் முழுதுணர்ந்தவர்களும் முற்றும் மற்றும் நினைவருந்தகையர்நம் வினையினுல் மனிதராய் எளிது நின்ருர்'' (85) என்பதால் அறியலாம். (15)

**9771** ஒன்றிடி லதனை யுண்ணு
முலகத்தி னுயிர்க் கொன்ருத
நின்றன வெல்லாம் பெய்தா
லுடனுங்கு நெருப்புங் காண்டும்
குன்ருெடு மரனும் புல்லும்
பல்லுயிர்க் குழுவுங் கொல்லும்
வன்றிறற் காற்றுங் காண்டும்
வலிக்கொரு வரம்பு முண்டோ.

'ஒன்று இடில் அதனை உண்ணும்
உலகத்தின் உயிர்க்கு ஒன்ருத
நின்றன எல்லாம் பெய்தால்,
உடன் நுங்கும் நெருப்பும் காண்டும்;
குன்ருெடு மரமும், புல்லும்.
பல்லுயிர்க் குழுவுங் கொல்லும்
வன்றிறல் காற்றும் காண்டும்;
வலிக்கு ஒரு வரம்பும் உண்டோ?

பொ:- தமக்கேற்ற ஒருணவை இட்டால் அதனை உண்ணும் உலகத்தில் உயிர்க்கு உண்ணப் பொருந்தாதனவாய் நின்றன எல்லாவற்றையும் இட்டால் அவற்றையெல்லாம் ஒருங்கே உண்கின்ற நெருப்பையும் காண்கின்ருேம்; மலையோடு மரமும், புல்லும் முதலிய பல உயிர்க் கூட்டங்களையெல்லாம் வீசிக் கொல்கின்ற வலிய திறலையுடைய காற்றையும் காண்கின்ருேம்; ஆதலால் வலிமைக்கு ஒரு வரம்பும் உளதோ? (இல்லை).

கு:- நெருப்பின் வலிமையும் காற்றின் வலிமையும் எடுத்துக் காட்டி இராமன் வலிமைக்கு வரம்பின்மை நிறுவியவாறு. உயிர்களால் உண்ணப்படாத பொருள்களை யெல்லாம் நெருப்பு உண்டுவிடுகிறது போலப் பிறரால் வெல்லப்படாதவரை யெல்லாம் இராமன் வெல்லுதலும் பொருந்துவதே என்றவாறு. மரம் முதலிய உயிர் வகைகளையும் துளக்க இயலாத மலைகளையும் நொடியில் அழித்து, வீழ்த்துகின்ற காற்றினைப் போல இராமனும் பிறரால் வெல்ல இயலாத அரக்கர் குழுவை யெல்லாம் வெல்லுதல் இயல்பே என்றவாறு. இது பிறிது மொழிதலணி. (16)

**9772** பட்டது முண்டே யுன்னை
யிந்திரச் செல்வம் பற்று
விட்டது மெய்யே யைய
மீட்டொரு வினையு மில்லைக்
கெட்டதுன் பொருட்டி னாலே
நின்னுடைக் கேளி ரெல்லாம்
சிட்டது செய்தி யென்று
னதற்கவன் சீற்றஞ் செய்தான்.

'பட்டதும் உண்டே உன்னை,
இந்திரச் செல்வம் பற்று
விட்டதும் மெய்ம்மை; ஐய!
மீட்டு ஒரு வினையும் இல்லை;
கெட்டது, உன் பொருட்டினாலே,
நின்னுடைக் கேளிர் எல்லாம்;
சிட்டது செய்தி' என்றான்;
அதற்கு அவன் சீற்றம் செய்தான்.

பொ:- 'ஐயா, மூலபலப் படை முழுவதும் இறந்து பட்டதும் உண்மையே; இந்திரச் செல்வம் உன்னைப் பற்று விட்டதும் மெய்யே; இனி மீட்டுச் செய்யத் தக்கதொரு செயலும் இல்லை; நின்னுடைய உறவினர்கள் எல்லாம் அழிந்தது உன் பொருட்டினாலே ஆம்; எனவே சிறந்ததாகிய செயலைச் செய்வாயாக' என்று மாலியவான் கூறினான்; அதற்கு அவ் விராவணன் அவன் மேல் வெகுண்டான்.

கு:- இராவணன் நினைந்தபடி மூலபலப் படை பட்டது என்பது பொய்ம்மையன்று; 'பட்டதும் உண்டே' என்று மாலியவான் தெளிவு

படுத்தியவாறு. மேலும், இந்திரச் செல்வம் உன்னைக் கைவிட்டதும் மெய்; உன் உறவினர் பட்டதும் உன் பொருட்டினாலாகும் என்பவற்றைத் தெளிவு படுத்தி, இனியேனும் சிறந்த தாகிய பிறர் மனை நயவாமையை மேற்கொண்டு சீதையை விடுத்து உய்வாயாக என்று உறுதி கூறிய மாலியவானை வெறுத்து இராவணன் வெகுண்டான் என்றவாறு சிட்டது—சிறந்தது; 'சிட்ட மார்ந்த மும்மதிலும்' (தேவா, 540, 8) என்புழியும் இச் சொல் இப் பொருள் பட்டமை காண்க. சிறந்ததாவது, பிறர்மனை நயவாமையாகிய பேரறம். (17)

## மாலியவானுக்கு இராவணன் மறுமொழி

9773 இலக்குவன் றன்னை வேலா
லெறிந்துயிர் கூற்றுக்கீந்தேன்
அலக்கணிற் றலைவ ரெல்லா
மழுந்தின ரதனைக் கண்டால்
உலக்குமா லிராமன் பின்ன
ருயிர்ப்பொறை யுகவா னுற்ற
மலக்கமுண் டாகி னாக
வாகையென் வயத்த தென்றான்

'இலக்குவன் தன்னை வேலால்
எறிந்து, உயிர் கூற்றுக்கு ஈந்தேன்;
அலக்கணில் தலைவர் எல்லாம்
அழுந்தினர் அதனைக் கண்டால்,
உலக்குமால் இராமன்; பின்னர்
உயிர்ப்பொறை உகவான்; உற்ற
மலக்கம் உண்டாகின் ஆக;
வாகை என் வயத்தது என்றான்.

பொ:- 'இலக்குவனை வேலால் எறிந்து அவன் உயிரைக் கூற்றுவனுக்குக் கொடுத்து விட்டேன்; வானரத் தலைவர்கள் எல்லாம் துன்பத்தில் அழுந்தி யுள்ளார்கள், அந்த நிலையைக் கண்டால் இராமன் பின்பு உயிர்ச் சுமையை விரும்பாதவனாய் இறப்பான்; தூதுவர் கூறியபடி மூலபலப் படை அழிவினால் எனக்கு நேர்ந்த துன்பம் உண்மையாயினும் ஆகட்டும்; வெற்றி என் வயத்ததே' என்று இராவணன் கூறினான்.

கு:- 'கொன்றேன்' என்பதையே 'உயிர் கூற்றுக்கு ஈந்தேன்' என வேறு வாய்பாட்டால் கூறியவாறு. இராவணனது தாக்குதலால் வானரத் தலைவர்கள் எல்லாம் அலக்கணில் அழுந்தினர் என்க. 'உலக்க வானர வீரரை ஓட்டி அவ் விலக்குவன் தன்னை வீட்டி' இராவணன் துலக்கம் எய்தினன் என இப்படலத்து முதற்கண் கூறப்பட்டுள்ளதும் நினைக. இராமன் உயிர்ப் பொறை யுகவானாய் உலக்குமால்' என மாற்றி முற்றெச்ச மாக்கி முடிக்க. உற்ற மலக்கம் என்றது மூலபலப் படையின் அழிவால் நேர்ந்த துன்பத்தை. யான் முன் கூறியபடி பொய்யாகமல் தூதுவர் கூறியபடி உண்மையாயினும் ஆக என்பான், 'உண்டாகின் ஆக' என்றான். இலக்குவனைக் கொன்று விட்டதால் இராமன் தானே இறப்பான் என்பது உறுதியாகலின் 'வாகை என் வயத்தது' என இராவணன் கூறலானான். (18)

## இலக்குவன் உயிர் பெற்றதைத் தூதுவர் உணர்த்துதல்

**9774** ஆண்டது கேட்டு நின்ற
தூதுவ ரைய மெய்யே
மீண்டதவ் விளவ லாவி
மாருதி மருந்து மெய்யில
தீண்டவுந் தாழ்த்த தில்லை
யாருமச் செங்க ணானைப்
பூண்டனர் தழுவிப் புக்கார்
காணுதி போதி யென்றார்

ஆண்டு அது கேட்டு நின்ற
தூதுவர், 'ஐய! மெய்யே
மீண்டது, அவ் இளவல் ஆவி,
மாருதி மருந்து மெய்யில்
தீண்டவும் தாழ்ந்தது இல்லை;
யாரும் அச் செங்கணானைப்
பூண்டனர் தழுவிப் புக்கார்
காணுதி போதி' என்றார்.

பொ:- அங்கு அவ் விராவணன் சொன்னதைக் கேட்டுக் கொண்டு நின்ற தூதுவர்கள், (இராவணனை நோக்கி) 'ஐய! அந்த இளவல்— இலக்குவன் உயிர். அனுமன் கொணர்ந்த மருந்து உடம்பில் தீண்டுகிற

அளவும் தாழ்க்காமல் (அம்மருந்தின் வாசனை பட்டவுடனே) மீண்டது. அந்தச் சிவந்த கண்களை யுடைய இலக்குவனை எல்லோரும் சூழ்ந்து கொண்டவராய்த் தழுவிக் கொண்டு இருக்கை சென்றனர்; போய்க் காண்பாயாக' என்று கூறினர்.

கு:- 'இலக்குவனை வேலால் கொன்றதாக இராவணன் நினைத்துக் கொண்டு 'வாகை என வயத்தது' என மகிழ்ந்து கூறியதைக் கேட்டு நின்ற தூதுவர் இலக்குவன் உயிர் மருந்து மலையால் மீண்டதைத் தெரிவித்து, ஐயம் நீங்க, நேரில் சென்று காணுமாறு சொல்லியவாறு. முன் தாம் சொன்னதைப் 'பொய்' என்று இகழ்ந்த இராவணன் இதனையும் பொய்யெனக் கொள்வான் என்ற கருத்தினால் 'மெய்யே மீண்டது அவ் விளவல் ஆவி' எனவும், 'காணுதி போதி' எனவும் தூதுவர் கூறலாயினர். மாருதி கொணர்ந்த மருந்தின் வாசனை பட்டவுடனே இலக்குவன் உயிர்த்து எழுந்தான் என்பார், 'மாருதி மருந்து மெய்யில் தீண்டவும் தாழ்ந்த தில்லை' என்றும் கூறினர். "தந்த நன்மருந்து தன்னைத் தாக்குதன் முன்னம் வேகம், வந்தது......தொடியின் முன்னே இந்திரன் உலக மார்க்க எழுந்தனன் இளைய வீரன்" (வேலேற்ற—41) என்று முன் கூறி யுள்ளதற் கேற்பவே தூதுவரும் கூறலாயினர் என்க. (19)

## இராவணன் கோபுரத்தில் ஏறிப் போர்க்களத்தைக் காணுதல்

9775 தேறில னாத லானே
மறுகுறு சிந்தை தேற
ஏறினன் கனகத் தான
கோபுரத் தும்ப ரெய்தி
ஊறின சேனை வெள்ள
முலந்தபே ருண்மை யெல்லாம்
காறின வுள்ள நோவக்
கண்களாற் றெரியக் கண்டான்.

தேறிலன் ஆதலானே,
மறுகுறு சிந்தை தேற,
ஏறினன், கனகத்து ஆன
கோபுரத்து உம்பர் எய்தி,

ஊறின சேனை வெள்ளம்
உலந்தபேர் உண்மை எல்லாம்,
காறின உள்ளம் நோவ,
கண்களால் தெரியக் கண்டான்.

பொ:- தூதர் சொன்னதை உண்மையெனத் தெளிந்திலன் ஆத லாலே (இராவணன்) கலக்கமுற்ற சிந்தை தெளியுமாறு பொன்னு லியன்ற கோபுரத்து ஏறி உச்சியை அடைந்து, பெருகிய சேனை வெள் ளம் அழிந்த பெரிய உண்மை முழுவதையும் மூன் செருக்கிய உள்ளம் நோவுமாறு கண்களால் தெளிவாகக் கண்டான்.

கு:- சிந்தை தேற, கோபுரத்து ஏறினனுய் உம்பர் எய்திக் கண் களால் தெரியக் கண்டான் என இயையும். மறுகுறல்—கலக்கமெய்தல். தூதுவர் சொல்வது உண்மை என்றோ? அல்லது பொய் யென்றோ ஒன்று துணியாது இருபாற்பட்ட சிந்தையினையே மறுகுறு சிந்தை யென்றார். ஊறுதல்—பெருகுதல். உலத்தல்—அழிதல். காறுதல் வீரத் தால் செருக்குதல். முன்பு 'வாகை யென் வயத்தது' என்று செருக்கி யிருந்த உள்ளம், தன் பெரிய மூலபலப் படை மாண்டு கிடப்பதைக் காண்கின்றபோது துடும் என வேறுபட்டு வருந்தினது என்பார், 'காறின வுள்ளம் நோவக் கண்டான்' என்றார். பேர் உண்மையெல்லாம் கண்டான், காறின உள்ளம் நோவக் கண்டான், கண்களால் தெரியக் கண்டான் எனத் தனித் தனி இயைத்துப் பொருள் நயம் காணலாம். முன் தன் காதால் கேட்டதை இப்போது தன் கண்களால் தானே தெரியக் கண்டான் என்க. (20)

## தலையொடு முடியும் அரக்கியரின் அழுகை ஒலியை இராவணன் கேட்டல்

9776 கொய்தலைப் பூசற் பட்டோர்
குலத்தியர் குவளை யோடு
நெய்தலை வென்ற வாட்கண்
குமுதத்தி னீர்மை காட்டக்
கய்தலை யுற்ற பூசல்
கடலெலா நிமிருங் காலைச்
செய்தலை யுற்ற வோசைச்
செயலது செவியிற் கேட்டான்.

கொய்தலைப் பூசற் பட்டோர்
குலத்தியர் குவளை யோடு
நெய்தலை வென்றவாள்—கண்
குமுதத்தின் நீர்மை காட்ட
கய்தலை உற்ற பூசல்;
கடல் எலாம் நிமிருங் காலைச்
செய்தலை உற்ற ஓசைச்
செயலது செவியில் கேட்டான்.

பொ:- பகைவரால் கொய்யப் பெற்ற (தம் கொழுநரின்) தலையொடு முடியும் துன்பத்தில் ஈடுபடுவோராகிய அரக்கர் குல மகளிர் தம் கருங்குவளை மலரோடு கருநெய்தல் மலரையும் வென்ற வாள் போன்ற கண்கள், (அழுது சிவந்தமையால்) செங்குமுத மலரின் செம்மைத்தன்மையைக் காட்டா நிற்க, தம் கைகளில் தம் கொழுநர் தலைகள் பொருந்த வைத்துள்ளமையால் எழுகின்ற அழுகை ஒலி,—கடல்கள் எல்லாம் பொங்கி எழுகின்ற ஊழியிறுதியில் (உயிர்கள் எல்லாம்) செய்கின்ற ஓசை போன்ற தன்மையது ஆதலை (இராவணன் தன்) செவிகளால் கேட்டான்.

கு:- தலைப் பூசற்படுதல் என்றது, தலையொடு முடிதலாகிய துன்பத்துப் படுதலை. தலைப் பூசற்பட்டோராகிய குலத்தியர் என இருபெயரொட்டாக்குக. குலத்தியர் என்றது அரக்கரின் குல மனைவியரை. குவளையையும் நெய்தலையும் கருமையால் வென்று மேம்பட்ட குலத்தியரின் கண்கள், இப்போது அழுது சிவந்துள்ளமையால், செங்குமுத மலரின் தன்மையைக் காட்டலாயின என்க. தம் கொழுநரின் தலைகள் தம்கைகளில் உற்றமையினுல் எழும் அழுகை ஒலியை 'கைதலை உற்ற பூசல்' என்ருர். கற்புடைய அரக்கியர், தம் கொழுநர் தலையோடு முடியும் எண்ணத்தோடு, அத்தலைகள் தம் கைகளில் பொருந்திய நிலையில் அழுகின்ற ஒலி,—ஊழிக் கடையில் உயிர்கள் அழிவுறும் போது செய்யும் துன்ப ஓசை போன்று மிக்கிருத்தலை இராவணன் கேட்டான் என அவ்வொலியின் மிகுதியை விளக்கியவாறு. மூல பலப் படை இறந்து கிடப்பதைக் கண்களால் தெரியக் கண்டவன், அவ்வரக்கரின் மனைவியர் அழுகின்ற அழுகை ஒலியையும் காதுகளால் கேட்டுத் தூதுவர் சொன்னது உண்மை யாதலை உணர்ந்தான் என்றவாறு. தலையோடு முடிவோர், தலையைக் கையில் எடுத்துத் தம் மார்பினும் முகத்தினும் அணைத்து அழுது உயிர்விடுவர்; இதனை, "முலையு முகனுஞ் சேர்த்திக் கொண்டோன் தலையோடு முடிந்த நிலை" (தொல்—புறத்—79) எனத் தொல்காப்பியர் கூறுவதால் உணரலாம். 'பூசல்,' முன்னது. துன்பம்; பின்னது, அழுகை ஒலி. பூசல், ஓசை போன்ற

செயலதாதலைக் கேட்டான் என இயையும். செயலது குறிப்புப் பெயர். செயல்—தன்மை. உற்ற பூசல், காரணப் பொருளில் வந்த பெயரெச்சம். (21)

எண்ணுநீர் கடந்த யானைப்
பெரும்பிண மேந்தி யாணர்
மண்ணினீ ரளவுங் கல்லி
நெடுமலை மறித்து மண்டும்
புண்ணினீ ராலும் பல்பேய்
புதுப்புன லாடு பொம்மற்
கண்ணினீ ராறு மாருக்
கருங்கடன் மடுப்பக் கண்டான்.

எண்ணுநீர் கடந்த யானைப்
பெரும்பிணம் ஏந்தி, யாணர்
மண்ணின்நீர் அளவும் கல்லி,
நெடுமலை மறித்து, மண்டும்
புண்ணின்நீர் ஆறும், பல்பேய்ப்
புதுப்புனல் ஆடும் பொம்மல்,
கண்ணின்நீர் ஆறும் மாருக்
கருங்கடல் மழுப்பக் கண்டான்.

பொ:- எண்ணும் தன்மை கடந்த யானைப் பெரும் பிணங்களை ஏந்திக்கொண்டு, மண்ணின் அடியில் புதிய ஊற்றுநீர் உள்ள அளவும் தோண்டிக் கொண்டு, நெடிய மலைகளையும் புரட்டிக் கொண்டு விரைந்து செல்கின்ற இரத்த ஆறும், பல பேய்கள் புதுப் புனல் என்று களித்து நீராடுகின்ற பொலிவினை யுடைய கண்ணீர் ஆறும், தம் இயல்பு மாருமல் கரிய கடலில் சென்று கலக்கக் கண்டான்.

கு:- எண்ணத் தொலையாத யானைப் பிணங்கள் என்பார், எண்ணும் நீர் கடந்த யானைப் பெரும்பிணம், என்ருர். நீர்—தன்மை. யாணர்—புதியது; மண்ணின் யாணர் நீர் அளவும் என்று இயையும். யாணர் நீர் என்றது புதிய ஊற்று நீரை. புண்ணினீர் ஆறு என்றது, இரத்த ஆற்றினை. யானைப் பெரும்பிணமேந்தி, மண்ணின் யாணர் நீரளவுங் கல்லி, நெடுமலை மறித்து, மண்டும் புண்ணின் நீர் ஆறும் என்க. கண்ணீர் ஆற்றினைப் புதுப்புனலாக நினைத்துப் பல பேய்கள் நீராடும் பொலிவினை யுடையதாக இருந்தது என அக் கண்ணீர்

ஆற்றின் பெருக்கினைப் புலப்படுத்தியவாறு. புண்ணினீர் ஆறும் கண்ணீராறும் மாறாக் கருங்கடல் மடுப்பக் கண்டான் என்க. மாறாமல் மடுப்ப என ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம் ஆக்கி இயைக்க. இனி, மாறாக் கருங்கடல் எனக் கடலுக்கு அடையாக்கி, ஆறுகள் தன்னுள் கலத்தலாலும் மேகங்கள் தண்ணீரை முகத்தலாலும் தன்னியல்பு மாறாது என்றும் நிரம்பியே காணப்படும் கடல் எனப் பொருள் கூறலும் ஆம். கல்லுதல்—தோண்டுதல். மறித்தல்—புரட்டுதல். பொம்மல்—பொலிவு. (22)

**9778** முற்றியற் சிலைவ லாளன்
மொய்க்கணை துமிப்ப வாவி
பெற்றியல் பெற்றி பெற்றா
மென்னவா ளரக்கர் யாக்கை
சிற்றியற் குறுங்கா லோரிக்
குரல்கொளை யிசையாப் பல்பேய்
கற்றியல் பாணி கொட்டக்
களிநடம் பயிலக் கண்டான்.

'முற்றுஇயல் சிலை வலாளன்
மொய்க்கணை துமிப்ப, ஆவி
பெற்று இயல் பெற்றி பெற்றாம்'
என்ன வாள் அரக்கர் யாக்கை,
சிற்றியல் குறுங்கால் ஓரிக்
குரல் கொளை இசையா, பல்பேய்
கற்று இயல் பாணி கொட்டக்,
களிநடம் பயிலக் கண்டான்.

பொ:- சிறிய தன்மையையும் குறிய கால்களையும் உடைய நரிகளின் குரல் பாட்டிசையாகப் பல பேய்கள் தாம் கற்றுத் தேர்ந்த தாளத்தைக் கொட்டா நிற்கவும், கொடிய அரக்கர்தம் உடல்கள், 'நிறைந்த குணங்களையுடைய வில்லில் வல்லவனாகிய இராமன் எய்த நெருங்குதலையுடைய அம்புகள் எம்மைத் துணித்தலால், உயிர்பெற்று வாழ்ந்தமையால் ஆய பெருமையைப் பெற்றுவிட்டோம்' என்று மகிழ்ந்து களித்து நடம்புரிய (இராவணன்) கண்டான்.

கு:- அரக்கர் யாக்கை, ஓரிக்குரல் கொளை இசையாக, பேய் பாணி கொட்ட, களிநடனம் பயிலக் கண்டான் என இயையும்.

இராமன் எய்த அம்பு எம் உடம்பைத் துணிக்கப் பெற்றதே எம் வாழ்க்கையின் பெரும்பேறு என மகிழ்ந்து அரக்கர்தம் தலையற்ற உடல்கள் களிநடம் பயின்றன என்க. ஆவிபெற்று இயன்றமையால் ஆய பெற்றி என்றது, உயிர் பெற்று வாழ்ந்தமையாலாய பெருமை என்றவாறு. பெற்றி—பெருமை. துமித்தல்—துணித்தல். ஓரி—நரி. கொளை—பாட்டு. ஓரிக் குரல் இசையாக என்றது உருவகம். பாணி—தாளம். யாக்கை களிநடம் பயிலக் கண்டான் என்க. இச் செய்யுள் பல ஏடுகளில் இல்லை. (23)

**9779** குமிழிநீ ரோடுஞ் சோரி
கனலொடுங் கொழிக்குங் கண்ணன்
தமிழ்நெறி வழக்க மன்ன
தனிச்சிலை வழக்கிற் சாய்ந்தார்
அமிழ்பெருங் குருதி வெள்ள
மாற்றுவாய் முகத்திற் றேக்கி
உமிழ்வதே யொக்கும் வேலை
யோதம்வந் துடற்றக் கண்டான்.

குமிழி நீரோடும், சோரி,
கனலொடும், கொழிக்கும் கண்ணன்,
தமிழ் நெறி வழக்கம் அன்ன
தனிச்சிலை வழக்கிற் சாய்ந்தார்.
அமிழ்பெருங் குருதி வெள்ளம்
ஆற்று வாய் முகத்தில் தேக்கி,
உமிழ்வதே ஒக்கும் வேலை
ஓதம் வந்து உடற்றக் கண்டான்.

பொ:- (இன்ப உணர்ச்சியினால்) குமிழ்விட்டுப் பெருகுகின்ற கண்ணீரோடும் சின நெருப்போடும் இரத்தம் கொழிக்கும் கண்களை யுடைய இராவணன், தமிழ்க்குரிய அகப்பொருளில் வரும் நெறிமுறைகள் தொகையும் வகையும் விரியுமாய்ப் பெருகுதல் போன்ற (இராமனது) ஒப்பற்ற வில்லின் (அம்பு) தொடுப்பினால் இறந்தவர்களின் அமிழ்தற்குரிய பெரிய இரத்த வெள்ளத்தைச் சங்க முகமாகிய வாயினால் நிறையப் பருகிக் கடல் உமிழ்வது போன்று, (இரத்தம் கலந்த) கடல் அலைகள் வந்து போர்க்களத்தே மோதுவதைக் கண்டான்.

கு:- இரத்த வெள்ளம் மிகுதிப்பட்டமையால் கடலில் புக முடியாமல் மீண்டு கடலலைகளோடு சேர்ந்து, போர்க் களத்திற்கு வந்து மோதுவதை இராவணன் கண்டான் என்றவாறு. ஆற்றுவாய் என்றது, ஆறு கடலொடு கலக்கும் சங்க முகத்தை. இது கயவாய் என்றும் கூறப்படும். 'கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப' (மலைபடுகடாம்—528) என்றது காண்க. முகம்—வாய். சங்கமுகமாகிய வாயினால் கடல், இரத்த வெள்ளத்தை நிறையப் பருகி, வயிறு ஏற்றுக் கொள்ளாமையால் உமிழ்வது போலும் கடலலைகளின் காட்சியைப் போர்க்களத்தில் கண்டான் என்றது தற்குறிப்பேற்ற வணி. இரத்த வெள்ளம் கடலில் புகாது அக் கடலலைகளோடு திரும்பும் தோற்றத்தைக் கற்பனை செய்தவாறு. கண்ணீர்ப் பெருக்கின் மிகுதியினால் குமிழ்களும் தோன்றின என அதன் மிகுதியை யுணர்த்த 'குமிழிநீர்' என்றார். நீரோடும் கனலோடும் சோரி கொழிக்கும் கண்ணான் என்க. இராவணனது துன்ப உணர்ச்சியையும் கோபவுணர்ச்சியையும் புலப்படுத்தியவாறு. தமிழ் நெறி என்றது, அகப்பொருள் நெறியை. தமிழ்நெறி விளக்கம் என ஓர் அகப்பொருள் நூல் உண்மையும் இங்கு நினையலாம். வழக்கம்—வழங்கப்படும் முறைகள்; தமிழ் நெறியாகிய அகப்பொருள், களவுங் கற்பும் என இருவகைப்படுவதும், அவ் விரண்டில் களவு ஒன்றே, இயற்கைப் புணர்ச்சி முதல் பொருள்வயிற்பிரிதல் ஈறாகப் பதினேழுவகைப் படுதலும், அக் கிளவிகளுள் இயற்கைப் புணர்ச்சி ஒன்றே, இரந்து பின்னிற்றல் முதலாகப் புகழ்தல் ஈறாகப் பதினைந்து வகையாக விரிதலும் காணலாம். இங்ஙனமே ஒவ்வொரு நெறியும் தொகையும் வகையும் விரியுமாய்ப் பெருகுதல் போல இராமன் தொடுக்கும் அம்பும் ஒன்று பத்தாய், நூறாய், ஆயிரமாய் விரிவடைந்து செல்லும் என உவமையைப் பொருத்திக் கொள்க.

**9780** விண்களிற் சென்ற வன்றோட்
கணவரை யலகை வெய்ய
புண்களிற் கைக ணீட்டிப்
புதுநிணங் கவர்வ நோக்கி
மண்களிற் றொடர்ந்து வானிற்
பிடித்துவள் ளுகிரின் மானக்
கண்களைச் சூன்று நீக்கு
மரக்கியர் குழாமுங் கண்டான்.

விண்களில் சென்ற வன்தோள்
கணவரை, அலகை வெய்ய
புண்களில் கைகள் நீட்டி,
புதுநிணம் கவர்வ நோக்கி,

மண்களில் தொடர்ந்து, வானில்
பிடித்து, வள்உகிரின் மானக்
கண்களைச் சூன்று நீக்கும்
அரக்கியர் குழாமும் கண்டான்.

பொ:- போரில் இராமன் அம்பினால் இறந்து விண்ணுலகம் புக்க வலிய தோள்களையுடைய தம் கணவரின் உடம்புகளில் உள்ள புண்களில் பேய்கள் தம் கைகளை நீட்டி அப் புண்வழியாகப் புதிய கொழுப்பைக் கவர்கின்றனவற்றைப் பார்த்து, அப் பேய்களைத் தரையில் துரத்தித் தொடர்ந்து சென்று, (அவை வானில் எழுந்து விரையக் கண்டு) வானிலும் தொடர்ந்து சென்று அவற்றைப் பிடித்துத் தம் கூரிய நகங்களினால் அவற்றின் பெரிய கண்களைத் தோண்டி நீக்குகின்ற அரக்கியர் கூட்டத்தையும் கண்டான்.

கு:- அரக்கியர் தம் கணவரின் உடம்புகளைப் பாதுகாத்து அவ்வுடம்புகளோடு எரியும் எண்ணத்தினர் ஆகலின் அவ்வுடம்புகளைப் பேய்கள் பின்னப்படுத்துவதைப் பொறுதவராய்ப் பின்பற்றிச் சென்று அப் பேய்களின் கண்களைத் தோண்டுவாராயினர். அக் கண்களிருந்தமையாலன்றோ தம் கணவருடம்பில் உள்ள புண்களைக் கண்டு நிணத்தைக் கவரலாயின? என்பது அவ் வரக்கியரின் எண்ணம். பேய்களைப்போல விண்ணிலும் செல்லும் தன்மையராகவும், பேய்களின் கண்களையும் தோண்டுதற்குரிய வன்மையராகவும் அரக்கியர் இருந்தனர் என்பது இதனால் புலனாம். விழுப்புண் பட்டோரின் புண்களைப் பேய் தொடுவதை 'தொட்ட காஞ்சி' என்ற புறத்துறையாகக் கூறுவர் ஐயனாரிதனார். இச் செய்யுளையும் அத்துறைப்பாற் படுத்தலாம்.

## இராவணன் கோபுரத்திலிருந்து இறங்குதல்

9781 விண்பிளந் தொல்க வார்க்கும்
வானரர் வீக்கங் கண்டான்
மண்பிளந் தழுந்த வாடுங்
கவந்தத்தின் வருக்கங் கண்டான்
கண்பிளந் தகல நோக்கும்
வானவர் களிப்புங் கண்டான்
புண்பிளந் தனைய நெஞ்சன்
கோபுரத் திழிந்து போந்தான்.

விண் பிளந்து ஒல்க ஆர்க்கும்
வானரர் வீக்கம் கண்டான்;
மண் பிளந்து அழுந்த ஆடும்
கவந்தத்தின் வருக்கம் கண்டான்;
கண் பிளந்து அகல நோக்கும்
வானவர் களிப்பும் கண்டான்
புண் பிளந் தனைய நெஞ்சன்
கோபுரத்து இழிந்து போந்தான்.

பொ:- வானுலகம் பிளந்து அசையுமாறு ஆரவாரிக்கும் வானரர் களின் மிகுதியைக் கண்டான்; மண்ணுலகம் பிளந்து அழுந்துமாறு ஆடுகின்ற கவந்தங்களின் தொகையைக் கண்டான்; கண்களை அகல மாகத் திறந்து போர்க்களத்தைக் காண்கின்ற தேவர்களின் களிப்பை யும் கண்டான்; தன் புண் பிளந்தாற் போன்ற துன்ப மிக்க நெஞ்சை யுடையவனாய் இராவணன் கோபுரத்திலிருந்து இறங்கி வந்தான்.

கு:- வானரர்கள் மெலிவுற்று வீழ்ந்து கிடப்பார் என்றும் அரக் கர்கள் மகிழ்ந்து ஆடுவார்கள் என்றும், தேவர்கள் துன்புற்று இடுக் கணுற்றிருப்பார்கள் என்றும் நினைந்து காணக் கோபுரத் தேறிய இராவணன், தன் கருத்திற்கு மாறாக ஆரவாரிக்கும் வானரர்கள் பெருக்கையும் மண்ணழுந்த ஆடும் அரக்கர்களின் கவந்தங்களையும், மகிழ்ச்சியுடன் கண்களை அகலத் திறந்து பார்க்கும் தேவர்களையும் கண்டானாகலின் நெஞ்சம் பொறுதவனாய்த் தன் மார்பில் உள்ள விழுப் புண் பிளந்தாற் போன்ற துன்ப மிக்க நெஞ்சத்தவனாய் இறங்க லானான் என்றவாறு. கண் அகலப் பிளந்து என்க. (26)

## இராவணன் சினக் குறிப்புடன் அரசவை அடைதல்

9782 நகைபிறக் கின்ற வாய
ளுக்கொடு கடைவாய் நக்கப்
புகைபிறக் கின்ற மூக்கன்
பொறிபிறக் கின்ற கண்ணன்
மிகைபிறக் கின்ற நெஞ்சன்
வெஞ்சினத் தீமேல் வீங்கிச்
சிகைபிறக் கின்ற சொல்ல
னரசிய லிருக்கை சேர்ந்தான்.

நகை பிறக்கின்ற வாயன்
நாக்கொடு கடைவாய் நக்கப்
புகை பிறக்கின்ற மூக்கன்,
பொறி பிறக்கின்ற கண்ணன்,
மிகை பிறக்கின்ற நெஞ்சன்,
வெஞ்சினத் தீமேல் வீங்கி
சிகை பிறக்கின்ற சொல்லன்,
அரசியல் இருக்கை சேர்ந்தான்.

பொ:- கோபச் சிரிப்புத் தோன்றுகின்ற வாயை யுடையவனாய், நாக்கு வளைந்த கடைவாயை நக்கா நிற்க, புகை பிறக்கின்ற மூக்கை யுடையவனாய், நெருப்புப் பொறி பறக்கின்ற கண்களை யுடையவனாய், செருக்குத் தோன்றுகின்ற நெஞ்சை யுடையவனாய், கொடிய கோபத்தீ மேலோங்கிக் கொழுந்து விடுகின்ற சொல்லை யுடையவனாய் அரசிய லுக்குரிய மண்டபத்தை அடைந்தான்.

கு:- நா கடைவாய் நக்க என்க. கொடு கடைவாய்—வளைந்த கடைவாய். மிகை—செருக்கு. சிகை—கொழுந்து. சினத்தைத் தீயாக உருவகித்தற் கேற்பச் சிகையும் கூறப்பட்டது. (27)

## ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| *1 | தஞ்சை சரஸ்வதி மகால் | 367-8 | |
| 2 | ,, | 369 | |
| 9 | ,, | 382 | |
| 10 | ,, | 1387 | |
| 11 | ,, | 394-5 | |
| 18 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 21 | ,, | | |
| 23 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1150 | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 29 | ,, | 41 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி பிரதிகளின்படி பெரியன் ஸ்ரீநிவாசையங்கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர் உரைப்பதிப்பு 1955 |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனர் பதிப்பு 1888. |
| 43 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1147 | |
| 44 | ,, | 1148 | |

* இங்குக் குறிக்கப்படாத எண்ணுள்ள பிரதிகளில் யுத்தகாண்டம் இல்லை.

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928. |
| 48 | | | வெ. ப. சுப்பிரமணிய முதலியார் பதிப்பு-கம்ப ராமயண சாரம் 1955. |
| 52 | | | மலிவுப் பதிப்பு (எஸ். ராஜம் வெளியிட்டது) 1958. |
| 54 | மதுரைச் தமிழ்ச் சங்கம் | 37 | |
| 60 | ,, | 673 | |
| 61 | ,, | 29 | |
| 62 | ,, | 43 | |
| 63 | ,, | 32 | |
| 64 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | | கடல்காண் படலம் மந்திரப் படலம் 77 ஆம் பாடல் வரையுள்ளது. |
| 65 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 66 | ஸ்ரீவேங்கடேசுவரர் கீழ்த் திசைக் கல்லூரி, திருப்பதி | 6583 | |
| 67 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 68 | | | வி. கோவிந்தப் பிள்ளை பதிப்பு நாகபாசப் படலம் வரையுள்ளது. |
| 70 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | | மந்திரப் படலம் முதல் இராவணன் தேரேறு படலம் வரையுள்ளது. |
| 71 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 33 | வீடணன் அடைக்கலப் படலம் முடிய உள்ளது. |
| 73 | திரு. R. குழந்தைவேலு | | |

